திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசர் ஆய்வு மாலை

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
**முத்துக்குமாரசாமித் தம்பிரான்சுவாமிகள்** அவர்கள்
அருளாணையின்வண்ணம் வெளியிடப்பெற்றது




காற்றாகி எங்கும் கலந்தாய்போற்றி, கயிலை மலையானே போற்றி போற்றி

பதிப்பாசிரியர்
த.கோ. பரமசிவம்
ந. முருகேசன்
கோ.ப. நல்லசிவம்



திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வு மாநாடு
வாரணாசி - 2003

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசர் ஆய்வுமாலை

## தொகுதி ஒன்று

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்
அருளாணையின்வண்ணம் வெளியிடப் பெற்றது.



பதிப்பாசிரியர்
த.கோ. பரமசிவம்
ந. முருகேசன்
கோ.ப. நல்லசிவம்

திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வு மாநாடு
குமாரசாமித் திருமடம் - வாரணாசி
2003

● திருநாவுக்கரசர் ஆய்வுமாலை
தொகுதி ஒன்று

● திருப்பனந்தாள் காசித்திருமடமும்
களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையும் இணைந்து
நடத்திய திருநாவுக்கரசர் ஆய்வு மாநாட்டின் வெளியீடு

● திருவள்ளுவராண்டு 2034, புரட்டாசி 7, 8, 9
(24, 25, 26.9.2003)

● முதற்பதிப்பு : 2003 செப்தம்பர்

● பதிப்பாசிரியர்

**முனைவர் த.கோ. பரமசிவம்**
தலைவர், ஓலைச் சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**முனைவர் ந. முருகேசன்**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை
ஸ்ரீ கா.சு.சு. கலைக் கல்லூரி
திருப்பனந்தாள்

**தேவார இசைமணி திரு கோ.ப. நல்லசிவம்**
விரிவுரையாளர், தமிழ்த்துறை
ஸ்ரீ கா.சு.சு. கலைக் கல்லூரி, திருப்பனந்தாள்.

● விலை : உரூபாய் 250/-

● நூல் கிடைக்குமிடம் : மேலாளர் அவர்கள்
காசித்திருமடம்
திருப்பனந்தாள் - 612 504

● கணினி அச்சு : சபாநாயகம் பிரிண்டர்ஸ்
176, கீழ ரத வீதி, சிதம்பரம். ✆ : 223040, 223020

● அச்சாக்கம் : யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்
101-D, ராயப்பேட்டை நெடுஞ்சாலை
லஸ், மயிலாப்பூர், சென்னை - 600 004.
✆ : 24984693, 24661807



திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அதிபர்

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி

**முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

# திருநாவுக்கரசர் ஆய்வுமாலை

## ஆய்வு மலர்கள்

### (தொகுதி ஒன்று)

# பதிப்புரை

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவல் உறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக்கு உரைசெய்ய ஒண்ணாமை உணராதேன்

(சேக்கிழார்)

'திருநாவுக்கரசர் ஆய்வுமாலை' என்னும் இந்நூல், வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் நடைபெறும் திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வு மாநாட்டில் ஆய்வு செய்யப்பெறும் 242 ஆய்வுக் கட்டுரை களின் தொகுப்பாகும். இது இரண்டு தொகுதிகளாக, சுமார் 1600 பக்கங்களுக்கு மேல் தமிழ், இந்தி, ஆங்கிலம் என மூன்று மொழிகளாலான கட்டுரைகளைக் கொண்டு அமைந்ததாகும். எனினும் திருநாவுக்கரசர் இலக்கியங்கள், தேவாரப் பாசுரங்கள் யாவும் தமிழ்மொழியிலேயே அமைந்திருப்பதாலும் ஆய்வாளர்களுள் பெரும்பாலோர் தமிழகத்தைச் சார்ந்தவராதலாலும் தமிழ்க் கட்டுரைகளே மிகுதியாக இடம் பெற்றிருக்கும் இயல்பைக் கொண்டது. இக்கட்டுரைகள் அனைத்திந்திய ஆய்வு மாநாட்டின் வெளிப்பாடாகத் திகழ்வன.

திருநாவுக்கரசர், தமிழ் அருளாளர்களுள் தலைசிறந்தவர். அவருக்காக, அவர் தேவாரத்திற்காக நிகழும் இவ்இலக்கிய ஆய்வு மாநாடு அனைத்திந்திய மாநாடாக அமைந்திருப்பது நம் தமிழ்மொழிக்கும் தமிழருக்கும் பெருமை சேர்ப்பதாகும். பேராளரும் பார்வையாளருமாக 400 பேர்கள் கலந்து கொள்ளும் இப்பெரிய மாநாட்டைத் திருப்பனந்தாள் காசித் திருமடமும் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையும் இணைந்து ஏற்பாடு செய்துள்ளன. பெரும் ஆய்வறிஞர்களாலும் இளைய தலைமுறை யினரான ஆய்வு மாணவர்களாலும் நிகழ்த்தப் பெறும் இக்கருத்தரங்கு-மாநாடு திருநாவுக்கரசர் தேவாரத்தை இன்றைய தலைமுறையினரிடையே கொண்டு செல்லவும், நாளைய தலைமுறையினர்க்கு வழிகாட்டவும் துணைசெய்யும் என்னும் நம்பிக்கையுடன் இவ்ஆய்வுமாலையை நூலாக வெளியிடுவதில் நாங்கள் மகிழ்கின்றோம்.

வேற்றுமைகளுக்கிடையே உருவானது நம் பாரத கலாசாரம். மொழிவுணர்வுடன் சமய உணர்வுடன் கூடிய தெளிந்த மனிதநேயத்தை இவ்வேற்றுமைகளுக்கிடையே வளர்ப்பதில் இம்மாநாடு துளியாவது துணை செய்யும் எனக் கருதுகின்றோம். பாரதப் பண்பாடாம் பக்தி, சமய ஈடுபாடு, திருத்தொண்டு, திருக்கோயில் வழிபாடு, திருத்தல யாத்திரை, வாழ்க்கைப் பிடிப்பு, இயற்கையோடிணைந்த வாழ்வு என

எல்லாவற்றையும் இணைத்து வழங்கிய திருநாவுக்கரசருக்கு வடஇந்திய மண்ணில் குறிப்பாக, கங்கைக்கரையில், தமிழே பாடி, தமிழாகவே வாழ்ந்த நம் குமரகுருபர சுவாமிகள் காசியில் நிறுவிய ஸ்ரீ குமாரசாமித் திருமடத்தில் விழா எடுப்பது முற்றிலும் பொருத்தமான சிறப்பான நிகழ்வாகக் கருதலாம். சிறப்பாக, **'கயிலைமால்'** வரை யாத்திரை மேற்கொண்டு வாரணாசியையும் பாடிப் பரவிய நாவுக்கரசருக்கு வாரணாசியாம் வடபுலத்தில் வரலாறாகத் திகழும் இம்மாநாடு எண்ணி எண்ணிப் பெருமை கொள்வதற்குரியதாம். சிவனைப் பாடும் போதெல்லாம் மறவாமல் அவர் தலையில் தரித்துள்ள தீர்த்தப்புனல் கங்கையை இணைத்தே பாடி மகிழ்ந்த நம் அப்பர் பெருமானுக்கு பெருக்காறு கங்கையில் நீராட்டித் திருவீதி பணிந்தருளும் திருவிழா. இச்சீர்மிகு விழாவில் ஆய்வு செய்யப்பெறும் ஆய்வுரைகளை முன் கூட்டியே நூலாக வெளியிடுவதில் நாங்கள் பெருமையும் பூரிப்பும் கொள்கிறோம்.

**திருமுறை மாநாடுகள்**

திருப்பனந்தாள் காசித்திருமடமும் தமிழ்ப் பல்கலைக்கழகமும் இணைந்து வாரணாசியில் 1999-ஆம் ஆண்டு குமரகுருபரர் மாநாட்டைப் பெரிய அளவில் நடத்தின. அம்மாநாட்டில் பேராளரும் பார்வையாளருமாக 400 பேர் கலந்துகொண்டனர். மூன்று பெருந்தொகுதிகள் ஆய்வுமாலை களாக வெளியிடப் பெற்றன. அந்த மாநாடு ஆய்வாளரிடையே சமய இலக்கியத் தாகம் இருப்பதையும் யாத்திரைத் தேவையின் உணர்வு இருப்பதையும் வெளிப்படுத்தியது. ஆதலின் சமய இலக்கியங்களுக்கான மாநாடுகளைத் தொடர்ந்து காசி மாநகரிலேயே நடத்தலாம் என்ற எண்ணத்தை வித்திட்டது. அவ்எண்ணத்தைத் திருவளர்திரு கயிலை மாமுனிவர் காசிவாசி அதிபர் சுவாமிக்ளிடம் வெளிப்படுத்தியபோது, மிக்க ஆர்வத்துடன் வரவேற்றுத் திருமுறை மாநாடுகளையே தொடர்ந்து நடத்தலாமே என அருள்பாலித்தார்கள். அதற்கான திட்டங்களையும் வகுத்தளித்தார்கள்.

அதிபர் சுவாமிகளின் அவ்அருளாணையின் வண்ணம் 2001-ஆம் ஆண்டு முதல் திருமுறை மாநாடுகளைத் தொடங்கினோம். நாயன்மார் வரலாறு பேசும் சேக்கிழாரை முதலில் நினைவுகூரும் பொருட்டு, பெரியபுராண ஆய்வு மாநாட்டை 2001-ஆம் ஆண்டில் நம் அதிபர் சுவாமிகள் மிகச் சிறப்பாக நடத்திக் காட்டினார்கள். சென்ற ஆண்டு திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வுமாநாட்டையும் சிறப்பாக நடத்தினார்கள். இவ்வாண்டு திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வு மாநாடு சீரும் சிறப்புமாக நடைபெறுகிறது. அடுத்த ஆண்டு திருத்தொண்டர் வரலாறுகளைத் தொகுத்தளித்த சுந்தரமூர்த்திகளின் இலக்கிய ஆய்வு மாநாடு நடத்து

வதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டு வரும் எங்களை உங்கள் ஆக்கமும் ஊக்கமும் வலுப்படுத்தும் என்ற நம்பிக்கை எங்களுக்குண்டு. இம்மாநாடு களின் நோக்கம் சமய இலக்கியங்களைப் பயின்று சுவைப்பதும் யாத்திரை மேற்கொண்டு உலக அனுபவமும் மனித நேயமும் பெறுவதும்தான் என்பதை மீண்டும் நினைவுபடுத்துவதில் நாங்கள் நிறைவடைகிறோம்.

**பாரதப் பண்பாட்டில் திருநாவுக்கரசர்**

திருக்கோயில் வழிபாடும் யாத்திரையும் இப்பாரத மண்ணின் கலாச்சாரத்தை வெளிப்படுத்துவதில் முன்னிற்பன. இவ்உண்மையை வெளிப் படுத்தும் வண்ணம் வாழ்ந்த அருளாளர்கள் எண்ணற்றோர் ஆவர். அவர்களுள் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் குறிப்பிடத்தக்க சிறப்புக்குரியவராவர். வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே பாரதப் பண்பாடு. என்றாலும் இம்மண்ணில்தான் எவ்வளவு வேறுபாடுகள்! குலத்தால், பிறப்பால், இனத்தால், மொழியால், தொழிலால் வேறுபட்டு நிற்கும் இம்மனிதர்களிடம் அவ்வப்போது மலரும் மாறுபாடுகளைப் போக்குவது எவ்வாறு? அவர்களை ஒன்றாக்கும் சக்தி எது? என நாளும் ஆய்வு செய்த அருளாளர்கள் கண்டதுதான் பக்தி இயக்கம். ஆம், பக்தி ஒன்றே மனிதநேயத்தை வளர்க்கும். ஆன்மநேய ஒருமைப் பாட்டை உருவாக்கும். இமயம் முதல் குமரி வரை மாந்தர் இனத்தை ஒன்றுபடுத்தும் எனத்தெளிந்தனர். பக்தியின் பண்பாக விளங்கும் திருக்கோயில் வழிபாடும் யாத்திரையும்தான் இம்மக்களிடையே எழும் வேற்றுமைகளைக் களையும். மொழிவேற்றுமையைப் போக்குவதில் யாத்திரையைக் காட்டிலும் சிறந்த சாதனம் ஏதேனும் இருக்க முடியுமா?

திருநாவுக்கரசர் வாழ்வும் வாக்கும் இப்பாரதப் பண்பை விளக்கும் இலக்கியமாகக் காட்டுவன என்றால் அது மிகையாகாது. குமரி முதல் இமயத்துக் கயிலை வரை வாழ்நாள் முழுதும் யாத்திரை யாத்திரை அதன்வழி திருக்கோயில் வழிபாடு என வாழ்ந்ததுடன் - வாழ்நாள் முழுதும் உழவாரப் பணியாம் தொண்டு நெறியைக் கைக்கொண்டு பக்திப் பயிரை வளர்த்த அவரைக் குறித்து மாநாடும் கருத்தரங்கும் நடப்பது எவ்வளவு பொருத்தம்? எவ்வளவு இன்றியமையாச் சிறப்புடையது என்பது விரிக்காமலே விளங்குமன்றோ?

**ஆய்வு மாலைகள்**

தவத்திரு ஊரன் அடிகளார் அவர்கள், 'இது திறனய்வுக் காலம், கருத்தரங்கக் காலம்' என இந்நூற்றாண்டைக் குறிப்பிடுவார்கள். இக்கூற்று உண்மையே. நூலாக்கங்கள் வழி தமிழ் வளர்த்த முந்தைய நூற்றாண்டு களில் அதிகம் பயிலாத கருத்தரங்கங்கள் இந்நூற்றாண்டிலும் இனி எதிர்வரும் காலங்களிலும் தமிழ் மொழியை வளப்படுத்தும் என

நம்புவதற்குரிய களங்கள் காணப்படுகின்றன. தமிழியல் ஆய்வில் அறிஞர் பெருமக்களின் தனி ஆய்வுகளும் திறனாய்வுகளும் ஒருபுறம் இருக்க, ஆய்வறிஞர்கள் மாணவர்கள் அடங்கிய ஒருமித்த மாநாடுகளும் கருத்தரங்குகளும் நாளுக்குநாள் பெருகி வருவதை நாம் காணலாம். இவ்வகையில் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் முன்பாகத் தோன்றிய அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் கருத்தரங்கு களும் மாநாடுகளும் சிறந்த முன்னோடிகளாகத் திகழ்கின்றன எனலாம். அக்கருத்தரங்குகளில் படிக்கப் பெற்ற, ஆய்வு செய்யப்பெற்ற கட்டுரைகள் முன்னதாகவே அச்சிடப்பெற்று ஆய்வுக்கோவைகளாக வெளிவந்தன. அவை பலரை எழுதத் தூண்டின. பலரைத் திறனாய்வுக்குள் நுழைத்தன. பலரை ஒப்பீட்டிலும் மீளாய்விலும் புகுத்தின. மேலும் அம்மாநாடுகள் சில எழுத்தாளர்களையும் திறனாய்வாளர்களையும் உருவாக்கின. மொத்தத்தில் அவை தமிழை வளப்படுத்தியதுடன் தமிழ் ஆய்வை மெருகூட்டத் துணை செய்தன எனப் பெருமை கொள்ளலாம்.

அந்த வகையிலேயே ஆய்வாளர்களையும் கலைஞர்களையும் உருவாக்கும் எண்ணத்துடன் உரிய களங்களை அமைத்து வழங்கத்தக்க மாநாடுகளை நடத்த பல்வேறு அமைப்புகளும் முயன்றன. தனிநூலுக் காகவும், தனி ஒரு புலவரின் நூல்களுக்காகவும், காலங்களுக்காகவும், இலக்கிய வகைகளுக்காகவும் என வகைவகையான மாநாடுகள். இம்மாநாடு களில் எல்லாம் முன்னதாகவே ஆய்வுரைகளைத் தொகுத்து அச்சிட்டு மாநாட்டு விழாவிலேயே வெளியிட்டு மகிழும் நற்செயல்கள் நடந்து வருகின்றன. இம்முறை குறைந்தபட்சம் நம் ஆய்வுரைகளை எழுத்தில் அச்சில் பதிவு செய்த பெருமையைத் தருகின்றமையை நாம் காணலாம்.

இந்த இனிய முறையில் வெளிவருவதே திருநாவுக்கரசர் ஆய்வு மாலை. எக்காலத்துக்கும் பொருந்தும் இலக்கியச் செல்வங்களாக நம் சமய இலக்கியங்கள் திகழ்வதை இந்த ஆய்வுமாலையும் உறுதி செய்கிறது. தமிழரின் அருஞ்செல்வமாகிய பக்தி இலக்கியங்கள் சமுதாய உணர்வுகளோடு எழுந்தவை என்பதை விளக்குவனவாகவே இவ்ஆய்வு மாலையின் கட்டுரைகளும் காணப்படுதல் சிறப்புக்குரிய செய்தியாம்.

## பதிப்பு முறை

ஏற்கெனவே வெளிவந்த பெரியபுராண ஆய்வுமாலை, திருஞானசம்பந்தர் ஆய்வுமாலை ஆகியவற்றில் பின்பற்றப் பெற்ற பதிப்பு முறையே இத்தொகுதிகளிலும் காணப்பெறும். கட்டுரைகளின் கருத்துகளுக்கு கட்டுரை ஆசிரியர்களே பொறுப்பாவர். சிற்சில மாற்றங் களும், தொடர், சொல், இலக்கணப் பிழைகள், மேற்கோள் பிழைகள் மட்டுமே திருத்தப் பெற்றன. தலைப்புகளில் சிறு மாற்றங்கள் செய்யப்

பெற்று ஒருவரியில் அவை இடம்பெறுமாறு திருத்தப் பெற்றன. கூடுமானவரை கட்டுரைகளை ஆசிரியர் அகர வரிசையிலே அச்சிட்டதுடன் முதல் தொகுதியின் இறுதியில் கட்டுரையாளர் முகவரியை அகர வரிசையில் அமைத்துள்ளோம். இக்கட்டுரைகள் பொருள் வாரியாகவோ, அமர்வு வாரியாகவோ, பிரிக்க முடியாத சூழலில் அச்சுப்பணி அமைந்தது.

கட்டுரையாசிரியர்களின் கருத்துகள் மேலாய்வுக்குரியன. தடைவிடை களுடன் விவாதிக்கப்பெற்று முழுமை பெற வேண்டியன. என்றாலும் திறனாய்வாளர்க்கு இது ஒரு அடிக்கல்லாகப் பயன்தரும் எனும் நோக்கில் வந்தவண்ணமே பதிவு செய்யப்பெற்றன. இவை எதிர்கால ஆய்வுக்கும் வழிவகுக்கும் நிலையின எனலாம்.

இம்மாநாடு தொடர்பாக 900 தமிழ் ஆர்வலர், ஆய்வாளர், மாணவர் களுடன் தொடர்பு கொண்டோம். பேராளரும் பார்வையாளருமாக 500 பேர் பதிவு செய்தனர். அவர்களுள் 400 பேர் மட்டுமே இதில் பங்கு கொள்கின்றனர். நாங்கள் அனுப்பிய அமர்வுத் தலைப்புகளுள் பலரும் திருநாவுக்கரசர் வரலாற்றையே மீண்டும் மீண்டும் எழுதினர். சில தலைப்புகளைப் பற்றி யாருமே சிந்திக்கவில்லை, எழுதவில்லை. என்றாலும் திருநாவுக்கரசரை இவ்வளவு பேர் பயின்றார்களே, எழுதினார் களே என்பதில் எங்களுக்கு அடிப்படை மகிழ்ச்சி உண்டு.

இத்தொகுதிகள் முற்றிலுமாக, திருநாவுக்கரசரைத் தெளிவாக்க வில்லை என்ற குறை இருந்தபோதும், மாநாட்டின் அடிப்படை நோக்கமான சமய இலக்கியங்களைப் படித்தல், யாத்திரை செய்தல் ஆகியவற்றில் வெற்றி பெற்றுள்ளன என்றால் அது மிகையாகாது. பொதுவாக, ஆய்வாளர்கள் அனைவரும் திருநாவுக்கரசரின் தேவாரம் பாரதப் பண்பாட்டை வலியுறுத்துகிறது, பக்திநெறி தொண்டுநெறியுடன் இணையும்போது முழுவெற்றி பெறுகிறது. தலயாத்திரை மனிதநேயத்தை வளர்க்கிறது. மொழி இனவேறுபாட்டை பக்தி தகர்க்கிறது என்னும் சாரத்தை உணர்த்தியிருக்கின்றனர். அந்தவகையில் மாநாட்டின் குறிக்கோளை இம்மாலையும் பதிப்பு முறையும் நிறைவேற்றியுள்ளன என்பதில் நாங்கள் மகிழ்கிறோம்.

## சிவம் பெருக்கித் தமிழ் வளர்க்கும் காசித்திருமடம்

வாரணாசி என அழைக்கப்பெறும் காசிமாநகரின் கங்கைக் கரையில் பிரபந்த வேந்தராம் ஆதிகுமரகுருபர சுவாமிகள் நிறுவிய தமிழ்மடம் குமாரசாமித் திருமடமாகும். இம்மடத்தின் ஞானபரம்பரையில் தோன்றியதே திருப்பனந்தாள் காசித்திருமடம். இம்மடத்திற்கு 'இமசேதுபரியந்தம்' என்னுமாப்போலே தென்குமரி முதல் இமாலயத்தின் திருக்கேதாரம் வரையான தொடர்புகளுண்டு. நேபாள நாட்டிலும் ஒரு கிளைமடம்

இருந்ததாகக் கூறுவர். அந்தளவில் காவிரி முதல் கங்கை வரையான மிக நீண்ட கலாச்சார, பண்பாட்டுப் பாரம்பரியம் உடைய திருமடம் காசித்திருமடமாகும்.

ஆதிகுருமுதல்வராம் குமரகுருபர சுவாமிகள் தமிழோடு சைவம் வளர்த்த தகைமையர் ஆதலின் அவர்தம் வழிவந்த ஞானபரம்பரை யினரும் இவ்விரு பணிகளுக்காக ஏராளமான அறக்கட்டளை நிறுவி திறம்பட செயற்படுத்தி வருகிறார்கள். தமிழ்க் கல்விக்கென தமிழ்க் கல்லூரியும், கலைக்கல்லூரியும் நடத்தி வருவதுடன் பல்வேறு பல்கலைக் கழகங்களில் தமிழ்மொழி பயில்வோர்க்கு ஊக்கத்தொகை, அறக்கட்டளைப் பரிசு போன்ற பல அறக்கொடைகளை இத்திருமடம் நிறுவியுள்ளது. இத்திருமடத்தின் அதிபர்களும் பிறரும் சிறந்த தமிழ்க் கல்வியாளர் களாகவும் ஓதுவா மூர்த்திகளாகவும், சிறந்த தமிழ்ப்பற்றாளர்களாகவும், சொற்பொழிவாளர்களாகவும் விளங்கிச் சைவத்தையும் தமிழையும் ஒருசேர வளர்த்து வருகின்றனர்.

## காசித்திருமடத்தின் திருமுறைப் பணிகள்

காசித்திருமடம் மூன்று நூற்றாண்டுக்கும் மேற்பட்ட பழமை யுடையது. சைவமும் தமிழும் இருகண்களெனப் புரந்து போற்றி வருவது தமிழகத்தில் மட்டுமேயன்றி பிற மாநிலங்களிலும், அயல்நாடுகளிலும் சைவத் திருமுறைகள் பரவ வேண்டும் எனும் பேரவா கொண்டு முழுவீச்சில் செயல்பட்டு வருவது பலரும் அறிந்ததே.

சைவத்தின் வேத நூல்களாகவும், 'எழுதுமறை' என்று சமய உலகம் போற்றுவதுமாகிய திருமுறைகளையும் அவற்றை அருளிய அருளாளர்களையும் போற்றிப் புரந்திட இத்திருமடம் எடுத்துள்ள முயற்சிகளும், நிலையான செயற்பாட்டுத் திட்டங்களும் விரிக்கின் பெருகும்; மலையும் மலைக்கும். அவற்றுள் பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்போல சில பணிகளைப் பட்டியலிடல் தகுமெனக் கருதுகிறோம்.

திருமுறைகளைப் பாராயண நூல்களாக ஒரு சிலர் மட்டுமே அறிந்திருந்த நிலை மாறி, பல்லாயிரக்கணக்கானோர் வாழ்வில் அவை முதன்மை பெற்ற தெய்வீக அம்சமாக இடம்பெறச் செய்ததில் இத்திருமடத்தின் பணி பெரியது, போற்றற்குரியது.

### 1. திருமுறைச் சொற்பொழிவு

பன்னிரு திருமுறைகளில் உள்ளே அமைந்துள்ள பற்பல அற்புதங் களை அனைவரும் அறியும் வகையில் வல்லார் வாயிலாகச் சொற்பொழிவு ஆற்ற நிலையான அறக்கட்டளைகள் இம்மடத்தால் நிறுவப் பெற்றுள்ளன.

1. சிதம்பரத்தில் பெரியபுராணச் சொற்பொழிவு
2. மதுரையில் பெரியபுராணச் சொற்பொழிவு
3. சிதம்பரத்தில் திருவாசகச் சொற்பொழிவு

இவற்றுக்கான நிலை முதலீடு சுமார் ரூ. 25,000/-

## 2. திருமுறை நூல் பதிப்பு நிதி

திருந்திய வடிவில், எளிய விலையில், திருமுறை நூல்கள் சமய அன்பர்களுக்கு ஒரே இடத்தில் கிடைக்க வேண்டும் எனும் உயர் நோக்குடன் பன்னிரு திருமுறை நூல்களை வெளியிட்டு வழங்கி வருகிறது இம்மடம்.

பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி எனும் பெயரில் ரூ. 50,000/- முதலீட்டில் (1950-ஆம் ஆண்டு) அறக்கட்டளை உண்டாக்கப் பெற்றுப் பரிபாலிக்கப் பெறுகிறது. இவ்அறக்கட்டளையின்வழி தொடர்ச்சியாகத் திருமுறை நூல்கள் பல பதிப்புகளைக் கண்டு வெளிவந்து கொண்டிருக்கின்றன. **"கயிலைமாமுனிவர் தேவாரத்திரட்டு"** என்னும் நூலொன்று பாடல் பெற்ற 275 தலங்கட்கும் தலத்திற்கு ஒரு பாடலாக அமைத்து வெளியிட்டமை குறிப்பிடத்தக்கது.

## 3. திருமுறைவாணர் நியமனம்

தெய்வீகம் பொருந்திய தமிழகத்தில் உள்ள, தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களில் திருமுறைகள் விண்ணப்பம் செய்யப் பெறவேண்டும் எனும் விருப்புடன் தகுதி வாய்ந்த, பயிற்சி பெற்ற திருமுறைவாணர்களை நியமித்து, மாதந்தோறும் அவர்களுக்கு ஊதியம் வழங்க அறக்கட்டளைகள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன.

திருநாரையூர், சிதம்பரம், மதுரை, பழைய பாபநாசம், திருக்குற்றாலம், ஆச்ராமம், திருவண்ணாமலை, வாரணாசி, இராமேஸ்வரம், திருக்காளத்தி, கும்பகோணம், திருவெண்ணெய்நல்லூர், புதுடெல்லி (ஸ்ரீ விநாயக சுப்பிரமணியசுவாமி மந்திர்), வடதிருவாலங்காடு, திருச்சாய்க்காடு, திருப்பாதிரிப் புலியூர், திருமாகறல் ஆகிய தலங்களில் தேவாரம் ஓதத் திருமுறைவாணர்கள் நியமனம் செய்யப்பெற்று, ஊதியம் வழங்கப் பெறுகிறது. இதற்கென தனித்தனியே 17 அறக்கட்டளைகளுள்ளன. இவற்றுக்கான பொருட்கொடை சுமார் 12 இலட்சம் (1972-க்கு முந்தைய மதிப்பில்) நிலைத்த வைப்பில் உள்ளது.

## 4. திருமுறை இன்னிசை நிகழ்வுகள்

ஆண்டுதோறும், சில குறிப்பிட்ட சிறப்பு விழாக்களிலும், நாட்களிலும் திருமுறைவாணர்கள் பலரை அழைத்துப் பண்ணிசைப் பதிகம்

பாடச் செய்ய நிலைத்த ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. இதற்கென 9 அறக்கட்டளைகள் உள்ளன. இதற்கென சுமார் நான்கு இலட்சம் ரூபாய் நிலைத்த வைப்பாகவும், நிலவருவாயிலிருந்து பெறும்படியும் ஒதுக்கப் பெற்றுள்ளது.

1. திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பி நினைவு நாள் (வைகாசி புனர்பூசம்)
2. மதுரையில் குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் (வைகாசி அமரபட்சம் திருதியை)
3. சுசீந்திரத்தில், மார்கழித் திருவிழா, சித்திரைத் திருவிழா நாட்கள்.
4. திருச்சியில் குமரகுருபர சுவாமிகள் நினைவாக ஆவணி மூல நாள்.
5. குடந்தையில் மகாமக விழா நாள்.
6. தில்லையில் ஆடிச்சுவாதி நாள்.
7. திருக்காளத்தியில் மகா சிவராத்திரி நாள்.
8. திருக்கொள்ளம்பூதூரில் ஐப்பசி அமாவாசைக்கு மறுநாள்.
9. தஞ்சையில் ஐப்பசி சதய நாள்.

**5. சிவசிவ ஒலிமண்டபம்**

சிதம்பரத்தில், ஸ்ரீ நடராஜப் பெருமான் திருக்கோயிலில் நாடோறும் திருமுறை விண்ணப்பம் செய்யப்பெறச் 'சிவ சிவ ஒலிமண்டபம்' ஏற்படுத்த உரிய தொகையுடன், இராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி ஏற்படுத்தப்பட்டுள்ளது.

**6. பள்ளி, கல்லூரி மாணவர்க்குப் பரிசு**

அறிவு பெறக் கல்வி கற்கும் பள்ளி, கல்லூரி மாணவர்கள் சமய அறிவும், ஒழுக்கமும் பெற வேண்டும் எனும் கருத்துடன் பல்வேறுபட்ட ஊர்களிலுள்ள பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியர்க்குப் போட்டிகள் நடத்திப் பரிசு வழங்க, 11 அறக்கட்டளைகள் உண்டு. நிதி ஒதுக்கீடு: சுமார் எழுபதாயிரம்.

1. திருவாரூர், திருவையாறு, ஆடுதுறை உயர்நிலைப்பள்ளி.
2. மாயூரம் உயர்நிலைப்பள்ளிகள்
3. ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளி
4. மதுரை உயர்நிலைப்பள்ளி
5. ஸ்ரீவில்லிபுத்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவியர்
6. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு
7. திருச்செந்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
8. தஞ்சாவூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
9. மதுரை உயர்நிலைப்பள்ளி மாணவர்

10. சிதம்பரம் உயர்நிலைப்பள்ளி மாணவர்
11. திருவண்ணாமலை உயர்நிலைப்பள்ளி மாணவர்.

தமிழகத்தில் மட்டுமன்றி, கர்நாடக மாநிலத்தில் உள்ள மைசூர்ப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவர்களுக்குப் பரிசு வழங்க, His Highness the Maharaja of Mysore Thevaram Prize எனும் அறக்கட்டளையை ஏற்படுத்தியுள்ளது. ஆக, 12 அறக்கட்டளைகளை ஏறத்தாழ 75,000/- பொருட்கொடையில் நிறுவிப் புரந்து வருகிறது.

## 7. தேவாரம் முதலிய பாடல்களைக் கல்வெட்டில் பொறித்தல்

திருக்கோயிலுக்குச் செல்வோர், இறையுணர்வுடன் வழிபடுவதோடு அருளாளர்தம் வாக்குகளையும் ஓதிப் பயன்பெற வேண்டும். அதற்கு நிலையான ஓரமைப்பு வேண்டும். அதற்கு அப்பதிகங்களைக் கல்வெட்டில் பொறித்து வைப்பதே சாலச் சிறந்தது எனக் கருதிப் பல தலத்துக் கோயில் களில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

1. திருவண்ணாமலை பராசக்தி அம்மன் சன்னதியில் திருவெம்பாவைப் பாடல்கள் (சலவைக் கல்லில்)
2. சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு, சிவபுராணம், திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள்.
3. மதுரை முதலான 35 திருப்பதிகளில் தேவாரப் பாசுரங்களைச் சலவைக்கல்லில் பொறித்தது.

மேற்குறித்த 3 பணிகளுக்கும் எழுபதினாயிரம் ரூபாய் நிதி ஒதுக்கப்பட்டது.

## 8. திருமுறை ஆசிரியர்கள் பெயரில் அன்னம்பாலிப்பு

'அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்', 'அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்' எனும் அருளாளர் வாக்குகளை உளங்கொண்டும், திருமுறை ஆசிரியர்களின் நினைவாகவும் சில பதிகளில் அன்னம்பாலிப்புச் செய்ய 6 அறக்கட்டளை ஏற்படுத்தி அதற்கு நிதியாக சுமார் மூன்று இலட்சம் ஒதுக்கப் பெற்றது.

1. வாரணாசியில் ஸ்ரீ சுந்தரர் நினைவாக ஆடி மாதத்தில்.
2. திருவாதவூரில் ஆனி மக நாளில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு.
3. வாரணாசியில் ஐப்பசி மாதத்தில் திருமூலர் நினைவு அன்னம்பாலிப்பு.
4. திருக்கழுக்குன்றத்தில் ஆனி மகத்தன்று ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு.
5. வாரணாசியில் ஸ்ரீதிருஞானசம்பந்த தேசிகர் நினைவு அன்னம்பாலிப்பு.
6. கன்னியாகுமரி ஆசிரமத்தில் திருமுறை அன்னம்பாலிப்பு நிதி.

### 9. தண்ணீர்ப் பந்தல் அறம்

அறங்களுள் சிறந்தது தண்ணீர்ப் பந்தல் வைப்பது, அதனைச் சமய அருளாளர் தொடர்பில் வைத்துப் பெருமை செய்தது காசிமடம். 2 அறக்கட்டளைகள் சுமார் 7000 பொருட்செலவில் நிறுவப்பட்டன.

1. தத்துவாஞ்சேரியில் ஸ்ரீ திருநாவுக்கரசர் நினைவு தண்ணீர்ப் பந்தல்.
2. சுவாமிமலையில் அப்பர் தண்ணீர்ப் பந்தல் நிதி.

### 10. அருளாளரின் மடங்கள் புதுப்பித்தல்

திருப்பூந்துருத்தியில் உள்ள அப்பர் திருமடத்தைப் புதுப்பிக்க நிதிக்கொடை வழங்கப்பட்டது.

### 11. அப்பர் பெயரில் நூலகம்

அப்பரடிகள் பெயரில், திருப்பூந்துருத்தியில் நூலகம் ஏற்படுத்த நிதி வழங்கப்பட்டது.

### 12. காசி குமரகுருபரர் மாநாட்டு நினைவு அறக்கட்டளை

வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் 1999-ஆம் ஆண்டு குமரகுருபரர் ஆய்வு மாநாடு நடைபெற்றது. அப்போது செலவுகள் போக ரூ. 50,000/- எஞ்சியிருந்தது. இத்தொகை காசித்திருமடம் மாநாட்டுக்காக வழங்கிய ரூ. 60,000/- தொகையினால் எஞ்சியதாகும். இத்தொகை முழுவதையும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் திருமுறை நிகழ்ச்சிகளுக்காக அறக்கட்டளையாக்கப் பெற்றது.

எனப் பலவகைகளிலும் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்திருக்கிறது.

சைவத்தோடும் திருமுறைகளோடும் இவ்வளவு நெருங்கிய தொடர்பும், உறவும் கொண்டு விளங்கும் இக்காசித்திருமடம் **திருநாவுக்கரசர் மாநாட்டை** நடத்துவது என்பது எல்லா வகையிலும் பொருத்தமுடையது என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

### களம்பூர் கோவிந்தசாமி அடிகளார்

இந்த நூற்றாண்டின் அப்பூதி அடிகளாராக வாழ்ந்தவர் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார். அவ்வரலாற்றை ஏற்கெனவே பெரியபுராண ஆய்வுமாலையில் எழுதியுள்ளோம். சிவாலய வழிபாட்டிலும் பொதுத் தொண்டிலும் தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக்கொண்ட அவர்கள், நால்வர் மடம் அமைத்து நாயன்மார் குருபூசைகளை நடத்தியும், வார வழிபாடு, சமயச் சொற்பொழிவுகளை நடத்தியும், திருமுறை விழாக்களை முத்தமிழ் விழாவாகவே கொண்டாடித் தமிழ்வளர்த்தும் சைவம் பரப்பியும் நிறைவாழ்வு வாழ்ந்தவர். அவர்தம் அடியார் வழிபாட்டையும்

தொண்டுநெறி குறித்தும் எவ்வளவோ சொல்லிக் கொண்டு போகலாம். சென்ற ஆய்வுமாலையில் திருஞானசம்பந்தர் குருபூசை விழாவை அவர் கொண்டாடிய விதம் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம். அவ்வகையிலேயே ஒவ்வொரு நாயன்மாருக்கும் உரிய சிறப்புத் தனித்தன்மையுடன் அவர் விழாக்களைக் கொண்டாடுவார்.

## திருநாவுக்கரசர் குருபூசை

திருஞானசம்பந்தர் குருபூசையில் 'ஞானப்பால்' சிறப்பிடம் பெறும். திருநாவுக்கரசர் குருபூசையிலோ அப்பரின் தொண்டுநெறியைக் குறிக்கும் உழவாரமும் உழவாரப் பணியும் சிறப்பிடம் பெறும். திருநாவுக்கரசர் குருபூசை பெரும்பாலும் கோடை விடுமுறையிலேயே அமையும். ஆதலின் நாங்கள் ஓய்வாக முற்றிலும் அதில் ஈடுபடுவதற்கு வசதியாக இருக்கும். குருபூசைக்குப் பத்துநாள்களுக்கு முன்பாகவே, கிட்டத்தட்ட சித்திரை முதல் தேதி முதலே எங்களுக்குக் குருபூசைப் பணிகள் ஒதுக்கப்பெறும். ஒட்டடை அடித்தல், சுண்ணாம்பு அடித்தல், வண்ண அட்டைகளில் தேவார வரிகளை எழுதுதல், மடத்தை வண்ணத்தாள்களால் தோரணம் கட்டி அழகு செய்தல், பந்தல் போடுதல் எனப் பல வேலைகளும் தரப்படும்.

## உழவாரம்

எல்லாவற்றையும்விட கொல்லன் பட்டறைக்குச் சென்று பத்து உழவாரங்களைச் செய்துவரும் பொறுப்பும் எங்களிடமே ஒப்படைக்கப் பெறும். ஒரு அங்குலம் தடிமனும் ஒன்றரை அடி நீளமும் உள்ள கம்பிகளைக் கொடுத்து அதனை உழவாரமாக அடித்து வருமாறு சொல்வார். பள்ளியும் விடுமுறை என்பதால் நாங்கள் ஆர்வமாக, கொல்லன் பட்டறைக்குச் சென்று அங்கேயே வேடிக்கை பார்த்துக் கொண்டும், துருத்தியை ஊதச் சக்கரம் சுற்றிக்கொண்டும் நாள்முழுவதும் இருந்து உழவாரத்தைச் செய்து வருவோம். சாதாரணக் கம்பியை நெருப்பில் காய்ச்சித் தணலாக இருக்கும் அதனைத் தட்டித் தட்டி முன்பக்கம் அகன்றும் நடுவில் குறுகியும் ஓரத்தில் குண்டுமாக அமைத்து வடிப்பதைக் கண் கொட்டாமல் பார்த்து வியப்போம். அடிக்கடி அடிகளார் தாமே வந்து சிறுசிறு மாற்றங்களைத் திருத்தங்களைக் கூறிச் செல்வார். அவருக்கு நெற்றியில் இடும் சந்தனமும் விபூதியும்கூட ஒவ்வொரு முறையும் ஒரேமாதிரி ஒரே அளவாக அமையவேண்டும் என்பதில் ஒரு அழகுணர்ச்சி. எனவே, உழவாரத்திலும் அதனை எதிர்பார்ப்பார். அவர் கொடுக்கின்ற இரண்டணா கூலிக்குச் சலிக்காமல் செய்து கொடுப்பார் அந்தப் பட்டறைக்காரர். அப்படிச் செய்கின்ற உழவாரத்தை சூடு ஆறுவதற்கு முன்பே ஆர்வத்தில் எடுத்துப் பார்த்துக் கைகளைச் சுட்டுக்கொண்டதோடு, உடைகளையெல்லாம் கரியாக்கிக் கொண்டுவந்து வீட்டில் திட்டு வாங்கியதும் உண்டு. உழவாரத்தைச் செய்து எடுத்து வரும்போது ஏதோ

பஞ்சலோகத் திருமேனியையே வடித்து வந்துவிட்டதுபோல நாங்கள் அதனைத் தோளில் சுமந்து பெருமிதமாக வந்து கொடுத்துவிட்டு கடலை மிட்டாய் வெகுமதி பெறுவோம்.

அதற்குப் பின் ஒருநாள் காலையில் பிள்ளையார் பூசையுடன் அந்த உழவாரங்களுக்கும் பூசை நிகழ்த்தப்பெறும். உழவாரத்துக்கு ஏன் அபிஷேகமும் ஆரத்தியும் என்று சிலர் கிண்டலடிப்பர். அதற்கு அவர், 'இந்தப் பொருள் நன்மையே செய்யவேண்டும். யாருக்கும் எந்தத் தீங்கையும் உண்டாக்கக் கூடாது. இதனால் யாருக்கும் அடிபடக்கூடாது. புல் முள் வெட்டும்போது மண்புழுக்களையும் இது வெட்டக்கூடாது. அவ்வாறு வேண்டியே இவ்வாறு வழிபட்டுத் தொடங்குகிறேன்' என்று விடை தருவார். கருவிகளையும் நாம் மதித்தால்தான் அவை நம்மை இன்புறுத்தும் என்பது அவர் கொள்கை.

முறையான வழிபாடுகள் நடந்த பின்பு பத்துநாளும் களம்பூர் காசி விசுவநாதர் திருக்கோயிலில் உழவாரம் செய்யவேண்டும். ஒரு காலத்தில் 5 தேர்கள் இடம் பெற்றிருந்த திருக்கோயில் அது. எனவே வாகன அறை, தேர் நிறுத்தங்கள் பூச்செடிகளின் இடை, வழி என எல்லா இடத்திலும் உழவாரம்... காலை முதல் மாலை வரை நடைபெறும். அவ்வப்போது எங்களுக்குப் பானகம், மோர், மிட்டாய், கடலை உருண்டை இவை எல்லாம் குறைவற வழங்கிக் கொண்டிருப்பார் அவர். பள்ளிக்கூடம் விடுமுறை என்பதால் ஒருவகையில் எங்களுக்கு அது பொழுது போக்காகவும் இருக்கும். கோயிலுக்குத் தூய்மை பெற்ற பெருமிதமும் கிடைக்கும். இப்படி உழவாரம் முடிந்தபின்புதான் குருபூசை நடைபெறும். குருபூசையில் அவ்உழவாரப்படைகள் சிறப்பிக்கப் பெற்று மாணவர் களுக்குப் பரிசாக வழங்கப்பெறும். களம்பூரில் இன்னும் பலர் வீடு களில் அவை இடம் பெற்றிருக்கக் காணலாம்.

அடிகளார் சொற்ப வருமானத்தில், அழகுணர்வுடன் செய்தளித்த அவ்வுழவாரங்கள் போன்று நிறைவான வருமானத்தில் இருக்கும் எங்களால் இன்றைய நவீன முறைகளாலும் செய்து தரமுடியவில்லையே என்பது எவ்வளவு வருத்தமான செய்தி!

அவரது திருமுறைத் தொண்டுகளை நீடுநினைந்து போற்றும்வண்ணம் அவர்பெயரில் அறக்கட்டளை நிறுவி, திருமுறை விழாக்கள், திருக்கேதார கங்கைநாதர் வழிபாடு, அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், மாணவர் பரிசு விழாக்கள், திருமுறைப் பரிசு, கருத்தரங்குகள், நூல் வெளியீடு, யாத்திரைத் துணை எனப் பலவகைகளில் தொண்டாற்றும் நிலையில் இதனைச் செயற்படுத்தி வருகிறோம். அந்த வகையில் சிவம் பெருக்கித் தமிழ்வளர்க்கும் காசித்திருமடத்துடன் இணைந்து திருநாவுக்கரசர் திருமுறை

மாநாட்டை நடத்துவதில் பெரிதும் பொருத்தம் இருப்பதாகவே நாங்கள் உணர்கிறோம்.

**நன்றியுரை**

காசியில் குமரகுருபர சுவாமிகள் மடம் நிறுவிய காலமுதலாக, திருப்பனந்தாளில் கிளைமடம் வளர்ந்த காலமுதலாக, காசித் திருமடம் தமிழையும் சைவத்தையும் சமூகப் பணிகளுடன் இணைத்து வளர்ப்பதில் தலைநிற்பது என்றால் அது மிகையாகாது. சிறப்பாக, பல்வேறு இனமொழி மக்களை ஒன்றுபடுத்தும் மனிதநேயப் பண்பை ஆன்மநேய ஒருமைப் பாட்டை வளர்ப்பதில் இக்காசித் திருமடம் முன்னிற்பதாம். இத்திரு மடத்தின் இன்றைய அதிபர் சுவாமிகள் திருவளர்திரு கயிலை மாமுனிவர் காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் குமரி முதல் இமயம் வரையுள்ள திருமடங்களிலும் திருக்கோயில்களிலும் மேற்கண்ட பணிகளைச் செம்மையாக நடத்தி வருகின்ற பான்மையை இப்பாரதபூமி நன்கு அறியும். இம்மாநாட்டின் திட்டங்களை வரவேற்று ஊக்கப்படுத்தியதுடன் மாநாட்டின் ஒவ்வொரு பணியிலும் ஆய்வுக் கட்டுரைகளின் ஒவ்வொரு செய்தியிலும் ஈடுபட்டுப் பணி முன்னேற்றங் களைக் கண்காணித்து அருளாணைகள் வழங்கித் தொடர்ந்து துணைபுரியும் நம் அதிபர் சுவாமிகளே இம்மாநாட்டுக்கும் மூலகாரணமும் முதற் காரணமுமாக இருக்கின்றார்கள். எனவே அவர்தம் திருவடிகளை வாழ்த்தி முதற்கண் நன்றி பாராட்டுவதில் நாங்கள் நிறைவடைகிறோம்.

வாரணாசியில் நம் குமாரசாமித் திருமடத்தில் திருப்பணி வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற இடையூறான இந்நேரத்திலும் மாநாட்டைத் தொடர்ந்து நடத்துவதில் ஆர்வம் காட்டுகின்ற அவர்களின் திருமுறைப் பற்றை, தமிழ்க் காதலை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பல ஆய்வாளரையும் அழைத்துச் சென்று இருக்க இடமும் உண்ண உணவும் தந்து கங்கையில் நீராட்டி விசுவநாதரின் தரிசனத்தையும் வழங்கும் நம் அதிபர் சுவாமிகள் தாமே ஒரு ஆய்வாளராகப் பங்கேற்று ஆய்வுக் கட்டுரையும் வழங்கிச் சிறப்பித்திருப்பது இவ் ஆய்வுமாலைக்குப் பெருமை சேர்ப்பதாம். தமக்கிருக்கின்ற பல்வேறு திருப்பணிகளுக்கிடையிலும் நம் எண்ணங்களை, ஆய்வுகளை வெளிப்படுத்துவதற்குக் களம் அமைத்துத் துணைபுரியும் அவர்களுக்கு எவ்வளவு நன்றி பாராட்டினாலும் தகும்.

அதிபர் சுவாமிகளின் அருளாணைகளைச் செவ்வனே செயற்படுத்தும், காசித்திருமடத்தின் அன்பர்கள் அனைவர்க்கும் நாங்கள் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். குறிப்பாக, மேலாளர் சீனு. மாணிக்கம், திரு A. சீனிவாசன், திரு முத்தையாபிள்ளை, ஆகியோர்க்குத் தனிப்பட்ட நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மாநாட்டினைக் காசித்திருமடத்துடன் இணைந்து நடத்தும் தஞ்சாவூரிலிருக்கும் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளைக்கும், இவ்விரு தொகுதிகளையும் அழகுற அச்சிட்டுக் குறித்த நேரத்தில் வடிவமைத்தும் வழங்கியும் துணைபுரிந்த சிதம்பரம் சபாநாயகம் அச்சகத்தார்க்கும், இந்திமொழி ஆக்கத்தில் துணைபுரிந்த தஞ்சாவூர் நாராயணன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது. குறிப்பாக, அச்சக உரிமையாளர் திரு இரா. கௌதமசங்கர் அவர்களின் தனிப்பட்ட ஊக்கமும் உழைப்பும் தனிப்பட்ட நன்றிக்குரியன. அவர்களுடன் துணைபுரிந்த அவர்தம் துணைவியார், மேலாளர் திரு மு. பாஸ்கரன் மற்றும் அச்சகப் பணியாளர்களுக்கும் மாநாட்டினர் சார்பில் நன்றி பாராட்டி மகிழ்கின்றோம்.

இவ்ஆய்வுமாலைக்குரிய ஆய்வு மலர்களை வழங்கிய ஆய்வாளர் அனைவரும் பாராட்டுதலுக்கும் வாழ்த்துக்கும் உரியவராவர். தம்க்குக் கிருக்கின்ற கல்விப் பணிகளுக்கிடையில் திருநாவுக்கரசர் தேவாரத்தைப் பயின்று ஆய்வுக்கட்டுரைகளைப் பொருட்செலவுடன் அனுப்பிவைத்த அவர்களின் ஊக்கமும் ஆக்கமும்தாம் ஆய்வுமாலைக்கு வெற்றியைத் தந்தன. அவர்களின் பேருழைப்பு, தொடக்கநிலை அறிமுகங்கள் இளைய சமுதாயத்தினர்க்கும் நாளைய தலைமுறையினர்க்கும் திருநாவுக்கரசரை அறிவதில், ஆய்வதில், தோய்வதில் நல்ல நுழைவுச் சீட்டுகளாகப் பயன்படும் எனும் நம்பிக்கை எங்களுக்கு உண்டு. எனவே, அவர்கள் அனைவர்க்கும் பாராட்டுதலோடுகூடிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

எல்லாவற்றுக்கும் மேலாகத் தோன்றாத் துணையாக இருந்து திருவருள் பாலித்து இப்பெருமாநாடும் ஆய்வுத் தொகுதிகளும் நிறைவுறத் துணைபுரிந்த திருவருளை நினைந்து நினைந்து வணங்கி வாழ்த்தி நிறைவடைகிறோம்.

நின்னாவார் பிறரின்றி நீயே ஆனாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்தும் ஆனாய்
மன்னானாய் மன்னவர்க்குஓர் அமுதம் ஆனாய்
மறைநான்கும் ஆனாய் ஆறங்கம் ஆனாய்
பொன்னானாய் மணியானாய் போகம் ஆனாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே உன்னை
என்னானாய் என்னானாய் என்னின் அல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்து கேனே.

*பதிப்பாசிரியர்*

# திருநாவுக்கரசர்

அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
மலரும்மருள் நீக்கியார் வந்துஅவதா ரஞ்செய்தார்

(சேக்கிழார்)

'உள்ளத்திலே தோன்றும் மயக்கத்தைப் போக்கித் தெளிவு உண்டாக்கு வதற்காக இருள்நீக்கி ஒளி வழங்கும் சூரியனைப்போல அனைத்துக் கலைகளும் தழைத்தோங்குவதற்காகவும் தவநெறியும் அருள்நெறியும் வளர்ந்து வாழ்வதற்காகவும் அவதரித்தவர் திருநாவுக்கரசர்' என்று அவர்தம் இனிய வரலாற்றுக்கு முன்னுரை வழங்குகிறார் சேக்கிழார். அத்துடன் நில்லாமல் ஞானத் தவமுனிவராம் அவ்வாகீசப் பெருமானின் தொண்டு நெறியை என்னால் விளக்கமாகக் கூற முடியுமோ என்று வியந்து நிற்கிறார் அவர். திருக்கோயில் வழிபாட்டில், பக்தி நெறியின்-வழிபாட்டில் தொண்டு நெறியைக் கைக்கொண்டு வாழ்ந்த அவர் வாழ்வும் வாக்கும் அளவிடற்கரிய பெருமை கொண்டன. இங்கே அவ்விரண்டையும் சுருக்கமாக, அறிமுக நிலையில் காணலாம்.

தண் தமிழ் நாட்டில் திருமுனைப்பாடி என்னும் நடுநாட்டில் திருவாமூர் என்னும் ஊரில் குறுக்கையர் குடி என்னும் வேளாளர் மரபில் புகழனார் மாதினியார் தம்பதியினர்க்குத் தவமகனாகத் தோன்றியவர் திருநாவுக்கரசர். இவரது பிள்ளைப் பெயர் மருள்நீக்கியார் என்பதாம். திருநாவுக்கரசு எனும் பெயர் பின்னர் இறைவனால் வழங்கப் பெற்றதாகும். இவர்தம் சமகாலத்தவரான திருஞானசம்பந்தர் 'அப்பர்' என அழைத்தமையால் அப்பர் என்ற பெயராலும் இவர் வழங்கப்பெற்றார். வாகீசர், தாண்டகவேந்தர், தாண்டகச் சதுரர் எனும் சிறப்புப் பெயர்களாலும் இவர் குறிக்கப் பெறுவார்.

இவர் திருஞானசம்பந்தரின் சமகாலத்தவராதலாலும் பல்லவமன்னன் மகேந்திரவர்மன் காலத்து வாழ்ந்தவராதலாலும் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை வாழ்ந்தவராக வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன. சிலர் கி.பி. 574-ல் இவர் தோன்றியவராதல் வேண்டும் எனத் தெளிவாகக் கூறுவர்.

இவர், இளம் பருவத்திலேயே பெற்றோரை இழந்த நிலையில், தமக்கையர் திலகவதியாரின் அரவணைப்பில் வளர்ந்த போது பரசமயமாம்

சமண சமயத்துப் புகுந்து ஆங்குள்ள நூல்களைக் கற்றுத் தேர்ந்து - சமயத் தலைவராகவே உயர்ந்து 'தருமசேனர்' எனும் பட்டத்துடன் விளங்கினார்.

சமண சமயத்தினின்றும் நீங்கித் தாய்ச் சமயமாம் சைவ சமயத்திற்கே இவர் திரும்ப வேண்டும் எனத் திலகவதியார் இறைவனிடம் வேண்டிக் கொள்ள, அவர்தம் வேட்கையை நிறைவேற்றுதற்காக இறைவன், இவருக்குச் சூலைநோய் என்னும் கொடிய வயிற்று வலியை உண்டாக்கினான். தாம் கற்ற நூல்களாலும் சமண சமயத்தாலும் நீக்க முடியாத அந்நோயோடு திலகவதியாரிடம் சரண் புகுந்தார். திலகவதியார் திருநீறளித்து அவரை ஏற்றுக்கொண்டு சிவனை வழிபட்டால் அச்சூலைநோய் தீரும் என்று அறிவுறுத்த அவ்வாறே, இவர் திருவதிகை திருக்கோயிலுக்குச் சென்று, 'கூற்றாயினவாறு' எனும் தமிழ்ப் பதிகம் பாடி இறைவனிடம் தம் நோய் போக்குமாறு வேண்ட, இறைவனும் இவர்தம் நோயைப் போக்கி யருளியதுடன், இவர் பாடிய தமிழ்ப் பாடலுக்கு மகிழ்ந்து 'திருநாவுக்கரசு' எனும் பட்டமளித்து அருளினான். அன்று முதலாக சிவபெருமானின் திருவருளை வியந்து தொண்டு நெறியுடன், திருத்தலங்கள்தோறும் சென்று இறைவனைப் பாமாலைகளால் துதித்துச் சைவ சமயத்தையும் தமிழையும் ஒருசேர வளர்ப்பவரானார்.

**அற்புதங்கள்**

தம் மதத்திலிருந்து மாறியதுடன் சைவ சமயத்தைத் தீவிரமாக வளர்க்கத் தொடங்கிவிட்டாரே இம்மருள்நீக்கியார் என வெகுண்டனர் சமணர்கள். அரசனின் பேருதவியுடன் இவரைச் சுண்ணாம்புக் காளவாயில் இட்டும், நஞ்சூட்டியும், யானையை ஏவியும், கல்லோடு கடலில் பாய்ச்சியும் பல்வேறு வகையிலும் இன்னல் விளைவித்தனர். இறையருளால் ஐந்தெழுத்தோதிய பக்திச் சிறப்பால் அவ்வின்னல்கள் பலவற்றினின்றும் தப்பிய பெருஞ்சிறப்புக்குரியவராக அருளாளராக இவர் அடையாளம் காணப்பட்டார்.

தலங்கள்தோறும் யாத்திரை செய்து ஆங்காங்குள்ள திருக்கோயில்களில் உழவாரப் படைகொண்டு திருப்பணி செய்து இறைவனைப் பதிகங் களால் பாமாலை சூட்டி வழிபட்டார். பெண்ணாகடம் என்னும் ஊரிலுள்ள திருத்தூங்கானை மாடத்தில் இடபக் குறியும் சூலக்குறியும் இறைவனிடம் வேண்டிப் பொறிக்கப் பெற்றார். திருநல்லூர் என்னும் ஊரில் திருவடி சூட்டப் பெற்றார்.

திங்களூரில் அப்பரையே வழிபடு தெய்வமாகக் கொண்ட வேதியர் அப்பூதி அடிகளாரின் அரவு தீண்டி இறந்த மகனை உயிர்ப்பித்தார்.

பழையாறை வடதளியில் சமணரால் மறைக்கப்பட்ட திருக்கோயிலில் வழிபாடு நிகழ்த்தினார். திருப்பைஞ்ஞீலியில் இறைவனால் கட்டமுது தரப்பெற்றார்.

திருஞானசம்பந்தரும் இவரும் பல தலங்களுக்குச் சேர்ந்து சென்று வழிபட்டனர். திருவீழிமிழலையில் தங்கியிருந்து அப்போது நிலவிய பஞ்சத்தைப் போக்க இறைவனிடம் படிக்காசு பெற்று பலருக்கும் உணவளித்து மகிழ்ந்தனர். திருமறைக்காட்டில் வேதங்களால் அடைப்புண்டிருந்த திருக்கதவங்களைத் திறந்து மூடுமாறு செய்தனர். பாண்டிநாடு முதலாகத் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளுக்குச் சென்று திருக்கோயில் வழிபாட்டை வளர்த்தனர்.

நாவுக்கரசர் தம் இறுதி நாட்களில் கயிலை மால்வரையைத் தரிசித்து மகிழவேண்டி இமாலய யாத்திரை மேற்கொண்டார். கால்களால் நடக்க முடியாது சோர்ந்து கைகளால் தவழ்ந்தும் மார்பால் உருண்டும் அப்பனி மலையில் ஏறினார். வழியில் இறைவனால் தடுத்தாளப் பெற்றார். இறைவன் ஆணைப்படி ஆங்குள்ள தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றுக் குளத்தில் எழுந்து திருக்கயிலைக் காட்சியைத் திருவையாற்றிலேயே தரிசித்து மகிழ்ந்தார். பின்னரும் தலயாத்திரை மேற்கொண்டு தம் 81-ம் வயதில் திருப்புகலூரில் சித்திரைச் சதயத்தில் முத்தி பெற்றார்.

தம் வாழ்நாள் முழுதும் தலயாத்திரை மேற்கொண்டு திருமடங்கள் அமைத்தும், உழவாரப்பணி செய்தும், பக்திப் பாமாலைகள் புனைந்தும் சைவப் பயிர் தழைக்கப் பாடுபட்டார்.

## உழவாரம் தொண்டு நெறியின் அடையாளம்

திருக்கோயில் வழிபாட்டில் தொண்டு நெறியைக் கைக் கொண்டவர் திருநாவுக்கரசர். உழவாரம் என்னும் இப்படையை, கருவியைக் கொண்டு அவர், திருக்கோயில்களிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் திருவீதிகளிலும் உள்ள நிலங்களைத் தூய்மை செய்தார். இதனைக் கொண்டு புல் பூண்டுகளைச் செதுக்கி, முள், பருக்கைக்கற்களைப் புறந்தள்ளி அடியார் களும் பொதுமக்களும் திருக்கோயில்களுக்கு இடையூறின்றி வந்து செல்வதற்கு வழிகளைச் செப்பம் செய்தார். இவ் உழவாரத் திருத்தொண்டே இன்று கரசேவா என அழைக்கப் பெறுகிறது. நிரம்பக் கற்றிருந்தும் குமரி முதல் இமயம் வரை தம் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து யாத்திரை சென்ற போதெல்லாம் ஆங்காங்குள்ள திருக்கோயில்களில் நிலத்தூய்மை செய்யும் இத்திருத்தொண்டை அவர் இடையறாது மேற்கொண்டார்.

திருநாவுக்கரசர் வரலாற்றைப் பேசும் சேக்கிழார், இவ்உழவாரத் தொண்டைப் பல இடங்களில் பரக்கப் பேசுகின்றார்.

'பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள்'

என்றும்,

'உழவாரத் தனிப்படையும் தாமும்ஆகிப், பார்வாழத்
திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்'.

என்றும், உலக மக்களுக்காகவே அவர் இத்திருத்தொண்டைச் செய்தார் எனக் கூறுகின்றார். வாழ்நாள் இலக்காகிய கயிலைக் காட்சியைக் கண்டு நிறைவெய்திய பின்பும் இத்தொண்டு நெறியை அவர் கைவிடவில்லை.

'பாவுதிரு நேரிசைகள் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார்'

எனவும்,

'நையுமனப் பரிவினொடும் நாடோறும் திருமுன்றில்
கைகலந்த திருத்தொண்டு செய்து பெருங்காதலுடன்
வைகும்நாள்'

எனவும் வரலாறு உரைப்பார் சேக்கிழார்.

அதாவது 81-ம் வயதிலும் பூம்புகலூர் வீதிகளில் அவர் உழவாரப்பணி செய்தார் என்கிறார்.

தென் தமிழ்நாட்டில் சிலகோயில்களில் உற்சவமூர்த்திகள் உலா வரும்போது அத்திர தேவருக்கும் முன்பாக ஒரு செப்புத்திருமேனி எடுத்துச் செல்லப்பெறும். அச்சாமிக்கு என்ன பெயர் தெரியுமா? 'முள்ளு பொறுக்கிச்சாமி' என்பதே. அந்தத் திருமேனியை உற்றுப்பார்த்தால் அதன் கையில் உழவாரப்படை இருப்பது தெரிய வரும். அதாவது அப்பர் பெருமானைத்தான் அப்படிச் சொல்கின்றனர். இறைவன் திருவீதி உலா வரும்போது அப்பர் பெருமான் உழவாரப்பணி செய்ததைத்தான் இப்படி வழக்கமாக்கி இருக்கிறார்கள் நம்முன்னோர்கள்.

மெய்யுற்ற திருப்பணி செய்ய விருப்பம் கொண்ட அவர்தம் வடிவு சிவவேடமாகப் பொலிவு தரும். அவர்தம் நெஞ்சு அரனை மறவாத அறவுணர்வுடன் திகழும். செவ்வாயில் தேவாரப்பாக்கள் தேனாக வெளி வரும். கைகளிலோ உழவாரப்படை பொலிவுற்றிருக்கும். அவர்தம் செப்புத்திருமேனிகளிலும், கற்சிலைகளிலும், ஓவியங்களிலும் இக்கருவி

யுடன் தான் அவரைக் காணமுடியும். சிவபெருமானுக்குச் சடையும், நிலவும் கங்கையும் போல, திருமாலுக்குச் சக்கரமும், சங்கும்போல, முருகனுக்கு வேலும் மயிலும் போல திருநாவுக்கரசருக்கு உழவாரப்படையே அடையாளம். பெருந்தெய்வங்கள் முதலாக வீரனார் போன்ற சிறு தெய்வங்கள் வரை தம்கைகளில் வாள், வேல் போன்ற கொலைக் கருவிகளே கொண்டிலங்கும். ஆயின் எந்நேரமும் திருத்தொண்டே என வாழ்ந்த நம் அப்பர் பெருமானிடம் சுற்றுச் சூழலைத் தூய்மையாக்கும் உழவாரப்படையே காட்சி தரும்.

## தேவாரம்

திருநாவுக்கரசரின் பாசுரங்கள் அனைத்தும் பதிக அமைப்பில் அமையப் பெற்றன. தேவாரம் எனும் பெயரை முழுவதுமாகப் பெற்றன. இவர், பல தலங்களிலும் பாடியதில் பதிகங்கள் ஏராளம். என்றாலும் இன்று நமக்குக் கிடைப்பவை 312 திருப்பதிகங்களேயாம். இவர் பாடிய, திருத்தொண்டு செய்த தலங்களுள் தில்லை, ஒற்றியூர், கச்சி, திருவண்ணாமலை, திருவதிகை, திருவாரூர், திருக்காளத்தி, திருக்கயிலை, திருவையாறு, திருச்சோற்றுத்துறை, திருப்பூந்துருத்தி, திருவீழிமிழலை, குற்றாலம், திருக்கோகரணம், திருச்சாய்க்காடு, திருத்தூங்கானை மாடம், திருமறைக்காடு, திங்களூர், திருப்பழனம், திருவாய்மூர், திருநல்லூர், குடந்தை, திருப்புகலூர் போன்றன குறிப்பிடத்தக்க சிறப்புடையன எனலாம்.

இவர் பாடியன பன்னிரு திருமுறைகளுள் 4, 5, 6 என மூன்று திருமுறைகளாக வகுக்கப் பெற்றன. நான்காம் திருமுறையில் கொல்லி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம், சாதாரி, காந்தார பஞ்சமம், பழந்தக்க ராகம், பழம்பஞ்சுரம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி போன்ற பண்களிலும் திருநேரிசை, திருவிருத்தம் என்னும் யாப்புகளிலும் பாசுரங்கள் அமைந் துள்ளன. ஐந்தாம் திருமுறை முழுதும் திருக்குறுந்தொகை எனும் யாப்பிலும் பண்ணிலுமாக அமைந்துள்ளன. ஆறாம் திருமுறை முழுதும் திருத்தாண்டகங்களாக அமைந்துள்ளன. **தாண்டக யாப்பு இவர் கையாண்ட புதுமையான யாப்பு வகையாகும்.** சிலர் இதனை வடமொழியினின்று வந்ததாகக் கூறினும் ஆய்வாளர்கள் வடமொழி 'தண்டகம்' வேறு நாவுக்கரசர் தாண்டகம் வேறு என நிறுவியுள்ளனர். அதனாலே இவரைத் தாண்டக வேந்தர், தாண்டகச் சதுரர் எனத் தனிப்பட அழைத்து மகிழ்வர்.

## பக்தி வினையைப் போக்கும்

திருநாவுக்கரசர் தாம் சார்ந்த பக்தியியக்கப் பண்பையும் பயனையும் விளக்குவதில் தலைநிற்பவராகத் திகழ்கின்றார் என்றால் அது மிகை

யாகாது. அக்காலத்தில் பரவிய பிற சமயங்கள் எல்லாம் மனிதப் பிறவி துன்பந்தோய்ந்தது, நாம் முன்பு செய்த வினைகளை அனுபவித்துத் துன்புறத்தான் வேண்டும். இவ்வுலகம் இவ்வுலகத்துப் பொருள்கள், இன்பங்கள் எல்லாம் நிலையாதன. மனிதப் பிறவி துன்பங்களுக்கும் இவ்வுடல் நோய்களுக்கும் இடமானது. ஆகவே இப்பிறவியில் துறவு மேற்கொண்டு நோற்றால் ஆண்கள் வேண்டுமானால் முத்தி பெறமுடியும். பெண்களால் முத்திப் பேறு எய்த முடியாது என்றெல்லாம் பேசி மனிதப் பிறவியை ஒரு குற்றவுணர்வுள்ளதாகவே காட்டி மருட்டின. வாழ்க்கையில் ஒரு வெறுப்புணர்வை ஊட்டின.

ஆயின், அப்போது தோன்றிய பக்தி இயக்கம் இவற்றையெல்லாம் மறுத்து எல்லா உயிரினமும் இறைவன் முன் சமமே - பிறப்பும் தொழிலும் தற்காலிக வேற்றுமையே. இவ்வுடம்பில் இறைவன் குடிகொள்வான். அவனிடத்துப் பக்தி செலுத்தினால் முந்தைய வினைகளை வெல்ல முடியும், போக்க முடியும், அழிக்க முடியும் இனி வளரும் வினையையும் தடுக்க முடியும். முத்திப்பேறு பெறுவதற்கு இவ்வுலக வாழ்க்கை தடையாக முடியாது, என்றெல்லாம் நம்பிக்கையூட்டி வாழ்வில் ஒரு பிடிப்பை உண்டாக்கின. மனித நேயத்தை வளர்க்கும் பொது வழிபாடு, திருக்கோயில் வழிபாடுகள் நம்மை மகிழ்விக்கும். வாழ்க்கையின் முழுப் பயனையும் அளிப்பனவாய், அவை வழிவகுக்கும் எனத் தெளிவுபடுத்தியது. இவ்வியக்கத்தின் இலக்கியமாக வாழ்ந்து காட்டியவர் நம் நாவுக்கரசர். அவர்தம் வரலாறே இதற்குச் சான்று. என்றாலும் அவர்தம் தேவாரப் பாடல்கள் மிகச் சிறந்த அகச் சான்றுகளாக நின்று நிலவுவதை நாம் தெளிவாக உணரலாம். இறைவனின் அர்ச்சா வடிவத்தைக் காதலித்து பத்தி செய்து திளைப்பதையே இப்பிறவியின் பயனாகக் கருதியதோடு நில்லாமல் இப்பக்திக்காகவே மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கவும் விழைந்தனர். அப்பர் பெருமானின் தில்லைப் பாசுரம்,

> **இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்**
> **மனித்த பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.**

என்று இதனைத் தெளிவுபடுத்துகிறது. இன்னும் ஒரு படி மேலே சென்று, வேறு பிறவி வாய்த்தாலும் இறைவனை மறவாதிருக்க இப்பிறவியிலேயே வரம் வேண்டுதலை,

> **புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி - என்மனத்தே**
> **வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்.**

என்னும் தேவாரத்தில் காணலாம். எனவே, இவ்வுயரிய பிறவி போற்றத் தக்கது. இப்பிறவியில் நாம் முந்தைய வினைகளை, பாவங்களைப் பக்தியின் மூலம் போக்கலாம் என நம்பிக்கை ஊட்டுகின்றார்.

காதல் செய்து கருதப்படும் அவர்
பாதம் ஏத்தப் பறையும் நம் பாவமே (5:97:2)

பத்தியால் ஏத்தி நின்று பணிபவர்
நெஞ்சத்துள்ளார் (4:25:5)

நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன் (5:5:2)

அட்டமூர்த்தி அண்ணாமலை கைதொழ
கெட்டுப்போம் வினை கேடில்லை தானே.

அல்லல் தீர்க்கும் அண்ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை அடையுமே.

உள்ளம் உள்கி உகந்து சிவனென்று
மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே (5:79:9)

நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டம் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே (5:82:9)

என வரும் தேவார வரிகள் அப்பர் தம் வினைக் கொள்கைகளை, பக்திப் பயன்களை எடுத்துக் கூறுவன எனலாம்.

திருநாவுக்கரசரின் பக்தியியக்க விளக்கம் பின்வரும் ஒரு பாடலிலேயே முழுமையாகத் தெளிவாதல் காணலாம்.

பற்றிநின்ற பாவங்கள் பாற்றவேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சாவண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழில் ஆரூரா என்றே போற்றா நில்லே. (6:31:7)

இறைவனைச் சரணடைந்து ஒன்றினால் பாவம் தொலையும், சூழ்வினைகள் வீழும், பரகதி கிடைக்கும். இம்மையக் கருத்தையே திருநாவுக்கரசர் தேவாரம் முழுதும் நாம் காணலாம். இனி இவருடைய சிறந்த படைப்பான ஆறாம் திருமுறையில் காணப்பெறும் செய்திகளைக் கொண்டு இவர்தம் பக்திக் கொள்கைகளைச் சமூகக் கொள்கைகளைக் காணலாம்..

## ஆறாம் திருமுறை

அப்பர் பெருமான் அருளிச் செய்த ஆறாந்திருமுறையில் அமைந்த பாசுரங்கள் திருத்தாண்டகங்கள் எனப்பெறும் தனி வகையின. அவை

ஆழ்ந்த பட்டறிவையும் நிறைந்த பக்தி உணர்வையும் வெளிப்படுத்து வதில் தலை நிற்பன. இத்திருத்தாண்டகங்கள் அனைத்தும் இறைவன் அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் இருப்பான் எனும் சர்வவியாபகத் தன்மையை வியந்து பாராட்டுவனவாகக் காணப்படுகின்றன என்றால் அது மிகையாகாது. ''காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி'', ''எண்ணும் எழுத்தும் சொல்லானாய் போற்றி'', ''பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி'', ''ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்'', ''மூவாய் பிறவாய் இறவாய் போற்றி, முன்பாகி நின்ற முதலே போற்றி'', ''நிறையுடைய நெஞ்சின் இடையாய் போற்றி'' என்றெல்லாம் பல விதங்களில் இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற தன்மையைப் படம்பிடிப்பதுடன் அவன் நம் நெஞ்சிலும் நிறைந்திருப்பான் எனும் உண்மையையும் இவை தெள்ளிதின் காட்டுகின்றன.

இவ்வாறே பக்தியியக்கத்தின் பயனாகிய ஒருமைப்பாட்டையும் ஆண்டவன் முன் அனைத்துயிர்களும் சமம் எனும் சமத்துவத்தையும் ஊட்டும் நிலையில் இத்திருத்தாண்டகங்கள் காணப்படுகின்றன. ''சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம்'' எனும் ஒருமைப்பாட்டையும், ''கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய் ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்... அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'' எனும் மனிதநேய சமதர்மத்தையும், பக்தியியக்கப் பண்புகளாகவே நாம் காணமுடிகிறது.

திருக்கோயில் வழிபாட்டின் இன்றியமையாமை, உருவ வழிபாட்டின் உன்னதம், சரியை நெறியாம் தொண்டு நெறி எனப் பக்தியியக்க அடிப்படைப் பண்புகளை விளக்குவனவாகவும் இவ்ஆறாம் திருமுறைப் பாசுரங்கள் காணப்படுகின்றன. ''திருக்கோயில் இல்லாத திருவில்ஊரும், பருக்கோடி பத்திமையாற் பாடா ஊரும் பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்... அவையெல்லாம் ஊரல்ல அவையெல்லாம் அடவி காடே'' என வரும் தெளிவு இதனை வலிசெய்தல் காணலாம். இவ்வாறு பக்தியியக்கப் பண்பை, பயனைப் பட்டறிவோடும் எளிமையோடும் விளக்கியருளிய திருமுறையாக இது காணப்படுகிறது. உலக உயிர்கள் உய்யும் பொருட்டு அவதரித்தனவே ஆறாந் திருமுறையின் தாண்டகங்கள் என்றால் அது மிகையாகாது.

ஆறாம் திருமுறை இறைவனைப் போலவே அகலமும், நீளமும், ஆழமும் உயரமும் கொண்டு பரந்து நிற்பது. இதனை முழுமையாக ஈண்டு ஆய்வு செய்ய இயலாது. ஆதலின் இத்திருமுறையின் அடிப்படையை

விளக்கும் ஆறு பதிகங்களை மட்டும் எடுத்துக்கொள்ளலாம். பதிகங் களுக்குள் செல்லுமுன் பக்தியியக்கம் குறித்துச் சில அடிப்படைகளை மனத்துள் கொள்வது பொருத்தமாகும்.

### பக்தி இயக்கம்

கங்கையும் காவிரியும் கலந்து இனிதூட்டும் இப்பாரதநாடு கண்ட பேரியக்கம் பக்தி இயக்கம். குறிப்பாக தென்னிந்தியாவில் மலர்ந்த இப்பக்தி இயக்கம் மக்கட்கு வாழ்க்கையில் ஓர் பிடிப்பை ஏற்படுத்தியது.

''நீ புனிதமானவன், உன் உள்ளத்தில் எல்லாம் வல்ல இறைவன் குடிகொண்டுள்ளான், குடி கொள்வான். ''தேடிக் கண்டுகொண்டேன் திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்'' (அங்கமாலை - அப்பர்) நீ இருக்கும் ஊர் புனிதமானது, இடம் புனிதமானது, உன்னைச் சுற்றியுள்ள தெரு, கோயில், நீர்நிலை அனைத்தும் புனிதமானவை. புனிதத்துக்காக, தெய்வத்துக்காக நீ எங்கெங்கோ தேடி அலைந்து திரிய வேண்டா. கயிலையில் வீற்றிருக்கும் அப்பரம்பொருள் உன்னிடமும், உன் ஊரிலும் உன் கோயிலிலும் விரும்பி அமர்ந்திருக்கிறது. அப்பரம்பொருளை உன் இயல்புக்கும், தொழிலுக்கும், பயிற்சிக்கும் தக அன்பு பாராட்டினால் போதும். தொழுதால் போதும், உன் எளிய அன்புக்கு இரங்கி அப்பரம் பொருளே ''தாயினும் சாலப் பரிந்து வந்து'' உன்னிடம் தங்கும்; என்றெல்லாம் அறிவுறுத்தி ஒருமை, சுயமரியாதை, தன்னம்பிக்கை ஆகியவற்றை உண்டாக்கி இம்மனிதப் பிறவியைப் பயனுள்ள பிறவியாக்கித் தெய்வமாக உயர்த்துகின்றன திருமுறைகள். மனிதனுக்கு மனிதன் அடிமைப்பட்டு, அறிவாலும் பணத்தாலும், சக்தியாலும் பிறர்க்கு அடிமைப்பட்டு, நிற்கும் மானிடர்க்கு இந்த ''தன்னை அறிந்து இன்பமுறும் ஒப்பற்ற சுயமரியாதை இயக்கமே பக்தி இயக்கம்'' என்ற பாங்கில் அன்று செறிவூட்டப்பட்டது. இதுவே திருமுறைகளின் பண்பும் பயனுமாகிய சிறப்பு என்றால் அது மிகையாகாது.

### திருமுறை வழிபாடு

எடுத்துள்ள இம்மானிடப் பிறப்பைப் பயன்படுத்தி இறையருளை வியந்து பாராட்டிப் பக்தி செய்து, பிறவியை வேரறுத்துச் சுகமான சிவ பதவியை அடைந்து மாறிலா இன்பத்துத் திளைப்பதே திருமுறைகளின் நோக்கு ஆகும். ஆன்ம விடுதலையொன்றே இதன் முடிந்த நிலை.

பக்தி செய்வது என்பது, மனித நேயத்துடன் உடலாலும், வாக்காலும், மனதாலும் இறைத்தொண்டு மேற்கொள்வதும், இறைவனைப் பாடிப்

பரவித் துதித்து நிற்பதுமே ஆகும். இப்பக்திக்குக் குலம், கோத்திரம், வடிவம், வழிமுறை போன்ற உயர் பிறப்புத் தன்மைகள் தேவையில்லை. அன்பும் பண்புமே போதும். எப்பிறப்பும், எத்தொழிலும், எந்நாடும், எவ்வினமும், பக்திக்குரியனவே. ஆண்டவனைப் பரவித் துதிக்கும் படிநிலையாம் உருவ வழிபாட்டைத் திருமுறைகள் வியந்து பேசுகின்றன. ஆயின், ஆரவாரமான பூசை, திருவிழாக்களை அவை வற்புறுத்த வில்லை. இறைத் திருமேனிக்கு எளிய முறையில் நீராட்டலும், பூச் சொரிதலுமே போதும். நிவேதனப் பொருள்கள்கூடத் தேவையில்லை. வழிபாடு முடிந்துவிடும். திருமுறைகளில் குறிப்பாக, தேவாரத்தில் ''நைவேத்யம்'' சுட்டப்படாதது ஈண்டு குறிக்கத் தக்கது.

> ''சலம் பூவொடு தூப மறந்தறியேன்
> தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்'' (திருவதிகை)

> ''மலர்தூவி நினைந்தெழுவார் உள்ளம் நீங்காது இருந்தவன்
> காண்'' (6:4:2)

> ''வாதனையால் முப்பொழுதும் பூநீர்கொண்டு வைகல் மறவாது
> வாழ்த்திஏத்திக்
> காதன்மையால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்
> நடுதறியைக் காணலாமே''

என வருகின்ற இடங்களில் எல்லாம் பூவும் நீருங் கொண்டு செய்கின்ற பூசையை நாம் உணரலாம். தேவர்களும் இத்தகு எளிய பூசையை மேற்கொண்டதாகத் திருச்சோற்றுத்துறைத் பதிகத்தில் அப்பர் பெருமான் காட்டுகின்றார்.

> ''காலை எழுந்து கடிமலர் தூயன தாம்கொணர்ந்து
> மேலை அமரர் விரும்பும் இடம் விரையான் மலிந்த
> சோலை மணங்கமழ் சோற்றுத்துறை உறைவார்'' (4:85:1)

இப்புறப் பூசனை வழிபாடுகளை அகவழிபாட்டில் மேற்கொள்ளும் அடுத்த படிநிலையையும் இத்திருமுறை ஆசிரியர்கள் நன்கு உணர்த்தி யுள்ளனர். பூசலார் நாயனாரின் வரலாறு அகவழிபாடே.

> ''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
> நேயமே நெய்யும்பாலா நிறையநீர் அமையஆட்டிப்
> பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே'' (4:76:4)

என்னும் நாவுக்கரசரின் பாசுரம் திருமுறை காட்டும் வழிபாட்டு நெறிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இந்த அடிப்படைச் செய்திகளை மனத்துட் கொண்டு இனி ஆறாம் திருமுறைக்குச் செல்வோம்.

## திருக்கோயில் வழிபாடு

தனிமனிதக் கடமையிலும் சமூகத்தின் ஒட்டுமொத்தக் கடமையிலும் திருத்தல வழிபாடும், திருக்கோயில் வழிபாடும், அடியார் வழிபாடும் இன்றியமையாத இடத்தைப் பெறும் வண்ணம் பக்தி இயக்கப்பண்புகள் காணப்படுகின்றன. இந்த அடிப்படையை வலியுறுத்தும் பாடல்கள் ஆறாம் திருமுறையில் பலவாகக் காணப்படுகின்றன. திருநாவுக்கரசரின் தலயாத்திரை வரலாறுகளும் கோயிற் தொண்டுகளும் பிறவும் இவ்அடிப்படைக்கு அகச்சான்றுகளாகவும் புறச்சான்றுகளாகவும் விளங்குகின்றன. பிற்காலத்துத் தோன்றிய, 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா' எனும் முதுமொழிக்கு முன்மொழியாகத் திருநாவுக்கரசரின் இத்தாண்டகம் அமைந்திருப்பதைக் காண வியப்பாக இருக்கிறது. நகரமைப்பு, ஊரமைப்பு, கிராம அமைப்புகளில் ஆகமங்கள் காட்டும் அக்கறை, பொறுப்புணர்வை இத்திருத்தாண்டகம் புலப்படுத்துகிறது என்றால் அது மிகையாகாது. வழிபாட்டுடன் மாசுக் கட்டுப்பாட்டுணர்வையும் இவ்வடிப்படை, சுட்டுதல் உணரலாம். தனிமனிதன் தன்னைத் தூய்மையாக்குகிறான். தன் வீட்டைத் தூய்மைப்படுத்துகிறான். ஆனால் பொது நிலத்தை, இடத்தை, சூழலை யார் தூய்மைப்படுத்துவது? இதை ஆழமாக உணர்ந்த சிவத் தொண்டர்கள் ஆலய வழிபாட்டில் அலகிடுதல், மெழுக்கிடுதல் போன்ற பணிகளையும் இணைத்துச் செய்தனர். இவர்களுக்கெல்லாம் முன்னவராக அப்பர் சுவாமிகள் தாமே உழவாரத் தொண்டில் தலைப்பட்டு மாசுக்கட்டுப்பாட்டில் ஏக சக்ரவர்த்தியாகத் திகழ்ந்தார். திருக்கோயில் வழிபாடு உளத்தூய்மைக்கும் ஊர் தூய்மைக்கும் ஒருசேர வழி வகுத்ததாகக் காட்டும் வண்ணம் அவர்தம் பாடல்கள் அமைந்துள்ளன.

> "திருக்கோயில் இல்லாத் திருவில் ஊரும்
> திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
> பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
> பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
> விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
> விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
> அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணா ஊரும்
> அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே" (6:95:5)

> "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்
> தீவண்ணர் திறம் ஒருகால் பேசாராகில்
> ஒருகாலும் திருக்கோயில் சூழாராகில்
> உண்பதன்முன் மலர்பறித்திட்டு உண்ணாராகில்

அருநோய்கள் கெட வெண்ணீறு அணியாராகில்
அளியற்றார் பிறந்தவாறு ஏதோவென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே'' (6:95:6)

இவ்விரு திருத்தாண்டகங்கள் தனிமனித நிலையிலும் சமூகக் கூட்டமைப்பு நிலையிலும் திருக்கோயில் வழிபாடு பெறவேண்டிய சிறப்பைச் சுட்டுதல் காணலாம். இவை முட்டுப்படில் தனிமனித வாழ்வு, கூட்டு வாழ்வு என இரண்டுமே அல்லலுற்று அலமந்து செத்துப் பிறந்துழலும் அவல நிலைக்குத் தள்ளப்படும் சூழலைக் காட்டவும் தவறவில்லை எனலாம். இனி கோயிற் தொண்டுக்கு எடுத்துக்காட்டாக ஆரூர் பதிகத்தைக் காட்டலாம்.

## குறிக்கோளுடைமையும் நிலை பெறுதலும்

உலகம் நிலையாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இரவு, பகல், காலை, மாலை, பருவகாலங்கள் பொய்க்காது இயங்கிக் கொண்டிருக்கின்றன. நிலையான ஒரு கட்டுப்பாடு தொடர்ந்து இயக்கத்துக்கு மாறாத சுழற்சிக்குக் காரணமாகிறது. இவ்வுலகில் வாழும் மனிதர்கள் தாம் நிலையான ஒரு கட்டுப்பாடின்றி எல்லைபெறாமல் சுழன்று, ஆசைக்கும் அதன்வழி துன்பத்துக்கும் ஆளாகித் துயருறுகின்றனர். கொள்கையும், கோட்பாடும், நினைவும், நோக்கமும் இன்றிச் செயற்படுவதால், வேகமாக இயந்திர கதியில் இயங்கிக் கொண்டிருப்பதால் பதட்டம் பெரியவர்களுக்குத்தான் என்றில்லை, மழலையர் பருவமுதலாகவே காலத்தின் பின்னும் பணத்தின் பின்னும் கேளிக்கைகளின் பின்னுமாக ஓடவேண்டிய சூழல், ஆதலின் தன்னையறிய முடியாத பதட்டம் நிறைந்தவர்களாகவே, மனிதர்கள் காணப்படுகின்றனர். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை முறையே, இப் பதட்டத்திற்குக் காரணம் என்றால் அது மிகையாகாது. ஞானியர், அடியவர் போன்றோர் வாழ்க்கை வரலாற்றை நுண்ணிதின் ஆயும்போது அவர்கள் குறிப்பிட்ட ஒரு வாழ்க்கை முறையுடன், குறிப்பிட்ட குறிக்கோளுடன் வாழ்ந்த நிலையை நாம் உணரலாம். பெரியபுராணம் சுட்டும் நாயன்மார்களின் வாழ்க்கை வரலாறுகள் இதற்குப் பெருஞ்சான்றாக அமைகின்றன. அவர்கள் தம்மை நன்கு அறிந்தவர்கள், தம்மைத் தம் ஆளுமையில் நிறுத்தியவர்கள், ஆதலின் தம் குறிக்கோளில் வெற்றி பெற்றுத் தலைவனை - இறைவனைக் கண்டனர்.

திருத்தொண்டர் அனைவரும் ஒவ்வொரு குறிக்கோளுடன் வாழ்ந்தனர். அவரவர் குறிக்கோளில் வரும் சோதனையை எதிர்கொண்டு அதில்

வெற்றி பெற்றனர். ஓடு வழங்குபவராயினும், துணி வெளுப்பவராயினும், நெசவு நெய்பவராயினும், திருவமுது படைப்பவராயினும், கேட்டதெல்லாம் தருபவராயினும்... யாராயினும் அவர்கள் கொள்கை, குறிக்கோளை நிலையாகச் செய்துகொண்டு அதிலேயே ஆட்சி செய்து நின்றனர். ஆதலின் வெற்றி கண்டனர். அதன்வழி தலைவனை உணர்ந்தனர்.

கைத்திருத்தொண்டுசெய் கடப்பாட்டினர், பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள், பூதம் ஐந்தும், நிலையில் கலங்கினும்... ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார், கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலினர் எனப் பலவாறு அடியார்களின் உறுதியைத் தெளிவுபடுத்தும் சேக்கிழார்,

"ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே பாரம் ஈசன்
பணியலது ஒன்றிலர்
ஈர அன்பினர் யாதும் குறைவிலர் வீரம் என்னால் விளம்பும்
தகையதோ"

என்று அவர்தம் உறுதியை (வீரம் - குறிக்கோளில் கொண்ட உறுதி) என்னால் சொல்ல முடியவில்லையே என வியந்து நிற்கிறார். இத்தகு வீரமே, உறுதியே தம்மை உணர்ந்து தலைவனை உணர வைத்தது எனலாம்.

## குறிக்கோளுடைமை

திருத்தொண்டர் வாழ்க்கை குறிக்கோளுடையது என்பதைப் பெரியபுராணத்தின் ஒவ்வொரு பகுதியிலும் தெளிவாகக் காணலாம். தேவார ஆசிரியர்கள் குறிக்கோளிலாது கெட்ட பண்டைய சூழலைத் தம் பாசுரங்களில் பதிவு செய்துள்ளனர்.

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே...
(4:67:9)

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே". (5:90:7

"உறிமுடித்த.............
மறிதிரைநீர் பவ்வநஞ்சு உண்டான் தன்னை
மறிதொரு கால் வல்வினையேன் நினைக்கமாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் தன்னை
ஏழையேன் நான்பண்டு இகழ்ந்த வாறே." (6:3:8)

என வரும் அப்பர் தேவாரங்கள் குறிக்கோளிலாத வாழ்க்கை வீண் என்பதைக் காட்டுகின்றன. அன்புடைமை, அருளுடைமை போல குறிக்கோளுடைமையும் ஒரு சிறந்த பண்பாகக் காணப்படும். உடைமைப் பொருளுக்குரிய சிறந்த நிலையில் குறிக்கோள் விளங்குதல் இதனால் போதரும்.

## நிலைபெறுமாறு எண்ணுதியேல்

குறிக்கோள் உண்டானால் பதட்டம் குறையும், பதட்டம் குறைந்தால் குறிக்கோள் நிறைவேறும். ஒன்றோடு ஒன்று தொடர்புடையன. அது சரி.... பதட்டத்தைப் போக்க என்ன வழி? இயந்திர கதியாக அலைந்து கொண்டிருக்கின்ற மனதை அடக்கி நிலைப்படுத்த வேண்டுமே அதற்கு என்ன வழி? வஞ்சமும் பொய்யும், சூதும், அவாவும் குடிகொண்டதால் நான் பதட்டத்திற்கு ஆளாகிவிட்டேன். என் மனம் என்னிடம் இல்லை, என் உடல் என்னிடம் இல்லை. என் செயல்களை நான் ஆட்சி செய்ய முடியவில்லை. எதிலும் எங்கும் நிலைகொள்ள முடியவில்லையே! இவையனைத்திற்கும் அடிப்படை என் பதட்டங்களே. இந்தப் பதட்டத்தை ஓட்டி நான் நிலைபெற வேண்டும். என் செயல்கள் நிலைபெற வேண்டும். என் மனம் நிலை பெற வேண்டும். இதற்கெல்லாம் வழியுண்டா? எனப் பண்டுதொட்டு முயற்சிகள் தொடர்கின்றன. பல்வேறு மதத் தலைவர் களும், அருளாளர்களும் பல வழிகளைக் காட்டிச் சென்றுள்ளனர். ஆயின், எல்லோராலும் எல்லாவிடத்தும் கைக்கொள்ள முடிந்த எளிய வழி ஒன்றை அப்பர் பெருமான் காட்டுகின்றார்.

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடி
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர்செஞ்சடை எம்ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே..." (6:31:3)

எனும் தாண்டகத்தின் வழியாகப் பக்தி நெறி எனும் சரியை வழி யிலேயே நாம் நம் மனத்தை நிலைநிறுத்தி விடலாம் என்பதை நிலை நாட்டுகிறார். உடலால் செய்ய முடிந்தவற்றைச் செய்து உடலை முதற்கண் நிலைப்படுத்த வேண்டும். அது தானாகவே வாக்கையும் மனத்தையும் நிலைப்படுத்திவிடுமாம். அவர் காட்டும் வழிமுறைகள் - ''நீ காலையில் எழுந்திரு, அதுவும் விடியலிலே - சூரியன் உதிக்கும் முன் எழுந்து உன் காலைக் கடமைகளை நிறைவேற்றித் தூய நீராடி ஐந்தெழுத்து ஓதித் திருநீறு பூசிக்கொள். ஒவ்வொரு நாளும் இறைவன் திருக்கோயிலுக்குச் செல், அங்கே உழவாரப்பணிகளாம் அலகிடுதல். மெழுக்கிடுதல் போன்ற துப்புரவுப் பணிகளை மேற்கொள். அதன்பின் இறைவனுக்கு அணிவிக்கக் கூடிய மலர்களை விதிப்படி பறித்து மாலை தொடுத்து அவனுக்குச் சாத்து. இவ்அடிப்படை பணிகளுக்குப் பிறகு தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆட வேண்டும். இச்சூழலில் இயல்பாகவே அவனைப் புகழ்ந்து பாடும் நிலை உருவாகிவிடும். அப்போது நெஞ்சம் நிறைந்து இறைவன் புகழைப் பாடு'' இப்படித் தொடர்ந்தால் உன் பதட்டம் குறைந்துவிடும், ஓடிவிடும் மனம் நிலை பெற்றுவிடும்.

இயந்திரக் கதியில், இயங்கும் உன் நிலையைப் பணமும் பதவியும் அலைக்கழிக்கும், பணத்தாலும், பதவியாலும் உன் பூசைகளும் பிறவும் ஆரவாரமாகிப் போகுமே தவிர பதட்டத்தைக் குறைத்து அமைதி உண்டாக்கா. எனவே உன் மனம் அமைதி கொள்ள வேண்டுமானால், நிலைபெற வேண்டுமானால் நீயே உன் உடலைக்கொண்டே பூசை செய். இப்பூசை முறைகள் தாம் உனக்குப் பயன்தரும் என்பதை அழகான எளிதான பக்தி முறையில் காட்டி விளக்குகின்றார் நம் அப்பர் பெருமான்.

## உறுதியுடைமை

பக்தியியக்கம், திருக்கோயில் வழிபாடு, சரியை நெறி, குறிக்கோளுடைமை, ஒருமையுடைமை போன்றவற்றைப் பண்புகளாகக் காட்டுவது போலவே உறுதியுடைமையையும் இன்றியமையாப் பண்பு நலனாகக் காட்டுதலை நாம் உணரலாம். திருத்தொண்டர் புராணத்துப் பேசப் பெறும் அடியார்கள் குறிக்கோள் கொண்டிருந்த அளவுக்கு கோட்பாட்டிலும் கொள்கையிலும் உறுதியோடு விளங்கியமையை நாம் காணலாம். சேக்கிழார் பெருமான், உறுதியுடைமையை ஒரு வீரமாகவே கருதுகின்றார். கைத்திருத்தொண்டு செய் கடப்பாட்டினர், பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள், வீடும் வேண்டா விறலினர் என்றெல்லாம் அடியார் களின் சிறப்புரைத்த சேக்கிழார், பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதோ பாகர் மலர்த்தாள் மறப்பிலார் என்றும்,

"ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ!"

என்றும் வியந்து கூறுகின்றார்.

திருநாவுக்கரசரின் வரலாறு பல்வேறு வகைப்பட்ட சூழல்களிலும் அவர்தம் உறுதிப்பாட்டை வீரத்துடன் வெளிப்படுத்துதல் காணலாம். அரசரோடும் அமணரோடும் மாறுபட்டு அவர் நீற்றறையில் உறைந்த நிலை, நஞ்சுணவு உண்ட நிலை, கல்லினோடு கடலில் நின்றெழுந்த நிலை எனப் பல சோதனைகளை, வேதனைகளைக் கண்டார். ஆயின் நிலைகுலைந்து உறுதி தளர்ந்தாரில்லை. அவர்தம் திருமுறைகளில் உறுதியுடைமை குறித்த செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன.

மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவனாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. (5:91:5)

என்றும்,

மண் பாதலம் புக்கு மால்கடல் மூடி மற்றேழுலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பாதிரிப் புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுள் சுடரான் கழலிணையே. (4:94:6)

எனவும் பல்வேறு இடங்களில் திருநாவுக்கரசர் தம் உறுதிப்பாட்டை வெளிப்படுத்துகிறார்.

முடியாட்சியில், ஒரு சக்கரவர்த்தியை எதிர்த்து எப்படிப் பாடுகின்றார்.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண்குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி யிணையே குறுகினோமே" (6:98:1)

"என்றும்நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிர் ஆவாரும் இல்லை
சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோம் அல்லோம் அன்றே
உறுபிணியார் செறல் ஒழிந்திட்டு ஓடிப்போனார்
பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணிய புண்ணியத் துளோமே"

(6:98:5)

இத்திருத்தாண்டகங்களில் அப்பர் பெருமான் வலியுறுத்தும் உறுதியுடைமையை நாம் நன்குணரலாம். எங்களுக்குக் குறையே இல்லை, ஆம் கோவண ஆடையே இருந்தபோதும் எவ்வளவு நிறைவைக் காட்டு கிறார். எங்களைத் துன்பங்களோ பிணிகளோ அணுகாது. இயமனைக் கண்டும் நாங்கள் அஞ்சமாட்டோம் என்றெல்லாம் பட்டியலிட்டுக் கூறியவர், நரகத்துச் சென்றாலும் அங்குள்ள இடர்ப்பாடுகளை, துன்பங்களைக் கண்டு, அஞ்ச மாட்டோம் என்று முடிமணியாகக் கூறி தம் உறுதிப்பாட்டை வெளிக்காட்டுகிறார். இத்தகைய உறுதிப்பாட்டைத் தனிமனிதனும் கூட்டுடைமைச் சமுதாயமும் கைக்கொண்டால் பக்தி இயக்கத்தின் பயனாகிய இறைவனுடன் இரண்டறக் கலக்கும் அற்புதம் நிகழும் என்பது இவ்வாறாம் திருமுறை வலியுறுத்தும் சிறப்புச் செய்தியாம்.

### ஒன்றாகக் காணும் சமநிலை

பக்தி இயக்கத்தின் ஆசிரியர்களான ஆழ்வார்களும் நாயன்மார் களும் ஒரு தெய்வ வழிபாட்டையே வலியுறுத்தினர். முதல் திருமுறை முதலாக, ஒன்பதம் திருமுறை வரை இக்கொள்கை சற்றும் பிறழாது இயங்கி இருப்பதைக் காணலாம். இறைவனிடம் காண்கின்ற இவ் ஒருமைப்பாட்டை உயிர்களிடத்தும் கண்டு இணைய வேண்டும் என்பதே இவ்இயக்கத்தின் நோக்காகக் காணப்படுகிறது. மனிதர்களுக்குள் ஆண் பெண் வேற்றுமை, குல உயர்ச்சி தாழ்ச்சி வேற்றுமை, தொழில் வேற்றுமை, இன வேற்றுமை, மொழி வேற்றுமை, கால வேற்றுமை, பொருளாதார வேற்றுமை என எத்தனை வேறுபாடுகள். ஆன்மாவில் வேறுபாடு காணும் போக்கைக் கூட திருமுறைகள் ஆதரிக்கவில்லை. இறைவனிடம் அன்பு செலுத்தும் யாரும் எவ்வுயிரும் சமமே எனும் ஒப்பற்ற சமதர்மத்தை அவர்கள் வலியுறுத்தியதுடன் முழுக்க முழுக்கத் தம் வாழ்நாளில் கடைப்பிடித்தும் ஒழுகியுள்ளனர்.

''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்
பாத்திரம் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே'' (5:60:3)

என ஐந்தாம் திருமுறையில் தம் உள்ளக் கருத்தை வெளிப்படுத்திய திருநாவுக்கரசர்; மனம் ஒன்றிய பக்தியைப் பெரிதும் வலியுறுத்துகிறார். பிற எல்லாம் ஆரவாரத் தன்மை கொண்டன என்பர்.

''சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லர்ஆகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'' (6:95:10)

இறைவன்பால் அன்பு செலுத்துபவர் யாவராயினும் தம்மோடு இணைந்து நிற்பதற்கு உரியவர் என்ற சமநிலையையும் தாண்டி அவர்கள் கடவுளாகக் கருதி வழிபடத் தக்கவர்கள் ஆவர் என்கிற உயரிய நிலையைக் காட்டு கிறார். பக்தியியக்கம் தந்த இந்தச் சமநிலை வேறு எங்கும் எதிலும் காண முடியாத அற்புத மானிடவியலாகக் காணப்படுகிறது என்றால் அது மிகையாகாது.

## இறைவனைப் போற்றுதல்

தொண்டு செய்தல், இறை வழிபாட்டில் தலை நிற்றல், நீறணிதல் என்பவற்றோடு இறைவன் புகழை, பெயரைப் பாடிப் பரவுவதும் பக்தி இயக்கப் பண்பாகக் காணப்படுகிறது. இதனை ஆறாம் திருமுறை மிக நன்றாக வழிகாட்டியாகவே சித்திரித்திருப்பதைக் காணலாம். இறைவனின் எளிவந்த தன்மையை, எல்லாவற்றிலும் எல்லாவற்றுக்கும் மேலாகி நிற்கும் அப்பரம்பொருள் உன் உள்ளத்திலும் கண்ணிலும் தங்கும் எளிமை கொண்டவர் எனும் நம்பிக்கையை முதற்கண் ஊட்டி - ''சிறையாரும் மடக்கிளியே இங்கே வா, தேனொடுபால் முறையாலே உணத்தருவன்'' என்றழைத்து இறைவன் நாமாவைச் சொல் என்பது போல.... இறைவனின் எளிவந்த தன்மையை மிகத் தெளிவாக நம்பிக்கையுடன் தருகின்றார்.

''மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்

இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழண்டத்து அப்பாலான் இப்பாற் செம்பொற்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத்து உச்சியுள்ளான்
காளத்தியான் அவன்என் கண்உளானே'' (6:8:5)

இமையவர் சிரத்தின் மேலாகக் கயிலாயத்து உச்சி இருக்கும் எங்கள் இறைவன் என் மனத்தும் கண்ணும் நிறைந்திருப்பது போல உங்களிடமும் நிறைவார் என நம்பிக்கை தருகிறார்.

''பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கேனென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழில் ஆரூரா என்றே போற்றா நில்லே'' (6:31:7)

என்று வழிபடும் முதல் நிலையை எடுத்துச் சொல்கிறார். இவ்வழிபாடு நல்கும் பயன்களை - பாவங்களைப் போக்குதல், சூழ்வினைகளைக் களைதல், பரகதிக்குச் செல்லுதல் என்னும் பக்திப் பயன்களை அடுக்கிச் சொல்லி அதனைப் பெறும் வழியாக ஒருமை கொண்ட பக்தி உணர்வைக் காட்டுமாறு விளக்கியிருக்கிறார். இதுதான் பக்தியியக்கப் பண்பின் சிகரமாகக் காண முடிந்த சிறப்பாகும்.

இறைவன் புகழை எவ்வாறு பேசுவது, பாடுவது, ஆராதிப்பது. இவற்றுக்கெல்லாம் விடை இருப்பதாகப் போற்றித் திருத்தாண்டகங்கள் அமைந்திருக்கின்றன எனலாம்.

''வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத்து ஒலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி'' (6:55:1)

எனவும்,

"கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லும் கதியே போற்றி
அற்றவர்கட்கு ஆரமுதமானாய் போற்றி
அல்லலறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட்டானனே போற்றி போற்றி" (6:32:1)

எனவும் போற்றிசைத்துக் காட்டுகிறார். இவ்வாறு பக்தியியக்கப் பண்பு களையும் பயன்களையும் இலக்கணத்துக்கு இலக்கியம் அமைந்தாற்போல விளக்கியுள்ள அப்பர் பெருமானின் ஆறாம் திருமுறை, சொல்லாலும் செயலாலும் பக்தியாகவே நிலைத்திருக்கின்றமையை உணரலாம். இத்திருமுறையின் செய்திகளே 4, 5-ஆம் திருமுறைகளிலும் இடம்பெற்று நாவுக்கரசரின் பண்பு நலன்களை, கொள்கைகளை, வாழ்க்கை நெறிமுறைகளை பறைசாற்றுகின்றன.

வாழ்க திருநாவுக்கரசர், வளர்க தொண்டுநெறி.

*த.கோ. பரமசிவம்*

# तिरुनावुक्करसर

मन में उत्पन्न होनेवाले मायाजाल को दूर करके, ज्ञान पैदा करने के लिए, अंधकार को दूर करके प्रकाश देनेवाले सूर्य के समान, सभी कलाओं के विकसित होने के लिए और तप एवं संप्रदाय नीति विकसित होकर जीने के लिए ही तिरुनावुक्करसर ने जन्म लिया है ऐसे शेक्किळार जी उनकी जीवनी के लिए प्रस्तावना देते हैं। यही नहीं वे इस प्रकार कहकर चकित होते हैं कि ज्ञान के तपस्वी के रूप में होनेवाले उस वागीश जी की सेवा को मुझसे क्या विस्तार से बताया जाएगा ? दैव मंदिर की आराधना में, भक्ति नीति की आराधना में सेवा मार्ग कोअपनाकर जिये उनका जीवन आश्चर्यजनक महत्ता रखनेवाला है। यहाँ उन दोनों को संक्षेप में परिचय की स्थिति में देखेंगे।

सर्वसंपन्न तमिलनाडु में तिरुमुनैप्पाडि नामक मध्य देश में तिरुवामूर नामक गाँव में कुरुक्कैयरकुडि नामक कृषक परिवार में पुगळनार मादिनियार नामक पति-पत्नी के सुपुत्र के रूप में तिरुनावुक्करसर जन्मे। इनके बचपन का नाम मरुलनीक्कियार है। तिरुनावुक्करसर नाम तो बाद में भगवान से दिया नाम है। ये अपने समकालीन तिरुज्ञानसंबंधर से "अप्पर" नाम से बुलाने के कारण "अप्पर" नाम से भी कहे जाने लगे। ये वागीसर, तांडकवेंदर, तांडकच्चदुरर आदि विशेष नामों से भी उल्लेख किये जाएँगे।

ऐतिहासिक आधार ऐसे बताते हैं कि ये तिरुज्ञानसंबंधर के समकालीन होने के कारण भी और पल्लव राजा महेंद्रवर्मन के काल के होने के कारण भी ई. छठी शताब्दी के उत्तरार्द्ध से लेकर सातवीं शताब्दी के बीच तक जीवित थे। कुछ लोग तो ऐसे बताते हैं कि ई. सन् 574 में ये पैदा हुए होंगे।

ये, अपने युवा काल में ही माँ-बाप को खोयी दशा में, बडी बहन तिलकवदियार की देखरेख में पलते समय भी अन्य संप्रदायवाले समण संप्रदाय में लगकर वहाँ के ग्रंथों का अध्ययन करके निपुणता पाकर, संप्रदाय के ऊँचे "धर्मसेनर" नामक उपाधि से मशहूर हुए।

समण संप्रदाय से दूर होकर मातृसंप्रदायवाले शैव संप्रदाय को ही इनको वापस आना चाहिए ऐसे तिलकवदियार भगवान से प्रार्थना करने, उनकी कामना को पूरा करने भगवान ने, इनको शूल रोग नामक कठोर उदर पीडा को पैदा किया। अपने सीखे ग्रंथों एवं समण संप्रदाय से दूर न कर सकनेवाले उस रोग के साथ तिलकवदियार की शरण में आये। तिलकवदियार भस्म देकर उनको स्वीकार करके, शिवजी की प्रार्थना करने से वह शूल रोग दूर होगा ऐसे समझाने पर, वैसे ही ये तिरुवदिकै के दैवमंदिर में जाकर, "कूट्राइनवारु" नामक तमिल के पद गाकर भगवान से अपने रोग के दूर होने की प्रार्थना करने पर, भगवान ने भी इनके रोग को दूर करने के साथ-साथ, इनके गाये तमिल पद पर प्रसन्न होकर "तिरुनावुक्करसर" नामक उपाधि देकर कृपा की। उस दिन से शिवजी

की श्रीकृपा पर चकित होकर, सेवा नीति के साथ, देवमंदिर सब जाकर भगवान को पद मालाओं से आराधना करके शैव धर्म एवं तमिल को एक साथ विकसित करनेवाले के रूप में बने ।

चमत्कार

अपने धर्म से बदलने के साथ शैव धर्म को तीव्र गति से बढाने की स्थिति को देखकर इस मरुनीकियार पर समण लोग नाराज़ हुए । राजा की बडी मदद से इनको चूने की भट्ठी में डालकर, विष पिला कर, हाथी को उकसाकर, पत्थर के साथ समुद्र में डालकर कई प्रकारों से कष्ट दिये । भगवद्कृपा से, पंचाक्षर के जपने की भक्ति विशेषता से उन सब बाधाओं से बचे बडी महत्तावाले के रूप में, अनुग्रह प्राप्त वाले के रूप में ये समझे जाने लगे ।

सभी स्थलों की यात्रा करके, वहाँ के देवमंदिरों में उळवारम लेकर कर सेवा करके भगवान को पदों रूपी माला से गूंथकर आराधना की । पेण्णाकडम नामक गाँव के तिरुत्तुंगाने मंडप में भगवान से आराधना करके चिन्ह अंकित किया । तिरुनल्लूर नामक गाँव में श्रीचरण पहनाये गये ।

तिंगलूर में अप्परजी की ही आराधना करके भगवान के रूप में माने ब्राह्मण अप्पूदि अडिगल के डंसने से मरे बेटे को जिलाया । पळैयारै वडतलि में समणों से छिपाये देवमंदिर में आराधना की । तिरुप्पैञ्ञीलि में. भगवान से भोजन दिलाये गये ।

तिरुज्ञानसंबंधर और ये दोनों ने मिलकर कई स्थलों को जाकर आराधना की । तिरुवीळिमिळलै में ठहरकर उस समय फैले अकाल को दूर करने भगवान से सिक्का पाकर कइयों को भोजन खिलाकर खुश हुए । तिरुमरैक्काडु में वेदों से बंदे किवाडों को खुलकर बंद करने दिया । पांडि नाडु से लेकर तमिलनाडु के सभी भागों को जाकर देवमंदिर आराधना को विकसित किया ।

नावुक्करसरजी ने अपने अंतिम दिनों में श्रीकैलाशनाथ का दर्शन चाहकर हिमालय की यात्रा अपनायी । पैरों से चलने में असमर्थ होकर थककर हाथों से रेंगकर, सीने से लुढककर उस हिम पहाड में चढे । रास्ते में भगवान से रोककर अनुग्रह किये गये । भगवान की आज्ञानुसार वहाँ के तालाब में डुबकी लगाकर तिरुवैयारु के तालाब में निकलकर श्रीकैलाश दृश्य को तिरुवैयारु में ही देखकर आनंद विभोर हुए । फिर स्थल यात्रा ग्रहण करके, अपनी 81 वीं उम्र में तिरुप्पुगलूर में चैत्र सदय नक्षत्र में मुक्ति पायी ।

अपने जीवन भर स्थल यात्रा ग्रहण करके, श्रीमठ का निर्माण करके, करसेवा करके, भक्ति रूपी पदमाला रचकर शैव की फसल की वृद्धि केलिए परिश्रम किया ।

<u>कर सेवा सेवानीति का चिन्ह है</u>

देवमंदिर की आराधना में सेवानीति को तिरुनावुक्करसरजी ने अपनाया । करसेवा नामक इस सेना को, उपकरण को रखकर उन्होंने, देवमंदिरों में और आसपास के स्थानों में श्रीवीथियों में होनेवाली भूमि को शुद्ध किया । इसको रखकर घास-फूस को छोदकर, काँटे, छोटे-छोटे पत्थरों को दूकर करके सेवार्थी व आम लोगों के बेरोकटोक के मंदिर आने-जाने का मार्ग बनाया । यह उऴवारै श्रीसेवा ही आज करसेवा नाम से बुलायी जाती है । बहुत अध्ययन करने पर भी कुमारी से लेकर हिमालय तक अपने जीवन भर लगातार यात्रा करने के समयों में वहाँ के देवमंदिरों में भूमि को साफ़ करनेवाली इस श्रीसेवा को वे लगातार करते आ रहे ।

तिरुनावुक्करसरजी के जीवनी को बतानेवाले शेक्किऴारजी, इस करसेवा को कई जगहों में प्रशंसा करते हैं । वे ऐसे बताते हैं कि जगत के लोगों के लिए ही वे इस श्रीसेवा को करते थे । उनके जीवन का उद्देश्य जो कयिलै के दृश्य का दर्शन करना था उसके बाद भी उन्होंने इस सेवा नीति को नहीं छोडा । वे अपनी 81 वीं उम्र में भी पूंपुगलूर की वीथियों में कर सेवा करते रहे ।

दक्षिण तमिलनाडु के कुछ मंदिरों में उत्सवमर्ति के जुलूस निकलते समय अग्नि देव के आगे एक ताम्र मूर्ति ले जाएँगे । क्या उस भगवान का नाम मालूम है ? "काँटे चुननेवाले भगवान" हैं । उस भगवान को ध्यान से देखेंगे तो उऴवारम उसके हाथ में होगा । अर्थात् अप्परजी को ही ऐसे बताते हैं । भगवान के वीथियों में आते समय अप्परजी द्वारा किये श्रीसेवा को ही हमारे पूर्वजों ने ऐसे संप्रदाय बनाया है ।

श्रीसेवा करने के इच्छुकवाले उनका रूप शिवजी के वेष के समान सुंदर होगा । उनका सीना धार्मिक भाव के साथ दिखायी देगा । श्रीमुख में देवारम के पद शहद के समान बाहर आएगा । हाथों में तो उऴवारम सेना सुंदर लगेगी । उनकी ताम्र मूर्तियों में, पत्थर की शिलाओं में, चित्रों में इस उपकरण के साथ ही उनको देख सकते हैं । जैसे शिवजी के लिए जटा, चाँद व गंगा के समान, तिरुमाल को चक्र व शंख के समान, मुरुगन को वेल और मोर के समान तिरुनावुक्करसरजी को उऴवारम सेना ही निशान है । बडे देव से लेकर वीरनार जैसे छोटे देव तक अपने हाथों खड्ग, वेल जैसे मारनेवाले शस्त्र ही रखे होंगे, मगर हर समय श्रीसेवा ही ऐसे जिये हमारे अप्परजी के पास वातावरण को साफ़ करनेवाले उऴवारम ही दिखायी देगा ।

देवारम

तिरुनावुक्करसरजी के भक्ति गीत सब पद जैसे बने हैं । देवारम नाम को पूर्ण रूप से प्राप्त हैं । इनके कई स्थलोंमेंगाये में पद ही अधिक हैं । फिर भी आज हमें मिलनेवाले तो 312 श्रीपद ही हैं । इनको

गाये, करसेवा किये स्थलों में, तिल्लै, ओट्रियूर, कंच्चि, तिरुवण्णामलै, तिरुवदिकै, तिरुवारूर, तिरुक्कालत्ति, तिरुक्कयिलै, तिरुवैयारु, तिरुच्चोट्रुतुरै, तिरुप्पूंदुरुत्ति, तिरुवीळिमिळ्लै, कुट्रालम, तिरुक्कोकरणम, शायक्काडु, तिरुत्तूंगानै माडम, तिरुमरैक्काडु, तिंगलूर, तिरुप्पळनम, तिरुवायमूर, तिरुनल्लूर, कुडतै, तिरुप्पुगलूर आदि उल्लेखनीय विशेष रखते हैं ।

इनके गाये पद पन्निरुतिरुमुरै में 4, 5, 6 आदि तीन तिरुमुरैयों के रूपोंमें वर्गिकरण किये गये । चौथे तिरुमुरै में कोल्लि, कांदारम, पियंदैक्कांदारम, सादारी, कांदारप्पंजमम, पळंदक्कराकम, पळम पंजुरम, इंदलम, सीगामरम, कुरंचि आदि रागों में तिरुनेरिशै, तिरुविरुत्तम आदि पद्यरचना में पद बने हैं । छठवें तिरुमुरै सब तिरुत्तांडकम के रूप में बने हैं । तांडकम पद्यरचना इनके द्वारा प्रयुक्त नवीन पद्यरचना है । कुछ लोग इसे उत्तर की भाषा से आने के रूप में बताने पर भी विशेषज्ञों ने प्रमाणित किया है कि नावुक्करसर का तांडकम तो अलग है । इसीलिए इनको तांडक राजा, तांडक चतुर कहकर प्रसन्न होंगे ।

भक्ति कर्म को दूर करेगी

यह कहना अत्युक्ति न होगी कि तिरुनावुक्करसर अपने भक्ति आंदोलन के गुण व लाभ का विश्लेषण करने में महान हैं । उस समय फैले अन्य संप्रदाय सब तो ऐसे भय दिखाने लगे कि मानव जन्म दुःख से भरा है, हमने जो कर्म पहले किया उसको भुगतकर कष्ट उठाना पड़ेगा । यह जगत, जगत की चीज़ें, सुख आदि अस्थिर हैं । मानव जन्म दुखों के लिए और यह शरीर रोगों के लिए निलय है । इसलिए इस जन्म में सन्यास लेकर व्रत करें तो पुरुष ही मुक्ति पा सकते हैं । स्त्रियाँ मुक्ति लाभ नहीं पा सकतीं । ऐसे कहकर मानव जन्म को एक दोष रूप में दिखाकर डराने लगे । जीवन में एक घृणा भाव का बोध करते थे ।

उस समय उत्पन्न भक्ति आंदोलन इन सबका खंडन करके, सभी जीव भगवान के सामने बराबर हैं- जन्म और पेशा तात्कालिक अंतर है। इस शरीर में भगवान वास करेगा, उसपर भक्ति करें तो पूर्वजन्म के कर्मों को जीत सकते हैं, मिटा सकते हैं आगे बढ़नेवाले कर्मों को भी रोक सकते हैं, मुक्ति लाभ पाने के लिए इह जीवन विघ्न के रूप में नहीं होगा । ऐसे बताकर विश्वास दिलाकर जीवन में एक लगाव को पैदा किया । मानवता को बढ़ानेवाली समष्टि आराधना, देवमंदिर की आराधनाएँ हमें आनंद देंगी । जीवन के पूर्ण फल को दिलानेवाले हैं, वे मार्ग बनाएँगे ऐसे स्पष्ट किये । इस आंदोलन के उदाहरण के रूप में हमारे नावुक्करसर जीवन बिताते थे । उनका जीवनी ही इसका प्रमाण है । फिर भी उनका देवारम पद बहुत विशिष्ट अंदरूनी प्रमाण के रूप में होनेवाले को हम अनुभव कर सकते हैं । भगवान के

अर्चा मूर्त को प्रेम करके, भक्ति करके, विभोर होने को इस जन्म के लाभ मानने से न रूककर, इस भक्ति के लिए ही फिर-फिर जन्म लेने को भी तैयार हुए ।

अप्परजी के तिल्लैप्पासुरम में इसको देख सकते हैं । वे एक और हद ज्यादा जाकर प्रार्थना करते हैं कि दूसरा जन्म मिलने पर भी भगवान को भूल न सकनेवाला वर चाहिए । इसको उनके देवारम में देख सकते हैं । इसलिए यह श्रेष्ट जन्म प्रशंसनीय है । इस जन्म में हम अपने पूर्व कर्म को, पापों को भक्ति द्वारा दूर कर सकते हैं । ऐसे वे विश्वास दिलाते हैं ।

भगवान की चरण में आश्रय लें तो पाप दूर होंगे, घेरे कर्म गिरेंगे, परगति मिलेगी । इस मूल तत्त्व को ही तिरुनावुक्करसर के देवारम भर में हम देख सकते हैं । आगे इनकी विशेष रचना छठवें तिरुमुरै में दिखायी देनेवाली बातों से इनकी भक्ति नीति को सामाजिक सिद्धांत को देखेंगे ।

छठवां तिरुमुरै

अप्परजी द्वारा रचे छठे तिरुमुरै में होनेवाले पद तिरुत्तांडकंगल नामक अलग प्रकार के हैं । वे गहरे ज्ञान एवं भक्ति भाव को प्रकट करने में श्रेष्ट हैं । ऐसा कहें तो यह अत्युक्ति न होगी कि, ये सभी तिरुत्तांडकंगल भगवान सब जगह ज्योति रूप में विद्यमान होगा ऐसे उसकी सर्वव्यापकता को चकित होकर प्रशंसा करते हैं । भगवान सब जगह विद्यमान हैं, हमारे मन में भी विद्यमान हैं ऐसे सत्य को साफ-साफ दिखाते हैं ।

इसी प्रकार भक्ति आंदोलन के लाभवाले ऐक्य को, भगवान के सम्मुख सब जीव बराबर हैं वाले समत्व भावना को बोध कराने की दशा में ये तिरुत्तांडकंगल दिखायी देते हैं । मानवता समधर्म भावना को भक्ति आंदोलन के गुणों के रूप में हम देख सकते हैं ।

देवमंदिर की आवश्यकता, मूर्ति पूजा की उन्नत दशा, चर्या नीतिवाली सेवा नीति जैसे भक्ति आंदोलन के गुणों को स्पष्ट करने के रूप में यह छठवां तिरुमुरै पद दिखायी देते हैं । भक्ति आंदोलन के गुणों को, लाभों को ज्ञान एवं सरलता के साथ बोध कराने के लिए ही यह तिरुमुरै होता है । जगत के जीवों के मोक्ष पाने के लिए ही इस छठवें तिरुमुरै के पद अवतरित हुए हैं ऐसा कहें तो यह अत्युक्ति न होगी ।

छठवां तिरुमुरै भगवान के समान चौड़े, ऊँचे और गहरे बनकर हुए हैं । इसको पूर्ण रूप से शीघ्र खोज नहीं सकते । इसलिए इस तिरुमुरै के मूल को समझानेवाले छे पदिकम को यह लेख खोज करने प्रवृत्त होता है । पदिकम के अंदर जाने से पहले भक्ति मार्ग के बारे में कुछ मूल तत्त्वों को मन में रखना योग्य होगा ।

## भक्ति आंदोलन

गंगा कावेरि के संगम से सुख पहुँचानेवाले इस भारत देश का देखा बड़ा मार्ग भक्ति आंदोलन है । विशेषकर दक्षिण भारत में विकसित यह भक्ति आंदोलन ने लोगों को जीवन में एक लगाव को पैदा किया ।

"तू पवित्र है, तेरे दिल में सर्वोपरि भगवान ने निवास किया है, निवास करेगा । तेरे रहनेवाला गाँव पवित्र है, स्थान पवित्र है, तेरे घेरी गली, मंदिर, सरोवर सब पवित्र हैं । पवित्रता के लिए, दैव के लिए तू कहींनभटक । कैलाश में विराजे वह भगवान तुझमें, तेरे गाँव में, तेरे मंदिर में चाहकर विराजे हैं । उस भगवान को अपने गुण, पेशा, अध्ययन के अनुसार प्रेम करना काफ़ी है । आराधना करना काफ़ी है , तेरे सरल प्रेम पर मुग्ध होकर वह भगवान ही माँ के समान आकर तुझमें ठहरेगा । ऐसे समझाकर एकता, स्वाभिमान, विश्वास आदि को पैदा करके इस मानव जन्म को लाभदायक जन्म बनाकर दैव के रूप में ये तिरुमुरै उठाते हैं । मानव मानव के लिए गुलाम बनकर, बुद्धि से, धन से, शक्ति से दूसरों के गुलाम बनकर, रहनेवाले मानव को अपने को पहचानकर सुख प्राप्त करनेवाले अद्भुत स्वाभिमान आंदोलन ही यह भक्ति आंदोलन है ऐसे रूप में उन दिनों में मेल-जोल किये जाने लगे । यही तिरुमुरै के गुण, लाभवाली विशेषता है तो वह अत्युक्ति नहीं होगी ।

## तिरुमुरै आराधना

प्राप्त हुए इस मानव जन्म का उपयोग करके भगवद्‌कृपा की प्रशंसा करके भक्ति करके, जन्म का समूल नाश करके सुखपूर्वक शिव पद को प्राप्त करके आनंद में परवश होना ही तिरुमुरै का उद्देश्य है । आत्मा का छुटकारा ही इसकी समाप्ति दशा है ।

भक्ति करना तो, मानवता के साथ तन-मन-वचन से भगवद्‌सेवा करना, भगवान का गुणगान करके स्तुति करनी है । इस भक्ति के लिए कुल, गोत्र, रूप, मार्ग आदि ऊँचे कुल के गुणों की आवश्यकता नहीं है । प्रेम और गुण ही काफी हैं । कोई भी जन्म, कोई भी पेशा, कोई भी देश, कोई भी कुल भक्ति के योग्य हैं । भगवान की स्तुति करनेवाली मूर्तिपूजा को तिरुमुरै चकित होकर बोलते हैं । मगर, आडंबर पूजा, मेला पर वे जोर नहीं देते । भगवान के श्रीशरीर के लिए, सरल रूप में स्नान कराना, फूल चढ़ाना ही काफ़ी है । नैवेद्य चीज़ों की भी आवश्य कता नहीं है । आराधना संपन्न होगी । तिरुमुरैयों में विशेषकर, देवारम में "नैवेद्य" के न संकेत यहाँ उल्लेखनीय हैं । इन मूल बातों को मन में रखकर आगे, छठवें तिरुमुरै को चलेंगे ।

## दैवमंदिर आराधना

व्यक्ति विशेष के कर्तव्य में, समाज के मिले कर्तव्य में, स्थल आराधना, दैव मंदिर आराधना, सेवार्थी आराधना आदि अनिवार्य स्थान पाने के रूप में भक्ति आंदोलन के गुण दिखते हैं । इस मूल तत्व को मुख्यता देने के रूप में पद छठवें तिरुमुरै में कई दिखायी देते हैं । तिरुनावुक्करसरजी के स्थल यात्रा विवरण और मंदिर सेवा और दूसरे इस मूल को आंतरिक एवं बाह्य प्रमाण के रूप में होते हैं । बाद के काल में हुए, "मंदिर न होनेवाले गाँव में निवास न करें" नामक कहावत को पूर्व के रूप में तिरुनावुक्करसरजी के इस तांडकम को देखने पर आश्चर्य होता है, नगर की बनावट, गाँव की बनावट, ग्रामों की बनावट में यह में दिखानेवाली लगन, जिम्मेदारी को यह तिरुत्तां-डकम ज्ञान कराते हैं तो वह अत्युक्ति न होगी । आराधना के साथ प्रदूषण नियंत्रण बात को भी यह मूल संकेत करने को समझ सकते हैं । व्यक्ति विशेष अपने को शुद्ध बनाता है । अपने गृह को शुद्ध करता है । मगर आम भूमि को, जगह को, वातावरण को कौन शुद्ध करे ? इसको गहरे रूप में अनुभव किये शैव सेवकों ने दैवमंदिर की आराधना में मंदिर लीपना, साफ करना आदि सेवाओं को भी मिलाकर किया । इन सबके अगुए के रूप में अप्परजी स्वयं करसेवा में लगकर प्रदूषण नियंत्रण में एक मात्र सम्राट के रूप में थे । उनके पद ऐसे बने हैं कि दैवमंदिर आराधना मानसिक शुद्धता एवं गाँव की शुद्धता को एक साथ मार्ग बनाने के रूप में थे ।

उनके तिरुत्तांडकम में, व्यक्ति विशेष में और सामाजिक दशा में दैवमंदिर आराधना की पानेवाली विशेषता को संकेत करने को देखेंगे । ऐसा कह सकते हैं कि इसमें बाधा हो तो व्यक्ति विशेष जीवन, सामूहिक जीवन आदि दोनों ही कष्ट भोगकर अशांत होकर, मरकर जन्म लेकर भटकनेवाली स्थिति को गिरनेवाली दशा को भी दिखाने से न चूके । आगे मंदिर सेवा के लिए उदाहरण के रूप में होनेवाले आरूर पदिकम को दिखाएँगे ।

## लक्ष्यवाले सिद्धांत व स्थिर होना

जगत तो निरंतर रूप में चलता रहता है । रात, दिन, सबेरा, शाम, मौसम अचूके चलता रहता है । स्थिर रूप में होनेवाले नियंत्रण के साथ चलन के लिए बिना बदले चक्कर का कारण बनता है । इस जगत में जीनेवाले मानव एक स्थायी अनुशासन के न होकर, असीम रूप में घूमकर, इच्छा को और उससे दुःख में पडकर कष्ट उठाते हैं । सिद्धांत, नियम, वाद, लक्ष्य आदि न होकर चलने के कारण, जल्दी से यांत्रिक गति में चलते रहने के कारण हडबडाहट केवल बडों के लिए है ही नहीं, छोटे बच्चे, जवानी से ही समय के पीछे, रुपयों के पीछे, मनोरंजन के पीछे दौडने की स्थिति, इसीलिए अपने को न समझ सकनेवाली हडबडाहट वाले मानव दिखते हैं । बिना लक्ष्यवाले जीवन पद्धति ही इसका कारण है

तो वह अत्युक्ति नहीं होगी । ज्ञानियों, सेवार्थियों की जीवनी को सूक्ष्म रूप से खोज करें तो जान सकते हैं कि वे एक अमुक जीवन तरीके से लक्ष्य से जीवित थे । पेरियपुराणम् के द्वारा संकेत किये जानेवाले नायन्मारों की जी वनियाँ इसके लिए बड़े प्रमाण के रूप में हैं । वे स्वयं अपने आपको जाननेवाले थे, अपने को अपनी वैयक्तिकता में खड़े किये, इसलिए अपने लक्ष्य में सफल होकर नायक को - भगवान को देखा ।

सभी तिरुत्तोंडर एक-एक लक्ष्य के साथ जीवित थे । अपने-अपने लक्ष्य में आनेवाली परीक्षा का सामना करके उसमें जीत पायी । चाहे भिक्षापात्र देनेवाला हो, चाहे कपड़ा साफ करनेवाला हो, चाहे बुनाई करनेवाला हो, चाहे अन्न खिलानेवाला हो, चाहे माँगने सब देनेवाला भी हो .... जो कोई भी हो, वे अपने सिद्धांत, लक्ष्य को स्थिर रूप में करके उसीमें शासन करते रहे । इसीलिए जीत पायी । उसी मार्ग में भगवान को माना । ऐसे उनकी दृढ़ता को (वीरता- लक्ष्य में होनेवाली दृढ़ता) मुझसे नहीं बताया जा सकता ऐसे शेक्किळार चकित होते हैं । ऐसे बता सकते हैं कि ऐसी वीरता ही अपने को समझकर नायक को समझाया ।

लक्ष्यवाले सिद्धांत

तिरुत्तोंडर जीवन लक्ष्य रखनेवाला है इसे पेरिय पुराणम् के हरेक भाग में स्पष्ट रूप में देख सकते हैं । देवारम के आचार्यों ने अपने पासुरम में बिना लक्ष्य के नाश हुए पुराने वातावरण को अंकित किया है । अप्पर के देवारम दिखाते हैं कि बिना लक्ष्य का जीवन व्यर्थ है । प्रेम, करुणा जैसे लक्ष्य भी एक अच्छेवाले सिद्धांत के रूप में दिखायी देगा । इससे यह बात मालूम होगी कि सिद्धांत के रूप में लक्ष्य भी है ।

स्थिर होने के रूप में ध्यान करें

लक्ष्य होगा तो हड़बड़ाहट कम होगी । हड़बड़ाहट कम हो तो लक्ष्य संपन्न होगा । एक दूसरे से संबंध रखते हैं । वह तो ठीक है .... हड़बड़ाहट को दूर करने का मार्ग क्या है ? यांत्रिक रूप से भटकनेवाले मन को नियंत्रण में रखकर स्थिर करना है उसके लिए क्या मार्ग है ? वंचकता, झूठ, कपट, इच्छा आदि के स्थान पाने से मैं हड़बड़ाहट में पड़ गया । मेरा मन मुझमें नहीं है, मेरा शरीर मुझमें नहीं है । किसी में, कहीं भी स्थिर नहीं हो सकता । इन सबके कारण तो मेरी हड़बड़ाहटें ही हैं । इस हड़बड़ाहट को दूर करके मुझे स्थिर होना चाहिए । क्या, इनके लिए मार्ग ? ऐसे प्राचीन काल से प्रयत्न तो जारी रहते हैं । कई धर्म नायकों और संतों ने कई मार्ग दिखाये हैं । मगर, सबसे, सभी जगहों में स्वीकार करने लायक एक सरल मार्ग को अप्परजी दिखाते हैं । अपने तांडकम द्वारा भक्ति नीतिवाले चर्या मार्ग में हम अपने मन को स्थिर रख सकते हैं ऐसी बात को वे निरूपित करते हैं । शरीर से जो हो सकता है उसे करके शरीर को पहले स्थिर रखना चाहिए ।

वह स्वयं ही वचन एवं मन को स्थिर करा देगा । उनके द्वारा दिखाये जानेवाले मार्ग -"तू सबेरे उठ, वह भी भोर में - सूरज के निकलने से पहले उठकर अपने सुबह के कर्तव्यों से निवृत्त होकर शुद्ध स्नान करके, पंचाक्षर का जप करके भस्म लगा ले । प्रति दिन भगवान के देवमंदिर चल । वहाँ श्रीसेवा रूपी लीपना आदि सफाई के काम में लग जा । उसके बाद भगवान के पहनानेवाले पुष्पों को नियमानुसार तोड़कर, माला बनाकर उसको पहनाओ । इस मूल कर्मों के बाद सिर झुकाकर आराधना करके नाचना भी चाहिए । इस प्रकार के वातावरण में स्वयं ही उसकी प्रशंसा करके गाने की स्थिति उत्पन्न हो जाएगी । तब मन भर भगवान का गुण गान कर ।" ऐसा लागू होगा तो तेरी हड़बड़ाहट कम होगी। भाग जाएगी । मन स्थिर हो जाएगा ।

यांत्रिक गति में, चलनेवाली तेरी स्थिति को रुपया और पद भटकाएँगे । रुपये, पद से तेरी पूजा और दूसरे धूम-धाम ही हो जाएँगे। हड़बड़ाहट को दूर करके शांति स्थापित नहीं करेगा । इसलिए अगर तेरा मन शांत होना है तो तू ही अपने शरीर से पूजा कर । ये पूजा तरीके ही तुझे लाभ देंगे । इसको सुंदर एवं सुगम भक्ति मार्ग में हमारे अप्परजी दिखाते हैं ।

## दृढता

भक्ति आंदोलन, देवमंदिर आराधना, चर्याधर्म, लक्षण सिद्धांत, एकाग्रता आदि को गुणों के रूप में दिखाने के समान दृढता को भी आवश्यक गुण के रूप में दिखानेवाले को हम अनुभव कर सकते हैं । तिरुत्तोंडर पुराणम के बोले जानेवाले सेवार्थी लोग लक्ष्य रखने के हद तक सिद्धांत एवं मन में दृढ रहने को हम देख सकते हैं । शेक्किळारजी दृढता को एक वीरता के रूप में ही मानते हैं ।

तिरुनावुक्करसरजी की जीवनी अनेक प्रकार के वातावरणों में उनकी दृढता को वीरता के साथ प्रकट होने को देख सकते हैं । राजाओं के साथ और परसंप्रदायवालों के साथ चूने की भट्टी में ठहरी स्थिति, विषैले भोजन को खायी स्थिति, पत्थर के साथ समुद्र में उठी स्थिति, आदि कई परीक्षाओं को, दुखों को देखे । मगर स्थिति से गिरकर दृढता को नहीं छोडा । उनके तिरुमुरैयों में दृढता से संबंधित बातें व्यापक रूप से दिखायी देती हैं ।

इस तिरुत्तांडकमों में अप्पर द्वारा जोर देकर बतानेवाली दृढता का अनुभव कर सकते हैं । हमें कमी ही नहीं है, हाँ कौपीन कपड़ा ही होने पर भी कितनी तृप्ति को दिखाते हैं । हमें दुःख या रोग नहीं होगा । यम को देखकर भी हम नहीं डरेंगे ऐसे सूची दिखानेवाले से, नरक को जाने पर भी वहाँ की बाधाएँ, दुःख को देखकर नहीं डरेंगे ऐसे बताकर अपनी दृढता को प्रकट करते हैं । ऐसी दृढता को व्यक्ति विशेष और सामूहिक समाज लेगा तो भक्ति आंदोलन के लाभ रूपी भगवान से ऐक्य होने का चमत्कार होगा । ऐसे बताना ही इस छठे

तिरुमुरै द्वारा जोर देनेवाली मुख्य बातें हैं ।

ऐक्य रूप में होनेवाली समता

भक्ति आंदोलन के आचार्य आळवार और नायनमारने एक ही दैवभक्ति पर जोर दिया । पहले तिरुमुरै से नवें तिरुमुरै तक यह सिद्धांत जरा भी न फिसलकर चलने को देख सकते हैं । भगवान में दिखनेवाली इस एकता को प्राणियों में भी देखकर मिलना चाहिए । यही इस आंदोलन का लक्ष्य देखा जाता है । मानवों में, पुरुष-स्त्री भेदभाव, कुल ऊँच-नीच भेदभाव, पेशा भेदभाव, जाति भेदभाव, भाषा भेद-भाव, समय भेदभाव, आर्थिक भेदभाव जैसे कितने भेदभाव, आत्मा में भेदभाव देखनेवाली बात का तिरुमुरै समर्थन नहीं करते । भगवान के प्रति प्रेम रखनेवाले जो भी, प्राणी सब बराबर हैं वाले अद्भुत समता पर जोर देने के साथ-साथ पूर्ण रूप में उसे अपने जीवन में पालन करते आये । इस समता को छठवें तिरुमुरै ने अद्भुत रूप से दिखाया है ।

भगवान की स्तुति करना

सेवा करना, भगवद्भक्ति में ऊँचा रहना, भस्म लगाना आदि के साथ भगवान की कीर्ति को, नाम को गाकर व्यापक होना, भक्ति आंदोलन के गुण के रूप में पाया जाता है । इसे छठवां तिरुमुरै खूब मार्गदर्शक के रूप में चित्रित करने को देख सकते हैं । भगवान की दयालुता को, सबमें सबसे बढ़कर रहनेवाले वह परमात्मा मेरे मन में, आँख में ठहरने की दयालुता रखते हैं । वह आराधना देनेवाले लाभ-पापों को दूर करना, मेरे कर्मों को दूर करना, परगति को जाना, आदि भक्ति के गुणों को बताकर, उसको पाने के मार्ग के रूप में एकनिष्ट भक्ति भाव का विश्लेषण किया है । यही भक्ति आंदोलन के शिखर के रूप में देखी जानेवाली विशेषता है । इस प्रकार अप्परजी का छठवां तिरुमुरै, कथन एवं कर्म से भक्ति के रूप में ही स्थिर होने का अनुभव कर सकते हैं । इस तिरुमुरै की बातें ही 4, 5 वें तिरुमुरैयोंमेंस्थान पाकर नावुक्करसरजी के गुणों को, सिद्धांतों को, जीवन नियमों को बताती हैं ।

तिरुनावुक्करसरजी अमर रहे : सेवा नीति समृद्ध हो ।

स. को. परमसिवम्

# 1. அப்பர்தம் அஞ்சொல்வளத் தமிழ்மாலை

திருவளர்திரு கயிலைமாமுனிவர் காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

"உரை உணர்வு இறந்து நின்று உணர்வதோர் உணர்வே" - என மணிவாசகர் அருளுவார். இருப்பினும் மானுடர் உய்யும் பொருட்டு, அவர்க்குப் பத்தியுணர்வு தழைத்தல் குறித்தும் அப்பெருந்தகைக்குத் திருவுருவச் சிறப்புகள் பல நூல்களில், பல அருளாளர்களால் சுட்டி யுரைக்கப் பட்டுள்ளன.

அவன் எட்டுவகை உருவினனாய்ப் பரந்து நிற்கும் இயல்பை அப்பரடிகள் உரைப்பார்.

**'அட்டமா உருவினானே ஆவடுதுறை யுளானே'**

(ஆவடு - நேரிசை - 3)

அப்பெருந்தகை, எட்டுத் தோள்களை வீசி நின்றாடுவான்.

**"எண்தோள் உடையான் தன்னை"** (ஆவடு - தாண்டகம் - 6)

**"எண்தோள் வீசி"** (செங்காட்டங். தா. 1)

**"அட்ட மாம்புய மாகும் ஆரூரரே"** (ஆரூர் - குறுந். 7)

எனும் அப்பர் வாக்குகள், மேற்குறித்த கருத்தைச் சுட்டுவன.

அன்பால் நினைவார் உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரும் இறையவனை, வழிபட்டோர் பலர், வழிபாட்டு நெறிகள் பலவகைப்பட்டவை. அவற்றுள் மலர் இட்டும், மலர் மாலை கட்டிச் சூட்டியும் வழிபடல் மிகவும் சிறப்பு மிக்கதாகும்.

**'விளக்கினால் பெற்ற இன்பம்.....**
**துளக்கில்நல் மலர்தொடுத்தால் தூயவிண் ஏறலாகும்'**

எனும் பாடல் மலர்தொடுத்து வழிபடலின் மகத்துவத்தை மொழியும்.

சாத்திரங்களும்,

**'மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல**
**'இனமலர்' கொண்டங்கு இச்சித்த தெய்வம் போற்றி'**

என மலரிட்டு வழிபாடு செய்யும் அவசியத்தை உரைத்தன.

பெருமானின் திருவடிகளையே, 'பூவார்ந்த பொன்னடி', 'இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி', 'நனைந்தனைய திருவடி' - என்று மலராய் உருவகித்து மகிழ்ந்தது சமயகுரவர்தம் சிந்தை.

அறுபான்மும்மை நாயன்மாருள் சிலர் மலர் இட்டும், மாலை கட்டியும் வழிபாடு செய்து பேறு எய்தியதைப் பெரியபுராணம் கொண்டு அறிய முடிகிறது.

முருக நாயனார், திருப்பள்ளித் தாமம் சாத்தும் திருப்பணியைச் செய்தார். அவர்தம் வரலாறு கொண்டு, மலர் பறிக்கும் முறைமைகள் பற்றி அறியலாம்.

> "…. முருகுஉயிர்க்க நகைக்கும் பதத்தின் உடன்பறித்த
> அலகில் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடைகளில் அமைப்பார்"
>
> (முருக. 7)

எவ்வகைப் பூக்களைச் சேகரித்தார் என்றும் சேக்கிழார் செப்புவர்.

> "கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழும் கொடியின்
> தோட்டு மலரும் மாமலரும்…" (முருக. 8)

மலர் பறித்து வகைப்படுத்திக் கட்டிய மாலைகளும் பலவகையாய் அமைவதைப் பெரியபுராணம் பேசும்.

கோக்கும் கோவை, இண்டைச் சுருக்கு, தாமம், வாசமாலை, கண்ணி, பிணையல், தொடையல் என மாலைகள் பலவாய்க் கட்டப்படும் செய்தியைச் சேக்கிழார் சொல்கிறார். (பெரிய. முருக. 9)

திருக்கோயிலில் பெருமானுக்காக வைக்கப்பட்டிருந்த மலரை முகர்ந்த அரசியின் மூக்கை அரிந்த வரலாறும் பெரியபுராணம் சுட்டுவதே.

இவ்வாறான மேன்மை மிக்க மலர்கொண்டு வழிபடல் பற்றி அப்பரடிகள் அருந்தமிழில் பலநூறு இடங்களில் சுட்டப்பெறுகின்றன. அப்பர் அருளிய அருந்தமிழ்ப் பதிகங்களையே சேக்கிழார் 'அஞ்சொல் வளத் தமிழ்மாலை' என்று போற்றியுரைக்கிறார்.

பெருமானுக்கு வழிபாடு இயற்றும் மானிடரும் தேவரும், தம் வழிபாட்டின் பல்வகை நிலையில், மலரிட்டு வழிபட்டதைப் பொதுவாக அப்பரடிகள் பலவிடங்களில் குறிக்கிறார்.

> 'நறுமாமலர் கொய்து நீரின் மூழ்கி' (ஆவடு. தட. 51)
>
> 'பூவுலாம் சடை' (மயிலாடு. குறுந். 5)
>
> 'தேனுடை மலர்கள் கொண்டு' (வலம்புரம். நேரி. 3)

'சின்னமாம் பன்மலர்கள் அன்றே சூடி' (நாகை. குறுந். 4)

'வண்டு லாமலர் கொண்டு' (ஆரூர் - குறுந். 4)

'துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவி'

(ஆரூர் - தாண்டகம் - 8)

பெருமானுக்குச் சூட்டப்படும் மலர்களில் கொன்றை மிகப் பரந்துபட்ட அளவிலும், மிகச் சிறப்புடைய நிலையிலும் பேசப்படுகிறது.

கொன்றை மலர், மாலை என வாளா கூறாது, உளங்கனிந்த போதெல்லாம் உவந்து வந்து பாடி பற்பல நயமிக்கவாய்ப் பாடல் அடிகளைக் கோத்துள்ளார் அப்பரடிகள்.

'தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார்'

(நல்லூர் - தா. 3)

'பொன்திகழ் கொன்றை முதிர்சடை மூழ்க வைத்து'

(இடைமரு. நே. 9)

'கடியார் தளிர்கலந்த கொன்றை மாலை' (ஆக்கூர் - தாண். 9)

'தேன்திகழ் கொன்றையும்' (கடவூர் - வி. 10)

'கந்தமலர்க் கொன்றையணி சடையான்'

(செங்காட்டங். தாண். 4)

'பொன்மணியம் பூங்கொன்றை மாலை யானை'

(நாகை - தாண். 6)

'வம்புநல் கொன்றையி னானும்' (ஆரூர் - 4)

'காரமுது கொன்றை கடிநாறு' (ஆரூர் - சீகா. 9)

'தேனேறும் மலர்க்கொன்றை' (ஆரூர் - தாண். 2)

'இலைவளர்த்த மலர்க்கொன்றை' (ஆரூர் - தாண். 9)

'பொற்றாது மலர்க் கொன்றை' (ஆரூர் - தாண். 10)

'கொங்கலரும் நறுங்கொன்றை' (போற்றி. தாண். 2)

'வம்புலவு கொன்றைச் சடையாய்' (போற்றி. தாண். 2)

'வண்டுலாம் கொன்றை மாலை' (பெருவேளூர் - நே. 1)

'அரும்பமரும் மலர்க் கொன்றை' (தலையாலங்காடு - தா. 8)

'மட்டிலங்கு கொன்றையந்தார்' (தா. 10)

'கொன்றை கண்டேன்' (கன்றாப்பூர் - தா. 1)

'சீறுமதி அரவு கொன்றை' (மறைக். நே. 8)

கொன்றையணி செஞ்சடையினான் சூடும் பிற மலர்கள் பற்றியும் அப்பரடிகள் அருளிச் செய்கிறார்.

'திருவமர் தாமரை சீர்வளர் செங்கழுநீர் கொள்நெய்தல்
குருவமர் கோங்கம் குராமகிழ் சண்பகம் கொன்றை வன்னி
பருவமலர்.... (நல்லூர் - விருத்தம் - 10)

எனும் பாடல், நல்லூரில் இறைவழிபாட்டுக்காக வளர்க்கப்பெற்ற பல மலர்களைப் பட்டியல் இடுவதுபோல் உள்ளது.

'மருவு நாள் மல்லிகை சண்பகம்' (பாலைத்துறை - 7)

'முறிதரு வன்னி..... மூழ்கவைத்து' (இடைமருது - நேரி. 1)

'கொன்றை மாலையும் கூவிள மத்தமும்'
(இடைமருது - நேரி. 3)

'வண்டணைந்தன வன்னியும்' (இடைமருது - நேரி. 5)

'கூவிள மாலை திருமுடிமேல்' (கடவூர் - வி. 10)

'புண்டரிகப் புதுமலரவர்'

'தாட்பாவு கமலமலர் தயங்கு வானை' (கீழ்வேளூர் - தா. 4)

பல மலர்களைக் கொண்டு, பல வகைப்பட்ட மாலைகளை - மாலை, இண்டை, கண்ணி என்ற - பல மாலைகளை, அடியவர் சூட்டிய அருமையையும் அப்பரடிகள் குறிப்பர்.

'துணை மாலை சூட்ட....' (4 ஆவடு. தாண். 10)

'கொய்யாடு கூவிளம் கொன்றை மாலை' (புகலூர் - தா. 8)

'இண்டை செஞ்சடை வைத்த' (ஆரூர் - கு. 9)

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்கு
இண்டை மாலை புனைந்தும் (ஆரூர் - கு. 4)

'தேனேறு மலர்க் கொன்றைக் கண்ணியான்'
(ஆரூர் - தாண். 2)

'கொங்கவரும் நறுங்கொன்றைத் தாராய்' (போற்றித்தாண். 2)

'...... மாலையும் கண்ணியும் ஆவன' (ஆரூர் அரநெறி - 8)

இவ்வாறு பல்வகை மலர்களாலும், மலர்கொண்டு கட்டிய மாலைகள் கொண்டும் வழிபாடாற்றும் திறம் பற்றிப் பேசிய அப்பரடிகள் எண்தோள், எண்உரு என்பது போல எண்வகை மலர்கள் (அஷ்ட புஷ்பங்கள்) என்று தொகுப்பாகவும் கூறுகிறார்.

'அட்டமா மலர்கள் கொண்டே' (சோற்றுத்துறை - நேரி. 2)

'அட்டமா மலர்சூடி....' (வீழிமிழலை - கு. 4)

'நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்கள் எட்டும்'

(போற்றித்தாண் . 9)

'அட்ட மாமலர் சூடி....' (மறைக்காடு - கு. 4)

அட்டபுஷ்பம், அட்டமலர் என்றெல்லாம் இலக்கிய வழக்குச் சொல் உண்டு. அதற்கு அகராதி - புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரை என்ற எட்டு மலர்களைக் குறிக்கிறது.

அப்பரடிகளின் அருந்தமிழில் அட்டமலர் என்ற தொகைச்சொல் இருந்தாலும், பலவகை மலர்கள் குறிக்கப்பட்டாலும் அத்தொகைச் சொல்லின் விரியை பதிகம் முழுவதும் ஆய்வு செய்யும்போது முழுமையும் காண முடியவில்லை.

வடநூல் வழக்கில் அட்ட புஷ்பம் என்பது வேறு விதமாகச் சொல்லப்படுகிறது. 1. புஷ்பாஷ்ட புஷ்பம், 2. மந்த்ராஷ்ட புஷ்பம், 3. பாவாஷ்ட புஷ்பம் - என மூன்றாகப் பேசப்படுகிறது.

எருக்கு, சண்பகம், கொன்றை, நந்தியாவர்த்தம், மல்லிகை, பாதிரி, அரளி, தும்பை எனும் எட்டும் புஷ்பாஷ்ட புஷ்பம் எனப்படும்.

ஆஸனம், மூர்த்தி, மூலமந்திரம் மற்றும் நேத்ர மந்த்ரம் நீங்கலாக மற்ற ஐந்து அங்க மந்திரங்கள் - இருதயம், சிரசு, சிகை, கவசம், அஸ்தம்.

இந்த மந்திரங்களைச் சொல்லி பூசிப்பது மந்த்ராஷ்ட புஷ்பம்.

பாவம் - எட்டு; கொல்லாமை, புலன் அடக்கம், பொறுமை, அன்பு, உண்மையறிவு, வாய்மை, தவம், பொறை என்பன.

'புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு'

'போதும் பெறாவிடில் பச்சிலை உண்டு'

'அரும்பிட்டுப் பச்சிலையிட்டு ஆட்செய்யும்'

'ஒண்மலர் சொல்மலர்க்கு ஒவ்வாது போலும்'

எனும் சான்றோர்தம் வாக்குகளை எண்ணி, மலர் வழிபாடு இயற்றல் மன்பதைகளுக்கு நல்ல நெறியாகும்.

# 2. நாவுக்கரசரின் கற்பனை நயங்கள்

சா. அபிராமி, புதுவை.

நாவுக்கரசரின் பாடல்கள் எளிமை, இனிமை, திண்மை, கழிவிரக்கம், குழைவு போன்ற பல்வேறு பண்புகளைப் பெற்றவை.

''பத்தனாய்ப் பாட மாட்டேன்.... - எளிமை
குனித்த புருவமும் கொவ்வைச்... - இனிமை
யாமார்க்கும் குடியல்லோம்... - திண்மை
கங்கை ஆடிலென்? காவிரி ஆடிலென்?... - கழிவிரக்கம்
ஆட எடுத்திட்ட பாதமன்றோ
நம்மை ஆட்கொண்டதே - குழைவு''

இப்படிப் பல்வேறு பண்புகளைத் தன்னகத்தே கொண்டிருந் தாலும் அப்பர் சுவாமிகள் தம் பாடல்களில் எளிய உவமைகள் மூலம் உயர்ந்த கருத்துக்களைச் சொல்லிச் செல்வதைக் காண முடிகிறது. நாவுக்கரசரின் எளிய, இனிய உவமைகளையும் அவ்வுவமை வழி, அவர் உணர்த்தும் கருத்துக்களையும் கற்பனை நயங்களையும் சிந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஐவர் கள்வர்**

ஐம்புலன்களால் தான் அடையும் அவலத்தை அப்பர் பெருமான் பல பாடல்களில் சுட்டுகின்றார்.

''இவ்வுயிர் இந்த உடலாகிய வீட்டில் ஒண்டிக் குடித்தனம் செய்வதால் இவ்வுடம்பில் ஆதிக்கம் செலுத்தும் உடைமையாளரைப் போல உள்ள ஐம்பொறிகள், தம் விருப்பத்திற்கு வேண்டியவற்றைக் குறிப்பிட்டுக் கண், செவி, மூக்கு, வாய் என்ற தமக்கு, அவற்றை வழங்க வேண்டும் என்று கடுமையாகப் பேசி என்னை வழி நடத்துகின்றன. இதனால் வருந்துவனாகிய நான் மூலமாயுள்ள உன்னை அறியும் அறிவு இன்றிக் கூற்றுவனுடைய வாயில் அகப்பட்டுள்ளேனே'' என்று ஐம்பொறிகளின் ஆதிக்கத்தைக் கூறுகின்றார் அப்பர் பெருமான்.

''சாற்றுவ ரைவர் வந்து சந்தித்த குடிமை வேண்டிக்
காற்றுவர் கனலப் பேசிக் கண்செவி மூக்கு வாயுள்

ஆற்றுவ ரலந்து போனே னாதியை யறிவொன் றின்றிக்
கூற்றுவர் வர்யிற் பட்டேன் கோவல்வீ ரட்டனீரே'' (4-69-4)

'துன்னிய ஐம்புலவேடர் சுழலிற்பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந் தொல்லுயிர்'

என்ற சித்தியாரின் வரிகளுடன் ஒத்துப்போவதைக் காணலாம்.

நமது அப்பர் பெருமான் சைன மதத்திற் சேர்ந்தொழுகி மீண்டு வந்தவராதலின், அச்சைனர் குறித்த (நாலடியார்-331) ஒரு உவமையைத் தாம் எடுத்துக் கையாள்கின்றார்.

அடுப்பில் உலையை ஏற்றி வைத்த நீரில் போடப்பட்ட ஆமை, முதலில் மிகவும் இன்புற்று நீந்தும். நீரில் சூடு ஏற, ஏற அதற்கு அழிவு நெருங்கும். இதுபோலவே, ஐம்புலன்வழி ஒழுகும் மக்களும் அதனால் விளையும் பெருந்துன்பங்களை அறிய மாட்டார்கள்.

ஐம்பொறிகளும் ஆட்டுமாறு ஆடியும், ஓட்டுமாறு ஓடியும், காட்டுமாறு கண்டும், ஊட்டுமாறு உண்டும், ஓய்வெடுத்தும் அப்புலன்களிடத்தில் ஓர் இன்பம் உண்டுபோலத் தோன்றும். சூட்டில் வெந்து உயிர் நீங்க விருக்கும் அவலத்தைப் பற்றிச் சிந்திக்காத ஆமை போல உள்ளத் தெளிவு இல்லாதவனாய் வாழ்க்கையில் நின்று தடுமாறுகின்றேன் என்று அழகிய உவமையொன்றைச் சொல்கின்றார் அப்பர் சுவாமிகள்.

வளைத்துநின் றைவர் கள்வர்
வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித்
தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடுகின்ற
வாமைபோற் றெளிவி லாதேன்
னென்செய்வான் றோன்றி னேனே. (4-79-6)

வேடர்களும் திருடர்களும் போன்ற ஐம்பொறிகளும் என் உள்ளத்தில் புகுந்து நின்று மகிழ்வோடு துள்ளிக் கொண்டு அடியேன் தூய வழியில் செயல்பட ஒட்டாமல் என்னைக் கொள்ளையடிக்கின்றன என்ற சுவாமிகளின் வேதனையைக் கீழ்க்கண்ட பாடலில் காணமுடிகிறது.

''புள்ளுவ ரைவர் கள்வர் புனத்திடைப் புகுந்துநின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்''

வேடர்களும் திருடர்களும் ஆகிய அவர்கள் நம்மைச் சாரா திருக்குமாறு மறைந்து நிற்க அவன் திருவடி நீழல் உண்டு. நாம் காணாமல் மறைந்து நின்று நம்மை அவர் அம்பால் எய்யுமாறு போல, நாமும் முக்கணான் பாத நீழலுள்ளிடை மறைந்து நின்று அவர்களை (வேடர்களும் திருடர்களும் போன்ற ஐம்பொறிகளை), சிவஞானத்தால் எய்து வெல்லலாம் என்ற வழிமுறையையும் அடுத்த வரிகளில் காணலாம்.

"முள்ளுடை யவர்க டம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினா லெய்யலாமே"

(4-77-5)

ஏற்றம் இறைக்கும் ஒரு காட்சியைக் காண்கின்றார் சுவாமிகள். இந்த உடம்பே நடப்பட்டிருக்கும் கால்; துயரமே ஏற்ற மரம்; துன்பமே ஏற்றத்தோடு கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் கோல்; உள்ளமே தாழி; இவற்றைக் கொண்டு பயிர்களுக்கு நீர்ப்பாய்ச்சாமல், பாழான வீண் தரைக்கே நீர் பாய்கின்றது. இந்தப் பயனில் செயல் ஐவரால் விளைகின்றது.

உயிர்நிலை யுடம்பே காலா
வுள்ளமே தாழி யாகத்
துயரமே யேற்ற மாகத்
துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழிய விட்டுப்
பாழ்க்குநீ ரிறைத்து மிக்க
அயர்வினா லைவர்க் காற்றே
னாரூர்மூ லட்டனீரே. (4-52-7)

உடம்பின் பயன், தன்னுள் ஒளிரும் உத்தமனைக் கண்டுற்று, மீண்டும் தன்னொடு சாராது, உயிர் வீடு பெறுதலாகும். அது நிகழாமையே "பயிர்தனைச் சுழிய விடல்" என்று ஏற்றம் இறைக்கும் காட்சியைக் கண்டு சுவாமிகள் மனம் வேதனைப்படுகின்றார்.

"ஐம்பொறிகளும் கூடிவந்து கொடிய தொழில்கள் செய்வதனையே தம் பண்பாகக் கொண்டு என்னைத் தம் விருப்பப்படி செயற்படுத்த, அவற்றின் தொல்லையைப் பொறுக்க இயலாதவனாய் இருக்கின்றேன்" என்று சுவாமிகள் மற்றொரு பாடலில் கவலை கொள்கின்றார்.

"கூட்டமா யைவர்வந்து கொடுந்தொழிற் குணத்தராகி
ஆட்டுவார்க் காற்ற கில்லேன்...." (4-67-4)

அடுத்த பாட்டிலும் அப்பரடிகளின் ஆற்றாமையைக் காண முடிகிறது. "நிலையில்லாத, பொய்யாக அமைந்த அழகற்ற புழுக்கள் மிகக் கலந்த புலால் நாற்றத்தையுடைய இந்த உடலிலே இணைந்து இருக்கின்ற ஐம்பொறிகளும் தொண்ணூற்றாறு தத்துவங்களும் (தத்துவம் முப்பத்தாறு, தாத்துவிகம் அறுபது) அடியேன் சோர்வு எய்துமாறு செய்யும் கொடுஞ் செயல்களைத் தாங்க இயலாமல் துன்புற்றிருக்கின்றேன்".

"பொக்கமாய் நின்ற பொல்லாப் புழுமிடை முடைகொ ளாக்கை
தொக்குநின் றைவர் தொண்ணூற் றறுவருந் துயக்க
மெய்த மிக்குநின் றிவர்கள்
செய்யும் வேதனைக் கலந்து போனேன்". (4-67-5)

புழுக்களை உள்ளே அடக்கி வைத்த வண்டியை வெளியே ஒரு தோலினால் மறைத்து, திரவம் ஒழுகுதல் நீங்காத ஒன்பது வழிகள், ஒன்றற்கு ஒன்று ஒவ்வாத வகையில் அதனுள் அமைய, அவ்வண்டிக்குள் குற்ற முடைய ஐம்பொறிகளும் பல துயரங்களை விளைவிக்க, அவற்றால் கலக்கமுற்று வாழ இயலாதவனாய் உள்ளேன் என்ற அப்பரடிகளின் வேதனையைக் கீழ்க்கண்ட பாடலில் உணரலாம்.

புழுப்பெய்த பண்டி தன்னைப்
புறமொரு தோலான் மூடி
ஒழுக்கறா வொன்ப துவா
யொற்றுமை யொன்று மில்லை
சழக்குடை இதனு ளைவர்
சங்கடம் பலவுஞ் செய்ய
அழிப்பனாய் வாழ மாட்டே
னாரூர்மூ லட்டனீரே. (4-52-2)

"ஐம்புலன்களும் இப்பதியான உடலுக்கு நாதராயிருந்து, உயிரை அடிமைப்படுத்தி இருக்கின்றன. அது மட்டுமின்றி, பொருளீட்டும் வணிகர் போல வினையினையீட்டுகின்றனர். பொய்யையே வளர்க்கின்றனர். ஐவர் மட்டுமின்றித் தொண்ணூற்றறுவரும் (தத்துவம் முப்பத்தாறு+தாத்துவிகம் அறுபது) மயக்கம் செய்து வளர்க்கும் இந்த உடலினின்று பிரிந்து போகக் கூடிய நாள் இன்னதென்று அறிய மாட்டேனே என்று கொண்டீசுரத்துளானிடம் சுவாமிகள் முறையிடுகின்றார்.

"......... சழக்குடைப் பதிக்கு நாதர் வாணிக ரைவர்
தொண்ணூற் றறுவரு
மயக்கஞ் செய்து பேணிய பதியி னின்று
பெயரும்போ தறிய மாட்டேன் (4-67-7)

'ஒரு குட்டை காணப்படுகிறது. அது ஒரு முழ நீளமும் அரை முழ அகலமும் கொண்டது. அதில் ஒன்பது துளைகள் இருக்கின்றன. அக்குட்டையில் ஐந்து முதலைகள் வாழ்கின்றன. குட்டைக்குப் பெரிய குகை போலும் நீர்வரும் வாய் வாசல். இந்த வாசலைப் பற்றிக் கிடந்து பிதற்றுகின்றேன் என்று நமது உடலை ஒரு குட்டையாக உருவகித்து, ஐம்புலன்களை ஐந்து முதலைகளாகப் பாடியிருக்கும் பெருமானின் திறன் வியப்பிற்குரியதே.

"ஒரு முழமுள்ள குட்ட மொன்பது துளையுடைத்தாய
அரை முழ மதன கல மதனில் வாழ் முதலை யைந்து"
(4-44-2)

**காம்பிலா மூழை**

நாவுக்கரசர் பெருமான் சாதாரணமாக நாம் காணும் காட்சிகளைக் கூட தமது திருப்பாட்டில் உவமையாகக் கூறக் காணலாம்.

காம்பு இல்லாத அகப்பையினால் எதையும் முகக்க இயலாது. அதுபோல இறைவன் திருவருள் இல்லாததால் தாம் நினைத்த பேறு களைப் பெற இயலவில்லையே என்று ஒற்றியூர் இறைவனிடம் முறை யிடுகின்றார். இது மட்டுமின்றி பாம்பின் வாயில் அகப்பட்ட தேரை என்னென்னவெல்லாமோ நினைப்பது போல, பல எண்ணங்களையும் எண்ணி நெஞ்சம் புண்ணாகின்றேனே என்றும் முறையிடக் காணலாம்.

''காம்பிலா மூழை போலக் கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின் வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின்றேனே''
(4-46-1)

### மனமெனும் தோணி

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது
மனனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே.
(4-46-2)

''மனமாகிய தோணியைப் பற்றி மதியாகிய கோலையூன்றி, சினமாகிய சரக்கை ஏற்றி, பாசமாகிய கடற்பரப்பில் செல்லும்போது, காமமாகிய பாறை தாக்கிக் கவிழ்ந்து கீழ்மேலாகும்போது உன்னையறிய முடியாது வருந்துவேன், அப்பொழுது என்னை மறந்து உன்னை உன்னும் உணர்வை எனக்கு நல்க வேண்டும்'' என்றும் அப்பர் பெருமான் ஒற்றியூர் தியாகேசப் பெருமானிடம் விண்ணப்பிக்கின்றார்.

### உறுகயிறு ஊசல்

நெஞ்சம் ஒன்று விட்டு ஒன்று பற்றும். பற்றியதை விட்டு வரும் சென்று பற்றுதலும் பற்றியதை விட்டு மீண்டும் வருதலும் நெஞ்சிற்கியல்பு. ஒன்றுவிட்டு ஒன்று பற்றி வந்துவந்துலவும் நெஞ்சத்திற்குக் கயிறூசல் ஒப்பு. நெஞ்சம் ஆகிய ஊசல் ஆடிய அடியேன், அவ்வூசல் அற்று நின்பாதமாகிய நிலத்தை அடைந்தேன் என்று அப்பர் பெருமான் தம் நிலையை அழகான உவமை மூலம் விளக்குகின்றார்.

''ஊசல் கயிறு அற்றால் தாய் தரையே ஆம்'' என்ற சிவஞானபோதம் இங்கு சிந்தித்தற்குரியது. ஊசலைக் கட்டிய கயிறு அற்றால் ஊசல் கீழே விழும். விழுந்த ஊசலுக்குத் தரை நிலைக்களம் ஆகும். கயிறு போல்வது பாசம். கயிற்றாற் கட்டப்பட்ட ஊசல் போல்வது பாசபந்தமுடைய பசு. கயிறற்ற ஊசல் போல்வது பாசம் அற்ற ஆன்மா. கயிறற்ற ஊசலுக்கு நிலைக்களமான தரை போல்வது பாசம் அற்ற ஆன்மாவிற்கு நிலைக்களமான திருவடி.

உறுகயி றூசல் போல
வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல
வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப்
பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானே
ணதிகைவீ ரட்டனீரே. (4-26-6)

**திருவடி காணல்**

உடம்பே வீடு; உள்ளமே அகல்; உணர்வே நெய்; உயிரே திரி; ஞானமே தீ.

மடம்படு உணர்வு பசு ஞானம். மடம் படா உணர்வு சிவஞானம். உடலான வீட்டில் சிவமான பொருள் இருப்பது மடமான இருளால் தெரிந்திடாது. விளக்கேற்றிப் பார்த்துணர்தல் வேண்டும்; உள்ளமான அகலுள் பசு ஞானமான நெய் சேர்த்து, உயிரான திரியிட்டுச் சிவஞானமான தீயை ஏற்றி, அச்சிவஞானப் பிரகாசத்திலிருந்து நோக்கினால் சிவமான பொருளைக் காணலாம்.

உடம்பெனு மனைய கத்து வுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யங்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள லிருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே. (4-75-4)

'சிவகதி' என்ற பயிர் விளைய, என்னென்ன செய்ய வேண்டும் என்று அப்பரடிகள் கூறுவதைக் காண்போம்.

1. மெய்ம்மையாம் உழவைச் செய்தல் : சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மெய்ந்நெறி நான்கும் சிவகதியாகும்.

 "சரியை, கிரியா, யோகஞ் செலுத்திய பின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" - சித்தியார்

 "ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்லாகும்" - பெரியபுராணம்

2. விருப்பு எனும் வித்து : இச்சை மீதூர்தல் என்னும் சிவ பக்தி, அயரா அன்பின் அரன்கழல் செலும் இயல்பே, விருப்பெனும் வித்தை விதைத்தலாகும்.

3. பொய்ம்மையாம் களையை வாங்கல் : பொய்ம்மை - அசத்தியம், அதனை வாங்குதலாவது சத்தியத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதலாகும். வாய்மை, உண்மை, மெய்ம்மை - மூன்றுமே சத்தியமாகும். அவற்றுள் ஒன்று இன்றேனும் அசத்தியமாகும்.

4. **பொறையெனும் நீரைப் பாய்த்தல் :** பொறை - பொறுமை; பொறுமை எனும் நீரைப் பாய்ச்சி, பொய்யான களைகளைப் பிடுங்கி, விருப்ப மெனும் வித்தை வளரச் செய்ய வேண்டும்.
5. **தம்மையும் நோக்கிக் காண்டல் :** நோக்குதல் - ஆன்ம தரிசனம்; காண்டல் - சிவதரிசனம். சிவ ரூபத்தால் ஆன்ம தரிசனம்; சிவ தரிசனத்தால் ஆன்ம சுத்தி.
6. **தகவெனும் வேலியிடல் :** திருவைந்தெழுத்து, திருவடையாள மாலை (உருத்திராக்கம்), திருநீறு தரித்த சிவவேடங்கள் எல்லாம் சிவகதிக்குரிய 'தகவு' என்னும் வேலியாகும்.
7. **செம்மையுள் நிற்றல் :** ''திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட, ''சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மை'' - போன்ற திருமுறை வரிகளால் ஓங்குணர்வின் உள்ளடங்கி, சிந்தையில் சிவனையே நினைத்தலாகும்.

மேற்கண்ட ஞான உழவைச் செய்தால் முத்தியாகிய செம்மையாய சிவகதி கிட்டும்.

**மெய்ம்மையா முழவைச் செய்து**
**விருப்பெனும் வித்தை வித்திப்**
**பொய்ம்மையாங் களையை வாங்கிப்**
**பொறையெனு நீரைப் பாய்ச்சித்**
**தம்மையு நோக்கிக் கண்டு**
**தகவெனும் வேலி யிட்டுச்**
**செம்மையு ணிற்ப ராகிற்**
**சிவகதி விளையு மன்றே.** (4-76-2)

**உடம்பே கோயில்**

உடம்பை வீடாகக் கண்டு பாடிய அப்பரடிகள் மற்றொரு பாட்டில் உடம்பைக் கோயிலாகக் கண்டு பாடியிருக்கிறார்.

''உடம்பையே கோயிலாகவும், உலகியலை நீக்கிய மனம் அடிமை யாகவும், தூய்மை உடைய மனமே பரம்பொருள் தங்கும் கருவறை யாகவும், எம்பெருமான் அருட்சத்தியான மனோன்மணியே அவன் இலிங்க உருவமாகவும் அமைய, அடியேனுடைய அன்பே நெய்யும் பாலுமாக, அவ்லிங்க மூர்த்தியை மனம் நிறைவு பெற அபிடேகித்துப் பூசிக்கும் அப்பெருமானுக்கு எங்கள் வணக்கங்களையே நிவேதனப் பொருள்களாகப் படைத்தோம்'' என்று உடம்பைக் கோயிலாகக் கொண்டு நடத்தப்படும் பூசை முறையைச் சுவாமிகள் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

**காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக**

**நேயமே செய்யும் பாலா நிறைய நீரமைய வாட்டிப்**
**பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.** (4-76-4)

இறைவன் எங்கிருக்கிறான் என்பதையும் அவனை எவ்வாறு காணலாம் என்பதையும் மற்றொரு பாட்டில் அழகிய உவமை மூலம் கூறுகின்றார்.

**''விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே''** (5-90-10)

விறகின்கண் மறைந்திருக்கும் நெருப்பைப் போலவும், நல்ல பாலின் கண் மறைந்திருக்கும் நெய் போலவும், இறைவன் மறைந்துள்ளான். அன்பாகிய கயிற்றினால் நன்றாக இழுத்துக் கடைய நம்முன் தோன்றி அருளுவான்.

அப்பரடிகள் ஓரிரு சொற்றொடரிலேயேகூட அழகிய உவமைகள் மூலம் உயர்ந்த கருத்தைக் கூறக் காணலாம்.

பிணத்தைக் கண்ட காக்கை அதனை விடாது மொய்க்கும். அதுபோல உயிரை, அதன் வினைகள் விடாது தொடரும்.

**''மோத்தையைக் கண்ட காக்கை**
**போலவல் வினைகள் மொய்த்துன்**
**வார்த்தையைப் பேச வொட்டா**
**மயக்கநான் மயங்கு கின்றேன்''** (4-75-7)

தவறு செய்வதைத் தடுத்து நல்வழிப்படுத்துவார் ஒருவரும் இல்லாமையால் செஞ்சுடர் விளக்கத்தில் தானே கூவித் தானே அடங்கும் கோழியைப் போல உள்ளேன் என்று அடிகள் மிகவும் வேதனைப் படுகின்றார்.

**''விலக்குவா ரிலாமை யாலே**
**விளக்கத்திற் கோழி போன்றேன்''** (4-31-5)

ஊர்ப் பொது மன்றத்தில் நிற்கும் புன்னை மரமானது பலராலும் கல்லெறியப்பட்டும் ஏறி அலைக்கப்பட்டும் சதா வருந்துவதுபோல ஐம்பொறிகளால் சதா அலைக்கப்பட்டு, வருந்துவதன்றி ஒரு வகையிலும் உண்மையை உணரமாட்டேன் என்று அடிகள் வருந்துகின்றார்.

**''மன்றத்துப் புன்னை போல**
**மரம் படு துயர மெய்தி**
**ஒன்றினா லுணர மாட்டேன்''** (4-26-8)

புழுவை விடத் தாம் கடையவன் என்று தம்மைத் தாழ்த்திக் கூறி நம்மை இரங்க வைக்கின்றார் அப்பர் அடிகள். புழுவினுக்குரிய நான்கு குணங்களான முயலல், உண்டல், உறங்கல், இன்ப துன்ப நுகர்ச்சி ஆகியன தனக்கும் உண்டு. இவற்றின் பொருட்டு பிறரை வஞ்சித்தல், துன்புறுத்தல் புழுவிற்கில்லை. இந்தப் பொல்லாங்கு தமக்கு உண்டு என்னும் அடிகளாரின் பாடல் வரிகள் இதோ.

''புழுவுக் குங்குணம் நான்கெனக் கும்மதே
புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
புழுவி னுங் கடையேன்...'' (5-91-4)

சிவபெருமானின் பெருந்தன்மையைப் பாவிகளாகிய மக்கள் பார்த்தற்கு அரிது. இஃது எதைப் போலது? என்றால் கிணற்றாமை கடலாமையை நோக்கி, இக்கிணற்றோடொக்குமோ கடல்? என்று கேட்டல் போலதாகும்.

''கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல் போல்'' (5-100-5)

ஓடும் இயல்பினை உடைய நீரை ஒட்டைக் குடத்தில் நிறைத்து மூடி வைத்திட்டால் என்னவாகும்? எல்லாம் வீணாகும். அரனிடத்து அன்பு இல்லையாயின், கங்கை, காவிரி, குமரித் துறை போன்ற புண்ணியத் தீர்த்தங்களில் ஆடினால் என்ன பயன் விளையும்? ஏதுமில்லை, எல்லாம் வீண்தான்.

''கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென் (5-99-2)

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே...'' (5-99-9)

உள்ளமாகிய தகழியிலே உயிராகிய திரியை முறுக்கியிட்டு ஞானமாகிய தீபமேற்றிக் கொண்டிருந்து உணருமாற்றால் உணர வல்லவர் களின் கொடுமைகள் அனைத்தையும் போக்குவர் திருக்கடவூர்ப் பெருமானார்.

''உள்ளத்த திரியொன் றேற்றி
யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங்
கடவூர்வீ ரட்ட னாரே'' (4-31-1)

விறகினில் தீயாக உள்ள சிவபெருமான் வேறு எங்கெங்கெல்லாம் எப்படியுள்ளார் தெரியுமா? பண் அமைந்த பாடலாகவும் பழத்தின்

சுவையாகவும் கண்ணிற் பொருந்திய பார்வையாகவும் கருத்தில் அமைந்த காதல் நினைவாகவும் எண்ணுகின்றவருடைய எண்ணமாகவும் ஏழுலகங் களாகவும் விளங்குகின்றார்.

"பண்ணினார் பாடலாகிப் பழத்தினி லிரதமாகிக்
கண்ணினார் பார்வை யாகிக் கருத்தொடு கற்பமாகி
எண்ணினா ரெண்ண மாகி யேழுல கனைத்து மாகி"

(4-70-4)

அப்பர் சுவாமிகளின் இயற்கைக் காட்சி வருணனையில் வரலாற்றுச் செய்தியும் அமைந்திருக்கக் காணலாம்.

மணமிக்க கொன்றைமலர் பொன்னின் வனப்பைக் காட்டி, அருகே நின்ற மேட்டுநிலக் காந்தள் மலர்களின் கைகள் போன்ற விரிந்த இதழ் களின் மேல் மலர்ந்திருக்கின்றது. "பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற, புனக்காந்தள் கைகாட்ட, காணும் இந்தக் காட்சி எப்படியிருக்கின்றது தெரியுமா? நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி, நற்கனகக் கிழி தருமிக் கருளிய தன்மையைக் காட்டுகின்றது.

நீர் நிலையொன்றினைக் காவல் செய்து வருவோர் சிலர் உள்ளனர். அக்காவலைப் பொருட்படுத்தாமல், நீர்நிலைக் கரைக்கண் நின்றவர், அந்நீர்நிலையின் ஆழம் அறிய வினவ, "நீரே இறங்கிக் கண்டு கொள்வீராக" என்று காவலர் கூறிவிட, இறங்கு துறையிலேயே மூழ்கித் தவிக்கும் மக்களை நமக்குக் காட்டுகின்றார் அடிகள்.

தாம் சைவ சமயத்தை விட்டுச் சமண சமயம் புகுந்து இடர்ப் பட்டதைப் பிறிது மொழிதல் உவமையினால் அடிகள் விளக்குகின்றார். திலகவதியார் முதலியோருடைய அறிவுரைகளை எல்லாம் இகழ்ந்து பொருட்படுத்தாது, வேற்றுச் சமய நூல்களை ஆராய்ந்தறிந்து, சமண சமய உண்மைகளை ஆராய்ந்து கண்டுகொள் என்று சமண் சமயத்தார் கூற, சமண் சமயம் புகுந்து அதனை மேற்கொண்டு, மீளும் வகையின்றி இடர்ப்பட்டவர் அப்பரடிகள்.

இந்நிலையை விளக்கும் வகையில் கூறாமற் கூறித் தம் துயர நிலையைப் புலப்படுத்துகின்றார். ஆழப் பொருளை அகத்தேயுடைய அப்பாடற்பகுதி வருமாறு.

காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரைநின்றவர் கண்டுகொ ளென்று சொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன். (4-1-5)

சிவபெருமானை நெக்கு நெக்கு நினைப்பவர் எதற்கும் கவலைப் பட மாட்டார். எதெதெற்கு? வானமும் மண்ணும் அசைந்து ஒடுங்கினாலும், பெரிய மலைகள் இடம் பெயர்ந்து மேல் கீழாகத் தடுமாறினாலும் கடல்களிலுள்ள நீர்வாழ் உயிரினங்கள் அழிந்தாலும் சூரிய சந்திரர்கள் இடம் பெயர்ந்து விழுந்தாலும் அவற்றைப் பற்றிய கவலை ஏதும் ஏற்படாது என்று அப்பர் சுவாமிகள் உறுதியளிக்கின்றார்கள்.

**இஃதே அந்த உறுதிமொழி**

"வானந் துளங்கிலென் மண்கம்ப
 மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு
 மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர்
 வீழிலென் வேலை நஞ்சுண்
டுனமொன் றில்லா வொருவனுக்
 காட்பட்ட வுத்தமர்க்கே" (4-112-8)

இவ்வாறு அப்பர் சுவாமிகளின் கற்பனைகளில், உவமைகளில் எளிமை, இனிமை, திண்மை, கழிவிரக்கம், குழைவு, வேதனை, ஆற்றாமை போன்ற பல்வேறு சுவைகளையும் சுவைத்துத் தித்திக்கும் சிவபெருமானைச் சுவைக்கும் தகுதியும் பெற்றுய்யலாம்.

# 3. நாவுக்கரசரும் அடியார்களும்

சி. அயோத்தி, பழநி.

ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் திறமுடையார்களாகவும் பொறிபுலன்களின் போக்கறுத்து உள்ளத்தை நெறிப்படுத்தும் மேன்மையுடையார்களாகவும் நறுமலர் நீருங் கொண்டு நாடொறும் சிவநாமம் வாழ்த்தி இறைவன் திருவடி சேரும் எண்ணமுடையார்களாகவும் வாழ்ந்து சிறந்த பெருமக்களை "அடியார்கள்" என்று சைவ உலகம் ஏற்றிப் போற்றும். சொல்லுதற்குரிய அவ்வடியார்களின் உள்ளத்தில் சிவபெருமான் வீற்றிருக்கும் தன்மையினை வெளியுலகுக்கு உணர்த்தும் பாங்கில் சுந்தரமூர்த்தி நாயனார் "திருத்தொண்டத் தொகை" என்று பெயரிட்டு முதன்முதலில் அறிமுகம் செய்து வைத்துள்ளார். தனியடியார்களாகவும் தொகையடியார் களாகவும் இருவேறு நிலையில் இலக்கியத் தரவுகளாகப் பதிவு செய்யப் பட்டுள்ள அடியார்களின் சிவத்தொண்டினையும் அதனால் விளைந்த சிவனருட் செயலினையும் நம்பியாண்டார் நம்பியின் 'திருத்தொண்டர் திருவந்தாதி'யிலும் சேக்கிழாரின் 'பெரியபுராணத்திலும்' விரிவாகக் காண்கின்றோம்.

இவை ஒருபுறமிருக்க, இறைவனின் பேரருட் செயல்களைத் தோத்திரப் பாடல்களாகப் பாடும் திறம் பெற்ற அடியார்களுள் 'அப்பர்' என்றும், 'நாவுக்கரசர்' என்றும் அன்போடு அழைக்கப்பட்ட திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களில் வெளிப்படையாகவும் இலைமறை காயாகவும் நுவலப்பட்டுள்ள இறையடியார்களின் வாழ்வியல் குறித்த செய்தி களைச் சிந்திக்கும் முயற்சியாக இக்கட்டுரை அமைகின்றது.

**சண்டேசுரர்**

அறுபத்து மூன்று நாயன்மாருள் காலத்தால் முற்பட்ட அடியவர் களில் இவர் சிறப்பிடம் பெறுகின்றார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் விசாரசருமர். இளமையிலேயே சிவபக்தி மேலிடப் பெற்ற இவர் மணலால் சிவலிங்கம் அமைத்துப் பசும்பால் கொண்டு நீராட்டி வந்தார். பலநாள் இவ்வாறு செய்த செயலைக் கேள்விப்பட்டிருந்த இவரது தந்தை எச்சதத்தன் ஒருநாள் நேருக்குநேர் கண்டு மகனை அடித்ததுடன் நீராட்டுவதற்கு வைத்திருந்த பாலினையும் காலால் இடறிவிட்டார். அதுகண்டு பொறுக்காத இவர் தந்தையென்றும் பாராமல் இடறிவிட்ட

காலை மழுவால் வெட்டியெறிந்தார். மிக்க இளவயது உடையவரா யிருந்தாலும் சிவபூசையில் மனம் ஒன்றிய விசாரசருமருக்கு, இறைவன் அம்மையப்பர் கோலத்தில் காட்சி தந்து அடுத்த தாதை இனி உனக்கு நாம் என்று உரைத்து இவரைத் தொண்டர் தமக்கு அதிபனாக்கி, 'நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதந்தந்தோம்' எனச் சொல்லித் தம் சடைமீதிருந்த கொன்றை மாலையை எடுத்துச் சூட்டினார். அன்று முதல் இவ் அடியார் 'சண்டேசுரர்' என்றே அழைக்கப்பட்டார். இவரது வாழ்வியல் குறித்த வரலாற்றுச் செய்தியினை நாவுக்கரசர் பின்வருமாறு முழுமையாகவே பாடியுள்ளார்.

"தழைத்ததோர் ஆத்தி யின்கீழ் தாபரம் மணலாற் கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார் குறுக்கைவீ ரட்டனாரே"
(4:49:3)

எனவும்,

"ஆமலி பாலு நெய்யும் ஆட்டியர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பெறாத தன்தாதை தாளைக்
கூர்மழு ஒன்றால் ஓச்சக் குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக்கு ஈந்தார் சாய்க்காடு மேவி னாரே" (4:65:6)

எனவும் மிக விரிவாகக் கூறியதோடு மட்டும் அமையாமல், "ஆங்கணைந்த சண்டிக்கும் அருளியன்று தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்" (6:18:10) எனவும் சுருக்கமாகக் குறிப்பிட்டுச் செல்லும் பான்மையினையும் அறிகின்றோம்.

**கண்ணப்பர்**

வேடர் குலத்தில் பிறந்த இவரின் இயற்பெயர் திண்ணன். இளம் பருவத்திலேயே திருக்காளத்தி மலையில் கோயில் கொண்டுள்ள காளத்தியப்பர் மீது கொண்ட முற்றிய பக்தியால் முகலியாற்று நீரினை வாயினிலும் சுவைத்துப் பார்க்கப்பட்ட இறைச்சியினைக் கையினிலும் வழிபாட்டு மலரினைக் காதினிலும் கொண்டு சென்று வழிபடக்கூடிய பழக்கத்தினைக் கொண்டிருந்தார். ஆகம முறைப்படி வழிபடாமல் அநுசித முறைப்படி வழிபட்ட நிகழ்வினை மாற்ற முயன்ற சிவகோசரியாரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட இறைவன், திண்ணனின் இறையன்பினை உலகுக்கு உணர்த்த விரும்பினார். அதன்படித் தம் கண்ணில் திடீரென்று குருதி வடியச் செய்தார். அது கண்டு பதறிய திண்ணன் தன் கண்ணைப் பெயர்த்தெடுத்து அப்பி, 'கண்ணப்பர்' என்று இறைவனால் அழைக்கப் பெற்று வீடுபேறும் பெற்றார். பக்தி நிலையின் பேரெல்லைக்கு அடையாள மாகத் திகழ்ந்த கண்ணப்பரின் வாழ்வியலை,

"காப்பதோர் வில்லும் அம்பும் கையதோர் இறைச்சிப் பாரம்
தோற்பெரும் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்டனாரே"

(4:49:7)

எனவும்,

"குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர ஒருகணை இடந்துஅங்கு அப்பத்
தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவினாரே"

(4:65:8)

எனவும் விளக்கமாகக் கூறிச் செல்லும் நாவுக்கரசர், **"கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு கந்தார்"** (6:12:6) என்றும், **"கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்"** (6:39:9) என்றும் சிறுசிறு குறிப்பு களாகவும் பதிவு செய்துள்ளார்.

**கோச்செங்கட்சோழர்**

திருவானைக்காவில் வெண்ணாமல் மரத்தடியில் தானே முளைத்து எழுந்த சிவலிங்கத்தின்மேல் சருகு விழாதபடி சிலந்தி ஒன்று தன் வாய் நூலினால் வலை கட்டிக் காத்து வழிபட்டு வந்தது. சிலந்தியினைப் போலவே யானை ஒன்றும் தன் துதிக்கையினால் நீரினை முகந்து கொண்டு வந்து சிவலிங்கத்தை நீராட்டிச் சிவபக்தி மேலிட வழிபாடு செய்து வந்தது. இதன் காரணமாகவே இத்தலம் 'ஆனைக்கா' என்ற பெயரைப் பெற்றது. சிவலிங்கத்தின் மேலிருந்த சிலந்தி வலையினை 'அநுசிதம்' என்று கருதிய யானை அவ்வலையினை அழிக்க முற்பட்டபோது அது கண்ட சிலந்தி, யானையின் துதிக்கையில் நுழைந்து வருத்தத்தைக் கொடுத்தது. தாங்க மாட்டாத யானை, தன் துதிக்கையினைத் தரையில் அறைந்ததால் சிலந்தியோடு சேர்ந்து யானையும் இறந்துபட்டது. தாம் செய்த சிவபுண்ணியத்தின் காரணத்தால் யானை முக்தியடைந்து வீடுபேறு பெற்றது. ஆனால் சிலந்தி மறுபிறவியில் கோச்செங்கட்சோழனாகப் பிறப்பெடுத்து சிவபெருமானுக்குப் பல கோயில்களைக் கட்டுவித்து வீடுபேறு பெற்ற நிகழ்வினை,

"சிலந்தியும் ஆனைக் காவில் திருநீழல் பந்தர்செய்து
உலந்தவன் இறந்தபோதே கோச்செங்க ணானும்ஆகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே"

(4:49:4)

என விவரித்துள்ள நாவரசர், **"சிலந்திதனக் கருள் செய்த தேவ தேவைத்"** (6:20:5), **"சிலந்திக் கருள் முன்னஞ் செய்தான் கண்டாய்"** (6:23:3) எனவும் மிகச் சுருக்கமாகவும் உரைக்கின்றார். முற்பிறவியில் சிலந்தியாய்ப் பிறப்பெடுத்து உய்தி பெற்ற வரலாறு மட்டும் இக்குறிப்பு களில் வெளிப்படுகின்றது. அச்சிலந்தியே மறுபிறவியில் சோழனாகப் பிறப்பெடுத்த நிகழ்வு **"கோச்செங்கணானும்"** என்று முற்குறிப்பிட்ட முழுப்பாடலில் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அடியார்களின் வாழ்வியலை மீள நினைத்துப் பார்ப்பதற்கு இப்பாடற் குறிப்புகள் பெரிதும் உதவுகின்றன.

**நமிநந்தியடிகள்**

தண்ணீரால் திருவிளக்கு எரியச் செய்து அச்சிவ புண்ணியத்தால் வீடுபேறு அடைந்தவர் இவ்அடியார். திருவாரூரில் கோயில் கொண்டுள்ள அரவணிந்த அண்ணலாருக்குப் பங்குனி உத்திரத் திருநாளில் தண்ணீரால் விளக்கெரித்துச் சிவத்தொண்டு செய்தார். இவர் செய்த அற்புதம் கண்டு இகழ்ந்த சமணரை வியக்க வைத்ததோடு அல்லாமல் வேற்றூருக்குப் போகச் செய்தார். இவ்அடியாரின் திருவிளக்கிடுதல் தொண்டினைத் திருநாவுக்கரசர்,

> **"ஆராய்ந்து அடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கி**
> **பாரூர் பரிப்பந்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்**
> **நாரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி**
> **நீரால் திருவிளக்கு இட்டமை நீள்நாடு அறியுமன்றே"**
>
> (4:102:2)

எனப் போற்றியுள்ளார். இவர் விளக்கெரித்ததற்கு உரிய அகச்சான்று இப்பாடலில் மிகத் தெளிவாக உள்ளது. அத்துடன் இவரது இயற்பெயர் **'நம்பிநந்தி'**யாக இருந்திருக்கலாம் என்பதற்கு இப்பாடலில் தெளிவானதொரு குறிப்புள்ளது. தற்பொழுது அழைக்கப்படும் நமிநந்தியடிகள் என்பது திரிபுற்ற பெயராகும். **'தொண்டர்க்கு ஆணி'** என்று இவரை அப்பர் பெருமான் இப்பாடலில் பாராட்டுகின்றார்.

**அமர்நீதி நாயனார்**

சிவனடியார்களுக்குக் கோவணமும் திருவமுதும் வழங்கிச் சிவத்தொண்டாற்றியவர் இவர். அடியவர் வேடத்தில் வந்த இறைவனிடம் அடைக்கலப் பொருளாகப் பெறப்பட்ட கோவண உடையானது இறை யருளால் திடீரென்று மறைந்துவிட, அதனை மீண்டும் திரும்பி அளிக்க முடியாமல் அதற்கு ஈடாகத் தம் சொத்தையும், மகன், மனைவியையும் இறுதியில் தம்மையும் தராசுத் தட்டில் நிறுத்தித் தம் அடிமைத் திறத்தை நிலை நாட்டியவர். அதன் காரணமாக இறைவனருளைப் பெற்ற இவர்தம் சிவத்தொண்டினை,

"நாட்கொண்ட தாமரைப் பூத்தடம் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணம் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை உரைக்கும்அன் றோஇவ் அகலிடமே"
(4:97:7)

என்ற இப்பாடலின் வாயிலாக நாவுக்கரசர் முழுமையாக வெளிப்படுத்தியுள்ளார். இவ்அடியாரின் பெயர் இப்பாடலில் வெளிப்படையாகச் சொல்லப் படாவிட்டாலும் 'வாணிகன்' என்றிருப்பது அமர்நீதி நாயனாரையே குறிக்கும்.

**திருஞானசம்பந்தர்**

நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சமகாலத்தில் வாழ்ந்து நட்பாகப் பழகி வந்தவர்கள். நான்கு முறை இவ்விருவரும் சந்தித்த நிகழ்ச்சிகள் உண்டு. இச்செய்திகள் குறித்த வெளிப்படையான குறிப்புகளடங்கிய அகச் சான்றுகள் தெளிவாக இல்லை. திருமறைக்காட்டுக் கோயிலின் கதவுகளைத் திறக்கவும் மூடவும் செய்த அற்புதச் செயல்கள் குறித்து இருவருமே பாடியுள்ளனர். அப்பாடல்களில் இருவரும் ஒன்றாக அருகருகே இருந்துள்ள செய்தி குறிப்பிடப்படவில்லை. சமகாலத்தில் வாழ்ந்திருந்தும் நாவுக்கரசர், திருவாய்மூர்ப் பதிகத்தில் ஞானசம்பந்தரின் பெயரைச் சுட்டாமல் அற்புத நிகழ்வை மட்டுமே குறிப்பிட்டுள்ளார். திருமறைக்காட்டில் நீண்டகாலம் அடைக்கப்பட்டிருந்த கோயிற் கதவினைப் பத்துப் பாடல்கள் பாடித் திறந்த அப்பர் பெருமான், ஒரே பாட்டினால் அக்கதவினை அடைக்கப் பாடிய ஞானசம்பந்தரின் இறையருளையும் பாடலாற்றலையும் இப்பதிகத்துள் வியந்து பாடுகின்றார்.

"திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைக்கப் பாடி அடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யார்இவர் பித்தரே" (5:50:8)

திருநாவுக்கரசர் 'திருவாய்மூர்' என்ற தலத்திற்குச் சென்றுள்ள செய்தி யறிந்த ஞானசம்பந்தர் பின்தொடர்ந்து வந்து, நாவுக்கரசர் இப்பதிகப் பாடல்களைப் பாடியருளியபோது உடன் இருந்தார் என்ற குறிப்பினை, **"என்னினும் செந்தமிழ் உறைப்புப் பாடி அடைப்பித்தாருந் நின்றார்"** என்ற பாடலடியின் வாயிலாக உணர முடிகின்றது. இதனைப்போல் ஞானசம்பந்தருக்கு இறைவன் படிக்காசு அருளிய பாங்கினை,

"பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வட்டம் தவிர்ப்பர் அவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேளனா
ஓடிப் போந்திங்கு ஒளித்தவாறு என்கொலோ" (5:50:7)

என்று நாவுக்கரசர் பாடியுள்ளார். மேலும் ஞானசம்பந்தரின் தந்தையார் வேள்வி செய்தற்குத் தேவைப்பட்ட ஆயிரம் பொற்காசுகளையும் திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் இறைவனை வேண்டிப் பெற்றார் என்ற நிகழ்ச்சியினை நாவுக்கரசர் தாம் பாடிய திருவாவடுதுறைப் பதிகத்தின் முதல் பாடலிலேயே மிகத் தெளிவாகக் குறித்துள்ளார்.

**''காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க்கு அம்பொன்**
**ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே''** (4:56:1)

மேற்குறிப்பிட்ட இப்பாடற் குறிப்புகளிலிருந்து ஞானசம்பந்தரின் இயற்பெயரை நாவுக்கரசர் எவ்விடத்திலும் குறிப்பிட்டுரைக்கவில்லை. ஞானசம்பந்தர் பிறந்த ஊரினைக் குறிப்பிட்டு **'கழுமல ஊரார்'** என்று அழைத்துள்ள தன்மையினை மட்டும் காண்கின்றோம். தந்தையை அழைப்பதுபோல் சம்பந்தர் இருமுறை நாவுக்கரசரை 'அப்பர்' என்று அழைத்துள்ளார். அதற்கொப்ப நாவுக்கரசரும், பாண்டிமாதேவியின் அழைப்பிற்கிணங்க சமணர்களிடம் சொற்போரிட மதுரை செல்லப் புறப்பட்ட சம்பந்தரைப் பார்த்து, **''பிள்ளாய்! அந்த அமணகையர் வஞ்சனைக்கோர் அவதியில்லை''** என்று காரணம் சொல்லித் தடுக்க முயற்சித்த நிகழ்வையும் அறிகின்றோம்.

**சாக்கிய நாயனார்**

பௌத்த சமய நெறிநின்ற இவர், பின்னாளில் சிவனருள் கூட்டப் பெற்று சைவ சமயம் சார்ந்தவராவார். பௌத்த வேடத்தைக் களையாமல் சிவலிங்கத் திருமேனியை வழிபட்ட தன்மையுடையவர். உலகத்துப் பொருட்கள் அனைத்தும் இறைவனாலேயே படைக்கப்பட்டவையே என்ற உள்ளார்ந்த அன்புப் பெருக்கினால் கல்லையே மலராகக் கருதி எறிந்து இறைவனருளைப் பெற்று உயர்ந்தவர். இவர் பெற்ற முக்திப் பேற்றினை,

**''கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணும் சாக்கியனார்**
**நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாளவைத்தார்''**

(4:49:6)

எனவும், புத்தன் மறவா தோடி, எறிசல்லி புதுமலர்களாக்கி னான் காண் (6:52:8) எனவும் அமைந்த அப்பரின் தேவாரப் பாடல்களின் வாயிலாகத் தெளிவாக உணர முடிகின்றது.

இதுவரை சிந்திக்கப்பட்டுள்ள சிவனடியார்கள் எழுவரின் சிவத் தொண்டுடன் கூடிய வாழ்வியல் செய்திகளைத் திருநாவுக்கரசர் தாம் பாடியுள்ள பாடல்களில் முழுமையாக வெளிப்படுத்தியிருப்பதோடு அமையாமல் ஒரோவழி சுருக்கமாகவும் சொல்லிச் செல்கின்றார். மேலும் நான்கு அடியார்களைப் பற்றியும் சிறுகுறிப்புகளாகக் குறிப்பிட்டுச்

சொல்லியுள்ள செய்திகளையும் ஈண்டு இணைத்துப் பார்ப்பது இக்கட்டுரைக்கு மேலும் வலுச்சேர்ப்பதாக அமையும்.

**அப்பூதியடிகள்**

திருநாவுக்கரசரை நேரில் பார்க்காமலேயே அன்பு கொண்ட இவர், தாம் செய்து வரும் அறப்பணிகள் அனைத்தையும் நாவுக்கரசர் பெயரால் வெளிப்படுத்தி மகிழ்வடைந்தவர். திருநாவுக்கரசரை வழிபடு தெய்வமாகவும் குருவாகவும் ஏற்றுக்கொண்டு தம் மகன் உட்பட அனைத்து உடைமைகளுக்கும் **'திருநாவுக்கரசு'** என்னும் பெயரைச் சூட்டி வழிபட்டுப் பேறு பெற்றவர். இறந்துபட்ட மகனின் உயிரற்ற உடலை மறைத்து வைத்துத் திருநாவுக்கரசருக்கு அமுதளிக்க முற்பட்ட இவரின் பக்திச் சிறப்பை, **"அஞ்சிப் போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய்..."** (4:12:10) என்று போற்றிப் பாடியுள்ளார்.

**கணம்புல்லர்**

புல்லரிந்து விற்று அத்தொகை கொண்டு திருக்கோயிலுக்கு நெய்விளக்கு ஏற்றித் திருத்தொண்டு ஆற்றி வந்தவர் கணம்புல்லர். ஒருநாள், புற்கட்டு விலைபோகாத நிலையில், அதனையே திரியாகக் கொண்டு ஏற்றி, அதுவும் நிறைவடையாத தன்மையால் தம் தலைமுடியைத் திரியாகத் திரித்து விளக்கெரித்தார். இவ்வரலாறாகிய சிவபுண்ணியச் செயலானது, **"கணம்புல்லர்க்கு அருள்கள் செய்து"** (4:49:9) எனவும், **"கணம்புல்லன் கருத்துகந்தார்"** (6:12:7) எனவும் திருநாவுக்கரசரால் வெளிப்படுத்தப் பட்டுள்ளது.

**தண்டியடிகள்**

**'சென்றாடு தீர்த்தங்கள் ஆனார்தாமே'** என்பார் அப்பர். அவ்வாறு தீர்த்த வடிவிலான திருவாரூர்க் கமலாலய திருக்குளத்தைத் தூய்மை செய்து ஈசன் கருணைக்கு இலக்கான இவர், ஒரு பிறவிக்குருடர். திருவைந்தெழுத்தினை ஓதித் திருக்குளத்தில் மூழ்கி எழுந்து சிவனருளால் கண்ணொளி பெற்றவர். தம்மை இகழ்ந்து பேசிய சமணர்களைக் குருடாக்கி திருவாரூரை விட்டு வெளியேறச் செய்தவர். கையில் எப்போதும் தண்டூன்றி நடந்ததால் **'தண்டுடைத் தண்டி'** என்று சுந்தரமூர்த்தி நாயனாரால் பாராட்டப் பெற்றவர். இத்துணைச் சிறப்புப் பெற்ற இவரை, நாவுக்கரசர் ஆறாம் திருமுறையில் இடம் பெற்றுள்ள 93-வது பொதுப் பதிகத்தில் குண்டோதரன், சங்கு கன்னன், நந்தி தேவர் ஆகிய சிவகணங்களுள் ஒருவராக வைத்துப் பாராட்டுகின்றார். இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள அடியார்கள் வரிசையில் தண்டியடிகள் முதற்கண் அமைந்து போற்றப் பெறுதல் சிறப்புடைத்து.

**நாளைப்போவார் (நந்தனார்)**

திருத்தொண்டத் தொகையில் அடியார்களின் வாழ்வியலைத் தொகுத்துக் கூறிய சுந்தரர் தாம் பாடியுள்ள திருப்புன்கூர்ப் பதிகத்தின் நான்காவது பாடலில் எட்டு அடியார்களைத் தனித்துப் பாடுகின்றார். அப்பாடலில் சுட்டப் பெற்ற திருநாளைப் போவாராகிய நந்தனாரை,

> **''அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராம்**
> **ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்**
> **கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்**
> **அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவுளாரே''** (6:95:10)

என அமைந்த பொதுப் பதிகத்தின் இறுதிப் பாடலடியில் திருநாவுக்கரசர் குறிப்பாகச் சுட்டுகின்றார். இப்பாடலில் குறிப்பிட்ட **'புலையன் எனும் சொல்லாட்சி'** நந்தனாரைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது என்பது ஆய்வாளரின் துணிபு.

1. திருநாவுக்கரசர் தம் காலத்திலோ அல்லது தம் காலத்திற்கு முன்போ வாழ்ந்து சிறந்த பதினொரு சிவனடியார்களின் வாழ்வியல் குறித்த செய்திகளைத் தம் பாடல்களில் தொகுத்துச் சொல்லும் உத்தியினைக் கையாண்டுள்ளார். அடியார்களின் வரலாற்றைத் தேவைக்கேற்ப விரிவாகவும் சுருக்கமாகவும் சொல்லும் வழக்கத்தினைக் கொண்டுள்ளார். 2. விரித்துச் சொல்லப்பட்டுள்ள பாடற் கருத்துக்கள் அவ்வடியார்களின் வாழ்வியல் சாரமாகத் திகழ்கின்றது எனத் துணிந்து சொல்லலாம். 3. விளக்கமாக உரைக்க வேண்டிய அடியார்களின் வரலாற்றினைப் பெரும்பாலும் நான்காம் திருமுறையில் இடம் பெற்றுள்ள திருக்குறுக்கை வீரட்டானம், திருச்சாய்க்காடு ஆகிய இரு பதிகங்களின் வாயிலாகவே நாவுக்கரசர் சொல்லியுள்ளார். இவ்விரு தல இறைவன் அடியவர்களின் பக்தி உணர்வுக்கு உரிய பலனை விரைந்தளிக்கும் பான்மையன் என்ற பொருள்படும்படிப் பாடியுள்ளார். 4. தாம் வெளிப்படுத்தியுள்ள பதினொரு அடியார்களில் சண்டேசுரர், கண்ணப்பர், கோச்செங்கட்சோழர், நமிநந்தி, அமர்நீதி நாயனார், திருஞானசம்பந்தர், சாக்கிய நாயனார் ஆகிய எழுவரது வரலாற்றை விளக்கமாகவும், விரிவாகவும் சொல்லியுள்ள நாவரசர் எஞ்சியுள்ள அப்பூதியடிகள், கணம்புல்லர், தண்டியடிகள், நாளைப்போவார் ஆகிய நால்வரது வரலாற்றைச் சுருக்கமாகவும் வெளிக்கொணர்ந்துள்ளார். இவ்அடியார்களின் வரிசை முறை திருவருட் செயல், பக்தியுணர்வு, வெளிப்பாடு ஆகியனவற்றின் அடிப்படையில் ஈண்டு எடுத்தாளப்பட்டுள்ளது. 5. இப்பதினொருவரில் சம்பந்தர் தவிர மற்றையோர் வரலாறுகள் அப்பரின் நான்காம் திருமுறையிலும் ஆறாம் திருமுறையிலும் காணக் கிடக்கின்றன, சம்பந்தரின் வாழ்வியல் குறிப்புகள் மட்டுமே ஐந்தாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது என்பதும் நினைவில் கொள்ளத் தக்கதாகும்.

# 4. மெய்ப்பெருந்தொண்டர்

அரங்க. இராமலிங்கம், சென்னை.

சைவ பக்தி இயக்கத்தை முன்னின்று தலைமையேற்று நடத்தியவர்கள் இருவர். ஒருவர் திருநாவுக்கரசர். மற்றவர் திருஞானசம்பந்தர். இளைஞராக இருந்த திருஞானசம்பந்தர் தலைமைத்துவ நெறியில் இயக்கத்தை நடத்திச் சென்றவர். திருநாவுக்கரசரோ தொண்டு நெறியில் இயக்கத்தோடு இணைந்து சென்றவர். இருவருக்கும் வயது வேறுபாடு சற்றேறக்குறைய் அறுபது, ஆண்டுகள் இருக்கும். தம்முடைய 50 அல்லது 55-ஆம் அகவையில் சைவ சமயத்திற்கு மீண்டும் வந்து சேருகிறார் திருநாவுக்கரசர். இவரின் தமக்கையார் திலகவதியாரின் வேண்டுதலால் இறையருளால் இந்நிகழ்வு நிகழ்கின்றது. மேற்சுட்டிய வரலாற்றுப் பின்னணியில் நாவுக்கரசரின் வாழ்வியலை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

சைவ சமயத்திற்கு வந்த பின்னர் திருநாவுக்கரசரின் வாழ்வில் பல அற்புதங்கள் நிகழ்கின்றன. **நாம் ஆர்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்** என சமயப்பொறையற்ற ஆட்சிக்கு எதிராக ஓங்கி குரலெழுப்பு கிறார். நீற்றறையில் வாட்டமின்றி ஏழு நாள் இருக்கிறார். நஞ்சுகலந்த உணவினை உண்டு ஊனமின்றி உவப்போடு இருக்கிறார். தன்னைக் கொல்ல வந்த பட்டத்து யானையைப் பணிய வைக்கின்றார். தன்னோடு பிணிக்கப் பட்டிருந்த கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறுகிறார். இவ்வாறு பல்வேறு அற்புதங்கள் அவர் வாழ்வின் தொடக்கத்தில் நிகழ்கின்றன.

பின்னர்த் திருஞானசம்பந்தருடன் இணைந்து திருவீழிமிழலையில் வாசியில்லாப் பொற்காசு பெற்று அடியார்களின் பசிப்பிணி போக்கு கிறார். திருமறைக்காட்டில் திருக்கோவிலின் திருக்கதவம் திறப்பிக்கின்றார். தனி நிலையில் திங்களூரில் நஞ்சேறி இறந்த அப்பூதியடிகளாரின் மகனை உயிர்ப்பிக்கின்றார். திருப்பழையாறையில் சமணர்களால் மூடப்பட்டிருந்த சிவ ஆலயத்தை உண்ணாநோன்பு இருந்து புதுப்பிக்கின்றார். உலகில் உண்ணாநோன்பு இருந்து தான் நினைத்ததைச் சாதித்த முதல் சத்தியாகிரகி என்ற சிறப்பினையும் பெறுகின்றார். திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும் வழியில் இறைவரால் பொதிசோறும் நன்னீரும் அளிக்கப்பெற்று அருந்தி அயர்வு நீங்குகிறார். இவ்வாறு பல்வேறு அற்புதங்கள் நிகழ்த்தும் ஆளுமை பெற்றவராகத் திருநாவுக்கரசர் திகழ்கிறார்.

எண்பத்தோர் ஆண்டுகள் நிறைவாழ்வு வாழ்ந்தவர் திருநாவுக்கரசர் அவருடைய வாழ்நாளில் சற்றேறக்குறைய நாற்பது ஆண்டுகள் சமண

சமயத்தில் கழிந்து விடுகின்றது. இந்நிலையை எண்ணி எண்ணி கழிவிரக்கம் கொள்ளுகிறார். இந்த வரலாற்றுப் பின்னணியில் திருநாவுக்கரசர் வாழ்க்கையை நோக்கும்போது சில உண்மைகள் தெரிகின்றன.

அறுபத்துமூன்று நாயன்மாரில் திருநாவுக்கரசர் மட்டுமே இறைவனிடம் தனக்குச் சைவ சின்னங்களைப் பொறித்தருளுமாறு வேண்டுகின்றார். திருப்பெண்ணாடகத்தில் இறைவனிடம் தனக்கு முத்தலைச் சூலக் குறியையும், இடபக் குறியையும் பொறித்தருளுமாறு வேண்டுகிறார். இறைவரும் அவரின் வேண்டுகோளை நிறைவேற்றுகிறார். சைவ உலகத்தில் தலைமையேற்க நாவுக்கரசருக்கு இறைவன் அளித்த அங்கீகாரம் என இந்நிகழ்வைக் கருதலாம்.

சைவர்கள் கோயில் என்று குறிப்பிட்டால் அது சிதம்பரம் எனப் பெறும் தில்லையம்பதியைக் குறிக்கும். சைவ அடியார்களில் மிகப் பெரும்பாலானவர்கள் தில்லையம்பதியில் எழுந்தருளியிருக்கும் கூத்தப் பெருமானை வணங்கி வழிபட்டவர்களே. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த வடலூர் வள்ளற்பிரானாகிய இராமலிங்க அடிகளும் சிதம்பரத்தை வழிபட்டுத் தன்னைச் சிதம்பரம் இராமலிங்கம் என்றே குறிப்பிட்டுக் கொண்டார். இத்தகு சிறப்பு வாய்ந்த சிதம்பரத்தில் - தில்லையின் திருவீதிகளில் உருள்வலம் (அங்கப்பிரதட்சணம்) செய்து வழிபடுகிறார் நாவுக்கரசர். சமணம் சார்ந்திருந்த தம்முடைய உடம்பினைத் தில்லைத் திருவீதிகளில் படிய வைத்து அமைதி காண்கிறார் திருநாவுக்கரசர்.

திருசத்திமுற்றத்துத் திருக்கோயிலில் சிவக்கொழுந்தீசரையும், உமாதேவியாரையும் தரிசித்து வணங்கி "கூற்றம் வந்து குமைப்பதன் முன் பூவாரடிகள் என் தலைமேல் பொறித்து வைப்பாய்" என வேண்டுகிறார். அப்பரின் வேண்டுகோள் திருநல்லூரில் நிறைவேறுகிறது. முன்னர் முத்தலைச் சூலக் குறியையும் இடபக் குறியையும் பொறித்திட வேண்டிய நாவுக்கரசர் இங்கு இறைவரின் திருவடியினைத் தம் தலைமேல் பொறித்து வைத்திட வேண்டுகிறார். திருவடி தீக்கை எனும் பாததீட்சை திருநாவுக்கரசருக்கு இறைவரால் செய்யப் பெறுகிறது.

தலயாத்திரை மேற்கொண்ட திருநாவுக்கரசர் வடபுலம் சென்று வாரணாசி வந்தடைந்து, அதன் பின்னர்க் கயிலை நோக்கிப் பயணிக் கின்றார். கயிலை யாத்திரையின்போது திருநாவுக்கரசரின் உடம்பு முழுமையும் தேய்ந்து அழிகின்றது. முதலில் கால்கள் தேய்ந்து அழிகின்றன. பின்னர் கைகள் அதனையடுத்து மார்பு எலும்புகள் என அனைத்து உறுப்புகளும் தேய்ந்து அழிகின்றன. சமணச் சார்பால் ஓரளவு வளர்ந்த உடம்பு முற்றிலுமாக அழிகிறது.

திருக்கயிலையில் குருபிரானாக வந்த சிவபெருமான் மெய்ப்பெருந் தொண்டரான திருநாவுக்கரசரோடு உரையாடுகிறார். குருபிரானாக

வந்த சிவபெருமானின் திருவடியிலிருந்து பொங்கித் ததும்பிய பாதோதகமாகிய குளத்தில் மூழ்கி எழுந்ததும் திருநாவுக்கரசர் சைவத் திருமேனியராகப் புத்தம் புதிய உடம்பினைப் பெறுகிறார். குருபிரான் காட்டியருளிய திருவையாற்றில் நின்று கண்டபோது அனைத்து உயிர்களும் அம்மை அப்பராக நாவுக்கரசருக்குக் காட்சி நல்கின.

சைவத் திருமேனியினைக் கைக்கொண்ட நிலையிலும் திருநாவுக்கரசருக்குக் கைத்தொண்டில் முழுநிறைவு காண முடிய வில்லை. இவரின் தொண்டின் திறத்திற்குச் சிகரம் வைத்தது போன்ற நிகழ்வு ஒன்று நிகழ்கின்றது. திருப்பூம்புகலூருக்கு அப்பரைக் காண வருகை புரிந்த திருஞானசம்பந்தரின் முத்துப்பல்லக்கினை ஒருவரும் அறியாவண்ணம் சுமந்து பேருவகை எய்துகிறார் திருநாவுக்கரசர். தொண்டு நெறியின் முதிர்ந்த - கனிந்த நிலை இது. திருநாவுக்கரசர் மேற்கொண்ட தொண்டு நெறியின் ஒட்டுமொத்த வெளிப்பாடு என இந்நிகழ்வைக் கொள்ளலாம். தன்னை முதன்மைப்படுத்தாமல் தான் சார்ந்திருக்கும் பக்தி இயக்கத்தின் தலைமைக்கு முதன்மையையும் - முக்கியத்துவத்தையும் தருகிறார். தன்னைவிடத் தான் சார்ந்திருக்கும் இயக்கம் முக்கியம் என்பதை தம் செயலால் உணர்த்திய அருளாளர் அப்பர். திருஞானசம்பந்தருக்கு நாவுக்கரசர் கொடுக்கும் மரியாதை - கௌரவம் எனவும் இந்நிகழ்வைக் கொள்ளலாம்.

திருநாவுக்கரசர் பாடியருளிய திருஅங்கமாலையின் நோக்கமும் இதுவே. உடம்பின் ஒவ்வோர் உறுப்பும் இறைவனை வழிபட வேண்டும் என்ற நோக்கமும் யாக்கையின் பயனே இறைவனை வணங்கவேண்டும் என்ற வேண்டுதலும் சிறப்பாகக் குறிக்கத் தக்கன. உடம்பினையும் அதன் உறுப்புகளையும் எப்படியேனும் தொழும்பாக்கிட வேண்டும் என்ற அப்பரின் வேட்கை கருதத்தக்கது.

"மற்றும் தொடர்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை" (346)

என்னும் தெய்வப் புலவரின் திருவாக்கிற்கு ஏற்ப சீவன் முத்தர் நிலையில் வாழ்ந்து கொண்டிருந்த அப்பர் மேலான தொண்டு நெறிக்குத் தம் உடம்பினைப் பயன்படுத்திக் கொண்ட திறம் உணர்ந்து உணர்ந்து நெகிழத்தக்கது.

இறையருளால் சைவத் திருமேனியராக உருமாற்றம் செய்யப்பெற்ற திருநாவுக்கரசர் திருக்கோயில்களில் தொண்டு செய்வதற்கு முன்னிலும் முனைப்பு மிகுந்தவரானார். திருஅலகிட்டும் திருமெழுக்கிட்டும் திருக்கோயில்களைத் தூய்மை செய்வதை வலியுறுத்திக் கூறுகிறார். பொழுது புலர்வதற்கு முன்னர் நீராடி, திருக்கோயில்களுக்கு நன்னீர் எடுத்துச் செல்வதைப் பெருமையாகவும் பாக்கியமாகவும் கருதுகிறார். திருக்கோயில்களுக்குக் கலிய நாயனார் போல விளக்கிட்டுத் தூப தீபம்

காட்டுவதைப் போற்றியுரைக்கின்றார். மக்களை மையப்படுத்தித் திருக்கோயில்களைச் சமுதாயக் கூடங்களாக மாற்றிய பெருமை திருநாவுக்கரசருக்கு உண்டு. மக்கள் ஒருங்கிணைந்து செயல்படும் இடமாக அதாவது பொதுமக்கள் தொடர்புச் சாதனமாகத் திருக்கோயில்கள் திகழ்வதற்கு வழியமைத்தவர் திருநாவுக்கரசர். இதற்கெல்லாம் சிகரம் வைத்தது போன்று உழவாரப் படைகொண்டு நாளும் திருக்கோயில் தூய்மை செய்யும் பணியை மேற்கொண்டவர் திருநாவுக்கரசர். அனைத்து மக்களும் ஒருங்கிணைந்து செயல்படும் சமுதாயக் கூடங்களாகத் திருக்கோயில்கள் திகழ்வதற்கு வித்திட்டவர் திருநாவுக்கரசர். தங்களுக்குள்ள வேறுபாட்டினை மறந்து மக்கள் ஒருங்கிணைந்து செயல்படும் திருக்கோயில்களில் சாதி, சமய, சடங்குகளினால் மக்கள் வேறுபடுத்தப் படுவதனை எதிர்த்துக் குரல் கொடுக்கின்றார் திருநாவுக்கரசர். அனைத்துச் சாதிய மக்களையும் ஒருங்கிணைத்து இதன்வழி மிகப்பெரிய சைவ சமய எழுச்சிக்கு வித்திட்ட பெருமை திருநாவுக்கரசருக்கு உண்டு.

திருக்கோயில்களை மையப்படுத்தி மக்கள் இயக்கம் கண்ட திருநாவுக்கரசர் அருவ வழிபாட்டினையும் போற்றியுரைக்கின்றார். உருவ வழிபாடு திருக்கோயில்களில் நடைபெறுகிறது. அருவ வழிபாடு ஊனுடம்பிற்குள்ளே நடக்கவேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். உடம்பினையே கோயிலாகவும், கடிமனத்தை அடிமையாகவும் சுத்த அறிவாக மாறிய மனத்தை லிங்கமாகவும் உருவகம் செய்து வழிபாடு செய்கிறார். உடம்பிற்குள்ளே இறைவன் உறைகின்றான் எனில் அவனை எப்படிக் காண்பது? விறகில் தீ போலவும் பாலுக்குள்ளே ஒளிந்திருக்கும் நெய் போலவும் இறைவன் ஊனுடம்பிற்குள்ளே ஒளிந்திருக்கின்றான். நினைந்து நினைந்து உணர்வாருக்கு இறைவன் முன்னே வந்து நிற்பான் என உறுதி கூறுகிறார். இறைவனை உணர்ந்து உருகும் மனநிலைக்குச் சென்ற திருநாவுக்கரசர் நாயக நாயகி பக்தி நெறியில் பாடல்கள் பல புனைந்துள்ளார். பஞ்சாட்சர சொரூபியாக இருக்கும் இறைவனை நேர் தெரிசனையில் கண்டதால் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி இறைவனின் உண்மை வடிவத்தைப் புலப்படுத்தியுள்ளார். இலக்கிய உலகில் தாண்டக வேந்தராக உலா வந்த பெருமைக்குரியவர்.

திருக்கோயில்களில் உருவ வழிபாடு, பின்னர் மானச பூசையாகிய அருவ வழிபாடு, இதையும் தாண்டித் திருக்கயிலையில் இறைவனை முனிவர் கோலத்தில் கண்டு கண்நேர் தரிசினையாக வழிபட்ட மெய்வணக்கம் என்ற மூன்று நிலைகளில் வழிபாடியற்றிய திருநாவுக்கரசருக்கு இறுதியில் ஓர் ஏக்கம் வருகின்றது. அந்த இறுதி நேரத்தில் உடம்பிற் குள்ளே இருக்கும் ஒன்பது வாசல்களும் (ஓட்டைகள்) ஒக்க, அடைக்குமே; அப்பொழுது உன்னை உணரும் அறிவை எனக்குத் தரவேண்டும். அதனால் இப்பொழுதே உன் பொன்னடிக்குப் போதுகின்றேன் என

உருகி விண்ணப்பம் செய்கின்றார். திருநாவுக்கரசர் இறுதியாகப் பாடிய பாடலாக (அல்லது இப்பாடல் இடம்பெற்றுள்ள பதிகம்) இது இருக்க வாய்ப்புள்ளது. இறுதிக் காலத்தில் அவர் இரண்டற்ற நிலையைப் பெறுகிறார். கல்லுக்கும், பொன்னுக்கும், மணிக்கும் சொற்களைத் தவிர வேறொரு வேறுபாடும் அவருக்குத் தெரியவில்லை. அவரை மயக்க வந்த விண்ணுலக அரம்பையரும் அவருக்கு சிவசக்தி சொரூபமாகக் காட்சி நல்கினர். இதன்வழி அவருடைய பெருநிலையை உய்த்து உணரலாம். பொய்ப்பொருளைப் (பொன், பெண், மணி) புறந்தள்ளிவிட்டு மெய்ப்பொருளைக் கைக்கொண்டு மெய்ப்பெருந் தொண்டராக வாழ்ந்தவர் திருநாவுக்கரசர்.

## இக்கட்டுரைவழி அறியப் பெற்ற மெய்ம்மைகள்

1. பல்வேறு அற்புத நிகழ்வுகளைத் தனித்தும் திருஞான சம்பந்தரோடு இணைந்தும் செய்த பெருந்தொண்டர்.
2. புறச்சமயச் சார்பு பெற்ற தம்முடைய முன்னைய பழைய உடம்பினை முற்றிலுமாக அழித்துவிட்டுச் சைவத் திருமேனியை இறையருளால் பெற்றவர்.
3. திருக்கோயில்களை மையப்படுத்தி மக்களை ஈர்த்தவர். திருக்கோயில் வழிபாடு எவ்வளவு முக்கியமோ அதைவிட முக்கியம் திருக்கோயில் களைத் தூய்மை செய்தல், புதுப்பித்தல், பாதுகாத்தல் என்ற பேருண்மைகளை நடைமுறைப்படுத்தி வாழ்ந்து காட்டிய மெய்ப் பெருந்தொண்டர்.
4. சாதி, சமய, சடங்குகளைப் புறந்தள்ளிய மெய்யர். பார்க்குமிட மெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளை அன்பினால் வழிபட்டு உய்யலாம் என உணர்த்தியவர்.
5. இலக்கியப் பங்களிப்பு என்ற நிலையில் தாண்டக வேந்தராய் தமிழிலக்கிய உலகில் உலா வந்தவர். திருஞானசம்பந்தர் பிறப்பதற்கு முன்பே நாவுக்கரசர் பாடத் தொடங்கிவிட்டார் என்ற கருத்துரை உண்மை யாயின் சங்க இலக்கிய அகத்திணை மரபும் (நாயக - நாயகி உறவு) நமசிவாயத் திருப்பதிக மரபும் இவரால் தோற்றுவிக்கப்பெற்றது எனக் கொள்ளலாம்.
6. உலக உயிர்கள் அனைத்திலும் பிரம்மாக ஒளிவீசிக் கொண்டிருக்கும் அப்பரபிரம்மமே ஒவ்வொரு மானுட தேகத்திலும் ஜோதியாக ஒளி வீசுகிறது. பாலில் மறைந்துள்ள நெய்யை எடுக்கப் பொறுமையும், முயற்சியும் இன்றியமையாதது போல நமக்குள்ளே ஒளிர்ந்து கொண்டிருக்கும் இறைவனைக் காண மன ஒருமையோடும் உள்ளத் தூய்மையோடும் முயல வேண்டும் என உணர்த்தியவர்.

# 5. நாவுக்கரசர் சுட்டும் புராணச் செய்திகள்

தொ. ஆ. அரங்கசாமி, தொண்டாமுத்தூர்.

"அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
மலரும் மரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார்"

- புராண ஆசிரியர்.

கல்வி, அறிவு, ஒழுக்கம், தவம், உயர்ஞானம் என்பவற்றை நாடிச் செல்வோரது மயக்கத்தை ஒழித்துச் சிவப்பேரொளி பரப்ப மருணீக்கியார் பிறந்தார். அவரே 'நாவுக்கரசு' என்று இறைவரால் வழங்கப்பட்டார். "தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" என்று பாடிய அவர் சுட்டும் புராணச் செய்திகள் பலப்பல.

**புராணம்**

புராணம் என்பது வடசொல். புராணம் - பழமை. பழமை வாய்ந்த கதைகளின் தொகுப்பு புராணம் எனப்பட்டது. பழமை என்பது தொன்மை என்ற பெயர் உடையது. தொல்காப்பியர் தொன்மை என்னும் பெயரால் பாடப்படும் பாட்டு "தொன்மை" என்கிறார்.

"தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"

என்பது தொல்காப்பியம்.

பழமையான பொருள் பற்றிப் பாடப்படுவது "தொன்மை" எனத் தமிழில் வழங்கப்படுகிறது. பழமையான கதை இலக்கியம் பற்றிப் பாடப்படுவது "புராணம்" என வடமொழியில் வழங்கப்படுகிறது.

**திருநாவுக்கரசர் சுட்டும் புராணச் செய்திகள்**

"ஒட்டாத வாளவுணர் புரமூன்றும்
ஓரம்பின் வாயின் வீழக்
கட்டானைக் காமனையும் காலனையும்
கண்ணினொடு காலின் வீழ
அட்டானை யாரூரில் அம்மானை
ஆர்வச்செற் றக்கு ரோதம்

தட்டானைச் சாராதே தவமிருக்க
அவஞ்செய்து தருக்கி னேனே''

இப்பாடலில் மூன்று புராண நிகழ்ச்சிகளை ஒருங்கே அமைத்துப் பாடியுள்ளார், திருநாவுக்கரசர்.

1. சிவபெருமான் திரிபுரங்களைத் தமது நகைப்பினால் எரித்த செயல்.
2. சிவபெருமான் மன்மதனைத் தம் நெற்றிக் கண்ணால் எரித்த செயல்.
3. மார்க்கண்டேயனுக்காகக் கூற்றுவனைத் தம் காலால் உதைத்து வீழ்த்திய செயல். இந்நிகழ்ச்சிகளை வேறு பல பாடல்களிலும் பாடியுள்ளார். இவையல்லாத புராண நிகழ்ச்சிகளைத் தம் பாடல் களில் ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளார்.

**புராண வரலாறுகள்**

**திரிபுரத்தைச் சிரிப்பால் எரித்தது**

தாரகாக்கன், கமலாக்கன், வித்துவான்மலி என்னும் அசுரர் மூவரும் கோடியாண்டு தவம் இயற்றினார். பிரமதேவனால் பொன், வெள்ளி, இரும்புகளினாலான மூன்று அரண்களைப் பெற்றனர். பொன்னரண் சுவர்க்கத்திலும், வெள்ளியரண் அந்தரத்திலும், இரும்பரண் பூமியிலும் நிலைபெற்றிருக்கும். அவை வேண்டும் இடங்களுக்கு உடன்வரும். ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருகால் ஒரு முகூர்த்த நேரம் ஒன்றாகச் சேரும். அக்காலத்தில் ஓரம்பு விடுத்தால் அழிக்கலாம். அதுவன்றி வேறு எவ்வகையாலும் அழிக்க முடியாது. திருமால் முதலியோர் எதிர்ப்பினும் தோற்றோடுவர் என வரம் பெற்றனர்.

மூன்று அரண்களிலும் மயன் வகுத்த மாளிகைகள் இருந்தன. அவற்றில் அசுரர்கள் தங்கியிருந்தனர்; திருநீறு உருத்திராட்சம் அணிந்து, திருவைந்தெழுத்து வழிபாடு உடையராய்ச் சிவபெருமானை வழி பட்டனர். இருப்பினும் தேவர் முதலியோர்க்கு இடுக்கண் புரிந்தனர். தேவர் எல்லாரும் சிவபெருமானிடத்திலே முறையிட்டுக் கொண்டனர்.

அச்சுத மூர்த்தியோ தேவர்கள் அமைத்துக் கொடுத்த தேரின் மேல் ஏறிச் சென்றார்; புத்த குருவாய் நின்று மயக்கினார். அசுரர்கள் அக்கொள்கையில் மயங்கிச் சிவபக்தியில் வெறுப்புற்றனர்.

சிவபெருமான் மேருமலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு, சென்று, நின்று, நிலைமை கண்டு முறுவலித்தார். அதில் தோன்றிய அனலால் முப்புரங்களும் தீப்பட்டன. திருமால் முதலானவர்களுக்குத் தோல்வி

உறாதபடி, அவருருவான கணையையும் விடுத்துத் திரிபுரங்களை எரித்து அழித்தார். இந்நிகழ்ச்சியை அப்பர் முன்காட்டிய பாடலில், "ஒட்டாத வாளவுணர் புரமூன்றும் ஓரம்பின் வாயின் வீழக் கட்டானை" என்று குறிப்பிட்டுள்ளார். வேறொரு பாடலில், "செம்புனல் கொண்டெயின் மூன்றும் தீயெழக்கண் சிவந்தானும்" என்று குறிப்பிடுகிறார். சம்பந்தரும் சுந்தரரும் தம் பாடல்களில் பாடியுள்ளனர்.

## மன்மதனைக் கண்ணால் எரித்தது

சனகாதி முனிவர் யோகநிலையில் நில்லாமல் ஒழுகினர். இறைவன் அவர்களுக்கு யோக நிலையை உணர்த்த விரும்பினர், கயிலையில் தென்புறத்தில் கல்லால மர நிழலில் யோகமுற்றார். இறைவர் யோக முற்றக்கால் எல்லார்க்கும் காம உணர்வு தோன்றாது போனது. இதனைத் திருமால் உணர்ந்தார். இறைவர் யோக நிலையைக் கலைப்பதற்கு எண்ணினார்; மன்மதனை இறைவர்மேல் ஏவிவிட்டார்.

மன்மதன் சிவன்முன் வந்துநின்றான்; கரும்பு வில்லில் மலர் அம்புகளைத் தொடுத்தான். சிவபெருமானோ உணர்வு பெற்றார்; தம் நெற்றிக்கண்ணைத் திறந்தார். மன்மதனோ எரிந்தான். பின்னர் நம் பெருமான் உமாதேவியாரை மணந்து கொண்டார். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்ந்தன.

இதனைத் திருநாவுக்கரசர், "காமனையும் காலனையும் கண்ணினோடு காலின் விழ அட்டானை" என்று மன்மதனை எரித்ததைக் கூறுகிறார்; மார்க்கண்டேய முனிவர்க்காக மறலியை உதைத்த செய்கையையும் சேர்த்துக் கூறியுள்ளார்.

## காலனைக் காலினால் உதைத்தது

மிருகண்டு என்னும் பெருந்தவமுனிவர் மருத்துவதியை மணந்தார்; மகப்பேறின்மையின் தவமிருந்து பதினாறு வயதே வாழும் நன்மகனைப் பெற்றனர். அவனுக்குப் பிரமதேவன் மார்க்கண்டேயர் என்று பெயர் சூட்டினார். ஐந்தாவது ஆண்டில் மார்க்கண்டேயர் பல்கலை கற்றுணர்ந்தார்; சிவ பக்தியில் தலைசிறந்து விளங்கினார்.

பதின்றாவது ஆண்டு பிறந்தது. பெற்றோர் அவ்வாண்டு முடிந்தால் மகன் இறந்துவிடுவானே என்று துன்பக்கடலில் மூழ்கினர். காரணத்தை அறிந்த மார்க்கண்டேயர் "சிவனிருக்க பயமேன்? இயமனை வென்று வருவேன்; அஞ்சாதீர்" என்று சொன்னார். சிவலிங்கத்தைத் தாபித்து மலர் கொண்டு வணங்கி வழிபாடு புரிந்து நின்றார். இறைவர் தோன்றிக் குறைகேட்டு "குழந்தாய்! அஞ்சேல்! நம் திருவருள் துணை செய்யும்" என்றருளி மறைந்தார்.

பதினாறாண்டு கழிந்தது. இயம தூதனால் ஏதும் செய்ய இயல் வில்லை. இயமனே மார்க்கண்டேயர் முன் எருமை மேல் தோன்றினார். மார்க்கண்டேயரோ சிவலிங்கத்தை அர்ச்சித்தவண்ணம் இருந்தார். இயமனோ, "உன் ஆவி கொண்டல்லது மீண்டிடேன்; விரைவில் வா" என்றார். "சிவனடியார்க்கு அழிவில்லை; உனக்கு அழிவுண்டு; நீங்கிப்போய் விடு" என்றார் மார்க்கண்டேயர். அது கேட்டு மறலி சினங்கொண்டு "என் வலிமை காண்" என்று, ஆலயத்துட் சென்று பாசம் வீசுங்கால் மார்க்கண்டேயர் சிவலிங்கத்தைத் தழுவிச், சிவசிந்தையுடன் நின்றார். கூற்றுவன் பாசம் வீசி ஈர்த்திடலுற்றான். அப்போது பக்தர்களைக் காக்கும் சிவமூர்த்தி, "குழந்தாய்! அஞ்சேல்! அஞ்சேல்! செருக்குற்ற இயமன் நின் உயிர் வாங்க நினைத்தான்" என்றார்; தனது இடது பாதத்தை எடுத்துக் கூற்றுவனை உதைத்தனர். இயமன் தன் பரிவாரங்களுடன் வீழ்ந்து உயிர் துறந்தான். சிவன் மார்க்கண்டேயருக்கு அந்தமிலா ஆயுளை நல்கி மறைந்தனர்.

மார்க்கண்டேயர் தம் பெற்றோரிடம் நிகழ்ந்ததைக் கூறித் துன்பத்தை நீக்கினார். நெடுங்காலத்துக்கும் பின் இயமனைச் சிவபெருமான் உயிர்ப்பித்தனர்.

**'காலனையும்.... காலின் விழ அட்டானை'**

என்று நாவுக்கரசர் கூறுகிறார்.

## இராவணனுக்கு அருள்புரிந்தது

இராவணன் வானவூர்தியில் வந்தான். அது கயிலாய மலைமேற் செல்லாமல் தடைப்பட்டு நின்றுவிட்டது. இடையூறாக நின்ற மலையை அகற்ற எண்ணினான் இராவணன். பத்துத் தலைகளும் இருபது கரங்களும் கொண்டு தன் வலிமையெல்லாம் திரட்டிக் கயிலை மலையை எடுக்க முற்பட்டான்; முயன்றான். மலை அசைந்ததும் உமாதேவி அஞ்சி, இறைவனைத் தழுவிக் கொண்டாள். இறைவன் காற்பெருவிரலால் மலையை அழுத்தினார். இராவணனது வலிமை கெட்டது. அவன் மலையிடை அகப்பட்டுக் கொண்டான்; தான் செய்த தவற்றினுக்கு அஞ்சினான்; இறைவன் மேல் இசைபாடி - சாமகீதம் பாடித் துதித்தான். இறைவன் இரங்கி இராவணனை விடுவித்தார்; அவன் ஊறுபாட்டை யெல்லாம் நீக்கி அருள் செய்தார்.

"நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை உரங்க ளெல்லாங் கொண்டெடுத்தா னொன்பது மொன்றுமலற வரங்கள் கொடுத்தருள் செய்வான்" என்றும், "ஆர்த்தான் அரக்கன்றனை மால்வரைக் கீழ் அடர்த்திட்டு அருள்செய்த அதுகருதாய்" என்றும் இறைவரது ஆற்றலையும் அருளையும் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

## பிரமனது தலை அறுத்தது, தலையோட்டில் பலியேற்றது

உலகத்துயிர்களைப் படைப்பவன் பிரமன். படைப்புத் தொழில் செய்வதால் தானே முதல்வன் என்று தருக்கியிருந்தான். இறைவர் தம் கூறாகிய கால பைரவரை அழைத்துப் ''பிரமன் தருக்கினை ஒழித்து வா'' என்று பிரமனிடம் அனுப்பினர். அவரின் வருகையைப் பிரமன் அறிந்தும் அறியாதவன் போல் இறுமாந்திருந்தான். பைரவர் பிரமனுடைய ஐந்து தலைகளில் ஒரு தலையைக் கிள்ளினார். பிரமன் இறந்தான். திருமால் முதலானவர் பிரமனை எழுப்புமாறு வேண்டினர். பிரமனை எழுப்பி அருள் புரிந்தார். கிள்ளிய பிரமன் தலையோட்டில் தருக்குற்ற வரையெல்லாம் வேலினால் குத்தி குருதிப்பலி ஏற்றார்.

தாருகாவனத்து முனிவர்கள் ''வேதத்தில் விதிக்கப்பட்ட யாகம் முதலிய கருமங்களைச் செய்து ஒழுகினால் போதும். அந்நல்வினைப் பயனால் வீடு பெறலாம். இந்நல்வினையைத் தவிர்த்துக் கடவுள் ஒருவர் இல்லை'' என்று கருதி ஒழுகினர். திருமாலும் சிவபெருமானும் இவர்தம் கொள்கையைப் போக்க விரும்பினர்.

திருமால் மோகினிப் பெண் வடிவம் கொண்டு முனிவர் பக்கம் சென்றார். இறைவர் பிட்சாடன வடிவங்கொண்டு முனிவர்தம் பத்தினிமார் பக்கம் சென்றனர்.

திருமாலும் சிவபெருமானும் முனிவர்தம் கொள்கையைச் சிதைத்தனர்.

இந்நிகழ்ச்சியில் இறைவர் பிரமகபாலத்தைக் கையிலேந்திப் பிச்சை ஏற்றார். பைரவர் இறைவனின் கூறாயிருத்தலினால், அவர் செயலை இறைவர் மேல் ஏற்றிக் கூறுவதுண்டு. பிரமன் தலை அறுத்தது சிவன் செயலாகவே தேவாரத்தில் கூறப்பட்டுள்ளது. அப்பர், ''படுவெண்டலையிற் பலிகொண்டுழல்வீர்'' என்றும், ''உலந்தார் தலையிற்பலி கொண்டுழல்வாய்'' என்றும் சுட்டுகிறார்.

## புலவனாய்ச் சங்கமேறியது

மதுரைப் பாண்டியமன்னன் ஐயத்தை நீக்கப் பைந்தமிழ்ப்புலவர் வழியறியாதிருந்தனர். இறைவர் அருளால் பாடல் பெற்றான் தருமி. அதன் பொருட்டுத் தமிழ்ச் சங்கத்திற்கு வந்தார்; நக்கீரருடன் வாதிட்டார்; தருமிக்குப் பொற்கிழி பெற்றுத் தந்தார். அத்திறத்தை அப்பர் தம் திருப்பத்தூர்த் தாண்டகமொன்றில் போற்றுகிறார்.

''மின்காட்டுங் கொடி மருங்கு லுமையாட் கென்றும் விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண், நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழிதருமிக்கருளி னோன்காண்'' என்று வரலாறு தழுவிய புராணச் செய்தியைக் கூறுகிறார்.

**நஞ்சம் உண்டது**

தேவர் முதலியோர் கூடி, இறைவன் அருட்பேறு இல்லாமல் சென்று திருப்பாற்கடலைக் கடைந்தனர். அப்போது கொடிய வடிவுடையதாக ஆலகால நஞ்சு தோன்றியது; உலகம் முழுவதும் நீராகப் பரவி அனல்போல் சீறி வந்தது. அது எல்லாரையும் வருத்தியது. அதுகண்டு அஞ்சிக் கயிலையில் சரண் புக்கனர். இறைவர் மனம் இரங்கி, அந்நஞ்சினை உண்டு அருளினார். அதை உமையம்மை கண்டத்திலேயே நிறுத்தினர்.

அப்பர், ''ஆலாலம் உண்டு கண்டம் கறுத்தானை'' என்று கூறுகிறார்.

''என்கடன் பணிசெய்து கிடப்பதே'' என்ற தொண்டு நெறியில் வாழ்ந்தவர் நாவுக்கரசர். அவர் உழவாரப் படையினைக் கையிலேந்தி, ஒண்டமிழப் பாமாலையை நாவிலேந்திச் சைவ சமயத்திற்கும் சமுதாயத் திற்கும் தொண்டாற்றினார். தம் பதிகங்களில் புராணச் செய்திகளைச் சுட்டிக் காட்டுகிறார். அவை கற்பார் கருத்துக்குக் கழிபேரின்பம் தருவன; இறைவர் ஆற்றலைப் போற்றுவன; அருள் திறத்தை உணர்த்துவன.

# 6. நாவுக்கரசரின் கொள்கை பரப்பல் உத்தி

கு.ப. அழகம்மை, காரைக்குடி.

இறைவனிடம் செலுத்தும் அன்பு பக்தியாகும். இறைப்பேறடைவ தொன்றே அதன் நோக்கமாகும். இந்நிலையில் புற உலகு பற்றிய சிந்தையோ நாட்டமோ உருவாகாது. தன்னளவில் மட்டுமே தலைப்பட்டு நிற்கும். ஆயின் திருநாவுக்கரசரின் பக்தி என்பது தாம் என்ற குறுகிய வட்டத்துள் அமையவில்லை. இறையருள் நாடி சமுதாயத்தை விட்டு ஒதுங்கிச் செல்லவில்லை. சமுதாயத்தினுள் ஊடாடிக் கொண்டு தம்மை மட்டும் ஆன்மீக நெறிக்கு உட்படுத்திக் கொள்ளவுமில்லை. சமுதாயம் முழுமையையும் திருத்தப்புகுந்த ஊடகமாக இவரது பக்தி தோற்றம் தருகிறது. வாழ்வை நெறிபடுத்தும் அறநெறி மதிப்புகள் பாடல்களில் உட்புதைக்கப்பட்டுள்ளன. நடைமுறை எதார்த்தங்களான நாட்டுநடப்புகள் முரண்பட்ட நிலையில் அதனை மாற்ற, மாற்று விழுமியங்களைப் பயிற்றுவிக்க உருவான கொள்கை பரப்பலாக நாவுக்கரசரின் பக்தி தோற்றம் தருகிறது.

நாவுக்கரசர் காலம் சமய இணக்கமற்ற காலம். வாழ்வியல் நடப்புக்கள் சமயப் போர்ராட்டத்தால் சிதைவுற்ற காலம். சமயங்களின் அடிப்படை உயிர்ப்பை, செவ்வியல் இலக்கை உணராது, வெளிப்பாட்டுச் செயல் களில் மட்டுமே கருத்துக்கொண்டு அவ்வளவிலேயே பிணக்குகளை உருவாக்கிக் கொண்ட காலம். இக்காலக் கட்டத்தில் மானுட வாழ்வியலைச் செம்மைப்படுத்த அதற்கான வழிமுறைகளை உருவாக்க வேண்டிய நிலையில் நாவுக்கரசரின் பக்தி சமூகச் சீர்திருத்தத்திற்கான தமது கொள்கையைப் பரப்ப மேற்கொண்ட உத்தியாகப் பரிமளிக்கிறது.

## நாவுக்கரசரின் கொள்கை

சமுதாயம் நல்நிலையில் திகழவேண்டுமெனில் அங்கு அல்வழிகள் களையப்பட வேண்டும். அதற்கு மக்கள் மனம், நலம் சார்ந்த செயலில் ஒருமைப்பட வேண்டும். அழியும் உலகப்பற்றை விடுத்து அழியாப் பேறடைய சிவன் மேல் பற்று வைக்க வேண்டும். இக்கொள்கை மனதில் பதிய வேண்டும் என்ற சிந்தை நாவுக்கரசர் பாடல்கள் முழுமையும் ஒலிக்கின்றது. கொள்கை பரப்பல் மூன்று நிலைகளை உடையதாகச் சமூகவியலார் கூறுவர்.

அவை : 1. மாற்றத்திற்கான கொள்கை பரப்பல், 2. பிரித்தாளும் கொள்கை பரப்பல், 3. திடமாக்கும் கொள்கை பரப்பல்.

இவற்றில் மாற்றத்திற்கான கொள்கை பரப்பல் என்பது (Conversionary Propaganda) மக்களது மனப்பான்மையையும் எண்ணங்களையும் மாற்றி அமைப்பதற்காக மேற்கொள்ளப்படும். பிரித்தாளும் கொள்கை பரப்பல் (Divisive Propaganda) என்பது மக்களிடம் பிளவை உண்டு பண்ணித் தம் ஆதிக்கத்தை அவர்கள் மேல் நிலை நிறுத்தக் கையாளும் முறையாகும். திடமாக்கும் கொள்கை பரப்பல் என்பது மக்கள் ஏற்கனவே கொண்டுள்ள மனப்பான்மையினையும் பழக்கங்களையும், எதிர்நோக்கும் பயன்களையும் இன்னும் உறுதியுடன் கடைப்பிடிக்க மேற்கொள்ளப் பெறுவது. குடும்பம், கல்வி நிலையங்கள், பொழுதுபோக்கு மன்றங்கள், அலுவலகம், ஒருவர் சேர்ந்துள்ள சமயம் போன்றன. இக்கருத்துப் பரப்பலில் ஈடுபடுகின்றன.

**மாற்றத்திற்கான கொள்கை பரப்பல்**

மக்கள் சமண சமயம் கூறும் புறவயக் கொள்கைகளில் தம்மை மாய்த்துக் கொள்ளக்கூடாது. அடிப்படைச் சிந்தையுள்ள சைவ சமயத்தை நாட வேண்டும் என எண்ணம் கொண்ட நாவுக்கரசர் தம் கொள்கையை எதிர்நிலைப்படுத்தி உரைக்கவில்லை. மாறாகச் சமணர்களின் பண்புகளை,

"பீலிகையிடுக்கி நாளும் பெரியதோர் தவமென்றெண்ணி"

தட்டிடு சமணரோடே
தட்டையிடுக்கத் தலையைப் பறிப்பார்
தட்டிடுக்கி பறிதூக்கி

"கடுப்பொடியட்டி மெய்யிற்"

"தடுக்கால் உடல்மறைத்து"

என்று தோற்றத்தை எடுத்துரைப்பதிலும்

"பாசிப்பன் மாசு மெய்யர் பலமில்லாச் சமணரோடு"

"மாசினை யேறியமேனியர்"

"வீங்கிய தோள்களுந் தாள்களுமாய்"

என்று உடல் சுத்தம் பேணும் கொள்கையரல்லர் என்பதை அடைமொழி யாலும் மக்கள் மனதில் பதியவைக்க முயல்கிறார். தவிர உடல் சுத்தத்தோடு உள்ளமும் மாசின்றி அமைய வேண்டும். அப்பொழுதுதான் சமுதாயம் நலமுறும் என்ற கொள்கையையும்,

"குண்டனாய்ச் சமண ரோடே கூடி நான்" (4:385)

"தட்டிடு சமண ரோடே தருக்கி நான்" • (4:386)

"துறவி என்ற வமதோரேன்" (4:389)

"பல்லுரைச் சமண ரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவு செய்தேன்" (4:390)

என்று தம்மை நொந்துகொள்ளும் தோற்றத்தில், புலம்பல் நிலையில் சமண கொள்கை இயல்பு வாழ்வுக்கு ஏற்றதன்று என்பதை உணர்த்தும் முகமாக எடுத்தியம்புகின்றார்.

### பிரித்தாளும் கொள்கை பரப்பல்

சமண சமயத்திற்கும் சைவ சமயத்திற்கும் உள்ள மாறுபட்ட கொள்கைகளை அடைமொழியாக, தம்மை நொந்து கொள்ளும் முகமாக, கடிந்து கொள்ளும் பாங்கில் எடுத்துரைக்கின்றார். அக்கொள்கைகள் ஏற்புடையதன்று எல்லோரும் சிவனடிப் பேறடையும் வழி காட்டும் சைவத்தை நாடுங்கள் என்று நேரடியாகப் பிளவுபடுத்திக் கூறாமல் சிவனை உயர்த்தும் வழியிலும், உய்வு பெற்ற நிலையை,

யாதும் சுவடு படாமல்
ஐயாறடை கின்றபோது
காதல் மடப்பிடியோடும்
களிறு வருவன கண்டேன்

என்று படிநிலைப்படுத்திக் கூறும் வழியிலும் தம் கொள்கையைப் பரப்புகின்றார்.

### திடமாக்கும் கொள்கை பரப்பல்

சிவப்பற்று உடையவர்கள் அதில் ஊன்றித் திளைக்க தாம் உணர்ந்த சிவானுபவத்தைப் படிநிலைப்படுத்திக் கூறுவதுடன் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நால்வகை நன்னெறிகளை அறிவுறுத்தத் தாம் பெற்ற சுகானுபவத்தையே தம் கொள்கையைப் பரப்புதற்குரிய கருவியாக்குகின்றார். சரியை - திருக்கோயில்களில் அலகிடல், மெழுகுதல், மலர்கொய்து மாலை தொடுத்தல், இறைவனைப் புகழ்ந்து பாடுதல் முதலாக உடம்பின் தொழில்களாக நிகழ்வது. இதனை,

"பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி
..................................................................
விரும்பி நல்விளக்குத்தூபம் விதியினா லிடவல்லார்க்குக்
கரும்பினிற்கட்டி போல்வார் கடவூர் வீரட்டானரே" (4:31:4)

என்றும்,

### கிரியை

திருக்கோயிலில் எழுந்தருளிய சிவலிங்கத் திருவுருவாகிய அருவுருவத் திருமேனியே பொருளென்று உணர்தல். அத்துடன் புறத்தும் அகத்தும் பூசை புரிந்து வழிபடுதல் ஆகியன சிறந்ததென்பதை,

"கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேன்" (4:7:3)

என்றும்,

**யோகம்**

இறைவனுக்குரிய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளுள் அருவுருவத் திருமேனியே சிறந்த பொருளென்றுணர்ந்து இறைவனை உள்ளத்துள் வைத்து வழிபடுதலாகும். இதனை,

உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படுமுணர் நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே. (4:75:4)

என்றும்

**ஞானம்**

உருவம், அருவம், அருவுருவம் என முத்திருமேனிகளையும் வழிபட்டுவர ஆன்மாவினுள் நிகழும் பக்குவ முதிர்ச்சியால் மெய்யுணர்வு பெற்றுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கைகூடுதல் என்று அறிவின் வழி இறைவனை வழிபடுதலாகும். இதனை,

ஞானத்தால் தொழுவர் சிவஞானிகள்
ஞானத்தால் தொழுவேனுனை நானலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தாலுனை நானுந் தொழுவேனே. (5:91:3)

என்றும், உரைப்பதன்வழி, சிவ வழிபாட்டில் ஈடுபட்டோர் மேலும் அதில் திளைக்க, ஊன்ற, மாறாச் சிந்தையுற தம் அனுபவத்தைக் கூறும் வழி ஆற்றுப்படுத்துதல், திடமாக்கும் கொள்கை பரப்பலாய்த் தோற்றம் தருகிறது.

இறைவனிடம் எந்த அளவு பக்தியில் திளைத்தாரோ அதே நிலையில் சமுதாயத்திலும் பற்று வைக்கின்றார். பார்க்கும் இடமெல்லாம் இறைவன் நீக்கமற நிறைந்துள்ள உணர்வு உடையமையால் தானிருக்கும் சூழலைத் தூய்மைப்படுத்த மனம் தூண்டுகிறது. சூழல் சுகமாக இருந்தால் மட்டுமே இறை இன்பத்தை அனுபவிக்க முடியும். அதனாற்றான் முனிவர்கள் காட்டை நோக்கினர் தவத்திற்கு. சுற்றுச் சூழல் நலமாக இருக்க வேண்டும் என்று போதிக்கவில்லை. ஆக்கப்பூர்வமான உழவாரத் தொண்டில், களமிறங்குதலில் உணர்த்துகின்றார். இதனை,

''எம்பெருமான் வாகீசர் உழவாரத்தினில் ஏந்தி
வம்பு அலர்மென் பூங்கமல வாவியினில் புகஎறிந்தார்''

(பெரி.திரு. 417)

என்று பெரியபுராண வரிகள் உணர்த்துகின்றன.

நாவுக்கரசர் பாடல்களில் காணப்படும் செய்திகள் அற்றைச் சமுதாயச் சூழலைத் தெற்றெனப் புலப்படுத்துகின்றன. அதே நிலை தொடர்வுறின் சமுதாயம் சீர்கேடுறும். இறைப்பற்று இன்றி மேலோட்டமான தோற்றப் பொலிவாலும், செயல்பாடுகளாலும் பிணக்குற்று மானுடம் வீழ்ச்சியுறும் என்ற தம் எண்ணத்தை நேரடியாகச் சொல்லவில்லை. சொல்வதினும் களத்தில் தாமே இறங்குதல் சாலச் சிறந்ததென எண்ணுகின்றார். நல்ல கொள்கையை, சிந்தையை உணர்த்துதற்குப் பக்தியை ஊடகமாக்குகிறார். மன ஒருமைப்பாட்டை உருவாக்குதல் அதனால் பிற நாட்டங்களைப் பின்னுறச் செய்தல் அதனால் உருவாகும் நற்சிந்தையின் வளர்நிலையில் அரசும் சமுதாயமும் அறவழியைப் பின்பற்றும் நிலையை உருவாக்கல் ஆகிய கொள்கைகள் இவரது பாடல்களில் உட்புதைந்த கருத்துக்களா கின்றன. இந்நிலையில் அகமும் புறமும் தூய்மையாக, செய்யும் தொழிலே தெய்வமென்ற நிலையில் இறைப்பேறடைதல் இயல்புறும் என்ற கொள்கை நாவுக்கரசரின் பக்தியில் சிறப்புற்றொளிர்கின்றது.

# 7. வரலாறாக வாழும் நாவுக்கரசர்

பு. அறிவுடைநம்பி, நயம்பாடி.

தமிழக வரலாற்றில் ஏழாம் நூற்றாண்டு பொன்னேட்டில் பொறிக்கத் தக்கதாகும். அது சைவ சமய மறுமலர்ச்சியை உண்டாக்கியது. சமுதாயத்தில் புரட்சியைத் தோற்றுவித்தது. மன்னனும், மக்களும் புறச்சமயத்தில் மயங்கிய காலம். அம்மன்னனுக்கும், மக்களுக்கும் அகச்சமயமான சைவ சமய உண்மைகளைத் தெளிவித்த காலம். பக்தி மார்க்கத்தைப் பட்டிதொட்டியெல்லாம் பரவச்செய்த காலமிது. இந்த நூற்றாண்டில்தான் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் சைவசமய விடிவெள்ளிகளாகத் தோன்றினர். சைவசமயக்குரவர் நால்வரில் திருநாவுக்கரசர் பெரிதும் மதிக்கத்தக்க மாண்புடையவர். இவர் நடையறாப் பெருந்துறவி ஆவார். ''என் கடன் பணிசெய்து கிடப்பதுவே'' என்ற உயர்ந்த இலட்சியப் பயணத்தை வாழ்நாள் முழுவதும் மேற்கொண்டவர். இவர் இளமையில் பல்சமய மெய்ப்பொருள் உண்மைகளை அறிய நாட்டம் கொண்டார். அவற்றைத் தேடிக் கண்டறியும் முயற்சியில் ஈடுபட்டார். தாமறிந்த பல்சமய உண்மைகளில் சைவமே சால்புடையது என்று உறுதியாக நம்பினார். தாம் இளமை முதல் முதுமை வரை கண்டுணர்ந்த மெய்ப்பொருளையும், அனுபவ இன்பத்தையும் மக்களுக்கு எடுத்தியம்பினார். மக்களை நெறிப் படுத்தும் முயற்சியில் ஈடுபட்டார்.

பலர் வரலாற்றைப் படிக்கிறார்கள். ஒருசிலர் வரலாற்றைப் படைக்கிறார்கள். கோடியில் ஒருவர் வரலாறாகவே வாழ்கிறார்கள். திருநாவுக்கரசர் வாழ்க்கை மாபெரும் வரலாறாகும். அவரது வாழ்க்கை வரலாறு எளிமையும், ஏற்றமும் உடையது. ஆன்ம ஈடேற்றம் அடைய விரும்புவோர்க்கு அவருடைய வாழ்க்கை கலங்கரை விளக்காகும். அவர் வாழ்வும் வாக்கும் வழுக்கு நிலமாகிய வாழ்க்கைக்கேற்ற ஊன்று கோலாகும். அவருடைய அருளிச்செயலான தேவாரம் சாத்திரமாகவும், தோத்திரமாகவும் அமைந்து சிவத்தை உணர்த்தும் ஞானச் செல்வமாகும். குடியாட்சித் தத்துவத்திற்கு வித்திட்ட வால்டேர், ரூசோ போன்ற புரட்சி யாளர்களுக்கு ''யாமார்க்கும் குடியல்லோம்'' என்ற வாசகத்தின் மூலம் முன்னோடியாகத் திகழ்ந்தவர். திருநாவுக்கரசர் மேற்கொண்ட உண்ணா நோன்பும், சத்தியாகிரகமும், தர்மகர்த்தா முறையும் அண்ணல் காந்தியடி களுக்கு வழிகாட்டின. பலர் வாழும்போது இறந்து விடுவார்கள். சிலர்

இறந்த பின்பும் வாழ்கிறார்கள். இறவாப் புகழ்படைத்த திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றை, அவர் அருளிய தேவாரம், சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணம் இவற்றினைக் கொண்டு இக்கட்டுரையில் காண்போம்.

## திருநாவுக்கரசரின் நாடும், ஊரும், பேரும்

தமிழகத்தில் நடுநாடு என்பது திருமுனைப்பாடி நாடு என்றும் அழைக்கப்பட்டது. திருமுனைப்பாடி நாட்டைச் சேக்கிழார் பெருமான்,

> "சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகள்
> மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு"

என்று பாராட்டுவார். அந்நாட்டில் திருவாமூர் என்பது ஒரு சிற்றூர். அவ்வூரில் புகழனார் என்னும் வேளாளர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரது வாழ்க்கைத் துணைவியர் மாதினியார். இவர்கள் இல்லறமாம் நல்லறத்தில் தலைசிறந்து விளங்கினர். சிவனடியார்களை வணங்கி, வரவேற்று விருந்துபசரிக்கும் இயல்பினான். அவ்விருவர்க்கும் திலகவதியார் என்பார் திருமகளாகப் பிறந்தார். அவர் பிறந்த சில ஆண்டுகளுக்குப் பின்னர் சைவ சமய மறுமலர்ச்சிக்கு வழிகாட்ட ஓர் ஆண்மகவு பிறந்தது. அக்குழந்தைக்குப் பெற்றோர்கள் மருள்நீக்கியார் என்று பெயரிட்டுப் பாலூட்டித், தாலாட்டிச் சீராட்டி வளர்த்தனர். மருள்நீக்கியார் இவ்வுலகில் பிறந்ததைத் தெய்வப் புலவர் சேக்கிழார்,

> "அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
> உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
> மலருமருள் நீக்கியார் வந்துவதா ரஞ்செய்தார்"

என்று பாடுவார்.

இத்தெய்வக் குழந்தை நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமாக வளர்ந்தது. பாலபருவத்தில் இவரைப் பெற்றோர் பல கலைகளைப் பயிலச் செய்தனர். இளமையில் பல கலைகளும் பயின்று மறுவிலா இளம்பிறைபோல் விளங்கினார். பின்னாளில் மருள்நீக்கியார் திருநாவுக்கரசர், அப்பர், வாகீசர், தாண்டகவேந்தர் போன்ற பல பெயர் களால் அழைக்கப்பட்டார். இவர் அருளிய பாடல்கள் தேவாரத்தில் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளில் அமைந்துள்ளன.

## விதி செய்த சோதனை, வேதனை

திலகவதியார் பருவமங்கையாக வளர்ந்தார். உருவும், திருவும், உயர் பேரொழுக்கமுடைய கலிப்பகையார் பெரியோர் சிலரைப் புகழனாரிடம் அனுப்பி, திலகவதியாரை மணம் பேசி வர அனுப்புகிறார். கலிப்பகை யாருக்குத் திலகவதியாரை மணம் செய்து கொடுக்கப் புகழனார்

இசைவளிக்கிறார். இருவரின் திருமணம் உறுதி செய்யப்படுகிறது. இந்நிலையில் வடநாட்டுப் பகை மன்னரின் படையெடுப்பைத் தடுக்க, தமிழகவேந்தன், கலிப்பகையாரைப் படைத்தலைவராக நியமித்துப் படைகளுடன் வடநாட்டிற்கு அனுப்புகிறான். போர் பல மாதங்கள் நடைபெறுகிறது. இவ்வேளையில் புகழனார் நோய்வாய்ப்பட்டு விண்ணுலகையடைகிறார். கணவர் பிரிவாற்றாது மாதினியார் உயிர் துறக்கிறார். தாயையும், தந்தையையும் இழந்து, கடலிடை அகப்பட்ட துரும்புபோலத் திலகவதியும், திருநாவுக்கரசரும் தவிக்கின்றனர். உற்றார் உறவினர் ஆறுதல் கூறித் தேற்றுகின்றனர். கலிப்பகையார் போர்க்களத்தில் தம் வீரத்தை வெளிப்படுத்தி தம் இன்னுயிரை ஈந்து புகழுடம்பு அடைந்தார். திலகவதியார் இத்துயரச் செய்தி கேட்டு அனலிடைப்பட்ட மெழுகாய் உருகினார். யாம் அவர்க்குரிய பொருள், இவ்வுடம்பைத் துறந்து எம்முயிரை அவருயிரோடு சேர்ப்பிப்பேன் எனக் கூறி உயிர்விடத் துணிகிறார். ''பெற்றோரை இழந்து, தமக்கையாகிய உம்மையே அடைக்கலமாக உடையேன். எம்மை விட்டுச் செல்வீராயின், யானும் உமக்குமுன்னே உயிர்விடுவேன்'' எனக் கூறி திருநாவுக்கரசர் உயிர்விடத் துணிகிறார். தம்பி வாழ, தாம் வாழ வேண்டியது அவசியம் என உணர்கிறார். திலகவதியாரின் தவவாழ்க்கையைச் சேக்கிழார் பெருமான் "இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதியார் இருந்தார்'' என்று பாடுவார்.

## திருநாவுக்கரசர் சமண சமயத் தலைவராதல்

திருநாவுக்கரசர் பல்சமய உண்மைகளை அறிய விரும்பினார். அக்காலத்தில் பாடலிபுத்திரத்தில் (கடலூர்) சமணப் பள்ளிகளும், பாழிகளும் இருந்தன. சமணர்கள் அளவைநூல், உயிரிரக்கம் ஆகியவற்றைத் தமிழகத்தில் பரப்பும் பணியில் ஈடுபட்டனர். அவற்றில் பெரிதும் ஈடுபாடு கொண்ட திருநாவுக்கரசர் அச்சமய உண்மைகள் அறிய பாடலிபுத்திரம் சென்று சமய நூல்களைக் கற்கலானார். சமணமே மெய்ச்சமயம் என்றெண்ணி சமணசமயப் பற்றாளரானார். பேரின்ப வீடடைய சமணமே ஏற்ற சமயம் எனச் சமணர் இவரைப் பற்றுக்கொள்ளச் செய்தனர். அச்சமயம் தழுவி, மேலும் அரிய நூல்கள் பல கற்று சமண சமய வித்தகரானார். இவரின் புலமையும் ஆற்றலும் கண்ட சமணர்கள், இவருக்குத் தருமசேனர் என்ற பட்டம் வழங்கிப் பாராட்டினர். அவரைத் தம் சமணத் தலைவராகவும் ஏற்றுக் கொண்டனர். புத்தரில் ஒரு பிரிவாகிய தேரரை வாதில் வென்றார். தருமசேனரின் புகழ் நாடெங்கும் பரவியது.

## திலகவதியார் வேண்டுகோளும், அம்பலவாணரின் திருவிளையாடலும்

இந்நிலையில் திலகவதியார் திருவதிகைத் திருவீரட்டானம் திருக்கோயிலை வந்தடைந்தார். நாளும் வைகறையில் துயிலெழுந்து,

நீராடிச் சிவச்சின்னங்களை அணிவார். திருக்கோயிலை மெழுகுதல், கோலமிடல், மலர்கொய்து மாலைதொடுத்து வழங்குதல் ஆகிய திருப்பணி களில் ஈடுபட்டு வந்தார். புறச்சமயத்தில் வாழும் தம் தம்பியை விடுவித்து வாழ்விக்க வேண்டுமென நாள்தோறும் இறைவனிடம் வேண்டுவார். இறைவன் அவ்வம்மையாரின் கனவில் தோன்றி, ''நும்தம்பி முன்பே முனிவனாகி எம்மையடைய தவச் செய்துள்ளான். அவனுக்கு சூலைநோய் தந்து ஆட்கொள்வோம் நும்கவலை ஒழிக'' என்று அருள்புரிந்தார். அவ்வண்ணமே தருமசேனர் வயிற்றில் சூலைநோய் வந்து பற்றுகிறது. அந்நோயால் துடித்தார், அழுதார், புரண்டார். சமணத் துறவியர் குண்டிகை நீரை மந்திரித்துக் கொடுத்தனர். மயிற்பீலியால் தடவிக் கொடுத்தனர். ஆனால் அவர்களால் அந்நோயைப் போக்க இயலவில்லை.

நோயால் துன்புற்ற தருமசேனர் தமக்கையாரை நினைந்து ஏங்கு கிறார். தம் துன்பத்தைத் தமக்கையாரிடம் தெரிவிக்குமாறு தம் பணியாளரை அனுப்புகிறார். திலகவதியாரிடம் சூலைநோயால் வாடும் திருநாவுக்கரசரின் துயர நிலையைப் பணியாளர் எடுத்துரைக்கிறார். ''யாம் உம்முடன் அமண்பாழிக்கு வருவதற்கில்லையெனக்'' கூறுகிறார். தருமசேனரையடைந்து, தமக்கையார் கூறியதைப் பணியாளர் தெரிவிக்கிறான். தருமசேனர் திருவதிகை சென்று தமக்கையாரின் திருவடிகளைப் பணிந்து உய்வு பெறுவேன் எனக் கூறிச் சமய சின்னங்களைத் துறந்து, வெள்ளாடை உடுத்தி, தமக்கு வேண்டிய சிலருடன் இரவோடு இரவாக திலகவதியார் உறையும் திருமடம் வந்தடைகிறார். தமக்கையார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். சூலைநோய் தாங்காமல் உம்மைச் சரணடைந்தேன் என்று புலம்பினார். ''நும்மைப் பற்றிய இந்நோய் சிவபெருமானின் திருவருளே ஆகும். இறைவன் கழலடிகள் பணிந்து துன்பம் நீங்குவீராக'' என்றார். திலகவதியார் தம்பிக்குத் திருநீறு அளிக்கிறார். திருநாவுக்கரசர் மெய்யெலாம் நீறுபூசிக்கொண்டு திருவீரட்டானப் பெருமானைப் பணிந்து, தம் சூலைநோய் போக்குமாறு ''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' என்று பாடித் துதித்தார். இத்திருப்பதிகத்தைப் பாடியபோது, இதுவரை அவரை வாட்டி, வதைத்த சூலைநோய் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. இறைவனின் திறம்வியந்து பலவாறு போற்றுகிறார். வானில் அசரீரி தோன்றி, ''நற்றமிழ்ப் பதிகம் பாடி நம்மை மகிழ்வித்த உமக்கு இனி நாவுக்கரசு என்ற திருப்பெயர் வழங்குவதாக'' என்ற திருவாக்கு யாவரும் கேட்க வானில் ஒலித்தது. அன்று முதல் மருள்நீக்கியார் திருநாவுக்கரசர் என்ற திருப்பெயரால் அழைக்கப்பட்டார்.

**சமணர் தம் சூழ்ச்சியும், திருநாவுக்கரசரின் மீட்சியும்**

திருநாவுக்கரசர் சைவநெறி சார்ந்ததைக் கேள்வியுற்ற சமணர்கள் மனம் பொருமினர். அவரின் சூலைநோயைத் தங்களால் போக்க

இயலாமையை மன்னன் அறிந்தால் வெகுள்வான். தருமசேனர் சைவ நெறியைக் கடைப்பிடிக்க விரும்பி, தமக்குச் சூலைநோய் வந்ததாகப் பொய் கூறி, அதனை நம்மால் தீர்க்க முடியவில்லையென நம் சமயத் திற்குப் பழி உண்டாக்கி, நம்மையும், நம் சமயத்தையும், நம் கடவுளரையும் இகழ்ந்தாரென்று பல்லவ மன்னன் மகேந்திரனிடம் வஞ்சகமாக முறை யிட்டனர். வெகுண்ட மன்னன் தம் சமயத்தைப் பழித்த தருமசேனரைக் கொண்டுவரப் பணித்தான். அரசன் ஆணை கேட்ட திருநாவுக்கரசர் ''யாமார்க்கும் குடியல்லோம்'' என்ற சுதந்திர உணர்வை வெளிப் படுத்தினார். அமைச்சர்களின் வேண்டுகோளுக்கிணங்க பல்லவன் அரண்மனை வந்தடைந்தார். சமணர்களின் சூழ்ச்சிக்குட்பட்ட மன்னன், அவர்களின் விருப்பத்திற்கிணங்க, நாவசரை நீற்றறையில் தள்ளுமாறு கட்டளையிட்டான், அவர் சுண்ணாம்புக்காளவாயில் தள்ளிப் பூட்டப் படுகிறார்.

அக்கொடிய காளவாயைத் திருநாவுக்கரசர் இறைவன் அருளால்,

**''மாசில் வீணையும், மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நீழலே''**

என்று இன்பம் பயந்ததாகப் பாடினார்.

ஏழு நாட்களுக்குப் பின் நீற்றறையைத் திறந்து பார்க்க நாவரசர் நலமுடன் வெளிப்பட்டார். வியப்புற்ற சமணர்கள் அவரை நஞ்சூட்டிக் கொல்ல வேண்டுமென அரசனை வலியுறுத்தினர். அரசன் ஆணைப்படி நஞ்சுணவு அளிக்கப்படுகிறது. ''நாதன் அடியார்க்கு நஞ்சும் அமுதாம்'' என்று நாவுக்கரசர் பாடிக்கொண்டே நஞ்சுணவை உண்டு, தீங்கின்றி உயிருடன் விளங்கினார்.

நஞ்சுண்டு சாகாமல் பிழைத்ததைக் கண்ட சமணர் மேலும் வெறுப்புற்று இவனை விட்டு வைத்தால் நம் அரசும், சமயமும் நாசமாகிவிடுமென்று அரசனிடம் தெரிவித்தனர். அரசன் இனி செய்வதென்ன என்று கேட்கப் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து விட்டு அதன் காலால் மிதிக்கச் செய்து கொல்ல வேண்டுமென்றனர். அம்மன்னனும் அவ்வாறே செய்யப் பணித்தான். மலை வருவது போல யானை அவரை நோக்கி வெகுண்டு வந்தது. அதைக் கண்டு சிறிதும் அஞ்சாமல் ''கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம் அஞ்சுவது யாதொன்றுமில்லை. அஞ்ச வருவதும் இல்லை'' என்று பாடினார். அவரைக் கொல்ல வந்த மதக்களிறு அன்புருவான சிவனடியாராய் விளங்கும் நாவுக்கரசரைக் கொல்லாது அவரை வலம்வந்து, அவர் எதிரே துதிக்கையைத் தாழ்த்தி

வணங்கி அவ்விடம் விட்டகன்றது. மேலும் அவ்யானை பாகனைக் கொன்று வீழ்த்தியும், சமணர்கள் மீது பாய்ந்து மிதித்தும் மக்களை வெகுண்டோடச் செய்தும் இங்கும் அங்கும் அலைந்தது.

நம்மிடம் கற்ற மந்திரவலிமையால் நாவரசர் தப்பிவிட்டார் என்று அவரைக் கல்லுடன் கட்டிக் கடலில் தள்ள வேண்டினர். அரசன் ஆணையால் திருநாவுக்கரசர் கல்லோடு கயிறுகளால் பிணித்துக்கட்டிப் படகிலேற்றி நடுக்கடலில் தள்ளப்பட்டார்.

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

என்று பாடினார்.

கயிறுகள் அறுந்தன. கல் தெப்பமாயிற்று. அதிலே மிதந்து கரையேற விட்ட குப்பத்தில் கரையேறுகிறார்.

வஞ்சகச் சமணர்களின் புறங்கூறிய சொற்கேட்டு, நாவுக்கரசருக்குப் பல்லவ வேந்தன் இங்ஙனம் பல்வகைத் துன்பங்களை இழைத்தான். அத்துன்பங்களிலிருந்து அவர் நீங்கப் பெற்றமை அறிந்த பல்லவ வேந்தன் தன் தவற்றை உணர்ந்தான். நாவுக்கரசரின் காலடியில் வீழ்ந்து வணங்கித் தன்னை மன்னித்தருளுமாறு வேண்டினான். பாடலிபுரத்திலுள்ள பாழிகளையும், பள்ளிகளையும் இடித்துத் தள்ளினான். அரசன் சைவ நெறித் தழுவினான். மக்களும் சைவ நெறி போற்றினர். திருவதிகையில் சிவபெருமானுக்குக் கோயில் கட்டிக் குணதரவீச்சரம் என்று பெயரிட்டு நாளும் வழிபாடு நடைபெற ஆவன செய்தான்.

### திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் நட்பும், தலப்பயணமும்

"தோடுடைய செவியன் என் உள்ளம் கவர் கள்வன்" என்று இறைவனைத் தம் தந்தையார்க்குச் சுட்டிக்காட்டிய காழிப்பிள்ளையின் அற்புதத்தைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர் சீர்காழியை நோக்கி வருகிறார். சூலை நோயால் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட நாவுக்கரசர் வருகிறார் என்பதறிந்து காழிப்பிள்ளை எதிர் கொண்டு அழைக்க வருகிறார். இருவரும் ஒருவரையொருவர் வணங்கிக் கட்டித் தழுவிக் கொள்கின்றனர். காழிப்பிள்ளை நாவுக்கரசரை அப்பரே என்று அழைக்கிறார். அன்று முதல் அப்பர் என்ற திருப்பெயரும் அவருக்கு உண்டாயிற்று. இருவரும் தோணிநாதனைப் பல பாடல்கள் மூலம் பாடி வழிபட்டனர். சோழநாட்டுத் தலங்களைச் சேவிக்க விரும்பிய நாவரசர், காழிப்பிள்ளையிடம் விடைபெற்றுச் செல்கிறார்.

திருப்புகலூரில் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் மீண்டும் இரண்டாம் முறையாகச் சந்தித்தனர். பின், திருவாரூர் சென்று வழிபட்டுத் திரும்பி வருவதாகக் காழிப்பிள்ளை, அப்பரிடம் கூறி விடைபெற்றுச் செல்கிறார். நாவுக்கரசரும் செங்காட்டங்குடி, நள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் ஆகிய தலங்களைத் தரிசித்துவிட்டு மீண்டும் திருப்புகலூர் வர, அங்கு மீண்டும் வந்த காழிப்பிள்ளையுடன் தங்குகிறார். அப்போது சிறுத்தொண்டர், திருநீலநக்கர், முருகநாயனார் ஆகிய அடியார்கள் இவ்விருவரையும் கண்டு வணங்கி அளவளாவி மகிழ்ந்து விடை பெற்றுச் செல்கின்றனர்.

மூன்றாம் முறையாகக் காழிப்பிள்ளையும், திருநாவுக்கரசரும் அம்பர் திருக்கோயிலை வழிபட்டுத் திருக்கடையூர் சென்று வழிபடுகின்றனர். திருக்கடையூரில் இருவரும் குங்குலியக்கலய நாயனார் திருமடத்தில் தங்கித் திருவமுது செய்கின்றனர். ஆக்கூர், மீயச்சூர் தலங்களை வணங்கி திருவீழிமிழலை வருகின்றனர். திருவீழிமிழலையில் சிவபெருமானிடம் இருவரும் தனித்தனியே படிக்காசு பெற்று மக்களின் பஞ்சம் தீர்த்தனர். பின் இருவரும் கொண்டீச்சுரம், திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருப்பேரெயில் வழியாக திருமறைக்காட்டை அடைகின்றனர். அங்கு வேதங்களால் மூடப்பட்ட கோயில் தலைவாசல் கதவுகளை நாவுக்கரசரும், காழிப்பிள்ளையும் பல பதிகங்களைப் பாடி முறையே திறக்கவும், மூடவும் செய்கின்றனர். அன்று முதல் மக்கள் தலைவாசல் வழியே சென்று இறைவனை வழிபடலாயினர்.

திருநாவுக்கரசருக்கு ஒரு மனவருத்தம். தாம் பல பாடல்கள் பாடிய பிறகே திருக்கதவம் திறந்தது. ஆனால் காழிப்பிள்ளை ஒரு பாடல் பாடியதும் கதவு மூடிக்கொண்டது. காழிப்பிள்ளைக்கு நிகரான பக்தி உறைப்பு தமக்கு இல்லையோ எனத் துயிலாமல் கண் விழித்திருந்தார். அவருடைய மனக்கவலையைப் போக்க, இறைவன் அவர் கனவில் தோன்றி திருவாய்மூருக்கு வருமாறு அழைக்கின்றார். இறைவன் வழி காட்டுதல் மூலம் நாவுக்கரசர் திருவாய்மூருக்குச் செல்கிறார். இதை மறுநாள் கேள்வியுற்ற காழிப்பிள்ளையும் திருவாய்மூர் செல்கிறார். திருவாய்மூர் இறைவன் தம் ஆடல்காட்ட அதை இருவரும் கண்டு, தொழுதேத்தி மகிழ்கின்றனர். இருவரும் மீண்டும் மறைக்காடு வருகின்றனர். அப்போது பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் அனுப்பிய தூதர் காழிப்பிள்ளையை வணங்கி, அங்கு சமணர்கள் செய்யும் கொடுமையைக் கூறி, சைவம் தழைக்க வருமாறு அழைக்கின்றனர். அப்பரடிகள் செல்ல வேண்டாமெனத் தடுக்கிறார். ஐந்தெழுத்தையும், திருநீற்றையும் நினைந்து அவற்றைத் துணையாகக் கொண்டு, காழிப்பிள்ளை மதுரை புறப்படுகிறார். ஆளுடைய அரசும், ஆளுடையப் பிள்ளையும்

ஒருவர் மீது மற்றவர் வைத்துள்ள அன்பும், மதிப்பும் நட்பும் இதனால் விளங்கும்.

## அப்பரடிகளும், அப்பூதியடிகளும்

நாவுக்கரசர் திருப்பழனம் வழியாகத் திங்களூர் செல்கிறார். அங்கே உள்ள மடம், தண்ணீர்ப் பந்தல், அன்னதானச் சாலை ஆகியவற்றுக்குத் திருநாவுக்கரசர் என்ற தம்பெயரிடப்பட்டது கண்டு வியக்கிறார். அங்கே இதுபற்றிக் கேட்கிறார். இவ்வூரில் அப்பூதியடிகள் என்ற அந்தணர் இருப்பதாகவும், அவர் நாவரசர் மீது கொண்ட அன்பால் அவர் பெயரிட்டுத் தருமங்கள் பல செய்து வருவதாகவும் அறிகிறார். அவரில்லம் செல்கிறார். அப்பூதியடிகளிடம் "உம் பெயரிடாமல் வேறொருவர் பெயரிட்டதேன்" எனக் கேட்கிறார். "சமணின் சூழ்ச்சிகளைத் திருத்தொண்டின் உறைப்பாலே வென்றருளிய நாவுக்கரசரின் திருப்பெயரா வேறொருவர் பெயர்?" என்று வெகுண்டு பேசினார். வந்தவர் நாவுக்கரசர் என்றறிந்து அவரது தாள் பணிந்து விருந்துண்ண வேண்டுகிறார். மூத்த திருநாவுக்கரசு வாழையிலை அறுக்கச் சென்றபோது பாம்பு தீண்டி இறந்துவிடுகிறார். பெற்றோர் அதை மறைத்து விருந்து உபசரிக்கின்றனர். உண்மை அறிந்த நாவரசர்,

"ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்று கொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாமவர் ஊர்வது தானே"

என்று பாடி விடம் நீக்கி அவனை உயிர்ப்பிக்கிறார். பின் விருந்துண்டு சில நாள் தங்கி மகிழ்கிறார். நாவரசரின் ஆற்றல் இங்கே புலப்படும்.

## திருநாவுக்கரசரின் திருக்கயிலாயத் திருப்பயணம்

திருக்காளத்தி நாதனைப் போற்றி வணங்கிய நாவரசர் திருக்கயிலாயக் காட்சிகாணப் புறப்பட்டார். வழியில் திருப்பருப்பதம், கோகர்ணம் மற்றும் கிருஷ்ணா, கோதாவரி, மகாநதிகளில் அமைந்த புண்ணியத் தலங்களை வழிபட்டுக் காசி சென்று விசுவநாதரை வழிபடுகிறார். தம்முடன் வந்த அடியார்களைக் காசியிலே இருக்குமாறு பணித்து விட்டுத் தாம் மட்டும் கயிலைமலை நோக்கி நடக்கிறார். ஆறு, காடு, மலைகளைக் கடந்து செல்கிறார். உடலும், உள்ளமும் சோர்வடைகிறது. ஊர்ந்து போகிறார். ஊர்ந்து செல்லவும் இயலாமல் ஓரிடத்தில் சோர்வுற்று வீழ்ந்து கிடந்தார். அப்போது கயிலைநாதன் அங்கே ஒரு தடாகத்தைத் தோற்றுவித்து ஒரு முனிவராய் அவர்முன் தோன்றினர். நாவுக்கரசரிடம் "நீர் எங்கு செல்கிறீர்?" என வினவுகிறார். நாவுக்கரசர் மலைமகளோடு உடனுறையும் கயிலை நாதனைக் காணச் செல்வதாகக்

கூறுகிறார். "கயிலைமலை தேவர்களாலும் அடைதற்கரியது. இந்நிலையில் தாங்கள் மீண்டுபோதலே நன்று" என்று தவமுனிவர் கூறுகிறார். "அழியும் இவ்வுடல் இங்கேயே மாண்டாலும் நாதனைக் காணாமல் இவ்விடத்தை விட்டு அகலேன்" என உறுதிபடக் கூறுகிறார். நாவுக்கரசரின் மனவுறுதி கண்ட தவமுனிவர் விண்ணிலே மறைந்து, அசரீரியாக "நாவுக்கரசனே! எழுந்துநில்! என்றவுடன் பழைய எழில்மிக்க மேனியுடன் எழுந்து நின்றார். கயிலை நாதனின் கோலத்தைக் காண அருள்புரியுமாறு இறைவனிடம் முறையிட்டார். மீண்டும் அசரீரி, "நாவுக்கரசரே! இப்பொய்கையில் மூழ்கி, திருவையாற்றில் எழுந்து, அங்கே கயிலைத் திருக்காட்சியைக் கண்டு மகிழ்க!" என்றது. அவ்வாறே நாவுக்கரசர் பொய்கையில் மூழ்கி, திருவையாற்று வாவியில் எழுகிறார். திருவையாற்றில் இரண்டு காட்சிகளைக் காண்கிறார். வாவியின் முன்பு நிற்பன, நடப்பன ஆகிய அனைத்தும் சிவசக்தி துணையாகத் தோன்றும் முதற்காட்சி. ஐயாற்றுக் கோயிலை யடைந்தபோது திருக்கயிலைக் கோலக்காட்சி இரண்டாவதாகும்.

**தத்துவம்**

நாம் கண்ணால் காணுகின்ற உலகில் பல்வேறு யோனிகளில் இறைவன் உடனாகி நிற்கும் காட்சி முதற்காட்சியாகும். உலகினோடு உடனாகி நிற்பதோடு மட்டுமின்றி, தனித்து வேறாகியும் நிற்பான் என்பது இரண்டாவது காட்சியாகும். இரண்டாவதாகக் கண்ட திருவையாற்றுக் கோயிற்காட்சியே திருக்கயிலைக் காட்சியாகும். இக்காட்சிகளைக் கண்டு நாவரசர் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கினார்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த நிறைவான வாழ்வு**

திருவையாற்றில் கயிலைக் காட்சி கண்டு மகிழ்ந்த நாவரசர் சில திங்கள் கழித்துத் திருப்பூந்துருத்தி வந்து இறைவனை வழிபட்டு, அங்கே பெரியமடம் நிறுவி தொண்டு புரிந்து வருகிறார். பாண்டியநாடு சென்று திரும்பிய காழிப்பிள்ளை அங்கு வருகிறார். அவரது பல்லக்கை ஒருவரும் அறியாமல் சுமந்து வருகிறார். இதை அறிந்து காழிப்பிள்ளை கீழிறங்கி அரசரைக் கட்டித் தழுவுகிறார். தொண்டைநாட்டுத் தலங்களின் பெருமை கேள்வியுற்ற காழிப்பிள்ளை அவற்றைத் தரிசிக்கப் புறப்படுகிறார். பாண்டிநாட்டுத் தலங்களைக் காண நாவரசர் புறப்பட்டுச் செல்கிறார். திருப்புத்தூர், மதுரை, திருப்பூவனம், இராமேச்சுரம், திருநெல்வேலி, கானப்பேர் ஆகியவற்றைத் தரிசித்துவிட்டு மீண்டும் திருப்புகலூர் வருகிறார்.

திருப்புகலூர் தங்கி நாவரசர் கைத்தொண்டும், மனத்தொண்டும் புரிந்து வருகிறார். இவருக்கு அங்கே பல சோதனைகள் ஏற்பட்டன. உழவாரப் பணியின்போது ஓட்டையும், செம்பொன்னையும் ஒக்கவே நோக்கினார். ஆடல் அணங்குகள் அவரைச் சூழ்ந்து ஆடிப்பாடி ஆசையை

ஊட்டின. நெஞ்சுரத்தால் அணங்குகளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. நெஞ்சுறுதி மிக்க நாவுக்கரசர், புகலூர், புனிதன், தம்மை இனித்தன் திருவடிக்கீழ் சேர்த்துக்கொள்ள அருள்புரிவான் என்று எண்ணினார். வாழ்வு நிறைவடையப் போவதை உணர்ந்தார். ''புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே'' என்று போற்றினார். இங்ஙனம் பாடிப் பரவசம் அடைந்த, இவ்வுலக வாழ்வை நீத்து, இறைவனின் திருவடியாம் அருளொளியில் கலந்துவிட்டார். நாவரசர் முக்திபெற்றது சித்திரைத் திங்கள் சதயத் திருநாளாகும்.

நாவுக்கரசர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர். சிவானந்தத்தை வாழ்க்கையில் அனுபவித்தவர். திருத்தாண்டகம் என்னும் புது யாப்பைத் தந்த தமிழ்ஞானக் கவியோகி. பக்தியின் சிகரத்தைக் கண்டவர். தொண்டு நெறியில் ஆழங்கால் பட்டவர். அவர் தம் தேவாரப் பாடல்கள் படிக்க வாய் மணக்கும். நினைக்க நெஞ்சம் இனிக்கும். முடியரசுக் காலத்தில் குடியாட்சி சுதந்திரத்தை உணர்த்தினார். புரட்சியில் பூத்த புதுமலர். சொல்லுக்கும், செயலுக்கும் இணக்கமானவர். இயற்கையோடு இயைந்த மனித வாழ்க்கையைச் செழிப்பூட்ட விரும்பினார். இந்தியா முழுவதும் உள்ள புண்ணியத் தலங்களைத் தரிசித்து உழவாரப் பணி புரிந்தவர். நாவரசரின் வரலாறு தொண்டின் வரலாறாகும். இதனை ''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ'' என்று சேக்கிழார் பெருமான் போற்றுவார். ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் மனிதப் பிறவி மதித்திடுமின்'' என்று மனிதப் பிறவியைப் போற்றி உயர்வடையுமாறு மக்களிடம் அரசர் வேண்டுகிறார். தழலெரி மடுத்த நீரில் திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல தெளிவில்லாமல் வாழக்கூடாது என எச்சரிக்கிறார். மனத் தெளிவுடன், உயர்ந்த குறிக்கோளுடன் வாழ வழிகாட்டினார். சமய வாழ்வில் சமுதாய உணர்வை ஊட்டியவர். சமயத்தில் சமதர்மம் கண்டவர். மொழி ஒருமைப்பாடு, மனித குல ஒருமைப்பாடு, சமய ஒருமைப்பாடு, தாய்மொழி வழிபாடு ஆகியவற்றை வலியுறுத்தினார். சமயம் என்பது ஒரு தத்துவம் மட்டுமல்ல. அது ஒரு வாழ்க்கைநெறி என்று சுட்டிக் காட்டினார். நாவுக்கரசரின் வாழ்க்கை வரலாறு அன்பில், தொண்டில், பக்தியில் பழுத்த தவவாழ்க்கை. அவரின் தொண்டு நாமுய்ய, ஞாலம் உய்யப் பயன்பட்டது. என்றும் பயன்பட வேண்டியது. சிவகதியாகிய நற்பயிர் விளைய,

> ''மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும்
> நீரைப் பாய்ச்சி
> தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்
> செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையு மன்றே''

என்று பாடினார். நாவரசர் நடைபயின்ற தொண்டு நெறியில் நடந்து, சிவகதி விளைவை அனுபவித்து பேரின்பப் பெருவாழ்வை அடைய முயல்வோமாக!

# 8. நாலாம் திருமுறையில் தசபுராணம்

முத்து. ஆபத்சகாயம், கும்மிடிப்பூண்டி.

புராணங்கள் என்பவை தொன்மையான வரலாற்றைக் குறிக்கும். வடமொழியில் வேதவியாச மாமுனிவர் நான்கு வேதங்களை வகுத்தும், பதினெண் புராணங்களை இயற்றியும், பாகவதம் அருளியும் பாரதத் திருமண்ணிற்குப் பெருமை சேர்த்துள்ளார். திருநாவுக்கரசர் திருத்தல யாத்திரை மேற்கொண்டு வரும் நாளில் பூம்புகலூர் புனிதர் திருமலரடி பணிந்து, நாளும் உழவாரத் திருப்பணி புரிந்து, சொல்மாலை புனைந்து வாழ்ந்து வரும் காலத்துத் "தசபுராணத்து அடைவு" எனும் பதிகம் பாடி உலகெலாம் பரவி ஏத்தும் பரமனுக்குப் பாமாலை சூட்டி வழிபட்டார்.

பதினெண் புராணங்களில் பத்து சிவமகா புராணங்கள். அவை:- 1. சைவ புராணம், 2. பவிஷ்ய புராணம், 3. மார்க்கண்டேய புராணம், 4. லிங்க புராணம், 5. கந்தபுராணம், 6. வராக புராணம், 7. வாமன புராணம், 8. மச்ச புராணம், 9. கூர்ம புராணம், 10. பிரம்மாண்ட புராணம் என்பன. சொல்லின் வேந்தர் பாடியருளிய "தசபுராணத்தடைவு" எனும் திருப்பதிகம் சிவமகா புராணங்களுள் ஒவ்வொன்றின் கருத்தை உணர்த்து வதாக அமையவில்லை என்றாலும், சிவமகா புராணங்களில் உள்ள பதினொரு திருவிளையாடல்களை ஒவ்வொரு பாடலிலும் உணர்த்துவதாக அமைந்துள்ளது.

புராணங்கள் என்பவை கட்டுக்கதைகள் அல்ல, தத்துவப் பொதியல் களைப் பொதிந்து வைத்துள்ள நவரத்னப் பேழைகள் அவை என்பதும் மிகையன்று. பக்தி நிலையை எட்டும் ஆவல் கொண்டோர்க்கு உள்ளத்தை ஈர்த்து, பரமனடி காட்ட வந்த நுழைவாயில்கள் இவையே. பழஞ்பஞ்சுரம் என்றும் பண்ணில் அமைந்த இத்திருப்பதிகத்தில் உள்ள பதினொரு பாடல்களில் மருள்நீக்கியார் பெய்து வைத்துள்ள புராண வரலாற்றைச் சிந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**1. உண்ணற்கரிய நஞ்சுண்டவன்**

மந்தர மலையை மத்தாக்கி, வாசுகி எனும் பாம்பைக் கயிறாக்கி அமுதம் தேட அரக்கரும், தேவரும் அரும்பெரும் முயற்சி செய்து திருப்பாற்கடலைக் கடைந்தனர். கிடைத்தற்கரிய அமுதத்திற்குப் பதிலாகத் திருப்பாற் கடலில் திரண்டெழுந்தது கொடிய நஞ்சு, எடுத்த செயலைக்

கைவிட்டு இரிந்தோடினர் இமையோர். சிவன் தாள் பணிந்து, திருவருள் வேண்டி நின்றனர். ''கண்டாரைக் கொல்லும் நஞ்சு'' என்றும் கருதாமல், உண்ணற்கரிய நஞ்சை உண்டு தேவர்களைக் காத்துத் ''திருநீலகண்டன்'' ஆனான் சிவபெருமான். இத்தகு இறைவனே தேவதேவர்க்கு வேந்தன் என்று முடிக்கிறார் நாவுக்கரசர்.

மீண்டும் தேவரும், அரக்கரும் கடல்கடையத் திருமகள் எழுந்தாள், திருமால் அடைந்தார், கவுஸ்துவ மணியையும் ஏற்றார். இந்திராணி இந்திரனைச் சார்ந்தாள்; ஐராவதம் எனும் யானையும் அவன் பெற்றான், காமதேனு, கற்பகத்தரு, தண்மதி, உச்சைசிரவம் எனும் குதிரை எத்தனையோ பொருள்கள் கடலில் பிறந்தன. மதி மயக்கும் வாருணியை அரக்கர்கள் பெற்றனர். இறுதியில் அமுத கலசத்துடன் தோன்றினார் தன்வந்திரி.

நம்முடைய மனதுதான் பாற்கடல், இதனைக் கடையக்கடைய கிடைத்தற்கரிய அரும்பொருள்கள் நாம் பெறுவோம் என்னும் தத்துவத்தைக் கதை வடிவில் கோடிட்டுக் காட்டியுள்ளனர். உண்மைப் பொருளை உணர உணர நாம் பெறும் ஆனந்தம் சொல்லி மாளாது.

## 2. அண்ணாமலையின் அற்புத எழுச்சி

நான்முகனும், திருமாலும் தமக்குள் தாமே உயர்ந்தோர் எனச் செருக்குடையராய்த் திகழ, அவர்களைத் திருத்தி இறைவன் ஆட்கொண்ட வரலாறு இது. நினைக்க முக்தி தரும் திருத்தல மகிமை காட்டுவது. இருபெரும் மூர்த்திகளுக்கு இடையில் கண்ணைப் பறிக்கும் நெருப்பு மலையொன்று தோன்ற இருவரும் அடி, முடி தேடிப் புறப்பட்டனர். மாலவன் பன்றியாய் பூமியை அகழ்ந்து செல்ல, நான் முகன் அன்னமாய் வானில் பறந்து சென்றான், இருவராலும் அடியோ, முடியோ காண முடியவில்லை. மூவர்கோனாய் நின்ற முதல்வன் தாணுலிங்கத்தில் காட்சி தந்து தானே பரம்பொருள் என்று நாட்டினான். இத்தகு சிவபரம்பொருளே நமக்கோர் சரண் என்கிறார் வாகீசர். யான் எனது எனும் செருக்கினை அகழ்ந்தெடுக்கத் தோன்றிய வரலாறு இது.

## 3. சமயங்கள் ஆறின் உருவாகி நின்ற தழலோன்

இறைவன் கால முதல்வன்; ஊழி முதல்வன்; மூவர் உருவில் ஒன்றி நிற்பவன்; சமயங்கள் ஆறின் உருவாகி நிற்பவன்; விண்ணும், மண்ணும் ஏழுலகும் உண்டு மாலவன் குறளுருவாய் ஆலிலையில் பள்ளிகொண்ட தன்மையன் எனப் புகலும் சொற்கோ அத்தகு பெருமைசால் மாயவன் ஏத்தும் பரமாய மூர்த்தி எனச் சிவன் பெருமை கூறி அவன் நமக்கோர் சரணே என முடிக்கிறார்.

நித்யம், நைமித்திகம், பிராக்ருதம், ஆத்யதிகம் எனப் பிரளயம் நான்கு வகைப்படும் (ப்ரளயம் - உலக ஒடுக்கம்) ஆன்மாக்கள் சிரம

பரிகாரத்தின் பொருட்டுக் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட சுழுத்தி முதலிய அவத்தை இவை. உலகமே ஒடுங்கிய காலத்துப் பாற்கடலில் பள்ளி கொண்ட மாலவன் போற்றும் பாங்கினர் என்று சிவபரம் பொருளின் பெருமையைச் சாற்றுகிறார் இப்பாடலில்.

### 4. தாரகாசுர வதம்

நெடிதுயர் விண்ணும், மண்ணும், மாகடலும், மாமலையும் உலகேழும் வருந்த வருத்திய தாரகன் கொடுமைக்கு அஞ்சி இமையோர் சிவனடி பரவித் துதித்துத் திருவருள் வேண்ட சிவபெருமான் தாருகன் உடல் பிளந்து உலகேழும் உய்வித்தான். அப்பொழுது அவனாடிய சிவமகா தாண்டவத்தை எடுத்தியம்பி அனலாடிப் பாதம் நமக்கோர் சரனே என்று முடிக்கிறார். இறைவன் ஐந்து முகத்தோடு அதோ முகமும் பெற்று ஆறுமுகத்தனாய் ஆற்றிய அருள்செயல் இது. கந்த புராணத்தில் உள்ளது. மச்ச புராணத்திலும் காணலாம்.

### 5. முப்புரம் எரித்த முக்கண்ணன்

முப்புராதியர் விண்ணவர்க்கும், மண்ணவர்க்கும் விளைத்த இன்னல்கள் சொல்லி மாளா. உலகை உய்விக்க இறைவன் திரிபுர சங்காரத்தைத் தன் திருஉளத்தே கொண்டான்.

மேருமலையை வில்லாக்கி, வாசுகியை நாணாக்கி, திருமாலை அம்பாய்க் கொண்டு முப்புரமழிக்க தேவர் கணத்துடன் புறப்பட்டான் சிவபெருமான். அப்பொழுது இமையவர் தம் ஆணவத்தை அவர் உள்நின்று உணர்ந்து, நெற்றிக்கண்ணால் முப்புரத்தை எரித்து மூஉலகைக் காத்தான் என்பது வரலாறு. முப்புரம் எரித்த முக்கணான் திருவடி நமக்கோர் பற்றாகும் என்கிறார் அப்பரடிகள். திருபுரசங்கார காலத்தில் சிவபெருமானுக்கு அம்பாக நின்றது மட்டுமன்றி, விடையாயும் தாங்கிய பெருமை திருமாலுக்குரியது.

'அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றணன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார்அறி வாரே'.

என்பது திருமூலர் வாய்மொழி. நான் முன்பே கூறியவாறு புராணங்கள் அனைத்தும் உட்பொருள் பொதிந்த வரலாற்றுக் கதைகள். ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களை அழித்தலே முப்புரம் எரித்தல் என்கிறார் திருமூலர்.

### 6. காலனைக் காலால் உதைத்த காலகாலன்

கரிய மேனியன், செங்கண்ணன், வளைந்த கோரைப் பற்களை உடையவன், தீப்போலும் குஞ்சியன், காலம் பார்த்து உயிர்களின் உயிர்

பறிக்கும் எமதருமன். பதினாறு வயது பாலகன் மார்க்கண்டேயனைத் தேடி வருகிறான் கூற்றுவன். வழக்கம் போலப் பாலகன் காலை வழிபாடு செய்யும் நேரமது. நன்மலர் கொண்டு வழிபாடியற்றிக் கொண்டிருக்கிறான் மார்க்கண்டேயன். மிருகண்டு முனி பெற்றெடுத்த அருந்தவச் செல்வன் அவன். அப்பாலகனை அச்சுறுத்திக் காலதேவன் தனது பாசக் கயிற்றை வீச, பாலகனோ பரமனைக் கட்டிப்பிடிக்க, பரமன் சீறியெழுந்து காலனைக் காலால் உதைத்து அவனுயிர் முடித்துப் பாலகனைக் காக்கிறான். இத்தகு கழற்கால் வானோர் போற்றிடத் துதித்துத் தலைமேற் சூடும் மலர்க்கால் என்கிறார் தாண்டவ வேந்தர்.

## 7. தக்கன் வேள்வி தகர்த்த பெருந்தகை

தவத்தால் சிறந்த பெருமைக்கு உரியவன் தக்கன். உமையவளையே திருமகளாய்ப் பெற்று, சிவனுக்களித்துப் பெருமை கொண்டவன்தான். சிவனை அவமதித்துப் பெரு வேள்வியொன்று செய்கிறான். திருமால் உள்ளிட்ட தேவர்களுக்கு அழைப்பு அனுப்பி அவர்களை மட்டுமே கொண்டு வேள்வி நடைபெறுகிறது. பரமனது பேச்சை உதறித்தள்ளி உமையவள் தக்க யாகத்துக்கு வருகிறாள். தந்தையின் தவற்றைச் சுட்டிக் காட்டவும் செய்கிறாள் தாக்ஷாயணி. அவளையும் அவமதித்துப் பரம்பொருளாம் ஈசனையும் இகழ்கிறான் குணங்கெட்ட தக்கன். தாக்ஷாயணி தீயில் பாய்ந்து பர்வத ராஜகுமாரியாக இமயத்தரசன் மகளாகப் பிறந்து பரமன் கரம் பிடிக்கிறாள்.

இறைவன் வீரபத்திரனை அனுப்பி, அவன் யாகத்தை அழித்து, அதில் கலந்து கொண்ட தேவர்களையும் அழிக்க முற்பட அச்சம் மிக்குற்ற வேள்விக்கோவும், அக்னி தேவனும், சந்திரனும் அடைந்த நிலைகண்டு அஞ்சி நான்முகனும் திருமாலும் தங்கள் அறியாமையைப் பொறுத்தருள வேண்டி நின்றனர். தக்கன் வேள்வி தகர்த்த திருத்தலம் திருப்பறியலூர். வீரபத்திரன் காலடியில் தக்கன் வீற்றிருக்கும் இத்தலமும் அட்ட வீரட்ட தலங்களுள் ஒன்று. வேள்விக்கு வந்த வானோர் தீமையைப் பறித்த தலமாகையால் திருப்பறியலூர்.

## 8. பார்வதி பரமனின் கண்புதைத்த வரலாறு

சிவசக்தி விளையாட்டாக இறைவனின் திருக்கண்களைப் புதைக்கிறாள். அண்ட சராசரங்கள் யாவும் இருண்டு விடுகின்றன. அப்பொழுதுதான் இறைவன் உலக இருள் கடியத் தம் நெற்றிக் கண்ணைத் திறக்கிறான். அஞ்சிய நாயகி அகற்றினள் திருக்கரம். அச்சிறு கணப்பொழுதே உலகிற்குப் பல்லூழி எனில் பொருந்தும். உலகிருள் கூடிய, நெற்றிக்கண் திறந்த இறைவன் மலரடிகளே நமக்குச் சரண் எனப் பாடுவார் நாவரசர்.

மூவுலகும் தவப்பயன் பெற்றுய்ய, தொண்டை வளநாடு செழித்தோங்க, ஆறு சமயமும் வீறு பெற்றோங்கி நிற்க, சிவ வழிபாடே ஒப்புயர்வில்லா தனிப்பெரும் வழிபாடாய் ஒளிர, அறம் வளர, மறம் அழிய, உயிர் வளர, உலகெலாம் தழைக்க அடித்தொண்டர் அகமகிழ அன்னை காமாட்சியின் திருவருள் உலகெலாம் பரவக் காரணமாயிற்று சிவசக்தி திருக்கண் புதைத்த நிகழ்ச்சி.

## 9. கருவேளை எரித்த கருணாமூர்த்தி

சிவபெருமான் யோகத்தில் அமர்ந்துவிட்டான். உலக இயக்கம் நின்று போயிற்று. உலகஇயக்கம் தொடர நான்முகன் மன்மதனை அழைத்து மலரம்பு தொடுத்து சிவனது யோக நிலையைக் கலைக்க ஆணையிடுகிறான். மலரவன் சொற்கேட்டு மதனவேள் நடுங்குகிறான். நான்முகனின் சாபத்தில் தான் அழிவதிலும் பரமனின் சினத்தால் அழிவதே சிறப்பெனக் கருதி கருவேள் ஐங்கணை தொடுக்கிறான்; அருந்தவம் கலைக்கிறான்; நெற்றிக் கண்ணால் சாம்பராய் விடுகிறான். விதியின் வலிமையை வீழ்த்துவார் யாரே?

காமவேள் அன்புத் துணைவி இரதிதேவி பரமன் தாள் பணிய, கருணாமூர்த்தியாம் சிவபரம்பொருள் அவளுக்கு மட்டுமே உருவுடையவனாய் மற்றவர்க்கு உருவிலியாய்த் தோன்றத் திருவருள்பாலித்தார். அட்ட வீரட்டத் தலங்களுள் மன்மதனை எரித்த திருத்தலம் திருக்குறுக்கை. இறைவன் மதன ஸம்ஹாரமூர்த்தி. (யோகீசுவரர்).

சிவனது யோகத்தை மாற்ற மன்மதன் கங்கணம் தரித்த இடம் கங்கணம் புத்தூர். சிவனது சிவயோகம் கலைக்க தேவர்கள் மன்மதன் தயவை நாடிய இடம் வேத நல்லூர். மன்மதன் மலரம்பு தொடுக்க வில்லை எடுத்த இடம் வில்லியனல்லூர். மன்மதன் வில்லைக் காலூன்றி வளைத்த இடம் கால்வளைமேடு. இவையனைத்தும் திருக்குறுக்கையைச் சுற்றியுள்ள ஊர்கள்.

## 10. திருமாலுக்குச் சக்கரம் ஈந்த வரலாறு

முதற்கண் சிவபரம்பொருளிடம் இருந்த சுதர்சனச் சக்கரம் சலந்தரன் என்ற அரக்கனை அழித்த ஆற்றலுடையது. வக்கரன் என்ற கொடிய அரக்கனைக் கொல்ல திருமால் சிவனிடமிருந்து, திருஆழி பெற விரும்பினார். நாளும் ஆயிரம் தாமரை மலர்களால் இறைவனை அருச்சிக்க முற்பட்டார். ஒரு நாள் மலர் ஒன்று குறைந்தது. மலர்க்கண்ணன் அல்லவா மாயவன்? தம் திருக்கண்களில் ஒன்றையே மலராக இறைவனுக்கு அர்ச்சித்துப் பூசனையை நிறைவு செய்தான். இறைவன் திருவருள் சுரந்து, பூசையை ஏற்று, திருவாழி அருளினான். இவ்வரலாற்றை நினைவூட்டும் திருத்தலமே திருமாற்பேறு.

"தடமலர் ஆயிரங்களுள் குறைவொன் றதாக
நிறைவென்று தன்கண் அதனால்
உடன் வழிபாடு செய்த திருமாலை யெந்தை
பெருமான் உகந்து மிகவும்
சுடரடி யான்முயன்று சுழல்வித்(து) அரக்கன்
இதயம் பிளந்த கொடுமை
அடல்வலி யாழியாழி அவனுக்(கு) அளித்த
அவனாம் நமக்கோர் சரணே" - திருநாவுக்கரசர்

திருமால் சிவனிடமிருந்து திருச்சக்கரம் பெற்ற வரலாற்றை இப்பாடலில் இயம்புகின்றார். திருமால் பத்மாக்ஷன் (தாமரைக் கண்ணன்) எனப் பெயர் பெற்ற வரலாறு இதுவே.

## 11. இராவணன் ஆற்றல் அழித்தது

இலங்கையர் கோமான் இராவணன் கயிலாய மலைமீது தேர் செலுத்த ஆணை பிறப்பிக்கிறான். பாகனோ தடுக்கிறான். அவனைச் சினந்த அரக்கர் கோமான் தேரை விரைவிற் செலுத்தப் பணித்து, மலையடிக்கண் சென்று, கரங்களால் பெருமலையைப் பெயர்க்க முற்படுகிறான். அஞ்சிய உமையாள் இறைவனை அணைக்க இறைவன் திருவிரல் ஊன்ற இடையிலே அகப்பட்டுத் தவிக்கிறான் இராவணன். ஆற்றலால் வெல்ல முடியாத பரமனை அன்பினால் வசப்படுத்த முற்படுகிறான். கை நரம்புக்ளையே வீணையின் நரம்பாக்கி, நாதமிசைத்து நாதனைக் குளிர்வித்துப் பெருவரமும், பேராற்றலும் பெற்றான், இராவணன் முடி, தோள், நெறித்த திருப்பாதங்களைச் சிந்திக்கிறார் நாவுக்கரசர்.

திருநாவுக்கரசர் தாம் பாடும் திருப்பதிகங்கள் ஒவ்வொன்றிலும் இராவணன் கயிலாயம் பெயர்த்த சிறப்பினை விதந்தோதுவது நம் சிந்தனைக்குரியது. பதிகத்தின் இறுதிப்பாடல் மதிக்கும் திறனுடைய வல்லரக்கனுக்கே ஒதுக்கியுள்ளார். ஞானக்குழந்தையும் தம் பதிகத்தில் இடையிலோர் பாடல் இராவணன் தனக்கே ஒதுக்கிய மாண்பும் எண்ணத்தகும்.

# 9. நாவுக்கரசரின் பக்திச் சிறப்பு

ப. இராசமாணிக்கம், தஞ்சாவூர்.

தேவாரம் என்ற சொல் முதலில் 'வழிபாடு' என்ற பொருளில் தான் வழங்கப்படலாயிற்று. அவ்வழிபாடு செய்யும்போது பாடிய இப்பாடல்களுக்கும் காலப்போக்கில் ''தேவாரம்'' என்ற சொல் வழங்க லாயிற்று. இறைவன் திருவுருவினைத் 'தேவாரத் தேவர்' என்றும், பூசனை புரியும் இடத்தைத் ''தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி'' என்றும், இசைத் தொண்டு செய்பவரைத் 'தேவார நாயகம்' என்றும் சோழ மன்னர்கள் தம் கல்வெட்டுகளில் குறித்துள்ளனர்.

பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த இரட்டைப் புலவர்கள் தாம் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில்,

**மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்**
**தேவாரஞ் செய்த திருப்பாட்டும்** (ஏகாம்பர உலா - 78)

என்ற அடிகளில் 'மூவர் முதலிகள்' என்று சம்பந்தர் முதலான மூவரையும் 'தேவாரம்' என்று வழிபாட்டையும் வழங்கியுள்ளார்.

சைவ எல்லப்ப நாவலரும், ''வாய்மை வைத்த சீர்த்திரு தேவாரமும் திருவாசகமும் உய்வைத் தரச் செய்த நால்வர் பொற்றாள்எம் உயிர்த் துணையே'' என்று தாமியற்றிய திருவருணைக் கலம்பகத்தில் 'தேவாரம்' என்ற நூற்பெயரை வழங்குகின்றார்.

இவ்வாறு சிறப்புடைய தேவாரத்தில் நாவுக்கரசரின் பாடல்களின் வழி அவரின் பக்திச் சிறப்பைக் காண்பதே இச்சிறு கட்டுரையின் நோக்கமாகும்.

**பதிக அமைப்பு**

திருமுறை கண்ட புராணம் திருநாவுக்கரசரின் பதிகங்கள் முந்நூற்று ஏழு எனக் கூறுகிறது. ஆயினும் இப்போது முந்நூற்றுப் பன்னிரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன. நாவுக்கரசர் பதிகங்களில் திருக்கடைக் காப்பு இல்லை. பத்துப் பாடல்களே உள்ளன. கயிலாய மலையைப் பெயர்க்க முயன்ற இராவணன் தன் பிழைக்கு வருந்திப் போற்றிய போது இறைவன் அவனுக்கு அருள் செய்தமையைப் பத்தாம் பாடலில் இவர் கூறுகிறார். பதிகப் பயனாகப் பத்தாம் பாடல் அமைகிறது.

உலகில் காணப்படும் பொய், களவு, சூது, கள், காமம் முதலான குற்றங்கள் தம்பால் வராதபடி இறைவனை வேண்டுவனவாகவும் உள்ளத்தை உருக்கும் தன்மையும் வாய்ந்தவையாகவும் காணப்படு கின்றன. உயர்ந்த குறிக்கோள் கொண்டு தம் வாழ்க்கை சிறந்து விளங்குமாறு இறைவனைக் கெஞ்சுகிறார்.

**இன்பம் (திருவடி இன்பம்)**

திருநாவுக்கரசர் உள்ளம், எக்காலத்திலும் சிவபெருமான் திருவடி களையே சிந்தித்திருந்தது. இறைவன் திருநாமத்தைப் பன்முறை. பயின்று கூறிவந்ததும், திருநீற்றைத் தம் உடம்பில் பூசிக்கொண்டதும் ஆகிய செயல்கள் அவர் இறைவன் மீது கொண்டிருந்த அளவற்ற அன்பின் பெருமையினை எடுத்துக் காட்டுகின்றன.

இதைப் பற்றியே, ''கருவாய்க் கிடந்து உன் கழலே நினையும் கருத்து உடையேன் உருவாய்த் தெரிந்து உன்றன் நாமம் பயின்றேன். உனது அருளால் திருவாய் பொலியச் சிவாயநம என்று நீறணிந்தேன்'' என்று கூறுவதனால் மேற்கண்ட உண்மை புலனாகிறது.

**நெஞ்சம் உமக் கேயிட மாக வைத்தேன்**
**நினையா தொரு போதும் இருந்தறியேன்**

எனவும்,

**சலம்பூ வொடு தூபம் மறந்தறியேன்**
**தமிழோடி சைபாடல் மறந்தறியேன்**
**நலந் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்**
**உன்னாமம் என்னாவில் மறந்தறியேன்**

(திருஅதிகை வீரட்டானம், பா. 6, ப. 443)

எனவும் அவர் பாடிய பாடல்களின்வழி, நாவுக்கரசரின் உள்ளம் சிவபெருமான் திருவடிகளிலேயே ஈடுபாடு கொண்டிருந்தது என்பது நன்கு புலப்படுகிறது.

**கருணை உள்ளம்**

பொய்யும் வஞ்சனையும் சோம்பலும் காமமும், வெகுளியும் மயக்கமும் கொண்ட சமூகத்தின் நடுவில் வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். அவர்தம் வாழ்வில் கண்ட அனுபவங்கள் அவர் உள்ளத்தை நெகிழ்த்திச் செம்மைப் படுத்தியிருந்தன. எனவே பிறர் குற்றங்களையும் தம்மேல் போட்டுக் கொண்டு இறைவரை நோக்கித் தம் குற்றங்களைப் பொறுத்தருளுமாறு வேண்டுகின்ற பாடல்கள் பலவற்றை இவரது தேவாரத்தில் காண முடிகிறது.

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்
குண்டர்கள் தஞ்சொல்லே கேட்டு
உருகுவித்தேன் உள்ளத்தின் உள்ளிருந்த
கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு
பிணிதீர்த்த ஆரூ ரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க
மறம் விலைக்குக் கொண்டவாறே.

(திருவாரூர், பா. 3, ப. 333)

என்ற பாடல் மூலம் அறியலாம். மேலும்,

வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம் மனம்ஒன்றும் இலாமையினால்
சலித்தால் ஒருவர்துணை யாருமில்லை (பா. 8, ப. 443)

என்ற பாடல் அடிகள் இவரின் கருணை உணர்ச்சியை வெளிப் படுத்துகின்றன.

**மாயை நீக்கம்**

திருநாவுக்கரசர் உள்ளம் உலக மாயைகளில், இன்பங்களில் ஈடுபாடு கொண்டதில்லை. இறைவனுடைய திருவடிகளைக் காணவேண்டும் என்பதிலேயே அவர் நெஞ்சம் பேரவா கொண்டிருந்தது என்பதனை, ''கருவுற்ற நாள் முதலாக உன்பாதமே காண்பதற்கு உருகிற்று என் உள்ளமும் நானும் கிடந்து அலைந்து ஏய்த்து ஒழிந்தேன்'' என்று கூறுவதிலிருந்து இதனை அறிய முடிகிறது. உலகப் பற்றுகளிலிருந்து நீங்கினாலும் உடம்புப் பற்று அவரை விடவில்லை. சூலை நோய் வந்தபோது துன்புற்று வருந்திய நிலையில்,

உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்
ஒருவர்தலை காவல் இலாமையினால்
வயந்தே உமக் காட்செய்து வாழலுற்றால்
வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர். (பா. 6, ப. 443)

என்று இறைவனை வேண்டுகின்றார்.

**இறைவன் பெருமை**

சிவபெருமானுடைய பெருமையையும், அளப்பரிய ஆற்றலையும் நாவுக்கரசர் பல பாடல்களில் ஆங்காங்கே குறிப்பிடுகின்றனர். பத்து தலைகளும் இருபது கரங்களும் கொண்டு தன் வலிமையெல்லாம் திரட்டி இராவணன் கயிலை மலையை எடுக்க முற்பட்டபோது, சிவபெருமான் தம் பெருவிரல் ஒன்றை ஊன்றி அவன் வலிமையைக்

கெடுத்து, அவன், தன் பிழைக்கு வருந்தி சாமகீதம் பாடிப் பணிந்த போது அருள் வழங்கினார் என்பதை,

> நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
> உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னொன்பது மொன்று மலற
> வரங்கள் கொடுத்தருள் செய்வான்

என்ற பாடல் மூலம் இறைவனின் அருளை வெளிப்படுத்துகிறார்.

மற்றொரு பாடலில்,

> நரியைக் குதிரைசெய் வானும் நரகரைத் தேவுசெய் வானும்
> விரதங் கொண்டாடவல் லானும் விச்சின்றி நாறு செய்வானும்
> முரசதிர்ந் தானைமுன் னோடமுன்பணிந் தன்பர்கள் ஏத்த
> அரவரைக் சாத்திநின் றானுமாரூ ரமர்ந்தவம் மானே.
> (திருவாரூர், பா.2, ப.331)

என்று சிவபெருமானின் பல்வேறு திருவிளையாடல்களையும் ஒருசேரக் கூறுகிறார்.

**புராணக் கருத்துகள்**

திருநாவுக்கரசர் புராண நிகழ்ச்சிகளைப் பலவிடங்களில் கூறிச் சிவபெருமானின் செம்மையை நினைவு கூர்கிறார். சிவபெருமானார் தனித்தனியாக அற்புதம் செய்த திருவிளையாடல்களை ஒரே பாடலில் கூறியிருக்கும் விதம் வியப்புக்குரியது மட்டுமல்ல அவரின் மொழி யாற்றலையும் வெளிப்படுத்துகிறது. இதனை,

> ஒட்டாத வாளவுணர் புரமூன்று
> மோரம்பின் வாயின் வீழக்
> கட்டானைக் காமனையும் காலனையும்
> கண்ணினொடு காலின் வீழ
> அட்டானை யாரூரி லம்மானை
> யார்வச்செற் றக்கு ரோதம்
> தட்டானைச் சாராதே தவமிருக்க
> அவஞ்செய்து தருக்கி னேனே. (திருவாரூர், பா.9. ப.334)

என்ற பாடல்வழி திரிபுரங்களை நகைப்பினால் எரித்தழித்த சிவபெருமானின் திருவிளையாட்டையும், மன்மதனைத் தம் நெற்றிக் கண்ணால் எரித்த செயலையும், மார்க்கண்டேயனுக்காகத் தம் திருவடியால் கூற்றுவனை உதைத்த செயலையும் அறிய முடிகிறது.

**அடியார் பெருமை**

சிவபெருமான் தம்மை அன்பால் நினைப்பவர் உள்ளக் கமலத்தில் நினைந்த வடிவோடு செல்பவர் என்பதைத் திருநாவுக்கரசர் பல இடங்களில்

குறிப்பிடுகின்றார். "நினைப்பவர் நெஞ்சத்துள்ளானும்", "உகப்பவர் உச்சி உள்ளானும்", "தொழற்கு அங்கை துன்னி நின்றார்க்குத் தோன்றி அருள வல்லானும்", "பொய் அஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க்கருள் செய்யும் ஐயஞ்சின் அகப்புறந்தானும்" என்ற தொடர்களில் தொட்டுக் காட்டுகிறார்.

இத்தகைய தொண்டர்களுக்கு இன்முறுவல் பூத்து இன்னருள் செய்பவர் சிவபெருமான் என்பதைத், தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல் அருள் செய்யும் ஆரூரர்" என்றும் "அப்போதைக்கு அப்போதும் அடியவர்கட்கு ஆரமுதாம் ஆரூரர்" என்று வரும் தொடர்கள் வெளிப் படுத்துகின்றன.

**சித்தாந்தக் கருத்துகள்**

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் இறைவனைச் சென்று அடைவதற்குத் தடையாக நிற்கும் திரைகளாகும். இம்மூன்றையும் அறுத்து உயிர் இறைவனை அடைவதற்கு முயலவேண்டும். நாவுக்கரசர் இவ்வுண்மையினை உணர்ந்து ஒரு பாடலில்,

> **முற்பிறைக் கண்ணியினானை மொய்குழ லாளோடும் பாடிப்**
> **பற்றுகயிறறுக் கில்லேன் பாடியும் ஆடா வருவேன்**

எனக் கூறுகின்றார். இங்கு, கயிறு என்றது பாசத்தை பிறைக் கண்ணி யினானைப் பாடும் பற்றினாலன்றிப் பாசமாகிய ஆணவம் முதலிய கயிறுகளை அறுத்தல் இயலாது என்பது குறிக்கப்பட்டது.

சித்தாந்தத்தில் உள்ள மற்றோர் உண்மையினை நாவுக்கரசர் ஓர் இடத்தில் கையாளுகின்றார். "பூதங்கள் ஐந்து; புலன்கள் ஐந்து; பொறிகள் ஐந்து; செயற்கருவிகள் ஐந்து; அறிவுக் கருவிகள் ஐந்து, இந்த இருபத்தைந்து தத்துவங்களையும் கடந்து நிற்பவர் இறைவர்" என்ற சித்தாந்த உண்மையினை நாவுக்கரசர்,

> **பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந்தார்க்கு அருள் செய்யும்**
> **ஐயஞ்சின் அப்புறத்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே.**

என்ற அடிகளில் வெளிப்படுத்துகிறார்.

திருநாவுக்கரசர் பதிகங்கள் உலக வாழ்வில் பண்பட்ட ஒருவர்தம் பாடல்களாக உள்ளன. உலகத்திலுள்ள பல்வேறு மக்களுடன் பழகியவர் திருநாவுக்கரசர். உடம்பின் தன்மை, செல்வத்தின் இயல்பு, மக்கள் மனநிலை ஆகியவற்றை நன்குணர்ந்தவர் அவர். இருப்பினும் புறச்சமயத்தை மறுப்பதில் அவர் மிகவும் கடுமையைக் காட்டுகின்றார். 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற தொண்டு நெறியில் வாழ்ந்தவர். கடும் வேதனையிலும், சோதனையிலும் அவர் சிவபெருமானை மறக்கவில்லை என்பது அவரின் பதிகங்கள்வழி அறியமுடிகிறது.

# 10. நாவுக்கரசரின் தாண்டகங்கள்

ம. இராதா, ஜெயங்கொண்டம்.

தமிழ் இலக்கிய உலகில் பக்தி இலக்கியங்களுக்கு ஓர் தனியிடம் உண்டு. நாயன்மார்களும், ஆழ்வார்களும் சைவ, வைணவ சமயம் வளர்த்த சான்றோர்களாவர். நாயன்மார்களுள் 'தாண்டக வேந்தர்', 'தாண்டகச் சதுரர்' எனச் சிறப்பிக்கப்பெறும் அப்பர் சுவாமிகள் பல புதுவகையான பாடல் வடிவங்களை அறிமுகம் செய்துள்ளார். அவற்றுள் ஆறாம் திருமுறையில் உள்ள 'தாண்டகம்' எனும் யாப்பு வடிவினைப் பற்றி இக்கட்டுரை விளக்க முற்படுகிறது.

### தாண்டகம் - ஓர் அறிமுகம்

தாண்டகம் எனும் யாப்பு அப்பர் சுவாமிகளால் சிறப்பாகக் கையாளப்பெற்றது. பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார் திருக்குறு, திருநெடுந் தாண்டகங்கள் பாடியுள்ளார். தெலுங்கு மற்றும் வடமொழி களிலும் 'தண்டகம்' என்ற பெயரில் யாப்பு காணக் கிடைக்கிறது. இருப்பினும், தமிழுக்கும் அவற்றிற்கும் அதிக வேறுபாடுகள் உண்டு.

பொதுவாக, தாண்டகம் என்பது, 'எண்சீர் கொச்சக ஒருபோகு'வுடன் ஒத்துள்ளது. அறுசீர் அல்லது எண்சீர்களால் கடவுளரையோ அல்லது ஆடவரையோ புகழ்ந்து பாடுவது தாண்டகம். அடிதோறும் 4, 8-ஆம் சீர்கள் தேமாவாகவும், 3, 7-ஆம் சீர்கள் பெரும்பான்மை தேமா, சிறுபான்மை புளிமாவாகவும், ஏனையவை பெரும்பான்மை காய்ச்சீர், சிறுபான்மை மாச்சீர், விளச்சீராகவும் வரும். 3, 4, 7, 8-ஆம் சீர்களை விலக்கி விட்டு மற்றவற்றை இணைத்து நோக்கின் கொச்சகக் கலிப்பா எஞ்சும்.

### இலக்கண நூல்களில் தாண்டகம்

தாண்டக இலக்கணம் பற்றித் தமிழின் இலக்கண நூல்களில் பல்வேறு விதமான கருத்துகள் காணப்படுகின்றன.

புத்தமித்திரரால் இயற்றப்பட்ட வீரசோழியம் எனும் நூலில், தாண்டகம் பற்றி 129-ஆவது நூற்பாவில்,

**"விருத்தமும் தாண்டகமும் ஆமாறு,**
**ஒன்றாதி யென்ப ரொருசா ரவரொரு நான்கு முன்னாம்**
**என்றா லினிதுசந் தத்தி னெழுத்தை யிருபதின்மேல்**

நன்றாய வாறுயர் வாமென் றுரைப்பர் நற்றண்டகமேற்
பின்றாத கட்டளை நான்குமுன் னாகிப் பெருகிடுமே''

என்று சொல்லப்பட்டுள்ளது.

இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்து எண்ணிக்கை உடையதாக எழுத்தும், எழுத்தலகும் ஒத்து வந்தால் அது 'அளவி யற்றாண்டகம்' எனவும், ஒவ்வாது வந்தால் 'அளவழித் தாண்டகம்' எனவும் பெயர் பெறும் என்று முத்துவீரியம் முன்மொழிகிறது.

இது பற்றியே யாப்பருங்கல விருத்தியுரை காரரும் இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்தும், குருவும், லகுவும் ஒத்து வருவன அளவியல் தாண்டகமெனவும், எழுத்தலகு ஒவ்வாது வருவன அளவழித் தாண்டகமெனவும் கூறுவார்.

இவையன்றிப் பன்னிரு பாட்டியல், இலக்கணத் தொகை, தொன்னூல் விளக்கம், நவநீதப் பாட்டியல் போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன; பல்காயனார், மாபூதனார், சீத்தலையார் போன்றோரும் தாண்டகம் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

கலைக் களஞ்சியம், Tamil Lexican போன்றவையும் தாண்டகம் என்ற சொல்லிற்குப் பொருள் விளக்கம் அளித்துள்ளன.

''தாண்டகம் : tāṇṭakam, n.<daṇḍaka

1. A Stanza each line of two kinds, viz., aḷavaḻi-t-ṭāṇṭakam and alaviyarrāṇṭakam:

26 எழுத்தின் மிக்க அடியான் வரும் அளவழித் தாண்டகம் அளவியற்றாண்டகம் என்ற இரு பகுப்பினையுடைய பாக்கள் (யாப். வி. 95, 447)''

இவற்றுள் கூறப்பட்டுள்ள கருத்துக்களின் முடிபாக தாண்டகம் என்பது ஓரடியில் 27 முதலாக மேற்கொண்ட எழுத்துக்களையுடையது என்பதும் எழுத்தும், குருவும், இலகுவும் ஒத்து வருபவை அளவியல் தாண்டகம் ஒவ்வாது வருபவை அளவழித் தாண்டகம் என்பதும் பெறப்படுகிறது.

**அப்பரது திருத்தாண்டகங்கள்**

அப்பர் சுவாமிகள் பாடிய 312 பதிகங்களுள் ஆறாம் திருமுறையில் 99 பதிகங்கள் உள்ளன. இத்திருமுறை முழுமையும் தாண்டக யாப்பில் அமைந்தவை. தாண்டகங்களின் எண்ணிக்கை 981 ஆகும். இதில் ஒரு பாடல் மட்டும் ஒருவரிப் பாடலாக உள்ளது.

இப்பாடல்களில் சிலவற்றை மட்டும் நான்கு தன்மைகளுள் அடக்குவர். அதாவது, பொருள் தன்மை பற்றியவை, சொல் தன்மை பற்றியவை, பொருள் அடைவுத் தன்மை பற்றியவை, பொதுத்தன்மை பற்றியவை என்ற பிரிவுகள் ஆகும்.

**அ. பொருள் தன்மை பற்றியவை**

தாண்டகம் எப்பொருண்மை குறித்துப் பாடப்பெற்றதோ, அப்பொருளே பதிகத்திற்கும் பெயராக வருதல்.

**1. பெரிய திருத்தாண்டகம்**

பெரும்பற்றப் புலியூரானின் பெருமைகளைக் கூறுவது. பெரிய பெருமானை, பெருந்தகையை, பெருந்துணையை, பெரும்பொருளை, பெரும்பயனை, பேரொளியை என்று பெரிய பண்புகளாகவே கூறி யிருப்பதால் பெரிய திருத்தாண்டகம் ஆயிற்று.

**2. அடையாளத் திருத்தாண்டகம்**

ஒவவொரு பாடல் முடிவிலும் இறைவனை அடையாளம் காண்பிக்குமுகமாய் 'அவனாகில் அதிகை வீரட்டானம்' என்று முடிகிறது.

**3. திருவினாத் திருத்தாண்டகம்**

முதல் ஐந்து பதிகங்கள் வினா அமைப்பிலும், அடுத்துள்ள ஆறு பதிகங்கள் விடை அமைப்பிலும் உள்ளதால் இப்பெயர் பெற்றது.

**4. மறுமாற்றத் திருத்தாண்டகம்**

அரசனின் அழைப்பை ஏற்க மறுத்து நாவுக்கரசர் பாடியது.

**"நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்**
**நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்**
**கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்**
**கொய்ம்மலர்ச்சே வடி இணையே குறுகி னோமே"**

எனும் இத்தாண்டகத்தில் அவரது அஞ்சா நெஞ்சம் புலப்படுகிறது. பல்லவ அரசன் புறச்சமயவாதிகளான சமணர் சொற்களுக்குச் செவி சாய்த்து, அவரைக் கைது செய்ய அமைச்சரை அனுப்ப, அமைச்சருக்கு அப்பர் கூறிய மறுமொழியே இத்தாண்டகம். தாம் யார்க்கும் அடிமை இல்லை, எமனுக்கும் அஞ்சுவதில்லை, பொய்களுக்கு இடமில்லை, நரகத்தில இடர்ப்படுவதில்லை என்றிவ்வாறு தம் இயல்பைத் தெளிவாகவும், திடமாகவும் தெரிவிக்கிறார். இறைவனைத் தவிர வேறு எவரையும் வணங்குவதில்லை, அவன் அடிகளை அடைந்து மீளா ஆளாய் இருப்பதையும் கூறும் இவரது அஞ்சாமை போற்றுதலுக்குரியது.

## ஆ. சொல் தன்மை பற்றியவை

பாடல்களில் குறிப்பிட்ட சொல் மட்டும் சிறப்பாகக் கருதப்பட்டு, அதுவே பதிகத்தின் பெயராய் வருவது.

### 1. நின்ற திருத்தாண்டகம்

நின்றவாறே என்ற முடிபினைப் பாடல்தோறும் கொண்டதால் இப்பெயர் பெற்றது. இது 'உருத்திர திருத்தாண்டகம்' என்றும் அழைக்கப்படும்.

சிவபெருமானின் முழுமுதல் தன்மையைச் சொற்களால் விவரித்து வணக்கம் கூறுவது உருத்திரமாகும். இத்திருப்பதிகத்தில் உள்ள திருத்தாண்டகங்கள் யாவும், இறைவன் உலகமாய் நின்ற நிலையினை வகுத்துக் கூறுவதால் இப்பதிகம் இப்பெயர் பெற்றது. உதாரணமாக,

**''மாதா பிதாவாகி மக்க ளாகி**
**மறிகடலும் மால்விசும்புந் தானே யாகிக்**
**யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி**
**அழல் வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே''**

அன்னை, அத்தன், மக்கட்பேறு, மறிகடல், விசும்பு, கோதாவரி, புலித் தோலாடைக் குழகன், புனைவார் பிறப்பறுக்கும் புனிதன், எதுவாய் நினைக்கினும் அதுவும் தானேயாகி, அழல் வண்ண வண்ணராய் நிற்கும் இறைவன், மேற்கூறியவையன்றி எல்லாப் பொருளுமாய் நிற்கிறான்.

உலகப் பொருளோடு ஒப்புமையாயும், உலகப் பொருளாகவும், அப்பொருளும் தானேயாய் நிற்கிறான் இறைவன் என்பதை ஆதி முதல் அந்தமாய் வரிசைப்படுத்தும் அப்பரின் திறம் எண்ணற்குரியது.

### 2. திருவடித் திருத்தாண்டகம்

அடிதோறும் அதிகை வீரட்டத்துச் சிவபெருமானின் திருவடிப் பெருமையைக் கூறுகிறது.

### 3. புக்கத் திருத்தாண்டகம்

பாடல்தோறும் 'சிற்றம்பலமே புக்கார்தாமே' என முடிகிறது.

### 4. காப்புத் திருத்தாண்டகம்

பாடல்தோறும் அதிகை வீரட்டானத்து இறைவன் பல்வேறு தலங்களில் காப்பாக இருப்பது பற்றிக் கூறுவது.

### 5. ஏழைத் திருத்தாண்டகம்

அதிகைப் பெருமானை 'ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே' எனப் பாடல்தோறும் எண்ணி இரங்கிக் கூறுவது.

### 6. போற்றித் திருத்தாண்டகம்

அடிதோறும் 'போற்றி' என இறையருளைப் போற்றும் தன்மை யுடையது.

### இ. பொருள் அடைவுத் தன்மை பற்றியவை

பதிகம் முழுமையும் பல்வேறுபட்ட செய்திகளின் தொகுப்பாக உள்ளமையால் பதிகம் பெறும் பெயர்.

### 1. சேத்திரக் கோவை

தில்லை தொடங்கிப் பாடல்தோறும் பல சிவத்தலங்களைத் தொகுத்துக் கூறியிருப்பதால் பெற்ற பெயராகும்.

### 2. அடைவுத் திருத்தாண்டகம்

பள்ளி, குடி, கோயில், காடு, வாயில், குளம், துறை முதலான தலப் பெயர்களைத் தனித்தனியே பாடல்தோறும் அடைவுபடுத்தியிருப்பது.

### ஈ. பொதுத்தன்மை பற்றியவை

பொதுவாக இறைவனைப் பற்றிய பெருமைகளைப் பற்றிப் பாடுபவை.

### 1. தனித் திருத்தாண்டகம்

தனித்தனிப் பொருள்களை உணர்த்தும் திருத்தாண்டகங்களால் இயன்ற பதிகம்.

### 2. பலவகைத் திருத்தாண்டகம்

பல தலங்களையும் பற்றிப் பாடும் பதிகங்களால் ஆனது. தலங்களை நினைத்தலை வலியுறுத்தும் பதிகங்களாலானது.

அப்பர் தேவாரத்தில் இறையருட் பெருமைகளும், தன்னனுபவத் தன்மைகளுமே முதன்மை பெறுகின்றன. புறச்சமயத் தீ நெறிகள் பற்றி அங்கங்கே பரவலாகவும், இராவணனைப் பற்றிய செய்தியை பதிகத்தின் இறுதிப் பாடல்தோறும் குறிப்பிடுகிறார்.

இறையருட் பெருமைகளோடு வாழ்வியல் கருத்துக்களை மூவரிலும் முதன்மையான இடத்திலிருந்து கூறுபவர் இவரே ஆவார்.

இங்ஙனமாய், அப்பரது தேவாரத்தில் தாண்டகம் பெறும் இடம், அவற்றின் இலக்கணம், சிறப்பு, பெயர் பெறும் முறை, கூறப்படும் செய்திகள் போன்றவை பற்றி இயன்றளவு சிறப்பாய்ச் சொல்ல இக்கட்டுரை முனைந்துள்ளது. அப்பரடிகளைத் தொழுது பின்பற்றி பக்தி நெறி தழைக்கச் செய்வோம்.

# 11. திருநாவுக்கரசர் வரலாறு

க. ராஜசேகரன், சென்னை.

திருநெறிய தமிழாகிய சைவத் திருமுறைகளுள் நான்கு, ஐந்து, ஆறாந் திருமுறைகளைத் திருவாய் மலர்ந்தருளிய அருளாசிரியர் திருநாவுக்கரசராவர். எஞ்ஞான்றும் திருத்தகவிற்றாகிய பேரின்பத்தைத் தன் அடியார்களுக்கு வழங்கவல்ல சிவனெனு நாமந் தனக்கேயுடைய செம்மேனியம்மானாகிய இறைவனையே சிறப்பீனுஞ் செம்பொருளாகக் கொண்டொழுகிய தெளிந்த சிந்தையுடையவராவர்.

திருநாவுக்கரசர், பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் கி.பி. 600 முதல் 630 வரை காலத்தில் வாழ்ந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி ஆராய்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

### திருஅவதாரம்

இன்றைய தென்னார்க்காடு மாவட்டம் திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூர் என்னும் ஊரில் வேளாண் மரபில் குறுக்கையர் குடியில் புகழனார் - மாதினியார் இருவரும் இணைந்து இல்லறம் நடத்தி வந்தனர். இவ்விருவருக்கும் திருமகளாய்த் திலகவதியாரும், சில ஆண்டுகள் கழித்து மருணீக்கியாரும் பிறந்தனர்.

பெற்றோர் உரிய நாளில் மருணீக்கியாரைப் பள்ளியில் அமர்த்திக் கலைபயிலச் செய்தனர். எல்லாக் கலைகளையும், திறம்பெறக் கற்றுத் தேர்ந்தார் மருணீக்கியார். திலகவதியாருக்குப் பன்னிரெண்டு வயது தொடங்கிய நிலையில், பெற்றோர் தம் மகளுக்குத் திருமணம் செய்விக்க எண்ணினர். அவ்வேளையில், குலம், குணம், ஆண்மை, அரன்பால் அன்பு ஆகியன ஒருங்கிணைந்து பெற்றவராய் விளங்கினார் கலிப்பகையார். அவர், திலகவதியாரைத் திருமணம் செய்து கொள்ள விருப்பம் தெரிவித்தார். அவரின் பண்புகளை அறிந்த பெற்றோரும் இசைவளித்தனர். இருவீட்டாரும் கலந்து பேசித் திருமணம் செய்வதற்கான நாள் பார்ப்பதிலும், வேறு சில காரியங்களிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர்.

### தமக்கையார் தவநிலை

இந்நிலையில், வடநாட்டு மன்னர் சிலரின் படை எழுச்சி காரணமாகத் தமிழ் நில மன்னன் ஒருவன் பேராற்றல் மிக்க கலிப்பகையாரைச் சேனைத்

தலைவராக்கிப் படைகளுடன் வடபுலம் செல்ல உத்தரவிட்டான். கலிப்பகையார் போரில் ஈடுபட்டிருக்கும் காலத்தில் புகழனார் விண்ணுலகை அடைந்தார்.

புகழனாரின் துணைவி மாதினியார் தம் வாழ்க்கைத் துணைவரை இழந்தது அவரை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. கணவனின் நினைவாகவே இருந்த உத்தமபத்தினியான மாதினியார் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். இந்நிலையில், போர் மேற்சென்ற கலிப்பகையாரும் போர்க்களத்தில் பூத உடல் நீத்துப் புகழுடம்பு எய்தினார். இச்செய்தியைக் கேட்டுத் திலகவதியார் திடுக்கிட்டார். "என் தந்தையும் தாயும் என்னை அவர்க்குக் கொடுக்க இசைந்தார்கள். அந்த வகையால் அவர்க்கே நான் உரியவள்; ஆகையால் இந்த உயிரை அவர் உயிரோடு இசைவிப்பேன்" என்று கூறி உயிர்விடத் துணிந்தார்.

மருணீக்கியார் தமக்கையின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் புலம்பினார். அப்பொழுது திலகவதி மாண்டவர் மீளமாட்டார் என்று விவேகத்துடன் உணர்ந்து, தம் தம்பிக்கு தாமே தாயாகவும், தந்தையாகவும் இருந்து வளர்த்து குலப் பெருமையைக் காக்க வேண்டும் என்று முடிவு செய்தார். தவ வாழ்க்கை வாழ்ந்து தம்பியை ஆளாக்கி அவன் வாழ்க்கையைக் கண்டு மகிழ்வேன்! என்று உறுதி செய்தார். அதைக் கண்ட மருள்நீக்கியும், நிம்மதியடைந்தான்.

### தருமசேனராதல்

அக்காலத்தில் சமணம் மேலோங்கியிருந்தது. சமண முனிவர்கள் பாடலிபுத்திரம் போன்ற பகுதிகளில் தங்கித் தம் மதம் பரப்பி வந்தனர். பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் ஆதரவில் சமண சமயத்தினைப் பரவச் செய்யும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். மருணீக்கியார் பாடலிபுத்திரம் வந்தார்.

சமணரின் பள்ளியைச் சார்ந்தார். சமண முனிவரும் தங்கள் தர்க்கவாதத் திறமையால் தங்கள் சமயமே செய்ச்சமயம் என்று கூறி அவர் அறிவை மருட்டித் தங்கள் மதத்தில் ஈடுபடுத்தினர். மருணீக்கியாரும் அம்மத நூல்களில் வல்லவரானார். அதுகண்ட சமணரும் 'தருமசேனர்' என்னும் சிறப்புப் பெயர் அளித்து அவரைப் பாராட்டினர். தருமசேனராகிய மருணீக்கியாரும் புத்தருள் தேரரை வாதில்வென்று சமண சமயத் தலைவராய் விளங்கி வந்தார்.

### சூலைமடுத்து ஆட்கொள்ளல்

தம் அருமைத் தம்பியின் இந்த மதமாற்றம் திலகவதிக்குப் பெரும் மன வேதனையை அளித்தது. ஊரார் தம் நிலையைப் பார்த்துப் பரிதாபப் படுவதையும், தம்பியைப் பற்றிக் குறையாகப் பேசுவதையும் அவரால்

தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஆகவே, அருகில் உள்ள திருவதிகை என்னும் தலத்தில் குடியேறினார். அவ்வூர்க் கோயிலில் குடி கொண்டுள்ள திருவீரட்டனார்க்குத் தொண்டு செய்து தம் வாழ்நாளைக் கழிக்க முடிவு செய்தார்.

ஒருநாள் இரவு திலகவதியின் கனவில் கருணாமூர்த்தியான கங்காதரன் தோன்றினார். ''கவலைப்படாதே! மருள்நீக்கியை மறுபடி சைவனாக்குவது என் பொறுப்பு. காலம் கனிவதற்காகவே காத்திருந்தேன். வேளை வந்துவிட்டது. உன் வேண்டுகோளின்படி உன் தம்பியைத் தடுத்தாட் கொள்ளுவேன். அவனுக்குச் 'சூலை நோய்' வரும். அதைக் குணப்படுத்திக் கொள்ள உன்னிடம் வரும்படி செய்வேன். அவனுக்குத் திருநீறணி. அவன் சூலை நோய் அகலும், சைவனாகவும் மாறுவான்'' என்று கூறி மறைந்தார். அருமைத் தம்பியின் வரவை எதிர்பார்த்து நாட்களை எண்ணிக் கொண்டிருந்தார்.

சமணராக வாழ்ந்து வந்த தருமசேனர் என்ற மருள்நீக்கியாருக்குத் திடீரென்று வயிற்றுவலி நோய் தோன்றியது. சமண மருத்துவர்கள் மருந்து கொடுத்தார்கள். சமணர்கள் தங்கள் சாமார்த்தியங்கள் அனைத்தையும் காட்டி தோல்வி கண்டு, ''உம் நோயைப் போக்க எங்களால் இனிச் செய்வதற்கு ஏதுமில்லை'' என்று கூறிப் போய்விட்டார்கள்.

அந்த இக்கட்டான வேளையில் தம் தமக்கையின் நினைவு வந்தது. ''என் அன்பு அக்கா இப்போது என் அருகிலிருந்தால் எவ்வளவு ஆறுதலாக இருக்கும்? நான் கண்கலங்குவதைக் காணச் சகிக்க மாட்டாளே. அந்த அன்புத் தெய்வத்தைப் பிரிந்து வந்து எத்தனை நாளாகிறது! என் நிலையை அறிந்தால் ஓடோடி வந்துவிடுவாளே'' என்றெல்லாம் திலகவதியின் நினைவால் புலம்பினார்.

தமக்கு நெருக்கமான அருக்கத் துறவியை அழைத்து தம் நிலையைத் தமக்கையிடம் கூறும்படி உரைத்தார். அருக்கத் துறவி கூறியதைக் கேட்ட திலகவதி கனவில் கருணாமூர்த்தி கங்காதரர் கூறியது நினைவிற்கு வந்தது. ''நான் எக்காரணமானாலும் சமணர்கள் வாழும் பகுதிக்குள் அடியெடுத்து வைக்கமாட்டேன். நான் சைவ சமயத்தைத் தீவிரமாகப் பின்பற்றுபவள். என் தம்பி சமணனாகித் தருமசேனனாக இருப்பதில் எனக்கு விருப்பமில்லை. இதை அவனிடம் கூறுங்கள். என்னைக் காண விரும்பினால், அவனை இங்கே வரச் சொல்லுங்கள்'' என்று அந்தச் சமணத் தூதுவரிடம் சொல்லி அனுப்பினாள்.

தமக்கையாரின் எண்ணமறிந்த தருமசேனர், தம் தவறை உணர்ந்தார். சமண சமயத்தை உடனே கைவிட்டுத் தமக்கையின் காலடியில் போய் விழ வேண்டும். அப்போதுதான் இந்த சூலை நோய் தீரும் என்ற முடிவுக்கு வந்தார்.

தம் தமக்கையரைப் பார்த்தவுடன், என் சூலை நோயைப் போக்கி எனக்கு நல்வழி காட்டவேண்டும் என்று கதறினார். தன் காலடியில் விழுந்த மருள்நீக்கியை அள்ளி எடுத்தார் திலகவதியார். "அஞ்செழுத்தான நமசிவாய மருந்திருக்கும்போது நீ அஞ்ச வேண்டியதில்லை" என்று கூறி ஆறுதல் அளித்தார். 'இனி எந்நாளும் உனை மறவேன்' என்று கூறி இத்திருநீற்றைப் பூசிக்கொள் என்று தம்பியிடம் கொடுத்தார். தம் வயிற்றிலும், உடலெங்கும் பூசிக் கொண்டார் சூலை நோய் மறைந்து போனது.

## திருநாவுக்கரசராதல்

மறுநாள் காலையில் திலகவதியார் தம் தம்பி மருள்நீக்கியாரை, திருவதிகையின் திருக்கோயிலுக்கு அழைத்துப் போனார். திருவீரட்டானேசுவரர் சந்நிதியில் வீழ்ந்து வணங்கச் செய்தார். சமணச் சின்னங்களை நீக்கிய போதே தருமசேனரும் ஒதுங்கினார். மருள்நீக்கியாரின் குற்றங்கள் மன்னிக்கப் பட்டுவிட்டன. இப்பொழுது சிவச்சின்னமான திருநீறணிந்து நீலகண்டனின் நினைவாக தரையில் விழுந்து வணங்கி எழுந்து, கண்மூடிக் கண்ணீர் மல்க நிற்கும் மருள்நீக்கியின் வாயினின்று தமிழ்ப் பாசுரம் பிறந்தது.

கூற்றாயின வாறு விலக்ககலீர்
கொடுமை பலசெய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே யிரவும் பகலும்
பிரியாது வணங்குவேன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றினகம் படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றே னடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத் துறையம்மானே.

எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். அதுவரை பதிகம் பாடி அறியாத அவர் வாயிலிருந்து ஊற்றுப் பெருக்கெனப் பாடல்கள் பிறந்தன. மீண்டும் சைவத்தை ஏற்றுத் தம்மை அடைந்த மருள்நீக்கியாருக்கு இறைவனே இட்ட பெயர் 'திருநாவுக்கரசர்'. மருள்நீக்கியாரை சிவபக்தர்கள் திருநாவுக்கரசர் என்று அழைக்கலானார்கள்.

## நாமார்க்கும் குடியல்லோம்

சமண மதத் தலைவர்களுக்கு தருமசேனர் மீண்டும் சைவராகிய செய்தி தெரிந்தது. உடனே தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும், சமண மதத்தை நிலை நிறுத்தவும், பல்லவ மன்னனின் வினாக்களுக்குத் தகுந்தார் போல் பதில் கூறினார்கள்.

அரசே! நீங்கள் கேட்டதெல்லாம் வெறும் கட்டுக்கதை. அத்தனையும் பொய். தருமசேனருக்குச் சூலை நோயே இல்லை. தமக்கையின் மீது பாசம். அவளை விட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை. அக்காளுடன்

வாழ்வதற்கு வழி தேடித் தமக்குச் சூலை நோய் என்று நாடகமாடினார். அவரை உயிரோடு விட்டு வைத்தால் நமது உயர்ந்த சமண சமயத்தை அழித்துவிடுவார். அவரைக் கொல்ல வேண்டும் என்று தூபம் போட்டனர். பல்லவ மன்னன் தமது அமைச்சரை அழைத்து "உடனே திருநாவுக்கரசரை இங்கே இழுத்து வாருங்கள், அவருக்குத் தகுந்த புத்தி புகட்ட வேண்டும்" என்று ஆணையிட்டான்.

அமைச்சரும், திருநாவுக்கரசரிடம் சென்று அரசன் ஆணையை அறிவித்து நின்றார்கள். அரசாணையைக் கேட்ட திருநாவுக்கரசர் என் அப்பன் சபாபதியைத் தவிர வேறு யாருக்கும் நான் அடிமையல்ல, மன்னர் ஆணையிட்டு அழைக்கும் அளவுக்கு நான் எளியவனும் அல்லன் என்று பொருள் கொண்டு பின்வருமாறு பாடினார்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர்காதிற்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே!

என வரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தினைத் திருவாய் மலர்ந்தருளினார்.

**நீற்றறை குளிர்ந்தது**

அமைச்சர் நாவுக்கரசரிடம் என் பொருட்டாவது தாங்கள் அரசவைக்கு வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதற்குச் சம்மதித்து நாவுக்கரசர் பல்லவ நாட்டுக்குச் சென்று, அங்கு அரச சபையில் நிறுத்தப்பட்டார். சமணர்கள், மன்னனைப் பார்த்து நாவுக்கரசரைக் காளவாயில் தள்ளும்படி பரிந்துரைத்தனர். அரசனும், நாவுக்கரசரைக் காளவாயில தள்ள உத்தரவிட்டான்.

மன்னனின் கட்டளையைக் காவலர்கள் நிறைவேற்றினார்கள். தகிக்கும் அந்தச் சுண்ணாம்புக் காளவாய் பனிக்குகை போலக் குளுகுளுவென்றாயிற்று.

அடியவரின் துயர் துடைக்கும் அண்ணலின் கருணையை நினைந்து நெஞ்சம் நெகிழ, கண்ணீர் கசிய பின்வருமாறு பாடினார்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசனெந்தை யிணையடி நீழலே.

எனத் தொடங்கும் திருக்குறுந்தொகைத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார்.

சுண்ணாம்புக் காளவாய் வெப்பத்திலே வெந்து மடிந்து நீறாகிப் போயிருப்பார் நாவுக்கரசர் என்று எண்ணிக் காளவாய்க் கதவை திறக்கச் செய்தார்கள். உடலில் திருநீறணிந்த கோலத்தில் அவர் நிஷ்டையில் அமர்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டனர்.

**நஞ்சும் அமுதாயிற்று**

"இனி என்ன செய்வது?" என்று கேட்டான் மதிகெட்ட மன்னன்; சமணர்கள் யோசனைப்படி நாவுக்கரசருக்கு விஷ உணவு பரிமாறப் பட்டது. நாவுக்கரசருக்கு நீலகண்டனின் அருளால் விஷ உணவு எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை.

**மதயானை பணிந்தது**

நஞ்சும் அமுதாயிற்று. இனி நமக்கு இறுதி வருவது உறுதி என்று எண்ணி அரசனிடம் சென்று அவர் இறவாதிருந்தால் எங்கள் உயிரும் நும் அரசாட்சியும் அழிவது திண்ணம் என்று சமணர்கள் கூறினர்.

மன்னன் யானைப் பாகர்களை அழைத்து "மதயானையைக் கட்டவிழ்த்து விடுங்கள், அதன் காலடியில் தள்ளுங்கள். தலையை, மதயானை தன் காலினால் இடறித் துகைக்கட்கம்" என்று சினந்து சீறினான்.

பாகர்களால் சீண்டி விடப்பட்ட யானை, பிளிறியபடி ஓடிவந்தது. திருநீறணிந்து உழவாரம் தாங்கிச் சிவப்பழமாக நிற்கும் நாவுக்கரசரைக் கண்டதும் சட்டென்று நின்றது. சிவனடியாரை வலம் வந்து அவர்முன் மண்டியிட்டு வணங்கியது. தன்னை ஏவிய பாகரையும் சமணரையும் மிதித்துக் கொன்று சென்றது.

**கல் மிதந்தது**

யானைக்குத் தப்பி ஓடிய சமணர் மன்னவனிடம் சென்றனர். பல்லவனும், இனி என்ன செய்வது என்று வினவினான். அவன் அழிந்தால் தான் நம் அவமானம் நீரும். எனவே கல்லோடு கட்டிக் கடலில் தள்ளுவதே வழி என்று சமணர் கூறினர். அவ்வாறே பல்லவனும் பணித்தான். கொலையாளர்களும், திருநாவுக்கரசரைக் கல்லோடு பிணைத்துக் கடலில் தள்ளித் திரும்பினர்.

அடிகள் பத்தாவது பதிகம் பாடி முடிந்ததும் பெரும் பாறாங்கல் கடலின் அடியிலிருந்து குபீரென்று தக்கையைப் போல் மிதந்தபடி கடல் மட்டத்துக்கு மேலே வந்தது. சிவனின் அருட்பார்வையினால், அவரைக் கட்டி இருந்த கயிறுகள் பூக்கள் தொடுத்த மாலையாகியது. பல்லக்கு படகாகி, அலை கடலைக் கிழித்துக் கொண்டு செல்லலாயிற்று.

திருப்பாதிரிப்புலியூர் என்னும் கடற்கரைத் தலத்தின் கரையில் போய் ஒதுங்கியது. பல்லக்கை விட்டு இறங்கிய திருநாவுக்கரசர் பாதிரிப்புலியூரில் வதியும் பார்வதி நாதனைப் பாடி ஆலயத்தை நோக்கி ஓடினார். அவர் கரையேறிய இடம் இன்றும் ''கரையேற விட்டகுப்பம்'' என்று அழைக்கப்படுகிறது.

திருநாவுக்கரசரைக் கரைசேர்த்த அதிசயத்தை அறிந்த பல்லவ மன்னனின் கண் திறந்தது. சைவத்தின் பெருமையை உணர்ந்தான். சமணத்தைக் கைவிட்டான். சைவ சமயத்தைத் தழுவினான். நமசிவாய நாமத்தை நாள்தோறும் பாராயணம் செய்யலானான். திருவதிகையில் தம் பெயரால் ஒரு சிவாலயத்தையும் எழுப்பினான். திருநாவுக்கரசர் தம் உழவாரப் படையுடன் திருக்கோயில்களைச் சீராக்கும் தொண்டு செய்ய தலயாத்திரை மேற்கொண்டார்.

அப்பர் இப்பிறவியில் மானிடராகப் பிறந்து இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளாமல், உடலாலும், உள்ளத்தாலும், தூய்மை பெற்றுச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற எல்லா நிலைகளையும் கடந்து தெய்வ நிலையை அடைந்திருப்பது ஜீவன் முக்திக்கு ஒப்பாகும்.

குழந்தைப் பருவம் முதல் பல இன்னல்களை அனுபவித்த அவர், தம் தமக்கையின் வாழ்க்கையைத் தமக்காகவே அர்ப்பணித்ததை நினைத்து வருந்தினார். தமக்கையின் இல்வாழ்க்கை நன்று அமையாமல் போனதால், தாமும் துறவு வாழ்க்கையை மேற்கொண்டார்.

பாசத்தால் பிணைக்கப்பட்ட சகோதரி திலகவதியும் தம்பி மருள்நீக்கியாரும் ஒருவர் மீது மற்றொருவர் மாசற்ற அன்பைப் பொழிந்தனர். அவர்களுடைய வாழ்க்கை மற்றவர்களுக்கு ஒரு முன் உதாரணமாகத் திகழ்வதில் ஆச்சரியம் இல்லை.

இக்கட்டுரையின் மூலம் முன் வைக்கும் கருத்து யாதெனில், பிறவியின் பயனாக நாம் எப்படி வாழ வேண்டும் என்பதை இறைவனே தீர்மானிப்பதாகும்.

# 12. புரட்சிவீரர் திருநாவுக்கரசர்

இளங்கண்ணன், உடுமலை.

### அரசியல் சூழல்

திருநாவுக்கரசர் பிறந்த 6-ம் நூற்றாண்டின்போது காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட நாட்டை மகேந்திரவர்மன் ஆண்டு வந்தான். அவன் சமணன்.

### குடும்பச் சூழல்

திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருவாமூரில் குறுக்கையர் குடியில் சைவ வேளாளர் மரபில் திருநாவுக்கரசர் பிறந்தார். தந்தை புகழனார், தாயார் மாதினியார், தமக்கையார் திலகவதியார். இவருக்குப் பிள்ளைத் திருநாமம் மருள்நீக்கியார். தம் மருள்நீக்கிக் கொண்டு பிறருக்கும் மருள்நீக்க வல்லவராக புரட்சியாளராகத் திகழப் போகிறார் என்பதைச் சற்றும் அறியாமலேயே இப்பிள்ளைத் திருநாமம் வாய்க்கப் பெற்றார்.

உரிய காலத்தில் திலகவதியாருக்கு மணம் முடிக்கச் சிவநெறியில் உறைந்து நின்ற சேனாதிபதியான கலிப்பகையார் என்பாரை உறுதி பேசி முடித்தனர் பெற்றோர்.

இடையே போர் மூண்டமையால் தம் கடப்பாடு ஆற்றச் சென்ற கலிப்பகையார் வீரத்தூரகம் அடைந்தார். கலிப்பகையார் இறந்தமை கேட்டுத் துயர் தாங்காத் திலகவதியார் வாழ்க்கையை வெறுத்து இறக்கத் துணிந்த பொழுது தம்பியாகிய மருள்நீக்கியாரை எண்ணி உயிர்தாங்கி இருக்க உடன்பட்டார் திலகவதியார்.

குடும்பப் பாசம் மிக்க நெறியான குடும்பம். உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்த காலம். புகழனார் இறந்தமையால் மாதினியார் மறைந்தார். பெண்கள் திண்மையுடைய கற்பு நெறியாளர்களாகத் திகழ்ந்தனர்.

பாசம், ஒழுக்கம், ஈகை ஆகியவையே பண்பாட்டுச் சொத்தாகக் கொண்டு விளங்கியது மருள்நீக்கியாரின் குடும்பம்.

வறுமை இல்லை, மற்ற எந்தச் சிக்கலும் இல்லை. திடீரென்று உலகில் நிலையாமையால் ஏற்பட்ட வருத்தமான சூழல் தவிர வேறு

எத்துன்பமும் நேரவில்லை. அதை ஆற்றவொண்ணாது உயிருடன் இருப்பவர்களும் இறக்கத் துணிந்தனர். இச்சூழல் திருநாவுக்கரசருக்கு வாழ்க்கை நிலையாமை என்ற மெய்யியல் உண்மையை ஆழப் பதித்து விட்டது. எனவே துறவு கொள்ள எண்ணினார்.

கல்வி கேள்விகளில் சிறந்து நின்ற அவர் நிலையாமை, கல்வியின் சிறப்பு, துறவு நெறி ஆகியவற்றை வலியுறுத்தி மதிப்பு அளித்து அன்று ஓங்கி நின்ற சமண சமய நூல்களைக் கற்று, மிக்க மனம் கவரப்பட்டு அதில் தேர்ச்சி பெற்றுத் ஒரு சமய ஆசிரியராகி தருமசேனர் என்ற பட்டமும் பெற்றார்.

இதனால் மிக்க மனம் வருந்திய திலகவதியார் தம் மனக்குறையைத் திருவதிகை இறைவனிடம் விண்ணப்பித்து விட்டு வழிபாடு செய்து வாழ்ந்து வந்தார்.

**மறக்கருணை**

திலகவதியாரின் விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றிய சிவபெருமான் மறக்கருணையால் மருள்நீக்கியாருக்கு சூலைநோய் கொடுத்தார். சமணர்களுடைய மந்திரங்களாலும் வைத்திய முறைகளாலும் அந்நோய் குணமாகாது தவித்தார்.

அப்பொழுது தமக்கையாரை வருமாறு அழைத்தார். சமணர் இருக்கும் இடம் சென்று குறைதீர்க்க மனமில்லா அம்மையார் அவரைத் தாம் பணியாற்றி வணங்கும் திருவதிகை ஈசன் கோயிலுக்கு அழைத்தார். அவர் இரவோடு இரவாக சமண மடத்தை விட்டு, திருவதிகை வந்தடைந்து தமக்கையாரைக் கண்டு தன்னிடர் விடுபடும் வழி கேட்டு நின்றார்.

திலகவதியார் அவரைச் சிவபெருமானைத் தொழச் செய்தார். ஐந்தெழுத்து ஓதித் திருநீற்றைக் கொடுத்தார். மருள்நீக்கியார் அதனை ஏற்று மெய்யில் பூசினார். பின் பொழுது புலரும் நேரத்தில் ஈசனை வழிபட அவரை அழைத்துச் சென்றார். அவர் சிவனருளால் "கூற்றாயினவாறு" எனத் தொடங்கும் தம் முதல் பதிகத்தைப் பாடினார். சொல்வளம் பொருள் வளம் கண்டு மகிழ்ந்த ஈசன் அவருக்குத் திருநாவுக்கரசர் என்ற திருநாமம் சூட்டி அழைத்தார், சூலை நோயினின்று விடுபடச் செய்தார்.

சிவபெருமான் வயிற்றுப் பசிக்கும், முன் தொடர்பால், அருட் பசிக்கும் அழுத குழந்தையான திருஞானசம்பந்தரைப் பால் கொடுத்து ஆட்கொண்டார். நிலையாமை உணர்வால் துறவு மேற்கொண்டு சமண சமயத்தின் ஈர்ப்பில் அச்சமயம் சார்ந்தவரை மாயைத்திரை விலக மறக்கருணை கொண்டு சூலையால் ஆட்கொண்டார். இச்சையால் பிறவி எடுக்க நேர்ந்த சுந்தரரை ஓலை கொடுத்து ஆட்கொண்டார். ஞானம் பெற்று

உய்ய குருவைத் தேடிய மாணிக்கவாசகருக்கு தாளைக் காட்டி ஆட்கொண்டார். ஆக இதுநாள் வரையும் தம் அருளாணைக்கு அவர்களுடைய முன் தொண்டிற்கேற்ப உட்படுத்திப் பெரும் பண்பாட்டுப் புரட்சி செய்ய, சமயப் புரட்சி செய்ய, பெருதுணையாகச் சிவனே முன்னின்றார் என்பதை அவர்கள் வாழ்ந்த வரலாறுகள் காட்டுகின்றனர்.

தன் வசத்தில் ஓர் மனிதன் தன் மனது, அறிவு புலன்கள் முதலிய வற்றை வைத்தாளும் தன்மையுடை ஆன்மாவாக விளங்குவானாயின் அவன் தன் ஆளுமை உடையான் எனக் கருதலாம். இத்தகையோரை பகவத்கீதை திடப் பிரக்ஞன் என உரைக்கிறது. தம் நாவன்மையால் ஒப்பாரும் மிக்காரும் இலராகச் சிறந்து விளங்கினார். ஆதலின் இறைவன் இவரை நாவுக்கரசர் என அழைத்தார்.

ஈண்டு மருள்நீக்கியார் எனக் கற்றோரால் அழைக்கப்பட்டவர் மருள் நீங்கி, மருள் நீக்கி ஆளுமையோடு நாத்திறன் உடையவராக விளங்குகிறார். ஆதலின் அவர் ஆளுடைய அரசு என்றும் திருநாவுக்கரசர் என்றும் அழைக்கப்பட்டார். இத்திருநாவுக்கரசர் என்ற பெயர் சிவபெருமானே அளித்ததாகும்.

**திருவதிகை வீரட்டானேசுவரர்**

நடுநாட்டுத்தலம் இருபத்திரண்டில் இது 7-வது திருத்தலம். மூவரும் தேவாரம் பாடியுள்ளனர். ஈண்டு முப்புரம் எரித்த வீரச்செயல் புரிந்த இடம் எனத் தொன்மம் குறிக்கிறது.

திலகவதியார் திருத்தொண்டாற்றிய இடம். திருநாவுக்கரசருக்கு இப்பெயர் அமைந்ததோடு சூலை நீங்கப்பெற்ற தலமும் இதுவே. திருவதிகை என்பது ஊர் பெயர். வீரட்டானம் என்பது கோயிலின் பெயர். இறைவன் பெயர் திருவதிகைநாதர், வீரட்டானேசுவரர். இறைவி திரிபுரசுந்தரி. தலமரம் சரக்கொன்றை தீர்த்தம் கெடில ஆறு. திருநாவுக்கரசர் தம் முதல் பதிகத்தை ஈண்டு பாடினார். பண் கொல்லியாகும்.

"கூற்றாயினவாறு விலக்ககலீர்
கொடுமைபல செய்தனநான் அறியேன்
ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதுஎன வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத் துறை அம்மானே"

என்பது பதிகத்தின் முதற்பாட்டாகும்.

திருவதிகையில் பாயும் நெடிய ஆற்றங்கரையின் அருகில் வீரட்டானத்தில் வீற்றிருக்கும் எழில் தலைவர் வினையால் பிணியுற்று துன்புறுதல் விதியாயினும் அவ்வினை யாதென நான் அறியேன். இத்துன்பம் எத்தகைய தீர்வுக்கும் இடமில்லாது என உடலில் உயிரோடு சேர்த்து வாட்டுகிறது. கூற்று போல் வாட்டுகிறது. தாங்க முடியாத இத்துன்பம் விலக்கி தந்திட வேண்டுகிறேன்.

நான் இப்பொழுது உன் திருவடியார் ஆனேன். தாமும் ஏற்றுள்ளீர், உன்னைப் பிரியாது, இரவும் பகலும் வணங்கி இருப்பேன். என உறுதி கொண்டு பாடினார்.

"வந்தாய் அடிக்கே" என்ற சொற்கள் திருநீறு தரித்துத் திருக்கோயிலுக்கு வந்துள்ள பொழுதே திருவடிக்கு ஆட்பட்டு விட்டார் என்பதை தெரிவிக் கின்றது. இறை அடியார்கள் துன்பம் துடைத்து உடன் மகிழ்வித்தல் இயல்பாதலின், துன்பம் பாராமல் காத்து வருதலும் இயல்பு. ஆதலின் உண்மைக்கு ஆட்பட்டபின் சூலை நோய் விலக்காது இருப்பது வியப்பே.

மேலும் ஆட்பட்ட அடியவன் சூலை நோயால் இன்றும் துன்புறுகிறார் என உன்மீது குறையாகப் பிறர் கூற இடம் தருவதாக இருக்கலாமா? மார்க்கண்டேயனுக்காகக் கூற்றுவனை உதைத்துக் காத்த நீ எனக்குக் கூற்றுவன் போல் இடர்தரும் நோயினை விலக்காதிருக்கலாமா? எனவே இவ்விடர் ஆற்றாமையால் விலக்கியருள்க எனப் பொருள் அமையுமாறு "கூற்றாயினவாறு" என்ற சொற்கள் அமைகின்றன.

மேலும் மருத்துவம் மந்திரம் யாவற்றிருக்கும் கட்டுப்படாததாக உள்ளமையால் இந்நோயின் காரணம் அறியாமையாலும் இடர்ப்படுவது குறிக்கப்படுவதாயிற்று.

இனி இடையற்று இரவும் பகலும் முழுநேரத் தொண்டனாக இருப்பதாக உறுதி முடிவு எடுத்தமையை இரவும் பகலும் பிரியாது வணங்குவன், எப்போதும் என்ற வரி சுட்டுகிறது. ஆதலால் நோய் நீக்கியருள வேண்டும் என்ற உட்குறிப்பும் இதனுள் அடங்கும்.

இப்பாடல் ஒரு அகச்சான்றுப் பாடலாகவும் விளங்குகிறது நோய் உற்றதும் அதனை விளக்க வேண்டி இறைவனிடம் விண்ணப்பித்தலும் அவன் அதனை நீக்கியதற்கும் அகச்சான்றாக இப்பதிகம் அமைகிறது. தேவாரப் பாடல்கள் பல இம்மூவர் முதலிகளின் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்வுகளுக்கு அகச்சான்றுகளாக அமைந்துள்ளன என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

**புரட்சியாளர்**

இந்நிகழ்வு அவரைச் சமயப் புரட்சியாளர் ஆக்கியது. இது இவர் அறியாமலேயே திட்டமிடாமலேயே இவரைப் புரட்சியாளராக ஆக்கியது. திருஞானசம்பந்தர் திட்டமிட்டு ஒரு புரட்சி செய்ய சில உறுதியான கொள்கைகளைச் செயல்படுத்த வாய்ப்புக்கள் எதிர்பார்த்திருந்து அவை வாய்க்கப்பெற்று அதனைப் பயன்படுத்தி புரட்சி செய்தார். அதோடு அவ்வாறு செய்தமைக்கு உரிய உணர்வோடு செயல்பட்டமையால் திருக்கடைக்காப்பில் அது பற்றித் தாமே பல பாடல்களில் சுட்டிப் பாடியுள்ளார்கள். புரட்சியின் பாங்கில் இருவருக்கும் இவ்வேற்றுமை யுள்ளது. முடிவு ஒன்றாயினும் செயற்பாட்டில் வேற்றுமைகள் உள்ளன.

நாவுக்கரசர் தம்மைத் துன்புறுத்தியவர்கள் தந்த துன்பத்தைத் தாங்கி அதனைத் தமக்குச் சாதகமாக மாற்றினார். பிள்ளையவர்கள் எதிரி தந்த துன்பத்திற்குத் தாமும் பிறரும் ஆளாகாமல் முறியடித்து வென்றார். பாண்டியன் வெப்பு நோய் தீர்த்து அனல் வாதம் புனல் வாதம் செய்து வென்றார். தம் மடத்திற்கு வைத்த தீ பாண்டியனைப் பாதிக்குமாறு செய்தார். சமணர்கள் தோற்றுத் தாமாகவே கழுமரம் ஏறச் செய்தார். உபநயனச் சடங்கும் உபதேசமும் ஏற்றுத் தாமாகவே அவர்கள் ஐயம் நீக்கி ஐந்தெழுத்துப் பெருமை நிலைநாட்டினார்.

**சமணர் சீற்றம்**

திருநாவுக்கரசர் சமயம் மாறியதை அறிந்த சமணர், சமணராக இருந்த மகேந்திரவர்மனிடம் சென்று இச்செய்தி கூறி அவரைத் தண்டிக்குமாறு கூறினர்.

அவர்கள் உரை கேட்டு தாம் தீர்ப்புக் கூறாமல், அவர்கள் கூறிய தண்டனைகளை நிறைவேற்றினான் மன்னன்.

தீரமுடன் தண்டனைகளை தாம் ஏற்று ஐந்தெழுத்து ஓதி இறையினால் எப்பாதகமும் இன்றி உயிர் பிழைத்து இருந்தார் திருநாவுக்கரசர். தனி மனிதராய் ஓர் அரசையே எதிர்த்தார்.

சேவகர்கள் அவரை அழைத்த பொழுது அவருடன் செல்ல மறுத்துப் பதிலளித்தார்.

> "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
> நரகத்தில் இடர்படோம் நடலை இல்லோம்
> ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்.
> இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
> தாமார்க்கும் குடியல்லா தண்மையான சங்கரனார்
> மீளா ஆளாய்க் கொய்மலர்ச் சேவடியினைக் குறுகினோமே.

என்று பதிலளித்தார்.

**முதல் தண்டனை - நீற்றறையில் இடுதல்**

நீற்றறையில் திருநாவுக்கரசரை அடைத்தனர். ஒரு வாரம் நீற்றறையில் இருந்தார்.

**''மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நீழலே''**

நீற்றறையின் வெப்பம் இளவேனிற்கும் அதன் செவ்வொளி மாலை மதிக்கும் அதன் நெடி இளம் தென்றலென நாசிக்கும் சுண்ண நீர் பொய்கையின் நீர்தரும் சுவையையும் தந்தது. அங்கு எழுந்த ஒலி வீணையின் ஒலிக்கீடு என ஒப்பிட்டுப் பாடினார்.

நீற்றறையில் உயிர் நீங்கும் முன் அது இயல்பாக சில நொடிக்குள் விளங்கக்கூடிய ஐம்புலத் துன்பங்களை எண்ணி அவை எப்படி சிவபெருமானின் ஐந்தெழுத்தோதி திருவடியின் அருளால் இன்ப அனுபவமாக மாறின என்பதை நாவுக்கரசர் இப்பதிகத்தில் காட்டியுள்ளார்.

**இரண்டாம் தண்டனை - நஞ்சுண்ண வைத்தல்**

ஒரு வாரம் கழித்து இவர் உயிர் பிழைத்து இருந்தமை கண்டு சமணர்கள் நஞ்சுண்ண வைத்தனர். பாலடிசிலில் நஞ்சு கலந்து அதனை உண்ணுமாறு செய்தனர். நஞ்சுண்டனைத் தொழும் உண்மை அடியார்க்கு நஞ்சு உண்ணுதலால் அவமாவது நேரப் போவதில்லை என்ற உறுதியுடன் ஐந்தெழுத்து ஓதி நாவுக்கரசர் முழுவதும் உண்டு இவரும் சிவனே என வியக்குமாறு விளங்கினார்.

**மூன்றாம் தண்டனை - யானையைக் கொண்டு மிதித்தல்**

மன்னனின் ஆணைப்படி பட்டத்து யானையைக் கொண்டு இடர் விளைவிக்கச் செய்தனர். யானையின் தோலை உரித்துப் போர்த்திய சிவனின் அடியார்க்கு தீங்கேது?

''சுண்ண வெண் சந்தனச் சாந்து'' என்னும் பதிகம் பாடினார். யானை நாவுக்கரசரை வணங்கி விட்டு ஏவிய பாகர்களை மிதித்து அழித்தது.

இத்தலம் தீர்த்தச் சிறப்புடையது. ஆதலில் இம்மையில் சிவனடி சார்ந்த வாழ்க்கையும் மறுமையில் முத்தி பேறும் நல்க வல்லது கெடிலம் என அதற்கு ஏற்றம் தந்தார். நீர் சிவனுடைய மூர்த்தங்களில் ஒன்று, ஆகவே கெடிலம் சிறப்பு பெற்றது. ஈசன் இதுபற்றியே நாம் ''ஆர்த்தாரும் தீர்த்தன்'' என்றார் மணிவாசகர். ''சென்றாடும் தீர்த்தம் கண்டாய்'' என திருநாவுக்கரசரும் பிறிதோரிடத்தில் பாடியுள்ளார்.

**நான்காம் தண்டனை - கற்றூணிற் பூட்டி ஆழ்கடலில் எறிதல்**

பிணிக்கப்பட்ட கல்லின் கனத்தோடு உடலின் கனமும் சேர்ந்து நொடியில் எறியப்பட்டவுடன் கடலில் மூழ்கிப் போய் உயிர் துறப்பார் என்று எண்ணியவருக்குக் கட்டறுபட்டு மிதந்து திருநாவுக்கரசர் அதன் மேல் அமர்ந்து திருப்பாதிரிப்புலியூரில் கரையேறினார்.

கரையேறிய பகுதியைக் கரையேறிய குப்பம் என்று கூறலும் உண்டு. அங்குள்ள புலியூரானை "ஈன்றாளுமாய்" என்ற பதிகம் பாடி வணங்கினார். பின்னர் திருமாணிகுழி திருத்தினை நகர் வழி திருவதிகை யினை அடைந்தார்.

மன்னர் வியப்புற்றுத் தெளிந்து சைவமே உண்மைச் சமயம் எனத் தெரிந்து சைவனாயினன், பின்னர் திருவதிகையில் குணதரவீசுவரர் என்ற சிவன் கோவில் கட்டினான்.

மனதில் ஐந்தெழுத்தோதி உயர்ந்த திருநாவுக்கரசர் கல் மிதந்த பொழுது "சொற்றுணை வேதியன்" என்ற பதிகம் பாடி திருஐந்தெழுத்தின் சிறப்பினை மக்கள் அறிய எடுத்தோதினார்.

இதனை இன்றும் முறையாக முழுமையாக அறியாதார் உளர். திருஞானசம்பந்தர் பஞ்சாக்கர பதிகம், நமசிவாயப் பதிகம் போல் இச்சூழலில் அவருக்கு முன்னோடியாக நமச்சிவாய பதிகம் பாடினார். இது காந்தார பஞ்சமப் பண்ணில் பாடப்பட்டுள்ளது.

**"சொற்றுணை வேதியன் சோதி வானவன்**
**பொற்றுணை திருத்தடி பொருந்தக் கைத்தொழ**
**கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்**
**நற்றுணை யாவது நமச்சிவாயாவே"**

என்பது பதிகத்தின் தொடக்கம்.

காந்தியடிகள் இருபதாம் நூற்றாண்டில் பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்து ஒத்துழையாமை அறப்போர் நிகழ்த்தினார். இதற்கு முன்னோடியாக தனிமனிதராக மகேந்திர பல்லவனின் அரசை எதிர்த்துச் சமயப் புரட்சி அறவழியில் நடத்தினார் திருநாவுக்கரசர். இந்தியாவிலேயே இவர்தான் இத்தகைய அறப்போர் நடத்தியவர். ஆக திருநாவுக்கரசர் முதன் முதலாகச் சமயப் புரட்சி செய்த அறப்போராட்ட வீரர் ஆவர்.

# 13. வாகீசர் பரவிய விடங்கத் தலங்கள்

பி. உமா, மீஞ்சூர்.

**அஜபா நடனத் தலங்கள்**

'அச்சு மாறிப் பிறத்தல்' என்பது வினை வழிக்கேற்ப மண்ணவர்க்கே யன்றி, விண்ணவர்க்கும் ஈசன் வகுத்த நியதி. கந்தர்வன் ஒருவன் மறு பிறப்பில் முசு (குரங்கு) வாய்ப்பிறந்து, கைலை மலைச்சாரலில் வில்வ தளங்களால் சிவலிங்கத்தை அலங்கரித்த ஆராதனைப் பயனால், இறைவனின் திருக்கருணைக்கு ஆளாகி, முந்தைய பிறப்பின் நினைவு மாறாமல் சூரியவம்சத்தில் திலீபனின் திருமகனாய்ப் பிறந்தான். அவனே முசுகுந்தச் சக்கரவர்த்தி. வசிஷ்ட மாமுனிவரிடம் கலைபல கற்றான்; அவர் சொற்படி திருமுருகனின் 'கந்தவிரதம்' முறைப்படி நோற்று, முருகன் திருவருளையும் அடைந்தான்.

வலன் என்றும் கொடிய அரக்கனை அழிக்க இந்திரனுக்கு உதவி செய்து, இந்திரனின் அன்பிற்கு ஆளாகி, அவன் நாள்தோறும் பூஜித்து வரும் திருமால் பூசித்த சோமாஸ்கந்தமூர்த்தியை அன்பின் நினைவாக யாசித்தான். இந்திரனுக்கு அதனைத் தரச் சிறிதும் விருப்பமில்லை. அதேபோல் வேறொரு மூர்த்தியை அதுவே என ஏமாற்றி முசுகுந்தனுக்குத் தர, இறையருளால் திருமால் அருச்சித்த மூர்த்தியல்லாமை உணர்ந்து மீண்டும் கேட்க, இந்திரனுக்கும் கொடுக்க மனமின்றி, இதேபோல் மீண்டும் ஐந்துமுறை செய்தும் பயனின்றி இறுதியில் தான் பூசித்து வந்த மாலவன் பூசித்த மூர்த்தியை அளித்துவிட்டான். இந்திரனிடமிருந்து பெற்ற ஏழு தெய்வத் திருமேனிகளுடன் பூவுலகம் திரும்பி, திருமால் பூசித்த தெய்வத் திருமேனியை 'பிறக்க முக்தி தரும்' திருவாரூரில் பிரதிஷ்டை செய்தான். மற்ற ஆறு மூர்த்திகளையும் முறையே நாகைக்காரோணம், திருநள்ளாறு, திருமறைக்காடு, திருவாய்மூர், திருக்கோளிலி, திருக்காறாயில் என்னும் திருத்தலங்களில் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்து வரலானான்.

இந்த ஏழு தலங்களும் 'சப்த விடங்கத் தலங்கள்' என்று சிறப்பித்துப் போற்றப்பட்டு வருகின்றன. மூலவரினும் சிறப்பித்துப் போற்றப்படும் தெய்வசக்தி முசுகுந்தன் பிரதிஷ்டித்த தியாகராஜ மூர்த்தங்களுக்கு ஏற்பட்டது.

இந்த ஏழு திருத்தலங்களில் நிலைகொண்ட தியாகராசரை நினைவு கூறுங்கால் 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று திருநாவுக்கரசர் போற்றும் நடராசர் நினைவினையும் உள்ளத்துக் கொண்டு வழிபடுவது பக்தர்களுக்கு ஏற்றது.

தில்லையம்பலத்தில் பொற்சபையில் கோயில் கொண்ட நடராசன், மதுரையில் வெள்ளியம்பலத்தில் கால்மாறி ஆடிய நடராசன், திருவாலங் காட்டில் ரத்தினசபையில் அம்மை காண ஆடிய நடராசன், திருக்குற்றாலத்தில் சித்திர சபையில் திருக்கோயில் கொண்ட நடராசன், திருநெல்வேலியில் தாமிரசபையில் திருத்தாண்டவம் புரியும் நடராசன் ஐவருக்கும் கூட தியாகராஜாவுடன் மனதால் அஞ்சலி செய்து சப்தவிடங்கத் தலங்கள் பற்றியும், அத்தலங்களில் திருநாவுக்கரசர் போற்றித் துதித்த மாண்பினைப் பற்றியும் சிந்தையுள் கொணர்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**திருவாரூர்**

விராட் புருடனது மூலாதாரத் தலம், பஞ்சபூதத் தலங்களுள் பிருதிவி (மண்), பிறக்க முக்தி தரும் திருத்தலம், காசிக்கும், தில்லைக்கும், மேலானது, சப்த விடங்கத் தலங்களுள் முதலாவது, திருமால் பூசித்த தெய்வத் திருமேனி இத்தலத்தில்தான் முசுகுந்தச் சக்கரவர்த்தியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது, மனுநீதிச் சோழன் அரசாண்ட பெருமைக்குரியது, பசுந்தமிழ் வேண்டிப் பரமானே பரவை நாச்சியார்பால் தூது சென்றது.

திருத்தொண்டர் புராணத்தின் முதல் நூலான (சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டர் தொகை பாடியருளிய பழம்பதி. கழற்சிங்க நாயனார், செருத்துணை நாயனார், சோமாசிமாறர், தண்டியடிகள், நமிநந்தியடிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணர், விறன்மீண்டார் போன்றோர் வழிபட்டுப் பேறு பெற்ற திருத்தலம். அதிகமான தேவார திருப்பதிகங் களைக் கொண்ட பரமன் உறை திருப்பதி. திருநாவுக்கரசர் மட்டுமே 21 பதிகங்களால் ஆரூர்க் கோயில் கொண்ட இறைவனைப் பாடிப் பரவி யுள்ளார். மூவரும் பாடிய திருத்தலம் இது. கோயில், குளம், செங்கழு நீரோடை ஒவ்வொன்றும் ஐந்து வேலி நிலம் உடையது. 'ஆரூர்த்தேர்' பழமையும், பெருமையும், சிறப்பும் கொண்டது.

திருஞானசம்பந்தருக்குத் திருநாவுக்கரசர் 'முத்து விதானம்' எனத் தொடங்கும் பதிகத்தால் மார்கழித் திருவாதிரைத் திருநாளின் அன்றைய சிறப்பைப் புலப்படுத்துகிறார். பங்குனி உத்திரச் சிறப்பும் இத்தலத்தின் பெருமையைப் புலப்படுத்தும். 'திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவாரூர்' என்பது அப்பர் பெருமான் வாக்கு.

'நரியைக் குதிரை செய்வானும்' என்ற அப்பர் பெருமான் திருவாக்கு மாணிக்கவாசகர் நினைப்பை எழுப்பவல்லது. 'ஆர்திரை நாளுகந்தானும்

ஆரூர் அமர்ந்த அம்மானே' என்ற தொடர் சிவனுக்குரிய திருவாதிரை நாளை நினைவில் எழுப்புகிறது.

**'காலையும் மாலையும் கைதொழுவார் மனம்**
**ஆலயம் ஆகும் ஆரூர் அரநெறி யார்க்கே'**

என்பதும் அப்பர் அருள்வாக்கு.

'அடித்தொண்டன் நந்தி என்பான் உளன் ஆரூர் அரநெறியார்க்கே' என்றும், 'அடித்தொண்டன் நம்பி நந்தி நீரால் திருவிளக்கிட்டமை நீணாடு அறியுமன்றே' என்றும் நமிநந்தியடிகளைப் போற்றுகிறார் திருநாவுக்கரசர்.

'பிண்டத்தில் பிறந்ததொரு பொருளை' என்ற சொற்றொடரால் அண்டத்தில் உள்ள இறைவனைப் பிண்டத்திலேதான் காணமுடியும் என்பதை உணர்த்துகிறார். அகத்தில் காணாமல் புறத்திலே இறைவனைத் தேடன் பயனற்றது என்பதையும் உய்த்துணர வைக்கிறார். ஆரூர்க் கோயிலின் பழமையைப் பேசும் திருத்தாண்டகம் நெஞ்சில் நிறுத்த வேண்டிய ஒரு பதிகம். 'கனி இருப்பக் காய்கவர்ந்தவாறே' என்பதைப் போல் உவமைகளால் நம் உள்ளத்தை ஈர்க்கும் தன்மையது ஒரு பதிகம்.

பொருள் மன்னன், மருள் மன்னன், அருள் மன்னன் என்ற தொடர் க்ளால் முறையே குபேரனையும், இராவணனையும், சிவனையும் நெஞ்சில் கொணர்கிறார்.

இறைவன் : புற்றிடங்கொண்டார்; வன்மீகநாதர்.

இறைவி : அல்லியங்கோதை.

தியாகராஜர் திருப்பெயர் : வீதி விடங்கர்.

ஆடிய நடனம் : அஜபா நடனம்.

### 2. நாகைக்காரோணம் (நாகப்பட்டினம்)

இறைவன் புண்டரீக முனிவரைக் காயத்தோடு ஆரோகணம் செய்து கொண்டமையால் நாகைக்காரோணம் எனப் பெயர் பெற்றது. அதிபத்தர் அவதரித்த திருத்தலம். ஆரூரர் பொன் பெற்ற தலமும் கூட. மூவரும் பாடிய பெருமை கொண்டது.

இறைவன் : காயாரோகணேசுவரர்.

இறைவி : கருந்தடங் கண்ணி.

தியாகராச மூர்த்தி : அழகிய விடங்கர்.

ஆடிய நடனம் : பாராவார தரங்க நடனம்
(அலைபோல் ஆடும் திருநடனம்)

திருநாவுக்கரசர் வினைமாயப் பாடிய பதிகத்தில், 'பாணத்தால் மதில் மூன்றும் எரித்தவன்' என்று முப்புரம் எரித்த வரலாற்றைச் சுட்டுகிறார்.

'மண்தனை இரந்து கொண்ட மாயன்' என வாமனாவதாரத்தை நினைவில் கொணர்கிறார். 'கற்றவர் பயிலும் நாகைக்காரோணம் கருதியேத்தப் பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்திலாரே' எனப் பாடி கற்றவர் உறையும் நாகை என்பதையும், பிறவிப்பயனையும் இயம்புகிறார். திருமாலைத் தண்டத்தால் அடித்த கங்காள மூர்த்தியையும், நான்முகன் சிரம் கொய்த சிறப்பையும், விசயனோடு வேடனாய் அமர்புரிந்த செயலையும் நினைவில் எழுப்புகிறார் நாவரசர்.

> "வார்மலி மென்முலையார் பலிவந்திட சென்றிரந்து
> ஊர்மலி பிச்சைகொடு உண்பது மாதிமையோ"

> "கங்கைச் சடையுள் கரந்தாய கள்ளத்தை மெள்ளஉமை
> நங்கை அறியின் பொல்லாது கண்டாய்"

என்றெல்லாம் இறைவனோடு நகையாடுகிறார் வாகீசர் நாகைத் திருத்தலத்தில். அவரது நகைச்சுவை உணர்விற்கு இஃதோர் எடுத்துக்காட்டு.

### 3. திருநள்ளாறு

நளமகாராஜனைப் பற்றிய கலிதோஷம் நீங்கிய திருத்தலம்; சனிபகவான் சந்நிதியும், சனிப்பெயர்ச்சி விழாவும் சிறப்புக்குரியவை. மதுரையில் ஞானசம்பந்தர் 'அனல் வாதம்' செய்கையில் 'போகமார்த்த பூண்முலையாள்' எனத் தொடங்கும் இத்தலப்பதிக ஏட்டினை அனலில் இட்டும் அந்த ஏடு பசுமையாகவே இருந்த வரலாறும் நினைவு கொள்ளத் தக்கது. மூவரும் பாடிய திருத்தலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | நளேசுவரர், ஆதிபுரீசுவரர். |
| அம்பிகை | : | போகமார்த்த பூண்முலையாள். |
| தியாகராஜர் திருநாமம் | : | நாக விடங்கர் (நரக விடங்கர்) |
| ஆடிய நடனம் | : | உன்மத்த நடனம். |

'நலியும் கூற்றை நலிந்த நள்ளாறர்', 'மாணிக்காய் காலன் தன்னை நடலரவந் செய்தானை,' 'குன்றாத மாமுனிவன் சாபம் நீங்கக் குரை கழலால் கூற்றுவனைக் குமைத்த கோனை' என்ற தொடர்களால் மார்க்கண்டேய மாமுனிவன் பொருட்டுச் செய்த காலசம்ஹாரம் கருத்தில் கொணர்கிறார் வாகீச மாமுனி. சிலந்திக்கருளிய சீர்மையும், முப்புரம் எரித்த வரலாறும் தக்கன் வேள்வி சிதைத்த தன்மையும் இயம்புகிறார்.

'தயாமூல தன்மம்' என்னும் தத்துவத்தின் வழி நின்று தாழ்ந்தோர்க் கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பியை' என்ற தொடரால் மேல் நிலைக்கு ஒரு மனிதனை உயர்த்த இறைவன் காட்டும் அற்புத வழி 'தயாமூல தன்மம்' எனப் பாடுகிறார். 'உயிர்கள்பால் காட்டும் தயையே ஆன்மத் திறவுகோலாய் நின்று தன்னைத்தான் உணரச் செய்யும் ஆற்றல்மிக்கது' என்பதை எவ்வளவு அழகாகத் தெளிவாக நம் நெஞ்சில் நிறுத்துகிறார்.

## 4. திருமறைக்காடு (வேதாரண்யம்)

வேதங்கள் பூசித்த திருத்தலம், இராமன், இராவணனைக் கொன்ற பாவம் நீங்க புனிதநீர் ஆடிய 'ஆதிசேது' எனும் கோடிக்கரை அருகில் உள்ளது. மூடிய கதவினைத் திறக்க அப்பரும், திருஞானசம்பந்தரும் பதிகங்கள் பாடிய தெய்வத் திருத்தலம். ஆலய தீபத்தில் உள்ள நெய்யைத் தனக்கு உணவாக உட்கொள்ள வந்த எலி,

விளக்கிலிருந்த திரியைத் தள்ள, அணையும் நிலையில் இருந்த தீபம் சுடர்விட்டு ஒளிர, அதன்பயனாக மறுபிறவியில் எலி மகாபலிச் சக்கரவர்த்தியாக ஆயிற்று. அப்பர் திருக்குறுக்கைத் திருப்பதிகம் இவ் வரலாற்றைச் சுட்டுகிறது. சமுத்திர நீராடல் இத்தலத்தில் பெரும் புண்ணியம் தரவல்லது.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | திருமறைக்காடர், வேதாரண்யர் |
| அம்பிகை | : | வீணாவாத விதூஷணி |
| தியாகராஜர் திருப்பெயர் | : | புவனி விடங்கர் |
| ஆடிய நடனம் | : | ஹம்ஸ பாத நடனம் |

சிலந்திக்குச் செய்த அருள், முப்புரம் எரித்தமை காலனைக் கடிந்தது, நஞ்சுண்டமை, தக்கன் வேள்வி தகர்த்தது, திருமாலையும் ஒரு பாகமாய்ப் பெற்றது முதலிய வரலாறுகள் அப்பரடிகளால் பாடப் பட்டுள்ளன. 'செந்தில் மேய வள்ளி மணாளற்கு தாதை கண்டாய்' என்ற தொடரால் திருமுருகனையும், செந்திலம்பதியையும் நெஞ்சில் கொணர்கிறார். 'முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்,' 'ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்' என்ற தொடர்களால் வேறுபாடற்ற சமுதாயத்தைக் காட்டும் பாங்கு எண்ணத்தக்கது.

கால் கொடுத்து இரு கை நாற்றி எனும் பாடலில் உடலையும் வீட்டையும் ஒப்புமைகாட்டும் சீர்த்தி சிந்தனையைத் தூண்ட வல்லது. மேலும் அப்பாடலில் ''மால்'' என்ற ஒரு சொல்லை நால்வகைப் பொருளில் நயம்படக் காட்டுகிறார். நாவின் வேந்தர் உடலை நோக்கிக் காற்று எனவும், உலகை நோக்கி மயக்கம் எனவும், உயிரை நோக்கி வேட்கை எனவும், அருளை நோக்கி அன்பு எனவும் காட்டும் அழகே அழகு!

## 5. திருவாய்மூர்

நாவுக்கரசர் தன்பால் வர இறைவன் ஆணையிட்டு, அவரும் அங்குச் சென்று பதிகம் பாடிப் பரவிய திருத்தலம் திருவாய்மூர். கதிரவன் பூசித்த திருத்தலம் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடிப் பரவிய தலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | வாய்மூர் நாதர் |
| அம்பிகை | : | பாலினும் நன்மொழியம்மை |
| தியாகராஜர் திருப்பெயர் | : | நீலவிடங்கர் |
| ஆடிய நடனம் | : | கமல நடனம் |

வாய்மூர் அடிகளைத் தாம் கண்ட தன்மையைத் திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசர் தேனினும் இனிய செந்தமிழால் பாடிப் பரவியுள்ளார்.

அவற்றில் சில தொடர்கள்,

**"வேடுவனாய் நின்ற நிலையும் கண்டேன்**
**வையம்பு அரண் எரித்த காட்சி கண்டேன்"**

### 6. திருக்கோளிலி (திருக்குவளை)

நான்முகன் பூசித்த திருத்தலம். 'குண்டையூர் சில நெல்லுப் பெற்றேன் ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே' என்று நம்பி ஆரூரர் ஆண்டவனிடம் நட்பின் உரிமையால் எழுப்பிய குரலைக் கேட்க முடிகிறது. அவர் நெல் பெற்ற குண்டையூரின் அருகில் உள்ள திருத்தலம் இது. அகத்தியர், பீமன் முதலியோர் வணங்கிய தலமும் கூட. மூவர் பாடிய திருத்தலம். இறைவன் நவக்கிரகங்களின் குற்றங்களை நீக்கி அருள் புரிந்ததால் இத்தலம் 'கோளிலி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இத்தலத்தில் உள்ள நவக்கிரகங்களும் ஒரேமுகமாய்ப் பார்த்தபடி நிற்பதும் உணரத்தக்கது.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | சுந்தரேசர் |
| அம்பிகை | : | மீனாட்சி |
| தியாகராஜர் திருப்பெயர் | : | அவனிவிடங்கர் |
| ஆடிய நடனம் | : | பிருங்க நடனம் (வண்டு) |

'செந்நெலார் வயல்சூழ் திருக்கோளிலி மன்னனே அடியேனை மறவலே'. (அப்பர்) பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிட இறைவன் பாற்கடல் தந்த வரலாற்றையும், அரி, அயன் அறியவொண்ணாப் பாங்கையும் கோளிலிப் பதிகத்தால் உணர முடிகிறது.

### 7. திருக்காறாயில்

நான்முகன், இந்திரன், முசுகுந்தன் வழிபட்ட இத்திருத்தலத்தை திருஞானசம்பந்தர் பாடிப் பரவியுள்ளார். இங்குள்ள பிள்ளையார் திருப்பெயர் கடுக்காய்ப் பிள்ளையார். ஒரு வணிகன் ஜாதிக்காய் மூட்டையைக் கடுக்காய் மூட்டை என்று பொய் சொல்ல ஜாதிக்காய் மூட்டை கடுக்காய் மூட்டை ஆயிற்று என்பர்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | கண்ணாயிர நாதர் |
| அம்பிகை | : | கைலாய நாயகி |
| தியாகராஜர் திருப்பெயர் | : | ஆதிவிடங்கர் |
| ஆடிய நடனம் | : | குக்குட நடனம் (கோழி) |

சப்த விடங்கத் தலங்களுள் சேராத தியாகராசர் குடிகொண்ட திருத்தலத்தையும் சிந்தனையுள் கொணர்ந்து இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

தொண்டை மண்டலத்தில் திருவொற்றியூர் கோயிலில் வீற்றிருந்து திருவருள் பாலிப்பவரே இத்தகு சீர்த்திமிகு தியாகராசர்.

பட்டினத்தடிகள் முக்திபெற்ற இத்தலத்தில் உள்ள இறைவன் திருநாமம் ஆரூர்ப் பெம்மான் திருப்பெயரேயாகும். புற்றிடங்கொண்டார் (வன்மீக நாதர்), அம்பிகை வடிவுடையம்மை.

பக்தி மணம் பரப்பும் இத்திருக்கோயில் குடிகொண்ட அம்பிகையே அருட்பிரகாச வள்ளலார்க்கு அண்ணியாய்ச் சோறளித்தவள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையை மணந்தது திருவாரூரில்; சங்கிலியைத் திருமணம் புரிந்தது திருவொற்றியூரில். ஆரூரன் பெருமையை அவனிக்கு உணர்த்த இறைவன் சுந்தரர்க்குச் செய்த சோதனைகள் ஏராளம்! கண் பார்வை போயிற்று; நோயினால் தாக்குண்டார்; உடலும், உள்ளமும் தளர நடந்த அவருக்குக் கோல் கிடைத்தது; (திருவெண்பாக்கத்தில்) காஞ்சியில் ஒரு கண் கிடைத்தது. துருத்தியில் நோயும் தீர்ந்து, ஆரூர்ச் சென்றும் ஆரூரனை தரிசித்தும் பரவையருள் கிட்டாமல் அவர் பட்டபாட்டை என்னென்பது? இறைவனையே தூதனுப்பி பரவையின் ஊடல் தணித்து வாழ்ந்த ஆரூரன் நினைவோடும், ஆரூர்ப்பெம்மான் நினைவோடும் விடைபெறுகிறேன்.

# 14. நாவுக்கரசரும் தாயுமானவரும்

**உமா அறிவழகன், சென்னை.**

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு விளங்கும் சைவ சமயம், மிகவும் தொன்மைச் சிறப்புடைய ஒரு சமயம் ஆகும். மக்களுக்கு நல்வழிகாட்டி, அவர்களைச் சிறப்பானதொரு வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்யும் ஆற்றல் பெற்ற சைவ சமயத்தின் பெருமையை விளக்கும் வகையில்,

**''சைவத்தின் மேல்சமயம் வேறிலை அதிற்சார்**
**சிவமாம் தெய்வத்தில் மேல் தெய்வம்இல்''**

என்கிறது திருவருணைக் கலம்பகம். இத்தகைய பெருமையும், சிறப்பும் தன்னகத்தே கொண்ட சைவ சமயம், சங்ககாலத்திற்குப்பின் தமிழகத்தில் தோன்றிய களப்பிரர் ஆட்சியாலும், பிற சமயங்களின் செல்வாக்கினாலும் தன் செல்வாக்கை இழக்கத் தொடங்கியது. இத்தகையச் சூழலில் அந்நிலையினை அகற்றி, சைவம் மீண்டும் எழுச்சியுற்று விளங்கச் செய்யும் வகையில் பல அடியார்கள் தோன்றினார்கள். சைவ சமயம் தழைக்கத் தொண்டாற்றியவர்களுள் திருநாவுக்கரசரும், தாயுமானவரும் குறிப்பிட்டுப் போற்றத்தக்க சிறப்புடையவர்களாவர்.

**காலம்**

இவர்கள் இருவரும் இருவேறு காலத்தினர். திருநாவுக்கரசர் கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தவர். தாயுமானவர் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியவர். இவர்கள் இருவரும் காலத்தால் வேறுபட்டிருப்பினும், கொள்கையால், கருத்தால், பண்பியல்பால் பெரிதும் ஒன்றுபட்டு காணப்படுகின்றனர்.

**திருநாவுக்கரசர் வரலாறு**

திருநாவுக்கரசர் திருமுனைப்பாடியில் உள்ள திருவாமூரில் வேளாண்குலத்தில் தோன்றியவர். இவரது இயற்பெயர் மருணீக்கியார். இவர் முதலில் சமண சமயத்தைச் சார்ந்தார். சமண நூல்கள் அனைத்தும் கற்று தேர்ந்தார். இதனைக் கண்ட சமணர்கள் அவருக்கு ''தருமசேனர்'' என்னும் பெயரிட்டனர். அதன்பின்னர் இறையருளாலும் தமக்கையின் வழிகாட்டுதனாலும் சைவ சமயத்தை சார்ந்தார்.

**தாயுமானவரின் வரலாறு**

தாயுமானவர் திருவருளால் இவர் தோன்றியதால் இவருக்கு "தாயுமானவர்" என்று பெயர் சூட்டினர். இவருடைய பாடல்களில் பல இடங்களில் மலைக்கோயிலில் இருக்கும் தாயுமானவரைக் குறிப்பிட்டுப் போற்றுகின்றார். இவர் பிறந்த ஊர் வேதாரண்யம் என்பர். இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர். திருமூலர் மரபில் வந்த மௌனகுரு என்பவரிடம் உபதேசம் பெற்றவர். இவர் விஜயரகுநாத சொக்கலிங்க நாயக்கர் சமஸ்தானத்தில் பணியாற்றியவர்.

**திருநாவுக்கரசரின் பாடல்கள்**

நாவுக்கரசர் என்றவுடன் எல்லோர் நினைவிற்கும் வருவது தேவாரம் ஆகும். தேவ+ஆரம் எனப் பிரித்து இறைவனுக்குச் சூட்டப்படும் மாலை எனப் பொருள்படும். இவர் பாடியவை 4, 5, 6 என்னும் மூன்று திருமுறைகளாகும். 312 திருப்பதிகங்களும் 3066 திருப்பாடல்களும் கொண்டமைந்துள்ளது. அப்பர் தமது தேவாரப் பாடல்களை இலக்கணப்படி "தாண்டகம்" எனும் வகைமையைக் கையாண்டு பாடியுள்ளார்.

**தாயுமானவரின் பாடல்கள்**

தாயுமானவர் பாடல்கள் மொத்தம் 1452 ஆகும். இப்பாடல்கள் 56 பதிகங்களில் அமைந்துள்ளன. தாயுமானவர் தம் பதிகத் தலைப்புக்களை முதற்பாடலின் முதல் தொடர்களைக் கொண்டும், பாடற் பொருளினைக் கொண்டும் அமைத்துள்ளார்.

**பாடுபொருள்கள்**

இறைவன் மீது இடையறாது எல்லையற்ற அன்பினைச் செலுத்தினால் இறைவன் தவறாது திருவருள் புரிவார் என்பது இருவர் பாடல்களின் பொருளாக அமைந்துள்ளது. இருவரும் அருளியுள்ள பாடல்களைப் பாடி இறைவனிடத்தே அன்பு செய்தால் இறையருள் பெறமுடியும். இவர்கள் இருவரின் பாடல்களும் தோத்திர பாடல்களாகவே அமைந் துள்ளது. தாயுமானவர் பாடல்கள் திருநாவுக்கரசர் காலத்தில் தோன்றி யிருந்தால் நிச்சயம் அவைகளும் திருமுறையில் இடம்பெற்றிருக்கும் என்றே கூறலாம்.

**இருவரும் கண்ட இறைவன்**

இறைவன் என்பது மனம், மொழி, மெய் ஆகியவற்றைக் கடந்து நிற்பதாகும். இவ்விறையுண்மை நிலையான நாவுக்கரசரும் தாயுமானவரும் தத்தம் பாடல்களில் விளக்கியுள்ளனர். இறைவனின் இலக்கணத்தைக் கூறும்பொழுது ஆகாயம் முதல் நிலம் வரையிலான பஞ்சபூத பரிணாமமான

உருவங்களும் உலகங்களும் மற்றும் எல்லாமும் தானேயாய்ப் பூரணமாய் நிற்கின்றவன் இறைவன் என்பதை நாவுக்கரசர்,

"மண்ணாகி விண்ணாகி மலையுமாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானேயாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியுமாகிக்
கலையாகிக் கலைஞானந் தானேயாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணுமாகிப்
பிரளயத்துக் கப்பலோ ரண்டமாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்துமாகி
எழுஞ்சுடரா யெம்மடிகள் நின்றவாறே"

(தேவாரம் - 6 - 74-2)

என்கின்றார்.

இவ்வுண்மையினைத் தாயுமானவர்,

"அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்"

"விண்ணாகி பூதமெல்லாந் தன்னகத்திலடக்கி வெறுவெளியாய்."

"பார்க்குமிடமெங்கும் மொடு நீக்கமற
நிறைகின்ற பரிபூரணானந்தம்"

"எவ்விடத்தும் பூரணமாம் எந்தைபிரான் தண்ணருளே"

என்கின்றார். இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் பூரணமாய் நீக்கமற நிற்பவர் என்னும் உண்மையினை இருவரும் ஒரே நிலையில் உணர்ந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பவை இறைவனின் ஐந்தொழில்கள் ஆகும்.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"

(தேவாரம் - 4-81-4)

சிதம்பரத்தில் நின்றாடும் கடவுளைக் கண்டு பாடும் இப்பாடல் பொருளாழத்துடன் அமைந்துள்ளது. இறைவனின் தோற்றத்தினைச் சித்தரிக்கின்றதுடன் இல்லாமல் இறைவன் ஐந்தொழில்களுக்குரிய சின்னங்களோடு நிகழ்வதை அறிய முடிகின்றது. இறைவனின் உடுக்கையொலி படைத்தலையும் அபய திருக்கரம் காத்தலையும், எரியும் நெருப்பு அழித்தலையும், ஊன்றிய திருவடி மறைத்தலையும்

தூக்கிய திருவடி அருளலையும் செய்வதைப் புலப்படுத்துகின்ற வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

தாயுமானவரும் இறைவனின் ஐந்தொழில்களைப் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

"தன் அருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கு இச்சை வைத்து"

என்றும்,

"பெருவெளியாய் ஐம்பூதப் பிறப்பிடமாய்"

பெரிய அண்டங்கள் எத்தனை அமைத்து அதிற்பிறங்கும்
உரிய பல்லுயி ரெத்தனை யமைத்தற் குறுதி
வருவ தெத்தனை யமைத்தனை அமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ"

என்று கூறி இறைவனது தொழில்களை உணர்த்துகின்றார்.

அடிகளார் இருவரும் இவ்வாறு இறைவனைக் குறித்து போற்றிப் பாடியுள்ளனர்.

**மூவகை மனிதர்**

மக்கள் அனைவரும் ஒரே இயல்பினராக இருப்பதில்லை. சமுதாய மக்களிடையே எத்துணையோ வேறுபட்ட நிலைகள் உண்டு. அவற்றிற்குப் பல காரணங்கள் உண்டு. வாழும் நிலை, வசதி வாய்ப்புகள், கல்வி முன்னோர் மரபு நிலை, தொழில் நிலை, சுற்றுச் சூழல் என்று பல காரணங்கள் உண்டு என்றாலும் இவற்றுள்ளும் முக்கிய காரணமாக இருப்பது முன்வினை என்ற ஒன்றும் ஆகும்.

இவ்வாறு பல்வேறு நிலைப்பட்ட மக்களை இவ்விரு அடியார்களும் மூவகையில் பிரித்துக் காட்டுகின்றனர். 1. இறைவனைத் தேடுவோர், 2. இறைவனை வழிபடுவோர், 3. இறைவனை வணங்காதோர் என்று மூன்று நிலைகளில் பிரிக்கின்றனர். இறைவனைத் தேடுவோருள் சிலர் குற்றங்கள் (களவு, காமம், சினம்) உடையவர்களாக இருப்பர். இறைவனை வழிபடுவோர் மாறாத அன்புடன் நெறிப்படி சிவனை வணங்குவர். (தொண்டர், அடியார்) இவர்கள் இருவருக்கும் அப்பாற்பட்டவர்கள் மூன்றாம் நிலையில் இருப்பவர்.

**இறைவனைத் தேடுவோர்**

செங்கணானும் பிரமனும் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலர்

இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே

(தேவாரம் - 5-209-11)

என்று திருமாலும் பிரமனும் இறைவனைத் தேடித் திரிந்தமையை எடுத்துக் கூறுகின்றார் நாவுக்கரசர். இதனைத் தாயுமானவர்,

"காணுங் கண்ணிற் கலந்த கண்ணே! உனைச்
சேணும் பாரும் திரிபவர் காண்பரோ?
ஆணும் பெண்ணும், அதுவெனும் பான்மையும்
பூணுங்கோலம் பொருந்தியுள் நிற்கவே." (தாயு. பாடல்கள்)

என்கின்றார்.

தேவர்கள் இறைவனைத் தேடித் திரிவதைப் பாடிய அடிகளார் இருவரும் மானிடரில் இறைவனைத் தேடிக் காணாத மாந்தரையும் சுட்டுகின்றனர்.

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் விந்தகனை"

(தேவாரம் - 4-7-1)

என்கின்றார் நாவுக்கரசர்.

இதனைத் தாயுமானவர்,

"களப்பெறு வஞ்சநெஞ்சத்தினர் காணாக்
காட்சியே!! சாட்சியே! அறிஞர்
உளப்பெறுந் துணையே!" (தாயு. பாடல்கள்)

என்று குறிப்பிடுகின்றார்.

## இறைவனை வணங்குவோர்

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைபுண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப ரவர்தமை நாணியே." (5-204-9)

என்று

"சலம் பூவோடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்
நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன் நாமம் என்நாவில் மறந்தறியேன்"

என்று தாயுமானவரும் இறைவனை வழிபடுவார்தம் இலக்கணத்தை மிக அழகாகக் கூறிச் செல்கின்றனர்.

**இறைவனை வணங்காதார்**

சிவபரம் பொருளாகிய இறைவனை வணங்காதார் வீணே உடம்பை வளர்த்து அழிகின்றனர் என்றும், இறைவனை உணராத மூர்க்கராகவே இறக்கின்றனர் எனவும் விளக்குகின்றனர்.

"முன்னெஞ்சம் இன்றி மூர்க்கராய்ச் சாகின்றார்
தன்னெஞ்சந் தமக்குத் தாமிலாதவர்" (தேவாரம் - 5-212-6 )

என்று நாவுக்கரசரும்,

"தெய்வம் வேறுளதென்பவர் சிந்தனை நைவர் என்பதும்
சைவசிற்சிவானே! உனைச் சார்ந்தவர் உய்வர்"

(தாயு. பாடல்கள்)

என்று தாயுமானவரும் கூறிச் செல்கின்றனர். உலக மக்களை மூவகையில் பிரித்து அவர்களது நிலைகளை விளக்குவதில் ஒத்த கருத்துடையவர் களாகவே இருவரும் இருந்துள்ளனர்.

**நூல்களின் பயன்பாடு**

இவ்விருவரின் நூல்களும் சமுதாயத்திற்கு வழங்கும் பயன்கள் என்ன என்பதை ஆராய்ந்து பார்த்தோம் என்றால்,

1. மக்களின் அறியாமையை நீக்குதல்
2. மக்களுக்கு ஞானஒளி தருதல்
3. உலகத்தில் பாவத்தினை கொடுக்கும்படியான தீயநெறிகள் அகன்றொழிக்க மக்களுக்கு வழிகாட்டுதல்.
4. இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் அளித்தல்
5. பேரின்ப முக்திக்கு உதவுதல்

**இருவரும் ஆற்றிய அறப்பணிகள்**

அடியவர்களின் வரலாற்றைப் படைத்தளித்த சேக்கிழார் நாவுக்கரசரைக் குறித்துப் பாடுகையில்,

"மறந்தரு தீநெறி மாற
மணி கண்டர் வாய்மை நெறி
அறந்தருநா வுக்கரசு" (பெரியபுரா. திரு. 11)

என்று அறநெறிப் பெரியாராக அறிமுகஞ் செய்து வைக்கின்றார். இறைவனின் அருள்வழி நின்று மேற்கொள்வதற்குரிய அறநெறியினை உலகத்திற்கு அறிவித்ததோடு நின்றுவிடாமல் அவற்றின்படி நின்று தம் செல்வங்களைத் தான தருமம் செய்தும் நந்தவனங்கள், குளங்கள், கிணறுகள் போன்றவற்றை அமைத்து தந்துள்ளார். மேலும் இறைவன் எழுந்தருளி யுள்ள திருக்கோயில்களுக்குச் சென்று பாடல் பாடுவதோடு, "என் கடன்

பணி செய்து கிடப்பதே'' என்று முழங்கினார். தன் வாழ்நாள் முழுவதும் சமயப்பணி, சமுதாயப் பணி என்று முழுவதுமாக தம் வாழ்க்கையை அர்ப்பணித்தவர் அப்பர் என்றால் அது மிகையாகாது.

திருநாவுக்கரசரின் அருள்நெறி, பொதுநல வாழ்க்கை அறிவுரைகளை நன்று தெளிந்து மனத்திற் கொண்டவர் தாயுமானவர். அதனால்தான்,

''தானம் தவம் தருமம் சந்தமுஞ் செய்வர், சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே'' (தாயு. 158)

என்றும்,

''எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே'' (தாயு. 221)

என்றும், கொல்லாமையாகிய அறத்தை,

''கொல்லாவிரதம் குவலயமெல்லாமோங்க
எல்லார்க்கும் சொல்வதுஎன் இச்சை'' (தாயு. 154)

என்றெல்லாம் பாடுகின்றார்.

''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்று திருநாவுக்கரசரும், ''அன்பர் பணி செய்து என்னை ஆளாக்க வேண்டும்'' என்று தாயுமானவரும் அறநெஞ்சத்துடன் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

# 15. நாட்டுப்புறப் பண்பாட்டு மரபுகள்

கு. கதிரேசன், திருச்செந்தூர்.

உலகில் மனிதன் தோன்றிய காலம் தொட்டு உருவாகி வளர்ந்து வரும் பல்வேறு வாழ்க்கை முறைகளையே 'நாட்டுப்புறப் பண்பாடு' என்னும் சொல்லாக்கம் குறித்து நிற்கிறது. அவற்றில் பல்வேறு கூறுகள் அமைந்திருக்கின்றன. காலம் காலமாக தொடர்ந்து வழக்கத்திலிருந்து வரும் நிகழ்வுகளை 'மரபுகள்' என்னும் சொல் குறிப்பிடுகிறது. மனித வாழ்வின் மரபு வழிப்பட்ட இத்தகைய பண்பாட்டுக் கூறுகள் சமூகக் காரணிகளான அரசியல், பொருளாதார, சமூகப் பின்புலங்களால் பாதிக்கப்பட்டு செவ்வியல்படுத்தப்பட்ட நிலையைப் பரவலாகக் காணலாம். ஆயினும் எவ்வகைக் காரணிகளினாலும் தாக்கப் பெறாமல் இன்றும் மரபு வழிப்பட்ட நிலையிலே இருந்து தம் பண்பாட்டுப் பிரதிபலிப்பைத் தந்து கொண்டிருக்கும் வழக்காறுகள் பரவலாக இருந்து கொண்டிருக்கின்றன. மக்களின் நவீன வாழ்க்கையோடும் பழக்க வழக்கம், சடங்குகளோடும் தொடர்புடைய அத்தகைய வழக்காறுகளை நாட்டுப்புறப் பண்பாட்டு மரபுகள் என அழைக்கலாம். இந்தப் பின்னணியில் மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு நிலைகளில் பல்வேறு வாழ்க்கைப் பண்பாட்டு நிகழ்வுகளைப் பல்வேறு சூழல்களுக்கு ஏற்ப நிகழ்த்திக் கொண்டே வருகிறான். அவை பழக்கங்களாக, வழக்கங்களாக, சடங்குகளாக நிகழ்த்தப்பட்டுக் கொண்டே இருக்கின்றன. அந்த வகையில் பாடல், கதை, கதைப் பாடல் பழமொழிகள், விடுகதைகள் உள்ளிட்ட இலக்கியங்கள், ஆட்டம், கூத்து, இசை முதலிய கலைகள், கலைகளை நிகழ்த்துவதற்குரிய இசை மற்றும் நிகழ்த்துக் கருவிகள், கைவினைப் பொருட்கள், விளையாட்டுகள், வாழ்வில் நடைபெறும் இன்ப துன்ப நிகழ்வுகள் அவற்றை ஒட்டி நிகழ்த்தப்படும் சடங்குகள், வழக்காறுகள், வழிபாடு, வழிபாட்டிற்குரிய தெய்வங்கள், தெய்வ விழாக்கள், வழிபாட்டுச் சடங்குகள், நம்பிக்கைகள் முதலிய வாழ்க்கை மற்றும் வழிபாட்டு மரபுகள் மனித வாழ்வில் இன்று வரை படிந்து பரவிக் கிடப்பதைக் காண முடிகிறது. இவ்வழக்காறுகள் மாற்ற முடியா மரபுகளாகிப் போவது இயல்பான நிகழ்வாகும். இத்தகைய பண்பாட்டு மரபுக் கூறுகள் அவ்அக்காலத்திலே இலக்கியங்களிலும் வெளிப்படுவது இயல்பாக தவிர்க்க முடியாத ஒன்று. இப்பண்பாட்டு மரபுக் கூறுகளே இலக்கியம் மற்றும் கலை நிகழ்வுகளுக்கு உயிரூட்டுவனவாக அமைந்திருக்கின்றன.

இதனை ஒவ்வொரு நிலையிலும் இனம் காண முடியும். அந்த வகையில் திருநாவுக்கரசர் பெருமான், திருத்தலங்கள்தோறும் சென்று பாடி அருளிய திருப்பாசுரங்களில் அவர் காலத்திய நாட்டுப்புறப் பண்பாட்டுக் கூறுகள் பல இடம் பெற்றிருப்பதை இனம் காண முடிகிறது.

**வழிபாடும் - விழாக்களும்**

அப்பர் சுவாமிகள் ஆலயங்கள்தோறும் சென்று பக்திப் பாசுரங்களைப் பாடி இறைவனை வழிபட்ட தன்மையை வரலாறு உணர்த்துகிறது. அவ்வாறு அவர் பாடிய பாசுரங்களிலிருந்து அக்கால மக்களின் வழிபாட்டு மரபையும், தெய்வங்கள் பற்றிய பண்பாட்டையும் விழாக்கள் பற்றிய கூறுகளையும் இனம் காண முடிகிறது. அக்காலத்தில் தெய்வத்தை வழிபடும் மக்கள், "அகங்குழைதல், அட்டாங்கமாகப் பணிதல், அன்பு கூர்தல், ஐந்தெழுத்தோதுதல், காலை எழுந்து மலர் கொய்தல், குங்கிலியப் புகை காட்டுதல், கூத்து ஆடுதல், கை கூப்பித் தொழுதல், சங்கு ஒலிப்பித்தல், சாம்பலைப் பூசுதல், தரையிற் புரளுதல், தலையாரக் கும்பிடுதல், சிவனே என்றல், செஞ்சொன்மாலை சாத்துதல், தூமலர் தூவுதல், நீரில் மூழ்கி வருதல், நைந்துருகுதல், பண்ணுடன் துதித்தல், பாசம் அறுத்தல், புகழ்ந்து பாடுதல், புலம்பி நோக்குதல், மலர் தூவிப் பக்தியுடன் அழுதல், மறை கலந்த மந்திரம் ஓதுதல், முகமெல்லாம் கண்ணீர் மல்குதல், வஞ்சகம் அற்றிருத்தல்" முதலிய வழிபாட்டு வழக்காறு களைப் பின்பற்றி வந்தனர் என்னும் செய்தியை அப்பர் சுவாமிகள் தம் பாடல்கள் வழி அறியத் தருகிறார். இவ்வழக்காறுகள் நாட்டுப்புற மக்கள் இன்றும் கடைபிடித்து வரும் பண்பாட்டு மரபுகளாக அமைந்துள்ளன.

அகங்குழைதல், அன்புக் கூர்தல், மலர் கொய்தல், குங்கிலியப் புகை காட்டுதல், கூத்து ஆடுதல், சங்கு ஒலித்தல், சாம்பலைப் பூசுதல், நீரில் மூழ்கி வருதல், தரையிற் புரளுதல், தலையாரக் கும்பிடுதல் முதலிய பல்வேறு கூறுகள் தொன்று தொட்டு இன்றும் வழக்கிலிருக்கும் மக்கள் பண்பாட்டு மரபாகவே இருந்து வருவதைக் காண முடிகிறது. இப்பண்பாட்டு மரபுகளின் அடிப்படை இயல்புகள் மாறாமல் சூழலுக்குத் தக்க நவீன கால முலாம் பூசப்பட்ட பண்பாட்டு மரபாக அமைந்துள்ளது. இன்றும் நாட்டுப்புறப் பாமர மக்களின் வழிபாட்டில் இவ்வழக்காறுகள் இரண்டறக் கலந்து விட்ட தன்மையினைக் களஆய்வில் காண முடிகிறது.

மேலும், "ஆப்பி நீர், அலகு கொண்டு திருக்கோயிலைச் சுத்தி செய்தல், இண்டை முதலிய மாலைகளைக் கட்டுதல், கட்டுவாங்கம், கண்டி, கபாலம், தாளம் இவைகளைக் கைக் கொள்ளுதல், கல்லவடம் வாசித்தல், கோவணம், திலகம் அணிதல், சங்கம் ஊதுதல், தியானித்துத் துதித்துப் பாடுதல், திருநாமங்களை ஓதுதல், திருநீறிட்டு நினைதல்,

பொய் முதலிய இல்லாமை, மந்திரத்தொடு நீர், நெய், பால் கொண்டு முழுக்காட்டுதல், மாலை, சாந்தம், தூபம், மலர் பறித்துப் பூக்கூடை சுமத்தல், இவை தவிர இரவில் கைவிளக்கேந்திச் சென்று புனைதல்'' (செங்கல்வராயபிள்ளை : 1959 : 244) முதலிய பல்வேறு வழிபாட்டு முறைகளும் சுட்டிக் காட்டப்படுகின்றன. இவற்றை உணர்த்த வந்த சுவாமிகள், தாம் வாழ்ந்த காலத்து வழிபாட்டுப் பண்பாட்டில் இருந்த வழிபாட்டு வழக்காறுகளைக் கண்டு மனதில் அனுபவப் பதிப்பாக்கி பின் தாம் இயற்றிய செவ்வியல் பாடல்களில் ஏற்றிக் கூறியிருக்கிறார். மேல் குறிப்பிட்ட வழிபாட்டு வழக்காறுகள் அப்பர் சுவாமிகளால் செவ்வியல் இலக்கிய வடிவத்திற்குள் எடுத்தாளப்பட்டிருப்பதைக் காண முடிகிறது. இவ்வழக்காறுகள் பல இன்றும் மாற்றம் ஏதுமின்றி முழுமையான நாட்டுப்புறப் பண்பாட்டு மரபாகவே வழக்கில் இருந்து வருவதைக் காண முடிகிறது. இதனை ஆராயுமிடத்து அப்பர் சுவாமிகளின் வாழ்க்கை, நாட்டுப்புற மக்கள் வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்து விட்டமையால் அம்மக்களின் வாழ்வியற் கூறுகளையும் தம் வாழ்க்கையுடன் பொருத்திப் பார்த்து அதனைத் தம் இலக்கியத்திலும் வெளிப்படுத்தியிருக்கிறார் எனலாம். இது இயல்பான வெளிப்பாடே அன்றி வேறில்லை.

வழிபாட்டினால் ஏற்படும் பயன்பாட்டைக் கூறுமிடத்து ''இறைவன் திருவடிகளை உணர்ந்த உள்ளத்தவர்தாம் உணர்ந்த ஞானிகளாவர்; இறைவன் வீற்றிருக்கும் தலங்களை அடைந்தவர்களை, தொழுதவர்களை, போற்றினவர் களை வினைகள் கூடா; இடர்கள் நலியா; பாவம் பீடியாது; இறைவனைத் தொழுது வணங்கினால் இம்மையிற் செல்வம் கூடும்; அம்மையிற் பிறவித்துயர் நீங்கும்; சேமித்த பொருளை நிரம்ப இழக்க நேரிடினும்; இயமன் விரைய அழைக்கினும் கூத்தப் பிரானே! காத்தருள்'' என்றால் பெருமான் நமது வாட்டத்தைத் தீர்த்தருளுவார். இறைவனுக்கு அடிமைப் படின் ''துன்பக்கடலைக் கடந்து உய்யலாம் என அப்பர் சுவாமிகள் இறைவழிபாட்டினால் உண்டாகும் பயன்பாட்டினையும் இறைவனின் அருள்திறத்தையும் அறியத் தருகிறார். இதில் இடம்பெறும் வழிபாட்டு முறையும் வழிபாட்டினால் உண்டாகும் பயன் பற்றிய நம்பிக்கையும் அன்றிலிருந்து இன்று வரை நின்று நிலவி வருவதைக் காணலாம். நாட்டுப்புற பாமர மக்கள் இத்தகைய நம்பிக்கையுடன்தான் அவரவர் வணங்கும் தெய்வங்களை வழிபட்டு வேண்டுகின்றனர். பாமர மக்களின் இத்தகைய வழிபாட்டுப் பண்பாட்டு மரபையே அப்பர் சுவாமிகள் தமது திருமுறைப் பாடல்களில் அவருக்கே உரித்தான பாணியில் செம்மைப்படுத்தி எடுத்தாண்டுள்ளார்.

அப்பர் சுவாமிகள் அவர் காலத்தில் வழிபாட்டு வழக்கிலிருந்த திருவிழாக்கள் மற்றும் விழா அலங்காரங்களைத் தம் பாடல்களில்

குறிப்பிடுவதைக் காண முடிகிறது. "விழாக்களாக அட்டமி முன் ஏழு நாள், ஆதிரை நாள், உத்திர நாள், பங்குனி உத்திர நாள், தேர்விழா முதலியவை கூறப்பட்டுள்ளன. திருவிழாக் கொடியேற்றத்துடன் நடைபெறும் திருவிழாக் களில் மணிபொற்கவரி வீசுதல், வீதிகள்தோறும் வெண்கொடிகளைப் பறக்க விடுதல், சுடர்மணித் தீபங்களை ஒளி வீச வைத்தல், பவளமாலை, முத்துமாலை வரிசைகளையும் முத்து விதானங்களையும் விளங்க வைத்தலங்கரித்தல் ஆகிய வழக்கங்கள் இருந்தன. இவ்வழக்கங்கள் இன்றும் நாட்டுப்புற பாமர மக்களிடையே பண்பாட்டு மரபாகக் கடைப்பிடிக்கப்படுகின்றன. இவையும் இவை போன்ற மேலும் பல விழாக்களில் நாட்டுப்புற மக்களின் கோயில்களில் இடம் பெற்று வருகின்றன. இவ்வாறு இடம் பெற்று வரும் வழக்காறுகள் சிற்சில வேறுபாடுகளுடன் இடம் பெறுவதைக் காணலாம்.

திருவிழா தொடங்கும்பொழுது கொடியேற்றத்துடன் தொடங்குவதாகக் குறிப்பிடப்படும் வழிபாட்டு மரபு, கிராமத் தெய்வக் கோயில்களில் விழாவின் தொடக்க நாளன்று நிகழ்த்தப்படும் கால் நாட்டுதல் சடங்கு தற்கால கொடியேற்றத்துடன் தொடர்புடையது. இப்பண்பாட்டு மரபு கிராமக் கோயில்களில் கொடி மரம் இன்மையால் அதற்கென மரபாக்கப் பட்ட கன்னி மூலையில் வேப்பிலை, மஞ்சள் முதலியவற்றை மூங்கில் அல்லது தேக்குக்கழியில் கட்டி பூஜை செய்து நாட்டி வைப்பதுண்டு. திருவிழா முடிந்த பின்பே அதனை மாற்றுவர். கால் நாட்டுதல் என்னும் இப்பண்டைய வழிபாட்டு மரபிலிருந்து எழுந்தவையே கொடி மரமும் கொடியேற்ற மரபும் ஆகும்.

விழாக்காலத்தில் வீதிகள்தோறும் வெண்கொடிகள் பறக்கவிடும் வழக்காறு நாட்டுப்புற மக்கள் கிராமத் தெய்வ விழாக்களில் கிராமத்தின் எல்லைகளில் வீதிகளின் குறுக்காகக் கட்டப்படும் வேப்பிலை தோரணம், பனை ஓலை தோரண மரபிலிருந்து எழுந்த வழக்காறே ஆகும். எனவே தோரணம் கட்டும் மரபு தொன்று தொட்டு நிகழ்ந்து வரும் பண்பாட்டு மரபாக அமைந்திருப்பதைக் காணலாம். நாட்டுப்புற மக்கள் இன்றும் கொண்டாடி வரும் "கார்த்திகை போக்கு" சிறப்பு வழிபாட்டு நிகழ்வு அன்று, அத்தகைய வேப்பிலை தோரணங்கள் கட்டப்படுகின்றன. வீதிகளில் எல்லைகளில் வேப்பிலை தோரணம் கட்டினால் தீய சக்திகள், பேய், பிசாசு, பில்லி சூனியம், நோய், நொடி முதலியவை அதனைத் தாண்டி வராது. அதனை வேப்பிலையின் ஆற்றல் தடுத்து நிறுத்திவிடும் என மக்கள் நம்புகின்றனர். இந்நம்பிக்கையின் தொடர்ச்சியே வெள்ளைக்கொடி தோரணம். ஆகவே அப்பர் சுவாமிகள் நாட்டுப்புற மக்களின் பண்பாட்டு மரபுகளையே தம் பாடல்களில் சில வேறுபாடுகளுடன் எடுத்தாண்டி ருக்கிறார் என கருத்துக் கொள்ள முடிகிறது.

திருவிழாக் கூட்டத்தில் இயல்பை உணர்த்த வந்த அப்பர் சுவாமிகள் திருவிழா காலத்தில் பக்தர்கள் மேற்கொள்ளும் வழக்காறுகள் அம்மக்களின் வாழ்வியல் நெறிகளையும் வழிபாட்டு நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் அறியத் தருகின்றன. திருவிழா கூட்டத்தில், ''வயதில் மூப்பு அணுகாதவர்கள் முன் செல்வர். மங்கையர் பின் செல்வர்; திருநீறிட்டுப் பாடும் தொண்டர் கூட்டம் புடை சூழும். பக்தர்கள் முத்து விதானங்களை ஏந்துவர்; மங்கையர் மணிப் பொற்கவரிகளை வீசுவர்; திருவிழாக் கூட்டத்திற் பணியும் பக்தர் கூட்டம் ஒருபால், வெண்டலை மாலை அணியும் விரதியர் கூட்டம் ஒருபால், 'எம் பெருமானே' உன்னை, ஏத்தும் நாள்தான் இன்பம் தரும் நாள், 'உன்னைத் தொழாத நாள் துன்பம் தரும் நாள்' என்று கூறுபவர் ஒருசார்; இறைவனுடைய குணங்களைப் பாடிப் பரவிப் பித்தரைப் போலப் பிதற்றுபவர் ஒருசார்; ஆடல் பாடல் செய்து ஆனந்தம் மேலிட்ட அன்பர்கள் ஒருசார்; பரவசப்பட்டுத் தன்நிலை அழிந்து முட்டும் பக்தர்கள் ஒருசார்; பிணி தீர வேண்டிப் பணிபவர் ஒருசார்; பந்தி மேலீட்டால் விம்மி விம்மி அழுபவர் ஒருசார்; இறைவனது சேவடியையே சிந்திக்கும் மாதர் கூட்டம் ஒருசார்; இக்கூட்டத்தில் உமது பின்னே எம்மையும் அழைத்துச் செல்லும் என வேண்டுபவர் ஒருசிலர்; ஆணும் பெண்ணும் இக்கூட்டத்தில் எப்படி அண்மையிற் சென்று தரிசிப்பது என மயங்குபவர் ஒருசிலர்'' (செங்கல்வராய பிள்ளை; 1959 : 248) என பக்தர்களின் வழிபாட்டு உணர்வு வெளிப் படுவதைக் காணலாம். இத்தன்மையினைப் படம்பிடித்துக் காட்டும் அப்பர் சுவாமிகள், திருவிழாக் காலத்தில் நாட்டுப்புற மக்கள் பின்பற்றும் வழிபாட்டுப் பண்பாட்டுக் கூறுகளை அறிந்து உணர்ந்து வெளிப்படுத்தி யிருப்பதை இனம் காண முடிகிறது. இது அக்கால மக்களின் வழிபாட்டு நெறியையும் பக்தி முறையையும் நம்பிக்கை தொடர்பான உளவியல் கூறுகளையும் அவை தொடர்பான பண்பாட்டு மரபுகளையும் அறியத் தருவதாக அமைந்துள்ளன.

மேலும் திருவாரூரில் திருவாதிரை விழா, பங்குனி உத்திர விழா நடப்பதையும் திருஒற்றியூரில் உத்திரநாள் தீர்த்தவிழா நடப்பதையும் திருக்குறுக்கையில் அட்டமி முன் ஏழு நாளும் கூத்தப்பிரான் வீதியில் திருவுலாப் போகும் தன்மையையும் திருப்புத்தூரிலும் திருப்பைஞ்ஞீலியிலும் தேர்விழா நடப்பதையும் திருமறைக்காட்டிலும் கச்சியிலும் செல்வம் திகழும் திருவிழாக்கள் நடப்பதையும் அப்பர் சுவாமிகள் தம் பாசுரங்களில் சுட்டிக் காட்டுகிறார். இத்தன்மை அன்று முதல் இன்று வரை நிகழ்ந்து வரும் மக்கள் வழிபாட்டு மரபாக இருந்து வருவதைக் காணலாம். இது முழுமையான நாட்டுப்புற மக்கள் பண்பாட்டு மரபின் வளர்ச்சிப் படிநிலையே ஆகும். தொடக்கத்தில் வரையறையற்ற மக்கள் பண்பாட்டு நெறியாக இருந்த இவ்விழாக்கள் காலப்போக்கில் வரையறை

பெற்ற திட்டமிட்ட திருவிழாக்களாகப் பரிணாமம் பெற்றுள்ளன (4 : 208) எனலாம்.

அப்பர் சுவாமிகளின் பக்தி மற்றும் கலை இலக்கிய உணர்வுக்குப் புராணக் கூறுகள் உயிரூட்டுவனவாகவும் மெருகேற்றுவனவாகவும் அமைந்துள்ளன. அவர் தம் பாடல்களில் பக்தியையும் இலக்கிய நயத்தையும் பண்பாட்டையும் கலந்து தருதற் பொருட்டே புராணக் கூறுகளைப் பயன்படுத்தியிருக்கும் தன்மையை அறிய முடிகிறது. அந்த வகையில் அந்தகாசுரனைச் சங்காரம் செய்த கதை, காமனை எரித்த கதை, காலனை உதைத்த கதை, சலந்தரனைக் கொன்ற கதை, தக்கன் வேள்வியை அழித்த கதை, சிவபெருமான் திரிபுரம் எரித்த கதை, பிரம்மன் சிரத்தை அறுத்த கதை, யானையைப் பிடித்துத் தோலை உரித்த கதை முதலிய பல்வேறு புராணக் கதைகளை அப்பர் சுவாமிகள் தம் பாடல்களில் இடம் பெறச் செய்துள்ளார். இப்புராணக் கதைகள் நாட்டுப்புற மக்கள் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்புடையன. இக்கதைகள் மக்களின் வழிபாட்டுச் சடங்குகளில் நிகழ்த்தப்படும் கலை நிகழ்வுகளில் இடம் பெறும் தன்மையைக் காணலாம்.

காமனை எரித்த கதையை மையமாகக் கொண்டே உருவாக்கப் பட்ட இலாவணி என்னும் நாட்டுப்புற நிகழ்த்துக் கலை இன்னும் வழிபாட்டுச் சடங்கு நிகழ்ச்சியாகக் கிராமத் தெய்வ விழாக்களில் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. எரிந்த கட்சி, எரியாத கட்சி என இரு அணிகள் வாக்குவாதம் செய்து மன்மதன் எரிந்தான் என்றும் எரிய வில்லை என்றும் வாதாடி கூத்து நிகழ்த்தி வருகின்றன. இது முழுமையான நாட்டுப்புற பண்பாட்டு மரபு. இப்புராணச் செய்தியை அப்பர் சுவாமிகள் அப்படியே தம் பாடல்களில் பயன்படுத்தியிருக்கிறார். அது போன்றே தக்கன் வேள்வியை அழித்த கதை, திரிபுரம் எரித்த கதை, பிரம்மன் சிரத்தை அறுத்த கதை முதலியவை அம்மன், ஐயனார் முதலிய கிராமத் தெய்வங்களின் திருவிழாக்களில் நிகழ்த்தப்படும் வில்லுப்பாட்டு எனப்படும் கூத்துக் கலையில் பாடுபொருளாக எடுத்தாளப்பட்டு நிகழ்த்தப்பட்டு வருகின்றன. எனவே, புராணக் கதைகள் நாட்டுப்புற மக்களின் பண்பாட்டு மரபுகளுடன் நேரடியாகத் தொடர்புடையவையாகவே இருக்கின்றன. இத்தகைய நாட்டுப்புறப் பண்பாட்டுத் தொடர்புக் கூறுகளை அப்பர் சுவாமிகள் நேரடியாகத் தம் பாடல்களில் எடுத்தாண்டிருப்பது அப்பர் சுவாமிகளுக்கும் நாட்டுப்புறப் பண்பாட்டு மரபுக் கூறுகளில் தாக்கமும் தோய்வும் இருந்திருக்கும் வாய்ப்புகளை அடையாளம் காட்டுகிறது.

**கலையும் - இசையும்**

மக்களின் கலை உணர்வு இசை அறிவு பற்றிய பண்பாட்டு மரபுக் கூறுகளை அப்பர் சுவாமிகள் தம் பக்திப் பாசுரங்களில் பரவலாகச்

சுட்டிக்காட்டிச் சொல்கிறார். இசைகளுள் இருக்கும் வேத இசையும் ஏழிசையும் பண்களுள் காந்தாரமும் சீகாமரமும் செவ்வழியும் பஞ்சமமும், வண்டின் பண்ணும் வாத்திய இசைகளின் கின்னரம், குழல், வீணை, யாழ், பாலையாழ் இசைகளும் பாடல்களில் தமிழோசைப் பாடலும் பண்பொருந்திய இசைப் பாடலும் கூறப்பட்டுள்ளன. பண் பொருந்தப் பயின்று பாடும் அடியார்கள் திருக்கோளிலி என்னும் தலத்தில் இருந்தார்கள். (செங்கல்வராயபிள்ளை : 1959 : 39) என்னும் செய்தியை அப்பர்சுவாமிகள் பாசுரங்களில் காணலாம்.

தமிழோடு இசைப்பாடலை மறவாதிருந்தும் இறைவன் திருவடிக்கு இன்னிசைப் பாடல்களைப் பாடி வந்த போதிலும் ஏழு இன்னிசை களையும் கொண்டு இறைவனை ஏத்துகின்றேன். இல்லையே சீகாமரம் (நாதநாமக்கிரியை) ஆதிய பண்களைக் கற்றறிந்தேன் இல்லையே என அப்பர் சுவாமிகள் வருந்துவதைக் காண முடிகிறது. "உடுக்கை, கல்லலகு, கல்லவடம், கின்னரம், குடமுழவம், குழல், கொக்கரை, கொடுகொட்டி, சங்கம், சச்சரி, தக்கை, தருணிச்சம், தமருகம், தாளம், துடி, பறண்டை, பறை, பிடவம், முரசம், முழவு, மொந்தை, யாழ், வீணை ஆக இருபத்து மூன்று இசைக்கருவிகள் கூறப்பட்டுள்ளன. இத்தகைய இசைக்கருவிகள் பல நாட்டுப்புற மக்கள் வாழ்வோடும் வழிபாட்டோடும் தொடர்புற்று அவற்றில் நிகழ்த்தப்படும் பல்வேறு வகையான இன்ப - துன்ப சடங்கு களில் பயன்படுத்தப்பட்டு வருபவையே என்பது அறியத்தக்கது. அடியார்கள் வாழ்விலும் தாழ்விலும் கல்லவடம், கின்னரம் முதலிய இசைக் கருவி களை இசைக்கும் செய்தியை அப்பர் பாடல்களில் அறியலாம்.

சிவபெருமானிடம் இருக்கும் பல்வேறு வகையான இசைக்கருவி களில் உடுக்கை, கொடுகொட்டி, தாளம், துடி, பறை முதலியவை இன்னும் நாட்டுப்புற மக்கள் இசைக்கருவிகளே என்பது அறியத்தக்கது. நந்தீசர், குடமுழவு வாசிப்பவர். கின்னரம், குடமுழவு, குழல், கொக்கரை, கொடு கொட்டி, சச்சரி, தாளம், பறண்டை, பறை, பிடவம், முடிவு, மொந்தை இவைகளில் ஒலி முழங்க ஒலிக்கு ஏற்ப அவர் கூத்தாடுவார் என வரும் செய்திகள் சிவபெருமானிடம் கூத்து என்னும் நாட்டுப்புற இசைக்கருவி களை இசைத்து ஆடியமையும் அப்பர் சுவாமிகள் பாடல்கள் வழி அறியலாகிறது.

**சடங்குகள் - நம்பிக்கைகள்**

பழக்க வழக்கங்கள் நம்பிக்கை அடிப்படையில் கட்டாய நிகழ்வாக நடத்தப்படும்பொழுது அவை சடங்கு நிலையைப் பெறுகின்றன. சாதாரண மாகத் தவறாமல் பின்பற்றப்பட்டு வரும் பண்பாட்டு மரபுகள், ஓர் அமைப்பு நிலையைப் பெற்று, நிகழ்த்தப்படுவதன் அவசியம் தொடர்பான நம்பிக்கையே சடங்குகளுக்கு அடிப்படை. "பழக்க வழக்கங்கள் காலப்

போக்கில் சீரிய சிந்தனை, அறிவியல் கருவி ஆகியவை காரணமாகச் சமுதாயத்தில் முன்னேற்றம் ஏற்படும்பொழுது அவை சடங்காக மாறுகின்றன. "சடங்கென்பது நிர்ணயிக்கப்பட்ட விரிவான நடத்தைகளின் வடிவமாகும். இது தனிமனிதனின் சுயமான ஆக்கமாகவோ பண்பாட்டின் தனிச்சிறப்புக் கூறாகவோ அமையும். பண்பாட்டின் ஏனைய அம்சங்கள் இன்றிச் சடங்குகளிலேயே வெவ்வேறு நாகரிகங்களின் நம்பிக்கைகளும் இலட்சியங் களும் மிகத் தெளிவாக வெளிப்படுத்தப்படுகின்றன" என்பது ரூத்பெனிடிக்டின் (Ritual, Encyclopaedia of the Social Sciences, Vols. B - 14, P. 396) கருத்து. "புனிதப் பொருட்களின் முன்னால் மனிதன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் எனக் கூறும் ஒழுக்க விதிகளே சடங்குகள்" என்பார் டூர்கைம் (Durheim) என்னும் சமூகவியல் பேரறிஞர். "வெவ்வேறு நாகரிகங்களில் நம்பிக்கைகளும் இலட்சியங்களும் அவற்றின் சடங்குகளில் மிகத் தெளிவாகப் பிரதிபலிக்கின்றன" என்பது நரேந்திரநாத் பட்டாச்சார்யாவின் (Ancient India Rituals and their Social Content, 1975) கருத்து. இத்தகைய சடங்குகளுடன் நம்பிக்கைகளையும் இணைத்து நோக்க வேண்டும். இத்தகைய கருத்துப் பின்னணியில் சடங்குகளும் நம்பிக்கைகளும் நாட்டுப்புறப் பண்பாட்டின் மிகுந்த முக்கியத்துவம் பெற்ற மரபுகளாக விளங்குகின்றன. இம்முக்கியத்துவம் பண்பாட்டு மரபுக் கூறுகளை அப்பர் சுவாமிகள் தம் பாசுரங்களில் இடையிடையே இடம் பெறச் செய்வதைக் காண முடிகிறது. சான்றாக சிவபெருமான் பலி ஏற்கும் சடங்கினைக் கூறலாம். இத்தன்மை நம்பிக்கையுடன் தொடர்புடைய சடங்காக இருப்பது குறிப்பிடத்தக்கது.

சிவபெருமான் காலையிலும் பகல் முழுவதும் பலி ஏற்பார்; உண்பலிக்கென்று உழல்வார்; திருவடிச் சிலம்பு அலம்ப எங்கும் திரிவார்; மாயம் பேசித் திரிவார்; பலர் இகழத் திரிவார். இவ்வாறு பலி ஏற்கும்பொழுது அக்கும், ஆமையும் பூண்டும், மத்தலர் சூடியும், ஐந்தலை அரவைத் தோள் மேல் ஏகாசமாக இட்டும், ஓடு ஏந்தியும், கோவணமும் வெண்ணூலும் பூண்டும், உமையுடன் பிசைவு விளங்கச் சடைதாழ நீறுபூசி விடையேறி நாகம் கச்சாக அனல் ஏந்திக் கபாலம் ஏந்தித் திரிவர்; இல்லம்தோறும் ஊர்தோறும் உலகெங்கும் பிச்சையாக இச்சித்துத் திரிவர்; பூதங்கள் சூழ்ந்து பாடத்தாம் வண்ணங்கள் பாடுவர். மறைபாடுவர். இசை பாடுவர், பலி ஏற்கச் செல்லுமிவர் மாதர்களின் வளை கொள்வர், நிறை கொள்வர், சிவன் உண்ணும் கலம், உக்காத்தலை, உடைதலை, உலந்தார்தலை, ஊனேறுதலை, ஓடு, கண் - பல் உக்க கபாலம், கழிந்தவர் தலை, சில்லைச் சிரைத்தலை, செடியார் தலை, நடுதலை, படுதலை, பல்லார்தலை, பல்லில் வெண்டலை, பாறேறு தலை, பிரமன் தலை, பொய்தலை, வற்றலோர் தலை, விலையின் கலன் என்றெல்லாம் கூறப்பட்டுள்ளது.

மேலும், "சிவபெருமான் அட்டமா நாகங்களை ஆட்டுவர். தீயபாம்பு, நல்ல பாம்பு இவைகளை ஆட்டுவர். ஐந்தலைப் பாம்பைப் பற்றி ஆட்டி

அதைத் தமது அரையிற் சுற்றி அணிவர்." இத்தகைய வழக்காறுகள் நாட்டுப்புற மக்களின் வாழ்க்கைப் பண்பாட்டு மரபுடன் தொடர்புடையதாகும்.

## பழக்க வழக்கப் பண்பாடு

மனித வாழ்வில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான பழக்கத்தையும் வழக்கத்தையும் கொண்டு திகழ்கின்றனர். மனிதனின் கூட்டமைப்பான சமூக அமைப்புகள்கூட தனக்கென ஒரு தனி பழக்கத்தையும் வழக்கத்தையும் பின்பற்றிக் கொண்டே இருக்கின்றன. மக்கள் தங்கள் வாழ்வில் கடைப்பிடித்து வரும் வாழ்க்கை நிகழ்வுகளைப் பழக்கமாகவும், வழக்கமாகவும் கொள்ளலாம். பழக்கம் மாறக் கூடியது. ஆனால், வழக்கம் மாறாதது. இத்தகைய மக்கள் பண்பாட்டு மரபை அப்பர் சுவாமிகள் தம் பாடல்களில் வெளிப்படுத்தியிருக்கும் தன்மையைக் காணலாம்.

உயிர் பிரிந்த பின் செய்யப்படும் செயல்கள் ஓரிடத்தில் சுட்டப் படுகிறது. உயிர் பிரிந்தவுடன் பிணத்தின் கையையும் காலையும் கட்டி, மையினால் கண் எழுதி, மாலை சூட்டி, சுடுக்காட்டில் பிணத்தைச் சேர்ப்பதும் விறகு கொண்டு தீ மூட்டிவிட்டுப் போய் விடுவர் என்பதுமான மக்களின் பழக்க வழக்கத்தை அப்பர் சுவாமிகள் சுட்டுகிறார். கழனிகளில் நீர் நிறைந்து இறால் முதலிய மீன் வகைகள் பொலிவதும் செந்நெல் முதலிய நெல் வகைகள் விளைவதும் குறிப்பிடப்படுகின்றன. குலம் - கோத்திரம் பார்க்கும் பழக்கம் இருந்ததாக அறிய முடிகிறது. திருவாரூர் போன்ற பெரிய ஊர்களில் மாடங்களிலும் மாளிகைகளிலும் மிக உயரமான கொடிகளைப் பறக்கவிடும் தன்மையைக் காண முடிகிறது. காலையில் சங்கொலி கேட்கும் வழக்கம் இருந்தது புரிகிறது. சாத்திரம் பேசிக்கொண்டு இருப்பது, சகுனம் பார்ப்பது போன்ற கூறுகள் சுட்டப்படுகின்றன. பாவத்தைத் தொலைக்க புனித தீர்த்தத்தில் அடியார்கள், பெண்கள் முதலானோர் நீராடுதல், முழுகுதல், தீர்த்தத்தைத் தலையில் தெளித்தல் முதலிய வழக்கத்தைக் கொண்டிருந்தமை அறியலாகிறது. வேதங்களை ஓதி கோயில் வழிபாடு செய்யும் வழக்கம், நெருப்பில் குங்கிலியப் புகை, கூட்டி வழிபடுதல், கெடில நதியில் பெண்கள் நீராடுவது, திருவிழாக்கள் நடத்துவது, அதில் பல்வேறு இனத்து மக்களும் கலந்து கொள்வது உள்ளிட்ட பல்வேறு பழக்கங்களும் வழக்கங்களும் குறிப்பிடப்படுகின்றன.

ஈதல் என்னும் அறத்தைக் கடைபிடிக்கும் நம்பிக்கை, ஊன் உண்ணும் பழக்கம், அதனைத் தவிர்க்க வேண்டிய அறிவுறுத்தல், கங்கை, கடல், காவிரி, குமரி தீர்த்தம், கோடி தீர்த்தம் முதலிய நீர்நிலைகளில் நீராடுவது, விதியை நம்பி ஒழுகுதல், வேள்வி செய்து வழிபடுதல் முதலிய பழக்க வழக்கங்களும் இருந்தமை புலனாகிறது. அதோடு சூலை நோய் பற்றிய

நம்பிக்கை, அது தீர்வதற்குரிய வழிபாடு, விரதம் இருக்கும் தன்மை முதலியவையும் சுட்டப்படுகின்றன. நோய் தீர்க்கும் மருத்துவ முறைகளாகப் பல பழக்கவழக்கங்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன. திரு ஆவடுதுறைப் பெருமாள் நோய் தீர்ப்பான் என்றும் பெருமானை நன்கு தியானிப்பது நோய் தீர்க்கும் மருந்து என்றும் ''சிவாய நம'' என்னும் மந்திரத்தைக் கூறுதல் வேண்டும் என்றும் யார் யாரை நோய் பிடிக்கும் என்றும் என்னென்ன நோய்கள் ஏற்படும் என்றும் அக்கால மக்கள் வாழ்க்கையில் வழக்கமாகியிருந்த நோய்களையும் அவற்றைத் தீர்க்கும் வழிமுறைகளையும் மருத்துவ நெறிகளையும் அப்பர் சுவாமிகள் திறம்பட எடுத்துரைக்கிறார். இது நோய் நீங்கி வாழும் நாட்டுப்புற மக்களின் மருத்துவப் பண்பாட்டு மரபின் பிரதிபலிப்பாகவே அமைவதைக் காணலாம்.

சூலை நோயில் தாக்குண்ட அப்பர் சுவாமிகள், '' பெருமானே! சூலை நோயைத் தீர்த்து அடியேனை ஆட்கொண்டீர். இப்பொல்லா நோயைத் தீர்த்த பெருமானே! உன்னை நான் மறந்து உய்வேனோ! என்னைத் தண்டித்த நோயை நீக்கின உன் பேரருளை வியக்கிறேன்; உன் பணியிற் பிழை செய்தால் புளியம் வளாரால் மோதுவிப்பாய் என உணர்ந்தேன். என் பிழைகள் யாவற்றையும் பொறுத்தனையே! என் பிணியை ஒழித்த மருந்து நீ; என்னைச் சோதித்த புனிதன் நீ; அறிவிலியாய் உன்னை மறந்திருந்த என்னை மடக்கி,ஆட்கொண்டாய்; நானும் உனக்கு ஆளாகி விட்டேன்'' எனக் குறிப்பிடுகிறார். இதில் சுவாமிகள் குறித்த புளியம் வளார் முழுமையான நாட்டுப்புறப் பண்பாட்டு மரபை உணர்த்தும் பழக்க வழக்கமாகும்.

'புளியம் வளார்' என்பது ஒடியாத தன்மை கொண்டது. 'வளைந்து கொடுக்கக் கூடியது, பசுமையானது. அப்புளியம் வளாரால் ஒருவர் மீது அடித்தால் அது 'சவுக்கு' போன்று உடலைச் சல்லடையாகத் துளைக்கக் கூடியது' நாட்டுப்புற மக்களின் சவுக்கு புளியம் வளார் ஆகும். கிராமப் புறங்களில் சவுக்கின் பணியைப் புளியம் வளார் செய்கிறது. சவுக்கடிக்கு இணையானது புளியம் வளார். மிகவும் நோவையும் துன்பத்தையும் தருவது. அதனால் ஏற்பட்ட புண் எளிதில் ஆறுவதில்லை. இன்றும் கூட அதிகமான கிராமப்பகுதிகளில் நடைபெறும் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டங்களில் மிகக் கொடிய குற்றங்களைச் செய்பவர்களுக்கு புளிய வளாரினால் தண்டனை கொடுக்கும் வழக்கம் இருந்து வருகிறது. இத்தகைய நாட்டுப்புற மக்கள் வழக்காற்றையே அப்பர் சுவாமிகள் தம் வாழ்க்கையுடன் இணைத்துக் கூறியிருக்கிறார். இதுபோன்று நாட்டுப்புற மக்கள் வாழ்வின் பல்வேறு பழக்க வழக்கங்கள் எடுத்தாளப் பட்டிருப்பதைக் காணலாம்.

அப்பர் சுவாமிகளின் பாடல்களை ஆராயுமிடத்து மேற்கூறப்பட்ட பல்வேறு நாட்டுப்புறப் பண்பாட்டு மரபுக் கூறுகள் வெளிப்பட்டிருப்பதை இனம் காண முடிகிறது. இக்கூறுகள் அப்பர் சுவாமிகளின் பக்தி நெறி, கலை, இலக்கிய நெறியுடன் கலந்து வெளிப்படுவதை அறிய முடிகிறது. இவை நாட்டுப்புற பாமர மக்களுடன் அவருக்கு இருந்த தொடர்பினை அறியத் தருகிறது. செவ்வியல் இலக்கியமாயினும் அவரையும் அறியாமல் அவர் தோய்ந்திருந்த, மக்கள் தோய்ந்திருந்த வாழ்வியற் கூறுகளும் வழக்காறுகளும் பண்பாட்டு மரபுகளும் வெளிப்பட்டுள்ளன. இத்தன்மை அப்பர் சுவாமிகளின் பக்திப் பாசுரங்களுக்கு உயிரோட்டத்தை அளித்துள்ளன எனலாம்.

# 16. நாவுக்கரசரில் தாவரவியல்

க. கலா சேதுபதி, கரூர்.

உலகில் உள்ள நாடுகளில் இறை உணர்விலும், இறை அனுபவத்திலும் தோய்ந்த அருளாளர்களைப் பெற்ற நாடு பாரதம். அதிலும் குறிப்பாகத் தமிழ் மொழியில்தான் இறைவனை நினைந்து உருகிப் பாடிய பாடல்கள் நூறாயிரத்திற்கு மேல் உள்ளன. இது வேறு எம்மொழிக்கும் கிடைக்காத சிறப்பாகும்.

பொதுவாகத் தமிழைச் சங்ககாலத் தமிழ், பக்தி இலக்கியத் தமிழ், வளரும் தமிழ் என்று பிரிக்கலாம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் போன்றோரின் காலமே பக்தி இயக்கம் தோன்றி வளர்ந்த காலமாகும். பல்லவர்களின் காலத்தில் வடமொழிக்கு ஏற்றமும், பிற சமய வழிபாடு களுக்கு வாய்ப்பும் கிட்டின.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் சமகாலத்தவர்கள். தமிழைப் பரப்புவதற்காக நாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் பாடி இறைவனைச் சிறப்பித்தார்கள். அவர்களுடைய தேவாரப் பதிகங்களில் தாவரவியல் கூறுகளைப் பற்றி ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

சிவபெருமானுக்கு மிகவும் விருப்பமானது கொன்றை மாலை ஆகும். திருக்கழிப்பாலைப் பதிகத்தில்,

> **''வண்டுலவு கொன்றை வளர்புன் சடையானே''**

என்று பாடுகிறார்.

கொன்றை மலர் பலவகையான மருத்துவக் குணங்களைக் கொண்டது. சரக்கொன்றைப் பூவுடன் காரட் கிழங்கைச் சேர்த்து இடித்து எடுத்த சாற்றை உட்கொண்டால் சோகை நோய் நீங்கும். இதனுடைய தாவரவியல் பெயர் **சிசால்பினியா பல்செரிமா** ஆகும். (Caesalpinia pulcherrima Family - Papilionaceae)

திருப்பழனப் பதிகத்தில்,

> **''கண்டகங்காள் முண்டகங்காள் கைதைகாள் நெய்தல்காள்**
> **பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்''**

என்று பாடுகிறார். கண்டகம் என்பது முள்ளிச் செடி ஆகும். முண்டகம் என்பது தாமரையைக் குறிக்கும். கைதை என்பது தாழம்பூ ஆகும். இவையாவும் நீர்த்தாவரங்கள். தாழம்பூவை நறுமணத்திற்காக மட்டுமே தலையில் சூடுகிறார்கள். ஆனால் அதனுடைய மருத்துவக் குணங்களைப் பலரும் அறிவதில்லை. தாழம்பூவை நெருப்பில் காண்பித்துக் கசக்கி எடுக்கப்படும் சாற்றைப் பயன்படுத்தினால், அது காதுவலியைப் போக்கும் தன்மையுடையது. தாழம்பூவைக் கொண்டு இனிப்பு நீர் தயாரிக்கலாம். கொதிக்கும் நீரில் போட்டு வதக்கிய பின்பு நீரை வடிகட்டிச் சர்க்கரை சேர்த்துத் தேன்பாகின் பதமாக எடுத்து வைத்து உண்டால் உடல் வெப்பத்தை வெகுவாகத் தணிக்கும். இதனுடைய தாவரவியல் பெயர் **பேண்டனஸ் ஓடாராட்டி - சிமஸ் (Pandanus odoratissimus, Family - Pandanaceae)** ஆகும்.

திருநெய்த்தானப் பதிகத்தில்,

**"கொய்ம்மலர்க் கொன்றை துழாய்வன்னி மத்தமுங் கூவிளமும்**
**மெய்ம்மலர் வேய்ந்த விரிசடைக் கற்றைவிண் ணோர்பெருமான்"**

என்று பாடுகிறார் கொன்றை, துளசி, வன்னி, ஊமத்தை, வில்வம் ஆகிய பெயர்களை ஒரே வரியில் அடுக்கி இருப்பதில் இருந்து தாவரங்களைப் பற்றிய சுவாமிகளின் அறிவையும் அவை ஒவ்வொன்றும் நமக்குப் பயன்படும் தன்மையையும் அறிகின்றோம். துழாய் என்பது துளசியைக் குறிக்கும். இது பல மருத்துவக் குணங்களைக் கொண்டது. வயிற்றுப் பொருமல் போக்கும். வயிற்றுப் பூச்சிகளைக் கொல்லக் கூடியது. சீரணிக்கச் செய்யும். காய்ச்சலைத் தணிக்கும். இதன் தாவரவியல் பெயர் **ஆசிமம் சேங்க்டம்** ஆகும் (Ocimum sanctum, Family - Lamiaceae).

தாவரங்களின் சிறப்பையும் பெருமையையும் உணர்ந்த நம் முன்னோர் அவைகளைப் போற்றிய பாங்கே தல விருட்சங்கள் என்று கோவில்தோறும் மரங்களை வளர்த்தமையாகும். வன்னி மரம் மூவராலும் பாடப்பட்ட பெருமை கொண்ட கொடுமுடிக் கோவில் தலவிருட்சமாகும். பிரம்மாவின் ஆலயம் அம்மரத்தின் கீழ் உள்ளது. இதன் பட்டை தேள்கடிக்கு மருந்தாகவும், மூட்டுவலியைப் போக்கவும் கூடியது. செரிவிக்கக்கூடிய தன்மை உடையது. இதன் தாவரவியல் பெயர் **புரோசாபிஸ் ஸ்பைசிஜிரா** ஆகும். (Prosopis spicigera, Family - Mimosaceae).

நம்மால் வெறுத்து ஒதுக்கக் கூடிய பலபொருள்கள் சிவனுக்கு மிகவும் விருப்பமானவை ஆகும். ஊமத்தை மலரை நாம் விரும்புவதில்லை. ஆனால் இறைவன் மகிழ்வோடு ஏற்றுக்கொள்கிறான். சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு ஏற்படக்கூடிய நோய்களில் கரப்பான் என்பதும் ஒன்றாகும். கரப்பான் தோன்றினால் அடங்காத அரிப்பும், படைபோன்ற தொடர்புண்ணும்

இருக்கும். அந்நோய்க்கு ஊமத்தை இலைச்சாறு நல்ல மருந்தாகும். இளைப்பு, இருமல் நோய்க்கு ஊமத்தை இலையை தணலில் இட்டு வாட்டுவதால் எழும்புகை நல்ல மருந்தாகும். கடினமான மூச்சு அடைப்பை நீக்கி நன்கு மூச்சு விடமுடியும். இதன் தாவரவியல் பெயர் டட்டூரா மெத்தல் ஆகும் (Datura metal, Family - Solanaceae)

கூவிளம் என்பது வில்வத்தைக் குறிக்கும். வில்வ இலை சிவனுக்கு மிகவும் உகந்ததாகும். இம்மரத்தின் எல்லாப் பாகங்களுமே மருந்தாகப் பயன்படக் கூடியவை. துளசி இலையையும் வில்வப்பூவையும் நசுக்கிச் சாறு எடுத்து தேனுடன் கலந்து சாப்பிட்டால் கடுமையான காய்ச்சல் நீங்கும். வில்வ இலை நீரிழிவு நோய்க்கு மருந்தாகும். பழம் மலத்தைக் கெட்டிப்படுத்தக் கூடியது. இதன் தாவரவியல் பெயர் ஈகிள் மார்மிலோஸ் ஆகும் (Aegle marmelos, Family - Rutaceae).

திருப்பைஞ்ஞீலி என்னும் தலத்தில் உள்ள இறைவனைப் பாடும்போது,

''கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்''

என்று பாடுகின்றார். அவ்வூரில் உள்ள கோடல், கோங்கம், முல்லை என்னும் மலர்களின் மேல் வண்டுகள் இசை பாடுவதை இறைவன் கேட்பதாகக் கூறுகிறார். முல்லை மலரின் இலைகளும், பூக்களும் சித்த மருத்துவத்தில் எலும்புருக்கி நோய்க்கும், மெலிவு, தேய்வு ஆகிய நோய்களுக்கும் மருந்தாகப் பயன்படுகிறது. இதன் தாவரவியல் பெயர் ஜாஸ்மினம் ஆரிக்குலேட்டம் (Jasminum auriculatum, Family - Oleaceae).

திருமீயச்சூர் இளங்கோயிலைப் பாடும்போது,

''நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடை''

என்று பாடுகிறார். நாறு மல்லிகை என்று பாடுவதால் அது மணமிக்க மலர் என்று அறிகிறோம். உடலில் சொறி, சிரங்கு போன்றவை நீங்க இப்பூவை அரைத்துத் தேய்த்துக் குளித்தால் குறைபாடுகள் நீங்கும். இலைகள் பித்தத்தைப் போக்கும். வயிற்றுப் பூச்சிகளைக் கொல்லும். மலத்தைக் கெட்டிப்படுத்தும். சிறுநீரைப் பெருக்கும். உடல் மெலிவை நீக்கும். இத்தாவரத்தின் இலை, பூ, வேர் அனைத்தும் மருத்துவ குணம் உடையது. இதன் தாவரவியல் பெயர் ஜாஸ்மினம் கிராண்டிப்ளோரம் ஆகும். (Jasminum grandiflorum, Family - Oleaceae).

திருவாரூர்ப் பதிகத்தில்,

''ஆயிரம் தாமரை போலும் ஆயிரஞ் சேவடி யானும்''

என்று பாடுகிறார். மலர்களில் தலையாயது தாமரையாகும். செந்தாமரைப்பூ இதய நோய்க்குச் சிறந்த மருந்தாகும். கண்தொடர்பான பிணிகளுக்கும்,

மூளையின் வளர்ச்சிக்கும், ஆற்றலுக்கும் செயற்பாட்டுக்கும் செந்தாமரைப் பூ லேகியம் சிறந்ததாக விளங்குகிறது. இதன் தாவரவியல் பெயர் நிலம்பியம் ஸ்பீசியோசம் ஆகும். (Nelumbium speciosum, Family - Nymphaeaceae).

திருஅதிகை வீரட்டானம் என்னும் தலத்து இறைவனைப் பாடும் போது,

"மன்றத்துப் புன்னை போல மரம்படு துயரமெய்தி ஒன்றினால் உணரமாட்டேன்"

என்று பாடுகிறார். எல்லோரும் கூடக்கூடிய இடத்தில் உள்ள மரம் பலவகைத் துன்பங்களுக்கு ஆளாவது இயற்கை. 'மன்றத்துப் புன்னை போல மரம்படு துயரம்' என்னும் தொடர்

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின்"

என்னும் திருக்குறளை நினைவுபடுத்துகிறது. இம்மரத்தின் இலைகளும், பட்டையும், விதைகளும் மருத்துவக் குணம் உடையன. குளிர்ச்சியைத் தரக்கூடியது. சிறுநீரைப் பெருக்கி, மலத்தைக் கெட்டிப்படுத்தும். இம்மரத்தின் இலையை நீரில் ஊறவைத்துக் குளித்தால் சொறி, சிரங்குகள் மறையும். பூவை நிழலில் உலர்த்திப் பொடி செய்து உண்டால் காய்ச்சல் தீரும். புன்னை விதையை அரைத்துக் கொதிக்க வைத்துப் பற்றுப்போட்டால் வாதநோய்கள் நீங்கும். இதன் தாவரவியல் பெயர் கேலோபில்லம் ஈனோபில்லம் ஆகும். (Calophyllum inophyllum, Family - Guttiferae).

திருவிடைமருதூர் திருத்தாண்டகத்தில்,

"ஆலநிழலிருப்பர் ஆகாயத்தர்"

என்று பாடுகிறார். ஆலமரம் படையெடுத்து வரும் ஓர் அரசனின் படைகளுக்கே நிழல் கொடுக்கக் கூடியது. ஆலமர் செல்வன் என்று சிவனைப் போற்றுகின்றோம். ஆலமரத்தின் பாலை காலையிலும், மாலையிலும் தடவிவந்தால் வாய்ப்புண் குணமாகும். கைகால் வெடிப்பு, பல் ஆடுதல் ஆகியவை தீரும். விழுதைக் கொண்டு பல் தேய்த்து வந்தால் பற்கள் உறுதியாகும். இதன் சமூலம் வீக்கத்தைக் கட்டுப்படுத்தும் வயிற்றுப் போக்கைத் தீர்க்கும் நலம் தரும் மருந்தாகப் பயன்படும். வாந்தியை நிறுத்தும். இதன் தாவரவியல் பெயர் பைகஸ் பெங்காலன்சிஸ் ஆகும். (Ficus bengalensis, Family - Moraceae).

திருமறைக்காட்டு இறைவனை,

"கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்"

என்று பாடுகிறார். கள்ளி முதுகாடு என்று சொல்லும்போதே கள்ளிச் செடிகள் நிறைந்த சுடுகாடு, நம் கண்முன் விரிகிறது. இதன் பழங்கள்

குளிர்ச்சியைத் தரக்கூடியன. இதன் தாவரவியல் பெயர் ஒபன்ஷியா டைலெனி ஆகும். (Opuntia dillenii, Family - Cactaceae).

திருக்கடம்பூர்ப் பதிகத்தில்,

''நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோவிலான்''

என்று பாடுகிறார். முருகன் கடம்பன் என்றும் அழைக்கப்படுகிறான். கடம்ப மாலை அவனுக்கு உரியது. சிவனோடு தொடர்பு உடைமையால் நம் கடம்பன் என்று உரிமையோடு கூறுகிறார். கடம்ப மரத்தின் பட்டை, இலைகள், பழங்கள் மருத்துவக்குணம் உடையது. பழங்கள் குளிர்ச்சியைத் தரக்கூடியன. பட்டையின் சாறு சத்து நிறைந்த பானமாகப் பயன்படும். பாஷாணத்தை நிலைநிறுத்தப் பயன்படுவதாக வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் கூறுகிறார். இதன் தாவரவியல் பெயர் ஆந்தோசெபாலஸ் கடம்பா ஆகும். (Anthocephaius cadamba, Family - Rubiaceae).

மேலே குறிப்பிட்ட மலர்களும், மரங்களுமே அல்லாமல் நீலமலர், நெய்தல், எருக்கு, கோடல், கோங்கம், அடும்பு போன்ற மலர் வகை களையும் பல பாடல்களில் குறிப்பிடுகிறார் நாவுக்கரசர்.

மேற்கூறியவற்றால் சுவாமிகள் சிவனுக்கு உரிய மலர்களைப் பற்றிக் கூறும் பாங்கினையும், அவையாவும் பலவகையான மருத்துவக் குணங்களைக் கொண்டிருப்பதையும் குறிப்பாக நாம் அறிய முடிகிறது. மருத்துவ குணங்கள் நிறைந்தமையால்தான் இறைவனுக்கு அதை முன்னோர் வழிபடு மலராகப் பயன்படுத்தினர். தாவரவியலில் அவர்களுக்குள்ள நுண்மாண் நுழைபுலத்தையும் அறிகிறோம். நாவுக்கரசர் கூறியுள்ள தாவரங்கள் போல் பிற தாவரங்களின் மருத்துவ குணங்களையும் நாம் அறிந்து பயன்படுத்தி நோயற்ற வாழ்வு வாழ்வோமாக!

# 17. நாவுக்கரசர் தேவாரம்

ம. கலையரசி நடராசன், சென்னை.

தேவ + ஆரம் என்கின்றனர் சிலர்; தே+வாரம் என்கின்றனர் சிலர்; அணியும் ஆரம் என்றாலும் பணியும் வாரம் என்றாலும் நம் தேவ தேவனுக்கு உரியது. "தமிழ் இலக்கிய வரலாறு (13-14-15-ஆம் நூற்றாண்டுகள்) என்னும் நூலின் பக்கம், 16-ல் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் "மல்லி நாத சம்புவராயன் காலத்து இரட்டைப் புலவர்களே முதன்முதலில் மூவர் திருப்பதிகங்களைத் தேவாரம் என்ற பெயரால் வழங்கியுள்ளனர்" என்று எழுதியுள்ளார்.

தேவாரம் என்னும் இந்த தெய்வீகச் சொல்லை யார் முதலில் மொழிந்திருந்தாலும் அவர்தம் பொன்னார் திருவடி மலரினை எம் தலைமேல் ஏற்று வணங்குவதும் எம் கடனே. தேவாரம் என்கின்ற சொல்லினை எண்ணும் போதே நம் தேவாதி தேவன் சிவபெருமானின் திருஉருவமே நம் கண்முன்னால் தோன்றுகின்றது.

வாரம் என்கின்ற சொல்லை நம் குருமார்கள் பக்தி என்னும் பொருளிலேயே பயன்படுத்தியுள்ளனர். அந்த வகையில் நாவுக்கரசு பெருமானின் தேவாரத் திருப்பதிகங்களை ஆராயப் புகுந்தால் அதில் பக்திச் சுவை சொட்டச்சொட்ட பாறையையும் உருக்கும் இறைஞ்சுதல் இழையோடுகின்றது.

கருவாய் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்து உந்தன் நாமம் பயின்றேன் உனதருளாலால்
திருவாய் பொலிய சிவாயநம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே.

இந்தத் திருப்பாட்டால் இறைவனின் உள்ளம் கசிந்திருக்காதா? கசிந்து விட்டதால்தான்

தஞ்சே கண்டேன் தருக்கிலாதார் என்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்க வந்தேன் என்றார்
உஞ்சேன் என்று கந்து எழுந்து ஓட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூர் அடிகளே

என்று மனம் குளிர்ந்து கூத்தாடுகின்றார் ஆளுடை அரசு.

வாகீச முனிவரெனும் நம் பெருமான் திருஞானசம்பந்தப் பெருமானுக்கு முன்பாகவே தேவாரம் பாட முற்பட்டு விட்டார் என்பதில் இருவேறு கருத்துக்கு இடமிருக்க முடியாது. உடல் வயதால் மூத்தவரான நாவுக்கரசு பெருமான் உயிர் வயதால் மூத்தவரான சம்பந்தப் பெருமானுக்கு முன்னதாகவே படைத்தருளிய பாடல்கள்தான் தேவாரம் எனப்பட்டது. சம்பந்தப் பெருமான் பாடியருளியவை திருக்கடைக்காப்பு எனப்பட்டது. சுந்தரர் பெருமான் ஆக்கி அளித்தவை திருப்பாட்டு எனப்பட்டது.

பின்னர் கால மாற்றத்தால் மூவர் முதலிகள் பாடி அருளியவை ஒருங்கிணைக்கப்பட்டு தேவாரம் என்று போற்றப்பட்டது. அதில் அப்பர் பெருமான் அருளிச் செய்தவை 4, 5, 6-ஆம் திருமுறைகள் என்று வரிசைப் படுத்தப்பட்டுப் பன்னிரு திருமுறைக்கே தன்னிகரில்லாத ஒரு பக்திப் பெருக்கினைப் பரவச் செய்கிறது.

நான்காம் திருமுறை திருஅதிகையில் தொடங்கி பொதுவில் முடிகிறது. ஐந்தாம் திருமுறை கோயிலில் தொடங்கி பொதுவில் முடிகிறது. ஆறாம் திருமுறை கோயிலில் தொடங்கி திருப்புகலூரில் முடிகிறது. இந்த அமைப்புக் கூட ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியைப் பிரதிபலிப்பதாகவே தோன்று கின்றது. அது போலவே நான்காம், ஐந்தாம் திருமுறைகள் திருநேரிசை திருவிருத்தம் திருக்குறுந்தொகை என்கின்ற செய்யுள் மரபுகளில் எல்லாப் புலவர் பெருமக்களும் கொண்டு நடக்கின்ற இலக்கண நெறியில் யாத்தாளிக்க பட்டிருப்பினும், ஆறாம் திருமுறை மட்டும் ஆளுடை அரசுக்குத் தனி அடையாளம் காட்டுவதுபோல் திருத்தாண்டகம் அமைந்துள்ளது.

திருநேரிசையில் தொடங்கி திருத்தாண்டகத்தில் முடிகிறது. இதுவும் நம் ஆளுடை அரசின் தூய ஆன்மா பெற்ற ஒரு சூட்சும நிலையை உணர்த்துவதாகவே நமக்கு எண்ணத் தோன்றுகின்றது. நான்காம் திருமுறையில் கூற்றுவனைக் கண்டு ஆற்றாது அரற்றியவர் ஆறாம் திருமுறையில் புண்ணியனைப் புகலடைகின்றார்.

திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்கின்ற கோவையில் ஆளுடை அரசின் பதிகங்களை வரிசைப்படுத்தி எண்ணிப் பார்க்கும்போது அது ஒரு அழகிய ஆரமாக நம் மனக்கண் களுக்குத் தோன்றுகின்றது. இன்னும் நினைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை குறைந்த திருநேரிசை பின்னும் ஆருயிர் திருவிருத்தம், பசுபதி திருவிருத்தம், சரக்கறைத் திருவிருத்தம், தனித்திரு விருத்தம் என்கின்ற சிறப்புப் பொருந்திய பாமலர்களும் பெரிய திருத்தாண்டகம், ஏழைத் திருத்தாண்டகம், அடையாளத் திருத்தாண்டகம், காப்புத் திருத்தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம், அடைவுத் திருத்தாண்டகம், தனித் தாண்டகம், திருவினாத் திருத்தாண்டகம், நின்ற திருத்தாண்டகம் பல வகைத் திருத்தாண்டகம்

மனுமாற்றுத் திருத்தாண்டகம் ஆகிய தனிச்சிறப்பு மலர்களும் இணைந்து ஒளிரும் தேவாரம், தாண்டக வேந்தரின் கரை காணா பக்தியால் நாவுக்கரசர் சிவபெருமான் மேல் கொண்ட அளவற்ற அன்பால் உலகில் எதையும் கருதாது, நினையாது அவன்பால் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். அதனால்தான் கொடியவர்கள் நீற்றறையில் இட்டபோதும் அந்த வெம்மையும் தண்மையாக

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

என்று மெய்மறந்து பாட வைத்தது. அன்றலர்ந்த மலர்போல 7 நாட்கள் யோகத்தில் ஆழ்ந்திருக்கச் செய்தது.

அந்த நம்பிக்கையால்தான் உடலும் உள்ளமும் சிவமயமாயிற்று. வீணர்கள் தந்த நஞ்சமுது செயல்பட முடியாமல் போயிற்று. நற்றமிழ்ப் பதிகம் ஊறும் நெஞ்சினில் ஐந்து எழுத்துமாகி ஈசன் நீங்காமல் நிறைந்திருப்பதால் நஞ்சு செயலிழந்தது. இதனை வாகீசப் பெருமான்,

துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத்தோதி நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமுதாக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே

என்று நினைவு கூர்கின்றார்.

சோதனைகள் தொடரத் தொடர உள்ளத்தில் உறுதி வலுப் பெறுகின்றது. நம்பிக்கை மேலும் மேலும் ஓங்கி உயர்கின்றது. இந்த நம்பிக்கைதான் யானை இடற வந்தபோது,

சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த்திங்கள் சூளாமணியும்
வண்ணவுரிவை உடையும் வளரும் பவநிறமும்
அண்ணல் அரண் முரண் ஏறும்.....
திண்ணென் கெடிலப்புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை

என்று பாட வைத்தது. எந்தக் கொடிய விலங்கினைக் கண்டாலும் இந்தப் பதிகத்தைச் சிவபெருமானை நினைந்து ஓத விலங்குகள் விலகிப் போகும்.

கெடுமதியாளர்கள் கற்றூணுடன் பிணைத்துக் கடலில் எறிந்தபோது "சொற்றுணை வேதியன் சோதிவானவன்" என்று நமச்சிவாயப் பதிகம் பாடி, பிறவிப் பெருங்கடலையும் தாண்டினார்.

கரையேறிவந்து "ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்" என்று இருகண்ணும் மழைவார நன்றிப் பெருக்கினைப் பொழிந்தார்.

அப்பர் பெருமான் தேவாரம், "கொல்லிக் காந்தாரம், பியந்தைக் காந்தாரம், சாதாரி காந்தார பஞ்சமம், பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், இந்தளம், சீகாமரம் குறிஞ்சி ஆகிய பண் அமைப்புகளைக் கொண்டன. நான்காம் திருமுறை 113 பதிகங்களையும் ஐந்தாம் திருமுறை 100 பதிகங்களையும் ஆறாம் திருமுறை 99 பதிகங்களையும் கொண்டு திகழ்கின்றன. அதாவது 4, 5, 6 திருமுறைகளும் மொத்தம் 312 பதிகங்கள் கொண்டுள்ளது. அதில் பொது 37-126 திருத்தலங்களைப் பற்றிப் பாடியருளியவைகளாகும். அப்பர் பெருமான் தேவாரத்தில் 142 வைப்புத் தலங்கள் ஓதப்பெறும் பாங்கு போற்றுதற்கு உரியது.

திருவாரூர் திருத்தலத்திற்கு 21 பதிகங்களும் திருவீரட்டானத்துக்கு 16 பதிகங்களும், திருவையாற்றுக்கு 12 பதிகங்களும், தில்லைக்கு 8 பதிகங்களும், திருவீழிமிழலைக்கு 8 பதிகங்களும், திருக்கச்சிக்கு 7 பதிகங்களும், திருஒற்றியூர் திருக்கழிப்பாலை, திருநெய்த்தானம், திருவிடை மருதூர், திருமறைக்காடு, திருப்பழனம், திருப்புகலூர் ஆகிய திருத்தலங்களுக்கு தலா - 5 பதிகங்களும், திருமாற்பேறு, திருஇன்னம்பர், திருசோற்றுத்துறை, திருநாகைக்காசேனம், திருக்கைலாயம் திருத்தலங் களுக்கு தலா 4 பதிகங்களும் திருஅண்ணாமலை, திருஆனைக்கா, திருநாகேஸ்வரம், திருப்பூந்துருத்தி, திருக்கடவூர், வீரட்டம் ஆகிய திருத்தலங்களுக்கு தலா 3 பதிகங்களும் ஏனைய திருத்தலங்களுக்கு ஒன்று இரண்டு என்ற வகையில் பாடி அருளியுள்ளார்.

குறிப்பாக அவர் திருவாரூர் திருத்தலத்திற்கு 21 பதிகங்களைப் பாடி அருளியுள்ளது நம்மைப் பெரிதும் சிந்திக்க வைக்கிறது. ஐம்பூதங்களில் மண் முதலாவது பூதம் மண்ணிலிருந்து, எலும்பு, தசை, தோல், நரம்பு, மயிர் ஆகியவை தோன்றுகின்றன. அதாவது உயிர்களின் உடல்கள் தோன்றுவது மண்ணிலிருந்தே திருவாரூர் திருத்தலமோ பிருதிவித்தலம் அங்கு பிறக்க முக்தி என்கிறது சாத்திரம். பஞ்ச பூதங்களில் ஐங்குணங் களையும் ஒருங்கே பெற்றது மண் மட்டுமே. சத்தத்தின் காரியமாகிய ஆகாயத்தில் இருப்பது சத்தம் எனும் ஒரு குணமே.

பரிசத்தின் காரியமாகிய வாயுவில் இருப்பது சத்தமும் பரிசமும் ஆகிய இரு குணங்கள். உருவத்தின் காரியமாகிய தேயுவில் இருப்பது சத்தமும் பரிசமும் உருவமும் ஆகிய முக்குணங்கள். இரசத்தின் காரிய மாகிய அப்புவில் இருப்பது சத்தமும் பரிசமும் உருவமும் இரசமும் ஆகிய நாற்குணங்கள். இரசத்தின் காரியமாகிய பிருதிவியில் இருப்பது சத்தமும் பரிசமும் உருவமும் இரசமும் கந்தமும் ஆகிய ஐங்குணங்கள்.

பஞ்சபூதங்களில் மண் என்பது தனிப்பெருமை வாய்ந்தது. எல்லா உடல்களின் தோற்றமும் மறைவும் மண்ணிலேயே நிகழ்கின்றன. புற்றையே (மண்ணையே) இடமாகக் கொண்ட அந்த ஆரூரானை அப்பர் பெருமானின் ஆன்மா ஆரூர்த் தலத்தில் மட்டுமல்லாது அதிகையில் தொடங்கிப் புகலடைந்த புகலூரில் தஞ்சமடைந்தபோதும், 80 அகவைக்கு மேற்பட்ட நிலையிலும் அவரை இறைவன் சோதிக்க முற்பருங்காலை அவர் ஆன்மா ஆரூரான் அடி இணைய நினைந்து

"பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத்தின் பீர்க்.
கில்லையே கிடந்து தான் யானேல் வானோர்
தம்மானை தலை மகனைத் தண்ணலாரூர்த்
தடங்கலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்றன் அடித் தொடர் வானுழிதர்கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் பின்னே"

என்று பாடுகின்றார். பிறக்கமுக்தி எனும் அமுத நிலை கொண்ட மண். பொதுவாய் மண்ணில் தோன்றிய உயிர்களுக்கு மண்மீது ஒரு பற்று இயற்கையிலேயே உண்டு. (மண்ணாசை என்பது வேறு) அந்த வகையில் ஞானிகளும் தன்னைப் பெற்ற தாயையும் தான் பிறந்த மண்ணையும் நற்றவவானின் நனி சிறந்தது என்று போற்றுவது உண்டு.

அதைப்போலவே தேவாரம் என்னும் இந்தப் பெருஞ்செல்வம் இன்று நம் கரங்களில் தவழக் காரணமாய் இருந்த மாமன்னன் அருண்மொழி ராஜராஜ சோழன் முதன்முதலாக தேவாரப் பாடலைக் கேட்ட இடம் திருவாரூர் ஆலயம்தான். பின்னாளில் தேவாரம் உலகுக்கு வெளிப்படக் காரணமாய் ஒரு காரியம் நிகழவிருக்கும் திருவிடம் திரு ஆரூர்த்தான் என்பதை சூட்சும்மாய் நமக்கு உணர்த்தியது போல் தோன்றுகின்றது. ஆரூர் மண்ணின் மகிமை. அறுபத்து மூன்று நாயன்மார்களையும் நாம் அறிந்து கொள்ளத்தக்க வகையில் சிவபெருமானே. தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்று அடியெடுத்துக் கொடுக்கத் தொண்டர் தொகை நூல் தந்த இடமல்லவா. மனுநீதி மன்னன் வாழ்ந்த மண்ணில் தனக்குப் பின்னாலும் நிகழவிருக்கும் காரண காரியங்களிலால் அதிக ஒதுக்கீடு அளித்திருப்பாரோ ஆளுடை அரசு!

அப்பர் பெருமானின் தேவாரத்தில் சிறந்து விளங்கும் பலவற்றுள் எண்ணலங்காரப் பதிகங்கள் 2 ஆகும். "ஒன்றுகொலாம்" எனத் தொடங்கி விடம் தீண்டி இறந்த அப்பூதி அடிகளின் மைந்தன் பெரிய திருநாவுக்கரசுவை உயிர்பெறச் செய்த பதிகமும் மற்றொன்று "ஒன்றுவெண்பிறைக் கண்ணியோர் கோவணம்" என்கின்ற பதிகமும் ஆகும். எண்ணும் எழுத்தும் மற்றும்

எல்லாமும் ஆன இறைவனைப் போற்றித் திருத்தாண்டகங்களில் ஒன்றான "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" என்கின்ற பதிகத்தில் 270 போற்றி மலர்கள் கோர்க்கப்பட்டுள்ளன. இது எண்களில் அழியாதன்மை கொண்ட ஒன்பதைப் போன்றவன் இறைவன் என்று எப்போதும் அடியார் திருக்கூட்டம் எண்ணித் துதிக்க இன்றும் அர்ச்சனை திருப்பாட்டாய் விளங்குகின்றது.

இந்த எண்ணலங்காரம் அட்ட மலர்களால் இறைவனை வழிபட நமக்கு அறிவுறுத்தும் முறையில் மேலும் தொடர்கிறது.

**எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி**
**மட்டலர் இடுவார் வினை மாயுமாம்**
**கட்டித்தேன் கலந்தனை கெடில வீ**
**ரட்டனார் அடி சேரும் அவருக்கே.**

அகமலர்களாகிய, கொல்லாமை, அருள், ஐம்பொறி அடக்கல், பொறை தவம், வாய்மை அன்பு அறிவு ஆகியன கொண்டு தியானித்து ஏத்தியும், புறமலர்களாகிய, புன்னை, வெள்ளெருக்கு, செண்பகம், நந்தியா வர்த்தனம், நீலோத்பலம், பாதிரி அலரி, செந்தாமரை ஆகியன கொண்டு வழிபட்டு உய்திபெற வழிகாட்டுகின்றார். இந்தப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் முதலடியிலேயே எட்டு என்ற எண்ணிக்கையைச் சொல்லும் அழகு படித்து இன்புறத்தக்கது. மேலும் நாவுக்கரசு பெருமானின் தேவாரம் மிகப்பெரிய செய்திக் களஞ்சியமாய் திகழ்கின்றது.

# 18. நாவுக்கரசரில் இலக்கிய இன்பம்

**மு. கலைவேந்தன், திருவையாறு.**

சங்ககாலம் தொட்டு எண்ணற்ற புலவர்களும் கவிஞர்களும் தோன்றி இலக்கியத் தமிழை இன்புறச் செய்தனர். அவரவர் தம் கற்றலின் துணைகொண்டு அகம், புறம் வழி அக்கால மக்கள் தம் வாழ்க்கை முறைகளைத் தம் இலக்கியங்களின் வாயிலாகப் படம் பிடித்துக் காட்டி யுள்ளார்கள். கி.பி. ஏழாம் நூற்றாண்டில், இனிமையான இலக்கியங் களைப் படைத்தளித்த சமயக் குரவர்களான ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும், தமிழ் இலக்கிய வரலாற்றில் தனித்துவம் பெற்று விளங்குகின்றனர். அவர்களுள் இறைவனைக் கவித் துவத்தாலும் இனிய தொடர்களாலும் மந்திரச் சொற்களாலும் தேமதுரத் தமிழிசைப் பண்களாலும் ஆயிரக்கணக்கானப் பாடல்களைப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட பாடிய நாவுக்கரசர் நல்கிய இலக்கிய இன்பத்தை அவர்தம் பாக்களால் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அகத்துறை இன்பம்**

உள்ளத்தின் அளவிலேயே உணரப்படுவதாகிய காதல், பக்தியோடு இணைந்து பாட்டுத்திறத்தாலும் பண்ணிசையாலும் இறைவனை அடைய ஆற்றுப்படுத்தின. இதற்கு வழிகாட்டியாய் உள்ள இலக்கியங்கள் பலப்பல; சிறப்பாக சிற்றிலக்கியங்களில் இலக்கிய இன்பம் இனிதே நுகரத்தக்கன; படிக்கப் படிக்க இன்பம் நல்குவன; உலா, தூது, பிள்ளைத்தமிழ், கலம்பகம், பரணி, கோவை, பதிகம் போன்ற சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்று ஆறும் ஒவ்வொரு நிலையில் ஒவ்வொரு வகையான இன்பம் நல்கி, இலக்கியத் தமிழுக்கு அணிகலன்களாய்த் திகழ்கின்றன. இலக்கிய உலகில் சுவடுகளைப் பதித்த சிற்றிலக்கியங்கள் இறை நெறியிலும் பெரிய தாக்கத்தையும் செல்வாக்கினையும் ஏற்படுத்தின. இனிய இசை பண்களால் பாடல்களைப் பாடிய நாவுக்கரசரின் இப்பதிகங்களில் சிற்றிலக்கியச் செல்வாக்கு சிறப்பான இடத்தைப் பெற்று ஆன்மீக உலகத்திற்கு அரிய கருத்துக் கருவூலமாய்த் திகழ்வதை அறிய முடிகிறது.

திருநாவுக்கரசர் தம்மை நாயகியாகவும் இறைவனை நாயகனாக்வும் கொண்டு பாடிய அகத்துறை இன்பத்தை ஆன்மீக இன்பமாக மாற்றிய பெருமை அவரைச் சார்ந்ததாகும். இதனை நாயகன் - நாயகி பாவம்

என்று கூறுவதும் எண்ணத் தக்கதாகும். தலைவி ஒருத்தி (நாவுக்கரசர்) திருப்பழனத்து இறைவன் மீது தாம் கொண்ட ஆராக்காதலால் (பக்தி முதிர்வால்) தம் மனமும் உடலும் கொண்ட மாற்றத்தைப் பேசிப் பழகும் குயில் கூட்டங்களிடத்தே சொல்லி, ''தூது'' அனுப்புகிறாள்.

''குயில் கூட்டங்களே! வண்டுகள் ஒலிக்கும் மாலையணிந்த தலைவன் - பிறைச்சந்திரனைத் தலையில் சூடியும், பொன்மாலை சூடிய மார்பினையுமுடைய தம் தலைவன் திருப்பழனத்தில் குடிகொண்டிருக்கும் இறைவன்;- அவனது பிரிவாற்றாமையால் என் உடல் நலமிழந்த நிலை கண்டு என்னை இகழ்கின்றானோ? என்னவோ? குயில் கூட்டங்களே! எம் நிலைமையை எடுத்துக்கூறி என்னிடம் வரச் செய்யுங்கள்'' என்பதனைத் திருநாவுக்கரசர்,

**''சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே!**
**பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்**
**முன்மாலை நகுதிங்கள் முகில்விளங்கு முடிச்சென்னிப்**
**பொன்மாலை மார்பன்என் புதுநலமுன் டிகழ்வானோ''**

என்று பாடுவது கொண்டு அகத்துறை இன்பங்களை ஆன்மீக இன்பத்தோடு இணைத்து சிற்றிலக்கியக் கூறுகளோடு பாடியிருப்பது கொண்டு நாவுக்கரசரின் இலக்கிய இன்பத்தை அறியலாம். இவ்வாறே, 'வண்டே!' என விளித்து,

**''நினைக்கின்ற நினைப்பெல்லாம் உரையாயோ நிகழ்வண்டே?**
**சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய் சோர்வானோ?''**

என்றும், 'பூந்தென்றலே!' என விளித்து,

**''விதியாளன் என்னுயிர்மேல் விளையாடல் விடுத்தானோ?''**

என்றும், 'மடநாராய்!' என விளித்து,

**''அங்கோல வளைகவர்ந்தான் அணிபொழில்சூழ் பழனத்தான்**
**தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானோ''**

என்று கூறி, தூது இலக்கியங்களில் என் வளையலைக் கவர்ந்த தலைவன் வராவிட்டாலும் அவனது மாலையையாவது வாங்கி வா என்று அழைக்கும் முறையில் இப்பாடல்கள் அமைந்திருப்பது சிற்றிலக்கியக் கூறுகள் செல்வாக்கு பெற்றிருப்பதனை அறிய முடிகிறது. இப்பதிகத்தின் இறுதிப் பாடலாகிய ''வஞ்சித் தன் வளை கவர்ந்தான்'' - பாடல் வரலாற்றுச் சிறப்புடையது; இலக்கிய இன்பம் நல்குவது என்பதை அவர்தம் பாக்களால் அறிய முடிகிறது.

**காதலின்பம்**

திருநாவுக்கரசர் தமிழகத் திருக்கோயில்கள் பலவற்றுக்கும் சென்று, ஊரின் பெருமையும் இறைவனின் சிறப்புகளையும் எடுத்தியம்புவதில்

ஆர்வமும் இன்பமும் கொண்டிருந்தார் என்பதனை அவரது திருப்பதிகங்களால் அறிய முடிகிறது. திருஆரூரிலும், திருஐயாற்றிலுமே அதிகமாகப் பாடியுள்ளதும் எண்ணத் தக்கதாகும். ஆரூர் திருக்கோயிலின் சிறப்பினையும் வளத்தினையும் நாவுக்கரசர்,

"உயிரா வணமிருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியி னுரு வெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால் உணரப்படுவாரோ
டொட்டி வாழ்தி......"

என்று பாடியிருப்பதும் அறியத் தக்கதாகும். நாவுக்கரசரின் இத்திருத்தாண்டகம் யோகத்தால் இறைவனை அடையும் வழியும் கூறியிருப்பது நினைக்கத் தக்கதாகும். ஏழாவது தாண்டகத்தில் இறை உணர்வு மேலிட்ட நிலையில் காதலின்பத்தைக் காட்டியிருப்பது உணரத்தக்கதாகும். காதல் வயப்பட்ட தலைவி, தலைவனோடு ஒன்றி இரண்டறக் கலக்கும் இன்ப மேலீட்டிற்கு இணையாகும் என்பதை அவர்தம் கற்பனைக் காதலி வழிகாட்டியிருப்பது உணரத்தக்கதாகும்.

"முன்னம் அவளுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

அவள் ஒரு பெண்ணாக இருப்பதால் எல்லாப் பெண்களையும் போல அவளுக்கும் காதல் உணர்வு மேலிட்டது. காதலனை எண்ணி உருகுகிறாள்; அவனுடைய பெயர் காதில் விழுந்ததால் அவள் நெஞ்சம் நெகிழ்ந்தது; முதன் முதலாக அவனுடைய திருப்பெயர் அவளுடைய அடிமனத்தில் ஆழமாகப் பதிந்து - அன்பாக, பாசமாக பெருக்கெடுத்தோடியது. பின்னர் அவனைப் பற்றிய வீரச் செயல்கள், பண்புகள் பற்றிய செய்திகள் காதில் விழுந்தபோது அவனுடன் வாழ்வது போன்றும் அவனுடன் உரையாடுவது போலவும் கற்பனை செய்து மகிழ்ந்ததைக் காண முடிகிறது. அதுமுதல் அவளுடைய எண்ணத்திலும் பேச்சிலும் அவனே முன்வந்து நிற்பான்; அவனுடைய நினைவாகவே வாழத் தொடங்கி விட்டாள். உலகத்தார் கண்களில் அவளோர் பித்துப் பிடித்தவள் போன்றே காணப் பெற்றாள்; அவனை நினைத்து தனக்குத் தானே சிரித்துக்கொள்வாள்; அவளும் அவனும் நெருங்கிய உறவு முறையறியாது, உலகம் அவளைப் பித்துப் பிடித்தவள் "பித்தி" எனப் பெயர் சூட்டிப் பழித்தது.

காதல் மாயையால் தன்னைப் பெற்ற தாய், தந்தையர் கூட ஒரு பொருளாகத் தோன்றவில்லை. அவர்களுக்கு மேலாக உள்ளத்தை இனிமையாக்கும் அவனைத் தவிர யாரும் ஒரு பொருளாகக் கூட தோன்றுவதில்லை. பேச இனிக்கும் பெருந்தலைவனைப் பற்றிக்கொண்ட அவளுக்கு இனி உலகமோ சுற்றமோ ஒரு பொருளல்லதான். என்ன ஆனாள் அவள்? தன்னை மறந்தாள்; தன் பெயரை மறந்தாள்; தன் தலைவன் திருவடிகளே பற்றுக்கோடு என அவனோடு ஒன்றிவிட்டாள்; அன்பின் கொடுமுடியிலே ஏறிவிட்டாள்; பொல்லாத உலகத்தை, மண்ணுலகத்தை மறந்து உயிர்க் காதலனின் அருளில் கலந்துவிட்டாள். அவன் வேறு; தான் வேறு என்றில்லாத நிலையில் ஐக்கியமாகி ஒன்றிவிட்டனர் - என ஆரூர்ப் பெருமானிடம் தாம் கொண்டிருந்த காதலை ஒரு தலைவி மூலம் வழிகாட்டி இரும்பூதெய்துகின்றார். கற்பென்றாலும் கடவுளோடு ஒன்றிய காதல். அது ஓர் அன்பு ஊற்று; அனுபவ ஊற்று; இலக்கிய இன்பத்திற்கோர் இனிய இன்ப ஊற்று. காதலின்பம் நாவுக்கரசரின் பாடல்களால் புதிய பரிணாமத்தைப் பெற்று, ஆன்மீக உலகில் புதிய நெறியைத் தோற்றுவித்தது எனலாம்.

### அருள் இன்பம்

திருவையாற்றுக்கு அண்மையில் உள்ள அழகிய திங்களூரில் வாழ்ந்த அந்தணச் சான்றோர் அப்பூதியடிகள். அவர் திருநாவுக்கரசரைக் காணாமலேயே அவர்பால் பேரன்புகொண்டு ஈடுபாட்டுணர்வுடன் சாலை, சோலை, இல்லம் மற்றும் அனைத்துப் பொருள்களுக்கும் பிள்ளைகளுக்கும் **"திருநாவுக்கரசர்"** என்ற திருப்பெயரையே சூட்டி மகிழ்ந்தார். அம்முறையில் **"திருநாவுக்கரசர் தண்ணீர் பந்தல்"** என்ற ஒன்றைச் சாலையில் அமைத்திருந்தார். அவ்வழிவந்த திருநாவுக்கரசர் தம் பெயரால் தண்ணீர்ப்பந்தல் அமைந்திருத்தல் கண்டு வியப்புற்று, நம்மை நன்கு இனம் கண்டு கொண்டவரால்தான் இப்பெயர் சூட்டியிருத்தல் வேண்டும் என எண்ணி மகிழ்ந்தார். தண்ணீர்ப்பந்தல் அருகில் சென்று, தண்ணீர் அளிப்பவரிடம், 'ஐயா! இப்பெயர் சூட்டிய தலைவர் யார் என்பது யான் அறியலாமா?' எனக் கேட்டதும் தண்ணீர் அளிப்பவரும், 'சுவாமி! எம் தலைவர் அப்பூதியார்; சற்று முன்தான் இல்லம் சென்றார். அங்கு சென்றால் அவரைக் காணலாம்' என விடையும் கூறி, வழியும் காட்டி உதவினார்.

அப்பூதியாரின் பேரன்புத் திறத்தை, இல்லம் சென்று கண்டுணர்ந்த நாவுக்கரசர், விருந்து படைக்க வாழை இலை அரிந்துவரச் சென்ற அப்பூதியாரின் **"மூத்த திருநாவுக்கரசு"** பாம்பு கடித்து இறந்துபட்டான். இதனை அறிந்த நாவுக்கரசர், **"ஒன்றுகொலாம்"** பதிகம் பாடிப் பிழைக்கச் செய்தார்.

திருநாவுக்கரசரை நேரில் காணாமலேயே அவரது இறையருளால், சமணரால் நீற்றறையிலும், விடத்தாலும், யானையாலும் இடர் விளைவித்து, இறுதியில் கல்லில் கட்டி, கடலில் இட்ட போதும் பிழைத்துக்கொண்ட செய்தியறிந்து அவர் மீது அளவற்ற பக்தியும் அன்பும் கொண்டார். "அவரெங்கே? நாமெங்கே?" என நாவுக்கரசனையே தம் ஞானகுருவாக ஏற்றுக் கொண்டார். "திருநாவுக்கரசு" எனும் அழகிய பெயரையே மந்திரமாக அனைத்துப் பொருள்களுக்கும் இட்டது குறிப்பிடத்தக்கதாகும். ஒரு அந்தணர், ஏற்றத்தாழ்வு பெருகியிருந்த அக்காலத்தே, ஒரு வேளாளரைக் குருவாக மதித்து வழிபட்டார் என்றால் எத்தகைய உயர்ந்த பண்பு? யாருக்கு வரும் இவ்வுயரிய நோக்கம்? அதனால்தான் சேக்கிழார் தம் பெரியபுராணத்துள் இதனை,

"அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகளார்
தந்தனய ருடன்சாலை, கூவல், குளந், தருதண்ணீர்ப்
பந்தல்பல ஆண்டரசெனும் பெயரால் பண்ணிமை
வந்துஅணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண"

என அழகுற எடுத்தியம்பியுள்ளார். அப்பூதியார் குருபக்தியால் உயர்ந்த உத்தமரானார். அதனால்தான் திருநாவுக்கரசர் அவரது பெருமையை, "சொன்மாலை பயில்கின்ற" என்ற திருப்பழனப் பதிகத்தில்,

"வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பறந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப் போய் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே"

என்று பாடியுள்ளார். இறைவனைப் பாடும் பதிகத்தே ஒரு அடியார்க்கு ஏற்றம் கொடுத்துப் பாடிய பதிகம் இது என்பது குறிப்பிடத்தக்கது. அடியார் ஒருவர்க்கு அடியாரே அருள் வழங்கி, இன்பங்காணும் நற்தொண்டராய் நாவுக்கரசர் வாழ்ந்து காட்டிய திறம் அவர் தம் இலக்கியங்களால் அறிய முடிகிறது.

**கண்டறியாத இன்பம்**

திருநாவுக்கரசர் தம் எண்பத்தோராவது வயதில் எவரும் பெறற்கரிய பேறாகிய மானிட உடலோடு கயிலையைக் காண, காலாலேயே நடந்து சென்றார். பலநாட்கள் நடந்து நடந்து கால் தேய, கை தேயச் சென்றார். இறையருளால் வடகயிலாயத்தைக் காண இயலாது, தென் கயிலாய மாகிய திருவையாற்றில் கயிலைக் காட்சி கண்டார். கண்ட மகிழ்வில் அவர் பாடிய பாடல் இலக்கிய இன்பமாய், இசைமயமாய், இயற்கை இன்பமாய் இன்றும் இசைத்துக் கொண்டிருப்பதை உணர முடிகிறது.

"மாதர் பிறைக்கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவாரவர்பின் புகுவேன்

**யாதுஞ் சுவடு படாமல் ஐயாறடைகின்ற போது**
**காதன் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன்;**
**கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்.''**

கயிலாயக் காட்சி தரும் ஐயாற்றுத் திருக்கோயிலினுள் தாம் புகுகின்றதைப் பாடுகின்றார். அவருக்கு முன்னே அடியார்கள் பூவும் நீரும் கொண்டு இறைவன், இறைவியை மலையான் மகளோடு இணைத்துப் பாடிக் கொண்டே செல்கிறார்கள். அவர்கள் பின்னே யானும் புகுகின்றேன் - என அக்காலத்தே தாம் அடியார்கள் பின்னே சென்ற அனுபவத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றார். இதனுள் பொதிந்து கிடக்கும் ஓர் உண்மையை நாம் புரிந்து கொள்ளவேண்டும். இன்றும் வடநாட்டுக் கோயில்கள் காசி போன்ற திருநகர்களில் இறைவனுக்கு அடியார்களே நீரால் நன்னீராட்டி பூவால் வழிபடும் வழக்கம் காணப்படுகிறது. இவ்வாறே தமிழகக் கோயில்களிலும் அடியார் பெருமக்கள் தாமே கடவுளுக்கு பூவும் புனலும் கொண்டு நீராட்டி வழிபாடு நடத்தி உள்ளனர். திருநாவுக்கரசரும் அவர்தம் அடியார்களும் தாமே வழிபாடு நடத்தியதை அறிய முடிகிறது.

அப்பரடிகள் ஐயாற்றில் தாம் கண்ட கயிலைக் காட்சி எப்படி யிருந்ததாம்? இறைவன், இறைவியைப் போல களிறு தன் பெண் யானை யுடன் வருவதைப் பார்த்தேன். இதேப் போல் பாடல்தோறும் கோழி, குயில், மயில், அன்றில், பன்றி, குரங்கு, நாரை, கிளி, பசு போன்ற உயிரினங்கள் பலவும் ஆணும் பெண்ணுமாய் கூடி மகிழ்ந்து வருவதைக் கண்டேன். அவர் கண்ணிற்கு அவையாவும் சிவசக்தி மயமாகவே காட்சி தந்தனவாம். ''கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்'' - உலக உயிர்கள் யாவும் சிவசக்தி வடிவில், சிவலோகக் காட்சியாக, சிவானந்தக் காட்சியாக அவருக்குப் புலப்படவே ''கண்டறியாதன கண்டேன்'' எனக் கணித்துரைக்கின்றார். அம்மையப்பராய் இணைந்து வந்த காட்சியும் அவர்களது திருமுடிக்காட்சியும், திருவடிக் காட்சியும் உலகில் எவருக்கும் கிட்டாத நல் வாய்ப்பு; தமக்கு மட்டுமே கிடைத்த இன்ப அனுபவமாய் முகிழ்க்கவே தாம் ''கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்'' என எக்களிப்போடு பாடுகின்றார். தாம் காணும் பொருள்களிடத்தெல்லாம் இறைவனைக் காண்பதென்பது எல்லோருக்கும் எளிதில் ஏற்படும் நிலையல்ல. உயர்நிலை எய்திய மனித நேய மாண்பாளர்களுக்கு மட்டுமே ஏற்படும் உயரிய நிலை யாகும். இறைவனைத் தாம் நேரில் கண்ட அனுபவங்களை இலக்கிய இன்பத்தோடு இணைத்துக்காட்டிய திருநாவுக்கரசின் இசைப்பாக்கள் உள்ளத்தால் உயர வைக்கும் உன்னத மொழிகள் என்பதை உணரலாம்.

### தொண்டு இன்பம்

திருநாவுக்கரசர் - **''என் கடன் பணி செய்து கிடப்பதே!''** என்ற உயரிய குறிக்கோளுடன் உழவாரப் படைப்பாளியாக கோயில்கள்தோறும்

தூய்மை செய்யும் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்ந்தவர். மக்களுக்குத் தொண்டு செய்வதில் ஆர்வமும் மனித நேயச் செயல் களைப் புரிவதில் ஆனந்தமும் கொண்டு தொண்டாற்றிய திருநாவுக்கரசரின் தொண்டுள்ளம் தூய்மை நெறியதாய் செயல்பட்டதனை அவர்தம் தேவாரப் பாசுரங்கள் உணர்த்துகின்றன. வேளாண் மரபினர் தாம் என்பதைச் சொல்லாமல் சொல்லி, வேளாண் முறைகளை உருவக அணியில் அமைத்து அரிய பாடல் ஒன்றைப் பாடியிருப்பது அறியத் தக்கதாகும்.

> "மெய்ம்மையாம் உழவைச் செய்து
> விருப்பெனும் வித்தை வித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப்
> பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
> தம்மையும் நோக்கிக் கண்டு
> தகவெனும் வேலியிட்டுச்
> செம்மையுள் நிற்பாராகிற்
> சிவகதி விளையுமன்றே!"

உண்மை அன்பராகிய உழு தொழிலைச் செய்து "சிவநேயம்" என்னும் விதையை விதைத்து பொய்யாகிய களைகளைப் பறித்து பொறையெனும் நீர் பாய்ச்சி, தகவுடைமை எனும் வேலி அமைத்து, செம்மை நெறி நின்றால் சிவகதியாகிய பயிர் செழித்து வளரும்; சிவநெறி பரவினால் அன்பும், அறனும், மனிதநேயமும் தொண்டுள்ளமும் சிறந்து விளங்கும் என்பதைத் திருநாவுக்கரசர் உள்ளத்தால் உணர்ந்து, இலக்கியப் பாக்களால் வெளிப் படுத்தியிருப்பது எண்ணுதற்குரியதாகும்.

1. திருநாவுக்கரசர் தம்மை நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் கொண்டு பாடி அகத்துறை இன்பத்தை ஆன்மீக இன்பமாக மாற்றி யதையும் சிற்றிலக்கியச் செல்வாக்கால் குயில், வண்டு, நாரை போன்றவற்றை இறைவனுக்குத் தூது விடும் இலக்கிய இன்பத்தையும் உணர முடிகிறது.
2. கடவுளை அடையக் காதலின்பம் ஒரு வழியாகக் கொள்ளப்பட்டு இலக்கிய இன்பம் உணர்த்தப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.
3. அப்பூதியடிகளின் செயல்பாடுகளை அறிந்த திருநாவுக்கரசர் அடியார் ஒருவர்க்கு அருள்செய்யும் நிலையை அவர்தம் இலக்கியங்கள்வழி உணர்த்துகின்றார்.
4. இறைவனைத் திருநாவுக்கரசர் நேரில் கண்ட அனுபவங்களை இலக்கிய இன்பமாக ஆக்கியிருப்பது அறிதற்குரியது.
5. தொண்டின்பமே இறைவனை அடைய சிறந்த வழி என்ற திருநாவுக்கரசரின் இலக்கியச் சிந்தனை பின்பற்றத்தக்கதாகும்.

# 19. நாவுக்கரசரின் பக்திநெறி

மா. களஞ்சியம்மாள், குற்றாலம்.

நம்பிக்கை என்பது பலவகைப்படும். தெய்வத்தின் மீது கொள்ளும் நம்பிக்கை பக்தி என்று பேசப்படுகிறது. உயிர்கள் இறைவனை அடைவதற்கு மேற்கொள்ளும் பல்வேறு நெறிகள் பக்தி நெறி என்று அழைக்கப் படுகிறது. கடவுள் என்று ஒரு சக்தி இருக்கிறது; அது எப்பொருளிலும், எவ்விடத்திலும், எக்காலத்திலும் நீக்கமற நிறைந்திருக்கிறது என்று எண்ணும் அசைக்க முடியாத நம்பிக்கை அளவிட முடியாத பக்தி உணர்வின் பிரதிபலிப்பேயாகும்.

கடவுள் பற்றிய நம்பிக்கை மட்டுமல்ல; ஆண்டவன் மீது அடியவர்கள் கொள்ளும் ஆழமான அன்பும் பக்தியின் ஒரு பகுதியாகும். இறைவனிடம் மெய்யன்பு கொண்டு அன்பர்கள் அனுபவிக்கும் உணர்வுகள் பல வகைகளில் வெளிப்படுகின்றன. அவற்றை 'இறை அனுபவங்கள்' என்று சமயவாதிகள் குறிப்பிடுகின்றனர். இவ்வுலகத்தில் தோன்றிய சிற்றுயிர்கள் இறைவனின் திருவடிப் பேற்றைப் பெறுவதற்கு, சமயச் சான்றோர்கள் பல நெறிகளை வகுத்துக் காட்டியுள்ளனர். சிவன் என்னும் திருநாமத்தைச் சிறப்பினும் செம்பொருளாகக் கொண்டு ஒழுகிய சிவசிந்தையர் திருநாவுக்கரசர். அவர் உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கும் கதிர்போல் தோன்றிய பெருமகனார். அவர் அருளிய நான்காம் திருமுறையின் வழியாக அவருடைய பக்தி நெறியினை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இறைவனின் இசைவும் அகிலத்தின் அசைவும்**

நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் கடவுளின் விருப்பப்படிதான் நடைபெறுகின்றது. அவன் தாளினை நினைத்து வழிபடுவதற்கும் அவன் அருட்பார்வை வேண்டும். அவன் ஆட்டுவிக்கின்றான். நாம் ஆடுகின்றோம். 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பது ஆன்மீகவாதிகளின் அழுத்தமான கொள்கையாகும். "உலகெலாம் உணர்ந்தோதுதற்கரியவன்" என்று சேக்கிழார் கூறும் கூற்று, இறைவனுடைய செயல்கள் நம் சிந்தனைக்கு அப்பாற் பட்டவை என்பதை எடுத்துக்காட்டுகின்றது. அவன் விரும்பிச் செய்யும் செயல்களை நாம் ஏற்றுக் கொள்கிறோம். இக்கருத்தினை,

**"வேண்டி நீயா தருள் செய்தாய்**
**யானும் அதுவே வேண்டி னல்லால்**
**வேண்டும் பரிசொன்று ண்டென்னில்**
**அதுவும் உன்றன் விருப்பன்றே"**

என்ற திருவாசகப் பாடல் வழி உணர முடிகின்றது. நாவுக்கரசரும் தம் தமக்கையார் தம் பொருட்டு உயிர் தரித்திருந்ததும், தாம் சூலை நோய்வாய்ப்பட்டு சூலக்கையர் திருவருளால் ஆட்கொள்ளப்பட்டதும் ஆண்டவனின் திருவுள்ளக் குறிப்பே என்று முழுமையாக நம்புகின்றார்.

**வாழ்க்கைச் சூழலும் இறை நம்பிக்கையும்**

மருள்நீக்கியார் இளம் பருவத்தில் தாய் தந்தையரை இழந்து தமியராகத் தவித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய தமக்கையார் அவர் மீது கொண்டிருந்த பெருங்கருணையால் அவரைப் பேணி வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். உயிர் துறக்க எண்ணிய திலகவதியார் தம்பியைப் பாதுகாக்கும் பொறுப்புத் தமக்கு ஏற்பட்டதால் தம் எண்ணத்தை மாற்றிக் கொண்டார். தம்பிரானின் தண்ணருளே தமக்கையாரின் மனமாற்றத்திற்குக் காரணம் என்று மருள்நீக்கியார் மனமுருகிக் கூறுகின்றார். நாவுக்கரசரின் இந்நம்பிக்கை,

''எம்மை யாரிலை யானும் உளேனலேன்
எம்மை யாரும் இதுசெய்ய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரட்டினேற்கு
அம்மையாரைத் தந்தார் ஆரூர் ஐயரே'' (5,7:6)

என்ற திருவாரூர் பதிகப்பாடல் வழி வெளிப்படுகிறது.

நாவுக்கரசர் சமண சமயம் சார்ந்திருந்த காலத்தில் அமணர்களை ஆதரித்துத் தம் பொருளையும், காலத்தையும் வறிதே செலவிட்டார் என்பதனை,

''பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவுசெய்தேன்'' (4.39:7)

என்ற அவருடைய வாய்மொழி வாயிலாக அறிய முடிகின்றது. அவரே பின்னர் சமணம் துறந்து சிவ நெறி தழுவிய காலத்தில், வெண்ணீறணிந்த மேனியாரைத் தொழாது கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனாக ஆனேனே என்று அழுது புலம்புகின்றார். குண்டர்கள் குழுவிலிருந்து தம்மைப் பிரித்து ஆட்கொண்ட பேரருளாளன் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே என்று பெருமிதம் கொள்கின்றார். இதனை,

''என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்
டென்னையோ ருருவமாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்
டென்னுள்ளங் கோயிலாக்கி
அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண்
டருள் செய்த வாரூரர்'' (4.5:2)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகின்றது.

சூலைநோயால் அவதிப்பட்டதும், பின் அந்நோயின் கொடுமையிலிருந்து விடுபட்டதும், புறச்சமயப் படுகுழியிலிருந்து தம்மை மீட்டதற்கு மாமலையாள் மணவாளன் நடத்திய நாடகமே என்று நாவுக்கரசர் நம்பினார் என்பதற்கு அவருடைய பாடல்களே அகச்சான்றுகளாக அமைகின்றன.

## இறை அனுபவம்

மெய்யடியார்கள் ஆண்டவனிடம் ஆரா அன்பு கொண்டு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி உள்ளம் புளங்காகிதம் அடைந்து மேற்கொள்ளும் பக்தி நெறிகள் பலவகைகளில் அமைகின்றன. மெய்யன்பு கொள்ளுதல், ஆண்டவனின் திருவுருவப் பொலிவினை மனதில் நிறுத்துதல், அவன் பெருமை பேசுதல், அஞ்செழுத்து மந்திரத்தைக் கூறுதல், வழிபாடு செய்தல் என்று இறையருள் பெறுவதற்குரிய நெறிகளாக நாவுக்கரசர் தம் திருமுறைகளின் வாயிலாக எடுத்துக்காட்டுகின்றார்.

## மெய்யன்பின் சிறப்பு

பிறவியாகிய பெருந்துன்பத்தைக் கடப்பதற்கு அடியவர்கள் காட்டிற்குச் சென்று கடுந்தவம் மேற்கொண்டு உடலை வருத்தி வருந்தவேண்டும் என்பதில்லை. அன்பு கொண்டவர்களின் உள்ளத்தாமரையில் உறைபவன் உலக நாயகன். அவனை உள்ளமே கோயிலாக, ஊன் உடம்பே ஆலயமாக, அன்பே அர்ச்சனைப் பூக்களாகக் கொண்டு வழிபட்டாலே போதும் என்பது நாவுக்கரசர் காட்டும் நல்நெறியாகும். இதற்கு,

> "காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
> நேயமே நெய்யும் பாலா நிறைய நீ ரமைய ஆட்டிப்
> பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4.76:4)

என்ற அவருடைய பாடல் சான்றாக விளங்குகின்றது.

## அன்பே சிவம்

அன்பும் சிவமும் வேறுவேறல்ல. இரண்டும் ஒன்றே என்பது திருமூவரின் திருவாக்கு. சிவன் அன்பு வடிவமாகவே விளங்குபவன். அன்பெனும் வலைக்குள் அகப்படும் கருப்பொருள். இவ்வுண்மையினை,

> "துன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழுதாடிப்பாடும்
> அன்பலாற் பொருளுமில்லை ஐயன் ஐயனார்க்கே" (4.40:6)

என்ற பாடல் வரிகள் வழி நாவுக்கரசரும் நவில்கின்றார்.

அன்புருவமாகத் திகழும் தில்லைநாயகன் பக்தர்களுக்கு அருள் செய்பவன்; பாய்விடை ஏறவைப்பவன்; சிந்தையை ஒன்றச் செய்பவன், சிவமதே நினைய வைப்பவன் என்று ஏத்திப் பாடுகின்றார். அதனால் தான்

"அழலார் வண்ணத்தம்மானை அன்பினாலணைத்து வைத்தேனே"
(4.15:7)

என்றும்,

"மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி விட்டேனே"
(4.15:8)

என்றும் பெருமிதமாகப் பாடுகிறார்.

அன்பர்களுக்கு எளியவனாக இருக்கும் அவனே வஞ்சகர்களுக் கரியவனாகவும் இருக்கின்றான் என்பதனையும்,

"மெய்யர் மெய்ந்நின்றவர்க்கல்லாதவர்க்கென்றும்
பொய்யர் புகலூர் புரிசடை யாரே" (4.4:16)

என்ற வரிகள் வாயிலாக விளக்குகின்றார்.

**திருவுருவப் பொலிவினை நினைந்தேற்றல்**

இறைவனின் திருவுருவப் பொலிவினை மனதில் நினைத்து ஏத்துதல் அன்பர்கள் இறைவனிடத்துக் கொண்டுள்ள பற்றினைப் புலப்படுத்துவதாகும். நாவரசரும் நாகத்தை ஆபரணமாகப் பூண்ட நாயகனின் திருவுருவத் தோற்றத்தைப் பலவிதமாக வருணித்துப் பாடுகின்றார்.

"தேய்பொடி வெள்ளைபூசி யதன்மேலொர் திங்க
டிலகம் பதித்த நுதலர்
காய்கதிர்வேலை நீல வொளிமாமிடற்றர்
கரிகாடர்கா லொர் கழலர்" (4.8:3)

என்றும்,

"முடிவண்ணம் வானமின்வண்ணந் தம்மார்பின்
பொடிவண்ணந் தம்புகழூர்தியின் வண்ணம்
படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ் செஞ்ஞாயி
றடிவண்ண மாரூரற நெறியார்க்கே" (4.17:9)

என்றும் மான்மறிக்கையரை மனம் நிறைந்து ஏத்துகிறார்.

**வழிபாட்டு முறை**

நாள்தோறும் மறவாமல் மாதொரு பாகனை வழிபட்டு வந்தால் துன்பங்கள் நம்மைத் தொடராது என்பது அப்பர் எடுத்துரைக்கும் அறிவுரையாகும்.

'தன்னையடைந்தார் வினை தீர்ப்பதன்றோ
தலையாயயவர்தம் கடன்'

என்று இறைவனிடம் வினாத்தொடுக்கும் நாவரசர்,

"ஏற்றாயடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங்குவனெப் பொழுதும்" (4.1:1)

என்றும்,

"நெஞ்சம் முமக்கே யிடமா கனவத்தே
னினையா தொருபொழு துமிருந்தறியேன்" (4.1:2)

என்றும் தாம் இடையறாது இறைவனை எண்ணி மகிழும் நிலையினையும் எடுத்துரைக்கின்றார். வினைகளிலிருந்து விடுபட்டு வீடுபேறு அடைய விரும்பும் பக்தர்கள், தலையால் பலிதேடும் தலைவனைத் தம் தலையால் வணங்கவேண்டும்; எண்தோள் வீசி நின்றாடும் பிரான் தன்னைக் கண்களால் காணவேண்டும்; எரிபோல் மேனிப் பிரான் திறம் எப்பொழுதும் செவிகள் கேட்க வேண்டும்; பேய் வாழ் காட்டத்து ஆடும் பிரான் தன்னை வாய் வாழ்த்த வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார்.

மாலும் பிரமனும் காணுத்தற்கரிய சிவனின் திருவடிகள், பூவும் நீரும் கொண்டு வழிபடும் புண்ணியர்களுக்கு மிக எளிதாகக் கிட்டக் கூடியவை என்பதனையும் குறிப்பிடுகின்றார்.

"சலம் பூ வொடுதூ பமறந்தறியேன்
தமிழோ டிசைபா டன்மறந்தறியேன்" (4.1:6)

என்ற வரிகள் வாயிலாக எந்நாளும் இறைவனை வழிபடும் முறைகளை எடுத்துணர்த்துகின்றார்.

**ஐந்தெழுத்து மந்திரத்தின் மகிமை பேசுதல்**

'நமசிவாய' என்னும் திருமந்திரம் ஆதிமந்திரமாகவும், அரிய தமிழ் மந்திரமாகவும் போற்றப்படுகிறது. சைவ சித்தாந்தச் செந்நெறியில் உயர்வாகக் கருதப்படுகிறது. அதன் சிறப்பை "ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தால் அஞ்சும்" என்று பெரிய புராணம் பகர்கின்றது. திருநாவுக்கரசரும் ஐந்தெழுத்தின் சிறப்பினை,

"நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே" (4.11.1)

என்று பேசுகின்றார். நமசிவாய என்னும் நல்மந்திரத்தை ஓதினால் பாவங்கள் தொலையும், நன்றுணையாக அமையும்; நடுக்கம் விலகும்; நலம் மிகப்பெருகும்; நன்னெறி கிடைக்கும் என்று வலியுறுத்துகின்றார்.

பக்தி நெறி என்பது இறைவன் மீது கொண்ட நம்பிக்கை; பற்று; இறை உணர்வு. ஆண்டவன் அசைந்தால்தான் அகிலமும் அசையும். உலக நிகழ்ச்சிகள் அவன் அருட்செயலாலே நடைபெறுகின்றன என்று நாவுக்கரசர் நம்புகின்றார். இறைவன் மீது உண்மைப் பற்றுக்கொண்டு இடையறாது வழிபட்டு வந்தால் உயிர்கள் வினைகளிலிருந்து விடுபட்டு வீடுபேறு எய்தலாம் என்பது அவர் மேற்கொண்ட பக்திநெறியாகும் என்பதனை அவர் அருளிய நான்காம் திருமுறை வலியுறுத்துகிறது.

# 20. நாலாந் திருமுறையில் சமுதாயச் சிந்தனைகள்

ந. காந்திமதிலட்சுமி, தூத்துக்குடி.

பன்னிரு திருமுறைகள் என்பன பக்தியில் பழுத்த பைந்தமிழ்ச் செல்வங்கள். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓதியருளிய உயரிய பாக்கள். அவைகளில் நாலாந் திருமுறை மிகவும் உயர்ந்த பக்தி நலத்தை ஊட்டுவதுடன், காட்டுவதுடன் இவைகளுக்கு இடையில் சமுதாயச் சிந்தனைகளையும் அறங்களையும் கொண்டு நம் நெஞ்சை அள்ளும் பெருமையுடையது. இவற்றுள் நாலாந் திருமுறையின் ஆசிரியர் நாவுக்கரசர் என்று போற்றப்படும் அப்பராவார்.

அப்பர், மருள்நீக்கியார் என்ற பெயரில் சமண சமயத்தில் இருந்து ஆண்டவனால் ஆட்கொள்ளப் பெற்றவர். இவரின் சொற்றிறம், பாத்திறம் இவைகளைத் தமிழ் மக்கள் பெரிதும் பாராட்டியுள்ளார்கள்.

நாலாம் திருமுறை 113 பதிகங்களையும், 1069 பாடல்களையும் கொண்டதாக விளங்குகின்றது.

> ''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ
> வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
> பெருநாமச் சீர்பரவல் உறுகின்றேன் பேருலகில்
> ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணாமை உணராதேன்''

என்று சேக்கிழார் அவரின் வரலாற்றைச் சொல்ல முடியாத நிலையில் தயங்குகின்றார். ஒரு நூலைக் கொண்டு திருநாவுக்கரசரைப் புகழ முடியாது என்பது அவர்தம் கருத்தாகும். அந்த அளவுக்குப் பெருமை கொண்ட நாவுக்கரசரின் நாலாம் திருமுறையில் பல சமுதாயச் சிந்தனைகளைத் தந்துள்ளார்.

இறைவன் ஒவ்வொரு அடியார்களையும் வெவ்வேறு பொருள்களைத் தந்து ஆட்கொண்டான்.

> ஞானசம்பந்தருக்கு பாலையும்
> சுந்தரருக்கு ஓலையும்
> மணிவாசகருக்கு காலையும்

தந்த எம்பெருமான் சூலை என்னும் நோயைத் தந்தே நாவுக்கரசரை ஆட்கொண்டார். அந்த நோய் என்ன செய்தது எவ்வளவு வேதனையைத்

தந்தது என்பதற்குச் சான்றாக உள்ள பாடல் இந்த நாலாந் திருமுறையில் தான் உள்ளது.

'கூற்றாயினவாறு விலக்ககலீர்
கொடுமை பலசெய்தன நானறியேன்
ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத் துறை அம்மானே'

இந்தத் துயரில் சைவத்திற்கு வந்த நாவரசர் இறைவன் நினைவிலேயே உயர்ந்தார்.

'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையா தொருபோதும் இருந்தறியேன்'

இந்த வகையில் இறை உணர்வில் ஒன்றியிருந்த அவர் சமுதாயச் சிந்தனையில் மிக உயர்ந்து நிற்கின்ற காட்சியைக் காணலாம். சமுதாயம் ஆகட்டும் தனிமனித வாழ்வாகட்டும் நிச்சயம் கொள்கை குறிக்கோள் தேவை. இவை இல்லை என்றால் மனித வாழ்க்கை சமுதாயத்திற்குப் பயன்படாது. இதனைத் தம் சொந்த அனுபவத்தால் பேசுகின்ற அப்பர் நம் வாழ்விற்கு வேண்டிய குறிக்கோளை வலியுறுத்துகின்றார்.

''பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவோடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே''

(657)

திருக்கொண்டீச்வரனைப் பாடும்முகத்தான் இந்தப் பாடலை அருளித் தனிமனித வாழ்வாயினும் சரி சமுதாய வாழ்வாயினும் சரி நிச்சயம் குறிக்கோள் தேவை என்பதை நாவுக்கரசர் மிக அற்புதமாகவே விளக்கி யுள்ளார்.

இறை அனுபவத்தைக்கூட அவர் இயற்கை வழிபாடாக்கி இறைவன் காணும் இடத்தில் எல்லாம் காட்சி தருகிறான் என்பதனை வெளிப்படை யாகவே நமக்கு விளக்கியுள்ளார்.

மாதர்ப்பிறைக் கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந்து ஏத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது

காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன் (21)

இறைவன் புகழ்ப் பாக்களைப் பாடிச் செல்லும் அடியவர்கள் பின்னால் யானும் புகுவேன். உடல் தேய்ந்து, ஊர்ந்தும், புரண்டும் நைந்து செல்லுங் காலை, பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் சுவடுபடாமல் எழுகின்ற பெரும் பேற்றை அடையும்போது, பிடியும் களிறும் போன்று, அம்பிகையுடன் விளங்கும் ஈசனைக் கண்டேன். அப்பெருமானின் திருப்பாதங்கள் காண்பதற்கு இயலாதனவாகும். அதனை யான் காணும் பேற்றினை யுற்றேன் என்றும் அவர் இயற்கை வழிபாட்டையே புரட்சிகரமான முறையில் இறைவழிபாடாக ஆக்கியதை நாம் எண்ணி எண்ணி மகிழ வேண்டியுள்ளது.

சமயப் பணிகள் முழுக்க முழுக்க சமயச் சார்புடைய ஒன்றாகும். அது சமுதாயத்திற்கே பயன்பட வேண்டும். திருநாவுக்கரசர் சமண மதத்தில் இருந்தபோது பெருமடத்தின் தலைவராகவே இருந்தார். சைவத்திற்கு வந்த பின் அத்தகைய அமைப்பில்லையே என்று கருதி நாவரசர் சைவம் தழைக்கவும், சைவப்பணி ஆற்றவும் ஒரு திருமடத்தை நிறுவி சமுதாயப் பணி ஆற்ற எண்ணினார். அந்த மடத்தை எங்கே நிறுவுவது என்று எண்ணிப் பார்த்தே 'திருப்பூந்துருத்தி' என்னும் ஊரில் அந்தத் திருமடத்தை அமைக்கலானார். சமுதாயச் சேவைக்கே அதனைப் பயன்படுத்த எண்ணினார். சேக்கிழார் அதனை,

"திங்களும் ஞாயிறு தோயும்
திருமடம் ஆங்கொன்று செய்தார்"

என்று குறிப்பிடுவார். சமயப் பணியைச் சமுதாயப் பணியாக மாற்றி 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்ற குறிக்கோளைக் கொண்ட அப்பர் பெருமான் எழுப்பிய மடமே, சமுதாயப் பணிக்காக முதன் முதலில் 7-ம் நூற்றாண்டில் தோற்றுவித்த திருமடமாகத் திகழ்கின்றது. திருப்பூந்துருத்தி என்னும் பதியில் அவர் தங்கியபோது பாடியுள்ள பாசுரங்களில் இதனை அறியலாம்.

இன்றைய சமுதாயத்தில் தற்போது தம் குறை விளம்பல் போன்ற சமயப் பேருணர்வை நாம் காண முடிவதில்லை. நாவுக்கரசர் அதனைச் சுட்டிக் காட்டி மனித வாழ்வின் திருத்தத்திற்கு வழிகாட்டியுள்ளார். தம் குறையை எண்ணிப் பார்த்து, அதனை நீக்கிக் கொள்ளல் பெரிதும் தேவை. தனிமனித மனத்தில் மாசுகள் அழிந்ததென்றால் சமுதாயம் செம்மையுறும். ஆனால் தம் குறையை எத்தனை பேர் சொல்லுகின்றார்கள்.

"நீதியால் வாழ மாட்டேன் நித்தலும் தூயேன் அல்லன்
ஓதியும் உணர மாட்டேன் உன்னையுள் வைக்க மாட்டேன்

**சோதியே சுடரே உன்றன் தூமலர்ப் பாதம் காண்பான்**
**ஆதியே அலந்து போனேன் அதிகை வீரட்ட னீரே"** (261)

என்று பேசும் அப்பரின் உண்மையான நெஞ்சத்தை நாம் நன்கறிய முடியும். செய்வன செய்து தவிர்ப்பன தவிர்த்து தூய்மையாக வாழ்கின்ற வாழ்க்கை முறை எனக்கு அமையவில்லையே என்று வருந்தும் அப்பரின் வாழ்வும் சமுதாயத்தின் போலிமை வாழ்க்கையை வெளிப்படுத்துவதாகும். பல குறைகள் இருப்பினும் அதனை மூடிமறைப்பதே மனித இயல்பாக இருக்க நம் அப்பரடிகள் அதனையும் வெளிக்காட்டி நம்மை ஈர்த்திருக்கின்றார்.

தொண்டின் மூலமே ஆண்டவனை அடைய முடியும் என்ற நாவுக்கரசர் அமுத மொழிகளில் எல்லாம் இறைநலமும் இறைமணமும் வீசுவது போல சமுதாய உணர்வும் உள்ளதை நாம் நன்றாகவே காண முடிகிறது.

உழவாரப் பணியை அவர் இறுதி வரையில் கொண்டிருந்த பாங்கும், தொண்டு செய்வதில் ஏற்றத் தாழ்வைக் காணாத நிலையில் திருப்பூந்துருத்தி வந்த சம்பந்தர் பல்லக்கைச் சுமக்கச் சென்ற மாண்பையும் நினைக்கும் போது நாவரசர் தொண்டிலும், எளிமையிலும் கொண்டிருந்த மாண்பினை நாம் நன்கறிய முடியும்.

இறைவனுக்குச் செய்கின்ற வழிபாட்டிலும் இறை உணர்விலும் கூட சமுதாயப் பிரிவு எல்லோருக்கும் அமைவது என்பது கடினமே. ஆனால் நாவுக்கரசர் வழிபாடு என்பது மனித குணங்களை மேம்படுத்தும் பெற்றியில் அமைவதே தவிர அது சடங்கல்ல என்பதைச் சமுதாயத்திற்கு இந்தத் திருமுறை மூலம் நன்கு உணர்த்தியுள்ளார். எது வழிபாடு பூக்கொண்டும், பாக்கொண்டும் செய்வதா? எது வழிபாடு என்பதை நம் அப்பர் புரட்சிகரமாகவே கூறுகின்றார்.

**காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக**
**நேயமே நெய்யும் பாலா நிறைய நீர்அமைய வாட்டிப்**
**பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே** (739)

என்ற பாடல் அற்புதமான புரட்சிப் பாடலாகும். இவ்வுடம்பைக் கோயிலாகவும், நறுமண நினைவுகளைக் கொண்ட மனத்தை அடிமையாகவும், வாய்மையைத் தூய்மையாகவும் வைத்து, மனத்தின் மணியாக மேவும் ஆன்மாவை இலிங்கமாகப் பாவித்து, நேயத்தை நெய்யும் பாலாய் நிறைய அமைத்துப் பூசித்து இறைவனை ஏத்தினேன் என்கிறார். உயிர்க்கு உயிராகிய இறைவனை மனமணி இலிங்கமாக ஓதப் பெறலாம். இது அகப்பூசனை. இதனை அகமலராகிய கொல்லாமை, அருள், ஐம்பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை, அன்பு, அறிவு ஆகியன கொண்டு ஏத்துதனும் ஆயிற்று என்று சமுதாயச் சிந்தனைக்கு வித்திடுகின்றார். இறைவனை அடைய

நேயமிகு தொண்டே வேண்டும் என்பதை அவர் பல பாடல்களில் நினைவுபடுத்துகிறார்.

**வஞ்சகப் புலைய னேனை வழியறத் தொண்டில் பூட்டி**
**அஞ்சல்என்று ஆண்டு கொண்டாய்**

என்கிறார். இறைவனை இந்த வகையில் பூசிப்பதே முறைமை என்பதை அவர் விளக்குவதன் நோக்கம் பூசனை முறைகளைவிட புரிகின்ற தொண்டே முக்கியம் என்பதை நாவுக்கரசர் முன்னைய திருமுறைகளில் விளக்கியது போன்றே இந்தத் திருமுறையிலும் விளக்குவது குறிப்பிடத் தக்கதாகும்.

இறைவனை அடைய எந்த மொழியையும் விட தமிழும் தமிழிசையும் உயர்ந்தது என்பதை நிறுவி தமிழ் அருச்சனைக்கு வித்திட்டவர் நாவுக்கரசரே ஆவார்.

**சலம்பூ வொடு தூபம் மறந்தறியேன்**
**தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்**
**நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்**
**உன்நாமம் என்நாவில் மறந்தறியேன்.**

என்று அவர் கூறும்போது ஆண்டவனை அடைய தமிழ் இசைப்பாடல்கள் பாலம் போன்றவை ஆண்டவனோடு நம்மை கொண்டு சேர்த்து இணைத்து வைக்கின்றவை என்று அவர் ஏழாம் நூற்றாண்டில் கூறியதை நாம் இன்னும் புரிந்து கொள்ளாமல் உள்ளோம்.

அப்பரின் உள்ளத் துறவில் எல்லாம் அகன்றாலும் தமிழ்ப்பற்றும், இசைப்பற்றும் அவர் நெஞ்சத்தில் நீங்காமல் நிழலாடி நின்றதை நாம் எண்ணி எண்ணி இன்புறலாம். நாவுக்கரசர் ஏனைய திருமுறைகளில் பாடியதைவிட சமுதாயச் சிந்தனைப் பாக்கள் அதிகம் நாலாந் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. வழிபாடு, பூசனை முறை இவைகளில் கொள்ள வேண்டிய மாற்றங்களை மிகவும் துணிவாகவே விளக்கியுள்ளார். சமுதாயச் சீர்திருத்தம் என்று பார்க்கின்றபோது சாதிமத கோத்திரம் என்பவைகளை எல்லாம் வெறுத்த அவர் மனித குலத்தை ஒன்றாகவே கருதுகின்றவராகவே காட்சி அளிக்கின்றார்.

# 21. சமுதாய வாழ்வியல் நெறிகள்

வேல். கார்த்திகேயன், சென்னை.

'சமுதாயம்' என்பது மக்கள் தொகுதிகளின் இணைப்பு. சார்ந்து வாழும் இயல்புடைய மனிதர்கள் பலர், சேர்ந்து இயங்கும் மனித சமூகம் தம் இணைப்பில் சிக்கல் வராமல் வாழ வேண்டும். சமுதாயத்தினர் ஒவ்வொருவரும் வாழவேண்டிய வழிமுறைகளை ஒத்த கருத்துடன் ஏற்றுப் பின்பற்றி நடத்தல் வேண்டும். அத்தகைய சமுதாயமே சிறந்த சமுதாயமாகத் திகழ்வதோடு, அனைவரும் இன்புற்றிருக்கும் நிலையினையும் பெறும். அத்தகைய சமுதாயச் செயல்முறைகளைக் காலந்தோறும் அறிஞர் பலர் தோன்றி நெறிமுறைகளாகவும், அறிவுரைகளாகவும் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர். அவர்களுள் திருநாவுக்கரசர் குறிப்பிடத்தக்கவர் ஆவார்.

திருநாவுக்கரசர் தாம் காண விழைந்த சமுதாயத்தைத் தாம் பாடிய தேவாரத்தில் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். தாம் வாழ்ந்த சமுதாயம் திருத்த வேண்டிய சூழ்நிலையில் இருப்பதை உணர்ந்தார். சமுதாயத்தை நன்னெறிப்படுத்த விரும்பி அறிவுரைகளை எடுத்துரைத்த நாவுக்கரசர் தாமும் அவ்வழியே நடந்து வெற்றியும் கண்டார். பிறருக்கு எடுத்துக் காட்டாகவும் திகழ்ந்தார். ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதனை உணர்ந்தும், இணைந்தும் வாழ்வதே சமூகம் எனலாம். 'ஒருவன் மற்றவனை உணர்தலே சமுதாயம்' என்று அ.மு.ப. கூறுவார். சமுதாய வாழ்வியல் குறித்த கருத்துக்களைக் கீழ்க்கண்டவாறு நாவுக்கரசர் எடுத்தியம்பியுள்ளார்.

### பயனுள்ள வாழ்க்கை வாழ்தல்

பலர் கூடி வாழும் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் பயனுள்ள வாழ்க்கை வாழ்தல் வேண்டும். வாழ்கின்றபோது இயற்கையினால் பாதிப்பும், செயற்கை நிலையில் துன்பங்களும், எதிர்பாராத வருத்தங்களும் ஏற்பட நேரிடும். இவற்றைக் கண்டு அஞ்சி, மனந்தளருதல் கூடாது. மனித வாழ்க்கை துன்பமயமானது. இவ்வாழ்வின் இறுதியில் துன்பம் நேருவது உறுதி. பயனற்ற செயல்களில் ஈடுபட்டு வாழ்வை வீணாக்காமல் இறை நினைவுடன் மற்றவர்க்குப் பயன்படும் வகையில் நம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும். இல்லையென்றால் இறந்த பிணம் என்று பேரிட்டு

ஊர் மக்களால் வெறுக்கப்படும் நிலைமை ஏற்படும் என்று பழி பாவங்களுக்கு அஞ்சாத மக்களுக்கு அறிவுறுத்தி நல்வழிப்படுத்துகின்றார் நாவுக்கரசர்.

நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்!
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே (5-90-4)

''நாணுதல் என்பது பழிபாவங்களுக்கு அஞ்சுவதாகும்,
கருமத்தால் நாணுதல் நாணு''

என்பார் திருவள்ளுவர். ஒவ்வொருவருக்கும் இறப்பு வருவது உறுதி என்பதை,

''...................... இவ் வவனியிற் சீவ னியாவும்
நிச்சய மிறத்த லல்லா லிருப்பவை நிலத்தி னுண்டோ''

எனச் சீறாப்புராணம் எடுத்துரைக்கும். ஈன்ற தாயே பிணமென்று அருவருத்து ஒதுக்கும் நிலை நேரிடும் என்பதனை ''என்பெற்ற தாயரும் என்னைப் பிணம் என்று இகழ்ந்து விட்டார்'' என்ற பட்டினத்தாரின் பாடலடிகள் புலப்படுத்தும்.

இன்பமயமான வாழ்வில் மரணம் வருவதற்கு முன்னால் வழிபாடு செய்க என வலியுறுத்திக் கூறுகின்றார் நாவுக்கரசர்.

**உலகநடை பேற்றல்**

ஆணும், பெண்ணுமாகச் சேர்ந்து வாழும் சமுதாயச் சூழலில் ஆண்களைப் பெண்களும், பெண்களை ஆண்களும் மதித்து வாழுதல் வேண்டும். அழகு, செல்வம், உடற்பொலிவு முதலியவற்றின் காரணமாக ஒருவர் மற்றவரை ஏளனமாகக் கருதி இழிவுபடுத்தக் கூடாது. அவ்வாறு இழிவுபடுத்தினால் ஊர்க்காவலர்களால் தண்டனைக்குள்ளாவர். இதனை,

எழுது கொடியிடையார் ஏழை மென்தோள்
இளையார்கள் நம்மை யிகழா முன்னம்
பழுது படநினையேல் (6-25-2)

வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்
ஓடி வாழ்வினை யுள்கநீர் நாடொறும்
...............................................
பாடி காவலில் பட்டுக் கழிதிரே. (5-78-2)

ஆண்கள் பெண்களைக் கேலியும், கிண்டலும் செய்து வாழ்வது இக்காலத்தில் மட்டுமல்லாமல் அக்காலத்திலும் இருந்துள்ளது என்பதை நாவுக்கரசர் பாடல்கள் வழி அறிய முடிகிறது. மேற்காணும் பாடல்வழி ஆண்களைப் பெண்கள் மதித்து வாழ்தல் வேண்டும் என்னும் வாழ்வியல் நெறி பெறப்படுகிறது.

**மூத்தோர்சொல் போற்றல்**

சமுதாயத்தில் அறிவாலும் அனுபவத்தாலும் சிறந்திருக்கும் சான்றோர்கள் எடுத்துரைக்கும் நெறிகளைப் பின்பற்றி வாழுதல் வேண்டும். இல்லையேல் துன்பம் ஏற்படும். இதனைத் தமிழ் மூதாட்டி ஔவையார்,

**மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்**
**மேன்மக்கள் சொல் கேள்**

எனக் குறிப்பிடுவார்.

மூத்தோர் சொல் கேளாமையால் அல்லலுற்று வருந்தியமைக்கு நாவுக்கரசர் வாழ்வே சான்றாகும்.

**காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்**
**கரைநின்றவர் கண்டுகொள் என்றுசொல்லி**
**நீத்தாய கயம்புக நூக்கியிட**
**நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்.** (4-1-5)

மூத்தோரின் அறிவுரைகளைக் கேட்டு நடந்தால் வாழ்க்கை சிறப்படையும் என்பது பெறப்படுகிறது.

**எல்லா வகையிலும் பிறர்க்கு உதவுதல்**

அன்பு - அருள் - அறம் ஆகிய மூன்றும் சேர்ந்த சொற்றொடரே அன்பு, அருளறம் (அ) பெருங்கருணையாகும். இதனை வடமொழியில் தயாமூல தன்மம் என்பர். முதன்முதலில் இச்சொல்லாட்சியைப் பயன்படுத்திச் சமுதாயத்தில் செயல்முறைப்படுத்தியவர் நாவுக்கரசர் ஆவார். அப்பாடலடிகள்,

**சலங்கெடுத்துத் தயாமூலத் தன்மம் என்னுந்**
**தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்**
**நலங்கொடுக்கும் நம்பியை** (6-20-6)

**தயாமூலத் தன்மவழி யெனக்கு நல்கி**
**மனந்திருத்தும் மழபாடி வயிரத் தூணே.** (6-40-6)

மேற்காணும் அன்பு, அறம், அருள் மூன்றும் சேர்ந்த சொல் வடிவம் தயாமூலத்தின் தன்மம் என்பதையும், மனிதர்களாகப் பிறந்த நாம் சீரிய வாழ்வு வாழ்ந்திடத் தயாமூல தன்ம நெறியினைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதையும் இதன் வழி அறிய முடிகிறது.

சமுதாயத்தில் வாழ்பவர்கள் அன்பு, அருள், அறம் ஆகிய வற்றைக் குறிக்கும் தயாமூல தன்ம நெறியைப் பின்பற்றி வாழ்வதே சிறந்த வாழ்வாகும் என்னும் வாழ்வியல் நெறி பெறப்படுகிறது.

**கொடைத் தன்மையை வளர்த்தல்**

சமுதாயத்தில் பொருள்வளம் உடையவர்கள் அடிப்படைத் தேவை களுக்கே இல்லாத ஏழைகளுக்குக் கொடுத்து உதவுதல் வேண்டும். ஈகையே உயிருக்குச் சிறந்த ஊதியம் என்பார் வள்ளுவர். அவ்ஈகை யுள்ளும் பசியினால் வாடித் துன்புறுவார்க்கு இடும் உணவு - இடும் உதவிதான் சிறந்தாகும்.

ஏழையர்க்கு உதவுவதற்காக இரக்கக் குணம் படைத்தவர்களையும், அவ்விரக்கக் குணத்தார்க்குத் தன் திருவருளையும், ஈகை புரியாதார்க்குக் கடு நரகத்தையும் இறைவன் ஏற்படுத்தியுள்ளான் என்பதை நாவுக்கரசர் கீழ்வரும் பாடல்களால் குறிப்பிடுகின்றார்.

**இரப்பவர்க் கீய வைத்தார் ஈபவர்க் கருளும் வைத்தார்**
**கரப்பவர் தங்கட் கெல்லாங் கடுநர கங்கள் வைத்தார்**
(4-38-10)

**......... இரப்பவர் தங்கட் கென்றும்**
**கொடையிலேன் கொள்வதே நான் .........** (4-69-7)

**பொசியினால் மிடைந்துபுழுப் பொதிந்த போர்வைப்**
**பொல்லாத புலாலுடம்பை நிலாசு மென்று**
**பசியினால் மீதூரப் பட்டே யீட்டிப்**
**பலர்க்குதவ லதுவொழிந்து ..........** (6-61-6)

ஈகை புரியாத நாள் பயனற்ற நாளாகும் என்பதைக் குறிப்பிடும் பாடலடிகள் :

**.... இரப்பதே ஈய மாட்டேன்**
**என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே.** (6-95-9)

சமுதாயத்தில் வாழ்ந்தவர் யாராக இருந்தாலும் வறியவர்க்கு உதவி செய்து வாழ்தல் வேண்டும் என்பதும் உதவி செய்த நாளே பயனுடைய நாளாகும் என்பதும் ஆகிய வாழ்வியல் நெறிகள் பெறப்படுகின்றன.

**சமய நல்லிணக்கத்தை உருவாக்குதல்**

சிவபெருமானே தனிப்பெருந் தெய்வமாவார். அவரை வணங்கும் சமயம் சைவ சமயமாகும். சைவ சமயத்தைச் சார்ந்து அதன் கருத்துக்களை ஓரளவுக்கு ஏற்று விளங்கும் சமயங்கள் பலவாகும். வைணவர்களையும், பாசுபதம், மாவிரதம், காபாலிகம் முதலான புறச்சமயத்தார்களையும் சைவ சமயத்தவர்களைப் போலவே கருதிப் போற்றியுள்ளார் நாவுக்கரசர். இவை குறித்து, நாவுக்கரசர் கூறும் பாடல்களாவன :

காலதிர் கழல்க ளார்ப்பக் கனலெரி கையில் வீசி
ஞாலமுங் குழிய நின்று நட்டம தாடு கின்ற
மேலவர் முகடு தோய விரிசடை திசைகள் பாய
மாலொரு பாக மாக மகிழ்ந்தநெய்த் தான னாரே (4-37-7)

வெவ்வேறாய் இரு மூன்று சமயமாகிப் புக்கானை
எப்பொருட்கும் பொதுவானானை (6-50-7)

ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்.
விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும். (4-60-9)

அறுவகை சமயம் வைத்தார் (4-33-6)

சமயமவை ஆறினுக்கும் தலைவன் தான்காண் (6-65-7)

சமயமே லாறுமாகித் தானொரு சுயம்புவாகி (4-45-5)

பல்வேறு சமயங்கள் கருதி யானை (5-94-5)

ஆறு சமயத்தவரை தேற்றுந் தகையன

........................................................

இன்னம்பரான் தன் இணையடியே (4-100-7)

மேற்காணும் பாடல்களில் இறைவன் அடியார்களின் நன்மை கருதி, பல சமயங்களையும் தோற்றுவித்துத் தானே தலைவன் ஆனான் என்பதை உணரலாம்.

இக்கருத்துக்களின் வழி சர்வ சமய சமரசம் வேண்டும் என்னும் நெறி வெளிப்படுகிறது.

**சமுதாய நன்மைக்காக வேள்வி செய்தல்**

சமுதாயத்திற்கு வேண்டிய நன்மையை ஆக்குவதற்காகவும் தீமையைப் போக்குவதற்காகவும், வேள்வி செய்யும் வழக்கம் அக்காலத்தில் இருந்துள்ளது. சான்றோர்கள் பொதுநல நோக்குடன் முத்தீ வேள்விகளை நிகழ்த்தி வந்துள்ளனர். மனிதர்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதோடு, சமுதாயத்திற்கு வேண்டிய மழை முதலான இயற்கைச் செல்வம் வேண்டி வேள்வி நிகழ்த்தியுள்ளனர். இந்தச் செய்தியை நாவுக்கரசர்,

விண்தங்கு வேள்வி வைத்தார்
வெந்துயர் தீர வைத்தார் (430 - 6)

காமியஞ் செய்து காலங் கழியாதே
ஓமியஞ் செய்தங்குள்ளத் துணர்மினே (5 - 22 - 8)

எனக் குறிப்பிடுகின்றார்.

உலக நன்மையின் பொருட்டு, தம் தந்தையார் நிகழ்த்திய வேள்விக்காக ஞானசம்பந்தர் திருவாவடுதுறை சிவபெருமானிடமிருந்து ஆயிரம் பொன் பெற்ற செய்தியை,

**காயிரும் பொழில்கள் சூழ்ந்த**
**கழுமல வூரர்க் கம்பொன்**
**ஆயிரங் கொடுப்பர் போலும்**
**ஆவடுதுறைய னாரே** (4 - 56 - 1)

என நாவுக்கரசர் எடுத்துரைக்கின்றார். தன்னல நோக்கமின்றி, பொதுநல நோக்குடன் வேள்வி புரிதல் வேண்டும் என்னும் வாழ்வியல் நெறி உணர்த்துப் பெறுகின்றது.

**சாதி வேறுபாடுகள் கூடாது**

சமுதாயத்தில் சாதி, மதம், இனம் முதலானவற்றின் அடிப்படையில் மனித வாழ்க்கை செயல்பட்டது. நீதி இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்தியும், சாதி வேறுபாடுகளை நீக்காமல் வாழ்ந்து வந்த மக்களைச் சமய நெறி நின்று சமுதாயத்தைத் திருத்த முற்பட்டார் நாவுக்கரசர். இவ்வாறு பல முறை கூறியும் திருந்தாத மக்களை நோக்கிச் 'சழக்கர்காள்' என்று விளிக்கின்றார்.

**சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்**
**கோத்தி ரமுங்குல முங்கொண் டென்செய்வீர்**
**பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்** (5-60-3)

இன்றைய காலத்தைப் போல, அன்றைய காலத்திலும், சாதி மத பேதங்களும் அவற்றால் உயர்வு தாழ்வுகளும் நிகழ்ந்துள்ளன என்பதனையும் அவற்றை ஒழிக்கும் புரட்சியாளராக அப்பரடிகள் திகழ்ந்துள்ளார் என்பதனையும் இப்பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

வாழும்போது மக்களிடையே சாதி மத பேத உணர்வுகள் வரக் கூடாது என்ற கருத்து ஆணித்தரமாக இங்கு வலியுறுத்தப் பெறுகின்றது.

மேற்காணும் கருத்துக்களால் தொண்டு புரிவதால் சமுதாய முன்னேற்றமும், அதனைச் செய்பவர்க்குத் தன்னிறைவும் ஏற்படுகிறது. நல்லன, தீயன இன்னவை எனச் சமுதாயம் கருதுவதை உணர்ந்து அதன்படி ஒழுகுவது சிறந்த வாழ்வாகும். ஆண்களும், பெண்களும் சேர்ந்து வாழும்போது தங்களுக்குள் மதித்து வாழ்தல் வேண்டும். மூத்தோரின் அறிவுரைகளைக் கேட்டு நடந்தால் வாழ்க்கை சிறப்படையும். சமுதாயத்தில் வாழ்பவர்கள் அன்பு, அருள், அறம் ஆகியவற்றைக் குறிக்கும் தயாமூலத் தன்ம நெறியைப் பின்பற்றி வாழ்வதே சிறந்த வாழ்வாகும். வாழும்போது மக்களிடையே சாதி மத பேத உணர்வுகள் வரக் கூடாது என்னும் வாழ்வியல் நெறிகள் அறியப் பெறுகின்றன.

# 22. தமிழிசையும் நாவுக்கரசரும்

சு. கானமூர்த்தி, சீர்காழி.

**தமிழக வரலாறு, தமிழிசை இருண்ட காலம்**

இடைக்காலத்தில் கி.பி. 3-ம் நூற்றாண்டு முதல் 6-ம் நூற்றாண்டு வரை தமிழக வரலாற்றுக்கும், இசைக்கும் மிகவும் இருண்ட காலமாகக் கருதப்படுகின்றது. ஏனெனில், சமயங்களிடையே இருந்த வெறுப்பு உணர்வும், போட்டியுமே காரணமாகும். அக்கால கட்டத்தில்தான் சமண மதம் மிகவும் சிறப்புடன் பிரதானமாகத் திகழ்ந்தது. சமண மதத்தைச் சேர்ந்தவர்களும், ஆதரித்த மக்களும் தமிழ் மொழியையும், இசையினையும் வெறுத்து ஒதுக்கினார்கள். இதன் காரணமாகப் பல நூல்கள் அழிந்து போனது.

**இசைத்தமிழ் மலர்ச்சி**

சமண மதம் பரவியிருந்த காலத்தில், சைவ மதத்தைத் தளிர்க்கச் செய்யும் விதத்தில், சமண மதத்தின் வளர்ச்சியினையும் மீறி இறைவனின் கருணையால், இறைவனின் தூதர்களாகத் தமிழ் மொழியினையும், தமிழிசையினையும் வளர்க்க கி.பி. 6,8,9-ஆம் நூற்றாண்டுகளில் பல பெரியோர்கள் அவதரித்து, தங்களின் இறைப்பணியைச் சமுதாயத்திற்கு ஆற்றியது மிகவும் போற்றுதலுக்குரியதாகும்.

இக்காலகட்டத்தில் தான் தேவாரம், திவ்வியப் பிரபந்தங்கள் போன்ற பக்திப்பாக்கள் நாயன்மார்கள், ஆழ்வார்களால் பாடப்பெற்று பிரசித்தியுடன் விளங்கின. இதன் வாயிலாக, சைவ மதம், வைணவ மதம் தளிர்விட்டுத் தழைத்தோங்கியது. இப்பாக்கள் அனைத்தும் இறைவனின் உருவ அழகிலும், குண நலன்களிலும் உள்ளத்தைப் பறிகொடுத்து இறைவனுடன் இணைவதற்கு விரும்பும் உணர்ச்சிகளின் வெளியீடாகவே இருந்துள்ளதை உணரலாம். முக்கியமாகத் தேவாரப் பதிகங்கள் சைவ மதத்தினராலும், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் வைணவ மதத்தினராலும் இன்றும் போற்றப்பட்டு பொக்கிஷமாகக் கருதுவதைக் கண்கூடாகக் காண்கிறோம். இனிவரும் தலைமுறையினரும், போற்றிப் பாதுகாக்க வேண்டும்.

**தேவாரம்**

நமது இந்திய இசையில் இராகங்களில், தாளங்களின் வளர்ச்சியில் தேவாரப் பதிகங்களில் பயன்படுத்திய பண்கள், தாள அமைப்புகள்தான்

பிற்காலத்தில் ஆதாரங்களாக இருந்துள்ளது என்பது இசை ஆராய்ச்சி யாளர்களின் ஒருமித்த முடிவு ஆகும். இவ்வளவு சிறப்புகளைப் பெற்ற "தேவாரப் பதிகங்களை" இயற்றியவர்கள் இசைத் தமிழில் வல்லவர்களாக விளங்கிய நாயன்மார்களாகிய திருஞானசம்பந்தர், அப்பர் என்கின்ற நாவுக்கரசர் பெருமான், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவர்களாவர். இவர்கள் மூவருமே சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைக் குறித்து ஒவ்வொரு தலங்களுக்கும் யாத்திரை சென்று உள்ளம் உருகக் கனிந்து பாடிய தெய்வத் தன்மை பொருந்திய பாடல்களே அவை. ஒவ்வொரு தலங்களுக்கும் செல்லும்போது வழியில் பல அற்புதங்களைச் செய்தும், சைவ சமயத்தைப் பரப்பியும் அனைத்து மக்களாலும் போற்றப்பட்டார்கள்.

தேவாரப் பாக்கள் (பதிகங்கள்) அனைத்தும் இசைத் தமிழில் அமைந்த முதல்நடை (முதனடை), வாரம், கூடை, திரள் என்ற நான்கு வகைகளில் "வாரம்" என்ற பாடல் வகையைச் சேர்ந்ததாகும். "வாரம்" என்ற பாடல் வகையை அக்கால கட்டத்தில் "கீதம்" என்று அழைத்து வந்துள்ளதாக ஆராய்ச்சியாளர்கள் ஆய்வில் கூறியுள்ளார்கள்.

"வாரம் பாடுதல்" என்பது ஒன்றாம் காலம், இரண்டாம் காலம் பாடுதல் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. தொல்காப்பியத்தில் வாரம் பாடுதல் என்பது முதல் நடையில் பாடி பின்னர் இரண்டாம் நடையாகிய வார நடையில் பாடுதலாகும். இதனை இசையில் வல்லுனனாக விளங்குபவன், பகுப்புணர்வு தவறுகள் நேராமல் பாடுதல் வேண்டியது மிகவும் முக்கியம் என்று கூறப்பட்டுள்ளது.

**"முதல் வழியாயினும் யாப்பினும் சிதையும்**
**வல்லோன் புணரா வாரம் போன்றே"**

என்ற தொல்காப்பிய செய்யுள் மூலம், வாரம் புணர்க்கும் முறையானது மிகவும் தொன்மையானது என்றும், பாடுவதினாலேதான் "தேவாரம்" எனப் பெயர் பெற்றது என்றும், வாரம் பாடும் இத்தகையவை என்றும் கூறப்பட்டுள்ளது. தேவாரம் (தே+ஆரம்) என்றால், தேவர்களுக்கு மாலையாக சூட்டப்பட்டது என்றும் பொருள் கொள்ளலாம். திருஞானசம்பந்தர் இயற்றிய பதிகங்கள் திருக்கடைக்காப்பு என்றும், அப்பர் என்ற திருநாவுக்கரசர் இயற்றிய பதிகங்கள் தேவாரம் என்றும், சுந்தரமூர்த்தி நாயனார் இயற்றிய பதிகங்கள் திருப்பாட்டு என்றும் அழைக்கப்படுகிறது. இப்பதிகங்களனைத்தும் தலயாத்திரையின்போது இறைவனைப் போற்றி உடனே இசையுடன் பாடப்பட்ட பதிகங்களாகும்.

### திருநாவுக்கரசரின் இளம்பருவம்

கி.பி. சுமார் 574-ம் ஆண்டு திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில், பெற்றோர் புகழனாருக்கும், மாதினியாருக்கும் இரண்டாவது குழந்தையாக

அவதரித்தார். மூத்தவராக தமக்கை திலகவதியார் அவதரித்தார். இவர்களின் குடும்பம் வேளாளர் மரபில் குறுக்கையர் குடியைச் சேர்ந்ததாகும். திருநாவுக்கரசரின் தமக்கையான திலகவதியாரை மணம்புரிய கலிப்பகையார் என்னும் சேனாதிபதிக்குத் திருமணம் செய்ய நிச்சயித்திருந்தனர். ஆனால், எதிர்பாராத விதமாக நிச்சயித்திருந்த கலிப்பகையார் போரில் உயிர் நீத்த செய்தி கேட்டு, திலகவதியாரும் உடனே மனமுடைந்து உயிர்துறக்க முற்பட்டபோது, சகோதரனாகிய மருள்நீக்கியாரும் தானும் உயிர்துறக்க முற்பட்டதால், தமக்கையார் மனம் திருந்தி சகோதரனுக்காக வாழ முடிவு செய்தார். மேலும், துறவு பூண்டு தவ ஒழுக்கத்தை மேற்கொண்டார். திலகவதியாரே, மருள்நீக்கியாருக்குக் குருவாக இருந்து கல்வியிலும், கலைகளிலும் தேர்ச்சியடையச் செய்தார். இதனால், அனைத்துத் திறமைகளையும் பெற்று சிறந்து விளங்கினார்.

### நாவுக்கரசரின் சமணப் பற்று

தமது தமக்கை திலகவதியார் சைவ சமயத்தின் மீது மிகுந்த நம்பிக்கையும், அளவிலா பற்றும் கொண்டவர். ஆனால், இளமையிலேயே மருள்நீக்கியார் சமண மதத்தின்பால் ஈர்க்கப்பட்டு, சமண மதத்தில் சேர்ந்தார். இதனால், தமக்கையை விட்டுப்பிரிந்து வாழ்ந்தார். தமக்கையார் மருள் நீக்கியாரை எண்ணி மிகவும் வருந்தினார். சமண சமயத்தில் பற்றுக் கொண்ட மருள்நீக்கியாருக்கு, தருமசேனர் என்ற பட்டம் கிடைக்கப் பெற்றது.

### மருள்நீக்கியாரின் சூலை நோய்

சூலை நோயின் காரணமாக வயிற்று வலியால் மிகவும் அவதிப் பட்டார் திருநாவுக்கரசர். எந்தவிதமான சிகிச்சைகள் அளித்தும் பலனளிக்க வில்லை. எனவே, தமது தமக்கை திலகவதியாரிடம் உதவியை நாடிச் சென்றார். சகோதரனை, சூலை நோய் நீங்க, திருவதிகை வீரட்டனேசுவரர் திருக்கோவிலுக்கு அழைத்துச் சென்று இறைவனை பிரார்த்தித்தார்.

அச்சமயம், திருநாவுக்கரசர் கொல்லிப்பண்ணில் அமைந்த (நவரோசு இராகம்)

"கூற்றாயினவாறு விலக்ககலீர்
  கொடுமை பலசெய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிரவும் பகலும்
  பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றினகம் படியே
  குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதிகைக் கெடில
  வீரட்டானத் துறையம்மானே!"

என்று பத்துப் பாடல்களைப் பாடி, சூலை நோய் நீங்க வேண்டி இறைவனைப் பிரார்த்தித்தார். உடனே, இறைவனருளால் சூலை நோய் நீங்கியது. இப்பதிகமே இவருடைய வாழ்க்கையினைச் சமண மதத்திலிருந்து, சைவ மதத்திற்கு மாற அடிப்படையாக அமைந்தது. இதனால் திலகவதியார் மிகவும் மகிழ்ந்தார்.

சம்பந்தரும் நாவுக்கரசரும் சம காலத்தில் வாழ்ந்தவர்கள். ஒருவரை ஒருவர் சந்தித்தும் உள்ளார்கள். மேலும், இவ்விரு பெருமக்களும் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்து சைவ சமயத்தைக் காத்து வளர்த்தவர்களாவர். தீது அகன்று உலகம் செழிப்புடன் இருக்கத் தோன்றிய நாவுக்கரசர் தொண்டின் வடிவமாக நின்றவர் ஆவார். தொண்டலால் துணையும் இல்லை; என் கடன் பணி செய்து கிடப்பதே! என்று இவரின் திருவாக்குகள் சான்றாகத் திகழ்கின்றன. திருத்தொண்டின் நெறி விளங்க வாழ்ந்தவராவார். எனவே தமிழ்ச் சைவ உலகம் தேவாரப் பதிகங்களை நாளும் ஓதி நல்லன எல்லாம் பெற்று இன்புற வேண்டும்.

### பல்லவ மன்னனின் கோபம்

சமண மதத்தை விட்டு நீங்கிச் சைவ மதத்தின்பால் மிகப் பற்றுக் கொண்டதால் மிகவும் கோபம் கொண்ட பல்லவ மன்னன் நாவுக்கரசரைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கியும், அவரைக் கல்லில் கட்டி கடலில் எறிந்தபோதும், அக்கல்லையே தெப்பமாகவும் கொண்டு தமது இறை பக்தியினால் துன்பங்களிலிருந்து மீண்டார். இவரை நீற்றறையில் இட்டும், நஞ்சூட்டியும், யானை ஏவியும், துன்பங்கள் அளித்தபோதும், ஆழ்ந்த இறைப்பற்றால் துன்பம் நீங்கப் பெற்றார். இதன் பிறகு இன்னல்கள் அளித்து சமண மன்னனே சைவ சமயத்தைத் தழுவினான். பல ஆண்டுகள் திருவதிகையிலேயே தங்கி உழவாரப்பணி செய்து வந்தார். தல யாத்திரை செய்ய விரும்பித் தலங்கள்தோறும் உழவாரப்பணி செய்தும், பதிகம் பாடியும் வழிபட்டு வரும்போது, பெண்ணாடகத்தில் இறைவனருளால் இடபக்குறியும், சூலக்குறியும் தோளில் பொறித்துக் கொண்டார்.

### திருஞான சம்பந்தருடன் சந்திப்பு

முதல் முறையாகச் சீர்காழியில் கி.பி. 644-ல் திருஞான சம்பந்தரைச் சந்தித்த திருநாவுக்கரசரை (தமது 70-ம் வயதில்) ஞானசம்பந்தர் ''அப்பரே'' என்று அழைத்ததால் இப்பெயர் இவருக்கு நிரந்தரமாயிற்று. மீண்டும் இரண்டாவது முறையாகச் சந்தித்தார். பிறகு நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சேர்ந்து தலயாத்திரை சென்று , திருவீழிமிழலையில் இருவரும் படிக்காசு பெற்றார்கள். பின்னர் திருமறைக்காட்டில் வேதம் சாத்திய கதவை நாவுக்கரசர் பதிகம் பாடித் திறந்தார். இறுதியாகத்

திருஞான சம்பந்தர் திருப்பூந்துருத்தி வந்தபோது, அங்கே தங்கி உழவாரப்பணி செய்து வந்த திருநாவுக்கரசரைச் சந்தித்துச் சில நாட்கள் உடனுறைந்து, தொண்டை நாட்டு யாத்திரைக்காகப் பிரிந்து சென்றார்.

**மற்ற தல யாத்திரைகள்**

பல தலங்களுக்குச் சென்று வணங்கிவிட்டு, நல்லூர்க்கு வந்தபோது இறைவனருளால் திருவடி சூட்டப்பெற்றார். திங்களூரில் அப்பூதியடிகளின் மகன் அரவு தீண்டி இறக்க, அவனை மீண்டும் உயிர்ப்பித்தார். திருவாரூரில் திருவாதிரை விழாக் கண்டு மகிழ்ந்தார். பின்னர் பழையாறை வடதளியில் உண்ணா நோன்பிருந்து அரசன் உதவியால் சமணர்களை அகற்றி அத்தலத்து இறைவனை வணங்கிப் பின் திருப்பைஞ்ஞீலியில் வழியிடையே கட்டமுது தரப்பெற்றார். பிறகு திருக்கயிலையைத் தரிசனம் செய்ய விரும்பி பனி மலையில் செல்லும் வழியில் இறைவனால் தடுத்தாளப்பெற்று அங்கிருந்த தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்து கயிலைக் காட்சியைக் கண்டு இன்புற்றார். பின்னர் பல தலங்களைக் கண்டு பதிகம் பாடியும், திருப்பூந்துருத்தியில் சிறிது காலம் தங்கியிருந்து அங்கே திங்களும், ஞாயிறு தோயும் திருமடம் ஒன்று கட்டி பிறகு பாண்டி நாட்டு யாத்திரை மேற்கொண்டார். இறுதியாகத் திருப்புகலூரில் வந்து தங்கி உழவாரப் பணி செய்து கொண்டிருந்தார்.

இவர் இயற்றிய நான்காம் திருமுறையில் 113 திருப்பதிகங்களையும், திருக்குறுந்தொகையால் அமைந்த ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங் களையும், திருத்தாண்டகம் அமைந்த ஆறாம் திருமுறையில் 99 பதிகங் களையும் உள்ளடக்கிய 312 பதிகங்களை நமக்கு அளித்துள்ளார். இப்பதிகங்களின் வாயிலாக அக்காலத்தின் சமுதாயச் சூழல்களையும், பல அரிய செய்திகளையும் அறிவதோடு நாளும் இதனை ஓதுவோர்க்கு இம்மையிலும், மறுமையிலும் துன்பமே நேராது, என்றும் மகிழ்ச்சியே இருக்கும்.

திருநாவுக்கரசரின் 312 பதிகங்களில் 125 சிவத்தலங்களைப் பற்றிப் பாடப்பட்டுள்ளது. பொதுப் பதிகங்களான 37-ம் திருப்பதிகங்கள், 275-ம் சேர்த்து 312 பதிகங்களில் 3066 திருப்பாடல்கள் இன்று நமக்கு கிடைத்துள்ளது. திருநாவுக்கரசரை விருத்தப்பாவினத்துக்குத் தந்தை என்றும், தாண்டகவேந்தர் என்றும், பக்தி இயக்கத்தின் தந்தை என்றும் போற்றி வருகின்றோம்.

இவர் பதிகங்களின் சிறப்பு ‘அ’கரம் முதல் ‘ன’கரம் வரை உள்ள 30 எழுத்துக்கள், 1 முதல் 10 வரை உள்ள எண்களை வைத்துப் பாடியதோடல்லாமல், பதிகங்களின் வாயிலாக ஆணவத்தை ஒழித்து

எல்லோரும் ஓர் குலமாகச் சிவனை வழிபட அழைத்தும், சமணர்களைக் கடுமையாகச் சாடியும் பல தத்துவ நெறிகளை நமக்கு அளித்துள்ளார்.

இத்தகைய மாண்புகளடங்கிய 63 நாயன்மாருள் தனிச்சிறப்புடன் திகழ்ந்த மருள்நீக்கியார், அப்பர் என்ற திருநாவுக்கரசர் இறுதிக்காலத்தில் திருப்புகலூரில், தமது எண்பத்தொன்றாம் வயதில் (சுமார் கி.பி. 655-ல்) சித்திரை மாதம் சதய நாளில் சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்தார்.

திருநாவுக்கரசரின் வரலாறு மூலம் அவர் வாழ்க்கையில் நடைபெற்ற சம்பவங்களனைத்தும் இறைவனால் திட்டமிட்டு நடத்தப்பெற்று, சைவ சமயம் நாட்டில் செழிப்புடன் திகழவே நடந்ததாகும். அதனாலேயே தொன்றுதொட்டு பண், தாளம் மாறாமல் அப்படியே குரு-சீடர் பரம்பரையின் வழியாகவும், ஓதுவார் பெருமக்களாலும் இன்றுவரை பாடப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகின்றது. 'மூவர் தேவாரத்தில்' 23 பண்கள் பயன்படுத்தி இருந்தாலும், திருநாவுக்கரசரின் தேவாரத்தில் (திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம்) 10 பண்களை மட்டுமே (காந்தாரம், பியந்தைக் காந்தாரம், இந்தளம், சாதாரி, குறிஞ்சி, கொல்லி, பழந்தக்கராகம், சீகாமரம், பழம்பஞ்சுரம், காந்தார பஞ்சமம்) அப்பர் பயன்படுத்தி உள்ளார்.

எனவே, தேவாரத்தை இயற்றிய ஆதிமூவர், தேவாரமூவர், தேவார முதலிகள், சைவ சமய குரவர் என்று பல்வேறு பெயர்களைப் பெற்ற இவர்களை இறைவனுக்கு ஒப்பாக வணங்குவோம்.

# 23. நாவுக்கரசரும் வள்ளலாரும்

வ. கிருஷ்ணன், உடுமலைப்பேட்டை.

சைவ சமய மறுமலர்ச்சியில் நாவுக்கரசரின் பங்கும் சமுதாய மறுமலர்ச்சியில் வள்ளலாரின் பணியும் குறிப்பிடத் தகுந்ததாகும். சைவ சமய வளர்ச்சியில் நாவுக்கரசர் அருந்தொண்டு புரிகிறார். புரையோடிக் கிடந்த சமுதாயத்தினை நல்வழியில் நடத்திட வள்ளலார் அரும்பணி ஆற்றுகிறார். சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறியவர் நாவுக்கரசர்; கந்தனை வழிபட்டுச் சிவனைத் துதித்துச் சோதி வழிபாட்டை ஏற்படுத்தியவர் வள்ளலார். சிவ வழிபாட்டில் - சிவனைப் போற்றிப் பாடுவதில் நாவுக்கரசரின் பாடல்களும் வள்ளலாரின் பாடல்களும் இணைந்து செல்லும் பகுதிகளைச் சுட்டி உரைக்கும் நோக்கத்துடன் இக்கட்டுரை அமைகிறது.

**தாக்கம்**

ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் அப்பர். 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் வள்ளலார். சிவநெறி தழைத்தோங்கப் பாடுபட்ட அப்பரின் தாக்குறவு வள்ளலாரின் பாடல்களில் ஆங்காங்கே வெளிப்படுகின்றது. நாவுக்கரசரை வள்ளலார் வெளிப்படையாகப் போற்றிப் பாடுகிற பாடல் களும் உண்டு. 'ஆளுடைய அரசுகள் அருண்மாலை' எனும் பதிகம் நாவுக்கரசர் புகழ்மாலையாக (ஐந்தாம் திருமுறை - பா. 3237 - 3246) அமைகிறது. இது தவிர ஆறு பாடல்களில் திருநாவுக்கரசர் குறித்த குறிப்புகள் (828, 2010, 2302, 2305, 2321) இடம்பெறுகின்றன. நாவுக்கரசரின் சில பாடல்களின் சொற்களும் கருத்துகளும் வள்ளலாரால் எடுத்தாளப் பெறுகின்றன.

**ஆளுடைய அரசுகள் அருண்மாலை**

சைவ சமயக்குரவர் நால்வரையும் வள்ளலார் புகழ்ந்து பாடுகிறார். நாவுக்கரசரை 'ஆளுடைய அரசுகள் அருண்மாலை'யில் போற்றிப் பாடுகிறார். அப்பரின் சிறப்பும் பெருமையும் இப்பதிகத்தில் எடுத்துரைக்கப் படுகின்றது.

**கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்**
**கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்**
**பண்ணுளே விளைந்தஅருட் பயனே உண்மைப்**
**பதியோங்கு நிதியேநின் பாதம்அன்றி**

விண்ணுளே அடைகின்ற போகம் ஒன்றும்
விரும்பேன்என் றனையாள வேண்டுங் கண்டாய்
ஒண்ணுளே ஒன்பதுவாய் வைத்தாய் என்ற
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே

என்ற பாடலில் (ஆளுடைய அரசுகள் அருண்மாலை-5) திருநாவுக்கரசரின் பெருமை பேசப்படுகிறது. திருப்புகலூர்த் திருத்தாண்டகப் பாடலில் (1:3) அப்பர் பாடிய ''ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்'' என்ற சொற்களை இராமலிங்க வள்ளலார் எடுத்தாள்கிறார். இப்பதிகத்தில் 'நாவுக்கரசு என்று பேர் பெற்று உழவாரப் படை கைக்கொண்ட புண்ணியன்', 'சமணாதர் செய்த வஞ்சத்தை நீந்திக் கடந்து சிவநெறி விளங்க வைக்கும் சோதிமணி விளக்கு', 'நல்லவர்க்கு நண்பன்', 'சொல்லரசு', 'சிவநெறியைச் சார்ந்த ஞானத்துணை', 'வளங்கெழும் ஆகம நெறியை வளர்க்க வந்த வள்ளல்', 'அப்பூதி அடிகட்கு இன்பம் தந்த பெருந்தகை' என்று அப்பரைப் பலவாறு புகழ்ந்துரைக்கிற வள்ளலார் குருவாகவும் (ஆளுடைய அரசுகள் அருண்மாலை-10:3) ஏற்றுக் கொள்கிறார்.

**புராண வரலாற்றுச் செய்தி**

அப்பரைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளை வள்ளலார் தெளிவுறக் குறிப்பிடுகிறார். திருமறைக்காட்டில் சிவபெருமானின் திருக்கோயில் கதவைத் திறப்பிக்க விண்ணப்பம் செய்து அப்பர் (திருமறைக்காடு: திருக்குறுந்தொகை-10) பாடிய செய்தியினை வள்ளலார்,

நாட்டில் புகழ்பெற்ற நாவுக் கரசர்முன் நாள்பதிகப்
பாட்டிற் கிரக்கம்இல் லீர்எம் பிரான்எனப் பாடஅன்றே
ஆட்டிற் கிசைந்தே மலர்வாழ்த்தி வேதம் அமைத்தமறைக்
காட்டில் கதவம் திறந்தன ரால்எம் கடவுளரே.

என்று (திருவருட்பா: இரண்டாம் திருமுறை-5) பாடலில் எடுத்துக் கூறுகிறார்.

திருநாவுக்கரசரைச் சமணர்கள் கல்லுடன் பிணித்துக் கடலில் வீழ்த்தியபோது சிவபெருமானை நினைத்து மனங்கலங்காத நாவுக்கரசர்,

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

என்று (நமச்சிவாயத் திருப்பதிகம்-1) பாடுகிறார். இத்தகைய செய்தியினை அவ்வாறே மேற்கொள்வதுடன் அப்பரைக் கரையேற்றியதுபோல் தம்மையும் கரையேற்ற வள்ளலார் வேண்டுகிறார். இதனை,

சொற்றுணை வேதியன் என்னும் பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப் போதினையே

நற்றுணை யாக்கரை ஏறிய புண்ணிய நாவரசைக்
கற்றுணை யாதிந்தக் கற்றுணை யாமென் கடைநெஞ்சமே

என்ற (மூன்றாம் திருமுறை : திருவருண் முறையீடு - 132) பாடலும்,

சீர்தரு நாவுக் கரையரைப் போலிச் சிறியனும்ஓர்
கார்தரு மாயைச் சமணான் மனக்கருங் கல்லிற் கட்டிப்
பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே
ஏர்தரும் ஐந்தெழுத் தோதுகின் றேன்கரை ஏற்றரசே.

(மேலது:135) என்ற பாடலும் அறிவிக்கின்றன. தம்மைக் கரையேற்ற வேண்டுகிற இராமலிங்க வள்ளலாரின் வேண்டுதலைவிட நாவுக்கரசரின் புகழ் பாடுதலையே இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

திருநல்லூரில் மங்கையொரு பாகனாம் சிவபெருமான், நாவுக்கரசருடைய தலையில் தம் திருவடிகளைச் சூட்டி அருள்புரிந்தமையை 'நினைந்துருகும் அடியாரை நைய' எனத் தொடங்கும் (திருநல்லூர்: திருத்தாண்டகம் ஆறாம் திருமுறை) பதிகத்தில் நாவுக்கரசர் குறிப்பிடுகிறார். இதனை வள்ளலார்,

துடிவைத்த செங்கை அரசேநல் லூரில்நின் தூமலர்ப்பொன்
அடிவைத்த போதெங்கள் அப்பர்தம் சென்னி யதுகுளிர்ந்தெப்
படிவைத்த தோஇன்ப மியான்எணுந் தோறும்இப் பாவிக்குமால்
குடிவைத்த புன்தலை ஒன்றோ மனமும் குளிர்கின்றதே.

என்று (மூன்றாந் திருமுறை : திருவருண் முறையீடு - 151) பாடுகிறார். நாவுக்கரசர் பற்றிய வரலாற்றுச் செய்திகளைத் தம் பாடல்களில் வள்ளலார் எடுத்துரைப்பதனால் அவரது புகழ் வளர்ந்தோங்குகின்றது எனலாம்.

**ஒத்தியைவு**

மனம் எதன் மீது பற்றுக்கொள்கிறதோ அதனையே சிந்தனை செய்து அதன் வழிச் செயல்படுவது இயல்பு. படைப்பாளி தம் மனதை வேறொருவருடைய படைப்பில் பறிகொடுத்தால் அவனுடைய படைப்பில் அத்தகைய தாக்கம் உறுதியாய் வெளிப்படும். இவ்வகையில் இராமலிங்க அடிகளார் நாவுக்கரசரின் தேவாரப் பாடல்களில் தம் மனதை இழக்கிறார். இதனால் வள்ளலாரின் பாடல்களில் அப்பரின் கருத்துகள் மட்டுமின்றிச் சொற்களும் அவ்வாறே இடம்பெறுகின்றன. நாவுக்கரசருடன் வள்ளலார் ஒத்தியைவதைப் பின்வரும் சில சான்றுகள் மூலம் அறியலாம்.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே

பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே.

என்ற (தனித்திருத்தாண்டகம் - 3) பாடலினால் உள்ளம் கவரப்பெற்ற வள்ளலார் தம் மனக்கருத்தை,

பாட்டுவித்தால் பாடுகின்றேன் பணிவித்தால்
பணிகின்றேன் பதியே நின்னைக்
கூட்டுவித்தால் கூடுகின்றேன் குழைவித்தால்
குழைகின்றேன் குறித்த ஊணை
ஊட்டுவித்தால் உண்கின்றேன் உறக்குவித்தால்
உறங்குகின்றேன் உறங்கா தென்றும்
ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோஇச்
சிறியேனால் ஆவ தென்னே.

என்ற பாடலில் (ஆறாம் திருமுறை தற்சுதந்தரம் இன்மை : 4) வெளிப் படுத்துகிறார். 'இறைவனால்தான் எல்லாமே நிகழ்கின்றன' என்ற கருத்தில் இருவரும் ஒன்றுபடுகின்றனர்.

திருநாவுக்கரசரின் 'நின்ற திருத்தாண்டகப் பதிகமும்', 'அப்பன் நீ' எனத் தொடங்கும் தனித் திருத்தாண்டகப் பதிகமும் வள்ளலாருக்கு அதிக ஈடுபாட்டினைத் தந்திருக்க வேண்டும். இப்பதிகங்களில் காணலாகும் சொல்லாட்சியினை வள்ளலாரின் மகாதேவ மாலையிலும் (மூன்றாம் திருமுறை) 'உளம் புகுந்த திறம் வியத்தல்' (ஆறாம் திருமுறை) பகுதி யிலும் இடம் பெறுவதைக் காண இயலும். அப்பரின்,

அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஓரூரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே

என்ற பாடலுடன், வள்ளலாரின்,

என்னுயிர்நீ என்னுயிர்க்கோர் உயிரும் நீஎன்
இன்னுயிர்க்குத் துணைவன்நீ என்னை ஈன்ற
அன்னைநீ என்னுடைய அப்பன்நீ என்
அரும்பொருள்நீ என்னிதயத் தன்பு நீஎன்

நன்னெறிநீ எனக்குரிய உறவு நீஎன்
நற்குருநீ எனைக்கலந்த நட்பு நீஎன்
தன்னுடைய வாழ்வுநீ என்னை காக்குந்
தலைவன்நீ கண்மூன்று தழைத்த தேவே.

என்ற பாடல் (மூன்றாம் திருமுறை : மகாதேவ மாலை - 68) ஒத்தியை வதைக் காணலாம். மேலும், நாவரசரின்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன்
சடையடிகள் நின்ற வாறே

என்று தொடங்கும் 'நின்ற திருத்தாண்டகப்' பதிகப் பாடலுடன்

தானாகித் தானல்ல தொன்றுமில்லாத்
தன்மையனாய் எவ்வெவைக்குந் தலைவனாகி
வானாகி வளியனலாய் நீருமாகி
மலர்தலைய உலகாகி மற்றுமாகித்
தேனாகி தேனினறுஞ் சுவையதாகித்
தீஞ்சுவையின் பயனாகித் தேடுகின்ற
நானாகி என்னிறையாய் நின்றோய் நின்னை
நாயடியேன் எவ்வாறு நவிற்றுமாறே.

என்ற இராமலிங்க அடிகளாரின் மகாதேவ மாலை (68) பாடலை ஒப்புநோக்கலாம். இதற்குக் காரணம் ஒரே விதமான கருத்தினை வெளிப்படுத்தும் தன்மையே ஆகும்.

சிவலிங்க சோதியிற் கலந்த அப்பரும், இறை(அருள்) சோதியிற் கலந்த வள்ளலாரும் வெவ்வேறு காலகட்டங்களில் வாழ்ந்தவர்கள். அப்பரிடத்தும் அவரது பாடல்களிலும் மிகுந்த ஈடுபாடும் பக்தியும் உடையவராய் வள்ளலார் திகழ்கிறார். நாவுக்கரசரைப் போற்றிப் பாடும் பாடல்களும், அவருடைய பாடல்களைப் போலவே அமைகிற வள்ளலாரின் பாடல்களும் மிகச் சிறந்த சான்று ஆகின்றன. வள்ளலாரின் பாடல்களில் தேவாரப் பாடல்களின் தாக்கம் குறிப்பாக நாவுக்கரசரின் தாக்கம் அதிகமாய் உள்ளது என அறுதியிட்டுக் கூறலாம்.

# 24. திருநாவுக்கரசர் வாழ்வும் வாக்கும்

க. கொன்றையாண்டி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்"

திருமுனைப்பாடி நாட்டில் சிவம் பெருக்கும் திருவாமூரில் வேளாண் மரபில் புகழனார் மாதினியார் தம்பதிகளுக்குத் திருமகளாய்த் திலகவதியாரும், சில ஆண்டுகள் கழித்து மருள்நீக்கியாரும் திருவவதாரம் செய்தனர். திலகவதியாருக்கு வயது பன்னிரண்டு ஆயிற்று. கலிப்பகையார் என்னும் சேனைத் தலைவருக்கு மணம் பேசினர். திருமணம் நிகழ்வதற்குள் கலிப்பகையார் நாடு காக்கும் பணிக்குச் சென்றார். நீண்டநாள் போர் நடந்தது. இச்சமயத்தில் புகழனார் விண்ணுலகடைந்தார். கற்புநெறி வழுவாத அவர் தம் மனைவியார் மாதினியாரும் கணவனாருடன் சென்றார். பெற்றோரை இழந்த திலகவதியாரும் மருள்நீக்கியாரும் துயரில் ஆழ்ந்தனர். இந்நிலையில் போர் மேற்சென்ற கலிப்பகையாரும் போர்க்களத்தில் பூதல் உடல் நீத்துப் புகழுடம்பெய்தினர். இச்செய்தியைக் கேட்டுத் திலகவதியார் திடுக்கிட்டார். என் தாயும் தந்தையும் என்னை அவர்க்குக் கொடுக்க இசைந்தமையால் அவர்க்கே நான் உரியவள். ஆகையால் என் உயிரை நான் அவரோடு இசைவிப்பேன் என்று கூறி உயிர்விடத் துணிந்தார். மருள்நீக்கியார் தமக்கையார் திருவடிகளில் வீழ்ந்து "தாய் தந்தையரை இழந்தபின் தங்களை வணங்கப் பெறுதலால் யான் உயிருடன் இருந்தேன். நீங்களும் என்னைக் கைவிட்டுப் பிரிவீராயின் தங்களுக்கு முன் நான் உயிர் துறப்பேன்" என்று உறுதி கூறினார். திலகவதியார் தம்பியார் உளராக வேண்டும் என்று தம் முடிவை மாற்றி, மனையின்கண் தங்கி மாதவம் புரிந்தார். மருள்நீக்கியாரைப் பேணி வளர்க்கும் பெரும்பணியை மேற்கொண்டார். மருள்நீக்கியார் மகிழ்ந்து வளர்ந்து அறம்பல செய்தார். சமயங்களின் தத்துவங்களை ஆராய்ந்தறிய எண்ணினார். அக்காலச் சைவ சமயச் சான்றோர் மருள்நீக்கியார் அறிவுப் பசியைப் போக்காமையாலும் சிவபெருமானருள் செய்யாமையாலும் கொல்லாமை என்னும் நல்லறப் போர்வையில் உலவி, மன்னனையும் தம் நெறியில் நிற்கச் செய்த சமணர்களைச் சேர்ந்தார். தருமசேனர் ஆனார்.

மனையில் இருந்து தம்பியார் உளராக வேண்டும் என்று தவம் செய்து வந்த திலகவதியார் தம்பியார் நிலை கண்டு வருந்தி, திருவீரட்டானம்

அடைந்து திருப்பணிகள் செய்து சிவனருள் போற்றி வந்தார். தீவினைத் தொடர்பால் தம்பி சமண் சமயம் சார்ந்ததை எண்ணி எண்ணிப் புண்பட்டார். அதிகைப் பெருமான் திருமுன் நின்று தம்பியைப் புறச்சமயப் படுகுழியினின்றும் மீட்க வேண்டுமென்று விண்ணப்பித்தார். சிவபெருமான் திலகவதியார் கனவில் தோன்றி, ''உன்தம்பி முன்னமே முனியாகி எமையடையத் தவம் முயன்றான். அவனைச் சூலை நோய் கொடுத்து ஆட்கொள்வோம்'' என்று அருள்புரிந்தார். அதன்படியே சூலை நோய் ஏற்பட்டுத் தருமசேனர் வயிற்றிடைச் சென்று பற்றியது. சமண முனிவர்களால் அந்நோய் தீராமையால் கைவிட்டகன்றனர். தருமசேனருக்குத் தம் தமக்கையார் நினைவு வந்தது. விரைந்து வந்து திலகவதியார் திருவடிகளையடைந்தார். திலகவதியார் திருவைந்தெழுத்தோதி திருவெண்ணீறளித்தார். திருவதிகைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். சிவனருளால் தமிழ்மாலை பாடும் உணர்வு பெற்று சூலை நோயும் நீங்கப் பெற்றார். 'திருநாவுக்கரசு' என்ற நாமம் இறைவனால் அருளப் பெற்றது. தருமசேனர் திருநாவுக்கரசராகிச் சிவசின்னங்கள் அணிந்து உழவாரப்படை ஏந்தித் திருத்தொண்டு செய்ய முற்பட்டார்.

சமணர்களின் சூழ்ச்சி உரையைக் கேட்ட மன்னன் சமயம் மாறிய திருநாவுக்கரசருக்குத் தண்டனை கொடுக்க அழைத்துவரச் செய்தான். நீற்றறையிலிடுமாறு தண்டனை கொடுத்தான். திருவைந்தெழுத்தோதிச் சிவபெருமானைத் தியானித்து எவ்வகைத் துன்பமும் இன்றி நீற்றறையிலிருந்தது கண்டு வியந்தனர். நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்ணும்படி செய்தான். எம்பிரானடியார்க்கு நஞ்சும் அமுதமாயிற்று. மதயானையை விட்டு இடறச் செய்தான். மதயானை அவரை வலம் வந்து வணங்கிற்று. கல்லோடு கட்டிக் கடலில் தள்ளினர். ஐந்தெழுத்தோதிக் கரை சேர்ந்தார். சமணர் தூண்டுதலால் தீவினை செய்த பல்லவவேந்தன் தம் பழவினைப்பாசம் நீங்கத் திருவதிகை வந்து திருநாவுக்கரசரை வணங்கி மன்னிக்க வேண்டினான்; சைவனாக மாறினான். திருநாவுக்கரசர் சிவத்தல யாத்திரை செய்து திருப்பதிகம் பாடித் திருத்தொண்டு செய்தார். சமணர் சமயத் தொடக்குண்ட உடல் தூய்மை பெற இடபக்குறி சூலக்குறி பொறிக்கப் பெற்றார். திருவடி தீட்சை பெற்றார். அப்பூதியடிகள் அறப்பணி கண்டு அரவம் தீண்டி இறந்த அவர் மகனைப் பதிகம் பாடி உயிர்ப்பித்தார். திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றார். திருமறைக்காட்டில் மறைக் கதவம் திறக்கப் பாடினார். திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறும் நீரும் பெற்றார். வடநாட்டுத் தலயாத்திரை மேற்கொண்டார். காசி சென்று விசுவநாதரைக் கண்டு தரிசித்தார். திருக்கயிலை சென்று கயிலைப் பெருமானைத் தரிசிக்க விரும்பினார். இரவு பகலாக நடந்து உடலுறுப்புகள் தேய்ந்து ஓய்ந்து கிடந்தார். சிவபெருமான் தோன்றி மானிடர் கயிலை சென்றடைவது எளிதன்று திரும்பிச் செல்வதே தக்கது என்றார். ''மாளும்

இவ்வுடன் கொண்டு மீளேன்" என்றார். கயிலை நாதர் காட்சி கொடுத்தார். "ஒரு தடாகத்தைத் தோற்றுவித்து இதில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்து திருக்கயிலைக் காட்சியைக் காண்க" என்று அருள் புரிந்தார். அத்தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றிலுள்ள தடாகத்தில் எழுந்தார். பெருமான் கயிலைக் காட்சி தந்து மறைந்தார். மீண்டும் தலயாத்திரை தொடங்கிப் பாண்டிநாட்டுத் தலங்களைத் தரிசித்தார். சிவபெருமான் உழவாரப் பணியின்போது அவர் பற்றற்ற நிலையைப் பரிசோதித்தார். ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் நிலையைக் கண்டார். திருநாவுக்கரசர் உழவாரப்பணி செய்து திருப்புகலூரில் தங்கியிருந்தார். சிவஞான வடிவேயாகி ஆண்டரசுதம் எண்பத்தோராம் வயதில் சித்திரை மாதம் சதய நன்னாளில் சிவபெருமான் திருவடியை அடைந்து இன்புற்றார். இதுவே திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கமாகும்.

இனி அவர் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் அகச்சான்றுகள் உண்டு என்றாலும் சிலவற்றை இங்குக் காண்போம். திருநாவுக்கரசர் தாம் சமண சமயம்புக்குக் கழித்தமையை,

**"பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்**
**சொல்லிய செலவு செய்தேன்"**

(திருமுறை-4; பதிகம்-39; பாடல் - 7)

என்ற பாசுரத்தால் வெளிப்படையாக அறியலாம்.

திருநாவுக்கரசர் ஒரு முனிவராய் தவம் இயற்றியவர் என்பதை,

**"நில்லாத நிணக்கரம்பைப் பிணக்கம் நீங்க**
**நிறைதவத்தை அடியேற்கு நிறைவித்து என்றும்**
**செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானை"**

என்ற பாடற் பகுதியால் அறியலாம்.

திருநாவுக்கரசர் சூலை நோயால் வருந்தியபோது தமக்கையார் திலகவதியாரை அடைந்து ஆட்கொள்ளப் பெற்றதை,

**"எம்மையா ரிலையானும் உளேனலேன்**
**எம்மையாரும் இதுசெய வல்லரே**
**அம்மையாரெனக் கென்றென்ற ரற்றினேற்கு**
**அம்மையா ரைத்தந்தார் ஆரூர் ஐயரே"**

என்ற திருவாரூர்ப் பதிகத்தால் அறியலாம்.

திருநாவுக்கரசர் சூலை நோயால் வருந்தியதும் இறைவன் திருவருளால் நீங்கியதும் அவர் பாடிய பல பதிகங்களில் குறிக்கப் பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் முதன் முதலாகத் திருவாய் மலர்ந்தருளிய பதிகம் "கூற்றாயினவாறு" என்ற பதிகமாகும். அதில்,

"தோற்றாதென் வயிற்றின் அகம்படியே குடரோடுதுடக்கி முடக்கியிட
ஆற்றேன் அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே"

"சுடுகின்ற சூலை நோய் தவிர்த்தருளீர்"

"பிணி காட்டி ஆட்கொண்டு பிணிதீர்த்த ஆரூரர்"

"சூலை தீர்த்து அடியேனை ஆட்கொண்டாரே"

என்று பல பதிகங்களில் தமக்குச் சூலைநோய் ஏற்பட்டதையும், சமணர்களால் தீர்க்க முடியாது கைவிட்டதையும் சிவபெருமான் சூலை நோய் நீக்கி ஆட்கொண்டதையும் குறிப்பிடுகிறார்.

மேலும் திருவாரூர்ப் பதிகம் முழுவதிலும் திருநாவுக்கரசர் தாம் சமண சமயம் சார்ந்து வருந்தியதைக் குறிப்பிடுகிறார். மீண்டும் சைவராகிச் சிவனருள் பெற்றதையும் குறிப்பிடுகிறார்.

சமண சமயம் விட்டுச் சைவராய் மாறியதை அறிந்த மன்னன் சமணர்களின் ஏவலால் திருநாவுக்கரசருக்குத் தண்டனை வழங்க அழைத்து வருமாறு ஆணையிட்டான். அப்போது சிவபெருமான் அருள்பெற்று அவருக்கு ஆட்பட்டதையும் மன்னனுக்கு அஞ்சாது கூறிய மறுமாற்றத்தையும் பல பதிகங்களில் குறிப்பிடுகிறார்.

1. நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
   நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
   ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
   இன்பமே யெந்நாளும் துன்பம் இல்லை
   தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
   சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதிற்
   கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
   கொய்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.

2. "பாராண்டு பகடேறி வருவார் சொல்லும் பணிகேட்கக்
   கடவோமோ? பற்றற்றோமே"

3. நாவலந் தீவகத்தினுக்கும் நாதரான
   காவலரே ஏவி விடுத்தாரேனும் கடவமலோம்

என்ற பதிகங்களில் திருநாவுக்கரசர் சிவபெருமானால் ஆட்கொண்டமையால் அரசன் அழைப்பை மறுத்துத் துணிந்து கூறும் நிலையை அறியலாம்.

திருநாவுக்கரசரைச் சமணர்கள் நீற்றறையில் இட்டுத் தாளிட்டனர். அவர் ஐந்தெழுத்தை ஓதி சிவர்னந்தத்தில் திளைத்து இனிதிருந்தமையை,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்

மூசுவண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே''

என்று ஐந்தெழுத்தை ஓதிச் சிவானந்தத்தில் மூழ்கி இனிதிருந்தமையைக் கூறுகிறார்.

சமணம் விட்டுச் சைவம் சார்ந்தமைக்காகச் சமணர்கள் நஞ்சு கலந்த பாற்சோறளித்து உண்ணச் செய்தனர். இதைத் திருநாவுக்கரசர்,

''வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமுது ஆக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே''

என்ற பதிகத்தில் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

திருநாவுக்கரசர் மீது சினமிக்க மதயானையை ஏவினர். அப்போது அப்பரடிகள் சிவபெருமான் தமர்நாம் ஆகையால் அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை'' என்று அஞ்சாமல் இறைவன் நாமத்தை நினைத்தார். மதயானை அவரை வலம் வந்து பணிந்து சென்றது. இந்த நிகழ்ச்சியைத்,

தலைவனாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடுகிற்குமோ?

என்ற திருப்பாடலில் புலப்படுத்துகிறார்.

சமண குருமார்களின் சொற்கேட்ட மன்னன் திருநாவுக்கரசரைக் கல்லோடு கட்டிக் கடலில் போடுமாறு கட்டளையிட்டான். கடலில் போடப்பட்ட திருநாவுக்கரசர் திருவைந்தெழுத்தை ஓதிக் கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறினார். இந்த நிகழ்ச்சியை,

''கற்றுணைப் பூட்டி யோர்கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே''

என்னும் பதிகத்தில் தெள்ளத் தெளிவாகக் கூறுகின்றார். திருநாவுக்கரசர் சமண சமயத்தினின்றும் சைவ சமயத்துக்கு வந்தமையால் சூலக்குறி இடபக்குறி பொறித்தும் திருவடி தீட்சை கொடுத்தும் தம்மைத் தூய்மையாக்குமாறு இறைவனிடம் வேண்டிப் பெற்றார். இந்த நிகழ்ச்சிகளை,

''மின்னாரும் மூவிலைச் சூலம் என்மேற்பொறி''

''இடபம் பொறித்து என்னை ஏன்றுகொன்றாய்''

என்பன போன்ற திருப்பாடல்களில் விளங்கக் கூறுகின்றார்.

திருமறைக்காட்டில் வேதங்கள் அடைத்த கதவைத் திருநாவுக்கரசர் திறக்கப் பாடினார் என்ற வரலாற்றுக் குறிப்பைக்

**''கண்ணிலால் உமைக்காணக் கதவினைத்**
**திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே''**

என்ற பதிகத்தில் விளக்கமாகக் கூறுகின்றார்.

திருக்காளத்தி மலையில் இறைவனைத் தொழுத திருநாவுக்கரசருக்குத் திருக்கைலாயத் தரிசனம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று.

**''கனத்தகத்தான் கயிலாயத்து உச்சியுள்ளான்**
**காளத்தியான் அவன்என் கண்ணுளானே''**

என்று காளத்தியிலிருந்தே கயிலாயத்து இறைவனைப் பாடி மகிழ்ந்தார் என்றாலும் கயிலாயம் சென்று கயிலை நாதனை நேரில் கண்டு தொழவிரும்பிக் காடும் நாடும் மலையும் கடந்து உடம்பெல்லாம் தேய்ந்து ஓய்ந்தார். அப்பொழுது சிவபெருமான் தவ முனிவராய் வந்து அங்கு ஒரு பொய்கையைத் தோற்றுவித்து அதில் மூழ்கித் திருவையாற்றில் கயிலைக் காட்சியைக் காணுடவே அருள் புரிந்தார். இந்த வரலாற்றினை,

**''யாதும் சுவடு படாமல் ஐயா நடைகின்றபோது**
**காதல்மடப் பிடியோடும் களிறுவருவன கண்டேன்**
**கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்''**

எனத் தமது திருவாக்கினால் குறிப்பிடுவதை அறியலாம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் பாண்டிய நாட்டுத் தலயாத்திரைக்குப்பின் திருப்புகலூரில் தங்கியிருந்து உழவாரப் பணி செய்த நாளில் ஓடு, பொன், மண் ஆகியவற்றை ஒன்றாகக் கருதிய பற்றற்ற நிலையையும் அரம்பையரை அகற்றி அகப்பற்றற்ற நிலையையும் காட்டினார்கள். பொறிவாயில் ஐந்தவித்த அவருடைய பற்றற்ற நிலையை இறைவன் கண்டார். புகலூர் இறைவனையே சரணடைந்தார்.

**''எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனே''**

என்ற திருத்தாண்டகப் பதிகம் பாடி,

**புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்**
**பூம்புகலூர் மேவிய புண்ணியனே''**

என்று போற்றி நண்ணறிய சிவானந்த வடிவேயாகி ஆண்ட அரசு ஒரு சித்திரை மாதம் சதய நன்னாளில் அண்ணலார் சேவடியை அடைந்து இன்புற்று அமர்ந்தருளினார்.

நால்வர் வரலாற்றிற்கும் அகச்சான்றுகள் இருப்பினும் திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள், அற்புதங்கள் பெரும்பாலானவற்றிற்கு அவர்தம் அருள்வாக்காம் அகச்சான்றுகள் நிரம்ப இருக்கின்றன.

# 25. வினை குறித்த சொல்லாட்சி

சி.பி. கோபால், உடுமலைப்பேட்டை.

திருநாவுக்கரசருடைய திருப்பாட்டுக்கள் உயிர்களுக்கு உறுதி பயக்கும் உட்கிடைகள் நிறைந்து தாழ்வென்னும் தன்மை ததும்பிப் பெரும்பாலும் இறைவனின் திருவடிச் சிறப்பைக் கூறுவனவாய் அமைகின்றன. சைவ சமய வினைக்கொள்கையை விளக்கிக் கூறி, 'வினை' என்னும் சொல் திருநாவுக்கரசர் தேவாரத்தில் இடம்பெறும் சொற்றொடர்களைத் தொகுத்துச் சுட்டலே இக்கட்டுரையின் நோக்கம். வினையின் தன்மையை யுணர்ந்து வினைக்கொள்கைகளை விரித்துரையாமல் வினை, வினைபோம் வழி, வினை கூடா வழி, சிவபெருமான் வினையைத் தீர்ப்பார் என்பதற் குரிய தொடர்களைப் பதிகப் பாடல்களில் எடுத்தாண்டுள்ள பெற்றியை இக்குறிப்புரை சுட்டியுரைக்கும்.

### வினை

தொல்காப்பியத்தில் 'வினை' என்னும் சொல், வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது "முதனூலாகும்" என்று ஆளப் பட்டுள்ளது. வினையின் நீங்கி என்பதற்கு, செய்வினையின் பயன் துவ்வாது மெய்யுணர்வுடையவனாகிய முன்னோன் என்பர் பேராசிரியர். வினை என்பன இருவினை என்றும் கூறப்பட்டுள்ளது. இதனால் வினை என்ற சொல் நல்வினை, தீவினைகளாகிய இரு வினைகளையும் உணர்த்தும்.

### வினைத்திறம்

மேலும், வினையென்பது தொழில், கன்மம், ஊழ், விதி என்ற சொற்களாலும் குறிப்பிடப்படும். பொருளசைவு இல்லையானால் அதன் தொழிலும் இல்லையாம். முழுதும் ஆணவ மலத்தின் வயப்பட்டுக் கிடந்த காலத்து ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியைகளுக்குச் சிறிதும் அசைவில்லாமையான் ஆண்டு ஆன்மாவுக்குக் கன்மம் இல்லை. இறைவனது திருவருட் சக்தியான் எடுக்கப்பட்டு மாயையோடு பொருத்தப்பட்டவழி ஆன்மாக்கள் தம்மாட்டு அவ்விச்சா ஞானக்கிரியைகள் சிறிது விளங்கப் பெற்றமையால் ஆண்டுக் கன்மமுண்டாயிற்று என்பதை,

> **"உண்டியும் வினையும் இன்றிக் கிடந்துயிர்த்திட.....**
> **உண்டியும் வினையும் உற்றிங்கு உணர்த்திட உணரா நிற்கும்"**

என்பதாலறியலாம்.

ஆன்மாவோடு சகசமாய் உடனிற்பதாகிய ஆணவமல நீக்கத்தின் பொருட்டு அவ்வான்மாவோடு மாயாமலங் கூட்டப்படுங்கால் அவற்றின் நடுவே கிளைப்பது கன்மம்.

"ஆன்மாவின்கட் கன்மம்தோன்றியது மாத்திரமே ஆதியென்று - உரைக்கப்படுமல்லது, உயிரின்கட் டற்கிழமைப் பொருளாக உள்ள அதனிருப்பு அநாதி முறைத்தேயா மென்பது தெளிபொருள்"

என்பர் மறைமலையடிகள். ஆணவ மலச்சார்பால் ஆன்மாக்கள் செய்யும் வினைகளின் தொகுப்பே கன்மமலம். ஒருகால் செய்தீட்டிய வினைகள் அவற்றை ஈட்டிய உயிர்களுக்குத் தம்பயனை நுகர்விக்காமல் கழிவதில்லை. உயிர்களின் சுகதுக்கங்களை நிர்ணயிப்பவை மும்மலங்கள் என்பதை, "கன்மம், மாயை, ஆணவம் ஆகிய மூன்று மலங்களும் உயிரின் சுகதுக்கங் களுக்கு முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் ஆகின்றன. மூன்றும் பந்தங்களாயினும் இவை முறையே அனுபந்தம், சம்பந்தம், பிரதிபந்தம் ஆகின்றன" என்பதாலறியலாம்.

இன்பம் துன்பம் ஆகிய இரண்டும் முன்வினைக்கேற்பவே நிகழ்கின்றன என்பதை,

"இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையினாலே வைத்தது"

என்பதனாலறியலாம். இதனைச் சிவஞானபோதம்,

"அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வானை
நீக்க மின்றி நிற்கு மன்றே"

என்று கூறுகிறது.

**வினைப்பயன்**

உயிர்களுக்கு இன்ப துன்பங்கள் தாமாக விளைவதில்லை; முன்வினைகளே பின்னர்வரும் விளைவுகளுக்குக் காரணமாக அமைகின்றன. முன்னர் செய்த நல்வினை பின்னர் இன்பத்தையும், முன்னர் செய்த தீவினை பின்னர் துன்பத்தையும் வழங்குகின்றன. வினைப்பயன் விளையுங்கால் அதன் பயனை சமுதாயத்தினுள்ள ஒருவர் வாயிலாக அடைகிறோம். அவரிடம் பகையும் சீற்றமும் கொள்கிறோம். தவறாது பயனளிக்கும் வினைப்பயனைக் கண்டு பிறர்மேல் சீற்றங் கொள்ளுதல் பயனில்லை. வினைக்குரியவரே பயனை அனுபவிக்க வேண்டிய நியதியுள்ளதால் பிறர் யாதும் செய்ய இயலாது. பகைவனை உண்டாக்கிக் கொடுப்பதும், நண்பனை அமைத்துக் கொடுப்பதும், இம்மை மறுமை வாழ்க்கையை ஏற்படுத்திக் கொடுப்பதும் தான் செய்த வினைப்பயனேயாம் என்பதை,

"தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்
தானே தனக்கு மறுமையும் இம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே"

என்பதாலும்,

"தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்"

என்பதாலும்,

"எய்திட லாகும் இருவினையின் பயன்"

என்பதாலுமறியலாம்.

செய்வான், செய்வினை, சேர்பவன் ஆகிய மூன்றும் பிற சமயங்கட்கும் உளவென்றும், வினைக்கேற்ற பயனைச் செய்தவன் நுகருமாறு செய்யச் சேர்ப்பானாகிய இறைவனைக் கூறும் சிறப்பு சைவத்திற்கே உரியதென்றும் சைவ சமய சாத்திரங்கள் வலியுறுத்துமாற்றைச் சேக்கிழார்,

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றிற்கில்லை............"

என்று கூறுகிறார்.

வினைப்பயனை உயிர்கள் உண்ணுமாறு செய்பவன் இறைவனே என்பதனைச் சைவ சமய சாத்திரங்கள் "வள்ளலவன் செல்பவர் செய்தில் பயன் விளைக்கும் செய்யேபோற் செய்வன் செயல் அணையா சென்று" என்று சிவஞானபாடியம் கூறும்.

**வினைகளால் வகைப்படுத்தப்படும் உயிர்**

மலங்களால் கட்டுண்டுள்ள தன்மைகட்கேற்ப உயிர்கள் மூன்று வகைப்படும். இதனைத் தமிழ்க் கலைக்களஞ்சியம் பின்வருமாறு விளக்குகிறது.

"சைவசித்தாந்திகள், உயிர்களை மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். ஆணவமலம் ஒன்றே உடையோர் விஞ்ஞானகலர் என்றும், ஆணவம் கன்மம் ஆகிய இரு மலங்களுடையோர் பிரளயாகலர் என்றும், ஆணவம் கன்மம் மாயையாகிய மூன்று மலங்களுடையோர் சகலர் என்றும் கூறப்படுவர்".

**வினைத்தொகுதி**

ஒவ்வொருவருடைய பாவ புண்ணியங்களின் மொத்தத் தொகுதி மிகவும் பெரியது. சஞ்சிதம் என்றும் பெயருடையது. இவ்வளவையும்

ஒருவர் ஒரு பிறவியில் அனுபவிக்க முடியாது. இறைவன் கருணை மிகுந்தவனாகையால், இதில் மிகச் சிறியதொரு பகுதியையே ஒரு பிறவியில் அனுபவிக்கத் திட்டஞ் செய்கிறான். இப்பகுதிக்கே **பிராப்தம்** என்று பெயர். இப்பகுதியை ஒவ்வொர் உயிரும் அனுபவித்தே தீர வேண்டும். அனுபவிக்கும் முறையில் உயிர் புதியதாகச் சேர்ப்பது **ஆகாமியம்** எனப்படும். திருமூலர் ஆகாமியத்தை 'ஆழ்வினை'யென்றும் சஞ்சிதத்தை 'அறாவினை'யென்றும், பிராரப்பத்தைப் 'போழ்வினை'யென்றும் குறிப்பிடுகிறார். இவ்வினைத் தொகுதியை,

> "ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்
> போழ்வினை தீர்க்கும்"

என்பதாலறியலாம்

சிவஞானபாடியம் பிராரப்த வினையை முன்செய்வினையென்றும், ஆகாமிய வினையைப் பின்செய்வினையென்றும் குறிப்பிடுவதை,

> "முன் செய்வினை மாயை மூண்டிடினும்
> பின்செய்வினை மாயையுட னில்லாது"

என்னும் செய்யுள் உணர்த்துகிறது.

வினைத்தொகுதியைத் தேவசேனாபதி, "மனம், மொழி, செயல் களால் விளையும் வினைகள் என்றும், வினைகளால் விளையும் நன்மை தீமைகள் வினைப்பயன் என்றும், நல்வினை தீவினைகளால் பின்னர் விளையும் இன்பதுன்பங்கள் சூக்குமவினையென்றும் குறிக்கப்படுகிறது என்பர்.

**வினைவகை**

மனம், மொழி, செயல்களால் விளையும் வினையும் நல்வினை தீவினையென இருவகைப்படும். நல்வினை புண்ணியமென்றும், தீவினை பாவமென்றும் வழங்கப்பெறும். வினையை ஆன்மாவுக்குச் செய்யும் வினை, இறைவனுக்குச் செய்யும் வினை என மேலுமிரண்டாகப் பகுக்கலாம். ஆன்மாவுக்குச் செய்யும் நல்வினை பசு புண்ணியமென்றும், இறைவனுக்குச் செய்யும் நல்வினை சிவ புண்ணியமென்றும் கூறப்படும். தீவினையும் ஆன்மாவுக்குச் செய்யும் தீவினை, இறைவனுக்குச் செய்யும் தீவினை என இருவகைப்படும். நல்வினையால் இன்பமும் தீவினையால் துன்பமும் விளைகின்றன என்பதை,

> "இருவினை யென்ப மணமுதன்
> மூன்றிணியற் றுமிதமகிதங்கள்
> பெருவினைப் பயன்கள் புண்ணிய பாவம்
> பேசுமிக் கருமத்தின் பயன்கள்

மருவிடு மின்பத் துன்பமா மவைதாமாய்வின்
அவ்விருவினை தோற்று
மொருதனு விளைப்ப மற்றொரு தனுவினுணப்பருங்
கெட்டுங் கேடிலவாய்''

என்பதாலறியலாம்.

''மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்''

என்னும் திருமந்திரமும் ஈண்டு நோக்கத்தக்கது. இதே கருத்தை,

''சொல்லால் வருங்குற்றம் சிந்தனையால் வருந்தோடஞ் செய்த
பொல்லாத தீவினைப் பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந்தீங்குகள் ஆயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே''

என்னும் பாடலும் உணர்த்துகிறது.

**வினையறுத்தல்**

நுகர் வினையாகிய பிராரப்தத்தைத் தவிர ஏனைய பழவினையாகிய சஞ்சிதத்தையும் நிகழ்வினையாகிய ஆகாமியத்தையும் இறையருள் அழித்துவிடும். பக்தி நெறியைக் கடைப்பிடித்தால் பழவினைகளை வெல்லலாம் என்னும் உண்மையை,

''பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கருளிய வாறார் பெறுவார்''

என்னும் பதிகம் தெளிவாக்குகிறது.

இதே கருத்தை சிவஞானபோதம்,

''அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலமாயை தன்னோடு வல்வினை இன்றே''

என்று கூறுகிறது.

அடியார்களுக்கு வினையால் வரும் துன்பமில்லையென்பதை,

''அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லைமா நகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லையில்ல தோரடிமை பூண்டே னுக்கே''

என்னும் பாடலும் உணர்த்துகிறது.

முதலில் அறுவது மாயாமலம். இடையில் அறுவது கன்ம மலம். கடையில் அறுவது ஆணவமலம். தீட்சை பெறுவதால் ஞான மார்க்க முண்டாகி இறைவனுடைய ஞான சக்தியால் ஆணவ மலம் ஒழிக்கப்படும். ஆகாமிய கன்மமும் இந்த ஞான சக்தியால் நீக்கப்படும். சஞ்சித கன்மம் கிரியா சக்தியால் அழியும். பிராரப்தகன்மம் அனுபவித்தே ஒழித்தற்குரியது. இக்கருத்தை,

"மும்மை தரும் வினைகள் மூளாவாம் மூதறிவாங்
கம்மையும் இம்மையுமே யாம்"

"ஏன்றவினை உடலோடேகும் இடையேறும் வினை
தோன்றில் அருளே சுடும்"

என்பவை விளக்குகின்றன.

இவை அறுதற்கு உயிர் செய்யவேண்டிய காரியங்கள் பலவுள்ளன. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன இவற்றுள் அடங்கும். அகப்பூசை, புறப்பூசை, மந்திரசெபம், திருக்கோயில் வழிபாடு, அடியார் வழிபாடு, இயலாதோர்க்குதவுதல், வெள்ள நிவாரணம், பஞ்ச நிவாரணம், பூகம்ப நிவாரணம் முதலிய தொண்டுகள் செய்தல் ஆகிய இவையெல்லாம் 'இறைபணி நிற்றல்' முதலிய விதித்த வழிகளுள் அடங்கும். எப்பணி புரியும்போதும் கீழ்நிலையிலுள்ள ஓர் உயிருக்குத் தான்மேல் நிலை யிலிருந்து இரங்கி ஓர் உதவி செய்வதாக எண்ணுகின்ற மனப்பான்மை இம்மியும் இருத்தல் கூடாது; இறை பணியாகக் கருதிச் செயலாற்ற வேண்டும். இவ்வாறு செய்யும்போது அவ்வுயிரின் தகுதி படிப்படியாக மேன்மை பெறும். இப்படிகளை இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்பர். இருவினை யொப்பினைச் சிவஞானபாடியம், ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணிய பாவமிரண்டினும், அவற்றின் பயன்களினும் ஒப்பு உவப்பு நிகழ்ந்து விடுவோன தறிவின்கண் அவ்விரு வினையும் அவ்வாறொப்ப நிகழ்தலே ஈண்டு இருவினை யொப்பென்பதற்குப் பொருளென்றுணர்க என்று விளக்குகிறது. இருவினை யொப்பினை,

"இருவினை செயல்க ளொப்பி ஈசன்தன் சத்தின் தோய
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி"

"இருவினை யொத்திட இன்னருட்சுத்தி
மருவிட ஞானத்தில் ஆதன மன்னி"

"உனக்கிலாததோர் வித்துமேல் விளையாமலென்வினை ஒத்தபின்"

என்பவையும் உணர்த்துகின்றன.

சைவ சமயத்தில் வினைக்கொள்கை இடம் பெறுகிறது. ஆணவமென்னும் அறியாமையிலிருந்து விடுபடுவதற்காகவே ஆன்மாவுக்கு இறைவனால்

மாயாகாரியமாகிய தனுகரண புவன போகங்கள் படைக்கப்படுகின்றன. ஆன்மா புதிய வினைகளை ஈட்டுவதால் தொடர்ந்து பிறப்பிறப்புச் சூழலில் அகப்பட்டு நல்வினை தீவினைகளையியற்றி இன்ப துன்பங்களை யனுபவிக்கின்றன. ஆன்மாக்களை வினைப்பயன்களை உண்ணச் செய்வதும், தன்னையுணர்ந்தால் மலபரிபாகம் செய்வதும் இறைவனே. வினை மனமொழி செயல்களால் இயற்றப்படுகிறது. முன்வினை சஞ்சிதம் என்றும், அனுபவிக்கும் வினை பிராரப்தம் என்றும் ஈட்டும் வினை ஆகாமியமென்றும் பெயர் பெறுகின்றன. ஆன்மா இறைவன் அருளால் ஞானம் பெற்று வினைகளை அறுத்து இருவினை யொப்பமடைந்து முத்திக்கு முயல வேண்டும்.

இதுகாறும் கூறி வினைக்கொள்கைகளை, எல்லாம் உளங்கொண்ட நாவுக்கரசர் என்னும் மருணீக்கியார் சிவபெருமானின் பேரானந்தப் பெருவாரியில் மூழ்கிப் பாடிய பாடல்களில், வினையின் தன்மையை அனுபவித்து உணர்ந்து அவ்வினையினின்றும் உயிர்களைக் காக்கப் பாடிய திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்னும் அவர்தம் திருமுறைகளில் பின்வரும் சொற்றொடர்களை எடுத்தாண்டுள்ளார். அவை வருமாறு,

| தொடர் | பதிகம் | பாடல் |
|---|---|---|
| அதிரா வினைகள் அறுப்பாய் போற்றி | 271 | 2 |
| அரிச்சுற்ற வினையா லடாபுண்டு | 115 | 3 |
| அருவினை | 95, 115, 156 | 3, 4, 4 |
| அருவினைச் சுற்றம் | 111 | 4 |
| அலையார் வினைத் திறஞ்சே | 256 | 4 |
| உள்ள வினைகளே | 119 | 5 |
| ஊழ்வினை வந்துற்றா | 261 | 5 |
| ஊழித் தொல்வினை யோட | 168 | 6 |
| கட்டிட் டவினை போகக் | 183 | 1 |
| கழலா வினைகள் கழற்றுவ | 93 | 9 |
| கலக்கும் வினை போயற | 118 | 4 |
| குட்டவல்வினை தீர்த்து குளிர்விக்கும் | 156 | 9 |
| கொடுவினைக்குழி | 79 | 3 |
| கொடுவினைகள் | 307 | 8 |
| கொடுவினைநோய் | 97 | 10 |
| கோள வல்வினையும் | 168 | 2 |

| | | |
|---|---|---|
| வினைகளெல்லாம் | 68 | 1 |
| வினைப்பகை | 309 | 2 |
| வினைப்பாவம் | 137 | 3 |
| வினையதென்னும் சுழி | 57 | 5 |
| வீடாத வல்வினை நோய் | 307 | 9 |
| வெம்பு நோயும் இடரும் வெறுமையும் துன்பமும் துயரமும் எனும் சூழ்வினை | 184 | 6 |
| வெம்மையான வினைக்கட ணீங்கி | 157 | 8 |
| வெய்யவினைப் பகையும் பைய நையும் | 309 | 2 |
| வினைபோம்வழி, வினை கூடாவழி | 285, 119, 9 | 7, 4, 9 |

இவை தல தரிசனத்தால் வினை அறுதலைப் பற்றிய செய்திகள் அவ்வத்தலத்தின் பதிகங்களிலும் உள்ளன.

| | | |
|---|---|---|
| முதலாகப் பலபதிகங்களில் இச்செய்தி உள்ளது. | 156, 128, 128, 129, 128, 168, 199, 168, | 4, 4, 5, 3, 7,9,7,8,1 |

**சிவபெருமான் வினையைப் போக்குபவர் என்பதைக் குறிக்கும் தொடர்கள்**

| | | |
|---|---|---|
| அங்கணா யடைந் தார்வினை தீர்ப்பரே | 150 | 8 |
| அடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன் | 85 | 3 |
| அடியார் மேலைப் பண்டை வினையறுப்பார் | 224 | 5 |
| அடைந்தார் தம்....அருவினைகள்.... படிந்தானை | 283 | 5 |
| அண்ணாமலை சிந்தியா வெழுவார் வினை தீர்த்திடும் | 119 | 9 |
| உடலின் வினைகள் அறுப்பாய் | 270 | 4 |
| உறுவிப் பார்பல பக்தர்களுழ் வினை | 130 | 4 |
| அறுவிப்பாரது வன்றியும் நல்வினை | 130 | 4 |
| கரப்பர் கால மடைந்தவர் தம்வினை | 144 | 1 |
| காற்ற னைக்கலக்கும் வினைபோயறத் தேற்றனை | 118 | 4 |
| கழலா வினைகள் கழற்றுவ கால வனங்கடந்த | 93 | 9 |
| சிந்திப்பார் வினை தீர்த்திடும் செல்வனார் | 139 | 1 |

# 26. நாவுக்கரசர் வாழ்வும் வாக்கும்

அ.மா. கோபாலரத்தினம், தஞ்சாவூர்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செயகலா தார்" (திருக்குறள் - 26)

நம் செந்தமிழ் நாட்டின் பழைய தென்னாற்காடு மாவட்டத்தில், பண்ணுருட்டிக்கு அருகில் உள்ள திருவாமூர் என்ற சிற்றூரில், புகழனார்க்கும் மாதினியார்க்கும் மகனாக மருள்நீக்கியார் தோன்றினார்.

மருள்நீக்கியார்க்கு, பின்னர், திருநாவுக்கரசர் அப்பர், வாகீசர் என்ற பெயர்கள் ஏற்பட்டன. இவர் பிறந்தது சைவ வேளாளர் குடும்பம்.

சமண மதத்தின் தாக்கம் தமிழ்நாட்டில் இருந்தது. திருப்பாதிரிப்புலியூர் என்று வழங்கும் ஊர் அன்று பாடலிபுத்திரம் என்ற பெயரால் வழங்கப் பட்டது. அந்த ஊரில் சைவர்களும், சமணர்களும் வாழ்ந்தனர். சைவக் கோயில்களும் சமணக் கோயில்களும் அங்கு இருந்தன. மருள்நீக்கியார்க்குத் திலகவதியார் என்ற தமக்கை இருந்தார்.

மருள்நீக்கியாரின் பெற்றோர்கள் இவருடைய இளமையிலேயே மறைந்துவிட்டனர். தமக்கை திலகவதியார் தாம் தம்பியைக் காப்பாற்றினார். வீட்டில் பெரியவர்கள் எவரும் இல்லாமையால், மருள்நீக்கியார் சமண சமயத்தில் சேர்ந்து, சமண நூல்களைக் கற்றுணர்ந்து, தருமசேனர் என்ற பட்டத்தையும் பெற்றார். தம்பி மதம் மாறிச் சென்றமையால் தமக்கையார் மிகவும் மனம் நொந்து போனார். எல்லாம் வல்ல சிவபெருமானிடம் தம்பிக்கு நல்லறிவு வரவேண்டும் என வேண்டினார். அக்காள் சொல்லிக் கேட்கும் நிலையில் தம்பி இல்லை. மனம் போன போக்கில் சென்றார்.

திருநாவுக்கரசர் காலத்தில் தமிழ்நாட்டு பல்லவர் ஆட்சியின் கீழ் இருந்தது. மன்னன் சமண மதத்தில் இருந்தான். திருநாவுக்கரசர் ஏற்கனவே சமண சமயத்தில் செல்வாக்கோடு இருந்தார். அவர் சைவம் திரும்பியதும் சமணர்கள் அரசரிடம் சொல்லி அவருக்கு பல தொல்லைகள் கொடுத்தனர்.

திருஞானசம்பந்தரின் தொடர்பும் நட்பும் கிடைத்தது. பெரியாரைத் துணைக்கோடலால் இவருக்கும் பற்பல நன்மைகள் வந்து சேர்ந்தன. நாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் சேர்ந்து திருவீழிமிழலை, திருப்பூந்துருத்தி, திருமறைக்காடு, திருவாரூர் ஆகிய ஊர்களில் சைவப் பணி செய்தனர். பல்லவ அரசனும் சமணத்திலிருந்து சைவத்தின் பக்கம் திரும்பினான். மதுரை அரசனும் சைவத்துக்கு வந்தான்.

திருநாவுக்கரசர் பழையாறை என்ற ஊரில் அறப்போர் செய்து, உண்ணாநோன்பு இருந்து, மூடிக்கிடந்த கோவிலை வழிபாட்டிற்குத் திறந்துவிட்டார். உண்ணாநோன்போடு உரையா நோன்பும் இருந்தார். திருமறைக்காட்டில் சிவன் கோயில் கதவு மூடிக்கிடந்தது. அதனைத் தமிழ்ப்பாடல் பாடி திறக்கச் செய்தார்.

தமிழ்நாட்டிற்கும், தமிழ் மக்களுக்கும் அருந்தொண்டு புரிந்த அப்பர் அடிகள் செய்த தொண்டை நாம் எண்ணிப்பார்த்து அவர்சென்ற இடங்களுக் கெல்லாம் நாமும் போய்வர முயன்றால் நமக்கும் நம் குடும்பத்திற்கும் நல்வாழ்வு கிடைக்கும் என்று கூறி அப்பர் வாழ்வு என்ற பகுதியை நிறைவு செய்கிறேன்.

**வாழ்வில் குறிக்கோளின் அவசியம்**

பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் *குறிக்கோளி லாது கெட்டேன்*
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தெங்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
*என்கடன்பணி செய்து கிடப்பதே.*

**தில்லைக்கூத்தன் அழகும் மனிதப் பிறவியின் மாண்பும்**

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

மனிதப் பிறவியில் கடன் என்பது அனைவருக்கும் உண்டு. ''கடன் என்ப நல்லவை எல்லாம்'' என்பர் (குறள் - 981) திருவள்ளுவர்.

**அஞ்சாத நெஞ்சம்**

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்திலிடர்ப்படோம் நடலை யில்லோம்,
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந்த துன்ப மில்லை.....

தஞ்சாவூர் எல்லையிலுள்ள கருந்திட்டைக்குடி இடம் பெற்ற பாடல். இப்பாடலைப் பாடி இடர் போகுமன்றே என்று அழகாக முடிப்பார்.

நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன் செம்பங்
குடிநல்லக் குடிநளி நாட்டியத் தான்குடி,

கற்குடிதென் களக்குடி செங்காட்டங்குடி *கருந்திட்டைக்*
*குடிகடையக்* குடிகா ணுங்கால்,
விற்குடி வேள் விக்குடிநல் வேட்டங்குடி வேதிகுடி
மாணிகுடி விடைவாய்க்குடி,
புற்குடி மாகுடி தேவன்குடி நீலக்குடி புதுக்குடியும்
*போற்ற இடர்போகு மன்றே.*

பெருங்கவிஞரால்தான் இவ்வாறு ஊர்களை ஒன்று விடாமல் பாட முடியும். இதை வரிசைப்படுத்தியது மிக மிக அருமையான செயல்.

அவரவர் கணக்குகள் எழுதப்படுகின்றன. அதை இன்னம்பரில் கூறுகிறார்.

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கண*க்கின்னம்பர் ஈசனே.*

திருவையாற்றில் நடைபெறும் ஏழூர் வலம் வரும் அருமையான விழா. அவ்விழாவில் செல்பவர்கள் திருப்பூந்துருத்தியில் அவர் கட்டிய மடத்தைக் காணலாம். சதயந்தோறும் அருமையான வழிபாடு நடைபெறுகிறது.

**தாய்மொழியாகிய தமிழைப் போற்றும் பண்பு**

சலம்பூவோடு தூபம் *மறந்தறியேன்*
*தமிழோடிசை* பாடல் *மறந்தறியேன்,*
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்னாமம் என்நாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய்
உடலு ள்ளுறு சூலை தவிர்த்தருளாய்,
அலந்தேன்அடியேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே.

**திருப்பூந்துருத்தி தேவாரம்**

நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை நினையாவென்
நெஞ்சை நினைவித் தானைக்,
கல்லா தனவெல்லாங் கற்பித்
தானை காணா தனவெல்லாஞ்,
சொல்லி யென்னைத் தொடர்திங்
கடியேனை யாளாக் கொண்டு,
பொல்லாவென் நோய்தீர்த்த புனிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே.

# 27. நாவுக்கரசர் உணர்த்தும் அறம்

கோமதி சூரியமூர்த்தி, மதுரை.

அறம் என்பது முறைமை, செம்மை, இயல்பு, தரும நெறி, ஒழுக்க நெறி எனப் பலபொருள் தரும் ஓர் உயர் சொல்லாகும்.

"சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு" (குறள் - 31)

அறமானது சிறப்பு என்னும் இன்பத்தையும், செல்வம் என்னும் பொருளையும் தரும் என்பதால், இந்த அறத்தைவிட உலக மக்களுக்கு உறுதுணையாகி மேன்மேலும் ஆக்கத்தையும், உயர்வையும் தருவது வேறு ஒன்றும் இல்லை. நாவுக்கரசர் உணர்த்தும் அறம் என்னும் இக்கட்டுரை இரு பிரிவாக அமைகின்றது.

1. நாவுக்கரசர் வரலாறு உணர்த்தும் அறம்.
2. நாவுக்கரசர் பாடல்கள் உணர்த்தும் அறம்.

**1. நாவுக்கரசர் வரலாறு உணர்த்தும் அறம்**

**அறம் செய்தமை**

"மாசின் மனத்துயர் ஒழிய மருணீக்கியார் நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டு அறங்கள் செய்வாராய்க்
காசினி மேல் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்ப் பந்தரும் அமைப்பர்"
(நா. பு. 35)

"காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்து அளித்தும் விருந்து அளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும் நானிலத்துள்ளோ
யாவர்க்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்" (நா. பு. 36)

என்று சேக்கிழார், இளமையில் நாவுக்கரசர் நிலையாமையை உணர்ந்து ஆற்றிய அறச்செயல்களை வர்ணிக்கிறார். "மாசில் மனம்" என்ற தொடக்கம் இந்த அறங்கள் மாசற்ற மனத்துடன் செய்யப்பட்டவை என்பதை உணர்த்து கின்றது. எனவே அதனை "ஆசில் அறச்சாலைகள்" என அடைமொழி கொடுத்துக் கூறினார் சேக்கிழார்.

"பிறத்தலும் பிறந்தால் பிணிபட வாய்ந்து அசைந்து உடலம் புகுந்துநின்று
இறக்குமாறு உளதே இழித்தேன் பிறப்பினை நான்
அறத்தையே புரிந்த மனத்தனாய்" (4:205)

என்ற நாவுக்கரசரின் வாக்கே அவர் ஆற்றிய அறச்செயல்கட்கு அகச் சான்றாகும்.

**நஞ்சுண் நாகரிகம்**

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்ப, பெருவாழ்வு வந்தது எனப் பணிந்து ஏற்று உருவார அணிந்து உற்ற சூலை நோய் நீங்கிச் சைவம் சார்ந்த நாவுக்கரசரை அமணர்கள் நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்ணச் செய்தனர். நஞ்சுண்ட பெருமானருளால் எத்தீங்கும் விளைந்திலது.

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்" (குறள் - 580)

என்ற வள்ளுவர் வாக்கிற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவர் அல்லவா நாவுக்கரசர்.

**அறனல்ல செய்யாமை**

அமணர்கள் நாவுக்கரசரை ஏழுநாட்கள் சுண்ணாம்புக் காளவாயி லிட்ட போதும், மதம் பிடித்த யானையை ஏவிக் கொல்ல முயற்சித்த போதும், கல்லோடு கட்டிக் கடலில் இட்டபோதும், அவர் அவர்கட்குத் தீமை செய்தாரில்லை.

"திறனல்ல தான்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று" (குறள் - 157)

என்ற வள்ளுவர் வாக்கின்படி வாழ்ந்தவரல்லவா நாவுக்கரசர்.

**தொண்டு நெறி நின்ற தூநெறியாளர்**

"சத்தியமே கடவுள். தொண்டின் மூலமே அவனை அடைய முடியும்" என்று நம் காலத்தில் மகாத்மா காந்தியடிகள் கூறினார். அவருடைய வார்த்தைக்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் நாவுக்கரசர். "நாமார்க்கும் குடி அல்லோம்" என்று முழங்கிய நாவுக்கரசர் வேந்தனையும் தம் அகிம்சை முறையின் மூலம் தம் வழிக்குத் திருப்பினார். அகிம்சை அவர் ஆயுதம். தொண்டு அவர் கடமை.

"என் கடன் பணி செய்து கிடப்பதே" (5:192 - ஆம் பாடல்)

என்று தொண்டின் சிறப்பை உலகிற்கு உணர்த்தித் தூநெறி அடைந்தவர் நாவுக்கரசர். தொண்டு நெறி நிற்றலே உயிர்க்கு ஊதியம் பெறும் நெறி என்பதை,

"தொண்டலாது உயிர்க்கு ஊதியமில்லை"

என்று உணர்த்துகின்றார். நல்நோக்கத்துடனும், சிவ சிந்தனையோடும் அயர்விலாது தொண்டு நெறியில் நின்று வாழ்தலே உண்மைச் சமய வாழ்க்கை என உலகிற்கு உணர்த்தினார். அழகில் சிறந்த அரம்பையர்கள் பலர் ஆடியும், பாடியும் அவரைக் கவர முற்பட்ட பொழுது,

"அத்தனார் திருவடிக்கீழ் நினைவு அகலா அன்புருகு
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை திரியாது செய்பணியின் தலை நின்றார்"
(நாவு. 4:422)

இத்தகைய மனச் செம்மையே, மனநலமே அறமாகும்.

**2. நாவுக்கரசர் பாடல்கள் உணர்த்தும் அறம்**

**தீயவை செய்யாமை**

அறவழிக்கு அடிப்படையாக எண்ணம், சொல், செயல் மூன்றும் நல்லனவாய் அமைதல் வேண்டும்.

"தீதவை செய்து தீவினை வீழாதே" (5 : 595 -ஆம் பாடல்).

என நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

**நல்லவற்றை நினைத்தல்**

"கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியனாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்து அறிதிஎன்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவறச் சிரித்திட்டேனே"
(4:728)

என்ற நாவுக்கரசர் கூறுவது மனிதர்களை ஒழுக்க நெறியில், அறவழியில் நிறுத்த உதவும். உயிர்கள் நினைப்பனவற்றை யெல்லாம் உயிர்க்குள் உயிராய் இருக்கும் இறைவன் அறிகின்றான். எவ்விடத்தும், எக்காலத்திலும், எத்தகையோரும் செய்யும் செயல்களையும், அவர் எண்ணும் எண்ணங் களையும், அக்காலத்திலும், அவ்விடத்திலும், அவருள்ளத்திலும், பேரறிவும், பேராற்றலும் வாய்ந்த இறைவன் நிறைந்து நின்று அறிகின்றான் என்பதை உணரும் மாந்தர் தீயனவற்றை எண்ணவும், பேசவும், செய்யவும் கனவிலும் துணிவரோ! மாட்டார். மனதில் எப்போதும் நல்ல எண்ணம் வேண்டும் என்பதை நாவுக்கரசர் இப்பாடலால் உணர்த்துகின்றார்.

**காமம் நீக்கல்**

"கழித்திலேன் காம வெந்நோய் கரதன்மை என்னும் பாசம்
ஒழித்திலேன்" (4:265)

என்று காமம் என்ற கொடிய நோயைக் கழித்தேனில்லை. அதற்கு அடிப்படையான ஆசாபாசத்தையும் ஒழித்தேனல்லேன் என்கின்றார் நாவுக்கரசர். குறைகளைத் தம்மேல் ஏற்றி மறைமுறையாக மக்களியல்பைக் கண்டித்தல் அருளாளர் இயல்பு. மற்றோரிடத்தில் வெளிப்படையாகவே மக்கட்கு அறிவுறுத்துகின்றார்.

"காமத்துள் அழுந்தி நின்று கண்டரால் ஒறுப்புண்ணாதே"
(4:447)

என்கின்றார். காமம் - ஆசை. அது பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை என மூவகைப்படும். அழுந்தி நிற்றல் - அனுபவித்தல். கண்டார் - காலன். ஒறுப்பு - தண்டனை. காமத்தில் அழுந்திக் காலனால் தண்டனை அடையாதீர் என நாவுக்கரசர் அறிவுறுத்துகின்றார். காமத்தில் அழுந்தியவர்கள் கண்டோரால் வெறுக்கவும் படுவர்.

"பிணமுடை உடலுக்காகப் பித்தராய்த் திரிந்து நீங்கள்
புணர்வெனும் போகம் வேண்டா" (4:450)

என நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

**அறுபகை அறுத்தல்**

புறத்தில் உலக வாழ்க்கையில் பகை உள்ளது போல அகத்தில் மெய்யுணர்விற்கு, ஞானத்திற்கு ஆறுபகைகள் உள. அவை காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சிரியம். இவை தம்மை உடையவரை அழிக்கும் தன்மை உடையனவாதலால் "செறுபகை" (6:38) என்கின்றார் நாவுக்கரசர்.

"பொங்கு மத மானமே ஆர்வச் செற்றக்
குரோதமே உலோபமே பொறையே நீங்கள்
உங்கள் பெருமா நிலத்தின் எல்லை யெல்லாம்
உழறும் இதுகுறை முடிப்பீர்க்கு அரிதே" (6:274)

என்று தமக்கு இடர் செய்ய வந்த தேவ அரம்பையர்களின் அறமல்லாப் பண்புகளை நாவுக்கரசர் இடித்துரைக்கின்றார்.

"ஆர்வச் செற்றங்கள் குரோதம் நீக்கில்
சீலமும் நோன்புமாவார் திருச்செம்பொன் பள்ளியாரே"
(4:289)

என்பதால் நாவுக்கரசர், ஆசை, கோபம், விரோதம் இவைகளை விட்டால் திருச்செம்பொன்பள்ளி ஈசன் நமக்குப் புண்ணிய மூர்த்தியாய் விளங்குவார் என உணர்த்துகின்றார். அறம் ஒன்றையே உள்ளம் நாடவேண்டும். அவ்வாறு அறம் கனிந்த நெஞ்சுடையாரே ஆசை, சினம், வெறுப்பு முதலிய தீக்குணங் களிலிருந்து விடுபட முடியும். அவ்வாறு விடுமடுதலே அறிவின் பயன் என்பதை,

"அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச் செற்றக் குரோதம் நீக்கிஉன்
திறத்தனாய் ஒழிந்தேன் திருவாரூர் அம்மானே" (4:205)

என குறிப்பாக நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

**புலனடக்கம்**

ஐம்பொறிகள் வாயிலாக நுகரப்படும் ஐம்புலன்கள் மேற்செல்லும் அவாவே உயிர் அடையும் துன்பம் அனைத்திற்கும் காரணம்.

"அஞ்சினால் அடர்க்கப்பட்டு இங்கு உழிதரும் ஆதனேன்" (4:263)

"ஐவரால் அலைக்கப்பட்ட ஆக்கை கொண்டு அயர்த்துப் போனேன்" (4:404)

என்கின்றார் நாவுக்கரசர். புலன்கள் மேல் செல்லும் அவா ஒருவனைத் தீநெறிக்கண் செலுத்தி அழிவுக்கு வழிவகுக்கும். புலனடக்கம் இல்லாத வனிடத்து அகப்பகையாகிய அறுவகைக் குற்றங்களும் உண்டாகும். எனவே புலனடக்கம் தேவை. ஆனால் அஞ்சும் அடக்கிய அமரரும் இல்லை. எனவே என் செய்வது? வீணாகப் போகும் ஆற்று நீருக்கு அணை கட்டுவது போல, புலன்களை மடைமாற்றம் செய்ய வேண்டும். அதாவது உலகவழி நோக்கிச் செல்லவிடாது இறைவழி நோக்கித் திருப்ப வேண்டும்.

"வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப்
பொதுநீக்கித் தனை நினைய வல்லார்க்கு என்றும் பெருந்துணை" (6:5)

என அறிவுறுத்துகின்றார் நாவுக்கரசர்.

"புலன்களைப் போக நீக்கப் புத்தியை ஒருங்க வைத்து
.........................................................................
மலங்களை மாற்ற வல்லார் மனத்தினுள் போகமாகிச்
சினங்களைக் களைவார் போலும் திருப்பயற்றூரனாரே" (4:322)

என நாவுக்கரசர் உணர்த்துகின்றார். புலன்களை வெல்ல அதனை வென்றவர் பக்கம் சார வேண்டும்.

**வெகுளாமை**

"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்" (குறள்-35)

என்கின்றார் வள்ளுவர்.

"சினத்தினால் வரும் செய்தொழிலாம் அவை
அனைத்தும் நீங்கி நின்று" (5:866)

அன்புள்ளத்துடன் மருகல் பெருமானை நினைப்பவர்க்குத் துன்பம்தரும் பிறவி இல்லை என உணர்த்துகின்றார் நாவுக்கரசர்.

"காமம் வெகுளி மயக்கம்இவை மூன்றன்
நாமம்கெடக் கெடும் நோய்" (குறள்-360)

என்ற வள்ளுவர் வாக்கும் நாவுக்கரசர் கூறுவதுடன் ஒப்பு நோக்கத் தக்கது.

**வாய்மை**

வாய்மை ஒரு சிறந்த அறம். ஒருவன் பொய் பேசாமையாகிய அறத்தை இடைவிடாமல் எப்பொழுதும் செய்து வந்தால் அவன் மற்ற அறங்களைச் செய்ய வேண்டியதில்லை என்பார் வள்ளுவர் (குறள்-297).

இவ்வுலகில் மக்கள் செல்வத்தைச் சேர்க்கப் பொய் பேசுகின்றனர். அதனால் வெட்கமும் அடைவதில்லை. இதனை,

"மாட்டைத் தேடி மகிழ்ந்து நீர் நும்முளே
நாட்டும் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்" (5:831)

என்று நாவுக்கரசர் இடித்துரைக்கின்றார். அவ்வாறு பொய் பேசுபவர்கள் உள்ளத்துள் இறைவன் இரான்,

"பொய்யர் மனத்துப் புறம்பாவான் காண்" (6:498)

"பொய் சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி" (6:566)

என உணர்த்துகின்றார் நாவுக்கரசர். வாய்மை பேசுபவன் தவத்தோடு, அறத்தையும் செய்பவரை விடச் சிறந்தவன் என்கின்றார் வள்ளுவர் (குறள் - 295). புறத்தூய்மை நீரால் அமையும், அகத்தூய்மை வாய்மையால் அமையும். மெய்மைப் பொருளாம் இறைவனைச் சிந்தித்தலாகிய வாய்மை ஒழுக்கம் பற்றி,

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக" (4:739)

என்று நாவுக்கரசர் கூறுகின்றார். சிவகதி என்னும் பயிர் செழித்து வளர, மெய்ம்மையாகிய உழுதொழிலைச் (சிவ வழிபாடுகளை) செய்ய வேண்டும் என்றும், பொய்மையாகிய களையைப் பிடுங்க வேண்டும் என்றும் நாவுக்கரசர் உணர்த்துகின்றார் (4:737).

இறைவனின் திருநாமத்தைச் சொன்னால் புண்ணியம் பெருகிவரும். பொய்மை நம்மை விட்டு நீங்கும். கூர்மையான அறிவு உண்டாகும்.

"பூரியா வரும் புண்ணியம் பொய் கெடும்
கூரியதாய் அறிவு கை கூடிடும்

சீரியார் பயில் சேறையுள் செந்நெறி
நாரிபாகன்தன் நாமம் நவிலவே'' (5:769)

என்று நாவுக்கரசர் அறிவுறுத்துகின்றார்.

**புறங்கூறாமை**

தம்மிடமுள்ள குற்றத்தை மறந்தும், மறைத்தும் பிறரிடம் குற்றம் காண்பதும், அதைப் பெரிதுபடுத்திப் பலரிடமும் பேசுதலும் மனிதர்க்குரிய இயல்புகளுள் ஒன்று. மக்களின் இந்த இழிந்த பண்பை,

''பேச்சோடு பேச்சுக்கெல்லாம் பிறர்தமை புறமே
பேசக் கூச்சிலேன்'' (4:759)

என்று நாவுக்கரசர் இடித்துரைக்கின்றார். பிறனைக் காணாதவிடத்து அவனை இகழ்ந்து பேசி, கண்டபோது அவனைப் புகழ்ந்து வாழ்தலை விட இறப்பது மேலானது (குறள் - 183) என்கின்றார் வள்ளுவர். ''ஒருவனது புறம் கூறும் குணத்தைக் கொண்டு அவன் அறத்தை நல்லதென்று போற்றும் உள்ளம் இல்லாதவன் என அறியலாம்'' (குறள் - 185) என்கின்றார் வள்ளுவர். அறஉள்ளம் உடையான் புறம் கூறான்.

**சாதிவேற்றுமை பாராட்டாமை**

சாதிச் சண்டைகளாலும், சமயச் சடங்குகளாலும் எல்லையில்லாத தொல்லைகளை அனுபவித்து வரும் மனித குலம் ஒன்றுபட்டு வாழ நாவுக்கரசர் ஒரு அறவழி காட்டுகின்றார்.

''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்'' (5:604)

என்று கோத்திரமும், குலமும் காண்பாரைச் சாடுகின்றார்.

'' ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'' (6:938)

என்ற நாவுக்கரசரின் வழி சாதி வேற்றுமையைத் தவிர்க்கும்.

**ஈதலறம்**

ஈகை என்பது தலையாய அறம். ''செல்வத்துப் பயன் ஈதல்'' என்று புறநானூறு (189) கூறும். ஈதல் இன்பம் தரும். ''இன்பம் அதுகண்டு ஈகிலாப் பேதைகள்'' (திருமந்திரம் - 267) என திருமூலர் ஈயாதாரைப் பேதைகள் என்கின்றார்.

''இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்'' (நல்வழி-2)

என்கின்றார் ஔவையார்.

"இரப்பவர்க்கு ஈய வைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்" (4:383)

என்று நாவுக்கரசர் ஈதலறம் பற்றி உணர்த்துகின்றார்.

ஈபவர்க்கே பொருள் உண்டு என வள்ளுவர் கூற, (குறள்-232) ஈபவர்க்கே அருள் உண்டு என்கின்றார் நாவுக்கரசர். இரத்தலின் கொடுமையை நினைத்தால் உள்ளம் கரையும். இல்லை என்று கரவு கொள்வோர் கொடுமையை எண்ணினால் கரைந்து நின்ற உள்ளமும் இல்லாது அழிந்து போகும். (குறள்-1069) என்று வள்ளுவர் கூற, கரப்பவர்கள் கடு நரகங்கள் சேர்வர் என நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

## அறவழியில் நிற்க உதவும் எட்டுப் பண்புகள்

"எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்டுஅலர் இடுவார் வினை வாயுமால்"

எனத் தொடங்கும் திருஅதிகை வீரட்டப் பதிகப் பாடல்கள் முழுவதும் (5:542 - 551) அட்டமாமலரிட்டு வழிபடுதலை உணர்த்தும். அட்ட புஷ்பங்களாவன புன்னை, வெள்ளெருக்கு, செண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை முதலியன. இவை சாதகனுக்குரிய எட்டுப் பண்புகளை உணர்த்தும். அவை கொல்லாமை, ஐம்பொறி அடக்கம், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு முதலியன. இப்பண்புகள் ஒருவன் அறவழியில் ஒழுக உதவுவன.

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு (குறள்-32)

ஒருவனுக்கு அறம் செய்வதைவிட மேலான நன்மையைத் தருவது வேறு எதுவுமில்லை. அந்த அறத்தைச் செய்யாமல் விடுவதை விட மேலான கேடு வேறு இல்லை என்கின்றார் வள்ளுவர்.

அறங்காட்டி அந்தணர்க்கு அன்று ஆல நீழல்
அறம் அருளிச் செய்த அரனார் (6:13) சிவபெருமான்

அவர் அருள் பெற்ற நாவுக்கரசரும் தாமும் அறவழியில் நடந்து, தம் பாடல்கள் மூலம் அகிலோர்க்கு உரைத்த அறங்கள் பலவற்றுள் ஒரு சில இவ்வாய்வுக் கட்டுரையில் எடுத்துக் காட்டப்பட்டன.

நாவுக்கரசர் தேவாரத்தின் பாடல் எண்கள் தருமபுர ஆதீன வெளியீட்டுப் பழைய பதிப்பு நான்காம் திருமுறை (1957), ஐந்தாம் திருமுறை (1961), ஆறாம் திருமுறை (1963) இவற்றைப் பின்பற்றித் தரப்பட்டுள்ளன.

# 28. நாவுக்கரசர் பாடல்களில் இசைக்கலை

மு. கோவிந்தராசன், சென்னை.

மனிதன் வாழ்க்கையில் இன்ப, துன்பங்கள் நிகழ்வது இயற்கை யாகும். இன்பமடைகிற பொழுது ஒருவகை ஒலியும் துன்பப்படுகிற பொழுது ஒரு வகையான ஒலியும் மனிதனிடமிருந்து வெளிப்படுகின்றது. அவ்வொலி பேச்சொலி போன்று இல்லாமல் உணர்ச்சிப் பொருளுடைய தொடரொலியாக அமையும். உணர்ந்து அறியும் ஆற்றலுடையோர் அவ்வொலிகளின் பொருளை உணர்வர். அத்தகைய ஒலிச்சுவையுணர்வு நிலையில் இசைக் கலையின் தொடக்கத்தைக் காண முடிகின்றது.

"இசை என்றால் மக்கள் உள்ளத்தோடு பொருந்துதல் எனப் பொருள் படும். இசை இனிமையான ஒலிகளின் சேர்க்கையாகும். இது உயிர்களின் உள்ளத்தை உருக்கும் தன்மை வாய்ந்ததாகும்; இனிமை மிக்கது; எழில் வாய்ந்தது. இது மக்களுக்கு மகிழ்ச்சியூட்டும் தன்மையும் எழுச்சியூட்டும் வன்மையும் அமையப் பெற்றதாய் இருக்கிறது" என்கிறார் சாத்தாங்குளம் அ. இராகவன் அவர்கள். (இசையும் யாழும், கலைநூல் பதிப்பகம், பாளையங்கோட்டை, 1971, ப. 42).

இசையின் இனிமைக்கும் இன்ப உணர்விற்கும் சிறப்புக் கொடுக்கப் பட்டுள்ளது. இசையால் மனிதன் மட்டுமின்றி அனைத்து உயிர்களும் மகிழ்வதைக் காண முடிகிறது.

எளிய நிலையில் உயிர்களைத் தன்பால் இசைவிப்பதும் உயர்ந்த நிலையில் இறைவனைத் தன்பால் இசைவிப்பதும் இசையின் ஆற்றலாகும் என்று இசையின் பயனை இறைவனுடன் மனித மனம் ஒன்றுபடுவதற் குரிய உயர்நிலைக்கு உயர்த்திக்காட்ட முற்படுகிறார் செ. வைத்தியலிங்கம். (சேக்கிழாரும் நுண்கலைகளும், பெரியபுராணச் சொற்பொழிவுகள், கழக வெளியீடு, சென்னை, 1975, ப. 135)

இசையைப் பெரும்பாலும் சமயங்கள் வளர்த்து வந்துள்ளன. இசையாற்றலால் மனித மனத்தை மாற்றி எளிதில் வயப்படுத்தி இறை உணர்விற்கு வழி செலுத்த முடியும் என்பதைச் சமயங்கள் உறுதியாக நம்புகின்றன.

செவிவழிப் புகுந்து இதய நாடிகளைத் தடவி உயிரினங்களை இசையவும் பொருந்தவும் வைக்கின்ற பொழுது இனிய ஒலிகள் இசை என்ற பெயரைப் பெறுகின்றன என்கிறார் ச. வே. சுப்பிரமணியன். (தமிழர் தோற்கருவிகள், முன்னுரை, ப. 5) இவ்வொலிகள் செவியை மட்டும் எட்டி உள்ளத்தைக் கவராமல் நின்றுவிடின் அவை ஓசை என்று அழைக்கப்படும். இசை என்று பெயர் பெறுவதில்லை.

பண்பட்ட எல்லா இனங்களும் தத்தமக்குரிய இசை மரபுகளைக் கொண்டுள்ளன. காடுவாழ் மாந்தரும் நாடோடி இனங்களும் தமக்குரிய இசை மரபுகளைக் கொண்டுள்ளனர். பழமைச் சிறப்புமிக்க தமிழினத்தின் இசை மரபும் பழமையுடையதாகும். அனைத்து உயிர்களையும் வயப்படுத்துவது என்னும் பொருளில் 'இசை' என்று பெயரிட்ட தமிழரின் நுண்ணறிவைப் பாராட்ட வேண்டும் என்கிறார் அ. தட்சிணாமூர்த்தி. (இசைக் கலையின் வரலாறு, தமிழர் நாகரிகமும் பண்பாடும், வெற்றிச் செல்வி பதிப்பகம், தஞ்சாவூர், 1980, ப. 179)

பண்டைக் காலத்தில் புண்பட்ட வீரர்களைப் பேய்களிடமிருந்து காப்பாற்றக் காஞ்சிப் பண்ணையும், நரிகளை விரட்ட விளரிப் பண்ணையும் பாடினர் எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது. (புறம். 281)

**இசையால் விளையும் பயன்கள்**

இசையால் விழாக்கள் சிறப்படைகின்றன; இன்பந் தருகின்றது; விளையாட்டு வீரர்களும் இசையை விரும்புகின்றனர். மக்களை இசை உற்சாகப்படுத்துகின்றன. இறை உணர்விற்குத் தூண்டுதலாக இருப்பதால் பல்வேறு சமயத்தினர் இசையைப் புனிதமாக மதிக்கின்றனர். இசை நோக்கம் நன்றாக அமைந்தால் இசைப்பயன் நன்றாக அமையும். இசை ஒரு பயனுள்ள கலையாகும்.

**கலையின் நோக்கம்**

உலக அனுபவங்களைக் கொண்டு மனிதன் தன்னுடைய அறிவின் ஆற்றலால் அழகானவற்றைச் சிறப்பாகப் படைப்பது கலையின் அடிப்படை நோக்கமாகும். 'மக்களின் வாழ்வியலை, பண்பாட்டை, நாகரிகத்தை எடுத்துக் காட்டும் கண்ணாடி' என்கிறார் டி.வி. நாராயணசாமி. மக்கள் வாழ, வளரச் சமுதாய நீதிகளையும் அறத்தத்துவங்களையும் படம் பிடித்துக் காட்டிட, கலையைப் போல் வேறு சாதனம் இல்லை. (கலையும் மொழியும், வெள்ளி விழா மலர், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம், சென்னை, 1980, ப. 32)

கலைகள் மக்களின் வாழ்வினைக் கொண்டு அமைக்கப்படுகின்றன. வாழ்வியல் கூறுகளை எடுத்துக்காட்டுகின்றன. நீதி, நியாயம், அறம்,

மறம் முதலானவற்றைக் கவினழகுடன் விளக்குகின்றன. சமூக உண்மைகள் உரைக்கப்படுகின்றன. இத்தகு கலைகளே வாழும் இயல்பு கொண்டவை யாகும். நிலையான கருத்துகளை முறையாகக் காட்டும் தன்மையுடையனவாகும்.

### கலையின் பயன்கள்

கலைகள் மிகவும் ஆற்றல் உடையவையாகும். அவை மனித உள்ளத்தின் இயல்பினை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. கலையின் வாயிலாக மனிதன் வெளிப்படுத்திக் கொள்வது தன் செய்திகளையோ நோக்கங்களையோ அல்ல. மனிதன் கலைகளின் வாயிலாகத் தன்னைத் தானே வெளிப்படுத்திக் கொள்கிறான்.

மனித நாகரிகம், பண்பாடு, வாழ்க்கை முறை, சமூக அமைப்பு, சமுதாய உணர்வு, சமயக் கோட்பாடு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சீர்திருத்தங்கள், சிந்தனைகள் ஆகியன கலைகளின் வாயிலாக வெளிப்படுகின்றன.

கட்டடம் கட்டுவது ஒரு கலைதான். எவ்வித மாற்றமுமின்றி அமைவதைக் கலையாகக் கருத முடியாது. மனிதன் கட்டடம் அமைப்பதில் மாற்றத்தையும் தோற்றப் பொலிவையும் காட்டுகிறான். வாழ்க்கைச் சூழலுக்கு ஏற்றவாறு கட்டட அமைப்பு முறைகளையும் வசதிகளையும் அமைத்துக் கட்டுகிறான். அந்த அமைப்பில் தன் ஆற்றலால் கலைத் தன்மைகளைக் கட்டுகிறான். அது கலையாகி விடுகின்றது.

எல்லாக் கலைகளும் உள்ளத்தைத் தட்டி எழுப்பும் விதத்தில் அமைய வேண்டும். சிற்பம், ஓவியம் போன்றவை கண்ணுக்கும், இசை காதுக்கும், நடனம், நாடகம் முதலானவை கண், காது ஆகிய புலன் களுக்கும் இலக்கியம் மனத்திற்கும் இன்பம் அளிப்பதைக் காண முடிகின்றது.

### திருநாவுக்கரசர் பாடல்களில் இசை

சைவ சமய மறுமலர்ச்சிக் காலத்தில் தோன்றிய தேவாரப் பாடல்கள் அனைத்தும் இசைக் களஞ்சியமாகக் காணப்படுகின்றன. திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் சைவத்தின் பெருமைகளை உலகிற்கு உணர்த்தினர். இசை மக்களைக் கவரும் தன்மை உடையது என்பதனை அறிந்து, திருநாவுக்கரசர் அதற்கு ஏற்றவாறு பாடல்களைப் பாடியுள்ளார்.

### இசைப் பண்கள்

திருநாவுக்கரசர் தம்முடைய பாடல்களில் பல்வேறு பண்களைப் பயன்படுத்தியுள்ளார். சான்றாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்.

| பதிகங்கள் | - பண் |
|---|---|
| முதல் பதிகம் | - கொல்லி |

| | | |
|---|---|---|
| இரண்டு முதல் ஏழு பதிகங்கள் | - | காந்தாரம் |
| எட்டாம் பதிகம் | - | பியந்தைக் காந்தாரம் |
| ஒன்பதாவது பதிகம் | - | சாதாரி |
| பத்து முதல் பதினொராவது பதிகம் | - | காந்தார பஞ்சமம் |
| பன்னிரெண்டு முதல் பதின்மூன்றாவது பதிகம் | - | பழந்தக்கராகம் |
| 14 - 15 பதிகம் | - | பழம் - பஞ்சுரம் |
| 16 - 18 பதிகம் | - | இந்தளம் |
| 19 - 20 பதிகம் | - | சீகா மரம் |
| 21 பதிகம் | - | குறிஞ்சி |
| 22 - 23 பதிகம் | - | கொல்லி |
| 80 - 81 பதிகம் | - | கொல்லி |

திருநாவுக்கரசர் இசைப்பாடல்களைப் பாடி இறையருளைப் போற்றி வியக்கும் தன்மையுள்ளவர். இசையால் இறைவனைப் புகழ்வதைக் கடமையாகக் கொண்டு வாழ்ந்தவர். சான்று :

'சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்'

என்று தொடங்கும் பாடல்.

நீராலும் பூவாலும் தூபமிட்டு இறைவனை வழிபடுவது வழக்கமாகும். அவ்வாறு செய்வதைத் திருநாவுக்கரசர் மறக்கவில்லை. இறைவனின் புகழை இனிய தமிழிசைப் பாடல்களால் விளக்கி மனமுருகிப் பாடியுள்ளார். அதனை மற்ற வழிபாட்டு முறைக்கு ஈடுஇணையாகக் கருதுகிறார். தமிழுக்கும் இசைக்கும் திருநாவுக்கரசர் கொடுத்துள்ள மதிப்பு இதனால் நன்கு விளங்கும்.

இசை இனிதாக இருக்க வேண்டும். கடுமையான ஒலி அல்லிசையாகி விடும். இசை பற்றித் திருநாவுக்கரசர் கொண்டுள்ள கருத்து இதனால் புலனாகின்றது.

இசைப் பாடல்களை இயற்றவும் இசையமைத்துப் பாடவும் திருநாவுக்கரசர் வல்லவர் என்பதை இவர் பாடல்கள் கொண்டு அறிய முடிகின்றது.

திருநாவுக்கரசர் சிறப்பாக நேரிசை, விருத்தம், தாண்டகம் ஆகிய இசைப் பாடல் அமைப்புகளில் பக்திப் பாடல்களைப் பாடியுள்ளார். இறைவனை நினைத்துப் பாடியமையால் இப்பாடல்கள் 'திரு' என்ற சிறப்பு பெற்றுத் திகழ்கின்றன.

**திருநேரிசைப் பாடல்**

'ஒருடம் பிருவ ராகி ஒளிநிலா எறிக்குஞ் சென்னிப்
பாரிடம் பாணி செய்ய பயின்றவெம் பரம மூர்த்தி
காரிடந் தில்லை தன்னுள் கருதுசிற் றம்பலத்தே
பேரிடம் பெருக நின்று பிறங்கெரி யாடு மாறே'

இப்பாடல் அடிகள் அறுசீர் விருத்த அமைப்பில் உள்ளன. இப்பெயர் பாடலின் அமைப்பினைக் கருதாமல் இசையைக் கொண்டு கொடுக்கப்பட்டுள்ளது.

**திருவிருத்தப் பாடல்**

''கருநட்ட கண்டனை அண்டத் தலைவனைக் கற்பகத்தை
செருநட்ட மும்மதில் எய்யவல் லானைச் செந்தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச் சிற்றம்பலத்து
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று வாழ்த்துவனே''

ஐந்து சீர்களைக் கொண்ட இசைப்பாடலாகும்.

**திருத்தாண்டகம்**

ஆறாம் திருமுறையில் திருநாவுக்கரசர் கோயில் பற்றிப் பாடிய பாடலொன்று சான்றாக அமைகின்றது. இத்திருத்தாண்டகம் எண்சீர் விருத்தமாகும். இதனை 'நெடுந்தாண்டகம்' என்றும் கூறுவர். சீரளவில் குறைந்த தாண்டக இசைப் பாடல்களும் உண்டு. அவற்றினைக் 'குறு'ந்தாண்டகம் என்றும் கூறுவர்.

தாண்டகம் இசையமைப்பில் சிறந்ததாகக் கருதப் பெறுகின்றது. இதனைப் பாடுவதில் திருநாவுக்கரசர் வல்லவராவர். ஆகவே அவரைத் 'தாண்டக வேந்தன்' எனச் சிறப்பித்துக் கூறுவர். தாண்டகத்தைப் பின்னர் வந்த இறையடியார்கள் பலரும் பாடியுள்ளனர். சான்றாக,

அரியானை அந்தணர் தம்சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அறுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள் தங்கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கடைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே'' (திருநா. 215 : 1)

என்ற பாடலைக் கூறலாம்.

இசையால் விளையும் பயன்கள், கலையின் நோக்கம், பயன்கள், திருநாவுக்கரசர் பாடல்களில் இசை, இசைப் பண்கள், திருநேரிசைப் பாடல், திருவிருத்தப்பாடல், திருத்தாண்டகம் ஆகியன குறித்து இக்கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளன.

# 29. அப்பர் பாடல்களில் எழுத்துப்போலிகள்

**மோ.கோ. கோவைமணி,** தஞ்சாவூர்.

ஒரு சொல்லில் ஓரெழுத்திற்கு மாற்றாக வேறொர் எழுத்து வந்தாலும் அச்சொல்லின் பொருள் மாறாது. அவ்வாறு வந்த எழுத்தை 'எழுத்துப் போலி' (போலி எழுத்து) என்பர். இவ்வெழுத்துப் போலியானது அப்பர் பாடல்களில் பயின்று வரும் தன்மை குறித்து இக்கட்டுரை ஆராய்கின்றது.

**எழுத்துப்போலி**

தொல்காப்பியர், அகரமும் இகரமும் கூடி ஐகாரம் போலாகுமென்றும், அகரமும் உகரமும் கூடி ஔகாரம் போலாகுமென்றும், அகரத்துடன் யகரமெய் கூட ஐகாரம் போலாகுமென்றும், அகரத்துடன் வகரமெய் கூடி ஔகாரம் போலாகுமென்றும், மொழியீற்றில் இகரம் யகரம் போலாகு மென்றும் எழுத்துப் போலிகளில் வகைகளை ஐந்தாக்குகின்றார் (தொல். மொழிமரபு, 21-25). தொல்காப்பியர் பொதுவாகக் கூறிய எழுத்துப் போலிகளுக்கு நன்னூலார் பெயர் சுட்டுகின்றார். அவற்றுள் சில புதுவகையான போலி இனங்களையும் சுட்டிச் செல்கின்றார். அதாவது மொழிக்கு முதல்-இடை-கடைப் போலிகளைச் சுட்டியவர், ஓசையின்பம் காரணமாக அடிஎதுகை மற்றும் அடிமோனைத் தொடைகளில் ஐகார நெட்டெழுத்திற்கு இகரயகரங்களும், ஔகார நெட்டெழுத்திற்கு உகர வகரங்களும் வரும் என்கின்றார் (நன்னூல், 122-125). இவ்விருவரின் கருத்துக்களையும் உட்கொண்டு இலக்கண விளக்கம் யாத்த திருவாரூர் வைத்தியநாத தேசிகர் அவர்கள் தம்முடைய உரைப்பகுதியில் 'முற்றுப் போலி' ஒன்றுண்டு என்பதைக் கம்பராமாயணக் காப்புப் பாடலில் வரும் 'அஞ்சு - ஐந்து' என்பதை எடுத்துக் காட்டியிருக்கின்றார்.

தொல்காப்பியர் சுட்டிய 'போலி'யை நன்னூலார் 'போலி', 'சந்தியக்கரம்' என்று இரண்டாக்கிப் பார்த்துள்ளார். மேலும், இலக்கணக் கொத்துடையார் 'இணையெழுத்து' என்றும்; வைத்தியநாத தேசிகர் (இலக்கண விளக்கம் - 36), நச்சினார்க்கினியர் (தொல். 54), வீரசோழிய நூலாசிரியர் (வீர. 3), நேமிநாதர் (நேமிநாதம் - 9), சங்கரநமச்சிவாயர் மற்றும் இராமாநுசக்கவிராயர் ஆகியோரின் நன்னூல் 125-ஆம் நூற்பாக்கான உரையில் 'போலி'யை 'எழுத்துப்போலி' என்றே சுட்டிச் செல்கின்றனர். இப்போலியை வடநூலார் 'சமானாக்கரம்' என்றும்; மொழியியலார் 'Free variation', Substitute' என்றவாறும் சுட்டுகின்றனர்.

தொல்காப்பியர் காலத்துக்குப் பிறகு அப்பர் தேவாரம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு தோன்றியது. தொல்காப்பியர் கூறிய எழுத்துப்போலி அப்பர் பாடல்களில் எவ்வாறு அமைந்திருக்கின்றது என்பது பற்றியும், அப்பர் சுவாமிகள் காலத்திற்குப் பிறகு (11-ஆம் நூற்றாண்டு யாப்பருங்கல விருத்தியும், வீரசோழியமும்; 13-ஆம் நூற்றாண்டு நன்னூலும்; 17-ஆம் நூற்றாண்டு இலக்கண விளக்கமும்; 18-ஆம் நூற்றாண்டு தொன்னூல் விளக்கமும்; 19-ஆம் நூற்றாண்டு முத்துவீரியமும் தோன்றியிருக்கின்றன) தோன்றிய இலக்கண நூல்கள் எடுத்தியம்பும் எழுத்துப்போலிகளுக்கு அப்பர் தேவாரம் அடிப்படையானது பற்றியும் இக்கட்டுரை விளக்க முற்படுகின்றது.

**சந்தியக்கரம்**

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"
(தொல். மொழிமரபு - 23)

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் அகரத்திற்குப் பின்பு இகர வடிவு போல 'ய்' என்ற ஒற்றுச் சேர்ந்து ஐகாரம் என்ற நெட்டொலி தோன்றும் என்கின்றார் (ஐவனம் - அய்வனம்). இளம்பூரணர் அவர்கள், 'மெய்பெறத் தோன்றும்' என்றதனால் அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப் புள்ளியும் ஔகாரம் போல் வருமெனக் கொள்க (ஔவை - அவ்வை) என்கின்றார். இளம்பூரணரின் கருத்தை வலியுறுத்தும் நோக்கில் வ.உ. சிதம்பரம்பிள்ளை அவர்களின் தொல்காப்பியப் பதிப்பில் இந்நூற்பா,

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

என்றவாறு பதிப்பாகி இருக்கின்றது. இக்கருத்தை,

"அகரம் வகரத்தினோடு இயைந்து ஔவாம் யகரத்தினோடு
அகரம் இயைந்து ஐயது ஆகும்" (வீரசோழியம் - 3:1-2)

என்று புத்தமித்திரரும்,

"ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயெ னெழுத்தொடு மெய்பெறத் தோன்றும்"

"உன்வொடு வவ்வரின் ஔவிய லாகும்"

என்ற அவிநயனாரின் கருத்தை யாப்பருங்கல விருத்தியாசிரியர் 'அசைக்கு உறுப்பாகும் எழுத்தின்வகை'க்குக் கூறும் விருத்தியில் மேற்கோளாக ஆண்டுள்ளார். இதற்கு வரலாறு கூறும் முகத்தான் "அய்யன், கய்தை, தய்யல், மய்யல், கய்யன் என அகரத்தோடு யகர ஒற்று வந்து ஐயன், கைதை, தையல், மையல், கையன் என்னும் ஐகாரத்தின் பயத்தவாயினவாறு.

கஃசு, கஃதம், கஃசம் என அகரத்தோடு ஆய்தம் வந்து கைசு, கைதம், கைசம் என்னும் ஐகாரத்தின் பயத்தவாயினவாறு. அவ்வை, நவ்வி, அஉவை, நஉவி என அகரத்தோடு வகர ஒற்றும் உகரமும் வந்து ஔவை, நௌவி என்னும் ஔகாரத்தின் பயத்தவாயினவாறு'' (யா. வி. ப. 29) என்று யாப்பருங்கல விருத்திகாரர் குறிப்பிடுகின்றார். இளம்பூரணரின் உரைக் கருத்தினையும் புத்தமித்தரரின் கருத்தினையும், யாப்பருங்கலவிருத்திகாரர் கருத்தினையும் உட்கொண்டு நன்னூலார்,

''அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும்; அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன'' (நன்னூல் - 125)

என்று நூற்பா வகுக்கின்றார். அதாவது, அகரத்தின் முன்னர் இகரமும் யகரமும் தம்முள் ஒத்துவரின் ஐ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகரமும் தம்முள் ஒத்துவரின் ஔ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும் என்கின்றார் (அஇ-ஐ; அய்-ஐ; கஇ-கை; கய்-கை; அஉ-ஔ; அவ்-ஔ; கஉ-கௌ; கவ்-கௌ). இந்நெட்டெழுத்துக்கள் (ஐ,ஔ) உடம்படுமெய் பெற்று கன்னடம், தெலுங்கு ஆகிய மொழி களில் வருவன பற்றியும்; உடம்படுமெய் பெறாது பிராகிருத மொழியில் வருவது பற்றியும் மொழியியலார் எடுத்துரைப்பர். தமிழ்மொழியில் கூட பிற்கால வடமொழி எழுத்துக்களை எழுதுமிடத்து ஐ,ஔ என்பன ய,வ பெற்று வருகின்றதையும் உணர முடிகின்றது (வைத்தியன் - வயித்தியன்; மௌனம் - மவுனம்).

இவ்வாறு 'ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' என்னும் தொல்காப்பியரின் கூற்று புத்தமித்திரர், யாப்பருங்கல விருத்தியாசிரியர், நன்னூலார் ஆகியோரால் தெளிவாக்கப்பெற்ற பின் இலக்கண விளக்க உரையில் திருவாரூர் வைத்தியநாத தேசிகர் அவர்கள் (ப. 62,63)

''*பொய்*படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்'' (திருக்குறள் - 836)

''*கை*யறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
*மெய்*யறி யாமை கொளல்'' (திருக்குறள் - 925)

''*ஔ*வித் தழுக்கா றுடையானைச் செய்யவன்
*தவ்*வையைக் காட்டி விடும்'' (திருக்குறள் - 167)

என வருவன மோனைத் தொடையோடும் எதுகைத் தொடையோடும் மாறுபட்டு இலக்கண வழுவாகா .வண்ணம் போலியைக் கடியாது போற்றலும் வேண்டும் என்கின்றார். இவ்வமைப்பு அப்பர் தேவாரத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. ஓசை இன்பம் கருதி அப்பர் சுவாமிகள் யகர ஒற்று ஐகாரம் என்னும் நெட்டெழுத்தொலியாக அடிஎதுகை மற்றும் அடிமோனைத் தொடையில் வைத்துப் பாடிய பாடல்கள் எண்பது ஆகும்.

குறிப்பாக,

"*செய்*யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
*கை*யர் கனைகழல் கட்டிய காலினர்
*மெய்*யர் மெய்ந்நின் றவர்க்கல்லா தவர்க்கென்றும்
*பொய்*யர் புகலூர்ப் புரிசடை யாரே" (4:16:1)

என்னும் அப்பர் பாடலின் ஒவ்வோர் அடியின் முதல் அசையானது 'செய் - கை - மெய் - பொய்' என வந்திருப்பதால் உணரலாம். இதேபோல் ஏனைய பாடல்களிலும் அடியெதுகை மற்றும் அடிமோனைத் தொடைகள் அமைந்திருப்பதைப் பின்வருமாறு சுட்டிக் காட்டலாம் (ஒவ்வொரு பாடலடியின் முதற்சீர் இங்குத் தரப்பெறுகின்றது).

பொய்விரா - மெய்விரா - ஐவரால் - செய்வரால் (4:4:1)
பையஞ் - கையஞ்சு - பொய்யஞ்சு - ஐயஞ்சினப் (4:4:10)
மெய்யெலாம் - உய்யலாம் - கொய்யுலா - கையினால் (4:5:1)
பையர - மையரி - செய்யெறி - கையெரி (4:22:4)
பொய்யினை - ஐயநீ - வையகநீ - பையநின் (4:23:7)
பொய்யினால் - மெய்யனாய் - செய்யதா - ஐயநான் (4:26:2)
பொய்விரா - மெய்விரா - ஐவரால் - செய்வரால் (4:41:1)
மையினார் - கையிலோர் - எய்வதோர் - கையினால் (4:44:5)
மையரி - கையெரி - ஐநெரி - செய்வதொன் (4:54:2)
கையராய் - மெய்யராய் - உய்வராய் - பையரா (4:58:5)
செய்யநின் - மையணி - சைவனே - ஐயனே (4:62:4)
பொய்ம்மறி - மைம்மறி - கைம்மறி - செந்நெறி (4:67:8)
வையனை - செய்யனை - கையனை - ஐயனை (4:71:2)
உய்த்தகால் - வைத்தகால் - மொய்த்தகான் - வைத்தகால் (4:77:10)
பைக்கை - வைக்கை - மொய்க்கை - மிக்க (4:88:10)
கொய்ம்மலர் - மெய்ம்மலர் - மைம்மலர் - நின்மலன் (4:89:5)
கையது - வெய்யது - செய்யினில் - ஐயனை (4:90:1)
கைத்தலை - பொய்த்தலை - செய்த்தலை - அத்தனை (4:90:2)
மையணி - மெய்யணி - செய்ய - ஐயனை (4:90:9)
வைத்த - சித்த - மொய்த்த - அத்தன் (4:94:5)

மெய்யம்பு - பொய்யம்பெய் - கையம்பெய் - குய்யம்பெய் (4:99:3)

பைதற் - செய்தற் - உய்தற் - எய்தற் (4:100:2)

கையிலிடு - உய்யுநெறி - ஐயன்அண் - பொய்யன் (4:101:9)

பைங்கால் - அங்காற் - செங்காற் - வெங்காற் (4:104:2)

நெய்தற் - கைதை - பைதற் - எய்தப் (4:106:1)

மைகொள் - பைகொள் - செய்ய - ஐய (5:2:7)

நெய்யொப் - மெய்யொப் - ஐயொப் - கையொப் (5:3:5)

மையுலாவிய - கையுலாவிய - ஐயன் - உய்யலாம் (5:7:12)

நெய்தலாம்பல் - மெய்யினார் - தையல் - பைதல் (5:9:5)

பொய்தொழாது - செய்தெழா - வைதெழா - கைதொழா (5:19:3)

செய்தவன் - எய்த - கைது - ஐது (5:28:9)

வையந்தான் - மெய்யைக் - ஐயன் - கையில் (5:29:9)

வையம் - ஐயனை - பைகொளாட - பொய்யர் (5:35:2)

கைகொள் - மைகொள் - செய்யமேனி - ஐயர் (5:35:7)

வெங்கண் - பைங்கண் - செங்கண் - அங்கண் (5:36:8)

செய்ய - மைய - கைகொள் - ஐயனே (5:40:4)

பொய்யனை - மெய்யனை - கையனை - ஐயனை (5:48:9)

ஐயனே - உய்யலாம் - செய்யபாதம் - வையம் (5:60:7)

உய்யுமாறிது - பைகொள் - கையினான் - கொய்கொள் (5:69:5)

செய்ய - நெய்ய - கையலாய் - கையில் (5:72:2)

கையனைத் - செய்யனைத் - கொய்யனைத் - ஐயனைத் (5:75:3)

கையினோடு - ஐயன் - பொய்யிலா - மையுலாவிய (5:79:7)

பொய்யெலாம் - கையன் - ஐயன் - மெய்யன் (5:80:9)

மெய்யனை - கையனை - மையனுக் - ஐயனை (5:83:5)

மெய்யின் - பொய்யை - கையின் - ஐயன் (5:84:7)

நெய்யும் - பொய்யும் - ஐயன் - மெய்யைக் (5:95:4)

ஐயன் - மெய்யன் - மைகொள் - பைகொள் (5:97:10)

செய்யனே - வெய்யனே - கையனே - ஐயனே (6:4:4)

வைதெழுவார் - கைதொழுது - நெய்தொழுது - தெய்வப்புனற் (6:6:3)

கையோர் - செய்யதிரு - மெய்யொரு - ஐயனார் (6:9:7)

கையெலாம் - பொய்யெலாம் - செய்யெலாஞ் - நெய்தல்வாய் (6:11:9)

ஐயிரண்டும் - செய்வினைகள் - செய்மலரங் - எய்யவந்த (6:16:6)

மையார் - நெய்யார் - வையார் - ஐவாயரவம் (6:21:3)

கைகிளரும் - மெய்கிளரும் - பைகிளரும் - வைகிளருங் (6:23:2)

ஐயன் - கையன் - வெய்யன் - செய்யன் (6:24:8)

பையாடரவங் - நெய்யாடு - செய்யானை - ஐயாறுமே (6:29:9)

மெய்த்தான - இத்தான - மைத்தான - நெய்த்தான (6:42:1)

வைத்தானை - வித்தானை - உய்த்தானை - பொய்த்தானை (6:43:8)

மையனைய - கையவனே - மெய்யவனே - செய்யவனே (6:44:10)

மெய்யானை - கையானை - பையாடரவ - ஐயானை (6:46:8)

ஙகையாற் - மெய்யின் - பொய்யர் - மைகொள் (6:49:10)

மைவான - பெய்வானை - பொய்வானை - செய்வானை (6:50:6)

நெய்யினோடு - கையின்மழு - செய்யதிரு - வெய்யகனல் (6:52:5)

கைவேழ - செய்வேள்வி - மெய்வேள்வி - ஐவேள்வி (6:53:4)

மைசேர்ந்த - பொய்சேர்ந்த - மெய்சேரப் - கைசேர (6:56:5)

செய்யமலர் - பொய்யா - மெய்யாக - கையானை (6:56:9)

செய்யாய் - ஐயாய் - வெய்யாய் - கையார் (6:57:3)

கையுலா - பையுலா - செய்யுலா - மெய்யெலாம் (6:59:3)

செய்யானை - ஐயானை - மெய்யானை - கையானை (6:60:2)

மையாரும் - கையானே - செய்யானே - ஐயாவுன் (6:62:7)

பொய்யேது - எய்தானை - கையானை - செய்யானை (6:63:5)

மெய்யானை - பொய்யானை - பையானை - செய்யானை (6:66:5)

மெய்யன் - கையம் - ஐயம் - வையம் (6:77:9)

மையாருங் - ஐயாறும் - பையாடரவ - செய்யாள் (6:78:7)

கையிலுண்டு - பொய்யிலாத - கையினார் - செய்யினார் (6:86:9)

வெய்யவன் - மெய்யவன் - கையவன் - செய்யவன் (6:87:7)

ஐத்தான - மைத்தான - பைத்தான - நெய்த்தானம் (6:93:2)

பையரவ - மைவிரவு - ஐவரையும் - பொய்யுரை (6:99:3)

நெய்யாடி - மையாடு - கொய்யாடு - பொய்யாத (6:99:8)

இதேபோல் வகர ஒற்று ஔகாரம் என்னும் நெட்டெழுத்தொலியாக அமைந்த பாடலொன்று அப்பர் தேவாரத்தில் இடம்பெற்றுள்ளது. அப்பாடல்,

"*ஔ*வ தன்மை யவரவ ராக்கையான்
*வெவ்*வ தன்மைய னென்ப தொழிமினோ
*மௌ*வல் நீன்மலர் மேலுறை வானொடு
*பௌ*வ வண்ணனு மாய்ப்பணி வார்களே" (5:97:13)

என்பதாகும். இப்பாடல்களைக் கொண்டு பார்க்கும்போது யகர ஒற்று ஐகார ஒலிக்கும்; வகர ஒற்று ஔகார ஒலிக்கும் அப்பர் சுவாமிகள் கையாண்டிருப்பது தெரிகின்றது. இவ்விரண்டில் பெரும்பான்மை யகர ஒற்று ஐகார ஒலியாக ஒலிப்பதையே மேற்காணும் பாடல்கள் உணர்த்துகின்றது.

## இடைப்போலி

ஒரு சொல்லில் போலி எழுத்துக்கள் எங்கெங்கு அமையும் என்று தொல்காப்பியர் விதி வகுக்கவில்லை. ஆனால் நன்னூலார் மொழிக்கு முதல் - இடை - கடை ஆகிய மூவிடங்களில் போலி எழுத்துக்கள் உருவாகும் என்கின்றார். இடைப்போலி குறித்து நன்னூலார்,

"ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே" (நன்னூல் - 124)

என்று கூறுகின்றார். அதாவது, மொழியிடைக்கண் சிலவிடங்களில் ஐகாரத்தின் பின்னும், யகர ஒற்றின் பின்னும் இயல்பாக வரும் என்றும், நகரத்தோடு ஞகரம் உறழ்ந்து வரும் என்றும் கூறுகின்றார். நன்னூலாரின் நூற்பாவிற்கு மேலும் விளக்கம் கூற முற்பட்ட வீரமாமுனிவர், "சஞயவரின் ஐஅச் சமமெனத் திரியும்" (தொன்னூல் விளக்கம் - 27) என்று கூறுகின்றார். இவ்விருவரின் கருத்தையும் உட்கொண்டு முத்துவீர உபாத்தியாயர்,

"ச, ஞ, யமுன் அ, ஐ யாகு முதலிடை" (முத்துவீரியம் - 112)

என்றும்,

"ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஂஂகான் னுறழு மென்மனார் புலவர்" (முத்துவீரியம் - 113)

என்றும் கூறுகின்றார். இவ்விதிக்கு விளக்கம் தரத்தக்கதாக நன்னூல் காண்டிகையுரையுள்,

"செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற ஒண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண்டாற் பின்னைக்கண் கொண்டு
காப்பதென்னே" (4:80:5)

என்னும் அப்பர் தேவாரம் மேற்கோளாக ஆளப்பெற்றுள்ளது. இதனைப் பார்க்கும்போது நன்னூலார் விதி வகுக்க அப்பர் சுவாமிகளின் பாடல் பயன்பட்டிருக்கின்றது என்று துணியலாம். இதே போக்கில்,

"மைஞ்ஞல மனைய கண்ணாள் பங்கன்மா மலையை யோடி
மெய்ஞ்ஞரம் புதிரம் பில்க விசைதணிந் தரக்கன் வீழ்ந்து
கைஞ்ஞரம் பெழுவிக் கொண்டு காதலால் இனிது சொன்ன
கின்னரங் கேட்டு கந்தார் கெடில வீரட்ட னாரே" (4:28:10)

"மைஞ்ஞவில் கண்டேன் தன்னை வலங்கையின் மழுவொன்
றேந்திக்
கைஞ்ஞவில் மானினோடுங் கனலெரி யாடி னானைப்
பிஞ்ஞகன் தன்னை அந்தண் பொருவேளூர் பேணி னானைப்
பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப் பொறியிலா அறிவி லேனே"
(4:60:4)

என்பன போன்ற பாடல்களும் அப்பர் தேவாரத்தில் இடம்பெற்றிருக்கின்றன.

தொல்காப்பியர் கூறாதுவிட்ட எழுத்துப் போலிகளை அவர்க்குப் பின்வந்த பவணந்தியார் மொழிமுதற் போலி, மொழியிடைப்போலி, மொழிகடைப்போலி, சந்தியக்கரம் எனப் பிரித்திருக்கின்றார். பவணந்தியாருக்குப் பின் வந்த வீரமாமுனிவர் மற்றும் முத்துவீர உபாத்தியாயர் ச,ஞ, யக்களுக்கு முன்னின்ற அகரம் முதல் மற்றும் இடையில் ஐகாரமாகத் திரியும் என்றுரைத்திருக்கின்றனர். இவற்றில் 'நகரத்தோடு ஞகரம் உறழும்' என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்திருப்பது அப்பர் சுவாமிகளின் 'செய்ஞ்ஞின்ற' எனத் தொடங்கும் பாடலே என்பதை நன்னூல் காண்டிகையுரை சான்றாக்குகின்றது. அதாவது, கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் முகிழ்ந்த அப்பர் தேவாரப் பாடல்களுக்குப் 13-ஆம் நூற்றாண்டில் எழுந்த நன்னூல் இலக்கணம் வகுத்திருப்பதைப் பார்க்கும் போது 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதல் மரபு' என்னும் கூற்று உண்மையாகின்றது. இதற்கு அப்பர் பாடல்கள் சான்றாகின்றது என்றால் அது மிகையல்ல.

# 30. ஆன்மீகமும் அரசியலும் - அன்றும் இன்றும்

மு. சகாதேவன், காஞ்சிபுரம்.

நாயன் என்பது தலைவன் என்ற பொருளில் வழங்கும் சொல், ''நாயனை அடியான் ஏவும் காரியம் நன்று'' என இச்சொல்லை இப்பொருளில் சேக்கிழார் பெருமான் வழங்கியுள்ளார். நாயன் என்னும் சொல் உயர்ந்ததற்கண் விகுதியாகிய 'ஆர்' விகுதியைப் பெற்று நாயனார் என வழங்கியது. நாயனார் என்னும் பெயர் எல்லாம் வல்ல சிவபெருமானைக் குறித்து வழங்கிய சிறப்பினதாகும்.

**தேய நாதன் சிராப்பள்ளிமேவிய**
**நாயனாரென நம்வினை நாசமே.**

என ஆளுடைய அரசுகள் சிராப்பள்ளி இறைவரை நாயனார் என்ற பெயராற் போற்றியுள்ளார். தலைமை பற்றிச் சிவபெருமானுக்கு வழங்கிய இப்பெயர் இறைவன்பாற் பேரன்புடையராய் - சித்தஞ் சிவமாகப் பெற்ற அவனடியார்கள், அறுபத்து மூவர்க்கும் உரியதாய் வழங்கப் பெறுவதாயிற்று.

நாயன்மாராகிய அறுபத்து மூவர் வாழ்ந்த காலம் கடைச்சங்க காலத்தின் இறுதி முதல் - இரண்டாம் நரசிங்கவர்மனாகிய இராசசிங்க பல்லவன் வாழ்ந்த எட்டாம் நூற்றாண்டு முடிய உள்ள காலப்பகுதி யாகும் என வரையறுக்கப்பட்டுள்ளது.

ஆலமர் செல்வர் - பிறவாயாக்கைப் பெரியோன் - என்று பேசப் படும் இறைவன் - பிறந்து மனித உருவில் உலகில் வாழ்ந்தான் என்று சொல்வது - பெரும்பாவம் - சிலர் இத்தகுக் கட்டுக்கதைகளைக் கூறித் திரிந்து கொண்டிருப்பதை இன்றும் காணலாம். ஜீவன் முக்தர்களாம் அருளாளர்கள் இறைவன் கட்டளையால் பூமியில் பெருமை மிக்க பெரியோர்கள் மூலம் அவதரித்து, பெருநெறியாம் சிவ நெறியைப் பரப்பிச் செயல் முடித்து மறைவார்கள்.

இம்முறையில் - சைவ முதலாகிய - வைதிகம் தழைத்து ஓங்கத் திருநீற்று நெறி எங்கும் ஒப்பற்று சிறந்து - தமிழ் செய்தவம் நிரம்ப - திசையனைத்தின் பெருமையும் தென் திசையே வெல்ல, மேல் கீழ் உலகங்களை நில உலகம் வெல்ல, நிகழ்கால எதிர்காலக் குற்றங்கள் நீக்க, அமண்முதலான பரசமய நெறிகள் பாழ்படச் சிவம் பெருக்கும் பிள்ளையார் சீர்காழிப் பதியில் திருவவதாரம் செய்தார் என்றும்—

"அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில் வரும் மருணீக்கி யொளிவிங்க கதிர்போற்
பின்மலரு மருணீக்கியார் வந்தவதாரம் செய்தார்"

என்றும், மேம்படு சடையனாருக்கேதமில் கற்பின் வாழ்க்கை மனையிசை ஞானியார்பால் தீதகன்று உலக முய்ய ஆளுடைய நம்பிகள் திருவவதாரம் செய்தார் என்றும் அருளாளர்கள் - பிறந்ததன் நோக்கம் - அவர்கள் தம் குறிக்கோள் நில உலகில் - நிலைநாட்ட வேண்டிய செயல்கள் - ஆகியவை நன்கு விளக்கமாகச் சேக்கிழார் பெருமான் எடுத்துக் காட்டுவார்.

பக்திநெறியாம் சைவநெறி பெருநெறி என்று அருளாளர் ஏற்ற் செந்நெறி - வந்தேறிகளால் குன்றும் நிலை எய்தியது. ஆம் களப்பிரர்களால் தமிழகத்தின் - சைவமும் - தமிழும் நன்னெறியாம் பண்பாடும் - இடுக்கண் எய்தியது.

அரசியல் செல்வாக்குப் பெற்ற களப்பிரர்கள் சமண சமயம் சாராதாரை - கொடுமை பல செய்தனர்.

"நீண்ட மேரு
வில்லான் அடிமைத்திறம் மேவிய நீற்றின்சார்பு
செல்லாத அருகந்தர் திறத்தினில் சிந்தை தாழ்ந்தார்"

என்று கூறிய சேக்கிழார் அவன் சமணனாக இருந்தது பற்றிக் கவலை இல்லை. அவன் சைவர்களைக் கொடுமை செய்யத் தலைப்பட்டான் என்பதை,

"சூழும் வினையால் அரவம் சுடர்த்திங்களோடு
வாழும் சடையான் அடியாரையும் வன்மை செய்வான்"

(மூர்த்தி நாயனார் புராணம் - 13, 14)

என்பார்.

நம் சமய அருளாளர்கள் பிற சமயக் காழ்ப்புணர்ச்சி அற்றவர்கள் - அறவழியில் சமயம் நிறுவத் தலை நின்றவர்கள். பிற மதங்களை எதிர்த்து அழிப்பது அவர்கள் செயலல்ல மறுத்து தம் மதம் நிறுவுவதே அவர்கள் வழிமுறை.

இவ்வழியில் ஆளுடைய அடிகளார் வாழ்வின் நிகழ்வை ஆய்வோம் - ஆம் அடிகள் மறு ஒழித்த இளம்பிறைபோலும், நீளிருணீங்க வந்த கலைச்செழுந்திங்கள் போலும் - தந்தைதாய் - சிந்தை மகிழ்ந்து - தலைசிறக்கும் முறைமையினால் - செழுமையாகிய கலைகளின் வகைகள் எல்லாம் முன்னைத் தொடர்பினால் எளிதில் பயின்று முதிர்ச்சி அடைந்தார்.

அறிவின் முதிர்ச்சி - பயனை நோக்கி பள்ளங்கண்டோடும் வெள்ளமென பாய்ந்திடு நிலையே - ஆளுடைய அரசுகளின் அறிவின் அன்றைய

நிலை படிப்படியாக வளரும் சிந்தனை - தேசநெறி - நிலையாமை கண்டறங்கள் செய்வாராய் ஈகை வினைத்துறை நின்றார், சரியை - கிரியை - வழியினை வளமுடன் ஓம்பி ஒழுகுவாராய் - மனம்நிரம்பா நிலையினராய் நில்லாத உலக இயல்பினைக் கண்டு மனம் - ஆற்றாதவராய் - நிலையாத இவ்உலக வாழ்வில் சிக்கி உழல்வேனல்லேன் - முற்றும் துறந்து தேசநெறியே - நெறியாக உலகம் உய்ய வழிகாணுவேன் என விழைந்தார், ஆம் ஒருவரின் பற்றற்ற நிலையே - தொண்டே - உலகை உய்விக்கும் நெறியாம்.

''வீடும் வேண்டா விறல்'' அதுதான் ஆளுடைய அடிகளின் தொண்டு நெறி-குறிக்கோள் - கோட்பாடு - அந்தக் கொள்கையைத் தேடி - எங்கெங்கோ சென்று மீண்டும் சைவத்திற்கே வந்து - குறிக்கோளிலாமல் கெட்டேன் என்று, நொந்து மனம் வெந்திட்டார்.

சேக்கிழார் பெருமான் - ஆளுடை அரசுகளின் புறச்சமய சம்பந்தத்தை - இறைவன் செயலே என்று தம் அழகு தமிழால் பேசுவார் ''நம்பர் அருளாமையினால் கொல்லாமை என்ற அறத்தின் போர்வையினால் தமது குறைபாடுகளையும் கொலையினையும் ஒளித்து மறைவொழுக்கம் பூண்ட சமணம் சார்ந்தார்'' என்று பேசுவார்.

அமண்சமயம் இவர் குறிக்கோளை - கோட்பாட்டினை நிறைவு செய்யும் என எண்ணிச் சென்ற அடிகளார் - உய்யும் வழி செய்யாத பொய்யான சமய மீது என அறிந்து மீண்டும் தம்சமயமாம் சைவ சமயம் சார்ந்தார். இப்போக்குவரவு சைவம் பெற்ற பெரும் பயன்.

விடுவார்களா? கலகமிடும் அமணர் கூட்டத்தினர். சிறப்பான ஒரு தலைவர் அவரால் வளனும் நலனும் பெற்றுத் திகழும் இயக்கத்தை விட்டு அவ்வியக்கம் முறையற்றது - சரியற்றது - கொடியது என்று மீண்டும் தன்முன் இருந்த இயக்கத்திற்கே திரும்பினால், பயன்பெற்ற கட்சியினர் - பயனற்ற நிலையில் பயன் தந்தவரை - மாற்றுக் கொள்கையுடையவராய், மாறிய உடன், இழித்தும் - பழித்தும் - அச்சுறுத்தியும் - படுகொலையும் செய்ய அஞ்சார் என்பது இன்றைய நிலையும்கூட.

மாற்றார் செயலால் - மனமாற்றம் அற்றவராய் ஏற்ற கருத்துக்கு - ஏற்றம் தேடப் புறப்பட்ட ஆளுடைய அரசுகள் சமணர்களின் கொடுஞ் செயலைச் துச்சமெனக் கருதி - இச்சை வைத்த சைவ நெறியாம் பெருநெறியில் மனம் வைத்துணர்ந்து - இறைவனை எண்ணி - ''தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கடன் ஆவதுதான்'' என்று கெடில வீரட்டானத்துறைவானை தொழத் தொடங்கினார்.

துன்பம் செய்வாரை - மன்னித்து - தவமே செய்வதாகச் சொல்லி அவமே செய்து வாழும் - கொடிய அமண்சமய அருளற்றவர்களைப்

பொருளாக மதியாமல் - அவர்கள் தரும் கொடுஞ்செயல்களை இன்புடன் ஏற்று - வெறுத்துப் புறந்தள்ளி சைவநலம் பெருக்கத் திட்டமிட்டார் - "பணிந்தாருடைய பாவங்களை மாற்ற வல்லவராதலின்" இறைவர்க்கு ஆளானதினாலேயே சூலை நோய் தொலைந்தது என்று கண்டார்.

சமயங்களானவற்றின் நல்லாறு தெரிந்துணர, நம்பரருளாமை யினால் - கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் புகுந்த ஆளுடைய அரசுகள் - சமணர்களின் பொய்மொழிகளின் வயப்பட்டும் - அவர்கள்தம் வழியே - நல்வழியாம் எனக்கொண்டும் - சமணத்திற்கு எதிர்மதமான - புத்தமதத்தினரை - வாதிட்டு - வீழ்த்திய அடிகளாரை போற்றிப் புகழும் வகையில் பெற்றோர் இட்டபெயரையும் மாற்றி - தருமசேனர் எனும் சமணத் தலைமைப் பெயர்சூட்டிப் போற்றி மகிழ்ந்தார் - எனினும் அவர்கள் அடிகளின் வருங்கால நிலையை மறந்தார்.

சுடுகின்ற சூலை, குடரோடு துடக்கி, முடக்கி இடும்சூலை, வயிற்றோடு முடக்கிஇடும் சூலை, உடலுள்ளுறு சூலை, வலிக்கிற சூலை, கலித்தே வயிற்றின் அகம்படியே கலக்கு மலக்கிட்டு கவர்ந்து தின்னும் சூலை, என்றெல்லாம் பேசிய - விடம்போன்று - ஆளுடைய அரசுகளின் உடலில் தடம் பதித்த சூலையை அன்பு தமக்கையார் பக்கம் சேரவும் - சைவம் பெருகவும் - சிவநெறியே பெருநெறியாகக் கொண்டு தவநெறியாம் - தொண்டுநெறி சிறந்து விளங்கச் செய்தும் - உழவாரப் படையைக் கைக்கொளச் செய்தும் - உய்யும் வழி பெற்றிட வந்த அக்கொடிய நோயையும் வழிபட்டார் - வணங்கினார் - மாற்றாரையும் மன்னிக்குங் குணங்கொண்ட மகேசன் தொண்டர்.

அவநெறியாம் சமணத்தைப் புறந்தள்ளி சிவநெறியே செந்நெறி எனக் கண்டு திருநெறியாம் தொண்டு நெறியே உயர்நெறி எனக் கண்ட நாவுக்கரசுகளை - அவர்தம் நெறி தொடர விட்டாரில்லை - புன்மையே புரியமணர், தாங்கேட்டது பொறாராய் கொலையும், பொய்மையுமில மென்று கொடுந்தொழில் புரிவோரான அவர்கள் மருவு நம் பெருஞ்சமணம் வீழ்ந்தது என வெகுண்டார்.

ஒரு இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்ட ஒருவர் - அந்த இயக்கம் - வாழ்வும் - வளமும் பெற்றிடச் செய்து - தன்னால் வளம்பெற்ற அவ்வியக்கம் இன்னாமைக்கே வழிவகுத்திடும் என்று அறிந்து - அவ்வியக்கத்திற்கு எதிராகத் திரும்பும்போது - அவரால் பயன்பெற்று வளர்ந்த அவ்வியக்கத்தினர் - எடுக்கும் நிலைப்பாட்டினை இன்றும் கண்கூடாகக் காண்கிறோம்.

கொலைவெறியர்களாய் மாறி நிற்கும் அவல நிலை இன்று போல் அன்றும் இருந்தது எனலாம். மற்று இனி நாம் செய்வது என் என்று மருளுவாராய் வஞ்சனை தெரிந்து - சிந்திப்பாராகிய அமணர்கள் -

தெய்வ நிந்தனையும் செய்து - அமண் சமயம் அழித்தார் ஆளுடைய அடிகள் - எனப் பழிதூற்றி - மன்னனிடம் தம் செல்வாக்கினைப் பயன்படுத்தி - இன்றும் சில ஆன்மீகவாதிகள் - முறையற்ற செயல்களை முடித்திட - ஆட்சியாளர்களைத் தம் வயம் வைத்திட்டு - வேண்டியவாறு செங்கோல் வளைந்திட வழிசெய்வதைப்போல் - அமணர்கள் இருட்குழாம் செல்வது போல மன்னனாகிய பல்லவன் நகரில் சென்றார்கள் என்கிறார் சேக்கிழார் பெருமான்.

வடிநெடுவேல் மன்னவனும் மற்றவர் சார்பாதலினால் "உமக்கு உற்றதென்கொல்" என கேட்க - எல்லாம் உடையாராகிய - தலைவர் - தருமசேனர் பொய்ப்பிணி காட்டி - சடையனுக்களாய் - நின்சமயம் ஒழிய நின்றார் என்ற பெரும்பழியைச் சாட்டினார்கள் - பொய்வழியும் - கொலைச்செயலும் செய்யத் தொடங்கிடும் நிலையாராகிய கலகமிடும் அமண் கொடியர், இன்றைய அரசியலிலும் இதுதானே நிலை. நல்லவர் நலிவுற அல்லவர்கள் செய்பழி அன்றே நடந்தது.

அரசியலால் - அரசியலாளர்களால் - ஆன்மீகம் வளராது - வளர்த்திட முடியாது. சமயம் தேச நெறியாக - உலகம் உய்ய - உயர்வழியாம் - தொண்டு நெறியே - சைவநெறி - எனக் கொண்ட ஆளுடைய அரசுகள் போன்ற அருளாளர்கள் - வேந்தன் துரும்பென எண்ணி - அறவழியைக் கைக்கொண்டார். அரசோடு ஒட்டி இருந்து - மாற்றாளரை வெட்டி வீழ்த்திட ஆளுடைய அரசுகள் எண்ணினார் இல்லை.

ஒத்துழையாமை என்ற அரசியல் நல்லறத்தை அன்றே காட்டி - நிறைதவத்தை அடியேற்கு நிறைவித்தென்றும் செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானை (திருச்செங்காட்டங்குடித் தாண்டகம்) நினைந்து கோமாற்கே நாமென்று மீளாவாளாய் - குறுகினோமே யன்றி நாமார்க்கும் குடியல்லோம் - யார்க்கும் அஞ்சோம் என்ற அப்பழுக்கற்ற - சைவநெறியின்பாலும், இறைவன்பாலும் வைத்த உறுதிப்பாடுடைய ஒப்பற்ற அரசியல்வாதியாவார் - நம் ஆளுடைய அரசுகள் எனில் இது உண்மை - வெறும் புகழ்ச்சி இல்லை.

இன்றைய அரசியல்வாதிகள் அரசாணையை எதிர்ப்பதும் - முறையற்ற அவமதிப்பு செய்து - நீதிமன்றத்தில் வல் வழக்கு செய்வதும் கண்கூடு. ஆனால் ஆளுடைய அரசுகளோ மன்னவன் ஆணையை மதித்து - தம்சமய உரிமையை - தம் உள்ளக் கிடக்கையை அருள்கொண்ட உணர்வின்றி நெறி கோடி அறிவென்று - மருள்கொண்ட மன்னவனும் அவன் மந்திரிமார்களுக்கும் உணர்த்திட அவைக்களம் சென்று மன்னவன் நேர்நின்றார்.

"மன்னவனாணை பாசமெறிந்து வலித்தேகும்" என்று ஏழை பார்ப்பான், சொல்லுக்குக் கட்டுப்பட்டு வலிய அறிவற்ற வேடன் - குற்றவாளியாக

அரசவைக்கு வந்தான் என்று கூறும் (பழியஞ்சிய படலம் - 13) அன்றையத் தமிழகம் நாம் கண்ட அரசுநீதி, இன்றோ - அரசியல்வாதிகள் - தீங்குபுரி போராளிகளாகக் காட்சி அளிக்கின்றனர் என்னே மாறுபாடு!

ஈண்டுவரும் வினைகளுக்கு எம்பிரான் உளன் என உள்ள உறுதியுடன் அரசவை வந்த அடிகளை அறந்துறந்து - தமக்குறுதியறியாத கொடிய அமணர் நீற்றறையில் இட்டும் - நஞ்சூட்டியும் - களிறெதிரே விட்டும் - கல்லைக் கட்டி கடலில் இட்டும் - முதிரவரும் பாதகத்தோர் முடைவாயால் மொழிந்ததெல்லாம், அழிந்து நிற்க, நம்பிரான் அருளால் - நலம் பெற்றார் - பொலிவுற்றிட நலிவற்றார் - பெம்மான் கழல் எண்ணி - ''அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவது மில்லை'' என்று பதிகம் பாடி - பரவித் துதித்து - பத்தியில் திளைத்தார்.

ஆன்மீகவாதிகள் அரசியலாரை நோக்கிப் போகாமல் - அரசியிலார்கள் ஆன்மீகத்தைத் தொழச் செய்த பெருமை - ஆண்ட அரசுகளையே சாரும், இன்றைய அரசியல்வாதிகள் தாம் செய்யும் தவறுகளுக்கு - ஆட்சியாளரையும் - எதிர்க்கட்சியினரையும் - மக்களையும் குறைகூறி - நிறைவழியும் நிலையின் மறுப்பாக ஆண்ட அரசுகள் - எல்லாம் தாம் செய்த தவறுகளுக்குத் தாமே காரணம் என்று பல பதிகங்களில் விடையளிக்கிறார். ஆம் அதில் சில இது –

''துன்னாத் தேனாகித் துற்சனவர் சொற்கேட்டு''

(காந்தாரம் ஆரூர் - 5)

''அமணர்கடம் அறவுரைகேட்டு அலமந்தேன்'' (ஐயாறு)

''குண்டானாய்ச் சமணரோடே கூடிநான் தொண்டமாலைத்
துண்டனே'' (திருநேரிசை ஐயாறு - 1)

''திருந்தா அமணர்தந் தீநெறிப்பட்டுத் திகைத்து முத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன்''

(திருவிருத்தம், பாதிரிப்புலியூர்)

ஆளுடைய அரசுகளின் அறப்போர் - சிறப்பில் - அமணம் தோற்றது பொல்லாங்கு பல புரிந்த பல்லவனும் - தன்னுடைய பழவினை பாசம்பறிய அல்லலினின்று நீங்கி திருவதிகையினையடைந்து ஆண்ட அரசினைப் பணிந்து வல்லமணர் தமைநீத்து ஏறுடையான் தாளடைந்தான்.

ஏங்கிய உள்ளத்தாரான - எம்அடிகள் - தூங்கானைமாடம் ஏகி - தூங்கானை மாடச்சுடர்விளக்கை வேண்டி – "திருவடிக்கு எனது விண்ணப்பம்" எனும் திருப்பதிகம் பாடி திருத்தோள்களில் ஒளியான் மிகுந்த மூவிலைச்சூலக் குறியினைச் சினைவிடைக் குறியோடும் பெற்று திருத்தல யாத்திரை யாகச் செல்லும் திருக்கோயில்களில் திருஉழவாரங் கொண்டு - பெருத்தெழு காதலோடும் பெருந்திருத்தொண்டு செய்து - என் கடன்

பணிசெய்து கிடப்பதே என இறைவன் கழல் நாடி - திருத்தொண்டில் ஈடுபடும் ஆண்ட அரசுகளைச் சேக்கிழார் "மண்ணோர் வாழ நண்ணிலார்" என்று பேசுவார். வீழிமிழலையிற் ஆளுடைய பிள்ளையாரும் அரசுகளும் மற்றும் திருநீலநக்கர், சிறுத்தொண்டர் - முருகனார் - ஆகியோருடனும் தொண்டர்களோடும் சென்று, "திருவீழிமிழலையானை சேராதார்தீ நெறிக்கே சேர்கின்றாரே" என்ற திருத்தாண்டகத்தைத் தாண்டகவேந்தர் பாடி அங்குத் தங்கி இருந்தார்.

அயோத்தியை நினைவுகூரும் பழையாறை வடதளி கோயிலை மறைத்துச் சமணர் பாழியாகச் செய்தனர் - என்று கேட்டுவருந்தி - "அங்கு இறைவர் திருமேனி கண்டு கும்பிட்டாலன்றி மேற்செல்வதில்லை" என்று துணிந்து "அமணர் திறம் அழித்து உம்மை காட்டும்" என்று பெருமான் பாதம் நினைந்து அருகு ஓரிடத்தில் அமர்ந்து உண்ணா நோன்பிருந்தார் - அரசன் கனவில் இறைவன் தோன்றி - அமணர்பொய் வழக்கை அழித்து தூரறுத்துப் போக்கித் தூய்மை செய்து விமானமாக்கிட, அரசன் அரசுகளை அடிபணிந்து அறிவித்தான்."அமணர் மறைந்தாலும் மறைக்க வொண்ணுமோ?" என்ற பதிகம் பாடிப் பரமனை இறைஞ்சினார். இன்றைய அயோத்தியாளர்கள் இவ்வழி கொள்வரோ? என்னே நம் அடிகளின் மாண்பு.

கோடி கோடியாக குடிமக்களை ஏய்த்துப் பணம் சேர்க்கும் இன்றைய அரசியல்வாதிகள் ஆளுடைய அரசுகளின் வழியைப் பின்பற்றினால் - ஊழல் வழக்கும் - ஊதாரிச் செலவும் லஞ்சமும் - வாழுமா? ஆம் - இறைவன் அருளால் அடிகளின் உழவாரம் நுழைந்த இடமெல்லாம் பொன்னினோடு நவமணிகள் பொலிந்தன, அவற்றை அங்குப் பருக்கைக் கற்களோடுடன் வைத்து எண்ணி உழவாரத்தில் ஏந்தி கையினால் தொடுதல்கூட பாவம் என்று வாவியிற் எறிந்தார் என்ற நிலையை - இன்றைய அரசியல்வாதிகள் எண்ணிப் பார்த்து கண்ணியம் காப்பார்களா.

வாளுக்கும் வேலுக்கும் அஞ்சாதவன் கூட வேல்விழிக்கு மயங்குவான், பெண்களால் அழிந்த அரசும் அரசியல்வாதிகளும் வரலாற்றின் தழும்புகளாக - இன்றும் நிலைத்து நின்றிடும் நிலையில் ஆளுடைய அரசுகள் அரம்பையர் - மாயச்செயலுக்கு ஆட்படாதவராய் "உம்மாற் குறையுடையேனல்லேன் - திருவாரூர் அம்மானுக்கு ஆளானேன் - உமது பண்பிற்படேன் - நீவிர் அலையேன்மின்" என்னும் "பொய்மாயப் பெருங்கடலில்" என்னும் திருத்தாண்டகம் பாடியருளினார் - அரம்பையர் அஞ்சி அகன்றனர்.

இன்றைய அரசியல்வாதிகள் கடைப்பிடிக்க வேண்டிய - அத்துணை - செயல்களையும் - ஆளுடைய அடிகள் - வாழ்ந்து காட்டி - வழிகாட்டி - அருளியுள்ளார்கள் அவர் வழிசெல்வோமாக - அவர்தம் குறிக்கோள் - கோட்பாடு - கொள்கை - வழிமுறைகளைத் தொடர்வோமாக.

# 31. நாவுக்கரசரும் பெரியபுராணமும்

ஜெ. சந்திரசேகரன், அண்ணாமலைநகர்.

தமிழ்நிலம் பக்திப் பயிரின் பண்ணை, சங்க காலத்தில் பக்தி உணர்வு இருந்தது. ஆனால் காதற்பாட்டு வீரப்பாட்டு போன்று தனியே பக்திப்பாடல்கள் எழவில்லை என்பர் சோம. இளவரசு.

தமிழ் இலக்கியம் பிற்காலச் சோழர் காலத்தில் ஒளி உயர்வு எய்திற்று. செயற்கரிய செயல்செய் பெரியராம் சிவனடியார்களின் வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணமாய்ப் பாடிய பொற்காலம் அது.

**செந்நின்ற பரம்பொருள்**

திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரசர் அடியார்க்கும் அடியேன் என்று திருநாவுக்கரசரின் அருளியல் வாழ்வைத் திருத்தொண்டர் தொகையில் திருநாவலூரர் பாடியுள்ளார். சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான் என்றருளியவர் திருநாவுக்கரசர். சிவன் என்னும் ஓசைக்குரியதாக இவ்வுலகில் திருநின்ற செம்மையும் உள்ளது என்பர் திருநாவுக்கரசர்.

திருநின்ற செம்மை என்னும் தொடர் சேக்கிழார் உள்ளத்தை ஈர்க்கிறது. அதனைத் திருநாவுக்கரசர் பிறந்தருளிய திருவாமூர் சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தகைமையினால் தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திருவாமூர் எனப் பாடிய வழி உணர முடிகிறது. சிவம் பெருக்கும் சிவம் எனச் சேக்கிழார் பாடியிருப்பது தொண்டு நெறியைக் குறிக்கிறது.

திருநாவுக்கரசரின் வரலாற்றைச் சேக்கிழார் திருநாவுக்கரசு எனத் தொடங்கியே கூறியுள்ளார்.

> திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ,
> வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மை திகழ்,
> 'பெருநாமச் சீர்பரவலுறுகின்றேன் பேருலகில்,
> 'ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணாமை உணராதேன்'

திருநாவுக்கரசு என்னும் தொடக்கம் மறைமொழியெனும் என இப்பாடலில் நிறைமொழியாக அமைகிறது என்பர் வை. இரத்தினசபாபதி.

நல்லறங்கள் நிலைபேறுடையன; இதனை உணர்ந்த சேக்கிழார் இளமைக் காலத்தில் மருள்நீக்கியார் செய்த சமுதாயத் தொண்டினை வகைப்படுத்திப் பாடியுள்ளார்.

"காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்,
ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும் அமைப்பார்"

என்றும்

"காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும் நானி லத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்"

என்றும் பெரியபுராணம் சுட்டுவதால் அறவழியில் நின்று இளமைக் காலத்தில் தொண்டாற்றியவர் திருநாவுக்கரசர் என்பதை நாம் அறிகின்றோம்.

## நில்லாத உலகியல்பு

உலகியல்பு நில்லாதது என்பதை உணர்ந்தவர் மருள்நீக்கியார். சமயங்களின் நல்லாறு அறிய வேண்டியே சமண் சமயம் சார்ந்தார் மருள்நீக்கியார், கொல்லாமை என்ற மூல அறம் அவர் சிந்தையைக் கவர்ந்ததுதான் அதற்குக் காரணம் என்பர் சேக்கிழார்.

"நில்லாத உலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேன்என் றறத்துறந்து சமயங்க ளானவற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பர்அரு ளாமையினால்
கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயங் குறுகுவார்"

## அருளனுபவம்

சமண் சமயக் குழியில் வீழ்ந்து ஆழ்ந்து போய்க் கொண்டிருந்த தருமசேனர் உயர்ந்த வாழ்வு பெறச் சூலைநோயே காரணமாயிற்று. நோய் உயிர்களை வாழ்விக்காது. ஆனால் தருமசேனருக்கு வந்த சூலைநோயோ இறைவன்பால், அவரை ஆட்கொள்ள வைத்தது. இதனை.

"இவ்வாழ்வு பெறத் தரு சூலையினுக்
கெதிர் செய்குறை என்கொல் எனத்தொழுவார்"

எனச் சேக்கிழார் பாடிய வழி உணர முடிகிறது. மிகக் குறுகிய காலத்தில் அருளனுபவம் பெற்ற சிறப்பினர் திருநாவுக்கரசர்.

இதனை,

"மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர் சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவுஞ் சிவசின்னம் விளங்கிடவே

**எய்துற்ற தியானம் அறாஉணர்வும்**
**ஈறின்றி எழுந்திரு வாசகமும்**
**கையில் திகழும்உழ வாரமுடன்**
**கைத்தொண்டு கலந்து கசிந்தனரே''**

எனச் சேக்கிழார் பாடி உணர வைத்துள்ளார்.

திருநாவுக்கரசர் மேற்கொண்ட பணி மெய்ம்மையானது. அவர் மேற்கொண்ட திருப்பணியே மிகக் குறைந்த கால அளவில் உயர் அருளனுபவ இன்பத்தைக் கொடுத்தது என்கிறார் சேக்கிழார்.

### திருத்தொண்டின் உறைப்பு

நான்கு வகை தீமைகளிலிருந்து தப்பி வாழும் பேறு பெற்றவர் திருநாவுக்கரசர். அப்பேறு பெறுவதற்குக் காரணம் திருத்தொண்டின் உறைப்பு. திருத்தொண்டின் உறைப்பால் சிவன் நான்கு வகை தீமைகளினின்றும் திருநாவுக்கரசரைக் காப்பாற்றினான். இதனை,

**''நன்றருளிச் செய்திலீர் நாணில் அமண் பதகருடன்**
**ஒன்றிய மன்னவன் சூட்சி திருத்தொண்டின் உறைப்பாலே**
**வென்றவர்''**

என அப்பூதி அடிகள் வாயிலாகச் சேக்கிழார் உணர வைத்துள்ளார்.

சமணர்கள் செய்த தீமைகளோடு முன்வினைப் பயன்கள், ஊழ் வினையின் தாக்கம் போன்றவைகளும் நீங்கப்பெற்று மீண்டும் வாழ முடியும் என்ற கொள்கையை என் போன்றவர்கள் தெரிந்து கொள்ளவே இன்றும் திருநாவுக்கரசர் திருத்தொண்டு நெறியில் நிற்கிறார் என்று விளக்கியவர் சேக்கிழார். இதனை அப்பூதியடிகள் வாயிலாக,

**''நம்மையுடையவர் கழற்கீழ் நயந்த திருத்தொண்டாலே**
**இம்மையிலும் பிழைப்பது எனஎன்போல் வாரும் தெளியச்**
**செம்மைபுரி திருநாவுக்கரசர்''**

என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

### சொல்லோவியம்

சேக்கிழார் திருநாவுக்கரசரின் வாழ்க்கையை மெய்மறந்து பாடிய திறம் போற்றுதற்குரியது. திருநாவுக்கரசரைச் சமணர்கள் கல்லில் கட்டிக் கடலில் இட்டனர். இறையருளால் கல் தெப்பமாயிற்று. திருப்பாதிரிப் புலியூரில் கரையேறிய நாவரசரைக் காண மக்கள் மகிழ்ச்சியுடன் குழுமினர்.

இக்காட்சியை மெய்மறந்து,

**தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியுந் தாழ்வடமும்**
**நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்**

**பாய்வதுபோல் அன்புநீர் பொழிகண்ணும் பதிகச் செஞ்சொல்**
**மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே.**

எனச் சேக்கிழார் பாடியுள்ளார். இப்பாடல் அழகிய சொல்லோவியமாக அமைந்து திருநாவுக்கரசரை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறது. சேக்கிழாரின் புலமையை இப்பாடல்வழி உணர முடிகிறது.

## இறைத் தொண்டு

திருநாவுக்கரசர் இளமைக் காலம் தொட்டே இறைத்தொண்டு புரிந்தவர். பல்வேறு அறங்களையும் செய்ததனால் உலகின் நிலையாமை உணர்வு வரப்பெற்றவர்; இந்நிலையற்ற வாழ்வில் இரேன் என்றவராய்த் துறவினை மேற்கொண்டவர். உண்மை கூற முயலும் உலகத்துச் சமயங்கள் பலவற்றின் மெய்நூல்களை எல்லாம் கற்றவர்; கற்றாரோடும் இருந்து கேட்டவர். இளமைக் கால சமய வாழ்வின் தொடக்க நிலையில் கற்றல், கேட்டல் ஆகிய இருநெறிகளிலும் ஞானத்தில் சரியைவழி நின்றமை தெளிவாகிறது. ''நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன், நினையாமல் ஒருபோதும் இருந்தறியேன்'' என்ற பாடல் திருநாவுக்கரசரின் இறைவுணர்வினைக் காட்டுகிறது.

## புறவழிபாடு

திருநாவுக்கரசர் உழவாரமணிந்து குறிப்பிட்ட ஒரு தலத்திலுள்ள கோயிலில் மட்டுமின்றித் தாம் வழிபட்ட அனைத்துக் கோயில்களிலும் சரியைத் தொண்டு செய்வதையே முதன்மை வழிபாடாகக் கொண்டமை தெளிவாகிறது. திருநாவுக்கரசர் திருவலகிடுதலாகிய கைத்திருத்தொண்டு செய்தார் என்பதனைப் பெரியபுராணம்,

**''மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர்சீர்**
**வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்**
**மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்**
**விரவுஞ்சிவ சின்னம் விளங்கிடவே**
**எய்துற்ற தியானம் அறாவுணர்வும்**
**ஈறின்றி எழுந்திரு வாசகமும்**
**கையில்திக ழும்உழவாரமுடன்**
**கைத்தொண்டு கலந்து கசிந்தனரே''**

என மிகச் சிறப்பாக குறிப்பிட்டுள்ளது.

மனம் மொழி மெய் ஆகிய மூன்றும் ஒரே நெறியில் நிற்றலே சான்றோர்க்கு உரியது. திருநாவுக்கரசர் இடையறாத இறைச் சிந்தனை உடைய மனம், அவன் புகழ்பாடும் வாய், உழவாரப் பணிசெய்யும் உடல் ஆகியன கொண்டு நின்றார் என அழகாகச் சேக்கிழார் சுட்டியுள்ளார்.

திருநாவுக்கரசர் சரியைத் தொண்டு செய்ததனை அவர் காலத்து வாழ்ந்த திருஞானசம்பந்தர் வாக்காகப் "பெருவாய்மைத் திருநாவுக்கரசர் தொண்டாற் பெறுங்காசாம்" எனப் பெரியபுராணம் சுட்டுகிறது. சேக்கிழார் 'உழவாரப் படையாளி' என்றே குறித்துள்ளார். மேலும் அவரே "காசு வாசியுடன் பெற்றார் கைத் தொண்டாடும் படிமையினால்" எனவும் குறித்துள்ளார். இவற்றான் சரியை நெறி நின்றவர்களுள் குறிப்பிடத் தக்கவராகவும் முதன்மையான வழிகாட்டியாகக் குறிக்கத் தக்கவராகவும் திருநாவுக்கரசரைச் சுட்டலாம்.

திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் எதிரே வந்த காட்சியை,

**"சிந்தை இடையறா அன்பும் திருமேனிதனில் அசைவும்**
**கந்தை மிகையாங் கருத்தும் கைஉழ வாரப் படையும்**
**வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிருநீறும்**
**அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர் வந்தணைய"**

என்னும் பெரியபுராணப் பாடல் சொல்லோவியமாக்கிக் காட்டுகிறது.

**சரியை நெறி**

திருப்புகலூரில் திருத்தொண்டு செய்யும்போது உழவாரத்திடையே அகப்பட்ட செம்பொன்னையும் மணிகளையும் ஏனைய கற்களோடு சமமாகவே கருதி அவற்றை அள்ளிக் கொட்டியவர் திருநாவுக்கரசர். இவற்றான் சரியை நெறியில் வழிபாடு நிகழ்த்தியவர் திருநாவுக்கரசர் என்பதும் உழவாரப் பணியால் வாழுங்காலம் முழுமையும் புறவழி பாட்டு முறையைப் பின்பற்றியவர் என்பதும் அவர் உலகம் வாழ்வதற்காகச் சிவத்தொண்டர்கள் உய்வதற்காக வழிபாடாற்றியவர் என்பதும் பெரியபுராணம்வழி உணர முடிகிறது. என் கடன் பணி செய்து கிடப்பதே என வாழ்ந்தவர் திருநாவுக்கரசர்.

திருநாவுக்கரசரின் வாழ்வின் அடிப்படை மூலக்கொள்கை வாய்மையின் வழாது நிற்றல். வாய்மையில் வழாது நின்றவனை இவ்வுலகில் வாய்மை என்னும் அறமே வெளிப்பட்டு நின்று அவன் செயலைப் பாராட்டுகிறது. 'நாவுக்கரசு' என நின்னாமம் அமைக என்று வானிடையே ஒரு வாய்மை எழுந்ததே இதற்குச் சான்று. நாவரசரின் வாழ்வியற் குறிக்கோள் வாய்மையில் நிற்றல் என்பதனை,

**மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தைவித்திப்**
**பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்**
**தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலிஇட்டுச்**
**செம்மையுள் நிற்பாராகில் சிவகதி விளையும் அன்றே.**

என்ற திருப்பாடல்வழி உணர முடிகிறது.

# 32. இராமேச்சுரம் - வரலாறும் பதிகமும்

சொ. சந்திரவாணன், இராஜபாளையம்.

கங்கையும் சேதுவும், காசியும் இராமேசுவரமும் இந்தியப் புனிதப் பயணத்தின் வட தென்னெல்லைகளாக அமைந்து ஆன்மீக ஒருமைப் பாட்டிற்குச் சான்றாக விளங்குகின்றன. தென்னாட்டையும், வடநாட்டையும் பண்பாடு, மொழி, இனம், சமயம் என்பனவற்றின் வேறுபாடு கடந்து அவற்றில் இழையோடிக் கொண்டிருக்கும் ஆன்ம நேயத் தொடர்பினை உணர்த்தும் மிகச் சிறந்த தெய்வீகம் நிறைந்த புனிதத் தலங்களாகக் கருதப்படுகின்றன. அவ்வகையில் காசியில் நடைபெறுகின்ற திருநாவுக்கரசர், இலக்கிய ஆய்வு மாநாட்டிற்கு 'இராமேச்சுரம் - வரலாறும் பதிகமும்' எனும் இக்கட்டுரை சிறப்பினதே.

**இராமேச்சுரம்**

இராமன் + ஈசுவரம் இராமேசுவரம் ஆயிற்று. திரு எனும் அடைமொழி சேர்த்து திருஇராமேசுவரம் என்றழைக்கப்பட்டு வருகின்றது. இராமனால் அமைக்கப்பட்ட சிவாலயம் என்று பொருள்படும் இராமேசுவரம் தேவாரம் பாடிய மூவர் முதலிகளாலும் பாடப்பெற்ற சிறப்புடையது.

தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் அலைகடல் சூழ்ந்த தீவகத்தில் திருக்கோயில் பெற்று விளங்கும் தனிச்சிறப்பு இத்தலத்தினுக்கேயுண்டு. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய திருஞானசம்பந்தரின் இரு பதிகங்களும், திருத்தொண்டின் நெறிவாழ மிகுசைவத் துறை விளங்க வந்த அப்பர் பெருமான் பாடிய ஒரு பதிகமும் ஆக மூன்று தேவாரப் பதிகங்களே தற்போது கிடைத்துள்ளன.

தம்பிரான் தோழர் எனும் சுந்தரர் இத்தலத்தில் பாடி வழிபட்டதனைச் சேக்கிழார் பெருமான் 'மன்னுமிராமேச்சுரத்து மாமணியை முன்வணங்கிப் பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார்' எனும் குறிப்பால் மட்டுமே அறிய முடிகிறது. ஆனால் அப்பதிகம் கிடைக்கவில்லை. இராமேச்சுரத்தி லிருந்து ஈழ நாட்டிலுள்ள கேதீச்சுரத்தினைப் பாடிய பதிகம் கிடைத்திருக்க இத்தலத்திற்குரிய பதிகம் மட்டும் கிடைக்காது போயிற்றே! எனினும் அவர் பாடிய திருநாட்டுத் தொகை எனும் பதிகத்தில் இராமேச்சுரத்தைக் குறிப்பிடுகின்றபோது 'ஈழநாட்டு மாதோட்டம் தென்னாட்டு இராமேச்சுரம்' எனச் சுட்டியுள்ளது இங்கு நோக்கத்தக்கது.

இதே போன்று அப்பர் பாடிய க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகத்திலும், அடைவுத் திருத்தாண்டகத்திலும் இராமேச்சுரத்தைப் பாடிப் பரவி யுள்ளமையும் கண்டு இன்புறத்தக்கது. இத்தலத்திலிருந்து பல பதிகங்களைத் திருநாவுக்கரசர் பாடி மகிழ்ந்தார் எனச் சேக்கிழார் பெருமான்,

> தேவர் தொழுந் தனிமுதலைத் திருவிரா மீச்சுரத்து
> மேவிய சங்கரனையெதிர் நின்றுவிருப்புறு மொழியால்
> பாவுதிரு நேரிசைகள் முதலான தமிழ்பாடி
> நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார் (409)

என்று திருநாவுக்கரசர் புராணத்தில் சுட்டுகின்றார்.

'பாசமும் கழிக்ககில்லா' எனும் இத்தலத்து திருநேரிசைப் பதிகம் போலச் சுவை மிகுந்த பிற பதிகங்கள் சொல்லின் வாய்ப்பட்டதோ! அன்றி அலைகடல்தான் கொண்டதோ? அல்லது ஊழிமுதல்வன் பெருவிருப்பால் தம்மிடத்தே மறைத்து வைத்தானோ! முதலையுண்ட பாலகனை மீட்டுத் தந்த தம்பிரான் தோழர் சுந்தரர் வந்து அவற்றை மீட்டுத்தந்தால்தான் உண்டோ?

**அப்பர் வரலாறு**

புறச்சமயமாம் சமணம் சார்ந்திருந்து 'தருமசேனர்' எனும் உயர்பதம் பெற்றிருந்த வாகீசருக்குச் சூலை தந்து ஆட்கொண்டருளினார் சிவபெருமான். கூற்றாயினவாறு விலக்ககலீர் எனும் முதற் திருப்பதிகம் பாடி, சூலைநீங்கி இறைவன் அருளிய 'திருநாவுக்கரசர்' என்னும் திருப்பெயரைப் பெற்று மனம், மொழி, மெய்களால் சிவனைப் போற்றிச் செந்தமிழ் சொல் மாலைகளால் பாடிப் பரவினார். இவர் திருத்தொண்டின் நெறிவழிச் சிவபதம் பெறலாம் எனச் சொல்லாமல் சொன்ன பெருமான். ஆணவமல நீக்கத்திற்குச் சான்றாய் வாழ்ந்த நாவுக்கரசர்க்கு 'அப்பர்' எனும் பெயரிட்டு அழைத்தவர் ஞானக்கன்றாம் திருஞானசம்பந்தர். திருப்பூந்துருத்தியுள் மடம் அமைத்து உழவாரப் பணியினை உளமாரச் செய்து 'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே கண்டவர்' அப்பர். பரசமயக் கோளரியாம் ஞானசம்பந்தப் பெருமானால் சமணம் சார்ந்திருந்த கூன்பாண்டியன் நின்றசீர் நெடுமாறன் ஆகிச் சைவம் சார்ந்ததும், மங்கையர்க்கரசி, குலச்சிறையாரின் சிவபக்தியினையும் பிள்ளையார் திருவாயால் கேட்டுணர்ந்த அப்பர் பெருமான் செந்தமிழ்ச் சங்கம் வளர்த்த பாண்டி நாட்டினைக் கண்டு வழிபட விருப்பமுற்றார். திருப்பூந்துருத்தியிலிருந்து பாண்டிநாடு வந்தடைந்தார்.

**பாண்டி நாடு வந்தது**

பாண்டி நாட்டில் முதற்பதியாம் திருப்புத்தூரில் உள்ளானை வணங்கிப் பின் மதுரையை வந்தடைந்தார். தமிழ்ச் சங்கத்துள்ளிருந்து

தமிழாய்ந்த பெருமானாகிய திருஆலவாயுறை அண்ணலை, 'முளைத்தானை எல்லோருக்கும் முன்னே தோன்றி' எனும் திருத்தாண்டகத்தால் பாடிப் பரவினார். அப்போது, சொல் வேந்தராகிய அப்பரடிகளைப் பாண்டிமா தேவியாராம் மங்கையர்க்கரசியாரும், நின்றசீர் நெடுமாற பாண்டியனும், இவர்கள் மந்திரியாராகிய குலச்சிறையாரும் வந்து வழிபட்டனர்.

திருஆலவாய்ப் பெருமானை வணங்கிப் பின்னர் திருப்பூவனத்தை அடைந்தார் அப்பர். அங்கு சிவபெருமான் நேரே காட்சி தந்தருளக் கண்டு, 'வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்' எனத்தொடங்கும் திருத்தாண்டகத்தைப் பாடிப் பரவினார்.

**திருஇராமேச்சுரம் வந்தது**

ஆணவச் செருக்கினாலும், அறியாமைச் சேற்றினிலும் அமிழ்ந்திருந்த தென்னிலங்கை வேந்தனாகிய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க முற்பட்டு, அக்கயிலை மலையின் கீழ் அகப்பட்டு வருந்தித் தன் பிழை பொறுக்க வேண்டினான். அவனுக்கு அருள் செய்த பேரருளாளனாகிய சிவபெருமானது பெருங்கருணைத் திறத்தினைத் தம் பதிகம்தோறும் துதித்துப் போற்றுவார் அப்பரடிகள்.

தென்னவன் இராவணனுடைய பத்துத் தலைகளையும் போர்க் களத்தே அறுத்துப் போக்கிய இராமபிரானுக்கு ஏற்பட்ட 'பிரம்மக் கொலைப்பாவமாகிய' பெரும் பழியினைப் போக்கியருளிய இராமேச்சுரப் பெருமானை வழிபட நினைத்து இராமேச்சுரம் வந்தடைந்தார் நாவுக்கரசர். தேவாதி தேவர்கள் தொழுதற்குரிய தனிமுதல்வனும், இராமபிரான் அன்புடன் அமைத்துப் பூசித்த திருக்கோயிலாகிய இராமேச்சுரத்துள் எழுந்தருளியிருந்து வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும் சங்கரனாகிய இராமநாதப் பெருமான் முன்பு நின்று இசைநலம் பரப்பும் திருநேரிசைகள் முதலாகிய தமிழ்மாலைகள் பல பாடி அங்கேயே பல நாட்கள் தங்கியிருந்தார் சொல்லரசர் என்பது சேக்கிழார் கூறும் வரலாறு.

**இராமேச்சுரப் பதிகங்கள்**

பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற பதிகள் பதினான்கினில் ஏழாவது திருத்தலமாக அமைவது திருஇராமேச்சுரம் ஆகும். இத்தலத்திற்கு என்று சம்பந்தரின் தேவாரப் பதிகம் இரண்டும், நாவுக்கரசரின் பதிகம் ஒன்றுமாக மூன்று பதிகங்கள் உள்ளன. நாவுக்கரசரின் பதிகமாகிய, 'பாசமும் கழிக்ககில்லா' எனத் தொடங்கும் திருநேரிசைப் பதிகம் 11 பாடல்களைக் கொண்டது.

**பதிகப் பயன்**

இப்பதிகத்தின் பதினோறாம் பாடல் ஞான சம்பந்தரின் பதிகங்களில் அமைந்த பதிகப்பயன் கூறும் 'திருக்கடைக்காப்பு' போன்று இராமேச்சுரப்

பதிகத்தினை ஓதுவார் பெறும் பயனை எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. அப்பரின் பிற தேவாரப் பாடல்களில் இல்லாத இத்திருக்கடைக்காப்பு இப்பதிகத்திற்கே அமைந்திருப்பது சிறப்பினது, சிந்திக்கத்தக்கது.

> ''வரைகள்ஒத் தேயுயர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
> விரைய முற்றற வொடுக்கி மீண்டுமால் செய்தகோயில்
> திரைகள்முத் தால்வணங்கும் திருஇராமேச்சுரத்தை
> உரைகள்பத் தாலும் உரைப்பார் உள்குவார் அன்பினாலே''

என்று இத்திருப்பதிகத்தை ஓதுபவர் அன்பு மிக்க உள்ளத்தினர் ஆவர் என்று உறுதியாகக் கூறுகின்றார் அப்பர்.

இது மட்டுமல்ல; 'திருவிராமேச்சுரத்தைக் கண்டு தரிசித்து வணங்குபவர் களுக்குப் பிறவி நோயும், அதற்கு காரணமான வினையும் நைந்து கெட்டுவிடும்' என்றும் கூறுகின்றார்.

**கோயில் எழுந்த விதம்**

இவ்விராமேச்சுரப் பதிகத்தில் அப்பர் பெருமான்; இக்கோயில் எழுந்த விதம் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவை வருமாறு:

பற்று நீங்குவதற்கு இயலாத இயல்புடைய அரக்கர்கள் மாளுமாறு போர் செய்து வென்ற இராமபிரான் சிவஞான உணர்வால் நறுமண மலர் களைக் கொண்டு வழிபட்ட கோயில் என்று பொருள்தரும் 'மதியினால் மால் செய் கோயில்' என்று முதற்பாட்டலில் குறிப்பிடுகின்றார்.

இராவணனுக்குரிய வாழ்நாள் முடிந்து போன நிலையில் போர் செய்து வெற்றி கண்ட இராமன் அமைத்து வழிபட்ட கோயில் எனும் பொருள்தரும். 'அரக்கர் தம்மைச் செற்றமால் செய்த கோயில்' என்றும், கடலின் நடுவில் மலைக்கற்களைக் கொண்டு பாலம் அமைத்துச் சென்று இராவணனை அழித்துத் தம்பணி முடித்த இராமன் 'திடலிடைச் செய்த கோயில்' என்றும் குறிப்பிடுகின்றார்.

'குன்றுபோல் திரண்ட தோளுடைய சத்துவகுண மில்லாத அரக்கர்களைக் கொன்று வெற்றிகண்ட சக்கரப்படையுடைய திருமால் சிவபூசையை விரும்பிச் செய்த கோயில்' என்றும், 'தேர்வலம் செற்றுமால் செய் திருவிராமேச்சுரம்' என்றும், 'மால்தான் தேக்குநீர் செய்த கோயில்' என்றும் 'அரக்கரை கொன்று வீழ்த்த சிலையினான் செய்த கோயில்' என்றும் 'அன்பு கொண்டு தேடிமால் செய்த கோயில்' என்றும், 'செங்கண் மால் செய்த கோயில்' என்றும், 'அரக்கர்கோனை விரையமுற்றற வொடுக்கி மீண்டுமால் செய்த கோயில்' என்றும் கூறுகின்றார் வாக்கின் அரசர்.

இதில் 'மதியினால் செய்த கோயில்', 'வேட்கையால் செய்த கோயில்' என்றது இராமபிரானது சிவஞானச் சிவபக்தி புலப்படுகின்றது. ஈசனைத் தொழுது ஏத்துவ்தால் பெறப்படும் முக்திப்பேறு 'நன்மை' என்று உணர்த்தினார்.

## நெஞ்சறிவுறூஉ

நெஞ்சுக்கு அறிவுரை கூறும் விதமாக நெஞ்சை முன்னிலைப் படுத்தி உரைப்பதற்கு 'நெஞ்சறிவுறூஉ' என்பர். இவ்வகையினைத் தம் தேவாரப் பதிகத்தில் பல இடங்களில் எடுத்தாளுகின்றார் சொல்லரசர். காட்டாக, 'நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா' என்பதும் "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்" என்பதும் ஈண்டு நோக்கத்தக்கது.

இராமேச்சுரப் பதிகத்தில் நெஞ்சினை முன்னிறுத்திக் கூறுவது போன்று ஐந்து பாடலில் குறிப்பிட்டுள்ளார். நெஞ்சின் தன்மைப் பற்றிக் கூற வந்த நாவுக்கரசர் 'மடநெஞ்சமே' என்று குறிப்பிடுகின்றார். 'நெஞ்சமே நீ நல்லவன் போல் தோற்றம் கொண்டாயே அன்றி உண்மையில் நீ நல்லவன் இல்லை என்று கூறி, நீ நற்பொருளை அறிய வேண்டுமானால் இராமேச்சுரம் சென்று தொழுது உய்வாயாக' என்று நான்காம் பாட்டில் விளக்குகின்றார்.

'இராமேச்சுரத்தைப் பற்றி நீ பரவு நெஞ்சே' என்றும் 'இராமேச்சுரத்தை சேர்மட நெஞ்சே நீ செஞ்சடை எந்தைபாலே' என்றும், "இராமேச்சுரத்தை நாடி வாழ் நெஞ்சே நீ நன்னெறி யாகுமன்றே" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இராமேச்சுரம் எனும் பெயரை என் நெஞ்சில் பதித்து நாவானது உச்சரிக்க ஏத்துகின்றேன். ஆனால் தூய்மையற்ற இவ்வுடலில் ஐம்புலன்கள் நின்று துன்புறுத்துகின்றன. நான் அவர்களால் ஆட்டிப் படைக்கப் படுகின்றேன் என்று கசிந்து கூறுகின்றார்.

## திருஅங்கமாலை போல்

'சிலையினான் சேய்த கோவில் திருஇராமேச்சுரத்தைத்
*தலையினால்* வணங்குவார்கள் தாழ்வாரம் தவமதாமே'

எனும் பாடல் வரியால் தலையால் தலைதாழ்த்தி வணங்குவார் பாவம் தாழ்வடையும் தவப்பயன் பெருகி நற்கதி உண்டாகும் என்று கூறுகின்றார். "தலையே நீ வணங்காய்" எனும் 'திருஅங்கமாலை' வரிகள் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

'செங்கண்மால் செய்த கோயில் திருஇராமேச்சுரத்தைத்
*தங்கணால்* எய்த வல்லார் தாழ்வராம் தலைவர் பாலே'

எனும் பாடல் வரியில், 'தம் கண்களால் தரிசித்து ஏத்தும் அடியார்கள் ஈசனின் திருப்பாதக் கமலத்தில் சேர்வர் என்று கூறுகின்றார். "கண்காள்

காண்மின்களோ'' எனும் 'திருஅங்கமாலை' வரியும் நினைவு கொள்ளத் தக்கனவாம்.

### தலத்தைப் பாடிய பிற பெரியவர்கள்

மூவர் முதலிகளாலும் பாடப்பெற்ற இராமேச்சுரத்தை, சேக்கிழார், கம்பர், அருணகிரிநாதர், கச்சியப்பர், பரஞ்சோதி முனிவர், குமரகுருபரர், தாயுமானவர், நிரம்பவழகிய தேசிகர், பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் போன்ற அருளாளர்களும் பாடிப் பரவியுள்ளனர்.

### கோயில் வரலாறு

புராணத்திற்கும் புராதனத்திற்கும் சிறப்புடையது இராமேச்சுரம். இராமனுடைய இலங்கைப் படையெடுப்பிற்குப் பின்னர் இக்கோயில் இராமனால் தோற்றுவிக்கப்பட்டது என்ற கருத்து தொடர்ந்து நிலவி வருகின்றது.

இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் இராமநாதசுவாமி என்றும் இறைவி மலைவளர் காதலி (பர்வதவர்த்தனி) என்றும் கல்வெட்டுச் சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது. ஆனால் கோயில் யாரால் கட்டப் பட்டது என்றறிய முடியவில்லை. மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் மூன்றினாலும் சிறப்புற்ற இக்கோயில் 12 ஜோதிர்லிங்கத் தலத்துள், தமிழகத்திலுள்ள ஒரே தலமாகும். இச்சோதிலிங்கத்தை விபீடணன் தோற்றுவித்ததாகக் கூறப்படுகிறது.

இராமபிரானால் உருவாக்கப்பட்ட இக்கோயில் முதலில் மண்ணால் அமைக்கப்பட்ட பூங்கோயிலாக இருந்து பின்னர் கருங்கற்களால் கட்டப்பட்டது என்பர். இராமேச்சுரம் தீவின் வடகிழக்கே கடலருகே கட்டப்பட்ட இக்கோயில் சங்கு வடிவாக அமைந்துள்ளது.

### இலங்கையோடு தொடர்பு

உயர்ந்த திராவிடக் கட்டிடக்கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய்த் திகழும் இவ்இராமேச்சுரம் கோயில், கி.பி. 1173-ல் இலங்கை மன்னன் ''பராக்கிரமபாகு''வினால் கருவறையைச் சுற்றியுள்ள பகுதிகள் கருங்கல்லால் கட்டப்பட்டன என்றும், அதற்காகத் திரிகோண மலையிலிருந்து கற்களைக் கொண்டு வந்து சேர்த்ததாக இலங்கையிலுள்ள ''தம்மபால'' கல்வெட்டு கூறுகின்றது.

### நாயக்கர் தொடர்பு

வரபெல்லப்ப நாயக்கர் என்பவர், விசுவநாத நாயக்கர், வீரப்ப நாயக்கர் ஆகியோருக்குப் புண்ணியமாக இராமேச்சுரத்தில் குப்பீசுவரம் திப்ப நாயகியார் பூசைக்காகச் சோழநாட்டிலுள்ள 'பெத்தனபுரம்' என்ற

ஊரில் இரண்டுவேலி நிலம் விலைக்கு வாங்கியளித்தார் என்று ஒரு கல்வெட்டு கூறுகின்றது.

திருக்கோயில் பெரிய நந்திக்கு முன்னால் விசுவநாத நாயக்கர், அவர் புதல்வர் கிருஷ்ணப்ப நாயக்கர் ஆகியோரின் கற்சிலைகள் தூண்களில் அமைந்துள்ளன. இவர்கள் திருப்பணி சிலவாயினும் இக்கோயிலுக்கு நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது.

மற்றொரு கல்வெட்டு; திருக்கோயில் வழிபாடு செய்யும் பட்டர்கள் உரிமைகள் பற்றிய புதிய முடிவுகளைக் குறிப்பிடுகின்றது. இதன் காலம் வீரப்பநாயக்கர் ஆட்சிக்காலமாகலாம் (கி.பி. 1572 - 1595)

**ஆடல் மண்டபம்**

இராமேச்சுரம் கோயில் கற்றளியாய்க் கட்டுவதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்பே இவ்வாடல் மண்டபம் கட்டப்பட்டது. இது கட்டப்படும்போது இராமநாதபுரத்தைக் கூத்தன் சேதுபதி காத்த தேவர் ஆட்சி புரிந்து வந்தார். அப்போது ராமநாத பண்டாரம் என்பவன் இதனைக் கட்டியதாக இக்கோயில் கருவறை வாயிலுக்குச் செல்லும் வழியில் தென்புறச் சுவரில் ஒரு பாடல் கல்வெட்டு கூறுகிறது.

**கற்றளி**

மேற்கண்ட இராமநாத பண்டாரமே கி.பி. 1608-ஆம் ஆண்டு இக்கோயிலைக் கற்றளியாக்கினான் என்று இரண்டாம் திருச்சுற்றிலுள்ள கோடி தீர்த்தத்தின் மேற்குப் புறச்சுவரிலுள்ள கல்வெட்டு குறிப்பிடுகின்றது. கோயில் திருப்பணி வேலைகளும் இதே ஆண்டில் தொடங்கப்பெற்றதாக முதல் திருச்சுற்றிலுள்ள பிள்ளையார் கோயிலுக்குத் தெற்கில் மேற்குச் சுவரில் உள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இம்மூன்று கல்வெட்டுகளுமே பாடல் வடிவில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இதன் பின்னர் பதினேழாம் நூற்றாண்டில் முத்துக்கிருஷ்ணப்பநாயக்கர் (கி.பி. 1601 - 1609) காலத்தில் இராமநாதபுரம் பகுதியில் அமைதி குலைந்தது. இராமேச்சுரம் செல்லும் பயணிகள் பல இன்னல்களுக்கு ஆளானார்கள். இதனைக் கண்ட நாயக்க மன்னர் "சடைக்கத் தேவ உடையான் சேதுபதி" என்பவரை நாடுகாவல் அதிகாரியாய் இப்பகுதிக்கு நியமித்து சட்டம் ஒழுங்கைக் காத்தார். அதன் பின்னர் கி.பி. 1605 முதல் சேதுபதி மரபினர் ஆட்சியுரிமை பெற்றுத் தனியாட்சி புரியும் வண்ணம் சிறந்தனர்.

**சேதுபதிகள் தொடர்பு**

இராமநாதபுரம் அரசர்களான சேதுபதிகளே இராமேச்சுரம் கோயில் பெரும்பகுதியைக் கட்டியவர்கள் ஆவார்கள். இக்குடும்பத்தார்

பல நூற்றாண்டுகளாகத் தங்களுடைய பொன்னையும் பொருளையும் வாரி வாரி வழங்கி வந்தனர். சதா சர்வ காலமும் இராமநாத சுவாமியை நினைத்து அவருக்கே அடிமைப்பட்டு வாழ்ந்து வருகின்றார்கள் எனில் அது மிகையாகாது. தாங்கள் மட்டுமல்லாது இராமநாதசுவாமியை வழி படவரும் பக்தர்களுக்கெல்லாம் வேண்டிய உதவிகளைச் செய்தவர்கள். இதனால் 'சேதுக்காவலர்கள்' என்ற பெயரும் உண்டு.

**சேதுபதிகளின் செப்பேடுகள்**

இதுவரை கிடைத்துள்ள சேதுபதிகளின் செப்பேடுகள் 107-ல் இராமேச்சுரச் செப்பேடுகள் மட்டும் 12 ஆகும். இச்செப்பேடுகள் வழி இராமநாதசுவாமிக்குச் சேதுபதிகளின் கொடைகள் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள முடியும்.

**செப்பேடு வழங்கிய சேதுபதிகள்**

'சேதுக்காவலர்' என்றும் 'சேதுபதி காத்த தேவர்' என்றும் பட்டப் பெயர் பெற்ற சேதுபதிகள் பன்னிரண்டு பேர்களின் பெயர்களும் அளித்த ஆண்டும் இராமேச்சுவரத்திற்கு அளித்த செப்பேடுகள் வழி அறிய முடிகின்றது. அவர்கள் கி.பி. 1607 முதல் 1772 வரை செப்பேடுகளை வழங்கியுள்ளனர் என்பது தெரிகிறது.

**பிற சிறப்புகள்**

இக்கோயில் 865 அடிநீளமும் 657 அடி அகலமும் கொண்டது. மூன்றாம் திருச்சுற்று மண்டபம் காண்பாரை வியப்படைச் செய்யும் தன்மையுடையது. இம்மண்டபம் திருமலை சேதுபதி, சின்ன உடையான் சேதுபதி, தளவாய் சேதுபதி (1748 - 1760) முத்துராமலிங்க சேதுபதி ஆகியோரால் கட்டப்பட்டது.

**நம்பிக்கைகள்**

மணலை எடுத்து இராமன் சிவலிங்கத் திருமேனி அமைத்ததால் இராமேச்சுரத்தில் ஏர் உழுதல், செக்கு ஆட்டுதல், பானை வனைதல் முதலான செயல்கள் நடைபெறுவதில்லை.

# 33. அப்பரின் மதமாற்றமும் மனவுணர்வும்

சு. சந்திரா, சிதம்பரம்.

அளவற்ற கலைத்துறைகள் தழைக்கவும், தவநெறி வாழவும் உலகிருள் நீக்கி ஒளிதரும் கதிரவனைப் போன்று மருணீக்கியார் எனப்படும் திருநாவுக்கரசர் அவதாரம் செய்தார் எனச் சேக்கிழார் போற்றுகிறார். அவரது வாழ்வும் வாக்கும் இவண் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. மதமாற்றமும் மனவுணர்வும் உளவியல் கோட்பாட்டின் அடிப்படையில் நோக்கப்படுகின்றன.

## திருநாவுக்கரசர் பாடல்கள்

தமக்குற்ற சூலை நோய் தீர இறைவனைச் சொற்றமிழால் பாடத் தொடங்கிய அப்பருடைய பாடல்கள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறை களாகப் போற்றப்படுகின்றன. அவை 312 பதிகங்களில் 3065 பாடல்களாக உள்ளன. (நடேசக் கவுண்டர், கு., அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், 1972, ப. 118)

பதிகங்கள் முழுமையும் கொள்ளப்படாமல், ஆய்வுக்கு வலுச்சேர்க்கும் பாடல்கள் மட்டும் சுட்டப்படுகின்றன. அப்பர் பெருமான் வாழ்வில் நிகழ்ந்த மதமாற்றமும், அதன் விளைவான அவரது மனவுணர்வும் உளவியல் அணுகுமுறையில் நோக்கப்படுகின்றன.

## இலக்கியத் திறனாய்வில் உளவியல்

இலக்கியத்தின் இயல்புகளை – நோக்கங்களை – அமைப்பினை எடுத்துரைக்கும் திறன்களை வகைப்படுத்திக் காட்டுவதும் மதிப்பிடுவதுமே இலக்கியத் திறனாய்வாகும். இத்திறனாய்வு நெறியினை விளக்கமுறப் பிற துறைகளையும் இணைத்து நோக்குவது தற்காலப் புதுமுறையாகும். அவ்வகையில் உளவியலின் அடிப்படைக் கூறுகளை முதன்மையாகக் கொண்டு இலக்கியத்தை ஆராயலாம்.

இலக்கியத் திறனாய்வில் உளவியல் பலவாறு நோக்கப்படுகிறது. இலக்கியப் படைப்பில் உள்ள உளவியலை நோக்குவது ஒருவகையாகும். படைப்பாளியின் உளவியலை நோக்குவதும், படைப்பாக்கச் செயலில் உளவியலைக் காண்பதும் பிற உளவியல் திறனாய்வு வகைகளாகும். வாசகர் உளவியலும் பிறிதொரு வகை ஆகும்.

புறச் சமயத்திலிருந்து சைவத்திற்கு இறையருளால் மீண்ட திருநாவுக்கரசர் மதிமாற்றத்தின் காரணமாக மனம் வருந்துகிறார். இவரது வருத்த உணர்வுகள் அவரைத் தாழ்வு மனப்பான்மை (Inferiority Complex) என்ற உளவியல் சிக்கலுக்கு உட்படுத்துகின்றன எனலாம். அதாவது மதமாற்றமும் அது குறித்த அவரது மனவுணர்வுகளும் மீண்டும் மீண்டும் அவரது பதிகங்களில் இடைவிடாது இடம்பெறுகின்றன. ஆகவேதான் மதமாற்றம் மற்றும் மனவுணர்வுகளைக் காண்பது ஆய்வுச் செல்நெறி ஆகும்.

### திருநாவுக்கரசரது மதமாற்றமும் மனவுணர்வும்

தனி மனிதர்களது வாழ்வில் ஏற்படும் சிக்கல்கள் அவர்களது ஆளுமையை நிர்ணயிக்கின்றன எனலாம். இளமையிலேயே பெற்றோர்களை இழந்த மருள்நீக்கியார் வாழ்வில் அடுத்தடுத்து நிகழ்ந்த இழப்புகள் அவரது மதமாற்றத்திற்குக் காரணமாகின்றன என்பர் அறிஞர். இதனைச் சேக்கிழார், அறம் பல புரிந்த பின்னை நாவுக்கரசர் நிலையாமை உணர்ந்து யாவற்றையும் துறந்தார் எனவும் நம்பர் அருளாமையினால், சமணம் மாறினார் எனவும் சுட்டுவார். மேலும் திருநாவுக்கரசரது படைப்புகளிலும் மதமாற்றம் குறித்த அவரது மனவுணர்வுகள் பதிவாகியுள்ளன. அதாவது மதமாற்றம் என்ற நிகழ்வு நாவுக்கரசரது பாடல்களில் அவரது உளச்சிக்கலை வெளிப்படுத்தும் விதமாக அமைகின்றது. இதனை, 'அடிமனதில் உறையும் உணர்வுகள் மனிதனின் ஆளுமையை உருவாக்குவதில் பெரும் பங்கு கொள்கின்றன. இளமைப் பருவத்தில் உண்டான ஏமாற்றங்கள், அதிர்ச்சிகள், உறுத்தல்கள் பிற்காலத்தில் யாதாகிலும் ஒரு வடிவில் வெளிப்படும். இதன் விளைவாக மனித ஆளுமை வலிவும் பொலிவும் பெறலாம் அல்லது சிதைவுறவும் நேரலாம். இத்தகைய அடிமன உணர்வுகள் கலைஞனுடைய படைப்புகளில் யாதாகிலும் ஒருவகையில் தம்முடைய முத்திரையைப் பொறிக்கக் கூடும்'' என்ற பிராய்டின் விளக்கம் உறுதிப் படுத்துகிறது. (Freud, S., New Indroductary Lectures on Psychoanalysis Hogarth, 1946, P. 82-85)

அதாவது, திருநாவுக்கரசரது மதமாற்றம் என்பது அவரது மனவுணர்வில் தாழ்வு மனப்பான்மை என்ற உளச்சிக்கலை உருவாக்கு கிறது எனலாம். அவ்வகையில் தாழ்வு மனப்பான்மை என்ற உளவியல் கோட்பாட்டையும், அக்கோட்பாடு நாவுக்கரசரது பதிகங்களில் இடம்பெறுமாற்றையும் காண்போம்.

### தாழ்வு மனப்பான்மை

தனக்கே உரிய தனிப்பட்ட முயற்சிகளாலும் மீளமுடியாத துன்பம் அல்லது சிக்கலிலிருந்து விடுபட முடியாத மிகைப்படுத்தப்பட்ட

அல்லது பலவீனமான உணர்வுகளைத் தாழ்வு மனப்பான்மை (Inferiority Complex) என உளவியலாளர் வரையறைப்படுத்துகின்றன. மேலும்,

1. உடற் குறைபாடு பற்றிய உணர்வுகள்
2. தாழ்வு மனவுணர்வுகள்
3. இழப்பினை ஈடுசெய்தல்

முதலியவற்றைத் தாழ்வு மனப்பான்மைக்கு உரிய கூறுகளாகக் குறிப்பிடுவர். (SADDOCK & SADDOCK, A Short text book of Psychiatry, P. 110) இத்தன்மைகள் நாவுக்கரசரது வரலாற்றிலும் பாடல்களிலும் ஊடாடுவதை ஆய்வின் செல்நெறியில் காணலாம்.

**உடற் குறைபாடு பற்றிய உணர்வுகள்**

தாழ்வு மனப்பான்மை என்ற உளச்சிக்கலுக்கு உரிய கூறுகளுள் ஒன்றாக உடற்குறைபாடு பற்றிய உணர்வுகளைச் சுட்டுவர். இவ்வுணர்வு நாவுக்கரசரது பதிகங்களில் சற்று அதிகமாகவே இடம் பெறுகிறது எனலாம்.

ஆன்மிக உலகில் உடல் சார்ந்த உலக வாழ்க்கை நிலையாமை உடையது என்பர். இவ்விதமான கருத்தாக்கம் திருநாவுக்கரசரது பாடல்களில், 'பிணமுடை உடலுக்காகப் பித்தராய்த் திரிந்து, (45-7), 'அஞ்சப் புலனிவற்றாலாட்ட வாட்டுண்டருநோய்க் கிடமாய் உடலின் தன்மை' (255-8), 'பரவிப் பல பலவும் தேடியோடிப் பாழாங் குரம்பை யிடைக் கிடத்து' (255-3) என ஆங்காங்கு இடம் பெறுகிறது. எனினும் புறச்சமயம் சார்ந்து 'உடல் வளர்த்தமை' என்ற எண்ணம் அப்பர் பெருமானது பதிகங்களில் ஊடாடுகிறது.

> புன்னெறியாம் சமணசமயத் தொடக்குண்டு போந்தவுடன்
> தன்னுடனே உயிர்வாழத் தரியேன் நான் தரிப்பதனுக்கு
> என்னுடைய நாயகநின் இலச்சினையிட்டருள்.... (1415)

எனத் திருநாவுக்கரசரது எண்ணவோட்டத்தைச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். நாவரசரும் தமது பதிகத்துள் 'என்னாவி காப்பதற்கு இச்சையுண்டேல் இருங்கூற்று அகல மின்னாரு மூவிலைச் சூலமென மேற்பொறி' என வேண்டுகிறார்.

மேலும், தலங்கள்தோறும் சென்று பிறைசூடிப் பெருமானைப் பாடிப் பரவும் அப்பர் பெருமான், தில்லை சென்றபோது, அத்திருவீதி களில் சமணப்புக்க உடற்குற்றம் நீங்க, புரண்டு வலம் வருகிறார். இதனை, 'சிதம்பரத்திற்கு வந்தபொழுது அத்தலம் புண்ணியத்தலம், பூலோக கயிலாயம். ஆதலின் அதன் நான்கு வீதிகளிலும் தன் திருமேனி சமண சமயம் சார்ந்திருந்த அருவருப்பு நீங்க வேண்டும் என்று கருஅங்கப் பிரதட்சணம் செய்கிறார்' (நான்காம் திருமுறை, தருமையாதீன வெளியீடு, 1997, ப. 13, 14) என்ற கருத்து அரண் செய்கிறது.

திருநாவுக்கரசரது உடல் பற்றிய தாழ்வுணர்வு அவரது திருவங்க மாலையில் வெளியாகிறது எனலாம். 'திருஅங்கமாலை என்பது ஆடவர், பெண்டிர் ஆகிய இருபாலர் உறுப்பையும் பாடுவது ஆகும். ஆயின் அப்பர் சுவாமிகளின் திருவங்கமாலை, பெயர் ஒப்புமையைக் காட்டிலும், உறுப்பு வருணனையாக அமையாது, இறைவனைப் பாடிப் பணியவே அமைந்தன' (சுப்ரமணியன், ச.வே., தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப. 522)

'தலையே நீ வணங்காய்' எனத் தொடங்கும் திருவங்கமாலைப் பதிகத்துள், முறையே கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கை, ஆக்கை, கால் என அனைத்து உறுப்புகளாலும் இறைவனை வணங்கச் சொல்கிறார்.

மீண்டும், மீண்டும் சமண்புக்கத் தம் உடலைத் தூய்மை செய்யும் ஆவல் நாவுக்கரசரது பதிகங்களில் எதிரொலிக்கிறது எனலாம். இவ்வாறு, உடல் பற்றிய தாழ்வுணர்வுடன் திருச்சத்தி முற்றத்தில், 'பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்து வை' என வேண்டுகிறார். இறைவன் இடப, சூல முத்திரை பொறித்த பின்னரும், உடற்தூய்மை கருதித் தில்லை வீதிகளில் புரள்வதும், திருவடி தீட்சை வேண்டுவதும், அப்பர் பெருமானின் உடல் பற்றிய மனவுணர்வுக்குச் சான்றாகிறது எனலாம்.

**தாழ்வுணர்வுகள்**

தாழ்வு மனப்பான்மை என்ற உளச்சிக்கலை உடையோரது செய்கை, பேச்சு முதலிய நடவடிக்கைகளில் அம்மிகையுணர்வு வெளிப்படும் என்பர். அப்பர் பெருமானின் 'புறச்சமயம் புக்க தாழ்வுணர்வு' அவரது பதிகங்களில் இடம்பெறுகிறது. இந்தத் தாழ்வுணர்வுகளை அவரது முதற்பதிகத்தின் பாடல்கள்தோறும் காண முடிகின்றது.

**கா்த்தாள்பவர் காவல் இகழந்தமையால்**
**கரைநின்றவர் கண்டுகொள்**
**என்று சொல்லி நீத்தாய்கம் புகநூக்கியிட** (4:5)

எனத் தமக்குப் பற்றுக்கோடாக இருந்த தமக்கையை நீங்கியமையைச் சுட்டுகிறார். மேலும் 'உயர்ந்தேன் மனைவாழ்க்கை ஒண்பொருளும் ஒருவர் தலை காவல் இலாமையினால்' (4:7) எனவும், 'துன்பே கவலை பிணியென்றிவற்றை என் போலிகள் உம்மை, இனித் தெளியார்' (4:9) எனவும் வருந்துவது அவரது தாழ்வுணர்வுகளை வெளிப்படுத்துகின்றன எனலாம்.

திருவையாற்று இறைவனைப் போற்றிப் பரவும் திருப்பதிகம் முழுவதிலும் சமணம் சார்ந்தி தம் நிலையினை எண்ணி எண்ணிப் புலம்புகிறார். 'குண்டனாய்ச் சமணரோடு கூடி நான்', 'பீலிகையிடுக்கி

நாளும் பெரியதோர் 'தலமென்றெண்ணி வாவிய தறிகள் போல மதியிலார் பட்டதென்னே', 'சமணரோடு தருக்கி நான்', 'சமணரோடு நேசத்திலிருந்த நெஞ்சை, வடுக்களோடு இசைந்த நெஞ்சே, மதியிலி' 'சமணரோடு பலபல காலமெல்லாம் சொல்லிய செலவு செய்தேன்', 'சமணரோடு இசைந்தனை ஏழை நெஞ்சே' எனவும் பலவாறு வருந்திப் புலம்புகிறார். இவ்வாறு புறச்சமயம் சார்ந்தமை பற்றிய அவரது தாழ்வுணர்வு பதிகங்களில் இடம் பெறுவது கருதத் தக்கதாகும்.

**இழப்பினை ஈடுசெய்தல்**

தாழ்வு மனப்பான்மை என்ற உளச்சிக்கலுக்கு ஆளானவர்கள், இவ்விழப்பினை ஈடுசெய்ய முற்படுவர். அவ்வழி, இழப்புணர்வைச் சமன்படுத்தும் முகமாக அப்பர் பெருமான் உறுதிமொழி அளிக்கிறார். இறைவனிடத்துத் தம்மை மீளா அடிமையாக ஒப்படைக்கிறார். புறச்சமயம் சார்ந்த தமது ஈடுசெய்யும் முகமாக உறுதிமொழியளித்தல் என்னும் கூறு மீண்டும் மீண்டும் பதிகங்களில் இடம் பெறுகிறது.

முதற் பதிகத்தின் முதற்பாடலில்,

'......... இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்' (4:1)

எனவும்

''சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியோர்
உன்னாமம் என்னாவில் மறந்தறியேன்'' (4:1)

எனப் பூசனைகள் புரிவதாகவும் உறுதிமொழி தருகிறார். மேலும் தமது தாழ்வுணர்வை ஈடுசெய்யும் விதமாக, உழவாரப் படையைக் கைவிடாதவராகச் செல்லும் தலந்தொறும் பணிபுரிகின்றார். (நடேச கவுண்டர், கு. மு.நூ., ப. 92)

'வழிவழியாளாகும் வண்ண மருளெங்கள் வானவனே' என்ற திருநாகைக் காரோகரணத் திருப்பதிகத் தொடர்கள் சமணசமயம் குறுகித் தீங்குற்றமை எண்ணி வருந்தி, இனி எப்பிறப்பிலும் தமது வழிவழிச் சந்ததியார் சிவனடியாராகவே இருப்பர் என வேண்டுகிறார். இவ்வுறுதிப்பாடு இழப்பினை ஈடுசெய்தல் என்ற வகைப்பாட்டிற்கு உள்ளாகிறது எனலாம்.

**முடிவுகள்**

சூலை நோயால் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட மருணீக்கியார் நாவுக்கரசராக - அப்பராக உயர்கிறார் என்பது வரலாறு. எனினும், 'புறச்சமயம் சார்ந்தமை' என்னும் எண்ணம் அவரைத் தாழ்வு மனப்பான்மைக்கு உள்ளாக்குகிறது எனலாம்.

**'சமண் புக்க உடல்'** என உடல் பற்றிய தாழ்வுணர்வும் **'சமணம் சார்ந்தமை'** என்ற தாழ்வுணர்வும் அவரது பாடல்களில் ஊடாடுவதைக் காண முடிகிறது. இத்தாழ்வுணர்வை ஈடுசெய்யும் முறையில் **'உறுதிமொழி அளித்து'** உய்வு தேடுகிறார் நாவுக்கரசர் பெருமான்.

அதாவது, தமக்குற்ற தாழ்வு மனப்பான்மை என்ற சிக்கலை இறை நெறி நின்று பதிகங்கள் பாடியும், உழவாரப் பணி செய்தும் அப்பர் பெருமானாக உயர்ந்தோங்கிச் சிறக்கிறார் திருநாவுக்கரசர் எனலாம்.

இவ்விதமான உளவியல் நோக்கில் அப்பர் பெருமானின் பதிகம் முழுமையும் ஆய்வுக்கு உட்படுத்தினால், புதிய தளத்திற்கு நம்மை இட்டுச் செல்லும் என்பதில் ஐயமில்லை.

# 34. நாவுக்கரசரில் சமூகவியல்

இரா. சம்பத், சென்னை.

திருநாவுக்கரசரின் இயற்பெயர் 'மருள்நீக்கியார்'. திருவாமூர் என்ற ஊரில் புகழனார் என்பவருக்கும் மாதினியார் என்பவருக்கும் மகனாக அவதரித்தார். மருள்நீக்கியார் முதலில் சமணத்தைப் பின்பற்றிச் 'சூலை நோய்' வந்து சிவன் அருளால் நோய் நீங்கி, சைவத்தைப் பின் பற்றியது நாடறிந்ததே. இந்த ஆய்வுக் கட்டுரையில் அருளாளரின் வாழ்க்கை வரலாற்றை விவரிக்காமல், அவர் பாடிய பதிகங்களில் சமூக நோக்கும், சமூகத்திற்குத் தந்த செய்திகளையும் ஆராய்வதே என் எண்ணம்.

பன்னிரு திருமுறைகளில் திருநாவுக்கரசரின் பதிகங்கள் நான்காம், ஐந்தாம் மற்றும் ஆறாம் திருமுறைகளில் இடம் பெற்றுள்ளன. சமூகச் சிந்தனை உள்ள சில பதிகங்களை உற்று நோக்குவோம்.

**பதிகம் : 750 - நான்காம் திருமுறை**

புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்
முள்ளுடை அவர்கள் தம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங்கு உணர்வினால் எய்யலாமே.

வஞ்சகராகிய ஐந்து புலன்கள் கள்வர் எனப் புகுந்து மக்களின் தூய எண்ணங்களைச் சிதைக்கின்றன. முள்போன்ற அந்த ஐம்புலன்களின் செயல்களை முக்கண் நாயகன் சிவனாரின் திருப்பாதங்களின் நிழலில் வைத்தால் சிவஞானம் கிட்டும். இதன்மூலம் நமக்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் உணர்த்துவது யாதெனில் இளம் வயதிலும் முதுமை அடையும் வரையும் நம்புலன்களை அடக்குவது கடினம் என்றும், அதனால் வரும் விளைவுகள்தான் நமக்குப் பல இன்னல்களைத் தருகின்றன என்றும் கூறுவதோடு, சிவசிந்தனையின் உயர்வைக் கூறுவதோடு நம் மனதின் தூய்மைக்கும் வழிகாட்டுகிறார் என்றால் அது மிகையாகாது. இதே கருத்தைத்தான் திருவள்ளுவரும்,

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்"

என்று புலன் அடக்கத்தைப் பற்றிக் கூறுகிறார்.

**பதிகம் : 751 - நான்காம் திருமுறை**

> தொண்டனேன் பிறந்துவாளாத் தொல்வினைக் குழியில் வீழ்ந்து
> பிண்டமே சுமந்து நாளும் பெரியதோற் அவாவிற்பட்டேன்
> அண்டனே அமரர் கோவே அறிவனே அஞ்சல் என்னாய்
> தொண்டிரைக் கங்கை சூடும் திகழ்தரு சடையினானே.

இப்பிறவியில் ஒரு தொண்டன் சஞ்சித பிராரத்த வினைக் குழியில் வீழ்ந்து, அதைச் சுமந்து ஆசையால் அழியும்போது, இந்தப் பிறவி எதிர்கால வினையாகிய ஆகாமிய வினையைக் கூடவே உருவாக்கி விடுகிறது. இவற்றை அழிக்கவல்ல சக்தி சிவபெருமானுக்கே உண்டு என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுகிறார். இப்பதிகம் நமக்கு உணர்த்துவது யாதெனில் மனிதன் எப்பிறவியிலும் ஆசையைப் பெருக்கிக் கொள்ளக் கூடாது. அவ்வாசையே வினைகள் பெருகக் காரணம் என்று மக்களை எச்சரிப்பது போற்றத் தக்கதாகும்.

**பதிகம் : 752 - நான்காம் திருமுறை**

> பாறினாய் பாவி நெஞ்சே பன்றிபோல் அளற்றிற்பட்டுத்
> தேறிநீ நினைதியாயிற் சிவகதி திண்ணமாகும்
> உறையே உவர்ப்பு நூறி உதிரமே ஒழுகும் வாசல்
> கூறையால் மூடக்கண்டு கோலமாக் கருதினாயே.

இங்கு சுவாமிகள் "பன்றி எவ்வாறு தன்னையும் அறியாமல் சேற்றில் புரளுகிறதோ அது போல் மனிதர்களும் ஆசைச் சேற்றில் புதைந்து தங்கள் உடம்பு அழகு என்று நினைக்கிறார்கள்" என்று கூறுகிறார் சுவாமிகள். மனித உடலானது உவப்பு நீர் பெருகி, நாற்றம் மிகுந்து, உதிரம் ஒழுகும், துவாரங்கள் கொண்ட சதையால் மூடப்பட்டது என்று கூறி நிலையில்லாத உடம்புக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது என்று மனித இனத்தை அச்சுறுவத்துவதோடு இந்த உடலை ஈசனுக்குச் சமர்ப்பிக்கும்போது வினைப் பயன் அகலும் என்பதையும் நமக்குச் சூசகமாகத் தெரிவிக்கிறார்.

**பதிகம் : 279 - ஐந்தாம் திருமுறை**

> இழுக்கின் வண்ணங்கள் ஆகிய வெவ்வழல்
> குழைக்கும் வண்ணங்கள் ஆகியும் கூடியும்
> மழைக்கண் மாமுகில் ஆகிய வண்ணமும்
> அழைக்கும் வண்ணமும் ஆவர் ஐயாறரே.

சிவபெருமான் தீயவழிகளில் செல்வோர்க்குத் தீயாகவும், அன்பு வழிகளில் செல்வோர்க்கு அன்பின் வண்ணமுகமாகக் காட்சி அளிக்கிறார். மழை பொழியும் முகில் வண்ணமாக நல்ல உள்ளங்களுக்குத் திகழ்வார். தம்மீது அன்பு செலுத்துபவர்களுக்கு அருள்புரிவார்.

இப்பதிகம் மூலம் திருநாவுக்கரசர் நமக்குத் தெரியப்படுத்துவது யாதெனில் அன்பு ஆண்டவனிடமும், அடியார்களிடமும், பொதுமக்களிடமும் குறைவு இல்லாமல் செலுத்தினால், அவ்வன்பே வளமான வாழ்வுக்கு வழிகோலும் என்பதே. இவ்வரிய சமூகச் சிந்தனையை அப்பர் சுவாமிகள் தவிர வேறு யார் நமக்கு அளிக்க முடியும்?

**பதிகம் : 310 – ஐந்தாம் திருமுறை**

வஞ்சம் இன்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொல் இன்றி விலகுமின் வீடுற
நைஞ்சு நைஞ்சு நின்று உன்குளிர்வார்க்கெல்லாம்
அஞ்சல் என்றிடும் ஆனைக்கா அண்ணலே.

சிவபெருமானை, மனதில் வஞ்சனைக்கு இடமின்றி முழுமையான உள்ளத்தோடு நிஷ்காமிய உணர்வுடன் வணங்குவீராக. கடுமையான சொற்கள் பேசுதலை விளக்குவீராக. முத்தி நாடி உள்ளம் கசிந்து உருகி ஏத்துவீராக. அத்தகைய அன்பர்களுக்கு ஆனைக்காவில் மேவும் அண்ணல் "அஞ்சேல்" என்று அபயம் அளித்துக் காத்து அருள்பவர்.

இப்பதிகத்தால் சுவாமிகள் நமக்குக் கூறுவது "எந்தக் காரியத்தையும் பலனை எதிர்பார்க்காமல் முழு மனதுடன் செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் சுயநலம் அகலுவதோடு உள்ளமும் தெளிவுடன் செயல் படுகிறது. இவ்வாறு ஒவ்வொரு மனிதனும் இருந்தால், "பயம்" என்பதே இருக்காது, வாழ்வு சீராக அமைந்து முத்திக்கு வழி கொடுக்கும் என்பதே.

**பதிகம் : 419 – ஐந்தாம் திருமுறை**

அல்லல் இல்லை அருவினைதான் இல்லை
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வனார் திருவேட்களம் கைதொழ
வல்லராகிய வழியது காண்மினே.

திருவேட்களத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை கைதொழுது போற்றினால் துன்பமும், அதற்குக் காரணமாகிய வினையும் மக்களை அண்டாது. கூடவே நற்கதிக்கு உண்டான வழியும் சிவனின் அருளால் கிட்டும் என்று சுவாமிகள் கூறுகிறார்.

மக்களுக்குச் சுவாமி இதன்மூலம் தெரிவிப்பது என்னவென்றால் நிறைந்த மனதோடு ஈசனைத் தொழுதால் வல்வினையும், வருவினையும் மக்களை நெருங்காது என்பதே.

**பதிகம் : 472**

பொருளினோடு நற்சுற்றமும் பற்றிலர்க்கு
அருளுநன்மை தந்தாய அரும்பொருள்

**சுருள் கொண் செஞ்சடையான் கச்சி ஏகம்பன்**
**இருள் கெடச் சென்று கைதொழுது ஏத்துமே**

சிவபெருமான் எல்லாப் பொருளும் சுற்றமும் ஆகியவர், தான் என்னும் அகப்பற்றும், தனது என்னும் புறப்பற்றும் இல்லாதவர்களுக்கு, அருள்புரியும் அரும்பொருளாகியவரே. தீவினைகள் தீரும் பொருட்டுக் கைதொழுது வணங்க வேண்டும். மேற்கூறிய பதிகம் மனிதனின் வாழ்வு முறையை விளக்குகிறது. ஆணவம் கொண்டு, தான், தனது என்ற எண்ணத்தை வளர்க்கக் கூடாது என்பதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் நமக்கு ஒரு சமுதாயச் சிந்தனையை வெளிக்கொண்டு வந்துள்ளார். என்பது இப்பதிகம் மூலம் விளக்கப்படுகிறது.

**பதிகம் : 574**

**நாளும் நம்முடைய நாள்கள் அறிகிறோம்**
**ஆளும் நோய்கள் ஓர் ஐம்பதோடு ஆறெட்டும்**
**ஏழைமைப்பட்டிருந்து நீர் தையாதே**
**கோளிலி அரன்பாதமே கூறுமே**

நம் வாழ்நாட்கள் எத்துணை என அறியும் அறிவு நமக்கு இல்லை என்றும், நம்மை அடிமையாக்கித் துன்புறுத்தும் நோய்களைப் பற்றி அறியும் அறிவும் நமக்கு இல்லை. இந்நிலையில் ஈசனைத் தொழுது அதுவும் கோளிலியில் உள்ள ஈசனின் பாதத்தைத் தொழுதால் துன்பம் யாவும் நம்மை விட்டு விலகும் என்று அப்பர் சுவாமிகள் கூறுகிறார். எவ்வளவு தான் படித்திருந்தாலும், உயர்ந்த பதவியில் இருந்தாலும் விதியின் கொடுமையையும் மனிதனின் ஆயுட்காலத்தையும் உணர முடியாது என்பதைச் சமூகத்திற்கு சுவாமிகள் எடுத்துக்காட்டுகிறார்.

**பதிகம் : 695**

**ஆற்றவும் அவலத்தழுந்தாது நீர்**
**தோற்றும் நீயொரு நீர் நிலத்தூவெளி**
**காற்றும் ஆகி நின்றான் தன் கருவிலிக்**
**கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே**

அவலமாகிய துன்பத்தில் அழுந்தி வாட வேண்டாம். சிவபெருமான் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என ஐம்பூதங்களாகி விளங்குபவர். அவர் கருவிலிக் கொட்டிட்டையில் வீற்றிருப்பவர். கூற்றுவனை அழித்தவர். அப்பெருமானைச் சார்ந்து இருந்தால், அவலம் யாவும் நீங்கி அழியும். இப்பதிகத்தின் மூலம் வெளியே உள்ள பஞ்ச பூதங்கள் நம் உடலில் உள்ளன என்றும் ஒன்றுக்கொன்று அவை வினை புரியும்போது நாம் துன்பம் அடைகிறோம் என்ற சமுதாய தத்துவத்தை நமக்குத் திருநாவுக்கரசர் உணர்த்தியுள்ளார்.

**பதிகம் : 771**

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீக்கி இங்கு இன்பம் வந்து எய்திடும்
சிறப்பர் சேறையும் செந்நெறியான் கழல்
மறப்பதின்றி, மனத்தினுள் வைக்கவே.

நெஞ்சம் மறவாமல் சிவபெருமானை நினைத்துக் கொண்டு இருந்தால் பிறப்பு, முதுமை, பெரும்பசி, நோய், மரணம் என விளையும் துன்பம் யாவும் தீர்ந்து இன்பம் வந்து அடையும்.

உலகியலில் வாழ்ந்து கொண்டிருக்கும்போது எல்லோரும் மேற்கொண்ட வினைகளால் சூழப்பட்டு துன்பத்தை அனுபவிப்பது நிச்சயம். என்றும் இடைவிடாது ஈசனை தியானித்தால் அத்துன்பங்கள் விலகும் என்று சுவாமிகள் கூறுவது சமுதாயத்தைச் சீர்திருத்தும் நோக்கோடு தான் என்பது தெளிவாகிறது.

**பதிகம் : 1010**

கூவல் ஆமை குரைகடல் ஆமையை
கூவலோடு ஒக்குமோ கடல் என்றல்போல்
பாவகாரிகள் பார்ப்பதரிது என்பரால்
தேவதேவன் சிவன் பெருந்தன்மையே

கிணற்று ஆமை, கடல் ஆமையைப் பார்த்து, "நீ இருக்கும் கடலானது கிணற்றினைப் போன்று இருக்குமோ?" என்று அறியாமையால் கேட்பதைப் போல் பாவத்தில் ஊறி இருப்பவர்கள் சிவபெருமானுடைய பெருந்தன்மையைக் காண்பதற்கு இயலாது.

மேற்கூறிய பதிகத்தில் திருநாவுக்கரசர் நமக்குக் கூற நினைப்பது யாதெனில் பாவத்தைச் செய்பவர்கள் பிறர் பாவத்தைப் பற்றி அலசி ஆராய்வார்கள். அவர்களுக்குத் தான் செய்யும் பாவம் தெரியாது. அப்பாவத்திலிருந்து விடுபட ஈசனின் திருவருள் அவசியம் என்பதைக் கூறி மக்களைச் சமுதாயத்தில் நல்வழிப்படுத்த திருநாவுக்கரசர் எடுத்த முயற்சி போற்றத்தக்கதே.

**பதிகம் : 38 - ஆறாம் திருமுறை**

ஒழிந்திடுமே உள்குவார் உள்ளத்துள்ள
உறுபிணியுஞ் செறுபகையும் ஒற்றைக்கண்ணால்
விழித்திடுமே காமனையும் பொடியாய் வீழ
வெள்ளப்புறை கங்கை செஞ்சடைமேல்
இழித்திடுமே ஏழுலகுத் தானாகும்மே
இயங்கித் திரிபுரங்களோர் அம்பினால்

அழித்திடுமே ஆதிமா தவத்துளாளே
அவனாகில் அதிகை வீரட்டானமே.

சிவபெருமான், தன்னை நினைத்து வழிபடும் அடியவர்களுடைய பிணியைத் தீர்த்தருள்பவர், அடியவர்களுக்குப் பகைமையாகிய காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் (பொறாமை) ஆகியன வற்றை நீக்கிப் புனிதமாக்குபவர். மன்மதனை நெற்றிக் கண்ணால் சாம்பலாக்கினவர். கங்கையைச் சடையின் முடியில் தரித்து ஏழுலகமாக திகழ்ந்து, முப்புரங்களை ஓரம்பினால் எரித்துச் சாம்பலாக்கியவர். அப்பரமனே திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருப்பவர். இத்திருப்பதிகத்தில் சுவாமிகள் மனிதனின் அழிவிற்குக் காரணமான ஆறு தீய குணங்களை ஈசனின் திருவருள்தான் போக்க முடியும் என்று கூறுவது நமக்கு பகவான் ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு கீதோபதேசம் செய்து, அர்ச்சுனனை போர்க்குத் தயார் செய்வதை நினைவூட்டுகிறது. வைணவம், சைவம் எல்லாம் கொள்கை அளவில் ஒன்றுதான். அதைப் பின்பற்றுவர்களின் தீயகுணங்கள்தான் ஒருவரோடு ஒருவர் போர்புரிய வைக்கிறது. இந்த மாதிரிப் போர்கள் சமுதாயத்தில் அழிக்கப்பட வேண்டும் என்று திருநாவுக்கரசு சுவாமிகளும், பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் நமக்குச் சமுதாயத்தில் வாழும் வழியைக் காட்டுவதை நினைக்குந்தோறும், படிக்கும்தோறும் மனம் பூரிப்படைகிறது.

திருநாவுக்கரசர் இளமையிலேயே பல இன்னல்களுக்கு ஆளானதால், ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'' என்ற கொள்கையில் பற்று வைக்கும் நிலைக்கு ஆளானார். நம்மில் பெரும்பாலானோர் அதே நிலையில்தான் இன்று உள்ளோம். சுவாமிகள் வாழ்ந்து ஈசனிடம் போராடியதையும், அவர் அருள் பெற்றதையும் படிக்கும்தோறும் நம் நெஞ்சங்கள் நெகிழ்கின்றன. அவர் நமக்கு வழிகாட்டி என்றால் அது மிகையாகாது, அப்பேற்பட்ட அருளாளர்களே இப்பூவுலகில் பல இன்னல் களுக்கு ஆளானார்கள் என்றால், சராசரி மனிதர்களாகிய நாம் எவ்வாறு விழிப்புடன் இருக்க வேண்டும் என்றும், நாம் ஆன்மீகத்தைக் கடைப் பிடித்தாலொழிய நாம் உய்வதற்கு வழி இல்லை என்ற பெரும் உண்மையை உணர்ந்து திருநாவுக்கரசர் கூறிய பல விஷயங்களை மனதில் அசை போட்டு முடிந்த அளவு பின்பற்றி நம் சமுதாயத்தில் நாமும் நம்மைச் சார்ந்தவர்களையும் பெருமையுடன் வாழ வைப்போம். ''மக்கள் தொண்டே மகேசன் தொண்டு'' என்ற கூற்றுக்கு இணங்க பல அறச் செயல்களைச் செய்து எல்லோரையும் வாழ வைத்து அந்த இன்பத்தில் நாமும் வாழ்வோம்.

# 35. நாவுக்கரசரின் பக்திச் சிறப்பு

சற்குணவதி, சென்னை.

இறைவனின் பெருமைகளையும் இறையடியார்களின் பெருமைகளையும் உலகறியச் செய்யும் இலக்கியமே பெரியபுராணம். அதில் அறுபத்து மூவர் வரலாறுகள் பேசப்பட்டாலும் அது சைவசமயக் குரவர் நால்வரின் பெருமை கூறும் நூலாகவே விளங்குகிறது. அதில் நாவுக்கு அரசர் என்று போற்றப்படும் திருநாவுக்கரசரின் பக்தியின் சிறப்பு குறித்து இனிக் காணலாம்.

திருநாவுக்கரசர் வடமொழியும் தமிழும் நன்கு கற்றுத் தேர்ந்தவர். சைவ சமய நூல்களில் புலமை மிகுந்தவராய், சைனத் துறவிகளிடையே தலைமையும் பெற்று விளங்கியவர்; பிறந்த குடும்பம் சைவ சமயத்தில் ஈடுபாடு கொண்டது. தமக்கை கோயில் தொண்டில் ஆர்வம் நிரம்பியவர்; அவருடைய அன்பினால் இழுக்கப்பட்டு மறுபடியும் சைவ சமயத்திற்கே வந்து நெடுங்காலம் வாழ்ந்து தலங்கள் பலவற்றிற்கும் சென்று பக்திப் பாடல்கள் பாடினார். அவர் பாடியவற்றுள் ஒரு பகுதி தாளத்துடன் இசையோடு அமைந்த பாடல்கள் மற்றொரு பகுதி தாளம் இல்லாமல் இசையமைத்துப் பாடப்பட்டவை.

அவரது பாடல்கள் அனைத்தும் பக்தி சுவை சொட்டும் இறையனுபவப் பாடல்களாக அமைந்தவை. திருநாவுக்கரசர்க்கு ஒரு சமயம், பகை கொண்ட அரசன் வருமாறு ஆணை அனுப்பினான். அப்போது அவர் பாடிய பாடல் அவருடைய பெருமித உணர்ச்சியையும் சிவபக்தியையும் ஒருங்கே புலப்படுத்துகிறது. யாம் யார்க்கும் குடியாக அடங்கி வாழவில்லை. எமனுக்கும் அஞ்சுவதில்லை. நரகத்தில் சென்று இடர்படுவதில்லை. பொய்மை எம் வாழ்வில் இல்லை. மகிழ்ச்சியாக வாழ்வோம். நோய் அறியோம். யார்க்கும் பணிய மாட்டோம். எந்த நாளும் இன்பமே அல்லாமல் துன்பம் இல்லை. எம் கடவுளாகிய சிவபெருமான் யார்க்கும் குடி அல்லாத தனித்தலைமை உடையவர். அவர் ஒருவர்க்கே யாம் என்றும் மீளாத அடிமையாய் அவருடைய திருவடியை அடைந்திருக்கிறோம்.

எல்லாம் கடவுள் செயலே என்பதை அவர் ஒரு திருத்தொண்டராகப் பாட்டில் அழகாக பாடியுள்ளார். நீ ஆடச் செய்தால் அதற்குத் தகுந்தபடி ஆடாதவர் யார்? நீ அடங்கச் செய்தால் அடங்காதவர் யார்? நீ உருகச்

செய்தால் உருகாதவர் யார்? நீ பாடச் செய்தால் பாடாதவர் யார்? நீ பணியச் செய்தால் பணியாதவர் யார்? நீ காணச் செய்தால் காணாதவர் யார்? நீ காட்டாவிட்டால் காண வல்லவர் யார்?

"ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆர் ஒருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆர் ஒருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆர் ஒருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆர் ஒருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆர் ஒருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக்காலே"

பல்லவ அரசர் ஒருமுறை சமணத்துறவியர் தூண்டுதலால் சுண்ணாம்புக் காளவாயில் போட்டனர்; ஏவலாளர்கள் திருநாவுக்கரசரைப் பிடித்துச் சென்று, பெருந்தீக்கனலையொத்த நீற்றறைக்குள் அவரை இருக்க வைத்து வெளிக்கதவை அடைத்து இரும்புத் தாளிட்டுப் பாதுகாப்புகள் பலவும் அமைத்தார்கள்.

கொட்டும் நீற்றறைக்குள் திருநாவுக்கரசர் அடைப்பட்டதும் தில்லையம் பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரியும் சிவமூர்த்தியின் திரும்பாத நிழலைத் தம் தலைமீது கொண்டு, 'ஈசனடியார்க்கு ஈண்டு வருந்துயரும் உண்டோ' என்று நினைத்துக் கிளர்ந்தெழும் மனநிறைவோடு முக்கண் முதல்வனைத் தொழுதபடியே வீற்றிருந்தார். கொடும் வெப்பம் நிறைந்த அந்த நீற்றறை இறைவனருளால் இளவேனிற் பருவமாக வீசும் மென் தென்றலாக குளிர்ச்சியான கழுநீர் மலர்ப் பொய்கையாக மொய்க்கும் வெண்ணிலவாக, மீட்டும் யாழ் ஒலியாகத் தோன்றி இறைவன் திருவடி நிழல் எனக் குளிர்ந்தது. இவ்வாறு எம்பிரான் திருவடி நிழலில் திளைத்திருந்த திருநாவுக்கரசர் மனமுருகி இறைவனை நினைத்துப் பாடினார்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

பிறை நிலாவையும், கங்கை வெள்ளத்தையும் விரிசடையில் சுமக்கும் சென்னியனே! பேச இனியவனே! உலகை ஆளும் பித்தனே ஈசனே! எப்பெருமானே! எவ்வுயிரும் தருபவனே! ஆசையில் ஆரமுதே! என்று எப்போதும் இறைவனையே நினைத்து திருநாவுக்கரசர் அடி வணங்கி அந்த நீற்றறைக்குள்ளேயே இன்புற்றிருந்தார்.

திருநாவுக்கரசர் ஒரு முறை கயிலை மலையைக் காண ஆசை கொண்டார். பயணம் மேற்கொண்டார். அப்போது வழியில் ஒரு

குளத்தில் மூழ்கி எழுமாறு தெய்வ ஆணை பிறந்ததாம். மூழ்கியபோது கயிலை மலைக் காட்சியைக் கண்டாராம். திருவையாற்றின் குளக்கரையில் எழுந்தாராம். அப்போது உலகில் வாழும் உயிரினங்களில் கடவுளின் அன்பான ஆட்சியை உணர முடிந்ததாம். அப்போது அவர் பாடிய பாடலில், "சிவபெருமானையும் பார்வதியையும் பாடியவாறே பூவும் நீரும் எடுத்துச் செல்வோரின் பின் யானும் சென்றேன்." போன சுவடும் தெரியாமல், திருவையாற்றை அளந்தேன். அப்போது காதல் உடைய பெண் யானையுடன் ஆண் யானை வருவதைக் கண்டேன். கண்டறியாத அற்புதமான கடவுள் காட்சியையே கண்டேன் என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறே மற்ற பறவை விலங்குகளின் அன்பு வாழ்வினையே சிவபெருமானின் காட்சியைப் பெற்றதாகத் தொடர்ந்து பாடியுள்ளார்.

திருநாவுக்கரசரின் வாழ்க்கை அனுபவமும் அவரது பாடல்களும் இறையனுபவத்தையும் இறைவனின் அற்புதத்தையும் வெளிப்படுத்தும் பக்தி சிறப்புடையதாக அமைந்துள்ளமை படித்து இன்புறத் தக்கது.

# 36. நாவுக்கரசர் தமிழில் சில ஆய்வுகள்

சு. சாவித்திரி, புதுவை.

தமிழ் இலக்கிய வரலாற்றில் - தமிழ் நாட்டின் சமய வரலாற்றில் ஏறக்குறைய கி.பி. 600 முதல் 900 வரை சமயக் கிளர்ச்சிக்காலம் என்றே அறிஞர் பெருமக்கள் கூறுகின்றனர். அக்காலை, தமிழகத்தின் வடபகுதிகளாகிய தொண்டை நாட்டிலும், நடு நாட்டிலும் செப்பேடுகள் பிராகிருத மொழியிலும், ஆறாம் நூற்றாண்டின் இறுதி வரை வடமொழியிலும், பல்லவப் பேரரசு காலமாகிய கி.பி. 600 - 900 வரை வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வரையப் பெற்றுள்ளன. அத்தகைய இருண்ட காலத்தில் ''அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு'' கதிர்போல் மலரும் மருணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்.

திருநாவுக்கரசர் பெருமான் ஒரு முன்னோடியாகப் பல துறைகளில் விளங்கிய பான்மையைப் பல அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். இம்முதல்வரைப் பற்றி, இவர்தம் கருத்துக்கள், கொள்கைகள், சித்தாந்த நுட்பங்கள், சைவ சமயத்திற்காற்றிய தொண்டுகள், தமிழ் இலக்கியத்திற்காற்றிய தொண்டுகள் என ஏராளமாக இவர் தம் பாடல்களில் இருந்து அறியலாம்.

**சுருக்கமாகச் சில ஆய்வுகள்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் சைவத் திருமுறைகள் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. அவற்றுள் தேவாரத் திருமுறைகள் முன் தோன்றியவை - அதிலும் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் முதன் முதல் பாடப் பட்டவை. தேவார இன்னிசைப் பாடல்களை முதன் முதலில் தமிழ் உலகுக்கும், சைவ மக்களுக்கும் அருளித்தந்த பெருமை நம் திருநாவுக்கரசர் பெருமானுக்கே உரியது. தம் நிறை தவத்தின் பயனாய் அமிழ்தினுமினிய தேவாரப் பாடல்களை நம் தமிழ் மொழியதனில் திருவாய் மலர்ந்து அருளினார்.

''கந்தமலர்க் கொன்றையணி .......

.............................................

பந்த மறுத்தாளாக்கிப் பணி கொண்டாங்கே
பண்ணிய நூல் தமிழ் மாலை பாடுவித் தென்
சிந்தை மயக்கறுத்த திருஅருளினானை'' (6-84-4)

என்றும்,

> "பத்திமையால் பணிந்தடியேன் தன்னைப் பன்னாட்
> பாமாலை பாடப் பயில் வித்தானை" (6-54-3)

என்றும்,

> "சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
> தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" (4-1-6)

என்றும் அவர்தம் திருவாக்குகளாலேயே குறித்து வைத்துப் போந்துள்ளார்கள்.

திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகங்கள் உயிர்க்குறுதி பயக்கும் உண்மைகளை உரைப்பன. கற்போரின் உள்ளத்தை உருக்கும் தன்மையன. சிவானுபவப் பயன் நிறைந்தவை. அனைத்திற்கும் மேலாய் அனைவரும் கற்கும் இனிய எளிய சொல் நடையுடையன. எளிமை மிக்க அவருள்ளம் போல் அவரது திருப்பாடல்களும் இனிய ஓசையும் ஆற்றொழுக்குப் போன்ற நடையும் உடையன. இறையுணர்வு மிக்க இவரது இன்னிசைப் பாடல்கள் சிந்தைக்கும் செவிக்கும் உணர்வூட்டுவன. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக்குய்ப்பன. "தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" என நாவுக்கரசரே நவின்றுள்ளது போல் ஏழிசையாய் இசைப்பயனாய் உள்ள இறைவனை நாவுக்கரசர் தண்டமிழ் மாலைகள் பாடித் தொழுதுள்ளார். "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்" என்றவாறு நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியிலேயே பாடி இறைவன் திருவடியைப் பெறலாம் என்ற உறுதிப்பாட்டினைத் தமிழ் உலகுக்கு முதன் முதலில் உணர்த்தியன ஆண்ட அரசின் அருந்தமிழ்ப் பாடல்கள்.

முன்னாகி எப்பொருட்கும் முடிவாகி நின்றானைத் தன்னாகத்து உமை பாகங் கொண்டானைச் சங்கரனை நந்தமிழில் இந்நாளில் வழிபாடு செய்தற்கேற்பப் போற்றித் திருத்தாண்டகங்களை அந்நாளே சொல்லிப் போந்தார் அப்பர் பெருமான். வாகீசப் பெருந்தகையின் தேவாரங்கள் சைவ சமயக் கொள்கைகளுக்கும் மெய்யுணர்வுக்கும் கண்ணாகும் - "தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" எனப் பாடிய முதல் பதிகத்திலேயே மகிழ்வுற்ற வீரட்டம் அமர்ந்த பிரான் அருளால் "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால் நாவுக்கரசென்று உலகேழினும் நன்னாமம் நயப்புற மன்னுக" என்ற இறைவாக்குப்படி என்றென்றும் 'நாவுக்கரசு' எனும் நாமம் நிலைத்தது.

திருநாவுக்கரசர் தேவாரப் பாக்களில், அவரால் பாராட்டப்பட்ட நாயன்மார்கள், இறைவனின் தன்மைகள், உலக உயிர்களின் தன்மைகள், இறைவன் ஒன்றாய், உடனாய், வேறாய் உள்ள இயல்புகளை உலக உயிர்கட்கு அறிவுறுத்தும் தன்மைகள் போன்ற சாத்திரக் கருத்துகள், வேத ஆகம கருத்துகள் அனைத்தும் காணலாம்.

## தேவாரத்துட் காணப்படும் நாயன்மார்

**1. நமிநந்தியடிகள்**

"நார்ஊர் நறுமலர் நாதன் அடித் தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக்கிட்டமை நீள் நாடறியு மன்றே" (4-100-2)

**2. அமர்நீதியார்**

"நாள்கொண்ட தாமரைப் பூத்தடம் சூழ்ந்த நல்லூரகத்தே
கீள் கொண்ட கோவணங்கா" வென்று சொல்லிக் கிறி படத்தான்
வாள் கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை உரைக்கும் அன்றோ, இவ்வகலிடமே"
(4-97-7)

**3. சண்டேசுரர்**

தழைத்ததுஓர் ஆத்தியின் கீழ்த் தாபரம் மணலால் கூப்பி
அழைத்துஅங்கே ஆவின் பாலைக் கறந்துகொண்டு ஆட்ட, கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால்வீச
குழைத்ததுஓர் அமுதம் ஈந்தார் - குறுக்கை வீரட்டனாரே.
(4-49-3)

**4. அப்பூதி அடிகள்**

வஞ்சித்து என் வளைகவர்ந்தான் ......
.....................................................................
அஞ்சிப் போய்க் கலி மெலிய அழலோம்பும் அப்பூதி
(4-12-10)

**5. திருஞானசம்பந்தர்**

மாயிரு ஞாலமெல்லாம்...........
.....................................................................
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கு அம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே (4-56-1)

**6. சாக்கியனார்**

"கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணும் சாக்கியனார் (4-49-6)

**7. கோச்செங்கண்சோழன்**

சிலந்தியும் ஆனைக்காவில் - திருநிழல் பந்தர் செய்து
உலந்து அவண் இறந்த போதே - கோச்செங்கணானும் ஆக.
(4-49-4)

**8. கணம்புல்லர்**

''அணங்கு உமை பாகமாக........

.................................................

கணம் புல்லர்க்கு அருள்செய்து, காதல்ஆம் அடியார்க்கு என்றும்
குணங்களைக் கொடுப்பார் போலும் குறுக்கை வீரட்டனாரே''
(4-49-9)

**9. கண்ணப்பன்**

விண்ணப்ப.........
கண்ணப்பன் கண் அப்பக்கண்டு உகந்தார். (6-12-6)

இவ்வண்ணம் நாயன்மார்களைத் தேவாரப் பாடல்களிற் பாடி உள்ளார். இதனால் அடியார்களைப் போற்றும் அவர்தம் பாங்கு புலனாகிறது.

அவரது பாடல்களிற் பலவிடங்களில் இறைவனின் அருவ, உருவ அருவுருவத் திருமேனி கொண்டு தோன்றும் தன்மைகளைக் கூறியுள்ளார்.

''விரிகதிர் ஞாயிறுஅல்லர்; மதிஅல்லர்; வேத
விதிஅல்லர்; விண்ணும் நிலனும்
திரிதரு வாயு அல்லர்; செறு தீயும் அல்லர்;
தெளிநீரும் அல்லர், தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒரு பாகம் ஆக,
அருள் காரணத்தில் வருவார்;
எரி அரவு ஆரம் மார்பர்; இமையாரும் அல்லா,
இமைப்பாரும் அல்லர், இவரே'' (4-8-2)

என்று இறைவன் அருவம் ஆனவன் என உணர்த்துகின்றார்.

''பட்டி ஏறு உகந்து ஏறி......
அட்டமூர்த்தி அண்ணாமலை கைதொழ......'' (5.5.1)

''இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலும் காற்றும்
உரகமார் பவனம் எட்டும் திசைஒளி உருவமானாய்'' (4.63.7)

''இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனாய் எரியும் காற்றுமாகி
அரு நிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்டமூர்த்தியாகிப்
பெரு நலமும் சுற்றமும் பெண்ணும்
ஆணும் பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெரு நலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர் புன் சடையடிகள் நின்றவாறே'' (6.94.1)

என இறைவன் அட்டமூர்த்தியானவன் எனப் பல பாடல்களில் கூறியுள்ளார்.

"குனித்தப் புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்....
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" (4.81.4)

வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர் சடைமேல் இளமதியும் தோன்றும் தோன்றும்
..............................................................
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே (6.18.1)

என இறைவன் உருவத் திருமேனி உடையவன் எனக் கூறுகின்றார்.

"மின் உருவை, விண்ணகத்தில் ஒன்றாய்மிக்கு வீசுங்கால்
தன் அகத்தில் இரண்டு ஆய், செந்தீத்தன் உருவில் மூன்றாய்த்
தாழ்புனலில்
நான்கு ஆய் தரணி தலத்து அஞ்சாகி எஞ்சாத்தஞ்ச
மின்னுருவை ................................................ " (6.54.5)

இறைவன் வானம், காற்று, தீ, நீர், நிலம் என்னும் ஐம்பெரும் பூதங்களிலும் முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்து குணங்களும் அமையப் பெற்றவன் என்பதனை விண்ணகத்தில் ஒன்றாய் முதல் தரணி தலத்து அஞ்சாகி என்பது வரை உள்ள சொற்றொடர்களால் விளக்கியுள்ளார். "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி" என மணிவாசகப் பெருமானும் போற்றித் திருஅகவலில் கூறியுள்ளார்.

"மூவன் காண் மூவர்க்கும் முதலானான் காண்" (6.85.4)

"மூவுருவின் முதலுருவாய் இரு நான்கான மூர்த்தியே என்று
முப்பத்து மூவர் தேவர்களும் மிக்கோரும் சிறந்து வாழ்த்தும்
செம்பவளத் திருமேனிச் சிவனே என்னும்" (6.98.6)

"மால் ஆகி நான் முகனாய் மாபூதம் ஆகி.......
எழும் சுடராய் எம் அடிகள் நின்றவாறே"

"நாரணன்காண் நான்முகன்காண் நால்வேதன்காண்
ஞானப்பெருங் கடற்கோர் நாவாயன்ன பூரணன்காண்" (6.8.3)

இவ்வாறெல்லாம் சிவபெருமான் உருவத் திருமேனிக் கொண்டு தம் அடியவர்களுக்கு அருளுதலையும், காப்பவன், படைப்பவன், அழிப்பவன் என்ற மும்மூர்த்தியால் முத்தொழிலையும் உடையவன் தான் ஒருவனே என்பதையும் தம் பாடல்களில் ஆங்காங்கே கூறியுள்ளார்.

இனி, சிவபெருமான் உலகத்துப் பொருள்களாகி அவை அல்லவாகி நிற்றலை,

"ஊனாகி உயிராகி யதனுள் நின்ற உணர்வாகிப்
பிறவனைத்தும் நீயே ஆனாய்......" (6.62.2)

என்ற பாடல் மூலம் நாவுக்கரசர் உணர்த்துகின்றார்.

சிவம் காலம் கடந்து பிறப்பு இறப்பு அற்று ஆதிஅந்தமின்றி நிற்பது என்பதனை,

"காதார் குழையினர்.....
மூதாயர் மூதாதையில்லார் போலும்
முதலும் இறுதியும் தாமே போலும்" (6.2.6)

"பிண்டத்தைக் காக்கும் பிரானார் போலும்
பிறவி இறவி, இலாதார் போலும்" (6.30.5)

"பிறப்பொடு இறப்பு என்றும் இல்லாதான் காண்" (6.30.5)

"பிறவாதும் இறவாதும் பெருகினானை" (6.74.6)

இப்பாடல்களால் புலப்படுத்துகின்றார்.

சிவன் தன்பால் அன்பு கொண்டோர்க்கு அருள்புரிதலுடன் அவர் உள்ளத்தும் உறைந்து இனிமை பயந்து அன்பர் ஆகின்றார் என்பதனை,

"கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே" (5.14.10)

"எம்பிரான் இமையோர்கள் தமக்குஎலாம்
இன்பர் ஆகி இருந்த எம் ஈசனார்
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்கு
அன்பர் ஆகிநின்றார் - அன்னியூரரே. (5.8.5)

இப்பாடல்களால் உணர்த்துகின்றார்.

மேலும்,

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து......
.........................................................
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"

இறைவனை வணங்குபவர் யாவரும் தாம் வணங்குதற்குரியவர் என்ற பொது நோக்கினைப் புலப்படுத்துகின்றார்.

மற்றும், வீடுபேறடையும் "நமச்சிவாயப் பதிகம்" அருளியுள்ளார்.

"நற்றுணையாவது நமச்சிவாயவே"

"பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்றறுப்பது நமச்சிவாயவே"

"இல்லக விளக்கது இருள் கெடுப்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே"

"நன்னெறியாவது நமச்சிவாயவே"

"நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்
நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே"

என இறைவன் திருவடியை அடைய உதவுவது நமச்சிவாய மந்திரமே என்பதை உணர்த்தி உள்ளார்.

"அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும் மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம் சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்" நம்மையும் அத்தகைய தொண்டு புரிய ஆற்றுப்படுத்துகின்றார்.

இறைவனின் திருவடி நீழலே சிவப்பேரின்பத்தில் திளைக்கச் செய்யும் என்பதை,

"ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்றும்,

"சிந்திப்பரியன...........
அந்திப் பிறையணிந்தாடும் ஐயாறன் அடித்தலமே" (4.92.1)

என்றும்,

"போற்றும் தகையன.......
தேற்றும் தகையன;
இன்னம்பரான் தன்இணை அடியே" (4.100.7)

என்றும் இப்பதிகங்கள் முழுவதும் இறைவனின் திருவடிக்கீழ் அன்பு அகலாது உருக வைக்கின்றார்.

"எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியை எண்ணினல்லால்......
.....................................................
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே"

திருப்புகலூர் திருத்தாண்டகத்தின் அனைத்துப் பாடல்களிலும் திருவடிக்கே போதுகின்றேன் எனப் பாடி நம்மையும் திருவடி நீழலையே அடையுமாறு ஆற்றுப்படுத்துகின்றார்.

"மன்னு முதலாம் உலகேத்த மன்னு திருத்தாண்டகத்தைப் புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் எனப் புகன்று நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசு அமர்ந்திருந்தார்" என்ற சேக்கிழார் பெருமான் வாக்குப்படி அண்ணலார் சேவடியன்றி உயிர்கட்கு உய்வு தருவதொன்றில்லை என்பதைத் தம் பாடல்களால் நமக்கு உணர்த்தியுள்ளார். நாமும் இறைவனின் திருவடி நீழலையே நினைந்து உய்வோமாக.

# 37. அப்பரின் காலமும் சூழலும்

சு. சிவசங்கர், பாப்பான்குளம்.

சமூகம் என்பது விழுமியங்களுடன் கூடி வாழும் மக்கள் கூட்டத்தைக் குறிக்கும். அக்கூட்டு வாழ்க்கை பல காரணங்களால் உருவாகலாம். வாழ்விற்காக, பாதுகாப்பிற்காக, வளர்ச்சிக்காக, பெருக்கத்திற்காக என இன்னோரன்ன காரணங்களுக்காக மனிதர்கள் குடும்பங்களாகவும் குழுக்களாகவும் கூடி வாழ்கின்றனர். இக்கூட்டு வாழ்க்கை மனிதர்களைப் பண்படுத்துகின்றது. சமூகம் நிலையான தம்மையினைக் கொண்டதன்று; மாறும் இயல்பினது. சமூக வளர்ச்சி என்பதே மாற்றங்களின் தொடர்ச்சியாகும். மாற்றங்களின்றி எதுவும் வளர்வதில்லை. ''மாறுதல் உண்டு என்பதைத் தவிர உலகில் மற்ற எல்லாமே மாறுதலுக்குரியது'' என்னும் கூற்று இங்கே நினைக்கத்தக்கது. ஒரு விதை முளைத்து, இளஞ்செடியாகி, புதுத் தளிர்கள் தோன்றி, மொட்டு, போது, மலர் என விரிந்து, பின்னர் வாடிச் சருகாகி உதிர்ந்து, அடுத்து முளைக்கும் விதைக்கு உதவும் உரமாகச் சுழற்சி பெறும் நிலையைக் காண்கிறோம். இவ்வளர்ச்சி நிலை மக்கட் சமூகத்திற்கும் பொருந்துவது. சமூக மாற்றங்களுக்குக் காரணிகள் பல; பலர். திருநாவுக்கரசரால், அவர் காலச் சமூகத்தில் ஏற்பட்ட மாறுதல்களை, அவருடைய காலமும் சூழலும் என்ற அடிப்படையில் இக்கட்டுரையில் காண்போம்.

'திருநின்ற செம்மை'யரான திருநாவுக்கரசர் பெருமான் ஒரு படைப்பிலக்கியவாதி. பக்தி இலக்கியக் கால கட்டத்தில் தொடக்க காலப் படைப்பாளியான அப்பரடிகள் தம்முடைய கடந்த காலத்தாலும் சம காலத்தாலும் ஆக்கப்பட்டவர். இருவேறு சமயங்களில் தமது அடிச்சுவடு களைப் பதித்தவர். அச்சமயக் கருத்துகளில் ஆழங்காற் பட்டவர். சமண சமயக் கோட்பாடுகளைக் கற்றுத் துறைபோகிப் பின் 'சித்தம்' தெளிந்து சைவ சமயத்திற்கு மீண்டு வந்தவர். அவர் சைவம் திரும்பியதற்கு முதற்காரணம் சூலை நோய்தான் என்றாலும், அவரால் சைவம் திரும்பியோர் ஏராளம். அக்கால கட்டத்தில் பெரு மன்னர்களாக விளங்கிய பல்லவனும் பாண்டியனும் கூடச் சைவம் சார்ந்தனர். இந்நிலை அப்பரடிகளால் உருவாக்கப்படக் காரணமாய் நின்றது ஏது?

'இராபர்ட் பியர்ஸ்டெட்' என்னும் அறிஞர் ''ஒரு சமூகத்தில் உயிர்ப்பான பண்பாடு என்பது சிந்தனை, செயலாக்கம், உடைமை என்ற

மூன்றினையும் சார்ந்திருக்கும்'' என்பார். அவ்விதமான உயிர்ப்பான பண்பாட்டினைப் பேணிக் காக்கத் தன்னுடைய சிந்தனையையும் செயலையும் வழங்கினார் அப்பரடிகள். ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில் இரு பெரிய மன்னர்கள் மதம் மாறுவது என்பது எளிதாக நடக்கக்கூடிய செயலன்று; அதன் பின்னணியில் ஒரு சமூக மாற்றமே நிகழ்ந்திருக்க வேண்டும்; ஏராளமான மக்கள் தமது சமயக் கொள்கைகளை மாற்றிக் கொண்டிருக்க வேண்டும். இம்மாற்றம் யாரால், எவ்வாறு நிகழ்ந்தது எனக் கேட்குங்கால் நமக்கு விடையாகத் தோன்றுபவர்கள் சைவ சமயக் குரவர்களாகிய திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் அவர்கள் ஆற்றிய தொண்டுகளுமே அவர்கள் இருவருமே அச்சமூக மாற்றத்திற்குக் காரணமாக அமைந்தவர்கள் எனலாம். தங்களது அயராத உழைப்பினாலும் அலுக்காத பயணத்தினாலும் சமூக மாற்றத்திற்குத் தேவையான அடித் தளத்தை அவர்களால் உருவாக்க முடிந்தது. பல்வேறு தலங்களுக்கும் பயணம் செய்து, பலதரப்பட்ட மக்களோடும் கலந்து வழிபாடுகளியற்றி, சிவபெருமானைப் பாடிப் பரவினர். மக்களிடத்தில் அவர்கள் வெற்றி பெற்றமைக்குக் கீழ்க்கண்ட காரணங்களைச் சொல்ல இயலும். அவை,.

1. தாய்மொழி உணர்வுடன் இறைவனைப் போற்றுதல்
2. இறைவனும் அடியவரும் மகிழும் வண்ணம் இசையுடன் பாடுதல்
3. இறைமையில் பெண்மையின் பங்கினை மதித்துப் போற்றுதல்

அப்பரடிகள் சமண, பௌத்த நாகரிகம் பரவியிருந்த காலத்தில் அந்த நாகரிகத்தை எதிர்த்துப் போராடினார். ''அவர் நடத்திய போராட்டம் சமயப் போராட்டமேயன்று. நாம் நன்றாக எண்ணிப் பார்த்தால் 25 விழுக்காடுதான் அதனைச் சமயப் போராட்டம் என்று கூறலாம். பௌத்த, சமண சமயங்களால் ஏற்பட்ட குழப்பநிலையிலிருந்து சமுதாயத்தைக் காப்பாற்றும் முயற்சிதான் 75 விழுக்காடு'' என்பது தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் கருத்தாகும். இப்போராட்டத்திற்கு முன்சொன்ன மூன்று காரணங்களும் பெரிதும் உதவின.

மேற்குறிப்பிட்ட மூன்று காரணங்களும், அதுவரை மக்களிடையே பெருவாரியாகப் பரவியிருந்த சமண, பௌத்த சமயங்களுக்கு மாற்றானவை யாகும். சமணமும் பௌத்தமும் தமிழைச் சொந்த மொழியாகக் கொண்டி ருக்கவில்லை. ஆயினும் தமிழ்ச் சமூகத்தில் அச்சமயங்கள் பேராதிக்கம் செலுத்தி வந்தன. ஆனால் அவற்றில் தமிழ் இல்லை. தாய்மொழியானது நூற்றுக்கு நூறு உடம்போடும் மனதோடும் தொடர்புடையது. சிந்தனைச் செழுமைக்கு இன்றியமையாதது தாய்மொழியே. எனவேதான் அப்பரடிகள் தமது முதல் பதிகத்திலேயே,

> ''சலம்பூ வொடு தூபம் மறந்தறியேன்
> தமிழோடிசை பாடல் மறந்தறியேன்''

எனத் தமிழுக்கும் இசைக்கும் சிறப்பிடம் தந்து பாடுகின்றார். இறைவனையும் தமிழ் வடிவாகப் பார்க்கிறார் அவர்.

"வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்"

"தமிழன் கண்டாய்"

என்பனவும் அப்பரடிகள் திருவாக்குகளே. இறைவடிவான தாய்த்தமிழ் மொழியில் அவர் பாடிய தண்டமிழ் மாலைகள் மக்களை எளிதில் சென்றடைந்ததில் வியப்பில்லைதானே! அடியவனின் மனதில் நெகிழ்ச்சியையும் சுய சிந்தனையையும் தாய்மொழி வழிபாடுதான் தரும். எளிய தமிழிலே பாடப்பெற்ற அப்பரடிகளின் தேவாரத் திருப்பாடல்களை அடியவர்கள் உள்வாங்கியதன் காரணமாய்த் தங்கள் சமய மாற்றத்திற்குத் தயாராகினர். "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினாலே" தான் தருமசேனராயிருந்தவர் நாவுக்கரசானார் என்பது சேக்கிழார் கூற்று.

"திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் இறை உணர்வோடு சமுதாய சீர்திருத்தக் கருத்துகளை உள்ளடக்கிய இசைப்பாடல்களாகும்" என்பார் முனைவர் இ. அங்கயற்கண்ணி. "தொண்டு நெறியை இசையின் மூலம் உலகுக்கு உணர்த்தியவர் என்கிற அளவில் திருநாவுக்கரசரின் சிறப்பு அளவிடற்கரியது" என்றும் "தற்போதுள்ள கிருதி, கீர்த்தனை, பதம் போன்ற இசைப் பாடல்களின் அமைப்பிற்குத் திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்களே முன்னோடியாகத் திகழ்ந்துள்ளன எனக் கருதலாம்" என்றும் அவர் மேலும் கூறுவார். நல்ல இசையானது மனங்களைப் பண்படுத்தும்; மகிழ்ச்சி தரும்; மனக் குழப்பங்களுக்கு மருந்தாகும்; அமைதி தரும் விருந்தாகும். இசை போன்ற நுண்கலைகளை எட்டிக் காயாகக் கருதிக் கொண்டிருந்த சமணக் கொள்கைகளுக்கு நடுவில் இசையோடு எழுந்த நாவுக்கரசரின் திருப்பதிகங்கள் மக்கள் மனதில் இடம் பிடித்துச் சிறப்படைந்ததில் விந்தையேதுமில்லை. "கொக்கரை, தக்கை, குழல், தாளம், வீணை, மொந்தை" எனச் சாதாரண மக்களின் இசைக் கருவிகளும் அவரது பாடல்களில் சிறப்பிடம் பெற்றன. இறைவனையும் இசையை இசைப்பவனாக, சுவைப்பவனாகக் காண்கிறார் அவர். ஆக, சைவ நன்னெறியைத் தமிழகமெங்கும் புத்துணர்ச்சியோடு பரவச் செய்த நாவுக்கரசரின் முயற்சியில் இசையும் ஓர் உத்தியாகத் திகழ்ந்தது; வெற்றியும் தந்தது.

சமணத்தில் பெண்ணுக்குச் சிறப்பிடம் தரப்படவில்லை. அவர்களது இறை வழிபாட்டிலும் பெண்மைக்குச் சம உரிமை இல்லை. ஏன்? பெண்ணுக்கு வீடுபேறடையும் வாய்ப்புக் கூடக் கிடையாது என்பது சமணர் கொள்கை. ஆனால் தமிழ்நாடோ பெண்மைக்குப் பெருஞ்சிறப்புத் தருவது.

இன்றும் நமது கிராமங்களில், பல சாதிச் சமூகங்களிலும் தாய்த் தெய்வ வழிபாடே முதன்மையானதாகவும் சிறப்பிடம் பெறுவதாகவும் இருப்பதை நாம் காணமுடிகிறது. இத்தகைய சூழ்நிலையில் நாவுக்கரசர் பெருமான் பெண்மைக்கு ஏற்றம் தந்து பாடிய திருப்பாடல்கள் இறைவனைக் கவர்ந்தது போலவே, மக்களையும் கவர்ந்தன. பெண்மை மனித சமூகத்தில் சரிபாதி சம்பந்தப் பட்டது. பெண்மைக்குச் சிறப்பிடம் தராத சமூகம் விளக்கம் பெறாது என்பதை அப்பரடிகள் முழுமையாக உணர்ந்தவர். எனவே, தன்னில் சரிபாதி உமைக்குத் தந்த சங்கரனை அவர் பல பாடல்களில் போற்றிப் பாடுகின்றார். கயிலை செல்ல முயன்று, பின்னர் இறையாணையின்படி 'யாதும் சுவடுபடாமல்' திருவையாறு வந்து கயிலைக் காட்சியைக் காண்கிறார் நாவுக்கரசர் பெருமான். அத்திருக் காட்சியில் இறைவனை மட்டும் அவர் காணவில்லை.

''காதன் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்'' என உமையோடு சேர்ந்த ஈசன் வடிவினைக் கண்டு போற்றுகிறார். மேலும் தொடரும் பாடல்களில், இணையோடு தோன்றிய சிவபெருமானை, பல்வேறு உயிர்க்கணங்களின் வடிவாகக் கண்டு பாடுகிறார். அவரது கண்களில் களிறும் சேவலும் குயிலும் மயிலும் அன்றிலுமாகப் பல்வேறு உயிரினங்களும் இணையோடு சேர்ந்திருக்கும் தோற்றம் தெரிகிறது. இத்திருவையாற்றுப் பதிகம் முழுவதுமே பெண் விடுதலையைக் குறிப்பதாகவே அமைகின்றது. அவர்காணும் திருப்பூவண இறைக் காட்சியில் 'ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்'.

பெண் என்பவள் வாழ்க்கைக்கு, வாழ்நெறிக் கல்விக்கு மட்டும் உரியவளல்லள்; ஆன்மீக வாழ்க்கைக்கும் ஆகமக் கல்விக்கும் உரியவள் என்னும் உயரிய கருத்தையும் நாவுக்கரசர் வெளிப்படுத்துகிறார். 'இணையிலா இடைமாமருதீசர்' உமையவளுக்கு ஆகமம் கற்றுக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுவதன் வழி, அப்பரடிகள் பெண்மையின் தகுதிப்பாட்டினைப் புலப்படுத்துகின்றார். மாதொரு பங்கியின் திருவடிவைப் பல பாடல்களில் எடுத்துக் காட்டுவதன் மூலம், பெண்மையை உயர்த்தும் பணியைச் செய்துள்ளார் அப்பரடிகள். மேலும் அப்பாடல்கள் மூலம் பெண்ணடிமைத் தனத்தைக் கொண்டிருந்த சமண சமயத்திற்கு எதிரான கலகக் குரலை அவர் எழுப்பியுள்ளார். இக்கலகக் குரலும் மன்னனையும் மக்களையும் சிந்திக்கத் தூண்டி, சமய, சமூக மாற்றங்களுக்குரியதொரு காரணியாகத் திகழ்கிறது.

அப்பரடிகளின் திருப்பாடல்கள் போற்றிப் பாடல்கள் என்ற அளவில் மட்டும் நின்று விடவில்லை. அவரது பக்தி சகமனிதனை மறந்த சாதாரண பக்தியன்று. 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' என்னும் உயரிய நோக்கினை நோக்கி அவரது பார்வை செல்கின்றது. எனவேதான்

இறைவனை விளிக்கும் திருப்பாடல்கள் மத்தியில், "சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்!" என மனிதரையும் விளித்து, "கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்" என்று எதிர்நிலைக் கேள்வி எழுப்புகிறார். பக்தி உலகில் இவ்வாறு எதிர்நிலைக் கேள்வி எழுப்புதல் இயல்பான ஒரு செயலன்று. இவ்விதம் கேட்பதற்கு கொள்கைத் துணிவுடன் கூடிய, எதற்கும் அஞ்சாத ஒரு மனம் வேண்டும். அத்துணிவு அவரைச் சமணர் களிடமிருந்து காத்திருக்கிறது. அத்துணிவினால்தான் 'கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகம்' காத்திருக்கிறதெனக் கூற முடிகிறது; அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய் ஆவுரித்துத் தின்றுழலும் புலையரையும் அவரால் வணங்க முடிகிறது; பஞ்சம் நீங்கிட இறைவனிடமே வேண்டிப் படிக்காசு கேட்டுப் பெற்று மிழலை மக்களின் பசி தீர்க்க முடிகிறது. சக மனிதனை அவர் பரிவோடு பார்த்து, அவன் கடைத்தேற வழி கூறிய பாங்கும் சமூக மாற்றத்திற்கு அடிகோலியது.

'உழுத சால்வழியே மீண்டும் உழ' விரும்பாதவரான அப்பரடிகள், மனித இனத்தின் அடிமைத்தனத்தையும் அடிமைக் கொள்கைகளையும் வெறுத்தவர்; அவற்றை எதிர்த்துப் போராடியவர்; அதன் பேரில் வந்த துன்பங்களை அனுபவித்தவர். ஆயினும் அவர் வாழ்ந்த காலச் சூழலில் அவர் ஏற்படுத்திய மாற்றங்கள் மதிப்பு மிகுந்தவை. பாமர மக்களோடு பழகி, அவர்களது வழிபடு சிறு தெய்வங்களையும், வழக்குச் சொற்களையும் தமது தேவாரத் திருப்பாடல்களில் இடம் பெறச் செய்தவர் அவர். பிற சமய இருளில் மூழ்கியிருந்த தமிழ் மக்களுக்குச் சிறிது சிறிதாக வெளிச்சம் தந்து சைவ சமயப் பேரொளியை அடையச் செய்தவர். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தமிழ்ச் சமூகமும் மன்னர்களும் மனமாற்றம் பெற்றுச் சைவம் என்னும் பெருங்கொள்கையில் தங்களை இணைத்துக் கொள்வதற்கு அப்பரடிகளின் திருத்தொண்டுகளும், திருப்பாடல்களுமே மூலகாரணம் என்று கூறினால் அது மிகையன்று. எனவேதான், தவத்திரு குன்றக்குடி அடிகளார், "ஏழாம் நூற்றாண்டிலேயே இருபதாம் நூற்றாண்டின் புதிய செய்திகளைச் சொல்லிச் சென்றது அப்பரடிகளின் சிறப்பு" என மொழிவர்.

# 38. நாவுக்கரசரின் பண்ணிசைத் திறன்

எஸ்.கே. சிவபாலன், அண்ணாமலைநகர்.

உலகில் உள்ள சமயங்களில் மேலோங்கி நின்று, எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி நிற்பது சைவ சமயம். இதற்கு முழுமுதற் கடவுள் சிவபெருமானேயாவார். கலைகளுக்கெல்லாம் பொருளாகிய கண்ணுதற் பெருமான் திருவருளால் தோன்றி, இன்னிசையால் தமிழ் பரப்பிய அருளாசிரியர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் ஆவர். இவர்கள் மூவரும் சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன் தோன்றிய தேவார ஆசிரியர்களாவர்.

இவர்களுள் தாண்டக வேந்தராகிய அப்பர் சுவாமிகள், கி.பி. 564-ல் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருவாமூரில் தோன்றியவர். சமண சமயத்தைத் தழுவிய பின்னர், சைவ சமயத்தைத் தழுவிய இவர் பல்லவ மன்னனாகிய மகேந்திர வர்மனை சைவத்தைத் தழுவும்படி செய்தவர். சமணர் விளைத்த கொடுமைகளையெல்லாம் இறைவன் திருவருளால் வென்றவர். மருணீக்கியார் என்பது அவரது பிள்ளைத் திருநாமம், இவர் தம் சொல் வன்மையால் 'நாவுக்கரசர்', 'வாகீசர்' என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றார். தேவார மூவர்களுள் இவர் நீண்ட நாள் வாழ்ந்த முதுமையையும், பெருமையையும் கருதி, அப்பர் என அழைக்கப்பட்டார்.

இவர் அருளிய திருப்பதிகங்கள் நான்காம், ஐந்தாம், ஆறாம் திருமுறைகளாக வகுக்கப்பட்டன. முறையே இவர் பாடியருளிய பண்கள், பதிகங்களாவன.

| | பண் | பதிகம் |
|---|---|---|
| 1. | கொல்லி | 1 |
| 2. | காந்தாரம் | 6 |
| 3. | பியந்தைக் காந்தாரம் | 1 |
| 4. | சாதாரி | 1 |
| 5. | காந்தார பஞ்சமம் | 2 |
| 6. | பழம் பஞ்சுரம் | 2 |
| 7. | பழம் தக்கராகம் | 2 |

| | | |
|---|---|---|
| 8. | இந்தளம் | 3 |
| 9. | சீகாமரம் | 2 |
| 10. | குறிஞ்சி | 1 |
| 11. | திருநேரிசை (கொல்லி) | 2 |
| 12. | திருநேரிசை | 56 |
| 13. | திருவிருத்தம் (கொல்லி) | 2 |
| 14. | திருவிருத்தம் | 33 |

**ஐந்தாம் திருமுறை**

| பண் | பதிகம் |
|---|---|
| திருக்குறுந்தொகை | 100 |

**ஆறாம் திருமுறை**

| பண் | பதிகம் |
|---|---|
| திருத்தாண்டகம் | 99 |

இவர் பாடியருளிய பதிகங்கள் பலவாகும். தற்பொழுது உள்ளவை 312, பாடல் பெற்ற சிவத் தலங்கள் 125 ஆகும்.

அப்பர் பாடியருளிய பதிகங்களில் ஒரு பகுதி தாளத்துடன் கூடிய பண்ணுடன் அமைந்தவையாகும். மற்றொரு பகுதிப் பாடல்கள் தாள மில்லாமல் பண்ணுடன் அமைந்த பாடல்களாகும். இவற்றுள் செய்யுள் வகையால் அமைந்த திருத்தாண்டகமும், திருவிருத்தமும் அடங்கும். பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகம் பாடியருளினாராயினும், அப்பர் சுவாமிகள் சிறப்பாகத் திருத்தாண்டகப் பாடல்களைப் பாடுவதில் வல்லவராகையால், ''தாண்டக வேந்தர்'' எனச் சிறப்பிக்கப் பெற்றார்.

அப்பர் சுவாமிகளின் திருப்பாடல்கள் பக்தி, உருக்கம் நிறைந்தன வாகும், இவற்றோடு பணிவும், குழைவும் மிக்கன, தத்துவப் பொருள்களை எளிதாக விளக்குவன, சமண புத்த மதங்களைக் கண்டிப்பன. மேலும் இராவணன் மனம் திருந்தி இறைவன் அருள் பெற்றதையும், சிறப்பாகச் சைவ சித்தாந்த கருத்துக்களையும் நிலைநாட்டுவன. இறைவனைக் கணவனாகவும், தன்னை மனைவியாகவும் கொண்டு பாடும் நாயக நாயகி அமைப்பிலும் இவர் பாடியுள்ளார். மற்றும் சேர, சோழ, பாண்டிய பல்லவர்களைப் பற்றிய குறிப்புகளும் இவர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. மேலும் இவர் எல்லோரும் ஒரு குலம் என்ற கருத்தைக் கொண்டிருந்ததோடு, சைவ சித்தாந்தம் விளக்கும் சரியை மார்க்கத்தைக் கைக்கொண்டு வாழ்ந்த தத்துவ ஞானியாகவும் விளங்கினார். மேலும்

திருக்கோயில் திருத்தொண்டு செய்த, தமது தமக்கையார் திலகவதியாரின் நெறியையே உயர்ந்ததாகப் போற்றி, உழவாரப் பணியாற்றி உயர்வு பெற்றார்.

இவர் பண்ணின் சிறப்பைத் தமதுபாடல்களில் ஆங்காங்கே குறிப்பது சிறப்புக்குரியதாகும். ''பண்ணுள்ளீராய் பாட்டும் ஆனீர்'', ''பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்'', ''பண்ணார் இன் தமிழாய்'', ''பண்ணார் மொழியாள் பங்குடையீர்'', ''பண்ணிசையார் மொழியார்'', ''பண்ணார் இசைகளவை கொண்டு'', ''பண் செய்யும் கொகுடிக் கோயில்'', ''பண்ணியல் மென்மொழியால்'', ''பண் யாழ் முரளும்'', ''பண்மயத்த மொழிப் பரவை'', ''பண்ணார் மொழியார்'', ''பண்ணார் மொழிப் பரவையர்'', ''பண்ணார் பாடல் அறாதபடி'', ''பண்ணின் தமிழ் இசைப் பாடலின்'' எனத் தமது பாடல்களில் ஆங்காங்கே எடுத்தோதுவதிலிருந்து பண்ணின் சிறப்பையும், வளத்தையும் நாம் ஒருவாறு உய்த்துணரலாம்.

இவ்வகைச் சிறப்புமிக்க அப்பர் சுவாமிகள் அருளிய திருப் பாடல்களில் ஒரு சிலவற்றைப் பண்ணுடன் பாடி விளக்குவாம்.

**சூலைநோய் தீர்ந்த பதிகம்**

பண் : கொல்லி இராகம் : நவரோசு தாளம் : ஆதி

1. கூற்றாயின வாறு விலக்ககலீர்
 கொடுமைபல செய்தன நானறியேன்
 ஏற்றாயடிக் கேயிரவும் பகலும்
 பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
 தோற்றாதென் வயிற்றினகம் படியே
 குடரோடு துடக்கி முடக்கியிட
 ஆற்றேனடியேன் அதிகைக் கெடில
 வீரட்டானத் துறையம்மானே.

அரசன் ஆணையை மறுத்து யாம் யாருக்கும் அடிமையில்லை, இறப்பதற்கு ஒரு சிறிதும் அஞ்சோமாதலால் நமனைக் கண்டு சிறிதும் அஞ்சோம், இவ்வுலகில் எந்நாளும் இன்பமேயன்றித் துன்பம் இல்லை, ஆதலால் யாம் அரசனால் அழைக்கப்படும் எளிமையுடையோமல்லோம் என, அமைச்சர்களுக்கு மறு மாற்றம் உரைக்கும் முகமாகப் பாடியருளிய பாடல்,

**மறுமாற்றத் திருத்தாண்டகம்**

பண் : திருத்தாண்டகம் இராகம் : அரிகாம்போதி

2. நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
 நரகத்திலிடர்ப்படோம் நடலையில்லோம்

ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்க வெண்குழையோர் காதில்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே.

சமணர் தந்த கொல்லும் இயல்பினதாகிய கொடிய நஞ்சினையும், விரும்பி உண்ணத்தக்க நல் அமிர்தமாக மாற்றியருளிய சிவனது பேரருட் திறத்தை விளக்குவது இத்திருப்பாடல்,

**திருவிருத்தம்**

பண் : திருவிருத்தம் இராகம் : நவரோசு (சாமகானம்)

3. துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத்தோதின் நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமுதாக்கி வைத்தார் நனிபள்ளி யடிகளாரே.

அப்பர் பெருமானைச் சமணர் கல்லோடு கட்டிக் கடலில் இட்டபொழுது பாடியருளிய திருப்பாடல்,

**நமச்சிவாயப் பதிகம்**

பண் : காந்தார பஞ்சமம் இராகம் : கேதார கௌளை தாளம் : ஆதி

4. சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

பாம்பு தீண்டி இறந்த அப்பூதியடிகளின் மூத்த மகனாகிய திருநாவுக்கரசை உயிர் பெற்றெழப் பாடியருளிய பாடல்,

**விடம் தீர்த்த அற்புதத் திருப்பதிகம்**

பண் : இந்தளம் இராகம் : மாயாமாளவ கௌளை தாளம் : ஆதி

5. ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்று கொலாமுயரும் மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாமவர் ஊர்வது தானே.

திருமறைக்காட்டில் திருக்கதவம் திறக்கப் பாடியருளிய திருப்பாடல்.

**அற்புதத் திருப்பதிகம்**

பண் : திருக்குறுந்தொகை   இராகம் : மாயாமாளவ கௌளை   தாளம் : ஆதி

6. பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ
மண்ணினார் வலஞ்செய் மறைக் காடரோ
கண்ணினாலுமைக் காணக் கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள் செய்மினே.

திருநாவுக்கரசர் திருவேகம்பத் திருக்கோயிலை அடைந்து கச்சியேகம்பரைக் கண்களால் கண்டு பாடியருளிய திருப்பாடல்,

பண் : பியந்தைக் காந்தாரம்   இராகம் : நவரோசு   தாளம் : கண்டசாபு

7. கரவாடும் வன்நெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாட சடைதாழ அங்கையில் அனலேந்தி
இரவாடும் பெருமானை என்மனதே வைத்தேனே.

இறைவனால் படைக்கப்பட்ட அனைத்து உறுப்புகளும், இறைவனைத் தொழுது முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம் எனும் கருத்தில் அமைந்த திருப்பாடல்,

**திருஅங்கமாலை**

பண் : சாதாரி   இராகம் : பந்துவராளி   தாளம் : ரூபகம்

8. தலையே நீ வணங்காய் தலைமாலை தலைக் கணிந்து
தலையாலே பலி தேறும் தலைவனைத்
தலையே நீ வணங்காய்

தேடிக்கண்டு கொண்டேன் திருமாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்.

# 39. ஐந்தாம் திருமுறை அமைப்பும் அழகும்

கு. சுந்தரமூர்த்தி, தருமபுரம்.

## ஐந்தாம் திருமுறை

### திருக்குறுந்தொகை

பத்து எழுத்து முதல் பதினான்கு எழுத்தளவும் பெற்றுவரும் அளவடிகள், பதினொன்றும், பன்னிரண்டுமாக எழுத்துக்கள் குறைந்து வந்துள்ள நிலையில் குறுந்தொகை எனப் பெயர் பெற்றுள்ளன. சிலப்பதிகார வேட்டுவ வரியிலும் இவ்யாப்பு அமைவு அமைந்துள்ளது. இவ்வகையில் 100 பதிகங்கள் இவ்வைந்தாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இத்திருமுறை வழி அறியத்தக்க செய்திகள் பல உள்ளன. இயன்ற வகையில் இவற்றுள் சிலவற்றை எண்ணலாம்.

### அகச்சான்றுகள்

1. மருள்நீக்கியார் எனும் பெயரில் வாழ்ந்த திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார் ஆவர். மணப்பருவம் வரப் பெற்றோரால் தேர்ந்தெடுக்கப்பட்ட கலிப்பகையாரும் மணம் நேராத நிலையில் போர்முனைக்குச் சென்று உயிர்கொடுத்துப் புகழ்பெற, பெற்றோர் களும் வினைவயத்தால் விண்ணுலகை எய்தத் திலகவதியார் தாமும், தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயாவினால், உயிர் தாங்கி வாழ்ந்து வருவாராயினர். உடன் இருந்த நாவரசரும் சமண சமயம் சார, வருந்திய இவர், சிவச்சின்னம் தாங்கி, திருவதிகை வீரட்டானத்துத் திருக்கோவிலில் அலகிட்டு, மெழுக்குமிட்டு இறைவனுக்கு மாலைகளும் தொடுத்தமைத்துத் திருப்பணி செய்து வருவாராயின். அடியேன் பின் வந்தவனைப் பரசமயக் குழியினின்றும் எடுத்தாள வேண்டுமென, இறைவனிடம் பன்முறையும் விண்ணப்பம் செய்து வந்தார். பெருமானும் திருவுளம் பற்றி, சூலை நோய் தந்து, அதன் வழி அருள் செய்தமையால் தான், மருள்நீக்கியார் நாவரசர் என அப்பெருமானாலேயே அருளப்பெற்று ஆட்படுவாராயினர். இவ்வரிய நன்றி உணர்வு புலப்படுமாறு,

**எம்மை யார்இலை யானும் உளேன் அலேன்**
**எம்மை யாரும் இது செய வல்லரே**

அம்மை யார் எனக்கு என்று என்று அரற்றினேற்கு
அம்மை யாரைத் தந்தார் ஆரூர் ஐயரே

என வரும் திருவாக்கு அமைந்துள்ளது.

2. சமணர் சொற்கேட்டுப் பல்லவ மன்னன், நாவரசருக்குச் செய்த தீங்குகள் நான்காம். அவற்றுள், இரு தீங்குகளுக்கு அகச்சான்றுகள் இத்திருமுறையில் அமைந்துள்ளன.

**1. நாவரசரை நீற்றறையில் இட்டது**

ஈண்டு வரும் துயருளவோ ஈசன் அடியார்க்கு எனத் திருவுளம் பற்றியிருந்த நாவரசருக்கு, அந்நீற்றறை,

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

எனத் திகழும் அனுபவமாய் விளங்கியது.

**2. கற்றூணைப் பூட்டிக் கடலில் பாய்ச்சியது**

கல்லினோடு எனைப் பூட்டிய மண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தே னன்றே.

என வரும் பாடல் இதற்கு அகச்சான்றாக அமைந்துள்ளது.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை ஆவது நமச்சி வாயவே.

என நான்காம் திருமுறையில் வரும் பாடலும் இதற்கு அகச்சான்றாக அமைந்துள்ளது.

**3. திருமறைக்காட்டில் திருக்கதவம் திறக்க அருளியது**

திருமறைக்காட்டில் மறைகள் வழிபாடாற்றிக் கதவம் திருகாப்புச் செய்த அந்நாள் முதல், தம் காலம் வரையும், அடைத்தே இருக்கும் நிலையை அறிந்த ஞானசம்பந்தர், திருக்கதவம் திருகாப்பு நீங்கப் பாடியருளுமாறு நாவரசரை வேண்ட, அவரும் "பண்ணின் நேர்மொழியாள்" எனத் தொடங்கும் பதிகத்தை அருள, அப்பதிகப் பயனைத் துய்த்தருளிய வண்ணம் பெருமான் இருந்து அருள, கதவம் திருக்காப்பு நீங்கக்

காலம் தாழ்த்தது. நாவரசர், 'இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமானிரே' எனத் திருக்கடைக்காப்பில் வேண்ட, அத்திருக்காப்பு நீங்கியது என்பது வரலாறு.

அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்
இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமா னிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க இக்கத வம்திறப் பிம்மினே.

எனவரும் பாடல் இதற்கு அரணாகவுள்ளது.

4. திருமறைக்காட்டில் மறைக்கதவைத் திறக்கப் பாடிய நாவரசருக்குக் காலம் தாழ்த்த கதவு அடைக்கப் பாடிய ஞானசம்பந்தருக்கு, முதற் பாடல் பாடிய உடனேயே கதவம் அடைக்கப்பட்டது. இந்நிகழ்வால் வருந்தியிருந்த நாவரசருக்கு, இறைவன் "திருவாய்மூரில் யாம் இருப்போம் வா" என்று அருளியவாறு முன் செல்ல, நாவரசர் பின் சென்றார் என்பது வரலாறு.

இதற்கு அரணாக,

எங்கே என்னை இருந்திடந் தேடிக்கொண்டு
அங்கே வந்து அடையாளம் அருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனாரதென் கொலோ.

என வரும் திருவாக்கு அரணாக அமைந்துள்ளது.

இப்பதிகத்திலேயே, திருவீழிமிழலையில், சம்பந்தரும், அப்பரும், பஞ்சம் நீங்க இறைவர் அளித்த பொற்காசுகளில், சம்பந்தர் பெற்ற காசு மாற்றுக் குறைந்ததாக இருந்தது என்பது வரலாறு. இதற்கு அரணாக இப்பதிகத்தில் வரும் 7-வது பாடல் அமைந்துள்ளது.

'பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப் பார்'

என்பது அப்பகுதியாகும்.

இனி, இப்பதிகத்தில் வரும் 8-வது பாடலில் திருமறைக்காட்டில், கதவம் திறக்கப் பாடியவர் அப்பர் என்பதற்கும், அதனை அடைக்கப் பாடியவர் சம்பந்தர் என்பதற்கும் அகச் சான்றாகத்,

"திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உள் நின்றார்"

என வரும் பாடல் பகுதி அமைந்துள்ளது.

இவ்வைந்தாம் திருமுறையில், பல்வேறு பகுதிகள் எண்ணி மகிழ்தற்குரிய வகையில் உள்ளன. ஒல்லும் வகையில் சிலவற்றை எண்ணி மகிழலாம்.

**1. மலர் வழிபாடு**

இறைவனை வழிபடுவதற்கு எண்வகை மலர்கள் சிறந்தன என்பர். அவை, புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தி ஆவர்த்தம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை என்பனவாம். இவ்வரிய குறிப்பை ''எட்டு நாள்மலர்'' எனத் தொடங்கும் திருஅதிகை வீரட்டானப் பதிகத்தில், பாடல்தொறும குறித்துக் காட்டுகின்றார் நாவரசர். அவ்வெட்டு என்னும் எண்ணினை 'எட்டு' என்றும், 'ஓர் இரு நான்கு' என்றும், மூன்றோடு 'ஐந்து' என்றும், 'ஏழினை முன் ஆக உடைய எட்டு' என்றும் குறித்துக் காட்டும் அழகும் காண்டற்குரியதாம்.

2. ''ஒன்று வெண்பிறை'' எனத் தொடங்கும் பதிகத்தில், ஒன்று முதல் பத்து வரையுள்ள எண்கள் தொடர்ந்து வந்துள்ளன. ஒவ்வொரு பாடலிலும் அவ்வெண்கள் 4 அடிகளிலும் வந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு பாடல்,

**ஒன்பது ஒன்பது யானை ஒளி களிறு**
**ஒன்பது ஒன்பது பல்கணம் சூழவே**
**ஒன்ப தாம் அவை தீத்தொழி லின்னுரை**
**ஒன்பது ஒத்து நின்று என்னுள் ஒடுங்குமே.**

என்பது ஒன்பதாவது பாடல் ஆகும்.

**பொருள்**

இறைவன் எண்பத்தொரு பதங்களிலும் பேசப்படுபவன், பதினெண் சிவகணங்களும் சூழப்பெற்றவன், உடலின் கண்ணுள்ள ஒன்பது வாயிவானும் தீங்கு நேராதவாறு, என்னுள் ஒடுங்கி நிற்பவன்.

இப்பாடலில் நான்காவது அடியில் வரும் தொடருக்குச் 'சிவக் கவிமணியார்' பின்வருமாறு உரை வழங்கியுள்ளார்.

'என வாயில் வரும் உரைகளெல்லாம எத்துணையளவு விரிந்து சூழினும், 'நான்' எனும் ஆணவம் என்னையே சுற்றி என்னகத்தேயே ஒடுங்கி உள்ளது. அது ஒன்பது என்னும் எண்ணொடு, ஒன்று முதல் ஒன்பான் எண்களையும் பெருக்க, அதனைக் கூட்டுங்கால், ஒன்பதாகவே அமைவது போலுள்ளது.'

| | |
|---|---|
| 9 X 1 = 9 | |
| 9 X 2 = 18 (1 + 8) = 9 | 9 X 6 = 54 (5 + 4) = 9 |
| 9 X 3 = 27 (2 + 7) = 9 | 9 X 7 = 63 (6 + 3) = 9 |
| 9 X 4 = 36 (3 + 6) = 9 | 9 X 8 = 72 (7 + 2) = 9 |
| 9 X 5 = 45 (4 + 5) = 9 | 9 X 9 = 81 (8 + 1) = 9 |

இவ்வருமை நினைந்து இன்புறுதற்குரியது.

'நான்' எனும் அகந்தை தான் எள்ளளவும் மாறவில்லை எனத் தாயுமானவரும் கூறுவர். எனினும், இவ்அருளாளர்களெல்லாம் இவ்வாறு கூறுவது, நம் போன்றார் தம், இழிநிலையைத் தம்மீது ஏற்றிக் கூறிய தன்றி, அவர்கள் அன்னர் அல்லர். அவர்கள் பழுத்த ஞானிகளேயாவர் என்பதும் நாம் அறியத்தக்கது.

### 3. "அகரம் முதல் னகர இறுவாய்"

நம் தமிழ் எழுத்துக்கள் அகரம் முதல் 'னகர' இறுவாயாக அமைந் துள்ளன. இவ்வெழுத்துக்கள், நிரல் பட அமைய (ற, வ, ன, நீங்கலாக), 97-வது பதிகம் அமைந்துள்ளது. 2-வது பாடல் முதல், இவ்வெழுத்துக்கள், முதல் எழுத்துக்களாய் வருமாறு அமைத்தருளியுள்ளார் நாவரசர். அவற்றின் முதல் குறிப்புக்களை மட்டும் ஈண்டுக் காண்போம்.

**உயிர் எழுத்துக்கள்**

| | | |
|---|---|---|
| 1. அ - அண்ட | 2. ஆ - ஆதி | 3. இ - இட்ட |
| 4. ஈ - ஈறில் | 5. உ - உச்சி | 6. ஊ - ஊரிலாய் |
| 7. எ - எந்தை | 8. ஏ - ஏனம் | 9. ஐ - ஐயன் |
| 10. ஒ - ஒருவன் | 11. ஓ - ஓதவன்னன் | 12. ஔ - ஔவது |

**ஆய்த எழுத்து**

1. ஃ - அக்கு

**மெய் எழுத்துக்கள்**

| | | |
|---|---|---|
| 1. க - கங்கை | 2. ங - ஙகரவெல்குடி | 3. ச - சரணம் |
| 4. ஞ - ஞமன் | 5. ட - இடபம் | 6. ண - இணர்ந்து |
| 7. த - தருமம் | 8. ந - நமச்சிவாய | 9. ப - பற்பல்காலம் |
| 10. ம - மணி | 11. ய - இயக்கர் | 12. ர - அரவம் |
| 13. ழ - அழல் | 14. ள - இளமை | 15. ல - இலங்கை |

இவற்றுள், ஃ, ட, ண, ய, ர, ழ, ள, ல ஆகிய எழுத்துக்கள், மொழிக்கு முதலில் வாராமையின், அவ்வவ்வொற்றிற்கேற்ற இணை எழுத்துக்களுடன் வருவனவாயின.

### 4. திரிபுரம் எரித்தருளியது

இறைவன் உயிர்கட்கு அருளுமாற்றை இருதிறனில் அமைத்துக் கூறுவர். அவை, அறக்கருணையும், மறக்கருணையுமாம். இவற்றுள் மறக்கருணையாகக் கூறப்பெறுவது திரிபுரம் எரித்தருளியதாம்.

'வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற'

'ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற'

என மணிவாசகர் விளையாட்டு மகளிர் வாயிலாக அருளி யுள்ளமையையும் ஈண்டு நினைவு கூரலாம்.

இவ்அருஞ்செயலைத் திருஅண்ணாமலைப் பதிகப் பாடல்தொறும் நாவரசர் அருளி மகிழ்கின்றார்.

வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணா மலையானை
இட்ட னையிகழ்ந்த தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன் மறந்துய்வனோ. (பாடல் - 1)

அருத்தனை அரவு ஐந்தலை நாகத்தைத்
திருத்தனைத் திருவண் ணாமலையனைக்
கருத்தனைக் கடியார் புரம்மூன்று எய்த
அருத்தனை அடியேன் மறந்து உய்வரே. (பாடல் - 9)

என வருவன காண்க .

**மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமை**

இறையன்பிலும், நற்செயல்களை விரைந்து ஆற்றுதலிலும் நம்மை ஒருப்படுத்துதற்காகவே, 'கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன், பிணிக்குங்காலை இரங்குவிர் மாதோ', 'தோற்ற முண்டேல் மரணமுண்டு', 'உறங்குவதுபோலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' என்றெல்லாம் சான்றோர்கள் ஆற்றுப்படுத்துவாராயினர். இவ்வுவமையை உளங்கொண்ட நாவரசரும், 'காலபாசம்' எனத் தொடங்கும் திருக்குறுந் தொகைப் பதிகத்தில் முழுமையாகக் கூறி, நம்மைத் தெருட்டியுள்ளார்.

விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்
அடுத்த கின்னரம் கேட்கும் வாட்போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே.

என இப்பதிக 2-ஆவது பாடலில் அருளுவதைக் காணலாம்.

இவ்வாறு நம்மனோரைத் தெருட்டும் நிலை, நம் முன்னோர்கள் பலரும் கைக்கொண்டுள்ளனர். நாவரசர் இவற்றிற்கு மேலாக இயமனுக்கே எச்சரிக்கை விடுகின்றார்.

அடியவர்கள் இறையன்பிலும், மக்கட்பணியிலும் மிகச் சிறந்து விளங்குகின்றவர்கள். அவர்கள் அப்பணியைத் தொடர்ந்து செய்யவும்

அதனால் உயிர்கள் பலவும் ஊறின்றி உவகையுடன் வாழவும் கருதிய நாவரசர், இயமனுக்கே ஆணையிட்டு அருளுகின்றார்.

இவ்வரிய பதிகமே காலபாசத் திருக்குறுந்தொகைப் பதிகம் ஆகும். எடுத்துக்காட்டாக ஒரு பாடல் :

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம ஈசன் அடியாரை
விடைகொள் ஊர்தியி னான்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே.

இவ்வறத்திற்கு மாறாக நீங்கள் அடியவரைச் சூழின், அப்பெருமானின் திருவடி நும்மைச் சுடும் என்றும் எச்சரிக்கின்றார்.

அரக்கன் ஈரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி ஊன்றியிட் டான்தமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கள் மற்றுநீர்
சுருக்கே னிற்சுட ரான்கழல் சூடுமே.

என்பது அவர்தம் ஆணையாம். சுருக்கெனில் - மாறாக அவ்வடியவர்களைப் பிணித்தல் போன்ற செயல்களில் ஈடுபடுவீராயின், சுடும் - அவன் திருவடிகள் நும்மை அழிக்கும். (சுடும் என்பது சூடும் என நீண்டது).

### நம்மனோர்க்கு ஓர் அறவுரை

இறைவன்பால் மனம் நெகிழ்ந்த அன்பு பொருந்தவே எத்தகைய இறைபணிகளையும் ஆற்றவேண்டும். அத்தகைய அன்பு அகத்தில்லாது, அவ்விறைபணிகள் எப்பணிகளாய் இருப்பினும், எவ்வெம்முறைகளில் எல்லாம் ஆற்றவேண்டுமோ, அவ்வம்முறைகளில் எல்லாம் செய்யினும் அவை பயன் தரா எனப் பாவநாசத் திருக்குறுந்தொகையில் அருளிச் செய்கின்றார்.

பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுகந் தாடும் அவன்கழல்
மேவ ராய்மிக வும் மகிழ்ந்துள் குமின்
காவலாளன் கலந்தருள் செய்யுமே.

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவம் செய்யில்என்
சென்று நீரிற் குளித்துத் திரியில்என்
என்றும் ஈசனென் பார்க்கன்றி இல்லையே.

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடினாலும் அரனுக்குஅன்பு இல்லையேல்

ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே.

என்பன அவர்தம் அறவுரையாகும்.

## நாவரசர் பதிகங்களில் வரும் நிறைவுப் பாடல்

திருநாவுக்கரசர் தம் பதிகங்களில், நிறைவாக வரும் பாடல்தோறும், இராவணனைப் பற்றிய குறிப்பு அமைந்திருக்கும். காரணம், சமண் சமயம் சார்ந்திருந்த தமக்கு, இறைவன் தன் கருணையினால் சூலை நோயை அருளி, அதன் வழி மீண்டும் சிவநெறியில் ஆட்படுமாறு அருளிய திறம், இராவணனுக்குச் செய்த கருணை போல்வதாகும் எனத் திருவுள்ளம் பற்றியதனால் ஆம். இராவணன் தன் முனைப்பால், முன்னர்க் கயிலையை எடுக்க, இறைவன் தன் திருவடிகளால் அவன் ஆணவம் அழிய ஊன்ற, உடலும் உள்ளமும் தளர்ந்த அவன், கயிலைப் பெருமானைப் போற்றப், பெருமானும், அவனை மன்னித்தருளினார் என்பது வரலாறு. இதனாலேயே பத்தாவது பாடலில் இராவணனைக் குறிப்பிடுகின்றார் எனச் சேக்கிழார் அருளுகின்றார். இவ்வரிய விளக்கத்தை உளம் கொண்ட நிலையில், பதிகந்தோறும் வரும் இராவணனைப் பற்றிய பாடல்களைப் பயிலல்தக்கதாகும்.

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக்
கிறையாகிய அன்பரும் - இந்நெடுநாள்,
சித்தந்திகழ் தீவினையேன் அடையுந்
திருவோ இதுஎன்று தெருண்டறியா
அத்தன்மைய னாய இராவணனுக்
கருளுங் கருணைத்திற மானஅதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே
மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே.

என்பது சேக்கிழார் திருவாக்காகும்.

## பொதுத் திருப்பதிகங்கள்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய திருப்பதிகங்களில், அவ்வப் பதிகங்களும் பாடப்பெற்ற திருப்பதிகளையோ அப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவரையோ குறிக்கப் பெறாத நிலையில் அமைந்திருக்கும் பதிகங்களைப் பொதுப்பதிகங்கள் எனக் குறித்து வந்துள்ளனர். இவ்வகையில் திருநாவுக்கரசர் திருவாக்கில் அமைந்த பதிகங்கள் முப்பத்து ஏழாம். இவை பொதுப்பதிகங்கள் எனக் குறிக்கப்பெற்று வந்துள்ளன. இவற்றுள் இவ்வைந்தாம் திருமுறையில் பன்னிரெண்டு திருப்பதிகங்கள், இவ்வகையியல் அமைந்த பதிகங்களாகக் குறிக்கப்பெற்று வந்துள்ளன.

அவையாவன :

| | | |
|---|---|---|
| 1. மாசில்வீணை | 2. ஏயிலானை | 3. கண்டுகொள் |
| 4. காசனை | 5. அண்டத்தானை | 6. புக்கணைந்த |
| 7. பொன்னுள்ளத் திரள் | 8. சிந்திப்பார் | 9. நீரலைத்த |
| 10. பாவமும் பழி | 11. வேதநாயகம் | |

இவற்றுள் முதற்பதிகம்

**மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நிழலே.**

என்பதாகும்.

சமணர்கள் வழிநின்ற பல்லவ மன்னன், நாவரசரை நீற்றறையில் இடுமாறு ஆணையிட்டனன். அவ்வாணை வழி நீற்றறையில் இருந்த நாவரசர், இறைவனின் தாள் நிழலைத் தலைக்கொண்டவாறு பெருமானையே தொழுதிருந்தார். அந்நிலையில் அந்நீற்றறையும்,

**வெய்யநீற் றறையதுதான் வீங்கினவே னிற்பருவம்**
**தைவருதண் தென்றல் அணை தண்கழுநீர்த் தடம்போன்று**
**மெய்யொளி வெண் ணிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்**
**ஐயர்திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே.**

நேரிடையாக, நாவுக்கரசரின் திருவாக்கில் அமைந்த முதற் குறிப்பினை எடுத்தருளி, எப்பொழுது எங்குப் பாடப்பெற்றது என விளக்காவிடினும், அத்திருவாக்கினை மிக அழகாக விரித்து உரைத்திருக்கின்றமையை இப்பாடல் வழி அறிய முடிகின்றது. ஆதலின் இதைப் பொதுப்பதிகம் என்றல் சாலாது.

**புக்கணைந்த**

இப்பதிகத்தில் வரும் பாடல்கள் முழுதும், மாலும் அயனும் தன்முனைப்பால் நின்று திருவண்ணாமலைப் பெருமானைக் காண முயன்றமையையும், அது பயனில் முயற்சியாய் ஆயமையையும் குறிக்கின்றது. இவ்வகையில் இப்பதிகம் திருவண்ணாமலையில் அருளியதாகவே கொள்ளலாம்.

இவ்வகையில் இவ்விரு பதிகங்களையும் பொதுப் பதிகங்களுடன் சேர்க்காது நாவரசர் வரலாற்றில் உரிய இடங்களில் அமைத்துப் பேணல் தக்கதாகும்.

**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**

இவ்வரிய அருள்மொழிக்கிணங்கப் பெருமானிடத்துத் தாம் பெற்ற இன்பத்தை நாம் அனைவரும் பெறுமாறு நாவரசர் அருளியுள்ள அருள்மொழிகள் பலவாம். அவ் அருள்மொழிகள் யாவும் எளிமையாகப் பொருள் உணர்தற்கு உரியவனவாய் இருத்தலின், அவ்அருள்மொழி களையே ஈண்டுத் தரப்பட்டுள்ளது.

நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்று மின்பந் தழைக்கவி ருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே. 1486

கொல்லத் தான் நமனார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவது என்ஏழைகாள்
நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே. 1496

ஞாலம் மல்கு மனிதர்காள் நாடொறும்
ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்
கால னார்வரு தன்முன் கருவிலிக்
கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 1761

உய்யு மாறிது கேண்மின் உலகத்தீர்
பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்
கையினான் உறை கின்ற கருவிலிக்
கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. 1764

கேளு மின்இள மைய்யது கேடுவந்(து)
ஈளை யோடுஇரு மல்லது எய்தல்முன்
கோள ராவணி கொண்டீச் சுரவனை
நாளும் ஏத்தித் தொழுமின் நன்காகுமே. 1774

வெம்பு நோயும் இடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை
கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனை
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. 1775

வைத்த மாடும் மனைவியும் மக்கள்நீர்
செத்த போது செறியார் பிரிவதே
நித்த நீலக் குடியர னைந்நினை
சித்த மாகிற் சிவகதி சேர்திரே. 1790

அழகி யோம் இளை யோம்எனும் ஆசையால்
ஒழுகி ஆவி யுடல்விடு முன்னமே

நிழல தார்பொழில் நீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே 1797

பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த னென்று வியந்திடல் ஏழைகாள்
சித்தர் பக்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. 1834

இன்று ளார்நாளை யில்லை எனும்பொருள்
ஒன்றும் ஒராது உழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னார்காட்டுப் பள்ளிகண்டு உய்ம்மினே. 1908

நடலை வாழ்வுகொண்டு என்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமுது உண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந்து ஊர்முனி பண்டமே. 1957

பூக்கைக் கொண்டுஅரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டுஅரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கை கேஇரை யாகிக் கழிவரே. 1958

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 1960

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே. 1962

வேதம் ஓதில்என் வேள்விகள் செய்யில்என்
நீதி நூல்பல நித்தல் பயிற்றில்என்
ஓதி அங்கமோ ராறும் உணரில்என்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே. 2069

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்றும் ஈசன்என் பார்க்கன்றி யில்லையே. 2073

# 40. துயர்வழியே இறையன்பு பெற்றவர்

தி. சுந்தராம்பாள், விருதுநகர்.

"துயர் வழியே இறையன்பு" என்னும் பெறற்கரிய பேறு பெற்றவர் திருநாவுக்கரசர். இவருக்கு வந்த துயர் யாது? அது ஏன்? எப்போது? எப்படி? யாரால்? வந்தது; அத்துயர் யாரால்? எப்படி? எப்போது? நீங்கியது. துயர் நீங்கிய பின்பு திருநாவுக்கரசரின் நிலை யாது? செயல்கள் யாவை? என்னும் வினாக்களுக்கு விடை காண்பதன் வழி, துயர் வழியே இறையன்பு பெருகும் என்னும் மெய்ம்மையை விளக்குவதாக இக்கட்டுரை அமைகின்றது.

சைவ சமய குரவர் நால்வருள் ஒருவர் திருநாவுக்கரசர். சிவனருட் செல்வர்களின் வரிசைகளில் முதல்வரிசையில் இடம் பெறத்தக்க மாட்சி யுடையவர். தருமசேனர் என்ற பெயருடன் சமண் சமயத் தலைவராக வாழ்க்கை நடத்தியபோது கொடிய சூலை நோயால் பீடிக்கப் பெற்றுத் தாங்க முடியாத பெருந்துன்பத்துக்கு ஆளாகிறார். நோயின் கொடுமையால் வருந்தும் அவர் சிவபிரான் அருளால் அவன் திருவடியில் வீழ்ந்து நோய் நீங்கப் பெற்று வாழ்வு பெறுகிறார். தருமசேனர் என்ற பெயருடன் சமண் சமயத் தலைவராக வாழ்க்கை நடத்தியவர், சிவபிரானின் தொண்டர் என்ற நிலையில் பேரின்பம் அடைகிறார்.

### திருநாவுக்கரசர் திருஅவதாரமும் துன்பியல் நிகழ்வுகளும்

திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூர் என்ற ஊரில் வாழ்ந்து வரும் புகழனார் - மாதினியார் ஆகியோரின் மங்கலம் என்னும் மனைமாட்சிக்கு நன்கலமாக, முதலில் திலகவதியார் என்னும் பெண்ணும், அவர் பிறந்து சில முறையாண்டுகள் கழிந்த பின்னர் மருள்நீக்கியார் என்னும் ஆண் மகவும் பிறக்கின்றனர். இம்மருள்நீக்கியாரே பின்னாளில் ஒப்பிலாத் தொண்டராகி விளங்கிய திருநாவுக்கரசர் ஆவர்.

தமக்கையார் திலகவதியாருக்கு ஆண்டு பன்னிரெண்டு எய்த, இவரை இவர்தம் குலப்பெரியோர்கள் நிச்சயத்த வண்ணம் கலிப்பகையார் என்னும் போர் வீரருக்குத் திருமணம் செய்துகொடுக்க இருக்கின்றனர். ஆனால் இத்திருமணம் நடைபெறுவதற்கு முன்பாக மணமகன் கலிப்பகையார் போர்மேல் செல்ல வேண்டியதாகிறது.

அந்நிலையில் தந்தை புகழனார் அரும்பிணியுழந்து இறைவனடி சேர்கிறார். ஆகவே தாய் மாதினியார், தம் மக்கள் இருவரையும்

துகளாகவே மதித்து, நீத்துக், கற்புநெறி கடவாமல் தம்முயிரையும் விட்டுக் கணவனாருடன் செல்கிறார். அவ்வமயம் பன்னீராண்டே நிரம்பிய திலகவதியாரும், அவரது தம்பியார் ஏறத்தாழ பத்து வயது நிரம்பிய மருள்நீக்கியாரும் திகைத்து நிற்கும்போது பட்ட காலிலே படும் என்னும் முதுமொழிக்கு இணங்க போர்மேற் சென்ற மணமகன் கலிப்பகையாரும் போர்க்களத்தில் தம் மாவீரத்தைப் புலப்படுத்தி, தம் உயிரைக் கொடுத்துப் புகழுடம்பை நிறுத்தி வீரர் உலகம் எய்துகின்றார்.

தம் பெற்றோர், க்லிப்பகையார் ஆகியோருடைய மறைவிற்குப் பிறகு, இளம்பருவத்தினராகிய மருள் நீக்கியார் தாயும் தந்தையும் இன்றி வருந்திய பொழுது அவர் தமக்கையார், 'தம்பியார் ஊராக வேண்டும்' எனக் கொண்ட கருணையால் அவரைத் தாய்போல் பேணி வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார். திலகவதியாரின் இச்செயல் இறைவனின் திருவருட் செயலேயாகும் என்பது உய்த்துணரப்படுகின்றது. இக்கணிப்பிற்கு, மருள்நீக்கியாரே, தாம் சமணம் துறந்து சிவநெறி மேற்கொண்டு நாவுக்கரசராகத் திகழ்ந்த காலத்தில் அருளிய,

"எம்மை யாரிலை யானும் உளேனலேன்
எம்மை யாரும் இதுசெய்ய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரட்டினேற்
கம்மை யாரைத் தந்தார் ஆரூர் ஐயரே" (5.7.6)

என்னும் பாடல் அழுத்தமான சான்று ஆகும்.

**சமண் சார்பில் மருள்நீக்கியார்**

தமக்கையார் துணையுடன் வாழும் மருள் நீக்கியாருக்குப் பருவத்திற் கேற்ற அறிவு வளர்ச்சி பெறுகின்றது. உலகியலறிவும் நன்கு வாய்க்கப் பெறுகின்றது. அதே சமயத்தில் அவரது வாழ்க்கையில் அடுத்தடுத்து நிகழ்ந்த துன்பியல் நிகழ்வுகள் இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையுடையன அல்ல என்னும் மெய்ம்மையை உணரச் செய்கின்றன. அந்நிலையில் நிலையாமைக் கருத்தை வலியுறுத்திக் கூறும் சமண சமயத் துறவிகளின் கொள்கைகளால் மருள்நீக்கியார் ஈர்க்கப்படுகின்றார். எல்லாச் சமயங்களுள்ளும் சிறப்புடைய மெய்ச் சமயம் இதுவெனத் தெரிந்துணரும் ஆர்வம் இவரிடம் தலைதூக்கி நிற்கின்றது. ஆனால் சிவபிரான் திருவருள் இவருக்குக் கைகூடப் பெறவில்லை. எனவே கொல்லாமை என்னும் நல்லறப் போர்வையில் மறைந்துலவும் சமண் சமயத்தில் சேரக் கருதுகிறார். மருள் நீக்கியாரின் இம்மனநிலையை,

"நில்லாத வுலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேன்என் றறத்துறந்து சமயங்க ளானவற்றில்

நல்லாறு தெரிந்துணர்ந்து நம்பராரு ளாமையினாற்
கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகுவார்''

(திருநாவு. புரா. பா. 37)

என்று தெளிவுறுத்துகிறார் சேக்கிழார்.

சமணத் துறவிகள் வாழும் பாடலிப்புரம் என்னும் ஊரை அடைந்து, அம்முனிவர்கள் தம் அறவுரைகளில் உள்ளத்தைப் பறிகொடுக்கிறார். சமண் சமயத்தைத் தழுவுகிறார். அச்சமயத்தின் அரிய பல நூல்களையெல்லாம் கற்றுத் துறை போய வித்தகராகின்றார். இவரது திறமையைக் கண்டு மகிழ்ந்த சமண முனிவர்கள் இவரைத் 'தருமசேனர்' என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிப் போற்றுகின்றனர். தருமசேனரும் புத்தரில் ஒருசாராராகிய தேரர்களை வாதில் வென்று சமண் சமயத் தலைமையினில் மேம்படுகின்றார்.

## திலகவதியார் விண்ணப்பம்

திருவதிகை இறைவனை நாள்தோறும் வழிபட்டிருக்கும் திலகவதியார், தம்பியின் புறச் சமயப் பிடிப்பினை எண்ணிப் பெரிதும் வருந்துகிறார். திருவதிகைப் பெருமானை இறைஞ்சி நின்று, ''எம் பெருமானே, நீர் என்னை ஆண்டருளினீராகில், அடியேன் பின் பிறந்தவனைப் புறச் சமயப் படுகுழியினின்றும் எடுத்தாண்டு உய்விக்க வேண்டும்'' என்று பலமுறையும் விண்ணப்பிக்கின்றார்.

## இறைவன் திருவருள்

சிவநெறியில் உறைப்புடைய திலகவதியாரின் கனவில் தோன்றுகிறார் திருவதிகைப் பெருமான்.

''நீ உன் மனக்கவலையைத் தவிர்ப்பாயாக,
................ உன் உடன் பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச் சூலை மடுத்தாள்வ மென''

(திருநாவு. புரா. பா. 48)

அருள் செய்கிறார். அவ்வண்ணமே தருமசேனர் வயிற்றில் சூலை நோய் வந்து பற்றுகின்றது.

## தருமசேனர் சூலை நோயால் அல்லலுறுதல்

இறைவன் அருளால் தருமசேனரைப் பற்றின சூலை நோய் வடவைப் பெருந்தீப் போல் அவரது குடலைக் குடைந்து தாங்க முடியாத பெருந் துன்பத்தைக் கொடுக்கிறது. நோயின் கடுமையை, மிகக் கடுஞ்சொற்களால் திருநாவுக்கரசரே; ''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' என்று தொடங்கும் திருவதிகை வீரட்டானத் திருப்பதிகத்தில் வருணிக்கிறார். சூலை நோயின்

துன்பத்தைத் தாங்க முடியாமல் பாழியறையில் மயங்கி வீழ்கின்றார். பின்பு அவர் சமண் சமயத்தில் தாம் கற்ற மந்திரங்களையெல்லாம் கையாண்டு பார்க்கின்றார். அது தணியவில்லை, மாறாக அது முடுகி வருத்துகின்றது.

தருமசேனர் படும் துன்பத்தைக் கண்ட சமணர்கள் பலரும் கூடி, ''உயிரைக் கவரும் கொடிய நஞ்சினை யொத்த சூலை நோய் இவரை வருத்துகின்றதே. இதற்கு நாம் என் செய்து இதனைத் தணிப்போம்? என்று பெரிதும் கவலைப்படுகின்றனர். தம் கையிலுள்ள குண்டிகை நீரை மந்திரித்துக் குடிப்பிக்கின்றனர்; மயிற்பீலி கொண்டு காலளவும் தடவுகின்றனர். இச்செயல்களால் சூலை நோய், நெய்யிலிட்ட நெருப்பு மேலும் பெருகி எரிவதுபோல், பன்மடங்கு அதிகரிக்கின்றது. இதனைக் கண்டு சோர்வுற்ற சமணர்கள், ''ஐயோ, இனி நாம் என் செய்வோம்'' என்று கலங்கிய உளத்தினராய், ''இது நம்மாற் போக்கற்கரிய நோயாகும்'' என்று சொல்லித் தருமசேனரைக் கைவிட்டு அகன்று போகின்றனர்.

''எல்லாரும் கைவிட்டார் என்ற இந்த நிலை'' தருமசேனருக்கு, மிகவும் ஏற்ற நிலை, அன்பு மதத்தை, தம் தாய்ச் சமயமாம் சைவ சமயத்தைச் சார்வதற்கு. அவருக்கும் மனித முயற்சியில் நம்பிக்கை விட்டது. மற்றவர்களும் அவரை அறவே கைவிட்டு விடுகின்றனர். இறைவனைத் தவிர வேறு கதி இல்லை என்னும் உண்மை அவருக்குப் புலப்படுகிறது.

**தருமசேனர் அடைக்கலம்**

சூலை நோயின் கொடுமையால் வருந்தும் தருமசேனர், 'அந்தோ நான் என் செய்வேன்?' என்று சோர்கின்றார். அந்நிலையில் ஈசன் அருள் கூடுதலால், 'இப்புன்னெறியில் யான் இருக்கும் வரையில் இந்நோய் தீராது. சமண் சமயத்தைத் துறந்து என் தமக்கையாரின் திருவடிகளை வணங்கி உய்வேன்'' என்று உறுதி கொள்கிறார். சமணர்கள் யாவரும் அறியா வண்ணம், உடுத்த பாய், பிடித்த குண்டிகை, தொடுத்த மயிற்பீலி ஆகியவற்றை வீசி எறிகிறார். தூய வெள்ளாடை உடுத்துத் தமக்குப் பற்றுக் கோடாக வர உடன்பட்டவரைப் பற்றிக் கொண்டு சமண் பள்ளியைக் கடந்து, நள்ளிரவில் பாடலிபுரத்திலிருந்து திருவதிகையை நோக்கிப் புறப்பட்டு வருகிறார். திலகவதியார் தங்கியிருக்கும் திருமடத்தை அடைகிறார். தம் தமக்கையாரின் திருவடிகளில் வீழ்ந்து, ''நம் குலம் செய்த நற்றவத்தின் பயன் அனையீர்'' கொடுஞ் சூலையால் வருந்தி உம்மைச் சரண் அடைந்தேன் இத்துயர்க் கடலினின்றும் உய்ந்து கரையேறுதற்குரிய நன்னெறியினை உரைத்தருளும்'' என்று விண்ணப்பம் செய்கிறார்.

திலகவதியார் அடிமேல் உறவணங்கும் தருமசேனரின் உள்ளப் பாங்கிலே எவ்வளவு பெரிய மாற்றம் ஏற்பட்டுள்ளது! நேற்று வரை சமணர் குழாத்துக்குத் தலைவராக உயர் பதவியில் மிடுக்குடனே வீற்றிருந்தவர் இன்று தமக்கையாரின் காலடியில் வீழ்ந்து வணங்கும் நிலை வந்தமைந்து

விட்டதே! துயரம் ஆன்மீக வாழ்வில் மனிதரை ஈடுபடுத்தும் ஆற்றலை எங்ஙனம் எடுத்துரைப்பது?

### பரசமய மீட்சி

தம்பியாரின் மனநிலையினை உணர்ந்த திலகவதியார் சிவபெருமானின் திருவருளை நினைந்து வணங்கி, ''நற்கொள்கையில்லாத பரசமயக் குழியில் வீழ்ந்து வருந்தினீர், இனி எழுந்திரும்'' என்று மொழிகின்றார். எழுந்து தொழும் தம்பியாரிடம், "உம்மைப் பற்றிய இந்நோய் சிவபெருமானது திருவருளே என்று அறிவீராக; தம்மைச் சரணடைந்தவரது பற்றறுக்கும் பரமனைப் பணிந்து பணி செய்க" என்று திலகவதியார் பணித்தருள்கிறார். தம்பியார், சிவபிரான் திருக்கோயிலிற் புகுவதற்குத் தகுதியுடையவராம்படி, திருவாளன் திருநீற்றைத் திருவைந்தெழுத்தை ஓதி வழங்குகிறார். அதனைப் பெற்றுக்கொள்ளும் மருள்நீக்கியார் பெருவாழ்வு வந்ததெனக் கருதி அவ்வெண்ணீற்றினை உடல் எங்கும் பூசி அணிகிறார். தமக்கு உய்யும் நெறி தரும் தமக்கையார்க்குப் பின்னே தாமும் திருவதிகைத் திருக்கோயிலுக்குச் செல்கிறார். இந்நிகழ்வினைச் சேக்கிழார்,

> ''திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்
> பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்கு
> உருவார வணிந்து தமக்கு உற்றவிடத்து உய்யுநெறி
> தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்''
>
> (திருநாவு. புரா. பா. 68)

என்று பாடுகிறார்.

### சூலையை வெல்லல்

திருநீறு அணிந்தவுடன் மருள்நீக்கியாரின் அகத்திருள் நீங்குகிறது. விடியற் காலத்தில் உலகைக் கவித்துக் கொண்டிருக்கும் புறஇருளும் நீங்குகிறது. திலகவதியார் தம்பியாரை அழைத்துக் கொண்டு கோயிலுக்குள் செல்லுகிறார். திருவதிகைப் பெருமானின் திருக்கோவிலை மருள்நீக்கியார் வலம் வந்து, சந்நிதியில் நிலமிசை வீழ்ந்து இறைஞ்சுகிறார். இறைவன் திருவருளால் செந்தமிழ்ப் பாமாலைகளைப் பாடிப் போற்றும் உணர்வு பெறுகிறார். உணர்ச்சி ஊற்றுப்போல் சுரக்கிறது. குடரோடு தொடக்கி முடக்கியிடும் துயரத்தை நீக்க வேண்டி திருவதிகைப் பெருமானிடம் ''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' என்று தொடங்கும் பதிகம்பாடி கண்ணீர் விட்டுக் கதறுகிறார். பதிகம் நிறைவேறியதும் ஆண்டவன் அருளைப் பொழிகிறான். அவர் வயிற்றில் புகுந்து வருத்திய சூலை நோய் நீங்கி விடுகின்றது. மருள்நீக்கியாருக்கு இறைவன்பால் நன்றி கலந்த பேரன்பு பெருக்காறாகப் பெருகுகின்றது. இப்பெருவாழ்வைப் பெற்றுத் தந்த சூலை நோய்க்கு யான் என்ன கைம்மாறு செய்வேன்? என்று கூறி இறைவனின் கருணைக் கடலில் மூழ்கித் திளைக்கிறார். சூலை நோய்த்

துயரால் இடர்ப்பட்ட மருள் நீக்கியார், துயரால் நலியப் பெறாத பக்திப் பெருஞ்செல்வராகப் பரிணாமம் அடைகிறார்.

**"நாவுக்கரசு" - சிறப்புப் பெயர் பெறுதல்**

"பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப்
பதிகத்தொடை பாடிய பான்மையினால்
'நாவுக்கரசு' என்று உலகு ஏழினும் நின்
நன்னாமம் நயப்புற மன்னுக" (திருநாவு. புரா. பா. 74)

என்னும் இறைவனின் திருவருள் வாக்கு யாவரும் கேட்கும் வண்ணம் வானின்கண் எழுகின்றது. இத்திருவருள் மொழியினைச் செவிமடுத்த நாவுக்கரசர், இவ்வளவு நெடுங்காலமாக இறைவனை மறந்திருந்த தீவினையாளனாகிய எளியேனால் இத்தகைய பெருவாழ்வு அடைதற் குரியதோ? என்று வியப்புறுகிறார். தொழுகிறார்.

திலகவதியாரின் செம்மையான தவமே மருள்நீக்கியாரைத் திருநாவுக்கரசராக மாற்றித் தமிழ் உலகை, சைவ உலகை உய்வித்தது. இறைவன் திருவருளால் சூலை நோயை வென்று உய்திபெற்ற திருநாவுக்கரசர், திருநீறும் கண்டிகையும் புனைகிறார்; அவரது நெஞ்சம் அஞ்செழுத்தை நினைக்கிறது; வாக்கு தமிழ்ப் பதிகம் பாடுகிறது; காயம் உழவாரப் படையைக் கையினிற் கொண்டு சிவாலயங்களில் உழவாரத் திருப்பணி செய்கிறது.

சமண சமயத் தலைவராக வீற்றிருந்த உயர்நிலையில் இன்பம் காணாத இவ்வன்பர் சிவபிரானின் தொண்டன் என்ற தாழ்நிலையில், அகங்காரம் மமகாரங்கள் அறவே நீங்கப் பெற்று மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களாலும் அரன் பணி செய்வதில் பேரின்பம் காண்கிறார். மேலே விவரிக்கப்பெற்ற செய்திகள், துயர் வழியே இறையன்பு பெற முடியும் என்னும் மெய்ம்மைக்கு அழுத்தமான சான்றுகளாக அமைகின்றன. இக்கருத்துக் கணிப்பிற்கு,

"மனிதனுக்குத் துயரம் என்பது தவிர்க்க முடியாத ஒன்று. துயரம் வருங்காலை அதனைத் தனது ஆணவத்தால் தனது வலிமையின் துணைகொண்டு நீக்க முதலில் பாடுபடுகிறான். கடுந்துயர் எளிதில் நீங்குவதில்லை. துயரால் நலிவதைத் தாங்க முடியாமல் திணரும்போது ஒரு சிலருக்கு இறைவனின் துணை தேடும் பேறு கிடைக்கின்றது.

இறைவனை நாடும்போது ஆணவம் சிறிது சிறிதாகத் தேய்வடை கிறது. இது சிலருக்குப் பல பிறவிகளில் ஏற்படும் மாற்றம். நாவுக்கரசர் போன்றோருக்கு ஒரு சில நாட்களிலோ, நிமிடங்களிலோ நடந்தேறக் கூடிய அற்புதமாய் அமைகிறது. ஆணவம் முழுதும் தேய்ந்து மறைந்தபின், ஈசன்மீது நம்பிக்கை என்ற காய், கனியாகப் பழுத்தபின், அன்பர் ஈசனின் அடியாராக ஆகின்றார்" (அ.வெ. சுப்பிரமணியன், "அன்பு மிகுந்த இந்து மதம்", ப. 29) என்னும் அறிஞர் கருத்தும் வலுவூட்டுவதாக உள்ளது.

# 41. நாவுக்கரசரும் நால்வகை யாப்பும்

தே.வீ. சுமதி, திருச்சி.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தியிலக்கிய காலம் ஒரு மறுமலர்ச்சிக் காலமாகக் கருதப்படுகிறது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்தியின் வழியாகவே சமூக மற்றும் ஆன்ம விடுதலை குறித்துச் சிந்தித்தனர். அவர்களில் தம் பக்தித் திறத்தால் இவ்வையத்தைப் பாலித்திட எண்ணம் கொண்டவர் நாவுக்கரசர். தாம் பாடிய மூவாயிரத்திற்கும் மேற்பட்ட அனைத்துப் பாக்களிலும் இறைவழிபாட்டின் பின்னணியில் சமூக நலத்தை விரும்பிய இச்சான்றோர் தம் கருத்துக்களைப் பல புதிய இலக்கிய உத்திகளின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். தமிழுடன் இசையையும், அவற்றுடன் தம்மையும் இணைத்து உழவாரப் பணி செய்து கொண்டே தலங்கள் தோறும் சென்று இறைவழிபாட்டில் ஈடுபட்ட அப்பர் பெருமான், தம் இறை அனுபவங்களையும், இறைவனின் அளவற்ற அன்பையும் பல வகையான பாக்களில் பதிவு செய்திருப்பினும் 'யாப்பு' வகையைக் கையாண்ட விதம் சிறப்பிற்குரியதாகும். அவர் கையாண்ட யாப்பு வகைகளில்,

அ. திருக்குறுந்தொகை (அ) கலிவிருத்தம்

ஆ. திருத்தாண்டகம் (அ) கொச்சக ஒருபோகு

இ. திருநேரிசை

ஈ. திருவிருத்தம் (அ) கட்டளைக் கலித்துறை

ஆகிய நான்கும் முதன்மையானவையாகக் கருதப்படுகின்றன. இவற்றில் சில யாப்பு வகைகள் அதற்கு முன்னும் இலக்கியங்களில் பயன்படுத்தப் பட்டிருப்பினும் புறச்சமயங்களை அகற்றிப் புதிதாகப் புணரமைப்புப் பெறத் துவங்கிய தமிழ்ச் சமயத்தின் பக்திப் பனுவல்களில் நாவுக்கரசரால் எவ்வாறு கையாளப் பெற்றுள்ளது, அதற்கான அடிப்படை யாது? என்பது குறித்த சில கருத்துக்கள் இங்கு முன்வைக்கப்படுகின்றன.

### திருக்குறுந்தொகை (அ) கலிவிருத்தம்

'ஒருமா கூவிளம் கூவிளம் கூவிளம்' எனும் கட்டளை அடியைக் கொண்டுள்ள இத்தொகை யாப்பு கீழ்க்கண்டவாறு இலக்கண வரையறை பெற்றிருக்கிறது.

1. நாற்சீர் நான்கடியாய் அமைதல் வேண்டும்

2. அடிதோறும் தேமா, புளிமா ஆகியவற்றில் ஒன்று முதற்சீராக அமைதல் வேண்டும்.
3. கருவிளம் கூவிளம் ஆகியவற்றில் ஒன்று நான்காம் சீராக அமைய வேண்டும்.
4. ஏனைய இரண்டு மற்றும் மூன்றாம் சீர்கள் பெரும்பான்மை விளச்சீராகவும், சிறுபான்மை மாச்சீராகவும் அமைதல் வேண்டும்.

இவ்விலக்கணப்படி நாவுக்கரசரின் நூறு பதிகங்களைக் கொண்ட ஐந்தாம் திருமுறை அமைந்துள்ளது.

(எ.கா)

விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே
மண்ணு ளார்வணங் கும்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே

இவ்யாப்பினை ஆய்வு செய்த வெள்ளைவாரணர் பத்து முதல் பதினான்கு எழுத்துக்களைப் பெற்று வரும் அளவடியாகிய நாற்சீரடியுள் பதினொன்று பன்னிரண்டு எனக் குறைந்த எழுத்துக்களைப் பெற்று வருவனவாக இப்பாடல்கள் அமைந்துள்ளதால் 'யாப்பிலக்கணப்படி கலிவிருத்தம் என்றும் கூறலாம்' (பன்னிரு திருமுறை வரலாறு, ப. 418) எனக் கருத்துரைப்பது குறிப்பிடத் தக்கதாகும். மேலும் இவ்வகை யாப்பினைப் பற்றி யாழ் நூல் சில விதிகளைப் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

1. முதல்சீர் தேமாவாக அமைந்தால் அடியின் கூட்டுத்தொகை ஒற்று நீங்கலாகப் பதினொன்றாக இருக்க வேண்டும்.
2. முதல்சீர் புளிமாவாக அமைந்தால் அடியின் கூட்டுத்தொகை ஒற்று நீங்கலாகப் பன்னிரண்டாக இருக்க வேண்டும்.
3. ஓர் அடிக்குள் அமைந்த மூன்று தளைகளுள் முதல்தளை நேரொன்றாசிரியத் தளையாகவும் இரண்டு மற்றும் மூன்றாம் தளைகள் வெண்டளையாகவும் இருத்தல் வேண்டும்.

இவ்விலக்கணப்படி எழுத்துக் கூட்டும், தளையமைதியும் வேறுபடாமல் அமைந்தாலும் கூட சீர்கள் வேறுபட்டமைய கூடும் என்பதை அறிய முடிகிறது. இத்தகைய பலகூறுகளையும் அப்பரின் திருக்குறுந்தொகைப் பாடல்கள் நிரம்பப் பெற்றுள்ளன. மேலும்,

சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே அடிநிமிர் வின்றே (தொல். பொரு. செய். 227)

எனத் தொல்காப்பியம் குறிப்பிடும் 'அம்மை' எனும் வனப்பின் இலக்கணத் துடன் பொருந்தி வருவதாகவும், அதாவது உலக வழக்கில் இருக்கும்

சொற்களைக் கொண்டு சில அடிகளை உடைய அழகிய செய்யுட்களாகத் திருக்குறுந்தொகைப் பாக்கள் அமைந்துள்ளன எனலாம்.

குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்ற சங்க இலக்கியப் பாக்களிலும் இவ்வகை யாப்பு அமைந்திருந்தது. எனினும் அவற்றைப் பக்திப் பாடல்களில் சிறப்பாக அமைந்த நாவுக்கரசரின் திறம் போற்றுதற்குரியதாகும்.

## திருத்தாண்டகம் (அ) கொச்சக ஒருபோகு

தாண்டகம் எனும் பாவகையை வெகு நூற்றாண்டுகளுக்குப் பிறகு தமிழில் புகுத்திய முதல் கவிஞராக நாவுக்கரசரை நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

## தாண்டக இலக்கணம்

1. அடிதோறும் நான்காம் சீரும் எட்டாம் சீரும் தேமாவாக அமையும்.
2. மூன்றாம், ஏழாம் சீர்கள் சிறுபான்மை புளிமாவாகவும், பெரும்பான்மை தேமாவாகவும் அமையும்.
3. ஏனைய ஒன்று இரண்டு ஐந்து மற்றும் ஆறாம் சீர்கள் பெரும்பாலும் காய்ச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர், விளக்கசீர்களாகவும் அமையும்.

தொல்காப்பியச் செய்யுளின்படி எண்சீராலமைந்த கொச்சக ஒருபோகியே தாண்டகமாகும்.

**அறுசீர் எண்சீர் அடிநான் கொத்தங்**
**கிறுவது தாண்டகம் இருமுச் சீரடி**
**குறியது நெடிய திருநாற் சீரே**

(மேற்கோள் பாடல் அப்பர் வரலாற்றாராய்ச்சியும்
தேவாரத் திறனாய்வும், ப. 124)

என்பதனால் தாண்டகம் இருவகைப்படும் என்பதை அறியலாம். அவை,

1. குறுந்தாண்டகம்
2. நெடுந்தாண்டகம்

என்பவையாகும்.

## குறுந்தாண்டகம்

இவ்வகை யாப்பு அறுவகைசீர்களைக் கொண்டதாக அமையும். நாவுக்கரசரின் திருநேரிசைப் பாக்கள் குறுந்தாண்டகத்திற்குச் சான்றாக அமைந்துள்ளன.

## நெடுந்தாண்டகம்

இது எண்சீர்களைக் கொண்டதாக அமைந்திருக்கும். நாவுக்கரசரின் திருவாரூர் மற்றும் திருநல்லூர்ப் பதிகப் பாடல்கள் போன்றவற்றை இதற்குச்

சான்றாகக் கூறலாம். தொண்ணூற்றொன்பது பதிகங்கள் அமைந்துள்ள ஆறாம் திருமுறை முழுவதையும் தாண்டக யாப்பிலேயே இயற்றியுள்ளார் நாவுக்கரசர்.

அப்பரின் தாண்டகப் பாக்களில் கொச்சக ஒருபோகியை இனம் காட்டும் யாழ்நூல் ஒரு அடியின் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை நீக்கிவிட்டு மற்ற நான்கு சீர்களையும் இணைத்தால் அது கொச்சகக் கலிப்பாவாக அமையும் என இலக்கணம் கூறுகிறது.

(எ.கா)

வண்ணங்கள் தாம்பாடி வந்துநின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கனல்ப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசி
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே (அப்பர் தேவாரம் - 6.9.1)

இப்பாடல் தாண்டகப் பாவால் அமைந்துள்ளது. இதில் மூன்று, நான்கு, ஏழு, எட்டாம் சீர்களை நீக்கிவிட்டு மற்ற நான்கு சீர்களையும் இணைத்துப் பார்க்கும்பொழுது,

வண்ணங்கள் தாம்பாடி வலிசெய்து வளைகவர்ந்தார்
கண்ணம்பால் நின்றெய்து கடியதோர் விடையேறிச்
சுண்ணங்கள் தாங்கொண்டு தோலுடுத்து நூல்பூண்டு
அண்ணலார் போகின்றார் அழகியரே ஆமாத்தூர்

எனும் கொச்சகக் கலியின் வடிவம் கிடைக்கிறது. இவற்றினின்றும் நாற்சீரடி கலி அடிதோறும் இடையிலும், முடிவிலும் இரண்டு மாச்சீர்களைக் கொண்டுள்ளதால் எண்சீரடி யாப்புக்குரிய தன்மையைப் பெற்றுள்ளது என்பதை அறியலாம்.

'தாண்டகம்' பற்றிக் குறிப்பிடும் ஆய்வாளர்கள், வடமொழியில் உள்ள 'தண்டகம்' எனும் செய்யுள் விகற்பமே தாண்டகம் எனக் கூறுவதுடன், யாப்பருங்கல விருத்தியின் உரையையும் அதற்குச் சான்றாகக் காட்டு கின்றனர். ஓர் அடியில் இருபத்தேழு எழுத்தும், அதற்கு மேலும் வந்து குரு, லகு எனுமிரண்டும் மாறுபடாதிருப்பின் அது அளவியல் தாண்டக மென்றும், மாறுபட்டு இருப்பின் அளவழித் தாண்டகம் என்றும் தாண்டக வகைகளைக் குறிப்பிடுகிறது யாப்பருங்கலவிருத்தி. ஆனால் நன்கு ஆராய்ந்தால் குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆகிய இரண்டும் அல்லாத வடமொழி கூறும் இலக்கணம் நாவுக்கரசரின் தாண்டக அமைப்பை

ஆய்வதற்கு அடிப்படையாக அமைய வாய்ப்பில்லை என்பதைத் தெளிவுற இயலும். ஏனெனில்,

**"உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ**
**உயிர்த்திறம் இயக்கம் இன்மையான"** (தொல். இளம். 42)

என்பது போன்ற நூற்பாக்களால் செய்யுட்களுக்கு எழுத்தினை எண்ணி அடியை வகுக்கும் பொழுது குற்றியலிகரம், குற்றியலுகரம், ஒற்று ஆகிய மூன்றையும் நீக்குதல் வேண்டும் என்று குறிப்பிடுகிறது தொல்காப்பியம்.

இவற்றையெல்லாம் வைத்து நோக்கினால் ஓரடிக்குச் சிற்றெல்லையாக இருபது எழுத்துக்களும், பேரெல்லையாக இருபத்து ஏழு எழுத்துக்களுக்குக் குறைந்தும் வரும் நாவுக்கரசரின் பாடல்கள் யாப்பருங்கல விருத்தியின் இலக்கண வரம்பிற்கு உட்பட்டு நிற்காது என்பதை முடிவாகக் கொள்ளலாம். எனவே நாவுக்கரசரின் தாண்டகப் பாக்கள் புதியதொரு யாப்பு வகைக்குத் தோற்றுவாயாக அமைந்துள்ளது எனலாம். எனவேதான், நாவுக்கரசர் 'தாண்டகச் சரகர்', 'தாண்டக வேந்தர்' என்றெல்லாம் சான்றோர்களால் போற்றப் படுகின்றார்.

### திருவிருத்தம் (அ) கட்டளைக் கலித்துறை

எழுத்துக்களை எண்ணி அளவிட்டுக் கோவையாக்குவதில் ஏதேனும் ஓர் எழுத்து மிகுதியாய் அமைந்துவிடும் பாவகையே தொல்காப்பியத்தில் தரவுகொச்சகம் என்றும் பிற்காலத்தில் கட்டளைக் கலித்துறை என்றும் வழங்கப்படுகிறது. அதுவே நாவுக்கரசரால் திருவிருத்தமாகக் கையாளப் பட்டுள்ளது. இதன் இலக்கணம் பின்வருமாறு அமைந்திருக்க வேண்டும்.

1. ஐந்து சீர்கள் நான்கடியாய், அடிதோறும் முதல் நான்கு சீர்கள் வெண்டளையாய் இருத்தல்.
2. இறுதிச்சீர் கூவிளங்காய் கருவிளங்காய் ஆகியவற்றுள் ஒன்றாகி முதல் சீரின் முதல் அசை நேரசையாக இருப்பின் ஓர் அடிக்குப் பதினாறு எழுத்துக்களைப் பெற்று வருதல் வேண்டும்.
3. நிரையசையாக இருப்பின் பதினேழு எழுத்துக்களைக் கொண்டிருத்தல் வேண்டும். இவ்வகை யாப்பினைத் தமது நான்காம் திருமுறையில் எண்பது முதல் நூற்றுப் பதின்மூன்று வரையிலான முப்பத்து மூன்று பதிகங்களில் பயன்படுத்தியுள்ளார் நாவுக்கரசர்.

(எ.கா)

**வண்டனை கொன்றையும் வண்ணியும் மத்தமும் வாளரவும்**
**கொண்டனைந் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே**
**தொண்டனைந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்**
**வெண்டலை மாலையன் றோஎம்பி ரானுக் கழகியரே**

(4-ஆம் திருமுறை, திருச்சோற்றுத்துறை-2)

பிற்கால பாவினங்களுள் ஒன்றான 'விருத்தம்' என்பதினின்றும் வேறுபட்டது திருவிருத்தம் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**திருநேரிசை**

**கூவிளம் புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா**

எனும் கட்டளையடியினைக் கொண்ட இந்த யாப்பு,

1. அறுவகைச் சீர்களால் அமைந்திருக்கும்.
2. முதல் மற்றும் நான்காம் சீர்கள் சிறுபான்மை கருவிளமாக அமைந்திருக்கும்.
3. இரண்டு மற்றும் ஐந்தாம் சீர்கள் தேமாவாக இருக்கும்.
4. மூன்று மற்றும் ஆறாம் சீர்கள் எப்பொழுதும் தேமாவாக இருக்கும்.

இவ்வகையான யாப்பினைத் தம் நான்காம் திருமுறையின் இருபத்து இரண்டு முதல் எழுபத்தொன்பது வரையிலான ஐம்பத்து ஏழுப் பதிகங்களில் அமைத்துப் பாடியுள்ளார் நாவுக்கரசர்.

(எ.கா)

**செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்**
**தங்கயந் துறந்து போந்து தடம்பொய்கை அடைந்து நின்று**
**கொங்கையர் குடையுங் காலைக் கொழுங்கனி யழுங்கினராம்**
**மங்கல மனையின் மிக்கார் வலம்புரத் தடிக ளாரே**

(4-ஆம் திருமுறை, திருவலம்புரம் - 7)

மேலும் இதே வகை யாப்பில்தான் திருமங்கை யாழ்வாரின் திருக்குறுந் தாண்டக யாப்பும் அமைந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**மதிப்பீடு**

தம் திருமுறையின் பதிகச் செய்யுட்கள் முழுவதிலும் இறைவன் சிவபெருமானே நீக்கமற நிறைந்திருக்கும்படி பாடல்களைச் செய்துள்ள அப்பர் பெருமான், மானுட சமூகத்திற்குப் பயன்தராத வெற்றுக் கோட்பாடுகள் எவற்றையும் கூறவில்லை. மாறாக மானுடம் தெய்வத்தை உணர்ந்து, தாம் சார்ந்துள்ள சமூகத்திற்குப் பயன்படும்படியாகப் பல விழுமிய அறங்களைச் செய்ய முற்பட வேண்டும் என்பதை இன்றியமையாத கூறாகப் பதிவு செய்துள்ளார். எனவேதான் தாமே ஊர்தோறும் சென்று உழவாரப் பணியில் ஈடுபட்டு ஒரு முன்னுதாரணமாகத் திகழ்ந்துள்ளார்.

தமக்கு முன்பிருந்த வெண்பா ஆசிரியப்பா போன்றவற்றை மட்டும் பயன்படுத்தாமல் புதிய பல யாப்பு வகைகளை நாவுக்கரசர் பயன்படுத்திய அடிப்படையை ஆய்வது, புதிய பல கருத்துக்களுக்கு

இடமளிப்பதாக அமைந்துள்ளது. படைப்பாசிரியர் என்ற முறையில் அவர் தம் படைப்புத் திறனைப் பாவகையின் மூலம் வெளிப்படுத்தியிருக்கலாம். எனினும், அப்போதைய சமூகச் சூழலும் அவரைப் புதிய யாப்பு வகைகளை இயற்றச் செய்தது எனலாம்.

அப்போதைய சமூகம், இல்லறத்தையும் பெண்களையும், இசை போன்ற கலைவடிங்களையும் முற்றிலும் புறக்கணித்துத் 'துறவறத்தை' மட்டுமே மிகுதியும் வலியுறுத்திய புறச்சமயக் கோட்பாடுகளில் ஒரு நிறைவற்ற வாழ்க்கையை வாழ்ந்தது. நடைமுறைக்கு ஒவ்வாத பல கொள்கைகளிலும் கட்டுண்டு கிடந்த சமூகம் ஒரு புதிய விடியலை நோக்கிக் காத்திருந்தது. அவ்வேளை 'இல்லறத்தினின்றும் துறவு வாழ்க்கை, இறைவனை இசையால் அடையலாம், சாதிமத, ஆண் பெண் ஏற்றத் தாழ்வு தேவையில்லை' என்பது போன்ற முற்றிலும் புதியதான ஒரு சமயக் கோட்பாட்டினை வலியுறுத்தி சைவ வைணவ சமயங்கள் தம்மைத் தமிழ்ச் சமயமாக மீண்டும் மீட்டுருவாக்கம் செய்து கொண்டன. அதன் கொள்கை 'அன்பொன்றே இறைவனை அடைவதற்கான வழி' என்பதாய் அமைந்து அனைவரையும் அரவணைத்துச் செல்லும் தன்மை பெற்றதாய் விளங்கியது. சாதி பேத வேறுபாடுகளால் சமூகத்தின் கட்டுக்கோப்பு குலைந்து விடாமலிருக்க வழி தேடியது. (எனவேதான் பல்வேறு சமயத்தினர் அடங்கிய அறுபத்து மூவரையும் நாயன்மார்களாக ஏற்று மகிழ்ந்தது சைவம். பன்னிருவரை ஆழ்வார்களாகப் போற்றியது வைணவம்).

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்ட அப்பரடிகள் புதிய கோட்பாட்டிற்கேற்றவாறு அவற்றைப் புதிய யாப்பில் கூற முற்பட்டார். இலக்கணங்களமைந்த யாப்பினை மட்டும் அமைத்ததுடனின்றி அவற்றைப் பண் நிறைந்ததாகவும் அமைத்தமையே யாப்பைக் கையாண்ட விதத்தில் புதுமையாகும். மேலும் யாப்பு போன்ற வடிவங்களை மொழியின் இலக்கணம் மட்டுமே கூறப் பயன்படுத்திய நிலையில் பக்திப்பாடல்களில் அமைத்துள்ளது பெரும் சிறப்பிற்குரியதாகும். எனவே சமயக் கோட்பாடு களின் உயிர் நாடியிலேயே புதுமையைப் புகுத்தியதால் அவற்றை வெளிப்படுத்தும் வடிவத்திலும் புதுமையைக் புகுத்த எண்ணினார் நாவுக்கரசர் எனலாம். இவற்றினின்றும் நாவுக்கரசர் தோற்றுவித்த இசையுடன் அமைந்த குறிப்பிட்ட நான்குவகை யாப்புகளும், பிற்கால யாப்பியல் வளர்ச்சி வரலாற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன என்பதை அறியலாம்.

# 42. நாவுக்கரசரும் வினைக் கொள்கைகளும்

ப. சுலோச்சனா, கடையம்.

உலகமும் உயிர்களும் இறைவனால் படைக்கப்பட்டவை என்னும் கொள்கையின் அடிப்படையில் உலகில் தோன்றிய மதங்கள் பலவாம். அவ்வாறு தோன்றிய மதங்களில் பல இன்று தமிழ்நாட்டில் தமிழ் மக்களால் பின்பற்றப்படுகின்றன. ஆயினும் தமிழ் மண்ணில் தோன்றி வளர்ந்த சிறப்பு, சைவ சமயத்திற்கே உண்டு. சைவம் அல்லாத பிற சமயங்கள் அனைத்தும் தமிழ் நிலத்திற்கு வெளியே தோன்றியவையாம். அரப்பா, மொகஞ்சதாரோ முதலிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சிகள் அங்கு வாழ்ந்த மக்கள் சிவனை வழிபட்டனர் என்பதையும், சைவத்தைத் தம் சமயமாகக் கொண்டிருந்தனர் என்பதையும் வெளிப்படுத்துகின்றன. இதனால் சைவ சமயத்தின் தொன்மையையும், இச்சமயம் இமயம் வரை பரவி இருந்ததையும் அறியலாம். இத்தகைய தொன்மைச் சிறப்புடைய சைவத்தின் இரு கண்களெனச் சேக்கிழாரால் போற்றப்பட்டவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசரின் வினைக் கொள்கை குறித்து இக்கட்டுரையில் காணலாம்.

## திருநாவுக்கரசர் தேவாரம் - அமைப்பு முறை

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் மூவர் பாடிய தேவாரப் பதிகங்கள் முதல் ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் திருநாவுக்கரசர் பாடிய தேவாரப் பதிகங்கள் 4,5,6-ஆம் திருமுறைகளாக இடம் பெற்றுள்ளன. திருநாவுக்கரசர் 49,000 பதிகங்கள் - 4,90,000 பாடல்கள் பாடியதாகத் 'திருமுறை கண்ட புராணம்' தெரிவிக்கிறது. 4900 பதிகங்களே நாவுக்கரசர் பாடியதாக 'ஏகாதச மாலை' இயம்புகிறது. ஆனால் இப்பொழுது 312 பதிகங்கள் - 3066 பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன. இத்தேவாரப் பதிகங்களுக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்மணி பண்முறை வகுத்துத் தந்ததாக அறியப் படுகிறது.

சம்பந்தர், சுந்தரர் ஆகிய இருவருடைய தேவாரப் பதிகங்களில் காணப் பெறாத திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்னும் யாப்பு விகற்பங்கள் திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகங்களில் சிறப்பாக அமைந்துள்ளன. நான்காம் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ள

திருநாவுக்கரசரின் பதிகங்களில் முதல் 21 பதிகங்கள் சம்பந்தரும் சுந்தரரும் பாடிய பதிகங்களை ஒத்து அமைந்துள்ளன. எஞ்சிய 291 பதிகங்களும் மேற்குறிப்பிட்ட யாப்பு வகைகளில் சொல்நயமும், பொருள் நயமும் உடையனவாய் அமைந்துள்ளன. சம்பந்தரும், சுந்தரரும் தாம் பாடிய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் தம் பெயரையும் அப்பதிகங்களை ஓதுவோர் பெறும் பயனையும் குறிப்பிட்டது போல நாவுக்கரசர் தாம் அருளிய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை. மாறாக, நெடுங்காலம் சிவனை மறந்திருந்த குற்றத்தை எண்ணி உருகிய நாவுக்கரசர் அக்குற்றம் இழைத்த தம்மையும் ஒரு பொருளாகக் கொண்டு ஆட்கொண்ட இறைவனின் பேரருளை உணர்த்தும் வகையில், பிழை செய்த இராவணனை உய்வித்த அருளால் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான் என உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் முறையில் இராவணனைப் பற்றிய குறிப்பைப் பதிகந்தோறும் குறிப்பிடுகிறார்.

### சைவ சித்தாந்தம்

மிகப் பழங்காலந்தொட்டே தமிழர்கள் சிவனை வழிபட்டு வந்துள்ளனர். சங்க இலக்கியங்களில் சிவனைப் பற்றிய குறிப்புகள் காணப்படு கின்றன. எனினும், சைவம் என்பது சமய நிறுவனமாக இருந்ததற்கான ஆதாரங்களைச் சங்க இலக்கியங்களில் காண முடியவில்லை. சைவம் என்பது ஒரு சமயக் கோட்பாடு என்பதற்கான சான்றுகள் மணிமேகலைக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. அக்காப்பியத்தில் 'சமயக் கணக்கர், தந்திறம் கேட்ட காதையில்' சைவ சமயக் கோட்பாடு எடுத்துரைக்கப் படுகிறது. ஐம்பூதம், சூரியன், சந்திரன், இயமானன் ஆகிய எட்டையும் உயிர், உடலாகப் பிணைத்து நிற்பவன் இறைவன்; படைத்தல்; துடைத்தல் முதலியன புரிபவன்; தன்னில் வேறு இல்லாதவன் என்று இவ்வாறு சிவனது இயல்புகள் மணிமேகலையால் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன.

சிவன் மாயை என்ற மூலப் பொருளிலிருந்து உலகைப் படைப்பவன் என்றும், உயிர்களுக்கு வினைப் பயனை வகுத்து வழங்குபவன் என்றும் உரைப்பது சைவ சிந்தாந்தம் ஆகும்.

சைவ சித்தாந்த வரலாற்றில் சைவ பக்தி இயக்கமும், திருமுறை இலக்கியங்களும் முதன்மையான இடத்தை வகிக்கின்றன. பன்னிரு திருமுறைகளில் சாத்திர இயல்பு கொண்டது எனப்படும் திருமந்திரம் சைவ சித்தாந்தம் குறித்த பல கருத்துக்களை எடுத்துரைக்கின்றது.

**"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கில்பசு பாசம் நிலாவே!"** (115)

போன்ற பல பாடல்களில் திருமூலர் சைவ சித்தாந்தம் தொடர்பான கருத்துக்களை எடுத்துரைக்கிறார். மூவர் தேவாரங்களிலும், சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் பல எடுத்துரைக்கப்பட்டுள்ளன. பதியியல்பு, வினைப்பயன், வழிபாட்டு நெறி ஆகியவை தொடர்பான பல கருத்துக்கள் தேவாரப் பதிகங்களில் இடம் பெற்றுள்ளன. குறிப்பாக 'நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா' எனத் தொடங்கும் நாவுக்கரசரின் திருத்தாண்டகம் சைவ சித்தாந்தம் கூறும் சரியை நிலையை எடுத்துரைப்பதாக உள்ளது. திருநாவுக்கரசரின் வாழ்க்கையே சரியை நிலைக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளத் தக்கது.

**வினைக் கொள்கை**

சிவபெருமானே உலகத்துக்குக் கருத்தா ஆவர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களைச் சிவன் செய்கிறார். இவ்வைந்து தொழில்களையும் சிவன் தன் பொருட்டாக அல்லாமல் ஆன்மாக்களாகிய பிறர் பொருட்டே செய்கிறார். "ஆன்மாக்கள் நல்வினை, தீவினை என்னும் இருவினைக்கும் ஈடாக நால்வகைத் தோற்றத்தையும் ஏழுவகைப் பிறப்பையும் எண்பத்து நான்கு நூறாயிர யோனி பேதத்தையும் உடையவைகளாய்ப் பிறந்து இறந்து உழலும்" இருவினை செய்தற்கும் இருவினைப் பயன்களை நுகர்வதற்கும் பூமியே இடமாக உள்ளது. நல்வினைப் பயனை சுவர்க்கம் முதலிய மேல் உலகங்களிலும் தீவினைப் பயனை இருபத்தெட்டுக் கோடி நகரங்களிலும் ஆன்மாக்கள் அனுபவிக்க வேண்டும்.

சுவர்க்கத்தில் இன்பம் அனுபவித்த ஆன்மாக்கள் தொலையாது எஞ்சி நின்ற கன்மத்தின் விளைவாகத் திரும்பப் பூமியில் வந்து மனிதர் களாய்ப் பிறக்கும். நரகத்தில் துன்பம் அனுபவித்த ஆன்மாக்கள் திரும்பப் பூமியில் வந்து தாவரங்களாகவும், பின்பு நீர்வாழ்வனவாகவும், அதன்பின் ஊர்வனவாகவும், பின்னர்ப் பறவைகளாகவும், அடுத்து விலங்குகளாகவும் பிறந்து இறுதியாக முன் செய்த நல்வினைகளின் விளைவாக மனிதர் களாய்ப் பிறக்கும்.

சிவனை அறிந்து வழிபட்டு வீடு பெறுவதற்குக் கருவியாக அமைவதால் மனிதப் பிறப்பே எழுவகைப் பிறப்பினுள்ளும் அரிய பிறப்பாகும். மனிதப் பிறவி எடுத்தவர்கள் சைவ சமயத்தைச் சார்ந்து சிவாகமத்தில் விதிக்கப்பட்ட சரியை - கிரியை யோகங்களை முறைப்படி மெய்யன்போடு கடைப்பிடித்து நின்றால் அவர்களுக்குச் சிவபெருமான் வீடுபேற்றை அருளுவார். சைவ சித்தாந்தம் கூறும் வினைக் கொள்கை இதுவே. இக்கொள்கையை ஏற்றுக் கொண்ட திருநாவுக்கரசர் தமது பதிகங்களில் இவ்வினைக் கொள்கையைப் பலவாறு வலியுறுத்திக் கூறுகின்றார்.

## திருநாவுக்கரசர் சுட்டும் வினைக் கொள்கை

நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ள திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகங்கள் 312; பாடல்கள் 3066. இவற்றுள் ஏறத்தாழ 282 இடங்களில் வினைக் கொள்கையை வலியுறுத்துகிறார். ஊழ்வினையின் இயல்பை உணர்த்தும் வகையில் வினை என்னும் சொல்லுக்குப் பல அடைமொழிகளைத் தருகிறார். மேல்வினை, பழவினை, வல்வினை, கடுவினை, பொய்வினை, செய்வினை, தீயசெய்வினை, நோய்வினை, தொல்வினை, கொடுவினை, பொருவினை, மேலைவினை, திண்ணென்வினை, பந்தித்து நின்ற பழவினை, வார்வினை, தொல்லை வல்வினை, கலக்கும் வினை, கருவினை, துன்பவல் வினை, தொடர்ந்த வல்வினை, ஊழித் தொல்வினை, கட்டிட்ட வினை, சூழ்வினை, அருவினை, பொல்லாவினை, பாசவினை, ஊழ்வினை, தீராத வல்வினை என்னும் அடைமொழிகளால் வினையின் இயல்பை நாவுக்கரசர் விளக்குகிறார்.

வினையின் இயல்பை விளக்கும் வகையில்,

> **'வினை எனும் சரக்கு, வினையதென்னும் சுழித்தலை, தொல்வினைக் குழி'**

முதலாகப் பலவாறு உருவகம் செய்கின்றார்.

சிவபெருமானே வினைப் பயன்களிலிருந்து விடுவித்து ஆன்மாக் களுக்கு வீடுபேறு அளிக்க வல்லார் என்பதையும் திருநாவுக்கரசர் தம் பதிகங்களில் எடுத்துரைக்கிறார்.

> **''நாடவல்லார் வினை வீடே வல்லாரே''**
>
> **''பண்டை என் வினைகள் தீர்ப்பவர் பழனத்து என் பரமனாரே''**
>
> **''நண்ணினார் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளி அடிகளாரே''**

இவ்வாறு தம் பதிகங்களில் பல இடங்களிலும் சிவபெருமானே வினை களைத் தீர்த்து வீடுபேறு அளிக்க வல்லவர் என்று எடுத்துரைக்கிறார்.

வினையினின்று ஆன்மாக்களை விடுவிக்கவும் பிறப்பறுத்து ஆன்மாக்களுக்கு வீடுபேற்றை அளிக்கவும் வல்லமையுடையவர் சிவபெருமானே என்பதை வலியுறுத்திய அப்பர் பெருமான் மனிதர்கள் சிவனை நாடி அவன் புகழ் பாடி அவனுக்குத் தொண்டு செய்து வாழ்ந்தால் சிவனருள் பெற்று வீடுபேறு அடையலாம் என்பதையும் வலியுறுத்துகிறார்.

இதனை,

> **''வாசத்தால் வணங்க வல்லார் வல்வினை மாயு மன்றே''**
>
> **''பொருந்தி நின்று உன்னு நெஞ்சே பொய்வினை மாயு மன்றே''**
>
> **''கையினால் தொழ வல்லார்க்குக் கருவினை களையலாமே''**

"வருந்தி நின்று அடிமை செய்வார் வல்வினை மாயு மன்றே"

"நோக்கினால் வணங்குவார்கள் நோய்வினை நுணுகுமன்றே"

"எம்மை ஆளும் இடைமருதன் கழல் செம்மையே தொழுவார்
வினை சிந்துமே"

"சிந்தையால் நினைவார் வினைதேயும்"

"......... கோயிலைத்
தம்கையால் தொழுவார் வினைசாயுமே"

"வரத்தி னால்மயி லாடு துறைதொழும்
கரத்தி னார்வினை கட்டறுங் காண்மினே"

"நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
சென்றுநீர் திருவேட் களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே"

என்ற பாடலடிகள் வலியுறுத்துகின்றன.

'திருநாகைக்காரோணம்' என்னும் திருத்தலத்தில் எழுந்தருளிய சிவனை அடைந்தால், வழிபட்டால், தீவினைகள் அழியும் என்பது திருநாவுக்கரசரின் நம்பிக்கையாகும்.

இதனை,

"காணத் தானினி யான்கடல் நாகைக்கா
ரோணத் தானென நம்வினை ஓயுமே"

"......... நாகைக்கா ரோணனைக்
கண்ட லும்வினை யாயின கழலுமே"

"......... நாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே"

என்ற பாடலடிகள் வலியுறுத்துகின்றன. மேற்சுட்டிய நாகைக்காரோணப் பதிக அடிகளால் திருநாவுக்கரசர் உணர்த்தும் வினை நம்பிக்கையாவது; மனம், வாக்கு, காயம் எனும் முத்திறத்தாலும் சிவனை வழிபட்டால் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களிலிருந்து ஆன்மாவாகிய உயிர் விடுதலை பெற்று வீடுபேறு அடைய முடியும் என்பதே ஆகும். இதனை அடியவர்களுக்கு உணர்த்தவே அப்பர் பெருமான் ஒவ்வொரு திருத்தலமாகச் சென்று சிவனைப் போற்றிப் பரவுகின்றார்.

அடியவர்கள் தம் வினைக்கூட்டம் நீங்குவதற்கு அடல்விடையாய், ஆரமுதே, ஆதீ என்றும், ஆரூரா என்றும் அலற வேண்டும். 'கடிநாறு பொழில் கச்சிக் கம்பா' என்றும் கற்பகமே என்றும் கதற வேண்டும் என்று கூறுகிறார்.

இதனை,

"கச்சிக் கம்பா எனக் கதறினால் தீவினைகள் தீர்ந்தொழியும்"

என்ற கூற்றும் அரண் செய்கிறது. நாள்தோறும் சிவன் கோயில் சென்று, அலகிட்டு, மெழுகிப் பூமாலை புனைந்து, ஏத்தி, புகழ்பாடி, தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச், 'சங்கரா சய போற்றி போற்றி' என்றும், 'அலைபுனல்சேர் செஞ்சடை எம்ஆதீ' என்றும் கூறி மனமார வழிபட வேண்டும்.

பற்றி நின்ற பாவங்கள் தீர வேண்டுமானால் பரகதிக்குச் செல்லத் தக்க வழி அறிய வேண்டுமானால், சுற்றி நின்ற சூழ்வினைகளைத் துரத்த வேண்டுமானால், உற்றவரும், உறுதுணையும் நீயே என்றும் உன்னை அல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும், அடியவர்கள் சிவனைப் போற்ற வேண்டும் என்று நாவுக்கரசர் புகல்கின்றார்.

ஐம்புலன்களால் ஆட்டுவிக்கப்பட்டுச் சிற்றின்ப நுகர்ச்சியில் நாட்டம் கொண்டு திரியாமல், அடியவர்கள் சிவனை நெஞ்சில் நிறுத்திச் 'சலங்கொள் சடைமுடி உடைய தலைவா' என்றும் 'தக்கன் செய் பெருவேள்வி தகர்த்தாய்' என்றும் 'இலங்கையர் கோன் சிரம் நெரித்த இறைவா' என்றும், 'எழில் ஆரூர் இடங்கொண்ட எந்தாய்' என்றும், 'நலங்கொள் அடி என் தலைமேல் வைத்தாய்' என்றும் நாள்தோறும் நவின்று ஏத்தினால் வினை நீங்கி நன்மை விளையும் என்பதை நாவுக்கரசர் தெளிவுப்படுத்துகிறார்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் தளைகளிலிருந்து விடுபட்டு, இறைவனைச் சேர்வதே உயிர்களின் மேலான வளர்ச்சி நிலையாகும். இதுவே மோட்சம், முத்தி என்றும், வீடுபேறு என்றும் சொல்லப்படுகிறது. இத்தகைய வீடுபேற்றை அடைவதற்குப் பற்றற்ற சிவனைப் பற்றுவதே சிறந்த வழியாகும். சிவனைப் பற்றி நின்று ஒழுகும் முறைகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகைப்படும். இறைவனுக்கும் இறைவனடியார்களுக்கும், மனம், மொழி, மெய்களால் தொண்டு செய்வது சரியை எனப்படும். அஃதாவது ஒருவன் தன்னை அடக்கத்துடன் கூடிய அடிமையாகக் கருதி இறைவனாகிய தலைவனுக்குப் பணிவுடனும், பக்தியுடனும் பணி செய்ய வேண்டும். இவ்வாறு பணி செய்வதால் அவன் மீது படிந்துள்ள ஆணவத் தடிப்புக் குறைகிறது. இதன் பயனாக இறைவனை அடையலாம். இத்தொண்டு நெறியைப் பின்பற்றி நின்ற திருநாவுக்கரசர் தாம் பாடிய திருப்பதிகங்களில் தம் அனுபவத்தை அடியவர்களுக்கு எடுத்துரைக்கின்றார். ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களிலிருந்து விடுபட்டு வினையின் நீங்கி வீடுபேறடையும் நெறியைத் தாம் பாடிய திருப்பதிகங்களில் சிறப்பாக வலியுறுத்தி இருக்கிறார். சைவ மெய்யன்பர்கள் திருநாவுக்கரசர் காட்டிய செவ்விய நெறியைப் பின்பற்றினால் சிவனை வழிபட்டு பரகதியாகிய பேரின்ப நிலையைப் பெறலாம்.

# 43. நாவுக்கரசரின் அனுபவம்

தங்க. சுவாமிநாதன், திருப்பனந்தாள்.

திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரசன் தன் அடியார்க்கும் அடியேன் என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் போற்றப் பெறும் நாவுக்கரசர், சைவ சமய வாழ்வில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் இளமை முதற்கொண்டே மெய்ப்பொருள் நாட்டங் கொண்டு அதனை அடைய விழைந்தார். முதுமையில் தாம் கண்ட மெய்ப்பொருள் அனுபவத்தைக் கொண்டு மக்களை நெறிப்படுத்தும் முயற்சியை மேற்கொண்டார். அவரது வாழ்வு சராசரி மனிதனால் வாழ்வதற்கும், பின்பற்றுவதற்கும் அரிய நெறியாகும். அவ்ஒழுக்க நெறியோடு வாழ்ந்த நாவுக்கரசரின் அனுபவங்களை அவரது இறைப் பாடல்கள் வழியில் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தமக்கையரை நாடுதல்**

தாங்கொணா சூலை நோயால் அல்லலுற்றுச் சோர்வுற்ற தருமசேனர், தம் தமக்கையாருக்கு, தமக்கு அடிசிலமைப்பவன் மூலம் சொல்லி அனுப்பி அழைத்துவரச் செய்கின்றார். அவர் அமண்பாழிக்கு வர மறுக்கவே தாமே திலகவதியாரின் திருவடிகளில் வந்து வீழ்ந்தார். நாவுக்கரசர் தமக்கு ஏற்பட்ட கொடுமையான நோயைப் பற்றிக் கூறி நீக்கியருள வேண்டுகிறார்.

தம்பியாரின் மனநிலையை உணர்ந்த தமக்கையார் சிவபெருமானின் திருவருளை நினைத்து உருகுகின்றார். தம்பியாரை நோக்கி "உறுதிப்பொருள் கொண்ட தெய்வக் கொள்கையற்ற புறச் சமயப் படுகுழியில் வீழ்ந்து துயருழந்தீர்; இப்பொழுது எழுந்தீர்" என மொழிய சூலை நோயுடன் நடுக்கமுற்றெழுந்து தமக்கையாரை நாவுக்கரசர் தொழுது நின்றார். "தம்பியாரை நோக்கி, "நும்மைப் பற்றிய இந்நோய் இறைவனது திருவருளே" எனக் கூறி இறைவன் கழலடிகளைப் பணிந்து பணி செய்வீராக" எனப் பணிக்கின்றார்.

**சூலை நோய் நீங்கப்பெறல்**

தம் தம்பியார் திருவதிகை வீரட்டானத் திருக்கோவிலிற் புகுவதற்குத் தகுதி உடையவராகும்படி திருநீற்றினைத் தருகிறார். திருநீறு அணிந்தவுடன் மருள்நீக்கியாரின் அகத்திருள் அகலப் பெற்றவரானார். திலகவதியாரும்

திருநாவுக்கரசும் திருக்கோயிலை வலம் வந்து நிலமிசை வீழ்ந்து திருவதிகை வீரட்டானத்து இறைவனை வணங்கவே, செந்தமிழ் தமிழ் மாலைகளைப் பாடிப் போற்றும் உணர்வு பெற்று,

"கூற்றாயினவாறு விலக்ககலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரொடு துடக்கி முடக்கியிட
ஆற்றே னடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத் துறையம் மானே"

என்று அப்பர் பெருமான் சூலை நோயால் அவதியுற்ற நிலையினையும், இறைவன் அந்நோயை நீக்கி அருளிய திறத்தையும் வெளிப்படுத்துகிறார்.

**சமணத்தில் பெற்ற இன்னல் கூறல்**

தம் தமக்கையரால் சூலை தணியப்பெற்ற நாவுக்கரசர் தாம் முன்பு சமணத்தில் பெற்ற துன்ப அனுபவங்களை,

"அறந்தெறியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்தும் அரண் திருவடிகள் நினையமாட்டா
மதியிலேன்...."

என்றும்,

பெருகுவித் தென் பாவத்தைப் பண்டெல்லாம்
குண்டர்கள் தம் சொல்லேகேட்டு
உருகுவித்து.....

என்றும்,

"பல்லுரைச் சமண ரோடே
பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவு செய்தேன்"

என்று சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறியபோது முன்பு இருந்து பாழான நாட்களை வெளிப்படுத்துகிறார்.

**நீற்றறை அனுபவம்**

நாவுக்கரசர் சமயம் மாறியதை அறிந்த சமணர்கள் மன்னரிடம் கூறினர். அதற்கு அரசன் யாது செய்ய வேண்டும் என்று சமணர்களிடம் கேட்டான். அவர்கள் நீற்றறையில். இடுக என்று கூற மன்னனும் அவ்வாறே

செய்வதற்கு கட்டளை இட்டான். அந்த நீற்றறையானது இளவேனில் பருவத்தில் பூம்பொழிலைத் தடவி வருகின்ற தென்றல் தவழும் தண்கழுநீர்த்தடாகம் போல வெண்ணிலவு விரிந்து யாழ்ஒலி முழன்று இறைவன் திருவடி நிழல் அருள்போல குளிர்ந்தது. அம்புலி நீரைச் சூடிய செஞ்சடையாரை அடி வணங்கி எல்லாரும் இனித்திருந்தார்கள். ஏழு நாட்கள் கழிந்த பின்னர் சமணர்கள் அனைவரும் நீற்றறையைத் திறந்தார்கள். அப்போது அடியார்,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
முசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே" (5:90:1)

என்று தேவார திருப்பதிகத்தினைப் பாடி அருளினார்.

**விடம் உண்ட அனுபவம்**

கொடுமையான சுண்ணாம்பு நீற்றறையில் இருந்த அடியாருக்கு எவ்விதமான இடர்ப்பாடும் ஏற்படவில்லை என்பதை உணர்ந்த சமணர்கள் மன்னரிடம் சென்று தெரிவித்தார்கள். அதற்கு மன்னர் அவருக்கு விடத்தினை ஊட்டி மாய்க்க வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார்கள். சமணர்கள் பாற்சோறு கொண்டு ஊட்டுவித்தார்கள். ஆலத்தை அமுதமாகக் கொண்ட அரசனின் அடியவர்களுக்கு நஞ்சும் அமுதம் ஆகும் என்று நினைத்த அடியார் அச்சோற்றினை மனம் மகிழ்ந்து உண்டார்.

இதனை,

"வஞ்சனை பாற் சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி அடிகளார்." (4:70:3)

என்ற பாடலால் தெளிவுப்படுத்துகிறார்.

**யானையைக் கொண்டு இடர்செய்தல்**

நாவுக்கரசர் நஞ்சு உணவு ஊட்டியும் எவ்விதத் துன்பமும் ஏற்பட வில்லை என்பதை உணர்ந்த சமணர்கள் மன்னனிடம் சென்று பட்டத்து யானையை ஏவி இடர் விளைவிக்கத் துணிந்தார்கள். பட்டத்து யானையும் வந்தது. அடியார் சிறிதும் அச்சமின்றி யானையை உரித்துப் போர்த்திய நாதனின் அடியார்க்குத் தீங்கு உண்டாகிவிடுமோ? என எண்ணி,

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்
சுடர்திங்கட் சூளாமணியும்"

என்ற பதிகம் பாடி, தம்மை வணங்கிச் செல்லுமாறு வைத்தார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

"வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
செஞ்சடை நீர்முடிக் கூத்தர் தேவர்க்குத் தேவர் பிரானார்
வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்அடியோம் நாம்
அஞ்சுவதில்லை என்றென்றே அருந்தமிழ் பாடி உரைத்தார்"

எனத் தொடங்கும் பெரியபுராணப் பாடலின் மூலம் அஞ்சுவது யாதொன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை என்னும் மகுடம் இட்டுப் பாடினார். யானை நாயனாரை வணங்கிச் சென்றது என்கிறார்.

**கற்றுணைப் பூட்டிக் கடலில் பாய்ச்சுதல்**

நாவுக்கரசருக்கு நீற்றறையாலும், நஞ்சு யானையாலும் எத்தகைய இடர்ப்பாடுகளும் ஏற்றுக்கொள்ளாதவராகித் திருவைந்தெழுத்தை ஓதியவாறு திகழும் அவரைக் கல்லில் பூட்டிக் கடலில் எறிய ஆணையிட்டான் அரசன். கல்லில் பூட்டிக் கடலில் தூக்கி எறியப்பட்ட நாவுக்கரசர் கல்லைத் தெப்பமாகக் கொண்டு திருப்பாதிரிப்புலியூர் கடற்கரை அடைந்தார். அப்போது அவர்,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே"

என்று பதிகம் பாடி கரையேறிய அனுபவத்தை இறைவனின் அருளோடு வெளிப்படுத்துகிறார்.

**அரவம் தீண்டிய அரும் மைந்தனை உயிர்ப்பித்த அனுபவம்**

திருநாவுக்கரசரை நேரில் காணாத அப்பூதி அடிகளார் அவருடைய அருள் சிறப்பினைக் கேட்டறிந்து அவருக்கே அடியவராகி அரும் பணிகள் பல செய்து வந்தார். அந்நிலையில் நாயனார் அப்பூதி அடிகளின் இல்லத்திற்குச் சென்றிருந்தார். தமது குருநாதர் வந்ததை அறிந்த அப்பூதி அடிகளார் மிக்கு மகிழ்ந்தார். இந்நிலையில் மூத்த மைந்தன் அரவம் தீண்டி இறந்தமை அறிந்தார். ஆனால் அத்துன்பத்தினைப் பொருட்படுத்தாமல் நாயனாருக்கு அமுது படைக்க முற்பட்டார். இவ் அன்பினை அப்பர் அறிந்து வியந்தார். அப்போது பாலகனின் உடலைத் திருக்கோயிலுக்கு முன்னே கிடத்தி,

"ஒன்றுகொலாம் ஞானப்பதிகம் எடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்"

தேவாரத் திருப்பதிகத்தினைப் பாடியருளி அவனை எழுப்பியருளினார்.

மேலும், அப்பூதி அடிகள் சிவனடியார்களைப் போற்றி அவர்களுக்கு அமுது படைத்த திறத்தை, தாமே பெற்ற நாவுக்கரசர் ஒருநாள் திருப்பழனத்திற்குப்

போய்ச் சிவபெருமானைப் பாடிய பதிகத்தில் அப்பூதி அடிகளது திருத்தொண்டினை,

"வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப் போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடிமையே"

என்ற பாடலில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

நாவுக்கரசர் தாம் பெற்ற இன்னல் அனுபவத்தைக் கூறுவதோடன்றி அத்தகைய துன்பத்தின் வாயிலாக இறைவன்பால் அன்பு கொண்டு அதனால் இறைவன் அருள்பாலித்து அருளிய திறத்தின் பலன்களைத் தனது பாடல்களில் பின்வருமாறு வெளிப்படுத்துகின்றார்.

திருநீறும் அக்கமணியும் பூண்டு சிவபெருமானை இடையறாது போற்றும் மெய்யடியார்களைச் சிவபெருமானாகவே மதித்து, அன்னவர் குலம் முதலியவற்றைக் கருதாமல், வழிபடும் அன்புடையார் திருவுளத்திலே காண்டற்கரிய பெருமானைக் கண்டு மகிழலாம் என்பதை,

"எவரேனும் தாமாக விலாடத் திட்ட
திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்றுசொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"

கன்றாப்பூர்த் திருத்தாண்டகத்தால் இந்த உண்மையைத் தெளிவாக்குகிறார்.

நாவுக்கரசர் பெருமான் தாம் வாழ்ந்த காலங்களில் அடைந்த துன்ப அனுபவங்களையும், அத்துன்ப அனுபவத்திலிருந்து இறைவன் மீட்டு அருளிய திறத்தையும், இறையை அடைய தாம் மேற்கொண்ட வழிமுறைகளையும் தேவாரத் திருப்பதிகத்தில் கூறுகிறார். இதனால், இறையன்பர்கள் துன்பத்திலிருந்து துவண்டு விடாமல் இருக்க, இறையருளைப் பெற நாவுக்கரசின் தேவாரப் பாடல்கள் வழிவகுக்கும் என்றால் அது மிகையில்லை எனலாம்.

# 44. தாண்டகச் சதுரர்

மு. சுவாமிநாதன், பனசை.

தமிழகத்தின் பெருமையை உணர்த்தும் அம்சங்களில், பக்திமார்க்க வளர்ச்சி முதன்மையிடம் பெறுவது, பக்தி இயக்கப் பாதையில் தனித்த இடம் பெறுவன சைவ சமயச் சான்றோர் தந்த அருள்பழுத்த கனிச்சுவை யாகிய பாடல்கள் அடங்கிய நூல்கள். அவற்றுள் பன்னிரண்டு திருமுறை களும், சைவ சித்தாந்தச் சாத்திரங்களும் (14) மேன்மைகொள் சைவ நீதியை உலகுக்குப் பொதுவாக்கியவை. பன்னிரண்டு திருமுறையுள் 4,5,6-ஆம் திருமுறைகள் திருநாவுக்கரசர் அருளியவை. திருத்தாண்டகம் பாடிய அப்பரின் வாக்கில் 'இசை' பற்றிய குறிப்புகள் இக்கட்டுரையில் ஒருவாற்றான் சிந்திக்கப் பெறுகின்றன.

**தமிழோடு இசை**

பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும் ஈசன், மூவரின் பாடல் கேட்டு உருகி நின்றமையைப் பற்பல நிகழ்ச்சிகளால் அறிய முடியும்.

அப்பரடிகள் 'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' - எனப் பாடுவார். தமிழையும், இசையையும் - தமிழிசையை - அது இயைந்த பாடலையும் - மறந்ததில்லை எனச் சொல்லும் அப்பர் தான் பாடிய அருந்தமிழில் அதனை மறவாமல் பதிவும் செய்திருக்கிறார்.

பாடுவதும் பரவுவதும் போற்றுவதும் கேட்பதும் இறைவனிடம் ஆனாலும், இசை, இசைக்கருவிகள், பெருமான் இசை கேட்கும் நுட்பம், அவனே இசைபாடும், ஆடும் திறம் ஆகியவையும் பொருந்திய இடங்களில் தாண்டகச் சதுரரின் தமிழில் முகிழ்த்து முழுமையான பேரின்பத்தைச் செய்கின்றன.

**இசையும் இறைவனும்**

அடியவர் பாடலுக்கு உருகும் தன்மையாளன் ஈசன். அவன் ஞானசம்பந்தருக்குத் தாளம் ஈந்தவன். இருந்து தமிழ் கேட்கும் இச்சையால் காசுநித்தம் நல்கியவன். இசையும் பிரிக்க முடியாத இயைபினால் அவனுடன் ஒன்றியுள்ளது. இதனைப் பல இடங்களில் தாண்டக வேந்தர் குறிக்கிறார்.

பெருமான் நடனமாடும் சிறப்பைப் பாடாத சைவ சமய இலக்கியமே இல்லை எனலாம்.

பேய்கள், இசை முழங்கவும், பண்ணமைந்த பாடலுடனும், அப்பெருமான் ஆடுவான் என்பார் அப்பர்.

'பாரிடம் *பாணி* செய்யப் பயின்றாடும் பரமமூர்த்தி'
(கோயில் - நேரி. 7)

'*பண்ணுண்ட பாட*லோடும் பரமநீ ஆடுமாறே'
(கோயில். நே. 10)

'முரலும் கின்னரம் மொந்தை முழங்கவே
இரவின் நின்று*எரி யாடலும்*' (நாரையூர் - குறுந். 9)

'*ஆடிய* கழலர்' (நெய்த். நே . 5)

'பண்ணிட்ட *பாடலர் ஆடலராய்*' (நல்லூர். வி . 2)

அப்பெருமான், இசைக்கருவியாகிய வீணையை இசைத்து உயிர்களுக்குப் பேரின்பம் நல்குவான்.

'வேதங்கள் ஓதி *வீணை* யேந்தி' (புக்கதாண். 10)

'பண்ணார்ந்த *வீணை* பயின்ற' (கழிப். காந். 6)

'பண்ணார்ந்த *வீணை* பயின்றான்' (பூந்துருத்தி - தா . 2)

'கொக்கரை தாளம் *வீணை* பாணிசெய் குழகர் போலும்'
(நாரையூர் . 9)

அவன், உலகம் முழுவதும் ஒடுங்கும் ஊழிக்காலத்தில் வீணை கேட்பான்.

'ஏகபாதர், ஓதத் தொலி மடங்கி ஊருண்டேறி ஒத்துலகம் எல்லாம் ஒடுங்கியபின்,

வேதத்து ஒலிகொண்டு *வீணை*' (வெண்காடு - தா . 2)

அவன் இசைபாடவும் செய்வான் என்பதை,

'பண்ணினான் மறை *பாடலோடு* ஆடலும்' (நாரையூர் - கு . 7)

பண்பொருந்த *இசைபாடும்* பழனம்சேர் அப்பனை'
(பழனம் - பழந் . 5)

'பண்ணுமாகவே *பாடும்* பழனத்தார்' (பழனம் . கு . 3)

'வேதத்தின் கீதம் பாடும், பண்ணவனைப் பண்ணில்
வரு பயனானானை (கற்குடி . தா . 6)

எனுமிடங்களில் குறிப்பர்.

இசைபாடும் பரமன், இசை கேட்டு இன்புற்றுவான்,

'எழு *நரம்பின் இசை* கேட்டு இன்புற்றானை' (புள்ளி. தா. 10)

'*பண்ணின்* இன்மொழி கேட்கும் பரமனை' (கடம்பம் - கு . 4)

'பண் சுமந்த பாடல் பாடும் அடியவர்க்குப் பாங்கன் ஆவான்'

'*பண்ணொடு பாடல்* தன்னைப் பரவுவார் பாங்கனாகி'

(ஆப்பாடி- நே . 3)

இசைக் கருவிகளை முழக்கிக் கொண்டு பண் அமையப் பாடுவர் தேவர்கள்.

'அறைகலந்த *குழல் மொந்தை வீணை* யாழும்
அந்தரத்தில் கந்தருவர் அமரர் ஏத்த' (மழபாடி - தாண் . 2)

'*பண்ணின் இசை*மொழி பாடிய வானவர்' (வேதிகுடி - வி.6)

'*பண்அமையப்* பாடுபவர் பாவம் தீர்ப்பான்'

(இடைமருதூர் - நே . 4)

இராவணன் கயிலை மலையைப் பெயர்க்க முயன்றான். இறைவன் கால்விரலால் அழுத்தினான். நெருப்புண்ட இராவணன் அழுது, அலறி, இனிய சாம கானம் பாடினான். அவனுக்கு வாழ்நாளும் வெற்றிமிக்க வாளும் பெருமான் நல்கினான்.

........................ அவனும் வீழ்ந்து
விடுத்தனன் கைநரம்பால் வேத கீதங்கள் பாட,
கொடுத்தனன் கொற்ற வாள்நாள். (நின்றியூர் - நே . 10)

பெருமானை இசையோடு இயைபுபடுத்தி உருவகமாக்கி உரைக்கும் பாங்கையும் வாகீசர் வாக்கில் காணமுடிகிறது.

'வரும்பயனை *எழுநரம்பின்* ஓசையானை' (பெரிய தாண் . 7)

'*ஏழிசை* வண்ணமும் ஆவர்' (ஐயாறு . கு . 6)

'ஏழ்நரம்பின் இன்னிசையாய்' (ஐயாறு . தா . 4)

'ஏழிசையை' (கற்குடி - தா . 3)

'எண்ணோடு பண்நிறைந்த கலைகளாய' (எறும்பியூர் - தா.1)

'பாட்டில் பண்ணாய்' (கருகாவூர் - தா.1)

**பதிகளும், (பதிக) இசையும்**

பக்தி மணம் கமழும் பதிகளில் இசை மணமும் கமழ்ந்ததை நாவரசர் பல இடங்களில் குறிக்கிறார்.

''பறையின் ஓசையும் பாடலின் ஓசையும் மல்கி''

(நின்றியூர் - கு . 4)

'கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக் *கடம்பூர்*''

(கடம்பூர் - கு . 1)

'குழல் உமிழ் கீதம் பாடும் *கோடிகா*' (கோடிகா - நே . 7)

''நண்ணி லயத்தொடு பாடல் அறாத *நல்லூர்*' (நல்லூர் - வி . 5)

'பறையின் ஓசையும் பாடலின் ஓசையும்
வைகும் *இடைமருது*' (இடைமருது - கு . 1)

'பண்குணத்தான் பாடலோடு ஆடல் ஓவாப் *பரங்குன்றம்*'

(பரங் - தா . 4)

'பண்ணியல் பாடல் அறாத ஆவூர்' (ஆவூர் )

**பெருமாட்டியை உருவகித்தல்**

ஊனையுள் 'உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
ஒன்றென மாட்டின் அது உருவகம் ஆகும்'

என்பது உருவக இலக்கணம்.

பெருமாட்டியை இசையாக உருவகித்துப் பாடிய இடமும் உண்டு.

'பாலை யாழ் *மொழியானவள்*' (பிரம. கு . 4)

'பண்ணின் நேர் மொழியாள்' (பிரம. 5)

**பாமாலை பாடப் பணித்தமை**

இசை, இசைக்கு உருகும் ஈசன், அவன் அருளும் இசை, இசைக் கலை நுட்பங்கள் பற்றி மொழிந்த அப்பரடிகள், தன்னைப் பாமாலைப் பாட இறைவன் பணித்தார் என்கிறார்.

'பத்திமையால் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
*பாமாலை பாடப்* பயில்வித்தானை' (புள்ளிருக்கு தா . 3)

நேரிடையாக இவ்வாறு சொல்வது மட்டுமல்லாமல், நெஞ்சுக்கு அறிவுறுத்துவதாகவும் பாடல் பாடுகிறார்.

'துண்ணெனா மனத்தால் தொழுநெஞ்சமே
*பண்ணினால் முனம் பாடலது செய்தே*' (கடம்பூர். கு.4)

**பாடலும், பயனும்**

அம்பலத்தே கூத்தாடுகின்ற ஆடலரசனைப் பாடாதவர்க்குப் பயன் இல்லை என்பர் அப்பர்.

'ஆடல் வேடத்தன் அம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லால்பயன் இல்லையே' (பாவ. குறுந். 7)

**பண்ணும், பரமனும்**

'எளியவனாய், இரவில், பரவைபால் தூதுசென்ற பரமனனை,
மருவற் கினிய, பண்ணகத்தான்' (தனித் திருவிருத்தம் - 6)

என்பர் வாகீசர்.

'பண்ணிடைச் சுவையின் மிக்க கின்னரம் பாடல் கேட்டார்'
(கச்சிமேற்றளி நே . 3)

'பண்ணினைப் பாடியாடும் பத்தர்கள் சித்தம் கொண்டார்'

என்றெல்லாம் பரமனைப் பைந்தமிழ் இசையோடு இயைந்தே பதிகம் பாடினார் அப்பர். அவற்றுள் ஒன்றிரண்டே ஈண்டு உரைக்கப் பெற்றன. உரையாதன பலநூறு.

'தமிழோடிசை பாடல் மறந்தறியேன்'

# 45. நாவுக்கரசரின் அறிவியல் சிந்தனைகள்

செ. ஈ. சூரியமூர்த்தி, மதுரை.

"திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட" திருநாவுக்கரசுப் பெருமான், இளம் வயதில் பெற்றோரை இழந்து, ஒருவர் தலைக்காவல் இலாமையினால், அறிவு வேட்கையினால் சமணம் சார்ந்து, பல கலைகளைக் கற்று அறிஞராய் விளங்கினார். இறைவன் சூலை நோய் கொடுத்து ஆட்கொண்டவுடன் "கற்றதனால் ஆய பயனாகிய வாலறிவனை" உணர்ந்து அனுபவித்து, அவற்றையெல்லாம் நமக்கு வழிகாட்டுவதற்காக அருட்பாடல்களாக வடித்துக் கொடுத்திருக்கின்றார். அறிவியல் அனுபவங்களை மட்டுமே சார்ந்துள்ள சமணத்திலிருந்து நாவுக்கரசர் சைவம் வந்ததால், நாவுக்கரசர் பாடல்களில் அறிவியல் பாதைகளைப் பரக்கக் காணலாம். ஞானசம்பந்தர் இயற்கைக் காட்சிகளில் இறைவனின் வெளிப்பாடுகளைக் கண்டார். நாவுக்கரசர் அறிவியல் அனுபவங்களில் இறைவனின் இயல்பையும், பெருங்கருணைத் திறத்தினையும் விளக்கிக் காட்டுகின்றார். அறிவியல் கொள்கைகள் எல்லோருக்கும் புரியக் கூடியவை. அதன் மூலம் சைவத்தை அறியும்போது நமக்கு விளக்கமும் ஆழமாக அமைகின்றது. அதனால்தான் பேராசிரியர் ஐன்ஸ்டீன் "ஆன்மீகம் இல்லாத அறிவியல் குருடு, அறிவியல் இல்லாத ஆன்மீகம் நொண்டி" என்கின்றார். ஒரு நாணயத்தின் இருபக்கம் போல, எந்தச் சமயமும் ஆன்மீகத்தையும், அறிவியலையும் சார்ந்தே இருந்தால்தான், அந்தச் சமயம் மக்களின் வாழ்வை உயர்த்தி, நிலையான இன்பத்தைக் கொடுக்கும். அறிவியல் ஆராய்ச்சியின் விளைவாக எழுந்தவை சாத்திர நூல்கள். இறைவனும் தோத்திர, சாத்திர நூல்கள் மூலம் தன்னை வெளிப்படுத்துகின்றான். நாவுக்கரசரும் இக்கருத்தையே "தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே" (6 : பாடல் - 778) என்று திருவாலங்காடு திருத்தாண்டகத்தில் சுட்டிக் காட்டுகின்றார். அறிவியல் நோக்கில் இறையுணர்வை எவ்வாறு நாவுக்கரசர் நமக்குக் காட்டியுணர்த்துகின்றார் என்பது சில ஆதாரங்களுடன் இக்கட்டுரையில் விளக்கப்படுகின்றது.

### பழமொழிகளே பழுத்த அறிவியல் வழிகள்

ஒரு மொழியில் பழமொழிகள் பழுத்த அனுபவ மொழிகள். அறிவியல் செய்திகளாக அவை சமுதாயத்தின் எல்லா நிலைகளிலும் படர்ந்து செல்கின்றன. நாவுக்கரசுப் பெருமான் இறை பக்தி உணர்வை எல்லோரிடமும்

தூண்டிவிட இந்தப் பழமொழிகளை லாகவமாகக் கையாள்கின்றார். திருமுறைகளில் அதிகம் காண இயலாத இலக்கியப் பாங்கு இது. இதனைப் பரமனைக் காணும் பாதையாக நாவுக்கரசர் அமைக்கும் திறனே வியந்து போற்றுதற்குரியது. திருவாரூர்ப் பழமொழிப் பதிகத்தில், தாம் இறைவனைப் போற்றாது இருந்த தன்மைகளைப் பழமொழிகள் கொண்டு விளக்குகின்றார்.

அவை:

| | |
|---|---|
| "கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே" | (4: பா. 42) |
| "முயல்விட்டுக் காக்கைப் பின் போனவாறே" | (4:43) |
| "அறமிருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே" | (4:44) |
| "பனி நீரால் பாவை செயப் பாவித்தேனே" | (4:45) |
| "இருட்டறையின் மலடு கறந்து எய்த்தவாறே" | (4:47) |
| "விளக்கிருக்க மின்மினித் தீக்காய்ந்தவாறே" | (4:48) |
| "பாழூரில் பயிர்க்கம்புக்கு எய்த்தவாறே" | (4:49) |
| "கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே" | (4:51) |

நம் அவல நிலையை எவ்வளவு அழுத்தமாக அறிவியல் சம்பந்தமான பழமொழிகள் கொண்டு நாவுக்கரசர் தம்மேல் ஏற்றி எடுத்துக்காட்டுகிறார்.

### ஆடும் ஊஞ்சலும் கூடும் சிவபாதங்களும்

ஊசல் ஒரு இயற்பியல் கருவி. இதைப் பரிசோதனைச் சாலையிலும் காணலாம்; பள்ளி விளையாட்டுக் களத்திலும் காணலாம். மரக்கிளை யிலிருந்து தொங்கும் இரண்டு கயிறுகளின் முடிவில் பிணைக்கப்பட்ட உட்காரும் பலகை ஊஞ்சலில் குழந்தைகள் அங்குமிங்கும் ஆடுவதை நாம் எல்லோரும் பார்த்திருப்போம். இயற்பியலின் தந்தையான கலிலியோ என்ற இத்தாலி விஞ்ஞானி இந்த ஊசலின் பண்புகளைக் கொண்டே தம் ஆய்வுகளைத் துவங்கினார். பல அறிவியல் முடிவுகளைக் கண்டார். ஆன்மீகவாதியான நாவுக்கரசு பெருமானும் குழந்தைகள் விளையாடும் ஊசலைக் காண்கின்றார். பல ஆன்மீக விளக்கங்களை இந்த அறிவியல் கருவியான ஊசலின் மூலம் நமக்கு அவர் விளக்குகின்றார். ஊசலின் பண்பு அங்குமிங்கும் அலைவது. நம்முடைய மனம் இந்திரியங்கள் வயப்பட்டு நிலையில்லாது இங்குமங்கும் அலைதலை, "உறுகயிறு ஊசல் போல ஒன்று விட்டு ஒன்று பற்றி" என்கின்றார். நம் உடம்போ பிறவிக்கடலில் அலையும் ஊசலாக உள்ளது. அதை "மறுகயிறு ஊசல்போல வந்து வந்து உலவும்" என்கின்றார். இந்த அலையும் தன்மை நீங்க வேண்டுமானால் இறைவன், கயிறுகளை அறுத்துவிட வேண்டும். பின் ஆட்டம் ஏது; அலைவுகள் ஏது. அறுந்த ஊசல் இறைப்பாதம் அடைந்தால், பின் நிலைத்த தன்மை தானே.

நாவுக்கரசருக்கு இறைவன் சடையில் அணிந்துள்ள பிறை, கயிறு ஊஞ்சலைப் பெற்ற தோற்றம் போல காட்சியளிக்கிறது. அதனை "பெறுகயிறு ஊசல்" என்கின்றார். ஊசல் கயிறற்றால் தரையில் சேர்வதன்றி வேறு துணையில்லாமை போல, உயிர்களைப் பற்றியுள்ள இருவினைகளாகிய கயிறு அறுந்தால், இறைவனுடைய பாதமன்றி வேறு தாங்கும் துணையில்லை. இதனைப் "பாதத்து அறுகயிறு ஊசல் ஆனேன்" என்கின்றார்.

"உறுகயிறூசல் போல ஒன்றுவிட்ட ஒன்று பற்றி
மறுகயிறூசல் போல வந்து வந்து உலவு நெஞ்சம்
பெறுகயிறூசல் போலப் பிறைபுல்கு கடையாய் பாதத்து
அறுகயிறூசல் ஆனேன் அதிகை வீரட்டனீரே" (4:264)

என்ற பாடல் மூலம், பற்றறுந்தால் பிறவி நீங்கி இறைப்பாதம் அடைந்து நிலையான பேரின்பம் பெறலாம் என்ற கருத்தை நாவுக்கரசர் அறிவியல் அனுபவமாகக் காட்டுவது கண்டு இன்புறத்தக்கது.

திருநாவுக்கரசரை அடியொற்றி மெய்கண்டாரும்,

"இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான்
காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்"
(சி. போ. சூத். 8., அதி.4., வா. 39a)

என்றும்,

"ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந் துணையான்"
(சி. போ. சூத். 8., அதி. 4., வா. 39b)

என்றும் கூறுவன இங்கு நினைவு கூரத்தக்கன.

**விளக்கும் விளக்கமும்**

இருள் வந்தால் நாம் விளக்கேற்றி ஒளி கொண்டு அதை நீக்குவோம். நாவுக்கரசர் இந்த விளக்கின் பண்பு மூலம் பல ஆன்மீக விளக்கங்கள் கொடுக்கிறார். எத்தனை வகையான விளக்குகள் வீட்டில் இருளகற்றும் அகல்விளக்கு, மனதில் அறியாமையை நீக்கும் சொல் விளக்கமாகிய விளக்குகள். உலகமே வாழ ஆற்றல் தரும் சூரியன் என்ற கருணை விளக்கு. அகத்தில் ஆனந்தமாய ஒளி வேண்டுமானால் "நமச்சிவாய" என்பதனால் அடையும் நன்மையை நாவுக்கரசர் காட்டும் முறை அறிவியல் பாங்குடையது (4:111) புற இருளைப் போக்கும் விளக்குப் போல மாந்தரின் அக இருளைப் போக்கி ஞானம் தருவது நமச்சிவாய மந்திரம். அதன் சோதி முக்காலத்தும் உள்ளது. எண்ணில்லாத உயிர்களின் அகத்தைத் தூய்மைப் படுத்துவது.

**எண்ணும் எழுத்தும்**

எண்கள் என்ற கருத்தை இன்றைய அறிவியல் சிந்தனையில் கணிதமாகக் கொள்ளலாம். இன்று அறிவியல் வளர்ந்து பல்கிப் பெருகக் கணிதம்தான் அடித்தளமாக உள்ளது. இதனால்தான் வள்ளுவரும்,

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு" (குறள் - 392)

என்றார் போலும். நாவுக்கரசரும் பல இடங்களில் இறைவனை எண்ணும், எழுத்துமாகக் கொள்கின்றார்.

"எண்ணும் எழுத்தும் சொல்லானாய் போற்றி" (6:557)
"எண்ணவன் காண்! எழுத்தவன் காண்" (6:485)
"எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்துமாகி" (6:920)

என்பவை இறைவனைப் பற்றிய நாவுக்கரசரின் அறிவியல் பார்வை. திருமுறைகளில் கணித அறிவியலை நேரடியாகப் பல இடங்களில் பயன்படுத்திய நாவுக்கரசர், கணித ஞானம் மிகுந்தவராக இருந்திருக்க வேண்டும். இரண்டு பதிகங்களில் நாவுக்கரசர் ஒன்று முதல் பத்து வரை உள்ள எண்களையே பாடலுக்கு முதற்சொற்களாக அமைக்கின்றார். (4:177-186) (5:874-883).

அப்பூதியடிகளின் திருமகன் நாவுக்கரசருக்கு அமுதுபடைக்கும் திருத்தொண்டு செய்ய வாழை இலை பறிக்கச் சென்றபோது, அரவம் தீண்டி இறந்துவிட்டான். நாவுக்கரசர் அவனை உயிர்ப்பிக்க இறைவனை வேண்டிப்பாடிய பதிகத்தில் இறைவனின் பண்புகளையும், கருணையையும், வீரத்தையும் எண்களால் அளக்கின்றார். முதல் பாட்டில் முதல்வனின் ஒப்புயர்வற்ற உயர்வையே ஒன்று என்ற எண்ணால் நான்கு வகையாக விவரிக்கின்றார். இரண்டு, மூன்று என்று படிப்படியாக பாடல்கள் வளருகின்றன. பத்தாவது பாடலில் அவருடைய ஐந்தலை நாகத்தின் பத்துக் கண்களையும், பத்துப் பற்களையும் (விடப்பல்) குறிப்பிடுகின்றார். நீ அணிந்திருக்கிற பாம்பு சிவத்தொண்டிற்குத் தீங்கு செய்யுமா என்று கேட்பது போல் தொனிக்கிறது. எண்களின் வலிமை அவருக்கு எண்ண வலிமையைக் கொடுத்து, எண்களாலாகிய இறைவனை விஷத்தை இறங்கும்படிச் செய்தது. அப்பூதியின் மகன் மூத்த நாவுக்கரச எண் களாலாகிய இறையருளால் உயிர்த்தெழுந்தான் ஒன்பதாம் பாட்டில் "ஒன்பது போலவர் பாரிடந்தானே" என்ற ஒரு அறிவியல் கருத்தை அமைக்கின்றார். ஒன்பது என்ற எண்ணை வேறு எந்த எண்களினாலும் பெருக்கி வரும் தொகையின் எண்களைத் தனித்தனியாக கூட்டிக்கொண்டே வந்தால் அது ஒன்பதில்தான் முடியும் (9 X 356 = 3204; 3 + 2 + 0 + 4 = 9). அது 9-ன் தனிப்பண்பு. இது வேறு எந்த எண்ணிற்கும் கிடையாது. இறைவனை இடையறாது சிந்திக்கும் அடியார்களுக்கு, அவர்கள் வேடம், கோயில் கொண்டிருக்கும் ஆலயம் எல்லாம் அரனாகவே ஆகிவிடும்.

இதனையே,

"மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே" (சி. போ. சூத். 12)

என்று மெய்கண்டார் இறைவன் நமக்கும் வெளிப்படும் அமைப்பைச் சுட்டிக்காட்டுகின்றார். ஒன்பது என்ற எண் போல, இறைவன் ஆட்கொண்ட எந்தப் பொருளும், இறைவனாகவே கருதப்படும்.

**உலகங்கள்**

நாவுக்கரசர் முழுமையாக இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர். இறைவன் உணர்த்த திருமுறைகளை நம்போன்ற "போலிகளும்" அறியும் வண்ணம் அருளிச் செய்தவர். இதனால் பல இடங்களில் பல அரிய அறிவியல் செய்திகள் வெளிப்படுகின்றன.

வான இயலாரின் தற்சமய ஆய்வில் ஒரு புதுக்கருத்து தோன்றி யுள்ளது. தொலைநோக்குக் கருவி கொண்டு அண்டத்தின் விளிம்பை ஆய்வு செய்யும்போது அங்குள்ள அண்டப் பொருள்களின் இயல்பு பூமியில் காணும் பொருட்களின் இயல்புக்கு மாறாக உள்ளது. சாதாரண அண்டப் பொருளில் அணுவின் அமைப்பு, நேர்மின் கொண்ட கருவும், அதை வலம் வரும் எதிர் மின்கொண்ட துகளும் (எலக்ட்ரான்) கொண்டதாக இருக்கும். நாம் காணும் எல்லாப் பொருட்களின் அணுக்களும், இந்த அமைப்பையே கொண்டிருக்கும். ஆனால் அண்ட வெளிக்கு மிகத் தூரத்தில் உள்ள அண்டங்களில் இந்நிலை மாறியுள்ளது. எதிர்மின் பொருள் கருவாகவும், நேர்மின் பொருள் வலம் வரும் துகளாகவும் உள்ளது. இதனால் இப்பொருட்களை எதிர்ப்பொருட்கள் (anti-matter) என்று பெயரிட்டுள்ளார்கள். அந்த அண்டத்தை எதிர் அண்டம் (anti-universe) என்றும் குறிப்பிடுகிறார்கள். அண்டமும், எதிர் அண்டமும் மிக விலகியுள்ளன. அவை நெருங்கினால், ஒன்றையொன்று அழித்துவிடுமாம். இந்த அறிவியல் பின்னணியோடு ஸ்ரீ கயிலாயம் போற்றித் திருத்தாண்டகத்தைப் பார்த்தால்,

"எதிரா உலகம் அமைப்பாய் போற்றி" (6:573)

என்ற பதத்திற்கு உண்மையான பொருளைக் காணமுடியும். இறைவன் உலகையும், அதற்கெதிரான எதிர் உலகையும் படைத்துள்ளான். இருளும், ஒளியும் போல் உலகமும் இருவகையாக உள்ளது. இறைவனது ஐந்தொழிலில் படைப்பதுவும், அழிப்பதுவும் உண்டல்லவா?

இன்னும் பல அறிவியல் கருத்துக்களை வருங்காலங்கள்தான் தெளிவாக்க முடியும்.

இது போன்ற அறிவியல் சிந்தனைகள் பல நாவுக்கரசரின், 4,5,6 ஆம் திருமுறைகளில் விரவிக் காணப்படுகின்றன. அவற்றுள் ஒரு சிலவே இக்கட்டுரையில் காட்டப்பட்டுள்ளன. முடிவாக அறிவியல் ஒரு பாதை தானே தவிர அது சேருமிடமல்ல.

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா" (திருப்பாசுரம், செய்யுள்-4)

என்பது சம்பந்தரின் வழிகாட்டும் வாக்கு. நல்ல பாதை பயணத்தை இனிமையாக்கும். அதற்கும் இறையருள் துணை புரிய வேண்டும். நாவுக்கரசர்,

"என்றும் மீளா அருள் செய்வாய் போற்றி" (6:573)

என்று குறிப்பிடுகின்றார். நமது பிறவிப் பயணத்தில் திருவருளையும், அறிவியலையும் இரு கால்களாகக் கொண்டு நடந்து சென்றால் இறைவன் நமக்கு ஊன்றுகோலாக தடுமாறும் இடங்களில் அருள் செய்வான்.

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே" (5:192)

என்ற நாவுக்கரசரின் அருள்வாக்கு என்றும் நம் அறிவுச் சிந்தனையில் சுடர்விட்டுப் பிரகாசித்து ஒளிரட்டும்.

# 46. நாவுக்கரசரும் மதமாற்றமும்

பா. செல்லம்மாள், விழுப்புரம்.

சைவ சமய குரவர்கள் நால்வருள் ஒருவராகப் போற்றப்பெறும் திருநாவுக்கரசரின் இயற்பெயர் மருணீக்கியார் ஆகும். சமணத்தில் இருந்தபோழ்து 'தருமசேனர்' எனும் பெயர் சமண அறிஞர்களால் வழங்கப் பெற்றது. இறைவனால் வானொலியாக வழங்கப் பெற்ற பெயரே திருநாவுக்கரசராகும். திருத்தாண்டகம் பாடினமையால் 'தாண்டக வேந்தர்' என்றும் 'தாண்டக சதுரர்' என்றும் அழைக்கப் பெற்றார்.

இலக்கியத் தோற்றத்திற்கான உந்துசக்தியும் நுவல் பொருள்களும் பல. "இலக்கியம் தனி மனித அனுபவத்தின் புலப்பாடாகப் பிறக்கிறது", வாழ்க்கையின் பொதுப் பிரச்சினையான இறப்பு, பாவ புண்ணிய உணர்வு, கடவுள் உணர்வு போன்ற ஒரு இனத்தின் நம்பிக்கை; "தனிமனிதன் சமுதாயத்தோடும், புற உலகத்தோடும் கொண்ட உறவு, இவற்றைப் புரிந்து கொண்டு வெவ்வேறு கலை வடிவங்களின் மூலம் புலப்படுத்தும் தனிமனித முயற்சி ஆகிய பல்வேறு கூறுகளை மனதில் கொள்ள வேண்டும்" என்ற ஹட்சனின் கூற்றினைக் கருத்தில் கொள்ளலாம்.

இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி, அதன் வரலாற்றுப் பின்னணி போன்றவற்றை முதற்கண் புரிந்து கொள்ள வேண்டும். மேலும் படைப்புக் கலைஞன் ஒரு இயக்கத்தோடு எவ்வளவுதான் தொடர்புடையனவாக இருந்தாலும், அப்படிப்பட்ட நிலையில் நாவுக்கரசரின் பக்தி நெறியை அறியலாம். ஆரம்பக் காலத்தில் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்திற்கு மாறலாம் என்ற நிலை இருந்தது. அதற்குச் சமூகமும் இடமளித்தது. அத்தகைய நிலையில் நாவுக்கரசர் சைவ மதத்தினராக இருந்து சமண மதத்திற்கு மாறினார் என்ற செய்தியைப் பெரியபுராணம் உணர்த்துகிறது.

நாவுக்கரசர் சமணராக இருந்த காலத்தில் சமண சமய வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றி 'தருமசேனர்' என்றப் பெயரோடு, சமண நூல்கள் பலவற்றையும் கற்றுப் பிற சமயத்தினர் பலருடன் வாதஞ் செய்து அவர் களைத் தோற்கடித்து, அதன் மூலம் சமணர்களிடம் பெருமதிப்புக்குரியவரானார் தமிழ்நாட்டின் வடபகுதியிலே சமண பிரசாரத்திற்குத் தலைமை பெற்றிருந்த பாடலிபுரம் என்று அழைக்கப்படும் திருப்பாதிரிப் புலியூரிலே சமண மடத்தின் தலைவராகத் தொண்டாற்றினார்.

நாவுக்கரசர் சமணத்தில் இருக்கும் போது சூலை நோயில் தாக்கப் படுகிறார். அந்த நோயைச் சமணராலே தீர்க்க முடியாமல் போய்விடுகிறது. அப்பொழுது நாவுக்கரசரின் தமக்கையான திலகவதியார், அவருக்கு வந்த சூலை நோயை "சைவத்தில் மேற்கொள்ளப்பெறும் திருநீறு கொண்டு" சூலை நோயைக் குணப்படுத்துகிறார். நோய் நீங்கப் பெற்ற தருமசேனர் சமண சமயத்திலிருந்து மீண்டும் சைவ மதத்திற்கே மாறிவிடுகிறார். இவரின் மதமாற்றத்தை அறிந்த சமண மன்னர், அவருக்குப் பல வழிகளில் துன்பத்தைக் கொடுக்கிறான். இங்கு சமணர்களால் எவ்வாறு துன்பத்திற்கு ஆளாக்கப்படுகிறார், என்றும் அத்தகைய துன்பத்தை எல்லாம் "ஐந்தெழுத்து மந்திரத்தைக் கொண்டு முறியடிக்கிறார்" என்பதை ஆய்வின் பக்க வரையறைக் கருதி ஒரு கூற்றினை ஆய்வதே நோக்கமாகும்.

நாவுக்கரசர் மதம் மாறியதைக் காவலர்கள் மூலம் அறிகிறார் மன்னர், உடனே வெகுண்டெழுந்து அவரை அழைத்துவரக் கட்டளையிடுகிறார். நாவுக்கரசர் தம்மை அழைக்க வந்த காவலரைப் பார்த்து,

**"நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்"**

(பாடல் - 1358, ப. 268)

என்று பாடி, அவர்களுடன் அரசனைக் காண வர மறுத்து இனி நான்மறையின் தலைவரும், கங்கை நதியுடன் பிறைச்சந்திரன் வாழும் சடையுடையவருமான சிவபெருமானைத் தொழுவதும், அவருக்கு பணி செய்வதுமே என்கடன் என்று கூறுகிறார். இறைவனுக்குத் தொண்டு செய்வதே பாக்கியம் என்ற கருத்தை உணர முடிகிறது.

அமணர் சொற்கேட்ட மன்னர் ஆண்ட அரசை உருகு பெருந்தழல் வெம்மை நீற்றறையின் உள்ளிருக்க விடுத்தார். நாவரசர் இறைவனின் தாள் நிழலையே தலைக்கொண்டு தொழுதெழுகிறார். நீற்றறையானது அவருக்கு இளவேனிற் பொழுதாய், மாலைத் தென்றலாய், தண்ணீர்த் தடாகமாய், வெண்ணிலவாய், யாழொலி முழங்கும் இன்னிசை அரங்கமாய் இறைவன் திருவடி நிழலெனக் குளிர்ந்தது. இறைவனிடம் மனம் ஒன்றி வணங்குகின்ற பொழுது எவ்வளவு பெரிய துன்பம் வந்தாலும், அத்துன்பத்தினால் பாதிப்பு ஏற்படுவதில்லை என்பதை அறியலாம்.

அடுத்து நஞ்சுகலந்த பாலமுதத்தை நாவரசர் உண்ணும்படி செய்தார்கள்.

**"நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க் கென்று**
**வஞ்ச மிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்த**
**செஞ்சடையார் சீர் விளக்கும் திறலுடையார் தீவிடத்தால்**
**வெஞ்சமணர் இடுவித்த பாலடிசில் மிசைத்திருந்தார்".**

(பாடல் - 1369, ப. 272)

என நினைத்து அருந்தினார். ஒரு சிறிதும் அதனால் இடர் நேராமை கண்ட சமணர் துணுக்குற்றனர்.

இத்தகைய செயலை நோக்கும் போது

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்"

என்ற நற்றிணைப் பாடல் கருத்தும்,

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

எனும் குறள் கருத்தும், அன்பின் மிகுதியால் பயின்றார் தமக்கு நஞ்சிடக் கண்டுவைத்தும் கண் மறக்கமாட்டாமையின் அதனை உண்டு பின்னும் அவரோடு உறவாடுவார். யாவரானும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுபவராகத் திகழப்படுவார். அந்நிலையில் நாவரசர் சிறந்து விளங்குகிறார்.

இறைவனின் மீது கொண்டுள்ள பற்றினால் நஞ்சும் அமுதமான நிலையை அறியலாம். மீண்டும் நஞ்சிலும் சாகாத நாவுக்கரசரை இனி மதியினால் அழிக்க முடியாது என்று நினைத்து, அரசனது யானையை அவர்மீது ஏவினர். கடுஞ்சினத்தோடு கடுவிசையில் கைவீசி முடுகி வந்த அவ்விறல் வேழம், யானை உரிவை போர்த்த இறைவனின் திருவடிகளையே நினைந்திருந்த அவரை, யாவரும் வியக்கும்படி, வந்த அவ்யானையானது அவரை வணங்கி எழுந்து அகன்றது.

"செயற்கரிய செய்வார் பெரியர், சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

சிறியோராக சமண அரசரும் பெரியோராக நாவுக்கரசரையும் ஒப்பு நோக்கலாம். ஒத்த பிறப்பினராய் மக்களுள் செய்தற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர். அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றை செய்யமாட்டாதார் சிறியர்.

இச்செயலைக் கண்ட சமணர்கள் இறுதியாக அவரைக் "கல்லுடன் சேர்த்து கயிற்றால் கட்டிக் கடலில் வீசி எறிதல் இனிமேல் செய்யத் தக்கது" என்று மன்னர் உரைக்கிறார். ஏவலரும் அவ்வாறு செய்கின்றனர். அப்பொழுது, "எவ்வாறாயினும் ஆகுக. எந்தை பெருமானை நான் ஏத்துவன்" என்ற தேவாரப் பாடலும்,

"எப்பரி சாயினும் ஆக ஏத்துவன் எந்தையை என்று
செப்பிய வண்டமிழ் தன்னால் சிவன் அஞ்செழுத்தும் துதிப்பார்"

"எத்தகைய நிலை வந்தாலும் நான் எந்தை
பெருமானான சிவனை வணங்குவேன்"

எனத் துணிவுடன் கூறுகிறார்.

"அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே
இச்சகத்து உள்ளோரெலாம் எதிர்த்து நின்ற போதினும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே"

என்ற பாரதியின் பாடல் வரிகளை நினைவில் கொள்ளத் தக்கதாகவும், நாவுக்கரசரின் அஞ்சா நெஞ்சமும் மனவுறுதியும் கொண்ட நிலையும் அறியப்படுகிறது.

நாவுக்கரசருக்கு கடலிலுள்ளே கல் மிதந்தது; கட்டிய பாசக் கயிறுகள் அறுபட்டன; கல்லே சிவிகை ஆயிற்று கடலரனாகிய வருணன், முன்னர்த் தவம் செய்தானாதலின், தான் பெற்ற பேறாக நினைத்து நாவரசரைத் தன் அலைகளாகிய கைகளால் நாவரசரைத் தாங்கித் திருப்பாதிரிப் புலியூருக்கருகில் கரை சேர்த்தது.

நாவுக்கரசரைக் கண்ட மக்கள் எல்லாம் ஒன்று கூடி மகிழ்ச்சியில் ஆராவாரித்து எழுகின்ற ஒலியைப்போல எல்லாத் திசைகளிலும் 'அரகர' என்று ஒலிக்கும் பேரொலியைப் போல் அலை நீரையுடைய கடலும் ஒலிக்கின்றன.

யாவராலும் தொழத்தக்க திருநாவுக்கரசர் அடியாரின், முன்னால் செழுமையான பாதிரிப்புலியூரில் வீற்றிருக்கும் வெண்மையான பிறைச் சந்திரனைச் சூடிய சடையையுடைய சிவபெருமானை வணங்கி அன்பு பொருந்துமாறு கீழே விழுந்து வணங்கிப் பின் எழுந்து நின்று திருவருள் நெறியுலகில் விளங்குமாறு செய்கிறார்.

பின்னர் இறைவனிடம்

''ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாகி''

எனத் தொடங்கித்

''தோன்றாத் துணையாய் இருந்தனன்தன் அடியேங்களுக்கு''

என்று முடியும் அக்கருத்துக் கொண்ட பாட்டு முதலாக வானினின்று உலகில் தாழும் நீரையுடைய கங்கை வாழ்கின்ற சடையுடைய இறைவனை - எல்லா உயிர்களுக்கும் சான்றாய் இருக்கும், ஒருவரைக் குளிர்ந்த தமிழால் ஆன மாலைகளைச் சாத்துகிறார் நாவுக்கரசர்.

நாவுக்கரசரின் பாடல்களை நோக்கும் பொழுது மதமாற்றம் காலந் தோறும் நடைபெற்று வருகின்ற ஒன்றாக இருக்கின்றது. இன்றைக்கு மதமாற்றத்தால் சண்டைச் சச்சரவுகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. சிலர் அழிந்து போகின்றன. சிலர் இறைவழிபாட்டால் முக்தியடைகின்றனர். மதமாற்றம் தேவையா? என்ற கேள்விக்கு விடைகாண வேண்டும் என்றால் தேவை இல்லை என்றே கூறலாம், காரணம் சில காலம் ஒரு மதத்தின் நம்பிக்கைகள் உயர்ந்தது என்று நினைத்து அதைப் பற்றிக்கொண்டு வாழ்வது, பின் சில காலம் மற்றொரு மதத்தின் நம்பிக்கைகள் பழக்க வழக்கங்கள் செயல்பாடுகளை நினைத்து வாழ்வது இப்படி எதிலும் நிலைத்த நம்பிக்கை இல்லாமல் வாழ்பவர்கள் துன்பங்களுக்கே ஆளாக்கப் படுவர். ஆகவே எப்பொழுதும் ஒரே மதத்தின் நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றபோது இத்தகைய துன்பங்கள் ஏற்படாமல் ஒரே கொள்கைப் பிடிப்புடன் இருப்பதே நலம் பயக்கும்.

# 47. கொல்லிப் பண்

சண்முக. செல்வகணபதி, திருவையாறு.

கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணுஞ் சாக்கி யனார்
நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாள வைத்தார்
எல்லியாங் கெரிகை ஏந்தி எழில்திகழ் நட்ட மாடிக்
கொல்லியாம் பண்உ கந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே.

(4-ஆம் திருமுறை - திருநேரிசை)

குறுக்கை வீரட்டனார் கொல்லியாம் பண் உகந்தாரென நாவுக்கரசர் குறிப்பிட்டுள்ளார். 'பண்ணொடு பாடறன்னைப் பரவுவார்' (IV 468) 'பண்ணவன் காண் பண்ணவற்றின் றிறலானான் காண்' (VI:52), பழுத்த பண்களாகிச் சோதியாய் இருளாகிச் சுவை கலந்த அப்பாலாய் வீடாய வீட்டின் ஆதியாய் அந்தமாய் நின்றான்! (6:26:6). என்று இறைவனைப் பண்ணிசை விரும்பினர் என்று குறிப்பிடும் நாவுக்கரசர் பெருமான் கொல்லியாம் பண்ணை விரும்பி ஏற்பார் என்கிறார்.

தமிழோடு இசைபாடல் மறந்தறியாத நாவினுக்கரசர் தருமசேனராக இருந்து நாவுக்கரசராக வைத்தப் பண் கொல்லிப் பண்ணாகும். குடரோடு துடக்கி முடக்கியிட்ட தருமசேனரது சூலைநோயைப் போக்கிய பண் கொல்லிப் பண்ணாகும். நட்டயிடைப் பண்ணில் ஞானசம்பந்தர் பதிகம் தொடங்கியது போல் கொல்லிப் பண்ணில் நாவுக்கரசரின் தேவாரம் தொடங்குகிறது. நாவுக்கரசர் பெருமான் பாடிய பத்துப்பண்களில் கொல்லிப்பண்ணும் ஒன்றாகும்.

முதல் திருமுறையில் 24-41 வரையுள்ள 18 பதிகங்களும், நான்காம் திருமுறையில் 1, 22, 23 பதிகங்களும், ஏழாம் திருமுறையில் 31-37 ஏழு பதிகங்களும், கொல்லிப்பண்ணுக்குரிய பதிகங்களாகும். இவ்வகையில் 18+3+7 = 28 பதிகங்கள் கொல்லிப்பண் பதிகங்களாக உள்ளன. இவை யல்லாமல் நாவுக்கரசர் பாடிய திருநேரிசைப் பதிகங்களையும், திருவிருத்தப் பதிகங்களையும் கொல்லிப் பண்ணில் பாடும் நிலையில் நேரிசைக் கொல்லியென்றும், விருத்தக்கொல்லியென்றும் கொல்லிப்பண்ணில் பாடுவது மரபாக உள்ளது. இவ்வகையில் திருநேரிசையில் உள்ள 24-79 வரையுள்ள 56 பதிகங்களையும், திருவிருத்தத்தில் உள்ள 34 பதிகங்களையும் கொல்லிப்பண்ணில் பாடி வருகின்றனர். இவ்வகையில் 56+34 = 90

பதிகங்கள் கொல்லிப்பண் பாடும் பதிகங்களாக உள. ஆக, நான்காம் திருமுறையில் உள்ள 113 பதிகங்களில் 93 பதிகங்கள் கொல்லியில் பாடும் பதிகங்களாக உள்ளன.

நாவுக்கரசர் பாடிய பதிகங்களில் கொல்லி IV - 1 காந்தாரப்பண் (IV - 2-7) 6, பியந்தைக் காந்தாரம் (IV - 8) 1 சாதாரி (IV - 9) 1, காந்தாரபஞ்சமம் (IV - 10 - 11) 2, பழந்தக்கராகம் (IV - 12 - 13) 2, பழம்பஞ்சுரம் (IV - 14 - 15) 2, இந்தளம் (IV - 16 - 18) 3, சீகாமரம் (IV - 19 - 20) 2, குறிஞ்சி (IV - 21) ஆக பத்துப் பண்கள் 20 பதிகங்களைப் பெற்றுள்ளன. ஐந்தாம் திருமுறை 'குறுந்தொகை' என்னும் ஒரே யாப்பில் அமைந்த பதிகங்களாகவும் ஆறாம் திருமுறை தாண்டகம் என்னும் யாப்பின் பிறப்பட்டதாகவும் அமைந்துள்ளன. இவை இயல் தமிழுக்கு இசையூட்டப் பெற்ற பதிகங்களாக உள்ளன. திருத்தாண்டகத்தைச் சுத்தாங்கமாக அரிகாம்போதி இராகத்தில் பாடி வருகின்றனர். திருக்குறுந்தொகையைச் சுத்தாங்கமாகவும் இலயாங்கமாகவும் பாடி வருகின்றனர். நான்காம் திருமுறையில் உள்ள திருவிருத்தத்தை விருத்தம் பாடுவது என்ற மரபுப்படி சுத்தாங்கமாகப் பாடி வருகின்றனர்.

**ஏழு சுரங்கள் கொண்ட பண்கள்**

ஆரோசை அமரோசைகளில் ஏழு சுரங்கள் கொண்ட பண்களை தாய் இராகம் என்றும், மேளகர்த்தா இராகம் என்றும் அழைப்பர். இவ்வகையில் நாவுக்கரசர் பாடிய பண்களில் குறிஞ்சி, பழம் பஞ்சுரப்பண்கள் ஏழு சுரங்களைக் கொண்ட பண்களாகக் கூறுவர்.

மேலும் கீழ்க்காணும் பதிகங்களை பின்கண்ட பண்களில் பாடி வருகின்றனர் என்று தமிழிசைக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது. (தொ. I, ப. 39).

| | |
|---|---|
| சீகாமரப்பண் | - பதிகம் 78, 79, 80, 81, 82, 83, 84, 85, 241, 242, 243, 244 |
| செவ்வழிப் பண் | - பதிகம் 125 - 130 |
| பஞ்சமம் | - பதிகம் 29-33 |
| பாலை யாழ் | - பதிகம் 125-130 |

இவ்வகையில் செவ்வழி, பஞ்சமம், பாலையாழ் என்ற மூன்று பண்களும் ஏழு சுரங்களைக் கொண்ட பண்களாகும்.

**இசைக் கருவிகள்**

அப்பர் தேவாரத்தில் இசைக்கருவிகள் பற்றிய செய்திகள் காணப் படுகின்றன. கிண்கிணி (பதிகம்-19), கல்லலகு (220, 222, 234), கின்னரம் (144, 33, 38), குடமுழா (296, 309), குழல் (84, 92, 109),

கொக்கரை (111, 164, 217, 290), கொடுகொட்டி (111, 164), சச்சரி (242, 290), தக்கை (111), தகுணிச்சம் (111), தமருகம் (277), துடி (2, 228), பறண்டை (92), பிடவம் (223), முழவம் (6, 92, 219), மொந்தை (168, 223, 253), யாழ் (30, 104, 154, 290), வீணை 32 இடங்களில் சுட்டப்படுகிறது.

**ஆடரவக் கிண்கிணிக்கா லன்னானோர்** (4: 19-10.)

**பண்ணொடு யாழ்வீண பயின்றாய் போற்றி** (6:35:2.)

கைகரம்பு என்று யாழைக் குறிப்பிடுகிறார். இது கைஞ்ஞரம் என்று மருவி வந்துள்ளது. (4:283)

**கிஞ்ஞரம் கேட்டுகந்தார் கெடில வீரட்டனாரே** (4: 283)

**கொல்லிக் கௌவாணம்**

கொல்லிப்பண்ணை யடுத்துக் கொல்லிக் கௌவாணம் என்ற பண் இடம் பெற்றுள்ளது. இவையிரண்டும் தனித் தனிப் பண்களே.

கொல்லிக் கௌவாணம் குறிஞ்சிப் பெரும்பண்ணில் படுமலை என்னும் திறத்தின் அகநிலையாய்ப் பண்வரிசையில் 49 என்னும் எண் பெற்றுள்ளது. கௌவாணம் என்று அழைக்கப்படுகிறது. மூன்றாம் திருமுறையில் 42-ஆம் பதிகத்திலும் ஏழாம் திருமுறையில் 38-46 வரையிலும் உள்ள பதிகங்களில் அமைந்துள்ளது.

கொல்லி மருதப்பண்ணின் நவிர் என்னும் திறத்தினைச் சார்ந்தது. கொல்லிக் கௌவாணம் குறிஞ்சிப் பெரும் பண்ணின் படுமலை என்னும் திறத்தின் அகநிலையாய் அமைந்து விளங்குகிறது. எனவே இவ்விரண்டையும் தனித்தனிப் பண்களே எனலாம்.

இவ்விரு பண்களை இன்று நவரோசு என்ற ஒரே இராகத்தில் மட்டும் பாடி வருகின்றனர்.

**கட்டளைகள்**

தேவாரப் பாடல்களை இன்ன பண்ணில் பாடவேண்டும் என்ற மரபு பின்பற்றப்படுவது போல் இப்பண்களுக்குரிய பதிகங்களை இன்ன இசை மெட்டில் பாடவேண்டும் என்ற முறையைக் கட்டளைகள் தெரிவிக்கின்றது. இசைக்குரிய நாதத்தைப் பண்ணும் தாளத்தைக் கட்டளையும் வரையறை செய்கின்றன. இராகமும் தாளமும் இசையின் தாய் தந்தையாக அமையும்.

கட்டளை என்பது தேவாரத்தில் எழுத்தோசையமைதியைக் குறிக்கும். பாடலின் எழுத்தோசை அளவினைக் கட்டி உரைப்பதால் கட்டளை

யாயிற்று. இதனைச் சந்த அமைப்பு என்றும், இசைமெட்டு என்றும், யாப்பமைதி என்றும், தாள ஒழுங்கமைதி என்றும் உரைப்பர்.

கட்டு+அளை கட்டளை, கட்டப்பட்ட எழுத்தளவு. கட்டளை ஆசிரியம், கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா, கட்டளைய கீதம், கட்டளை வஞ்சி, கட்டளை வெண்பா என்ற பெயர்கள் இவ்வகையில் அழைக்கப் படுகின்றன.

கட்டளைய கீதம் என்பது தாளத்திற்கேற்ப எழுத்தளவு அமைத்துக் கட்டிய சிறுபாடல். இது குறித்து சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகிறார். மாதவி ஆடற்கலையை ஐந்தாண்டில் கற்கத் தொடங்கி 12 ஆண்டில் நிறைவு செய்தாள். கட்டளைய கீதங்களையும் அலங்காரங்களையும் கற்று முடித்தாள். (சிலம்பு. 3:10:11. அடியாக்கு உரை) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் திருமுறைகண்ட புராணத்தில் சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் பாடல்களில் அமைந்துள்ள கட்டளைகள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதில் சம்பந்தர் பாடிய கொல்லிப்பண் 4 கட்டளைகள் பெறும் என்றும், நாவுக்கரசர் பாடிய கொல்லிப்பண் 2 கட்டளை பெறும் என்றும், சுந்தரர் பாடிய கொல்லிப்பண் 3 கட்டளை பெறும் என்று குறிக்கப்பட்டுள்ளது.

ஞானசம்பந்தர் பாடிய பதிகங்களில் மூன்றாம் திருமுறையில் உள்ள 24-36 வரையுள்ளவை முதற்கட்டளையையும், 37-39 இரண்டாவது கட்டளையையும், 37-39 வரையுள்ள ஏழுசீர் கொண்ட பதிகங்களை நாற்சீர்களாக்கி மூன்றாவது கட்டளையாகவும் யாழ் நூலாசிரியர் கருதுகிறார் (ப. 242). இதனை மூன்றாவது கட்டளையாகக் கருதி, 40, 41 பதிகங்களை நான்காவது கட்டளையாகக் கருதுவர்.

அப்பர் தந்த கொல்லிப்பண் நான்காம் திருமுறையில் முதற்பதிகத்தில் அமைந்துள்ளது. அப்பர் தந்த கொல்லிப்பண் இரண்டு கட்டளை பெறும் என்பர். இதனை அறுசீரடியாகக் கருதி ஒரு கட்டளையும், எண் சீராகப் பகுத்து மற்றொரு கட்டளையும் கணக்கிடுவர்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| தானாதன | தான | தனத்தனனா | தனனாதன | தானன | தானதனா |
| கூற்றாயின | வாறு | விலக்ககலீர் | கொடுமைபல | செய்தன | நானறியேன் |
| ஏற்றாய்அடிக் | கேஇர | வ்ஃகலும் | பிரியது | வணங்குவன் | எப்பொழுதும் |
| தோற்றாதென் | வயிற்றின் | அகம்படியே | குடரோடு | துடக்கி | முடக்கியிட |
| ஆற்றேனடி | யேன்அதி | கைக்கெடில | வீரட்டா | னத்துறை | யம்மானே |

இதனை எண்சீர் கொண்ட நிலையில் இரண்டாவது கட்டளை பெறுகிறது.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|---|---|---|---|
| தானா | தனனா | தனனா | தனனா | தனனா | தனனா | தனனா | தனனா |
| கூற்றா | யினவா | றுவிலக் | ககலீர் | கொடுமை | பலசெய் | தனநா | னறியேன் |
| ஏற்றாய் | அடிக்கே | இரவும் | பகலும் | பிரியாது | வணங்கு | வன்எப் | பொழுதும் |
| தோற்றா | தென்வயிற் | றின்அகம் | படியே | குடரோ | டுதுடக் | கிமுடக் | கியிட |
| ஆற்றே | னாயேன் | அதிகைக் | கெடில | வீரட் | டானத் | துறையம் | மானே. |

சம்பந்தர், அப்பர் பாடிய கொல்லிக் கௌவாணப் பண்ணிற்குக் கட்டளை திருமுறைகண்ட புராணத்தில் கூறப்படவில்லை. இவ்வகையில் கொல்லிக்குரிய கட்டளையே கௌவாணமும் பெறும். நாவுக்கரசர் கௌவாணப் பண்ணில் பாடவில்லை.

## திருநேரிசை

நான்காம் திருமுறையில் 22-76 வரையுள்ள பதிகங்களைத் திருநேரிசை என்பர். இது யாப்பால் பெற்ற பெயராகும். இதனை நேரிசைக் கொல்லி என்பர்.

**கூவிளம் புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா**

இது அறுசீர்கள் கொண்ட கட்டளையாகும். இதில் முதற்சீரும் நான்காம் சீரும் ஒரோவழிக் கருவிளம் ஆதலும், இரண்டும் ஐந்தும் தேமாவாதலும் மூன்றும் ஆகும் எப்பொழுதும் தேமாவாகவே நிற்கும். இது மேலும் சுத்தாங்கமாகவே பாடப்பெறும்.

**நேரிசையாக அறுபதம் முரன்று (1:75:2)**

**நீணமார் முருகுண்டு வண்டினம் நீலமாமலர் கவ்வி நேரிசை**
**பாணில் யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர். (2-53-10)**

என்று இந்நேரிசைக் குறித்து சம்பந்தர் குறிப்பிடுகிறார். வண்டுகள் நறுமலர்களில் மகரந்தப் பொடியையும் தேனையும் உண்டு அம்மலர்களில் படிந்து இடையீரன்றி முரல்வது போன்று நேரிசை முழங்கும் என்கிறது. இதனை 'நந்தாத நேரிசை' என்று புராணம் கூறுகிறது. 'கொல்லியாம் பண்ணுகந்தார்' (4:49:6) என்று நாவுக்கரசர் குறிப்பிடும் பதிகம் திருநேரிசைப் பதிகமாகும். நேரிசை ஒரு கட்டளை மட்டும் பெறும். திருநேரிசையைச் சுத்தசாவேரி என்று தமிழிசைக் களஞ்சியம் கூறுகிறது. (தொ. I. ப. 41)

## திருவிருத்தம்

நாவுக்கரசர் பாடிய நான்காம் திருமுறையின் 80-113 வரையுள்ள திருப்பதிகங்கள் திருவிருத்தம் என்று அழைக்கப்படுகிறது. இவை கலித்துறை யாப்பின. இதனை விருத்தக்கொல்லி என்பர். கொல்லிப்பண்ணில் பாடுவர். விருத்தமும் ஒரு கட்டளை மட்டும் பெறும். விருத்தம் என்பது வடசொல்.

ஒன்றன் நிகழ்ச்சியைக் கூறுவது என்று பொருள்படும். இதனையும் நவரோசு இராகத்தில் சுத்தாங்கமாகப் பாடி வருகின்றனர்.

**நவரோசு**

நவரோசு என்ற இராகம் அப்பர் பதிகங்களைப் பாடப் பயன்படும் சிறப்பான இராகமாகும். கொல்லி, கொல்லிக் கௌவாணம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம் என்ற பண்ணமைந்த பதிகங்களும், திருநேரிசை, திருவிருத்தப் பதிகங்களும் நவரோசு இராகத்தில் பாடப்படுகின்றன.

இவ்வகையில் தேவாரம் பாட அதிகம் பயன்படுத்தப்பெறும் இராகம் நவரோசு ஆகும். இது 29-வ்து மேளமாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது.

ஆரோசை : ப த நி ச ரி க ம ப

அமரோசை: ப ம க ரி ச நி த ப

மனமெனுந் தோணிபற்றி மதியெனும் கோலையூன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போ தறியவொண்ணா
துனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே

ரி கம கரீ ... சா நி த நீ ... .. ரீகா ... மா கா ....
மனமெனும். தோணி பற்றி

ரீ .. கா ... மா... கா... ரீ... கா... ரீ.. பா... .. ...
ம தி யெ னும் கோ லை யூன் றி.

மா .. .. ரீ .. .. கா .. .. சா .. ரீ .... கா .... மா....
பா .... மா .... கா ... ரீ .... சா ... நீ .... தா நீ ...... பா

க ம பா ..... மா ம ப ம ப ம கா .... கா ... ரீ. சா... நீ தா நீ ....
சி.ன மெனும்

ச ரி க ரி ..... க ரீ .... கா ம பா ப ம ம கா .... ம க க ரி ரி சா நி த நீ -
சரக்கை ஏற் றி .

ச சா ச ரி க ச ரீ ... ... ரீகா. மாபா.. .. ப ப ம கா....
செறி கடல் ஓடும் போது

மா மா க ரீ ... ரி க ம க ரி ச நி த நீ பா ......
தா ... நீ ... ரீ ... சா .....

மற்ற அடிகளை இதே முறையில் பாடவேண்டும்.

நன்றி : மூவர் திருமுறைப்பாடல், த.ப.க. தஞ்சை.

இதனைச் செம்பாலையின் உழை குரலாகப் பிறந்த சங்கராபரணம் என்பர். நவரோசைப் பஞ்சமாந்தியமாய்ப் பாடப்படும் சங்கராபரணம்

என்பர். இவ்வகையில் திருநேரிசையை ஓதுவார்கள் சங்கரா பரணத்தில் பாடி வருகின்றனர். சங்கராபரணத்தை நேரிசையாகத் தமிழிசைக் களஞ்சியம் தருகிறது. (தொ. II. ப. 217)

## கொல்லி

கொல்லி என்பது பகைவர்களை அழித்தமையைப் பாடும் பண்ணாகும்.

கூற்றாயின வாறு விலக்ககலீர் (4:1:1)

நஞ்சாகி வந்து என்னை நலிவதனை நணுகாமல் துரந்தும் கரந்தும் இபீர்

சுடுகின்றது சூலை தவிர்த்தருள்வீர் (4:1:3, 4:1:4)

என்கிறார்.

நான்காம் திருமுறையின் பதிகம் 22, 23 கொல்லிப்பண் என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

நாவுக்கரசர் பாடல்கள் அனுபவப் பிழிவுப் பாடல்களாக உள்ளன. அருணகிரியாரிடமும் இந்நெறியைக் காணலாம். 'பிழை செய்த இராவணனை உய்வித்த அருளாளன் குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்' என்ற நிலையில் பதிகத்தின் இறுதிப் பாடல்கள் தோறும் தவறாமல் பாடுகிறார். இதுவே இப்பதிகத்தின் பயனுரைக்கும் பாடல்போல் அமைந்துள்ளது.

சமணச் சூழலில் வீணே கழித்த நிலையை நினைந்து இரங்கும் நிலையிலும் இறைவனது திருவருள் பெற்றியை மகிழ்ந்து உரைக்கும் நிலையிலும், தம்மைக் கடலிலிருந்து காப்பாற்றிய திருவைந்தெழுத்தின் சிறப்பினையும், உலக மக்களைக் காக்கும் பொருட்டு இறைவன் தலந்தோறும் கோயில் கொண்டிருந்த நிலையையும், ஐம்பொறிகளால் ஈர்க்கப்பட்டு அல்லல்படும் தனது நிலையைக் காக்கும்படி வேண்டும் நிலையும், இறைவன் அடியவர்கள் பொருட்டு இறைவன் செய்த அருட் திறன்களையும், உலக மக்களை நோக்கி நீங்கள் இன்னவாறு இறைவனை வழிபட்டு உய்திபெறுவீராக என்று வேண்டும் வகையிலும், இறைவனை அகத்தும் புறத்தும் இன்னவாறு வழிபடவேண்டும் என்ற நிலையிலும் அமையும் கருத்துக்கள் பொதிந்த இப்பதிகங்களைப் பாட ஏற்றதொரு பண்ணாகக் கொல்லிப்பண் அமைந்துள்ளது.

IV 22-ஆம் பதிகப் பாடல்கள் பத்தும் எரியாடல் பற்றிக் கூறுகின்றன.

துஞ்சடை இருள்கிழியத் துளங்குஎரி ஆடுமாறே (IV 22:1)

நீறுமெய் பூசிநின்று நீண்டெரி யாடுமாறே (22:2)

அடிகழல் ஆர்க்க நின்று அனலெரி யாடுமாறே (22:3)

கையெளி வீசிநின்று கனலெரி யாடுமாறே (22:4)

காதில் வெண் குழைகள் தாழக் கனலெரி யாடுமாறே (22:5)

இதே நிலையில் இறைவனின் ஆடல் காண்பான் நிலையை 23-ஆம் பதிகம் கூறுகின்றது.

அத்தாஉன் ஆடல்காண்பான் அடியனேன் வந்தவாறே (23:1)

நிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே (23:2)

கூட்டமாம் குவிமுலை யாள்கூடநீ ஆடுமாறே (23:3)

அந்தியும் பகலும்ஆட அடியினை அலசுங் கொல்லோ (23:4)

எண்டிசை யோரும் ஏத்த இறைவநீ யாடுமாறே (23:5)

நேரிசைப் பதிகங்கள் கொல்லிப்பண் என்று குறிப்பிடப்பட்டுள்ள நிலையையும் காணலாம்.

பண்ணொடு பாடல் தன்னை விரும்பும் இறைவனைப் பண்சுமந்த பாக்களால் பாடிப்போற்றும் மரபில் நாவுக்கரசர் பாடல்களும் அமைந் துள்ளன. இவர் பாடிய நான்காம் திருமுறை பத்துப்பண்களில் அமைந் துள்ளன. இவையோடு திருநேரிசை, திருவிருத்தப் பதிகங்கள் அமைந் துள. நாவுக்கரசர் பாடல் கொல்லிப்பண்ணில் தொடங்கி, நேரிசைக்கொல்லி, விருத்தக்கொல்லி என்ற பதிகங்களும் கொல்லிப்பண்ணில் பாடப்பட்டு வருகின்றன. இவையும் கட்டளை மரபுப்படி அமைந்துள. இவையனைத்தும் நவரோசு இராகத்தில் பாடப்பட்டு வருகின்றன. இலாயங்கமாகவும் சுத்தாங்கமாகவும் பாடப்படுகின்றன. கொல்லி என்ற பெயருக்கேற்ப தீமைகளையும் அஞ்ஞானசத்தையும் மலங்களையும் கொல்லும் வகை யிலும், இறைவனுடைய அருள் திறனையும், உரைப்பதோடு நாவுக்கரசர் பிறமதம்மேல் நின்ற நிலை பற்றி உருகும் பாடல்களாக உள்ளன. தமிழ் பண்களில் கொல்லிப்பண்ணை சிவபெருமான் மிகவும் விரும்பி ஏற்பான். கொல்லியான் என்ற பெயரினையும் பெற்றுள்ளான்.

# 48. நாவுக்கரசரும் அடியார்களும்

சு. ஞானப்பூங்கோதை, பேரூர்.

தெய்வ நெறி சிவம் பெருக்கும் திருவாமூரில்

"..............................................................................................

அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில் வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
மலரு மருணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார்"

என்று சேக்கிழாரால் திருநாவுக்கரசர் திருஅவதாரம் போற்றப்படுகிறது. திருநாவுக்கரசர் வாழ்வில் இடம்பெறும் அடியார்கள், அவர்தம் அன்புச் செயல்கள், ஒருவர் மீது ஒருவர் கொண்ட பக்தி மேன்மை முதலான வற்றை எடுத்துக்காட்டுவதாய் இக்கட்டுரை அமைகிறது.

**திருநாவுக்கரசரும் திலகவதியாரும்**

திருநாவுக்கரசரின் தமக்கையார் திலகவதியார். தம்பியை வழிப் படுத்திய குருவும் இவரே. சமணத்திலிருந்து சைவத்திற்குத் திருப்பியவரும் இவரே. தமது குரவர்களை இழந்த பின்னர் "தம்பியார் உளராக வேண்டும்" என்ற கருணையின் காரணமாக உயிரைத் தாங்கி இவ்வுலகத்தில் மனையில் இருந்து தவம்புரிந்து வருகிறார். மருணீக்கியார் சமண சமயம் சார்ந்ததும் திருவதிகை வீரட்டானத்திறைவரை வணங்கி, "அடியேன் பின் வந்தவனைப் பரசமயக் குழியில் இருந்து எடுத்தாள வேண்டும்" என்று பன்முறை இறைவரிடம் வேண்டுகிறார். இறைவரோ சூலை கொடுத்து மருணீக்கியாரை ஆட்கொள்ள எண்ணினார். சூலை நோயும் ஏற்பட்டது. சூலைநோயால் துன்புற்ற மருணீக்கியாருக்குச் சமணர்கள் மந்திரநீர் முதலாயினவற்றைத் தந்தும் பயனளிக்கவில்லை. உடனே தமக்கையார் நினைவு எழ "திலகவதியார் தாள் சேர்வன்" என்று திலகவதியார் திருமடம் அணைந்தார். திலகவதியார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். "நந்தமது குலம் செய்த நற்றவத்தின் பயனனையீர்! இனி மயங்காது உய்ந்து கரையேறும் நெறி உரைத்தருளும்" என உரைத்தார். தமக்கையோ, "பரசமயக்குழியில் விருந்தறியாது மூளும் அருந்துயர் உழன்றீர்! எழுந்திரீர் என்று மொழிந்தார். கழலடைந்தோர் பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீர் என்று பணித்தார். மேலும் திருவீரட்டத் திருக்கோயில் புகுதற்குப் பரசமயத்தில் புகுந்த இவரை, தகுதியுடையர் ஆக்குவதற்கு, திருநீற்றினை ஐந்தெழுத்து ஓதிக் கொடுத்தார்.

> "திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்ப
> பெருவாழ்வு வந்தது என்று பெருந்தகையார் பணிந்தேற்றங்கு
> உருவார அணிந்து தமக்கு உற்றவிடத்து உய்யுநெறி
> தருவாராய்த் தம்முன்பு வந்தார் பின்தாம் வந்தார்"

மேலும் நீறு நிறைமேனியுடன் அன்புறு சிந்தனையில் "கூற்றாயினவாறு விலக்ககலீர்" என்ற பதிகம் பாடினார்.

வீரட்டானேசுவரர் இறையருளால் "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால் நாவுக்கரசு என்ற நல்நாமம் பெற்றார்.

"புன்தலையோர் நெறிபாழ்படவந்து அரசு இங்கு அருள் பெற்றதனால் உலகு உய்ந்தது" என்று அடியார் கூட்டம் திருவதிகை வீரட்டானத்தில் எங்கும் சூழ்ந்தது.

மனத்தொடு வாய்மையுடன் மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவும் சிவச்சின்னம் விளங்கிடவே, தியானம் அறாவுணர்வும் ஈறுஇன்றி எழும் திருவாசகமும் கையில் திகழும் உழவாரமுடன் கைத்தொண்டு செய்து கலந்து கசிந்து செய்தார். திருநாவுக்கரசர் உழவாரப் பணி செய்தற்குக் குருவாக விளங்கியவர் தமக்கையார் திலகவதியாரே.

**திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும்**

திருஞானசம்பந்தர் இறைவன் திருவருள் பெற்ற செய்தியினைத் தில்லைத் திருத்தலத்திற்கு வந்த திருநாவுக்கரசர் கேள்வியுற்றார். சம்பந்தரைக் காண விழைகிறார். சைவத்திலிருந்து சமணசமயம் சார்ந்து பின்னர் இழைத்த கொடுமைகளையெல்லாம் நமச்சிவாய நாமத்தினால் வென்ற திருநாவுக்கரசர் சம்பந்தரைக் காண வருகிறார். இதனைக் கேள்வியுற்ற ஞானசம்பந்தர் எதிர்கொண்டு அழைக்கச் செல்கிறார். இருவரும் சந்தித்த நிலையைச் சேக்கிழார் பெருமான்,

> "அருட்பெருகு தனிக்கடலும் உலகெல்லா
> மன்புசெறி கடலுமா மெனவு மோங்கும்
> பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
> புண்ணியக் கண்ணிரண் டெனவும்"

எனும் பாடலில் அருட்கடல், அன்புக்கடல் புண்ணியக் கண்ணிரண்டு என இருவரின் சந்திப்பின் ஆழத்தைப் பாடுகிறார். திருப்புகலூரில் இரண்டாவது முறையாகச் சந்திக்கின்றனர். திருப்பூந்துருத்தியில், மூன்றாவது சந்திப்பில் பிள்ளையாரின் சிவிகை தாங்குவோரில் ஒருவராக திருநாவுக்கரசர் விளங்குகிறார். "அப்பர் எங்குற்றார்?" என வினவ முன் செய்த தவத்தினால் "இப்பொழுது சிவிகை தாங்கும் பேறு பெற்றேன்" என்றார். "அப்பர்"

என்ற பெருமையினை ஞானசம்பந்தரால் பெறுகிறார். மூன்று முறை இவர்கள் சந்திக்கின்றனர்.

பாண்டி நாடு செல்ல எண்ணும் சம்பந்தருக்கு சமணர்களின் வஞ்சனையைக் கூறி நாளும் கோளும் தீயன. நீர் அங்கு செல்லல் ஆகாது என்று தடுக்கிறார். பிள்ளையாரோ சமணரைத் திருநீறை அழிக்கும். நாளும் கோளும் நல்லன என்று கூறி பாண்டிய நாட்டுக்குப் புறப்படுகிறார். இவ்விரு பெருமக்களும் பல தலங்களுக்குச் சென்று வழிபட்டு அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தினர்.

**அப்பூதியடிகளார்**

திருநாவுக்கரசர் பல தலங்களை வழிபட்டு செப்பருஞ்சீர் அப்பூதியடிகளூரான திங்களூர்க்கு வருகிறார். அந்தணர்களின் மேன்மைபாடுடைய அப்பூதியடிகளார் தமது சுற்றத்தாருடன் கூவல், குளம், தரு, தண்ணீர்ப் பந்தல் முதலிய பல தருமங்களையும் "ஆண்ட அரசு" எனும் திருப்பெயரினால் அமைத்ததைக் கண்டும் கேட்டுணர்ந்த திருநாவுக்கரசர் பெருமான் அப்பூதியடிகளார் திருமனையை அணைந்தார். இவரைக் காணுகின்ற தகைமையில்லர் எனினும் முன்பு கலந்த கேண்மையுடையவரான அப்பூதியடிகள் பெருங்காதலுடன் ஆண்ட அரசுக்கு அமுது செய்ய நினைத்தார். தம் மகன் மூத்த திருநாவுக்கரசு கதலிக்குருத்து அரிந்து வரச்செல்கையில் அரவு தீண்டியது. அடிகள் அமுது செய்ய இது இடையூறு ஆகுமென அறிந்து பாயினில் துணிந்து மூடிப்புறத்து வைத்தனர். அமுது செய்ய அடியரான அறுசுவை அழைக்கையில் இறைவன் திருவருளால் இந்நிகழ்ச்சியை அறிந்து "ஒன்றுகொலாம்" எனத் தொடங்கும் பாடலைப் பாடி உயிர் பெறச் செய்தார். நாயனார் திருஅமுது செய்தற்கு, சிறு இடையூறு ஆக மகன் நின்றானே என்று வருந்தியவர்களாய் அப்பூதியடிகள் தம்பதியினர் இருந்தமை அரசுவிடம் பேர் அன்பு கொண்ட திறத்தினைக் காட்டுகிறது.

அப்பூதியடிகளாரின் பெருமையைச் "சொன்மாலை" என்று தொடங்கும் பதிகத்துள்,

> "அஞ்சி போய்க் கலிமெலிய அழலோம்பு அப்பூதிக்
> குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே"

என்று பாடுகிறார்.

**கண்ணப்ப நாயனார்**

இறைவன் உறையும் திருத்தலங்களை வழிபட்டு திருக்காளத்தி தலத்திற்கு வருகிறார். பொன்முகலி திருநதியின் தீர்த்தத்தில் நீராடி திருக்காளத்தி மலையை வலம் வந்து இறைவனைப் போற்றி 'என்

கண்ணுளானை'' என்ற திருத்தாண்டகம் பாடினார். இறைவன் அருகே முன்பு நிற்கும் வில்லேந்திய கையினையுடைய திருக்கண்ணப்பர் திருவடிகளைச் சேர்ந்து வணங்கி பெருகி விழும் கண்ணீர் போல அழுவி பாய்ந்து வலிய கூப்பிய கையோடு வணங்கி வெளியே வந்தார். இறைவனுக்குச் செய்யும் வழிபாடு முழுமை அடையும் நிலையில் வணக்கத்தைக் கண்ணப்ப நாயனார் முன்பு செய்தார்.

**மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும்**

சோழன் மகள், பாண்டிமா தேவி மங்கையர்க்கரசியாரின் அன்பின் திறத்தையும் அடியாரிடத்து அன்பு கொண்ட குலச்சிறையாரின் பெருமை யினையும் பிள்ளையார் சொல்லக் கேட்டு, திருநாவுக்கரசர் இவர்கள் இருவரையும் காண, பாண்டி நாடு புறப்பட்டார். பாண்டி நாடு ''தமிழ் நாடு'' என்று அழைக்கப்பட்டது. சங்கம் இருந்து இறைவன் தமிழ் ஆராய்ந்த இடம் அல்லவா? பாண்டி நாடு சைவ நாடாக மாறிய பின் காண்பதற்காகச் செல்லுகின்றார். பாண்டிமா தேவியும் நின்றசீர் நெடுமாறனும் உலகம் போற்றும் குலச்சிறையாரும் அரசுவின் திருவடிகளில் பணிந்து நிரம்புதல் இல்லாத பெருகிய காதல் மிகும்படி திருவடிகளைப் போற்றி நின்றனர் என சேக்கிழார் கூறுகிறார்.

**திருநீலநக்கரும் சிறுத்தொண்டரும்**

திருப்புகலூர் முருகநாயனார் திருமடத்தில் அரசுவும் சம்பந்தரும் எழுந்தருளியதைக் கேட்டு வள்ளலார் சிறுத்தொண்டரும் சிறப்புடைய திருநீலநக்கரும் அத்திருமடத்தில் தங்குகின்றனர். இவர்களது வரவினைக் கேட்டு சிறப்புடைய அடியார் பலரும் உடன் பயிலும் அன்பின் சிறப்பினால் ஏனைய அடியார்களும் அங்கு வந்து தங்கினர். திருத்தொண்டின் நிலை உணர்ந்தும் திருப்பதிகச் செந்தமிழ் திறம் போற்றியும் திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தும் ஒருப்படும் சிந்தை உடையவர்களாய் உடன் உறைவின் பயன் பெற்று அமர்ந்து இருந்தனர்.

திருக்கடவூரில் குங்குலியக் கலயனாயனார் திருமடத்தில் சிவனடியாருடன் அமுது செய்தனர். அடியார்க்கு வேண்டுவனவற்றைக் குறையில்லாது செய்து தந்தார் கலயனார்.

திருநாவுக்கரசர் நமிநந்தி அடிகளைத் தமது திருப்பதிகத்தில் வைத்துப் பாடியுள்ளார். இவ்வாறு பல அடியார்கள் நாவுக்கரசர் வாழ்வில் இடம் பெறுகின்றனர்.

1. சுற்றத் தொடர்பு நீங்கியபோது இறைவன் சார்வே பற்று எனக் கொண்டு திருக்கோயில் திருப்பணி செய்தவர் திலகவதியார்.

2. கவலைகள் இறைவனிடம் கூற தீர்வுகள் ஏற்படும் என அறியலாம்; சிறியோர் பிழையினைப் பெரியோர் பொறுப்பர்.
3. திருநீறும் ஐந்து எழுத்தும் உடற்பிணியும் உயிர்ப்பிணியும் நீக்குவன.
4. இறையருள் பெற்ற அடியார்களைக் காணுதல், போற்றுதல் அடியார்களின் இலக்கணம் ஆகும்.
5. அடியார்களின் அன்பின் திறத்தைப் பதிகத்தில் வைத்துப் பாடும் மரபு உள்ளது.
6. தம் காலத்து அடியாரையும் முற்காலத்து அடியாரையும் போற்றி வழிபடும் நிலை.
7. சைவ சமயத்தில் மகளிர் மேம்பட்ட நிலையில் விளங்கினர்.
8. இறைவன் திருவருளே அடியார் அருட்செயல்களுக்கும் காரணம் ஆகும்.

# 49. அப்பரும் அண்ணலும்

இரா. தமிழ்ச்செல்வம், காட்டுமன்னார்கோயில்.

திருநாவுக்கரசரும், அண்ணல் காந்தியடிகளும் செய்தற்கரிய பெருஞ்செயல்களைச் செய்து மக்கள் மனதில் நீங்காத இடத்தைப் பிடித்த சான்றோர்கள் ஆவர். திருநாவுக்கரசர் மாபெரும் சமயத் தலைவர் ஆவார். காந்தியடிகளோ அரசியல் சார்ந்த மக்கள் தலைவர் ஆவார். இருவரது வாழ்க்கை வரலாற்றையும் ஆராய்ந்து பார்த்தால் பல வகையில் ஒப்புமையுடையதாகத் திகழ்கிறது. திருநாவுக்கரசரின் பெருவாழ்வு அண்ணல் காந்தியடிகளின் பெருவாழ்விற்கு முன்னோடியாகத் திகழ்கிறது. இருவரது வாழ்க்கையிலும் காணப்படும் ஒப்புமைத் தன்மைகளை ஈண்டு காண்போம்.

திருநாவுக்கரசர் மகேந்திரவர்மன் என்னும் பல்லவப் பேரரசனின் மனதை மாற்றி அவனை ஆட்கொண்டு காத்தருளியதைப் போல், (600 - 638) ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் அடிமை நிலையுற்றுக் கிடந்த இந்தியப் பெருநாட்டினைக் ''கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் ஒன்று'' நடத்திக் காந்தியடிகள் ஒரு புரட்சியைச் செய்து ஆங்கிலேயர்களிடமிருந்து நாட்டைக் காப்பாற்றினார்.

**தோற்றப் பொலிவு**

திருநாவுக்கரசரின் தோற்றப் பொலிவினைச் சேக்கிழார் பெருமான்,

''சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாம் கருத்தும் கையுழவாரப் படையும்......''

என்று குறிப்பிடுகிறார். அவ்வாறே காந்தியடிகளை நினைக்கும்போது முதுமையிலும் அழகு முதிர்ந்து அருள் கனிந்து, மக்களை மயக்கி மகிழ்விக்கும் அவர்தம் இனிய புன்முறுவல், எளிமையான உடை அணிந்த தோற்றப் பொலிவு, செந்தன்மை மிக்க சீலம் போன்ற இன்னபிற குணங்கள் நம்மனக்கண் முன்னே நிற்கின்றன. இவ்விரு பெருமகனாரும் இப்புவியில் ஏறத்தாழ 80-ஆவது அகவை வ்ரை வாழ்ந்தார்கள் என்பதும் ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும்.

**உழைப்பின் மேன்மையை உணர்த்திய உத்தமர்கள்**

நாவுக்கரசர் தமது திருக்கரங்களில் உழவாரம் என்றும் ஆயுதத்தை ஏந்தித் திருக்கோயில்கள் தோறும் சென்று தொண்டு செய்தார். அதனால்

"உடைய அரசு உலகேத்தும் உழவாரப் படையாளி" என்று புகழப் பெற்றார். இவரது அடையாளச் சின்னம் "உழவாரம்" ஆதல்போல "இராட்டை" காந்தியடிகளின் அடையாளச் சின்னமாகத் திகழ்கிறது. "இராட்டை ஒழுக்கத்தைக் காக்கின்றது; உணவு அளிக்கின்றது; சோம்பலைப் போக்குகின்றது; மனதை நடுநிலைப்படுத்துகின்றது" எனக் காந்தியடிகள் பல இடங்களில் வற்புறுத்திக் கூறி இருப்பதையும் ஈண்டு நினைவில் கொள்ளுதல் வேண்டும். இவ்வகையில் இருவருமே உழைப்பின் மேன்மையினை (Dignity of Labour) உலகுக்கு உணர்த்தியுள்ளனர்.

திருஞான சம்பந்தர் நாவுக்கரசரை முதுமையின் காரணமாகப் பல இடங்களில் "அப்பர்" எனச் சிறப்பித்துக் கூறுகிறார். அதுபோல மக்கள் அனைவரும் காந்தியடிகளை "நாட்டின் தந்தை" (The Father of the Nation) என்று பாராட்டி வருகின்றனர்.

### உண்ணா நோன்பும், சத்தியாக்கிரகமும்

"பழையாறை வடதளி" என்னும் இடத்தில் திருநாவுக்கரசர் தமது குறிக்கோள் நிறைவேறுவதற்காக உண்ணா நோன்பு இருந்து சத்தியாக்கிரகம் செய்தார் என்பதைச் சேக்கிழார் பெருமான்,

> **"வண்ணாங் கண்டு நான் உம்மை வணங்கி யன்றிப் போகேன் என்று**
> **எண்ணம் முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே!"**

என்று குறிப்பிடுகிறார். இதன்கண் "எண்ணம்முடிக்கும்" என்றது சத்தியா கிரகத்தையும், "அமுது செய்யாதே" இருந்தார் என்றது உண்ணா நோன்பையும் குறிக்கிறது. இதைப் போன்றே காந்தியடிகளுக்குச் சத்தியாகிரகமும், உண்ணா நோன்பும், அவர்தம் வாழ்க்கையில் மிகச் சிறந்த போர்க் கருவிகளாகப் பயன்பட்டு நலஞ்செய்தன.

### குறிக்கோள்

திருநாவுக்கரசர் "தொண்டால் துணையும் இல்லை" என்னும் துணிபினராய், "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் உயர்ந்த குறிக்கோள் உடையவராகத் திகழ்ந்தார். மேலும், "தயா மூல தன்மம்" என்னும் தத்துவத்தின் வழி நின்று தாழ்ந்தோர்கெல்லாம் நலஞ்செய்யும் செம்மை வாழ்க்கையை நடத்தினார்.

அதுபோல, அகிம்சை நெறியும், மன்னுயிர் தொண்டுமே அண்ணல் காந்தியடிகளின் வாழ்க்கையும் குறிக்கோளுமாக இருந்தன. இன்னா செய்யாமை என்னும் உயர்ந்த நெறியையும் தம் உயிர் மூச்சு உள்ளவரை கடைப்பிடித்தார்.

## தீண்டாமை ஒழிப்பு

திருநாவுக்கரசர் சாதிமத வேற்றுமைகளைக் கடிந்து தீண்டாமையை ஒழிக்கும் கருத்துடையவராக விளங்கினார். இதனை,

> "சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
> கோத்திரமும் குலுமுங் கொண்டென் செய்வீர்?
> பாத்திரம் சிவம் என்று பணிதிரேல்
> மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே"

என்ற இப்பாடலால் அறியலாம். இவரைப் போன்றே காந்தியடிகளும் சாதிவேற்றுமைகளைக் கடிந்து தீண்டாமையினை ஒழிக்க அரும்பாடு பட்டார். "தீண்டாமை என்பது இந்து மதத்திலுள்ள ஒரு கறை" இது சமயத்தின் விளைவன்று, சாத்தானின் சூழ்ச்சியால் விளைந்தது என்று குறிப்பிடுகின்றார்.

## தொண்டின் மேன்மை

திருநாவுக்கரசர் தம் இளம் வயதிலேயே மக்கள் தொண்டு புரிந்தார். திருவீழிமிழலை என்னும் ஊரில் பெரும் பஞ்சம் நேர்ந்து மக்கள் அனைவரும் இடர்பட்டபோது மன்பதைத்தொண்டில் ஈடுபட்டார். அத்தொண்டின் மேன்மையினைச் சேக்கிழார் பெருமான்,

> "அல்லார் கண்டத் தண்டர்பிரான் அருளாற் பெற்ற படிக்காசு
> பல்லா றியன்ற வளம் பெருகப் பரமன் அடியார் ஆனார்கள்
> எல்லாம் எய்தி உண்கஎன இரண்டு பொழுதும் பறை நிகழ்த்திச்
> சொல்லாற் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை
> தொலைத்திட்டார்"

என்று குறிப்பிடுகிறார். இவரைப் போன்றே காந்தியடிகளும் தம் வாழ்நாள் முழுவதும் மக்கள் தொண்டில் ஈடுபட்டார். முதல் உலகப்போர் நடைபெற்ற காலத்தில் தம் உயிரையும் பொருட்படுத்தாது மருத்துவப்படைப் பொறுப்பினராக இருந்து காயமடைந்த வீரர்களுக்கு மருத்துவ உதவிகள் செய்து மக்கள் தொண்டை மகேசன் தொண்டாகக் கருதி செயல்பட்டார்.

## நாமார்க்கும் குடியல்லோம்

தமிழகத்தில் வேற்றவர் கொள்கையும், மொழியும், ஆட்சியும், தலைமையும் பிறவும் புகுந்து கலந்து தமிழ்மக்களுக்குப் பெருங்கேடு சூழ்ந்து வந்த நிலையில் திருநாவுக்கரசர் அவற்றை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றார். "நாமார்க்கும் குடியல்லோம்" என்று கூறி வல்லரசினை எதிர்த்து நின்றார். இவரைப் போலவே காந்தியடிகளும் ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இந்தியாவை விட்டு வெளியேறு" (Quit India) என முழங்கி மாபெரும் வல்லரசை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றார்.

**நாவன்மை**

நாவுக்கரசர் சிறந்த நாவன்மையுடையவராய் விளங்கினார்.

"பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினால்

நாவுக்கரசு என்று உலகேழினும் நின்நாமம் நயப்புற மன்னுக......"

என்பன போன்ற பாடல் வரிகள் இவரது புலமைக்குச் சான்றாக அமைகின்றன. இவரைப் போலவே காந்தியடிகளும் சிறந்த பேச்சாற்றல் உடையவராகவும், எழுத்தாற்றல் உடையவராகவும் விளங்கினார். இவரது ஆங்கிலப் புலமையை ஆங்கிலேயர்களே வியந்து பாராட்டியுள்ளனர். மேலும், திருநாவுக்கரசரும், காந்தியடிகளும் "பணியுமாம் என்றும் பெருமை" என்னும் திருக்குறளுக்கு எடுத்துக்காட்டாகவும் வாழ்ந்தனர்.

இங்ஙனம், அப்பரடிகளுக்கும், காந்தியடிகளுக்கும் இடையே பல திறப்பட்ட பண்பொப்புமைகளைக் காண முடிகிறது. அப்பரடிகளோ, மனிதரில் தலையாயவராய் விளங்கித் தெய்வீக நிலையைப் பெற்றவர். காந்தியடிகளோ மனிதரில் தலையாயவராய் விளங்கி மக்கள் மத்தியில் மறக்க முடியாதவராய் விளங்கியவர். திருநாவுக்கரசரின் அருள் இயக்கமோ நாடு, மொழி, இனம் போன்ற அனைத்தையும் கடந்து என்றென்றும் நிலைபெற்று நிற்கும் சிறப்புடையது. ஆனால் காந்தியடிகளின் விடுதலை இயக்கம் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்கு மட்டுமே உட்பட்டது என்பதையும் ஈண்டு உணர்தல் வேண்டும். இவ்வகையில், திருநாவுக்கரசரின் பெருவாழ்வு காந்தியடிகளின் பெருவாழ்விற்கு முன்னோடியாக விளங்குகிறது.

# 50. நாவுக்கரசர் உரைத்த அறநெறி

அ.ச. தமிழ்ச்செல்வி, புதுக்கோட்டை.

மணியினை மாமறைக்காட்டு மருந்தினை வன்மொழியால்
திணியன; நீள்கதவம் திறப்பித்தன, தென்கடலில்
பிணியன; கல்மிதப்பித்தன, சைவப் பெருநெறிக்கே
அணியன; நாவுக்கரசர் பிரான் அருந்தமிழே!

**நாவரசர் சிறப்பு**

சமயக்குரவர் நால்வரையும் நோக்கும்போது ஞானசம்பந்தர் மூன்று வயதிலேயே இறைவியிடமே ஞானப்பாலுண்டு ஞானம் பெற்றார். சுந்தரர் இறைவனாலேயே கைலாயத்தில் இருந்து அனுப்பப்பட்டார். மாணிக்கவாசகராக நந்தீசுவரரே வந்து பிறந்தார்.

''மதியஞ் சடைமேற் கொண்டார்,
நந்தீசனை வாசகனாகக் கொண்டார்''

மாணிக்கவாசகர் சைவராகப் பிறந்து சைவராக வாழ்ந்து 16 வயதிலேயே இறைவனாலேயே குருஉபதேசம் செய்விக்கப் பெற்றவர். ஆனால் நம் நாவரசரோ, இருவினைப்பய்ன் துய்க்க நம்போல் சாதாரண மனிதராகப் பிறந்து வினைவழி சமணம் சார்ந்து, அச்சமய தலைமைக்குருவாகி, பிறகு தம் தவறுணர்ந்து திருந்து, சிவபெருமானை முழுமுதற் பொருளாக ஏற்று, இறைவனிடமே சத்தியாகிரகம் செய்து, நேரில் மனித உடலோடேயே இறைவனோடு போராடி கைலாயம் காணாது ''மாளும் உடல்கொண்டு மீளேன்'' என வாதாடி, கைலாயத்தையே திருவையாற்றில் ஆக்கிய சமயக் குரவர் நாவரசர் ஒருவரே; உலகின் முதல் சத்யாக்கிரகி நாவரசரே.

''சிறை பெறாநீர் போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந்துறை சிவனே
இறைவனே நீ என் உடலிடங் கொண்டாய்''

என்று தம் உடலையே இறைவன் உடல் ஆக்கி விட்டவர். ஞானசம்பந்தர் கூட சமணர்கள், தானிருந்த மடத்தில் நெருப்பு வைக்கும்போது ''அவ்வக்கினியின் வெப்பத்தை நோக்கி, ''பையவே சென்று பாண்டியர்க்காகவே'' என்று கட்டளையிட்டதாகச் சேக்கிழார் பேசுவார். ''பாண்டியனைத் திருத்துவதற்காகவே இவ்வாறு சொன்னது எனினும்

சம்பந்தரது தற்காப்பு நிகழ்வும் அச்சொல்லில் அடங்கியுள்ளது. ஆனால் நாவுக்கரசரோ, கல்லில் கட்டி கடலில் இட்டபோதும் நஞ்சூட்டப்பட்ட போதும், ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை. தன் பரிசற்ற நிலையில் இருந்தார். இறைவன் தானே ஓடிவந்து அவருடலைத் தன் உடல் ஆக்கினார். விடத்தை அமுதாய் மாற்றினார். மேலும் இங்கு நாம் ஒன்று சிந்திக்க வேண்டும். சமயக்குரவர் நால்வருமே முக்தி பெற்றவர்கள் எனினும் இறைவனாலேயே மண்ணுலகுக்கு அனுப்பப்பட்டவர்கள், இளமையிலேயே இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர்கள், (சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர்). மண்ணில் வாழ்ந்த வாழ்க்கை நெறிக்கும் அனுபவங்களுக்கும் நம்போன்று வினைவழி மானுடராய்ப் பிறந்த நாவரசரின் வாழ்க்கை நெறிக்கும், அனுபவங்களுக்கும் வேறுபாடு உண்டு. நாவரசர் தாம் பெற்ற முக்தியின் சிறப்பையும், அப்பதம் பெற தாம் பெற்று வாழ்ந்த நெறிமுறைகளையும், வழிமுறைகளையும் எளிதாக, அழகாக தமது தேவாரத்தில் சைவப் பெருநெறிக்கே அணிகலனாக ஆக்கித்தந்துள்ளார். எனவே முத்தி பெற விழையும் ஒவ்வொரு மனிதனும் தெரிந்து கொள்ள வேண்டியவை நாவரசரின் அறநெறிகள். அவரது திருமுறை மனித சமுதாயம் உய்ய சொல்லப்பட்ட அறநூலும், அருள் நூலும் ஆகும்.

## தலையாய மனிதன் ஆவதற்கு நாவரசர் சொல்லும் அறநெறி

உலகில் மனித வாழ்க்கைக்கும், விலங்கு வாழ்க்கைக்கும் இடையில் இட்ட எல்லைக்கல் கடவுள் உணர்வேயாகும். அஃது இல்லாதபோது அவர்கள் வாழ்க்கையும் விலங்கு வாழ்க்கையே. ஏனெனில் விலங்குகள் செய்யக்கூடிய உணவு தேடுதல், உலவுதல், மக்களைப் பெறுதல், இறத்தல் இவற்றைத் தவிர இவர்கள் இம்மண்ணில் செய்வதும் பெறுவதும் வேறொன்றுமில்லை. எனவே வள்ளுவரும் இவர்களை விலங்குகள் என்றே சொன்னார். ''விலங்கனையர் மாக்கள்''. ஆனால் கடவுள் உணர்வு கொண்டு இம்மண்ணில் முழுமுதற் பரம்பொருளாய சிவபெருமானுக்கு அடிமை என்ற உறுதியான மனத்தை உடையவனே மனிதன் ஆவான்.

**''என்தாயோடு என்அப்பன் ஏழேழ் பிறவிக்கும்**
**அன்றே சிவனுக்கு அடிமை''**

என்று சொல்லும் திருமந்திரம்.

சிவனுக்கு அடிமை என்ற உணர்வோடு, தன்னலத்தை துறந்து அன்பில் கனிந்து பிறர்பொருட்டாய் வாழ்ந்து, வாழ்வில் அச்சம் அகற்றி குறிக்கோளுக்காக உயிரையும் விடச் சித்தமாயிருக்கும் மனநிலையினைப் பெற்றுவிட்டால் அவனே மனிதனில் தலையாய மனிதன் என்று நாவரசர் உரைக்கின்றார்.

"அனுசயப்பட்டது இது என்னாதே,
கனி மனத்தொடு கண்களும் நீர்மல்கி
புனிதனைப் பூவனூரனைப் போற்றுவார்
மனிதரில் தலையாய மனிதரே"

(திருப்பூவனூர் குறுந்தொகை)

**தலையாய மனிதன் முத்தியடைய நாவரசர் சொல்லும் செவ்விய அறநெறி**

இறைவன் மனிதனுக்கு கொடுப்பதற்காகவே முத்தி இன்பத்தை வைத்துள்ளான் கிடைத்தற்கரிய இந்த மானுடப் பிறவியுள்ளபோதே அவன் நமக்காக வைத்துள்ள நமது பொருளை நாம் அதைப் பெறுவதற்கான வழி தெரிந்து தவறாமல் நம்மதாக ஆக்கிக் கொள்வதே அறிவுடைமை.

"வச்சபொருள் நமக்காகு மென்று எண்ணி" - நாவரசர் தேவாரம், வச்ச பொருளை நமக்கு ஆக்குவதற்கு நாவரசர் சொல்லுவதெல்லாம் பண்டைத்தமிழரின் உலகம் போற்றும் செவ்விய வாழ்க்கை நெறியே யாகும். இறைவன் உயிர்களைப் படைக்கும்போது அவ்வுயிருக்கும் உயிராய் உள்ளே அன்பு உணர்வையும் படைத்து தன் அருள் விளங்கச் செய்கிறான். எல்லா உயிர்களிலும் உள்ள இந்த அன்பு நெறியினை மனிதன் தன் பகுத்தறிவால் உணர்ந்து, எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம் உயிர் போல் எண்ணி வாழும் நெறியே, செவ்விய அறநெறியாகும். பண்டைத் தமிழ்ச்சோழன் மனுநீதி தன் மந்திரிகளிடம் சொல்வதாக, பெரியபுராணம் பேசும்,

"அறநெறியின் செவ்விய உண்மைத்திறம் ஓர்
சிந்தை செயாது உரைக்கின்றீர்"

"இவ்ஆன்மனம் அழியும் துயர் அகற்ற மாட்டாதேன்
வருந்தும் இது, தனதுறு பேர்இடர் யானும் தாங்குவதே தருமம்".

(பெ.பு. நகர்ச்சிறப்பு - 129 - 40, 130 - 42)

என்று சேக்கிழார் சொல்லுவதிலிருந்து செவ்விய அறநெறி எது என்பது நமக்கு தெற்றென விளங்குகிறது. இத்தகைய செவ்விய அறநெறியின் வழி கொல்லாமை, அன்பு, கருணை, தியாகம், சத்தியம், பொறுமை, உறுதி, புனலடக்கம் ஆகிய அறம், பொருளின்ப, வீடுதரும், அனைத்து நீதி நெறிகளும் மனிதனிடம் தோன்றுகிறது. இந்த நீதி நெறிகளாகிய தரும நெறிகளுக்கெல்லாம் மூலமாகவும், அந்நெறிகளை மனிதன் தன் வாழ்வில் கொள்ளும்போது, அந்த நெறிகளோடு இணைந்தும் உணர்வில் ஊடுருவி நிற்பதுவும் அன்பு எனும் அறமே ஆகும். இந்த எண்குண நீதிகளை மனதில் நிறைத்து, நான் இறைவனாகிய சிவபெருமானுக்கு அடிமை என்ற உணர்வோடு இறைவனிடம் கொள்ளும் இறையன்பே

மனிதனை இறைவனிடம் கொண்டு சேர்க்கிறது. இதனையே நாவரசரும் "தயாமூல தன்மவழி" என்று சொல்லும் சிறப்பு நாம் உளத்தில் போற்ற வேண்டியது ஆகும். சமணத்தை விட்டு செவ்விய அறநெறி போற்றும் சைவத்தில் சேர்ந்த அவர்,

"பேணும் பொறியிலியேன் தனைப் பொருளாய் ஆண்டுகொண்டு
தயாமூல தன்மவழி யெனக்கு நல்கிட வேண்டும்"

(திருத்தாண்டகம்)

என வேண்டுகிறார்.

தனக்கு மட்டுமல்ல, இத்தகைய தயாமூல தன்மவழி நின்றவர்க் கெல்லாம் நலங்கொடுக்க வேண்டும் என்றும் இறைவனிடம் வேண்டுகிறார்.

"சலங்கெடுத்துத் தயாமூல தன்மமென்னும் தத்துவத்தின்
வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பி"

(திருத்தாண்டகம்)

வள்ளுவரும், இத்தகைய தயாமூல தன்மவழி வாழும் செவ்விய நெறியையே,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

என்றார். வையத்து வாழ்வாங்கு வாழ்வது நாவரசரின் தயாமூல தன்மவழி வாழ்தலேயாகும். அதன் வழி முத்தி பெறுவதும் சத்தியமாகும்.

"பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்"

"நற்றார் நடுக்கற்ற தீபமும் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே" (திருமந்திரம்)

என்பார் நாவரசருக்கு முந்தைய நம் திருமூலர். பன்மலராகிய செடிமலர் கொண்டர்ச்சிப்பது வெறும் பாற்கலனையும், கொல்லாமை முதலாய எண் குண நீதிமலர்கொண்டு அர்ச்சிப்பது பால் நிறைந்த பாற்கலன் போன்றதும் ஆகும். கொல்லாமை, ஐந்தடக்கல், கொள் பொறுமையோடு இரக்கம் அறிவு, மெய், தவம், அன்பு ஆகிய எண் குணங்களே இறைவனின் எண் குணங்களையும் மனிதனில் பதிக்கும் இயல்புடையது ஆகும். சிறந்த அகமலரால் தொடுக்கப்படும் மாலையே துளக்கமில்லாத விளக்கனைய திருவடியுணர்வும், திருவடி நாடும் எண்ணமும் ஆகும். அதுவே உயிர் இறைவன் திருவடியில் விரும்பி அமர்ந்த சிறந்த நிலைபெற்ற முத்தி இன்ப இடமாகும்.

எனவேதான் நாவரசரும் திருக்குறுந்தொகைப் பதிகம் முழுவதிலும், இக்கருத்தையே வலியுறுத்தி மானுட முழுதும் திருவடியுணர்வு பெறவேண்டும் என்ற பெருவிருப்பினராய்,

"எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்டலரிடுவார். வினைமாயுமால்"
"நீளமா நினைந்தெண்மலர் இட்டவர் கோலவல்
வினையுங் குறைவிப்பார்"

"பூங்கொத்தாயின மூன்றோடு ஓரைந்து இட்டு
வாங்கி நின்றவர் வல்வினை ஓட்டுவார்"

"மூன்றோடு ஓரைந்துடன் தானப்போதிடுவார் வினை தீர்ப்பவர்"

"ஏழித்தொன்மலர் கொண்டு பணிந்தவர்
ஊழித்தொல்வினை ஓட அகற்றுவார்"

"ஒலி வண்டறை ஒண்மலர் எட்டினால்
காலை யேத்த வினையைக் கழிப்பரால்"

"உரைசெய் நூல்வழி யொண்மலர் எட்டிடத் திரைகள்
போல்வரு வல்வினை தீர்ப்பரால்"

என்றும்,

"கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டாம்
எட்டவாங் கைகள் வீசி எல்லி நின்றாடு வானை
அட்டமாமலர்கள் கொண்டே ஆனஞ்சும் ஆட்ட ஆடிச்
சிட்டராய் அருள்கள் செய்வார் திருச்சோற்றுத்துறையனாரே"
(குறுந்தொகைப் பதிகம்)

என்றும் அட்டபுட்பம் கொண்டு, அட்டமூர்த்தி தன்பால் அணைந்து அவன் திருவடி சேரும் தயாமூல தன்மவழியைச் சிறப்பாக எடுத்துச் சொல்லும் அறநெறி ஒவ்வொரு மானுடன் உள்ளத்திலும் நிலைநிறுத்த வேண்டியது ஆகும்.

நாவரசர், மனிதன் முத்தி அடைவதற்கு ஆரியர்களின் வடமொழி வைதீக வழிபாட்டு நெறிகளையும், வாழ்வியல் நெறிகளையும், முற்றிலும் மறுத்து உரைத்த தமிழ்ச் சைவ சமய வழிபாட்டு அறநெறிகள், நாவரசர் சொல்லும் நான்மறை விளக்க அறநெறி:

மறை எனவும் வேதம் எனவும் பெயர் பெற்ற முதல் அறநூல்கள் யாவும் முற்காலத்தில் கல்லால மரத்தின் கீழ் நால்வர்க்கு இறைவன் உரைத்தனன் என்ற வரலாறு திருமுறைகளில் பல இடங்களில் நாம் காண்பது ஆகும். நான்மறை எனப்படும் அவை நான்கும் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கையுமே பொருளாக உடையன ஆகும் என்பதும் திருமுறைகளில் நன்கு வலியுறுத்தப்படுகிறது. கொல்லாமை முதலிய எண்குண மலர் கொண்டு போற்றி வாழும் வாழ்வியல் நெறியும்,

வழிபாட்டு நெறியாகிய நான்மறைநெறியே மனிதனை இறைவனிடம் சேர்க்கும் நாவரசர் சொல்லும் தயாமூலதன்ம வழியாகும்.

ஆரியர்கள் வேதம் என்றும் மறை என்றும் சொல்லும், ரிக், யசூர் முதலிய நால் வேதங்களில் எல்லாம், எங்கும் தமிழர்களின் இந்த உயர்ந்த தயாமூல தன்ம வழி, (உயிர்களுக்கு முத்தி கிடைக்கச் செய்யும் வழி) சொல்லப் படவே இல்லை. மாறாக அவை கொல்லும் நெறியைப் போதிக்கின்றன. நிமிர்சடை முழு முதல்வனாகிய இறைவன், வாயினால் சொல்வது, நாற்பொருள் பெறும் வழி உணர்ந்த பழமையான தமிழ் முதுநூல் என்று புறநானூறு பேசும்.

"நன்று ஆய்ந்த நீள்நிமிர் சடை
முது முதல்வன் வாய் போகாது
ஒன்று புரிந்த ஈர் இரண்டின்
ஆறு உணர்ந்த ஒரு முதுநூல்" (புறம். 166)

(ஈர் இரண்டின் ஆறு = 2 x 2 = 4 அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கினைப் பெறும் வழி)

"ஐம்புலனும் - அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு
அறம் பொருள் இன்பம் வீடு மொழிந்த வாயான்
முக்கணாதி மேய முதுகுன்றே" (1.56.6)

என்ற ஞானசம்பந்தர் வாக்கும் இங்கு நோக்கற்பாலது.

கல்லால மரத்தின் கீழ் நால்வர்க்கும் சொன்னதும் இந்நால்வழி உணர்த்தும் தமிழ் முதுநூலேயாகும். அம்முதுநூல்கள் திருமுறைகளும் அறம், பொருள், இன்பம் - உணர்த்தும் திருக்குறளும், வீடுணர்த்தும் அருள் நூல்களான தமிழ் சித்தாந்த சாத்திரங்களுமேயாகும்.

வடநூலார் சிவபெருமானைப் போற்றும் உயர்ந்த வேதமாகச் சொல்லும் (யசுர் வேதம்) ஸ்ரீ ருத்ரத்தில் கூட சிவபெருமானைப் பற்றிச் சொல்லும்போது,

"ஸோப்பாய்ச்" என்றும்
(இருவினை தொடரும் மானிட உலகில் பிறப்பான்)

"க்ருத்ஸேப்ப" (விஷயங்களில் பற்றுடையவர்)

"வஞ்சதே பரி வஞ்சதே" ஸ்தாபூனம் பதயே"

(வஞ்சகராகவும், படுவஞ்சகராகவும், நயவஞ்சகராகவும் திருடுபவர் களின் தலைவராகவும் உள்ளவருக்கு)

என்றும் சொல்லப்படுகிறது என்பது அறிஞர்கள் கண்ட உண்மை. மேலும், கௌதாரிக் கறியும், மீன்கறியும் உண்ணும்படியும், உயிர்களைக் கொன்று

பலியிடுவதை ஏற்றும் பிறவேதங்களிலும் பேசப்படுகிறது. - (அ.ச.ஞ.பெ.பு. ஓர் ஆய்வு).

இவ்வண்ணமாக தன்னைப் பற்றிப் போற்றிப் பேசாததும், கொல்லாமை நெறி இல்லாததும், அதன் வழியே தோன்றும் தயாமூல தன்மவழி இல்லாததும், ஆன வடமொழி வேதத்தை எப்படி சிவபெருமான் தன்வாயால் இடைவிடாது எப்போதும் சொல்லிக்கொண்டே இருப்பான் என்பதை என்று நாம் உண்கிறோமோ அன்றுதான் நமக்கு முத்தி வாசல் கதவு திறக்கப்படுகிறது என்பதை நாம் உணர வேண்டும். அவன் சொல்லுவதெல்லாம் நாற்பொருள் உணர்த்தும் தமிழ்த்திருமுறைகளே என்பதையும் உணரவேண்டும்.

எனவேதான் நாவரசரும்

''அறங்காட்டி அந்தணர்க்கு அன்று ஆலநிழல்
அறமருளிச் செய்த அரனார்''

என்றும்,

''அறம் உரைத்த பட்டன்''

என்றும்,

''அருமறைகள் தாமே போலும் தூநெறிக்கு
வழிகாட்டும் தொழிலார்''

என்றும்,

''முறை முறை நெறிகள் வைத்தார்''

என்றும்,

''நால்வர்க்கு நல்லறம் உரைத்தார்''

என்றும்,

''செந்நெறி மன்னுசோதி''

செந்நெறியான், செந்நெறியுரை அண்ணல், செந்நெறி மேவிய சிவன், செந்நெறியுரை அத்தன் என்றெல்லாம் நூல் முழுதும் பேசுகிறார். மேலும் முத்தி கொடுப்பதற்காக மனிதனை இறைவன் தேர்ந்தெடுக்கும் போது, அம்மனிதனின் மனத்தில் உள்ள, கொல்லாமை முதலிய எண்குண நீதி நெறிகளை தயாமூல தன்ம நெறிகளை அளந்து அறிந்த பின்பே அவன் தேர்ந்தெடுக்கின்றான் என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்தோதுகிறார்.

"அளக்கு நெறியினன், அன்பர்கள் தம்மனத் தாய்ந்து கொள்வான்
விளக்கும் அடியவர் மேல்வினை தீர்ந்திடும் விண்ணவர்கோன்''

(திருவிருத்தம்)

என்று நாவரசர் சொல்லும் அறஉரையை நம் மனத்தில் பதித்தல் வேண்டும். மண்ணில் பிறந்த மானுடன் ஒவ்வொருவனும் இதனை உணர்ந்து போற்றிப் பின்பற்ற வேண்டும்.

## நாவரசர் சொல்லும் ஆகம அறநெறி

இன்றைய காலச் சூழலில் ''வடமொழி ஆகம சாத்திரத்தில் சொல்லப் பட்டுள்ளது'' என்று சொல்லிக்கொண்டு, எரிபெருக்கி தீவளர்த்து வழிபாடுகள் பலவும் செய்யப்படுகின்றன. ஆகமம் என்ற சொல்லிற்கே நீதி என்பதே பொருள் ஆகும். நீதி என்பது தயாமூல தன்ம நெறி முறைகளையே குறிக்கும். இது குறிப்பதுவும் திருமுறை வழிபாடுகளே யாகும். இதனை மறந்து விட்டு எரிபெருக்கிச் செய்யும் வழிபாடுகள் எல்லாம் நரியின் சூழ்ச்சிபோல் பயனற்றதாகி விடும் என்பத்னை நாவரசர் பறையறைந்து சாற்றுகிறார். நமது நாவரசர், எரிவேள்வியில் இடும் பொருளையும் இறைவன் ஏற்றுக் கொள்ளமாட்டார். கொள்ளாததோடு இறைவன் பதில் ஏதும் பேசவும் மாட்டார் என ஆணித்தரமாகப் பேசுகிறார்.

''எரிபெருக்குவர் அவ்வெரி ஈசனது
உருவருக்க மாவது உணர்கிலார்
அரி அயற்கரியானை அயர்த்துப்போய்
நரிவிருத்தம தாகுவர் நாடரே''

(ஆதி புராணத் திருக்குறுந்தொகை)

''இல்லேபுக்கு இடும்பலியும் இடங்கொள்ளார், போவாரல்லர்
பட்டிமையும் படிறுமே பேசா நின்றார், பார்ப்பாரைப்
பரிசழிப்பார் போல்கின்றார் தாம், அட்டிய சில்பலியுங் கொள்ளார்.

(ஆதிபுராணத் திருக்குறுந்தொகை)

நாவரசர் காட்டும், உண்மை அறநெறிகளை, முத்திக்கு வழியை மானுட சமுதாயம் முழுதும் உணர வேண்டும். மானுடம் உய்ய வழிகாட்டும் அருளாளர்களும் உணர வேண்டும். அந்நாளே இறைவன் மண்ணில் வந்து முத்தியளிக்கும் நாள். மானுட சமுதாயம் முழுதும் முத்தியின்பம் பெறும் நாள். இறைவன் வச்ச பொருள் நமக்கே ஆகிய பொன்னாள்!! நாவரசர் மகிழ்ந்தருளும் நன்னாள்!!

**ஆழிமிசைக் கல்மிதப்பதில் அணைந்தபிரான் அடிபோற்றி!!**

# 51. நாவுக்கரசர் வாழ்வும் வாக்கும்

இ. தனுஷ்கோடி, கும்மிடிப்பூண்டி.

நிறைமொழி மாந்தர்களால், நெறிவளர் சைவம் தழைத்த பூமி, நம் தமிழ்நாடு. இறைவனைப் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளாய்" எண்ணிப் பாடி உருகிப் பரமனின் தொண்டே தம் பணியென்று வாழ்ந்தவர் திருநாவுக்கரசர்.

"மூவர் முதலிகள்" என்றழைக்கப்படுகின்ற சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரில் அகவையால் முதிர்ந்தவர் அப்பர்பெருமான். சம்பந்தருக்கு நாற்பது ஆண்டுகள் மூத்தவர். தமிழ் மக்களுக்குப் புதிய வழிகளைப், புதிய வாழ்க்கைத் தத்துவங்களை உருவாக்கித் தந்தவர்.

**அச்சம் தவிர்**

அச்சம் என்பது மனித சமுதாயத்தில் யாருக்கும் தேவையில்லை என்ற உயரிய கருத்தை,

**"அஞ்சுவது யாதொன்று மில்லை,**
**அஞ்ச வருவது மில்லை"**

என்று பாடி, ஆன்மத் துணிவை வகுத்துத் தந்தவர் திருநாவுக்கரசர். எத்தகைய துன்பம் பிறரால் வரினும் அவற்றை எல்லாம் பொறுமையாக ஏற்றுப் போராடி வாழ வேண்டுமென்ற "சத்யாக்கிரக" நெறியினைத் தம்முடைய வாழ்க்கையிலேயே நடத்திக் காட்டிய முதல் "சத்யாக்கிரகி" திருநாவுக்கரசர் ஆவார்.

**"மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை! - எமை**
**மாட்ட நினைக்கும் சிறைச்சாலை!"**

என்றார் பாரதிதாசன்.

ஆனால், வெகு ஆண்டுகளுக்கு முன்னரே,

**"வெய்யநீற்று அறையதுதான்**
**வீங்குஇளவே னில்பருவம்"**

எனும் சேக்கிழார் பெருமானின் வாக்கிற்கிணங்க, சுண்ணம் நீற்றறையில் ஏழு நாட்கள் "சத்யாக்கிரகி" போல் அமர்ந்திருந்தார் திருநாவுக்கரசர்.

**இறைமார்க்கங்கள்**

இறை உணர்வை, செம்பரம்பொருளை அடையும் நெறிகள் "மார்க்கங்கள்" நான்கென்பது சைவம். காதன்மை நெறி (சன்மார்க்கம்), தோழமைநெறி (சகமார்க்கம்), மகன்மை நெறி (சற்புத்திரமார்க்கம்), அடிமைநெறி (தாசமார்க்கம்) என்ற நான்காகும். திருநாவுக்கரசர் அடிமைநெறிச் சார்புடையவர். "ஆளுடைய அரசு" என்றும், "அருந்தமிழ் ஆளியார்" என்றும் சிறப்பித்து அழைக்கப்பட்டவர்.

**தொண்டே வாழ்க்கை**

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

என்ற முழக்கத்தோடு சைவப் புரட்சியாளராய்த் திகழ்ந்தவர் நாவுக்கரசர். நாவுக்கரசரே ஓர் இயக்கம். உயிர்ப்புள்ள கவிதைப் பிரவாகம். அன்பின் விரிவும், தெளிவும் ஊடாடும் அளப்பரிய ஞானக்கடல்.

"நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம்!
நரகத்தில் இடர்ப்படோம்! நடலை யில்லோம்!
ஏமாப்போம்! பிணியறியோம்! பணிவோ மல்லோம்!
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை!"

மன்னன், குடிமகன் என்று தம்மை ஒரு சிறுவட்டத்தில் அடக்கிக் கொள்ள இயலாத ஏமாப்பும், ஞானச்செருக்கும் நாவுக்கரசரின் இயல்பு. சிவானந்தப் பொய்கையில் நீந்துவோர்க்குப் பிணியில்லை. சிவம் தவிர்த்து யாருக்கும் பணியும் பணிவும் வேண்டாம். துன்பம் என்பது இனியில்லை. மனக்குறுக்கம் தவிர்த்து, சைவப் பொதுநெறி கண்டவர் திருநாவுக்கரசர்.

**மெய் வழிபாடு**

ஐதீக, வைதீக நெறி தவிர்த்து, அறிவுசார் சைவ ஆளுமை கொண்டவர் நாவுக்கரசர். வெறும் பூவும், நீரும், பூசைப்பொருட்களும் ஈசனுக்கு ஏற்புடையனவாகுமோ? இவை வெற்று ஆரவாரம்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப ரவர்தம்மை நாணியே.

நெஞ்சமெல்லாம் நிறைந்து நினைந்து நெக்கு உருகுபவர் அக வீட்டில் அமர்பவன், பொன்னார்சடை புண்ணியன். ஈசன் யாரைக் கண்டு நாணுவார்? பூவினால், நீரினால், பூசைபுனஸ்காரங்களைக் கொண்டே தன்னையடையலாம் என்று நினைக்கிறார்களே பொக்கமிக்கவர், அவரைக் கண்டு நாணுவாராம். இந்த நாணம்,

"பிறர்பழியும் தன்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு"

என்று திருவள்ளுவர் கூறுகிறாரே அத்தகைய நாணமல்லவா இது? சான்றோரின் நாணமும், ஈசனின் நாணமும் இங்கே ஒரே பொருள் கொள்வது எண்ணி இன்புறத் தக்கதாம்.

## இறை அறிஞானம்

ஞான உறவால் இறைமை வசப்படும். உணரப்படுபவன், உணர்த்து பவனும் அவனே.

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே!"

விறகினுள் மறைந்திருக்கும் தீ போன்றவன். பாலினுள் உறைந் திருக்கும் நெய் போன்றே கண்ணிற்குப் புலப்படாதவன் ஈசன். அவனோடு நேசம் வளர்க்கும் உறவு கோல் உறுதுணையாக, அன்பெனும் உணர்வுக் கயிற்றினால் முறுக வாங்கிக் கடையும் தவவலிமை, மாமணிச் சோதியனை அகக்கண் முன் நிறுத்தும். அப்படி, நிறுத்திக் கண்டு களித்தப் பெருமான் அப்பரடிகள்.

மரக்கோலால் மரத்தினில் கயிற்றால் முறுக வாங்கிக் கடையும்போது தீ வெளிப்படும் என்றொரு பொருளும், தயிர்க்கோலில் கயிற்றால் முறுக வாங்கிக் கடையும்போது பாலில் உள்ள நெய் வெளிப்படும் என்றொரு பொருளும் ஒருசேர விளக்கமாக்கும் ஈற்று இரு அடிகளின் சொற் சுவையும், பொருட்சுவையும் பயின்று இன்புறத்தக்கது.

## அன்பே சிவம்

சைவ சித்தாந்தம் அறிவுப் பூர்வமானது, ஞானக் கல்வி. அன்பின் போதம், மானுடம் உய்ய வாழ்வியலோடு ஊடாடிக் கலந்த உன்னதத் தேடல். நாவுக்கரசர் அன்பின் வழியது உணர்ந்த ஆன்மிகப் போராளி.

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலு மரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

உள்ளத்தில் அன்பில்லாது, சிவனின்பால் சித்தம் செல்லாது - கோவில் கோவிலாகத் தீர்த்தங்கள் கோடிக்கணக்காம் சேகரித்து, ஒன்றாக்கிக் குளித்து நீராடுவார்கள். இதனால் என்ன பயன்? இவர்கள் அரன்பால் அன்பற்றவர்கள். சிவமே அன்பு, அன்பே சிவம் என்று உணரத் தவறியவர்கள்.

இவர்கள் மூர்க்கர்கள். ஓடும் நீரினை ஓட்டைக் குடத்திலிட்டு மூடிக்காக்க நினைக்கும் மூடர்கள். எவற்றால், எதனால், எவ்வழியால் சிவம் வசப்படும்? அன்பின் பிடி கிடைக்கும்? எவ்வகைப் பூசையினால் இது சாத்தியமுறும்?

"காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே!"

சிவத் தெளிவே இறைவர்க்குச் செய்யும் பூசை. உடல் கோவிலாகிறது. கடிமனம் அடிமையாகிறது. வாய்மை தூய்மையாகிறது. அன்பே நெய்யும் பாலாய் அபிஷேகம். என்ன ஆனந்தம்! இந்தப் பூசையில்! இங்கே பருப்பொருட்கள், கோவில், அடிமை, இலிங்கம், நெய், பால் ஆகியவை. தூலப்பொருட்களுனூடே, சூக்கும உணர்வால், அறிவால் செழித்து அன்பால் விளைந்த ஆனந்தப் பூசை. இதுவே நாவுக்கரசர் கண்ட ஆன்ம வழிபாடு. ஆனந்த மயமான அன்பின் வழிபாடு.

**உட்கலந்த ஜோதி**

உடல் வீடு, உள்ளம் அகல், அன்பை நெய்யாக வார்த்து, உயிரைத் திரியாக்கி, ஞானத் தீ மூட்டி எரித்து இருந்து காண்பதே சிவசக்தித் திருவடிகள். இதுவே பரமானந்தம். இதுவே மார்க்கம்.

"உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே!"

இதை அறியாது வீணே அலைந்து, ஆராய்ந்து, தேடி வாழ்ந்த நிலையெண்ணித் தமக்குள் வெட்கம் மீதூற விலா எலும்புகள் உடையச் சிரித்து ஆர்ப்பரிக்கிறார் திருநாவுக்கரசர்.

"கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக் கழித்துப்போக்கித்
தெள்ளியே னாகிநின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற்றெல்லா முடனிருந் அறிதியென்று
வெள்கினேன் வெள்கிநானும் விலாவிறச் சிரித்திட்டேனே!"

நினைப்போரின் நினைவெல்லாம் உட்கலந்து, உடனிருந்து - அறிவாய் - என்று அறிவிப்பவன் இறைவன். என்னுள் உட்கலந்த ஜோதியை அறியாது தேடினேன். அவன் உள்ளிருப்பதை அறியாத கள்ளனேன்! கள்ளத் தொண்டன் நான். வீணாய் காலத்தைத் தேடுவதற்கே செலவிட்டேன். அவன் உள்ளிருப்பதை அறிந்து கொண்டதும் பிழை உணர்ந்தேன்! வெட்கமுற்றேன்! வெட்கம் பெருகிப் பெருகி என்னுள் உணர்வுகள் திடும்பென, விலா எலும்புகள் புடைத்து உடையச் சிரித்து ஆர்ப்பரித்தேன் என்று ஆன்மப் பெருமிதம் கொள்கிறார் நாவுக்கரசர்.

## உழவாரம் என்னும் உன்னதப் பணி

"ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணிஅலது ஒன்றிலார்
ஈர அன்பினார் யாதும் குறைவு இலார்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ?"

சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர்கள் பற்றிப் பேசும்போதும் கூறிய சொற்களிவை அடியார்கள் அனைவருமே "ஈசன் பணி அல்லாமல் ஒன்றும் இலார்" என்றே வாழ்ந்தவர்கள். திருநாவுக்கரசரும் அப்படியே வாழ்ந்தவர்.

நாவுக்கரசரின் வாழ்க்கையே தொண்டு, தொண்டுதான் வாழ்வு. "உழவாரம்" என்று சொல்லப்படுகிற ஆயுதம் எப்போதும் நாவுக்கரசரோடு இருக்கும். உழவாரப் படையென்பது திருக்கோவில்கள், அதையொட்டிய தெருக்களில் இருக்கிற புல் முதலியவற்றைச் செதுக்கி ஓரத்தில் எறிவதற்கும், குப்பைகளை அப்புறப்படுத்துவதற்கும் பயன்படுத்துகின்ற கருவியாகும். உழவாரத்தைக் கையிலேந்திப் போகும் திருக்கோவிலைச் சுத்தம் செய்வதோடு அல்லாமல் திருவீதிகளையும் சுத்தம் செய்து கொண்டே சென்றார் திருநாவுக்கரசர் என்று சேக்கிழார் பெருமான் பாடுகிறார்.

## தொண்டில் தோய்ந்த தொண்டர்

"அருள்பெரு மகிழ்ச்சி பொங்க
அன்னம் பாலிக்கும் என்னும்
திருக்குறுந் தொகைகள் பாடித்
திரு உழவாரம் கொண்டு
பெருத்துஎழு காதலோடும்
பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புஉறுமேனி கண்ணீர்
வெண்ணீற்று வண்டல் ஆட"

நாவினிக்கப் பாடிக் கொண்டே திரு உழவாரம் மேற்கொள்கிறார் நாவுக்கரசர். சொல்லும் ஆங்கே செயலும் ஒன்று கலப்பது சான்றோர்க்கியல்பு. சொல்வேறு, செயல்வேறு என்று வாழத் தெரியாதவர்கள் நம் சான்றோர்கள்.

பெருத்தெழுந்த காதலோடு, தான் செய்யும் தொண்டில் உணர்வெல்லாம் கலந்த நிலையில் உழவாரம் நடைபெறுகிறது. பாடிக்கொண்டே உழவாரத்தில் ஈடுபடுவதால், நெக்குருகி, நெக்குருகிக் கண்ணீர் மேலிடுகிறது. கண்ணீர் மேனியெல்லாம் வழிகிறது. "வெண்ணீற்று வண்டல் ஆட" என்று பாடிப் பூரிக்கிறார் சேக்கிழார் பெருமான். மகளிர்கள் சுண்ணநீர் கலந்து ஒருவர் மீது ஒருவர் வீசி வண்டலாட்டயர்தல் போல நாவுக்கரசரின் திருமேனியில் ஆனந்தக் கண்ணீர் திருநீற்றுடன் கலந்து ஒழுகுவது வண்டலாடல் போல இருக்கிறதாம்.

**பற்றுக்கள் அறுபடும்**

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்;
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவோர்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்

என்ற சேக்கிழாரின் பாடலுக்கு இலக்கணமானவர் நாவுக்கரசர்.

பற்றற்றவர்க்குப், பற்றுக்கள் எவையேனும் உள்ளிருக்கின்றனவா என்று சோதித்தறிவது இறைமையின் விளையாட்டு. இது போன்ற சோதனைகள் நாவுக்கரசருக்கும் நேர்ந்திருக்கின்றன.

கோவில் திருஉழவாரம் செய்து கொண்டிருக்கிறார். நாவுக்கரசரின் உழவாரம் நுழைந்த இடம் எங்கும் பொன்னினோடு நவமணிகள் பொலிந்து இலங்க அருள் செய்கிறார் இறைவன். செம்பொன்னும் நவமணிகளும் பளபளவென்று தகத்தகாயம் செய்கின்றன. இவையெல்லாம் திருநாவுக்கரசரின் மனதில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. கூழாங்கற்களோடு கற்களாய்ப் பாவித்து, உழவாரத்தில் ஏந்தி அருகிருந்த குளத்தினில் தூக்கி எறிகிறார்.

''புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும்
சொல்லோடும் வேறுபாடு இலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்''

என்று திருநாவுக்கரசரைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகிறார். இத்தோடு முடிந்ததா சோதனை! பெண்ணாசை இல்லாப் பெருமையும் நாவுக்கரசருக்குச் சேர வேண்டாமா? தொடர்ந்தது சோதனை.

பேரழகுப் பெட்டகமாய் மாதர் புடை சூழ்ந்தனர். ஆடினார்கள், பாடினார்கள். அவர் மீது மலர்மழை பொழிந்து கூடினார்கள். கூடுவது போன்று அணைத்தார்கள். ஆடைகள் தளர்ந்து, இடை நுடங்க ஓடினார்கள். இவையெல்லாம் எந்தச் சலனத்தையும் நாவுக்கரசரின் மனதில் ஏற்படுத்த வில்லை. அன்பு உருகும் மெய்த்தன்மையோடு, சித்தம் நிலை குலையாது செய்யும் பணியே தலைமையாய்க் கொண்டு நின்றார் நாவுக்கரசர்.

மாதரவர் மருங்குஅணைய வந்துஎய்தி மதனவசக்
காதலவர் புரிந்துஒழுகும் கைதவங்கள் செய்திடவும்
பேதம்இலா ஓர்உணர்வின் பெரியவரைப் பெயர்விக்க
யாதும்ஒரு செயல் இல்லாமையால் இறைஞ்சி எதிர்நின்றார்.

இறையுணர்வோடு ''உம்மால் இங்கு என்ன முறை உடையேன் யான், அம்மானுக்கே ஆள் ஆனேன். என்னை வருத்தாதேயுங்கள்'' என்று திருநாவுக்கரசர் இறைஞ்சுகிறார். தம்மைச் சுற்றி நின்ற பெண்களெல்லாம்

''சிவகணங்களாகவே'' தோற்றமளித்தனர். அப்பர் எல்லாவற்றையும் சிவமாகக் காணும் பேறு பெற்றவர். அவருக்கு மண், பொன், பெண் எல்லாம் பேதமின்றிச் சிவமயமாகத் தோன்றுதல் இயல்பு.

அவ்வியல்பினரான நாவுக்கரசரைப் ''பேதமிலா ஒருணர்விற் பெரியவர்'' என்கிறார் சேக்கிழார்.

**மக்கள் பணி**

நாவுக்கரசர் இறைப்பணியென்பது ''மக்கள் பணி'' என்ற புதிய விளக்கம் கண்டவர். இறைப்பணியின் விரிவும் ஆழமும் மக்கள் தொண்டாய் பரிணமிக்கும் சைவ நெறி கண்டவர்.

''பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பார் அவரைப் போல்''

என்று துயர் துடைக்கும் பணியை தம் வாழ்நாள் தொண்டாய்க் கொண்டு வாழ்ந்தவர் நாவுக்கரசர்.

**உலகு தழுவிய அன்பு**

''நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''

என்றார் திருமூலர். இப்பூவுலகில் நம் சான்றோர்கள் பெற்ற இன்பம் இறை இன்பம். அன்பின் இன்பம். உயிர்க்கு உறுகண் செய்யாமையால் கண்ட இன்பம். உலகம் உய்ய நெறிகண்ட சமயம் நமது சைவம். சைவம் என்பது மானுடப் பொது நெறி. சைவம் மானுடப் பொது நெறியானால் எங்கும் இன்பம்.

''தாமின்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறும்'' சான்றோர்களின் இன்பம் என்றும் உலகின் இன்பமாக, உயிர்களின் இன்பமாகவே இருக்கும். இன்ப அன்பினில் விளைந்த, சைவ நெறிவளர்த்த சான்றோராம் நாவுக்கரசின் வாழ்வும் வாக்கும் ஒன்று போலவே இருந்தது. சொல்லிய வண்ணம் செயல் என்பதின் எடுத்துக்காட்டாய்த் தொண்டின் சிகரமாய் வாழ்ந்து சிறந்தவர் திருநாவுக்கரசர்.

இன்றைய அறிவியல் எத்தனைச் சிகரங்களைத் தொடினும் ''மெய் உணர்தல்'' என்பது ஒன்றே ஆன்மிகத்தின் குறிக்கோளாக இருக்க முடியும். நம் முன்னோர்கள் இறைமை உணர்ந்தவர்கள். அப்படி வாழ்ந்த நம் முன்னோர்களை நினைவு கூர்வது என்பது இன்றைய நமது ஆன்மிகக் கடமையாகும்.

அவர்களின் தொண்டுள்ளமும், அவர்கள் உயிர்கள்பால் காட்டிய அன்பும் இன்றைய அவசர யுகத்திலும் நினைக்கப்படுவது காலத்தின் அவசியமாகும்.

# 52. அப்பர் சமணராயும் சைவராயும்

தாயம்மாள் அறவாணன், மதுரை.

அப்பரடிகளின் காலம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கும் 7-ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது. தமிழக வரலாற்றில் அரசியல், சமய இலக்கிய அளவில் இக்காலத்தை ஒரு திருப்புமுனைக் காலம் எனலாம். தெற்கே களப்பிரர் ஆட்சி, பாண்டியன் கடுங்கோனால் கி.பி. 575-இல் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. களப்பிரர் காலத்தில் செழித்த சமயங்கள் சமணமும் பௌத்தமும். தமிழகத்தின் வடபகுதியாகிய தொண்டை நாட்டிலும் நடு நாட்டிலும் பல்லவர் ஆட்சி இருந்தது. அப்பர் காலத்துக் காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டவன் மகேந்திர பல்லவன். அப்பரின் ஊர் நடுநாட்டில் இருந்தது. தொடக்க காலப் பல்லவர்கள் வைதிக மதத்தைச் சார்ந்திருக்க, மகேந்திர பல்லவன் சமண மதத்தைச் சார்ந்திருந்தான். இச்சூழலில் அப்பர் பிறந்து வளர்ந்த ஊருக்கு அண்மையில் இருந்த திருப்பாதிரிப்புலியூர் புகழ்பெற்ற சமண மதம் இருந்த இடமாக இருந்தது. எனினும் தமிழ்நாடு முழுவதும் மக்கள் சமணத்தைச் சார்ந்தோராகவும் சைவத்தைச் சார்ந்தோராகவும் பிரிந்து கிடந்தனர். எனினும் அரசர் சமணராக உள்ள இடங்களில் மக்கள் பெரும்பாலோர் சமண சமயத்தைச் சார்ந்திருந்தனர். அரசன் சார்ந்திருக்கும் மதத்தை அப்படியே தழுவி இருப்பது தமிழருடைய பொது மரபு. பிற்காலச் சோழ பாண்டியர் ஏற்புக்கு ஏற்பச் சைவராயும் வைணவராயும் தமிழர் இருந்தனர். இசுலாமியர் காலத்தில் இசுலாமியராக மாறினர். ஐரோப்பிய அரசுகள் ஆண்டவேளையில் கிறித்துவராக மாறினர். அரசர்க்கு எதிர் நிற்பது போராடுவது சாதிப்பது என்பன எல்லாம் அருகி இருந்த காலத்தில் அப்பர் வேறுபட்ட புதிய மனிதராகத் தோன்றுகிறார்.

இவர் சிறந்த அறிவாளியாக இருந்திருத்தல் வேண்டும். ஆனால் இவர் வாழ்க்கையில் துன்பங்கள் தொடர்ந்து சூழ்ந்தன. பெற்ற தந்தையார் இறந்தார். தொடர்ந்து தாயாரும் இறந்தார். ஒரே ஓர் தமக்கையான திலகவதிக்கு நிச்சயிக்கப்பட்ட மணமகன் கலிப்பகையாரும் போரில் இறந்தார். இந்நிகழ்வுகள் வாழ்க்கை துன்பமானது என அவர் மனத்தைப் பாதித்திருத்தல் வேண்டும். எனவே வாழ்க்கை அவலமானது எனக் கருதிய சமண சமயத்திற்கு அவர் ஈர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். சமண தத்துவத்தைக் கரைத்துக் குடித்தவர் என்பதால் தருமசேனர் என்ற பட்டத்தையும் பெற்றார்.

குடும்பத்திலிருந்து பிரிந்து தனித்து வந்திருக்கும் ஒருவரை ஏனைய எல்லாவற்றையும்விட, நோயே உறவைத் தேட வைக்கும். 'அப்பா', 'அம்மா' என அன்புடையாரை அழைக்க வைக்கும். அப்பருக்கு வந்த சூலை நோயே அவரைச் சமணத்திடமிருந்து பிரிக்க வைத்தது. அக்கையாரைச் சென்று சேர்ந்து, அவர் காட்டிய அன்பில் நெகிழ்ந்து நோய் நீங்கி அக்கையார் பக்கமே வாழ வைத்தது. சிவவழி நோய் நீக்கம் அப்பரை, சைவ சமயத்தில் மீட்டுச் சேர்த்தது என்பதை விட ஒரே ஊன்றுகோலான தமக்கை காட்டிய அன்பும் உருக்கமுமே அவரைச் சைவத்துடன் இணைத்தன எனக் கருதுதல் பொருத்தம்.

'கொல்லாது சூலைநோய் குடர்முடக்கித் தீராமை
யெல்லாருங் கைவிட்டா ரிதுசெயலென் முன்பிறந்த
நல்லாள்பாற் சென்றியம்பி நானுய்யும் படிகேட்டுங்

(பெ.பு. 57:1-3)

'அவ்வார்த்தை கேட்டலுமே யயர்வெய்தி யிதற்கினியான்
எவ்வாறு செய்வனென வீசரருள் கூடுதலால்
ஒவ்வாவிப் புன்சமயத் தொழியாவித் துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வன். (பெ.பு. 59)

அடுத்து அப்பரின் மத மாற்றத்தை உடன்படாமல் சமணர் தூண்டுதலால் பல்லவ மன்னர் செய்ததாகப் பெரியபுராணத்தில் கூறப் பெறும் நீற்றறையினுள் விட்டுத் தாழிடல், நஞ்சைக் கொடுத்தல், மதயானையால் மாளச்செய்தல், கல்லுடன் கட்டிக் கடலில் பாய்ச்சுதல் ஆகியன அப்பர் வாழ்வில் நிகழ்ந்த மெய்யான வரலாற்று நிகழ்ச்சிகளா? அவற்றைக் காஞ்சிபுரத்தில் இருந்த மன்னன், திருவதிகையில் வாழ்ந்த அப்பர் மேல் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்யச் சாத்தியமா? என்பன ஆராய்ச்சிக்குரியன. என்றாலும் அப்பரும் அவரை ஒட்டி மன்னனும் சமணத்தை விட்டுச் சைவத்தைச் சார்வதற்கான சூழல் அன்று நாடு முழுவதும் இருந்தது. அப்பர், மன்னர் ஆகியோரின் மத மாற்றத்திற்குச் சமண பௌத்தத்தால் இழந்த செல்வாக்கை வடமொழி வேதங்களை முன்னிறுத்தும் பிராமணப் புரோகிதர் மீட்டனர். சமணத்தினின்றும் சைவத்துக்குப் பாண்டியன் உள்ளிட்ட மன்னர்கள் வைதிகம் சார்ந்தோராக ஆயினர்.

சைவத்திற்கு மாறிய அப்பரிடம் சின்ன வயதிலேயே உள் உறைந்து போன சமண தத்துவச் சடங்கு செல்வாக்குக்குள் இருந்தன எனலாம். மூவரில் திருஞானசம்பந்தர் திருமணம் செய்து கொள்கிறார்; சுந்தரர் இரு பெண்களை மணம் புரிந்து கொள்கிறார். அப்பர் ஒருவரே ஏனைய இருவரைவிட நிறைந்த அகவை வாழ்ந்தபோதும் திருமணம் செய்து கொள்ளாமலே மெய்த்துறவியாக வாழ்ந்தார். சமணத்தினின்று சைவத்திற்குத் திரும்பியபோது வயது அதிகமாக இருந்திருக்கலாம். காரணம் சமண மதம் துறவு மதம் ஆதலின் அம்மதத்தில் முன்பிருந்த காரணத்தால்

துறவியாகவே பின்பும் இருத்தல் கூடும். சமண மதத்தார் பேச்சைக் கேட்டுப் பெண்களைப் பார்க்க மறுத்து உள் சென்று கதவு அடைத்து வாழ்ந்தார் என்று தெரிகிறது.

பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற
சமண்நீசர் சொல்லே கேட்டுக்
காவிசேர் கண்மட வார்க் கண்டோடிக்
கதவடைக்குங் களவ னேன்றன்

(திருவாரூர் - 4-ஆம் திருமுறை)

பின்னாளில் உழவாரப் பணிகளில் ஈடுபட்டிருந்தபோது தேவமாதர்கள் குழல் அவிழ இடை நுடங்க துகில் அசைய மாறவேளுடன் கூடி நின்று ஆடியும் பாடியும் அப்பர் சித்தத்தைத் திரிக்க முயற்சி செய்தபோது அவர்,

'சித்த நிலை திரியாது செய்பணியில் தலைநின்றார்.'

(பெ.பு. 422)

அவரே மாதர் மையல் பற்றிப் பாடும்போது

'வாசக் குழல் மடவார் போகமென்னும் வலைப்பட்டு வீழாதே வருக'

(திருமுறை - 255)

ஆக முன்னைய சமணச் சார்பால் அவருக்கு உறுதிப்பாடு வந்தது. அப்பர் எப்போதும் உழவாரத் திண்படை அறாத் திருக்கரத்தராகவே இருந்தார். தாம் செல்லும் திருப்பதிகளில் திருக்கோயில் சூழ வலம் வருவழியின் திருக்குளம், திருமதில் ஆகியவற்றுள் கிடக்கும் குப்பை கூளங்கள், முட்கள், புதர்கள், புல்பூண்டுகள், செடிகொடிகள் முதலியவற்றை அகற்றித் தூய்மை செய்தார். அக்காலத்தில் சமணப் பள்ளிகளிலும் புத்த விகாரங்களும் அமைக்கப்பட்டு கவனிக்கப்பட்டன. இவை சிலம்பு, மணிமேகலை ஆகியவற்றாலும் காவிரிப்பூம்பட்டினத் தொல் அகழ் ஆய்வுகளாலும் அறிய முடிகின்றன. சங்க காலத்தில் கடைசியில் பார்ப்பனர்களை முன்னிறுத்திய வைதிகக் கோயில்கள் அரசக் கவனிப்பை இழந்திருக்க வேண்டும். அரசனைச் சார்ந்து சமண பௌத்தத்தைத் தழுவியிருந்த பொதுமக்களும் கோயில்களுக்குச் செல்வதை, அவற்றைப் பேணுவதைப் பேரளவு நிறுத்திக் கொண்டிருத்தல் வேண்டும். (இன்னொரு செய்தியும் இங்கே நினைக்கத்தக்கது. திருமறைக்காட்டுக் கோயில் முற்றுமாக மூடப்பட்டுத் திறக்க முடியாமல் கிடந்த வரலாறு)

இந்நிலையே அப்பரை உழவாரப் படையை எப்போதும் எடுத்துச் செல்லும் கையராக ஆக்கி இருத்தல் வேண்டும். உழவாரம் ஏனைய வேதியரான சம்பந்தர் சுந்தரர் கையில் இல்லாமையும் வேதியர் அல்லாதவர் கையில் இருப்பதும் தனிக்கவனத்துக்குரியது. கோயில் துப்புரவுத் தொண்டராக அப்பர் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார் என்று இன்றைய மொழியில் எடுத்துச் சொல்லலாம்.

# 53. நாவுக்கரசரில் சிவச் சின்னங்கள்

பு. இரா. திலகவதி, கடலூர்.

திருநாவுக்கரசரின் தேவாரப் பதிகங்கள் உணர்த்தும் கருத்தமைவுகள் சைவ சமய மேன்மையை எடுத்துரைக்கவும், சிவன் எனும் முழுமுதற் பொருளின் அருளை அடியார் பெற்று உய்ய வேண்டும் என்பதாகவும் அமைகின்றன. மக்கள் தம் செயற்பாடுகளால் இறைஉணர்வையும் சைவ சமய மேன்மையையும் அறிதல் வேண்டுமெனத் தனிநிலைக் கோயில் வழிபாட்டு நெறிகளையும், பொதுநிலை விழா அயரும் வழிகளையும் எடுத்துரைத்த திருநாவுக்கரசர் சைவ சமய அடியார் என்று மக்கள் தங்களைப் புறச்சமயத்தாரினின்றும் வேறுபடுத்திக் காட்டத் தங்கள் மேனிப்புறத்தில் சிவஞ்சார் சின்னங்கள் அணிதலை வற்புறுத்தியுள்ளார்.

பல்லவர்காலச் சமுதாயச் சூழலில் புறத்தே தரிக்கும் சமயக் கோலங்களுக்குச் சிறப்பிடம் இருந்தது. மக்கள் தங்கள் சமயத்தாரை இனம்கண்டு உறவாடி மகிழ்வதற்கும் இவை வழிவகுத்தன. உலகினைத் துறக்கும் துறவுக்கோலத்திலும், இறையடியார் என்று உலக வாழ்வில் நிமிர்வுடன் நடைபோட்டு, வாழ்வினை மகிழ்ச்சியுடன் எதிர்கொள்ள சிவச்சின்னங்கள் மக்களுக்குத் துணைநின்றன.

சிவச்சின்னங்கள் என ஓதுவதற்கும், புனைதற்கும் என எடுத்துரைத்தன மூன்றாகும்.

1. திருவைந்தெழுத்தினை ஓதுதல்
2. திருநீறு பூசுதல்
3. உருத்திராக்கம் அணிதல்

### திருவைந்தெழுத்தினை ஓதுதல்

திருவைந்தெழுத்து சி, வ, ய, ந, ம என்ற ஐந்து எழுத்துக்களைக் குறிக்கும். இவற்றுள்,

சி - சிவபரம்பொருள்
வ - அவனருள்
ய - உயிர்
ந - மறைப்புச் சக்தி
ம - மலம்

என்பவற்றைக் குறித்து நிற்கும்.

இவ்வைந்தெழுத்தை எண்ணுங்கால் சிவத்துக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பும், சிவத்துக்கும் உலகத்துக்கும் உள்ள தொடர்பும், உயிர்களுக்கும் உலகத்துக்கும் உள்ள தொடர்பும், அத்தொடர்புண்டான காரணமும், அதனால் விளையும் பயனும் நம் எண்ணத்துக்கு வந்து இறைவன் திருவருள் நீழலை விட்டு நீங்காது நிற்கும் நிலையைக் கைவரச் செய்யும் என்பார் சோமசுந்தரம் செட்டியார்.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணலாகும் திருவைந்தெழுத்தை ஓதின் பெறும் பயன்கள் எனப் பின்வருவனவற்றைச் சுட்டிக்காட்டலாம்.

1. துன்பம் விலகும்
2. இயமன்தூதர் நெருங்கார்
3. நன்னெறி கைகூடும்
4. நற்றுணையாதல்
5. நாவினுக்கருங்கலமாய்த் திகழ்தல்
6. நடுக்கத்தைக் கெடுத்து நலம் பயத்தல்
7. ஞானமும் கல்வியும் தரல்
8. வீடுபேறு கிட்டல்.

திருநாவுக்கரசர் சமணர்கள் கற்றுணைப்பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும் நற்றுணையாக நமச்சிவாயத்தைப் புணையாகக் கொண்டு மீண்டவராதலின் இவர் பாடல்களில் திருவைந்தெழுத்தை ஓதுவதால் வரும் பயன்கள் பெரிதெடுத்துப் பேசப்பெறுகின்றன. சான்றாகப் பின்வரும் பாடலைக் கூறலாம்.

'ஏதுமொன்றும் அறிவில ராயினும்
ஓதிஅஞ்செ ழுத்தும் உணர் வார்கட்குப்
பேதமின்றி அவரவர் உள்ளத்தே
மாதுந்தாமும் மகிழ்வார் மாற்பேறரே'

திருவைந்தெழுத்து ஓதுவார் நெஞ்சமே கோயிலாகக் கொண்டு இறைவன் வீற்றிருப்பான் என்பது இப்பாடல் வழித் தெளிவுபடுத்தப் பெறுகின்றது.

### திருநீறு பூசுதல்

வடமொழியில் திருநீற்றினை ஸ்ரீ விபூதி என்பர். இச்சொல்லின் பொருள் 'மேலான ஐசுவரியம்' என்பதாம்.

'விபூதி அணிதலானது ஞானிஒளியால் சுட்ட
பசுமல நீக்கத்தின் போது விளங்குகின்ற
சிவதத்துவப் பேற்றிற்கு அடையாளம்'

என்பார் மு. அருணாசலம்.

திருநாவுக்கரசர் திருநீற்றின் மேன்மையைப் பின்வரும் கருத்தமைவு களில் எடுத்துரைத்துள்ளார்.

1. சுடலைப்பொடி, வெந்தவெண்ணீறு, வெண்பொடி சாம்பல், சுண்ணப்பொடி, சாந்தம் பூதி என்று பல்வேறு பெயர்களைச் சுட்டல்.
2. பேணி அணிபவருக்குப் பெருமை தரல்.
3. அவலம், வருத்தம் தீர்த்தல்.
4. புன்மை தவிர்த்தல்
5. வெந்துயர் தீர்த்தல்
6. இன்பம் அளித்தல்
7. சிவஞானம் தரல்
8. பத்தி தரல்
9. வீடுபேறு தரல்.

'வெள்ளை நீறு' (தொ.நா. 1-6-1)

'விலை பெரிய வெண்ணீறு' (தொ.நா. 3-4-3)

'தணல் முழுகு பொடி' (தொ.நா. 5-2-7)

திருநாவுக்கரசர் சைவர்கள் தோற்றப் பொலிவில் சிவனுடன் உறவுடைய கேண்மையர் என்ற உறுதியினைக் காட்டவும், மக்களுக்கு எல்லா நலங்களையும் தரவல்லது என வலியுறுத்தவும் சிவச்சின்னங்களில் ஒன்றான திருநீற்றினைப் பெரிதும் பரவி நின்றார் எனலாம்.

**உருத்திராக்கம் அணிதல்**

உருத்திராக்கம் சிவனின் கண்ணிலிருந்து தோன்றியது என்ற நம்பிக்கை பண்டுதொட்டே நிலவி வருகிறது. இதனை அக்குமணி என்றும் அழைப்பர்.

தேவாரப் பாடல்களில் உருத்திராக்கம் பற்றிய குறிப்புகள் வரினும் அவை யாவும் இறைவனுக்கு அணிகலனாக விளங்குவதாகவே அமைகின்றன. திருவைந்தெழுத்தை ஓதுதல், திருநீறு புனைதல் என மக்கள் இவற்றைப் பேணிப் போற்ற வேண்டும் என்று வற்புறுத்தியமை போன்று உருத்திராக்கம் அணிதல் வேண்டும் என வலியுறுத்தவில்லை. மாறாக,

'அக்கினொடும் என் பணிந்த அழகன்' (சோ.வ. 15-2-7)

'அக்கோடரவ மணிந்தான்' (சோ.வ. 29-1-2)

'அக்கரவம் ஆரம் பூண்டான்' (சோ.வ. 32-2-6)

என உருத்திராக்கம் இறைவனுக்கு அணிகலனாக விளங்குவதே போற்றப் படுகிறது.

இறைவனே அணிந்திருக்கும் அணிகலனாக உருத்திராக்கம் விளங்கு வதால் பின்னாளில் உலகோரும் அதன் பெருமையுணர்ந்து சிவச்சின்னமாக தாமும் அணிந்து மகிழ்ந்தனர் என்பது தெளிவு.

திருநாவுக்கரசர் தெய்வம் சான்ற இசைப்பாடல்களைத் தலந்தோறும் பாடி மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியபோது அவர்கள் மனம் சிவச்சிந்தனையில் ஆழ்ந்து இறையுணர்வு பெற வேண்டும் என்று விரும்பியதோடு மேனியில் சிவச் சின்னங்களை அணிந்தும் திருவைந்தெழுத்தை ஓதியும் வாழ்தல் வேண்டும் என்று நல்லுரை கூறியுள்ளார்.

திருநாவுக்கரசர் தமது தேவாரத்தில் சிவச்சின்னங்களைக் கூறியதோடு திருவைந்தெழுத்தை ஓதுவதால் ஏற்படும் நன்மைகள், திருநீறு பூசுவதால் ஏற்படும் நன்மைகள் ஆகியவற்றையும் விரித்துரைத்து மக்களை இறைநெறியில் பற்று கொள்ளுமாறு வாழ வழிகாட்டியுள்ளார்.

# 54. அப்பர் செய்த அரு. ச் செயல்கள்

கோ. நச்சினார்க்கினியன், அண்ணாமலைநகர்.

அப்பர் வரலாற்றைப் பெரியபுராணம் கொண்டும் அவர் பாடிய தேவாரப் பாடல்கள் கொண்டும் நாம் அறிய முடிகின்றது.

அவர் நிகழ்த்திய அற்புதங்கள் பல 1. நீற்றறையில் ஏதமின்றி இருந்தது. 2. கடும் விடம் உண்டும் அழியாதிருந்தது 3. கொலைசெய் யானையால் ஏவப்பெற்றும் கொல்லப் பெறாது இருந்தது. 4. கல்லிற் கட்டிக் கடலில் இடவும் கல்மிதப்பால் கரையுற்றது. 5. திருப்புகலூரில் அப்பூதி மகனுக்கு விடம் தீர்த்தது. 6. திருமறைக்காட்டில் கதவு திறந்தது போன்றவை குறிப்பிடத் தக்கவையாகும்.

அப்பர் அடிகள் சமண சமயத்தில் தருமசேனராக இருந்து சூலை நோயால் சைவ சமயம் புகுந்தது கண்டு பல்லவ மன்னன் அழைத்தபோது,

> ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
> நரகத்தில் இடர்ப்படோம்''

என்று கூறுகின்றார்.

இவ்வாறு மாற்றுத் திருத்தாண்டகத்தில் நமனை யஞ்சோம் என்று கூறியவர் திருச்சக்தி முற்றத்து இறைவனைப் பாடும் தேவாரத்தில்,

> ''கோவாய் முடுகி அடுதிறற் கூற்றம் குமைப்பதன்முன்......
> தேவா திருச்சக்தி முற்றத்து உறையும் சிவக்கொழுந்தே''

என்று பாடுகின்றார்.

இவ்வாறு எமபயம் இல்லை என்று கூறியவர் எமனுக்கு அஞ்சுவானேன் என்ற வினாவிற்குத் தெளிவான விடை வேண்டும். இங்ஙனமே பெண்ணாடகத்தில் அஃதாவது தூங்கானை மாடத்து இறைவனை வழிபடும்போது,

> ''என்னாவி காப்பதற்கு இச்சையுண்டேல் இருங்கூற்று அகல''

என்றும்,

> ''இடபம் பொறித்தென்னை ஏன்று கொள்ளாய்''

என்றும்

"ஆவா சிறுதொண்டன் என் நினைந்தான் என்று அரும்பிணிநோய்

....... ......... ......... .........

பூவார் கடந்தையுள் தூங்கானை மாடத்து''

என்றெல்லாம் கூற்றுவனுக்கு அஞ்சுவது எதற்கு?

அடுத்து இவ்வாறு அஞ்சியவர்,

''கற்றுக் கொள்வன வாயுள நாவுள

எற்றுக் கோநமனால் முனிவுண்பதே''

(தனித் திருக்குறுந்தொகை - 6)

என்று எமபயமின்மையைக் கூறுகின்றார். மேற்குறித்த இச்செய்திகள் பெரியபுராணத்தில் குறிப்பிடும் அப்பர் வரலாற்றில் காணப்படும் முரண்பாட்டுச் செய்திகளாகும். இச்செய்திகள் பெரியபுராணமும், தேவாரமும் காட்டும் வரலாற்றுப்படி எமபயம் இல்லை என்றவர்க்கு எமபயம் ஏன் வந்தது என்றும் வந்த எமபயம் எவ்வாறு தவிர்ந்தது என்றும் அறிய வேண்டின் இன்றுள்ள தேவார அமைப்போ, பெரியபுராண வரலாறோ துணை புரியுமா என்பது ஐயம். வேறு முறையில் அஃதாவது அப்பரடிகளின் தத்துவ வளர்ச்சியின் அடிப்படையில் அவை படிமுறையில் அமைய வேண்டும்.

அடுத்து நீற்றறையில் இட்டபோது அப்பரடிகளை ஏழுநாள் எரிப்பானேன்? அரசனுக்கு மாறுபாடு கொண்ட ஒருவரை அரசனே குற்றவாளி என்று கொல்லக் கருதும்போது நேரே கருவிகொண்டு கொன்றிருக்கலாம். நீற்றறையில்தான் இடவேண்டுமென்றிருந்தால் ஆண்டும் ஒருநாள் எரித்தால் அமையும். ஏழுநாள் எரிப்பானேன் எரித்தபின் உயிரோடு இருக்கிறாரா என்று திறந்து பார்ப்பானேன் என்றெல்லாம் பல திறப்பட்ட வினாக்கள் எழுகின்றன.

இந்த வினாக்களுக்கு விடையாக,

''மாசில் வீணையும் மாலை மதியமும்......

ஈசன் எந்தை இணையடி நீழலே'' (தனித் திருக்குறுந்தொகை - 1)

என்று அவர் பாடியதாக அகச்சான்று கொண்டு சேக்கிழார்,

''வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்

ஐயர்திரு வடிநிழல் அருளாகிக் குளிர்ந்ததே'' (பெ.பு. 98)

என்று பேசுகின்றார்.

இவ்வாறு இந்த சமயத்தில்..... நாவுக்கரசர் பேசியது இதுவாயின்,

''தோட்பட்ட நாகமும் சூலமும் சாற்றியும் பத்திமையால்

கோட்பட்டு நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே''

(திருவிருத்தம் - 5)

என்று கூறுவானேன்? ஆனால் சேக்கிழார் அமணர்கள் கூற்றாக,

"அதிசயமன்று இதுமுன்னை அமண்சமயச் சாதகத்தால்
இது செய்து பிழைத்திருந்தான்"

என்று கூறுகின்றார். அப்பர் இறைவன் அருளால் பிழைத்திருந்தார் என்று கூற, சமணர்கள் அமண் சமயச் சாதகத்தால் பிழைத்திருந்தார் என்கின்றனர்.

அடுத்து நஞ்சிட்ட நிகழ்ச்சியைக் குறிப்பிடும்போது அப்பரடிகள்,

"துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திராதே
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி அடிகளாரே"

(திருநனிபள்ளி - 5)

என்று அருளால் விடம் தவிர்ந்தது என்று அகச்சான்றாகக் கூறியதைச் சேக்கிழார்,

"நஞ்சும்அமு தாம்எங்கள் நாதன் அடியார்க்கென்று.....
வெஞ்சமணர் இடுவித்த பாலடிசில் மிசைந்திருந்தார்"

என்று கூறுகின்றார்.

ஆனால் சமணர்கள் கூறியதாக,

"நஞ்சுகலந் தூட்டிடவும் நஞ்சமயத்தினில் விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தால் சாதியாவகை தடுத்தான்"

என்று சேக்கிழார் கூறக் காரணம், அப்பர் தேவாரத்தில்

"வஞ்சனை பாற்சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமு தாக்கி வித்தார் நனிபள்ளி அடிகளாரே"

என்கின்றார்.

அடிகளுக்கு அமணர் தந்த நஞ்சு ஆண்டவன் அருளால் அமுதாயிற்று என்பது அடிகள் வாக்காகும்.

அடுத்து அப்பர் அடிகளை யானையால் இடர்வித்தும் அவர் அதனின்றும் உய்ந்ததும் இறைவன் அருளால் என்பதைப் புலப்படுத்த,

"செஞ்சடை நீள்முடிக் கூத்தர் தேவர்க்கு.....
அடியோம் நாம் அஞ்சுவதில்லை"

என்று பாடி உய்ந்ததாகச் சேக்கிழார் கூறுவர். அதற்கேற்ப தேவாரத்துள் "சுண்ணவெண் சந்தன சாந்தும்" என்ற பாடலையும் "மலையே வந்து வீழினும் ...... கொலை செய்யானை தான் கொன்றிடுகிற்குமே" என்ற பாடலையும் அகச்சான்றாகக் காட்டுவர்.

ஆனால் சமணர்கள் நஞ்சினின்றும் மற்றும் யானையினின்றும் அப்பரடிகள் உய்ந்ததற்குக் காரணம் தங்கள் சமயத்தினின்றும் நாடிய முட்டிநிலையால் ஆயிற்று என்று அவர்கள் கூறியதாகச் சேக்கிழார் கூறுவர்.

இங்கு நாம் சிந்திக்க வேண்டியது ஒன்றுண்டு. சமணர்கள் செய்த இத்துணைக் கொலை சூழ்ச்சிகளிலும் அப்பர் உய்ந்தது, சமணர்கள் கூறுவது போல அமண் சமயசாதகம் என்னும் கலைகளின் துணையிலா? அன்றி, அப்பரும் சேக்கிழாரும் கூறும் ஆண்டவனின் அருட்துணையினாலா? என்று ஆராயக் கடமைப்பட்டுள்ளோம்.

இந்த ஆராய்ச்சியைச் சைவ சமய நூல்களின் துணை கொண்டு ஆராய்ந்தால் சமண சமயத்தார் கூற்றுக்கு உண்மை கிடைக்காது. இது பற்றி அறிய சமண சமய நூல்களும் அறுபத்துநான்கு என்று அறிய ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் என்ற கம்பர் வாக்கும் அகராதிகளும் துணைசெய்கின்றன. அவற்றை இவண் குறிப்பது மிகை என்றாலும் சிலவற்றைக் குறித்தல் செவ்விது. அவை அக்கர இலக்கணம் தொடங்கி மந்திரம் ஆகருடணம் (மயக்குவது), உச்சாடணம், காருடம் (விடத்திற்கு மாற்று மந்திரம் கூறுதல்), அக்கினித்தம்பம் (நெருப்புள் இருப்பது), ஜலத் தம்பம் (நீரில் மிதப்பது), பராத்தி போன்றவை இங்குக் குறிப்பிடத்தக்கன ஆகும்.

இவையன்றி அட்டமாசித்திகள் வேறும் உண்டு. அவற்றோடு பல பிரிவுகளும் உண்டு.

அப்பரடிகள் சைவ சமயத்து இருந்தபோது,

"தந்தையார் களி மகிழ்ச்சி.......
செழுங்கலையின் திறங்கள் எல்லாம்"

முந்தை முறையில் பயின்று முதிர அறிவு எய்தியிருந்தார் என்றும், அடுத்து சமண சமயம் சார்ந்து "அங்கு அவரும் அமண் சமயத்து அருங்கலை நூல் ஆனவெல்லாம் பயின்று, தேரரையும் வாதில் வென்று அமண் சமயத் தலைமையில் மேம்பட்டிருந்த செய்தியினையும் சேக்கிழார் கூறுவர். அப்பர் அடிகள் சைவ சமயத்துக் கற்ற செழுங்கலையின் திறங்களும், அமண்சமயத்துக் கற்ற அருங்கலை நூல் பலவும் ஒன்றா? வேறா? என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

சிவஞான சித்தியார் என்பது சைவ சமயத்திற்கு ஆணிவேர் போன்ற நூலாகும். அங்கு இக்கலைகளின் திறங்கள் பற்றி ஒரு பேச்சு வருகின்றது.

"அங்கித் தம்பனை வல்லார்க்கு
அனல் சுடாதாகும் ஔடத
மந்திரமுடையார்க்கு அருவிடங்கள் ஏறா"

(சிவஞானசித்தியார், ஞானியார் இயல்பு - 10 (சு) 6)

இப்பாடலைக் கொண்டு நாம் சேக்கிழார் கூற்றையும் அப்பர் அடிகள் வாக்கையும் சீர்தூக்கிப் பார்த்தால் சமணர்கள் கூறியதாக உள்ள கலைத்

திறத்தாலே அப்பர் உயர்ந்தார் என்ற கூற்று மெய்யாகின்றது. அன்றியும் சமய சாத்திரம் போன்ற சித்தியாரை அன்றியும் உலகியல் சாத்திரமாய அர்த்த சாத்திரம் போன்ற நூல்களிலும் கலை என்ற முறையில் நெருப்பு சுடாமைக்குரிய ஔடதங்கள் பேசப்பெறுகின்றன. (அர்த்த சாத்திரம் அத்தியாயம் - 20)

மந்திர நூல்களிலும் இவற்றுக்குரிய தடுப்புகள் பேசப் பெறுகின்றன. இவற்றையெல்லாம் வைத்து ஆய்கின்ற பொழுது இறைவன் அருள் என்று அப்பர் அடிகள் கூறினாலும் அது கலையாலே என்பது அவர் பாடிய தேவாரங்களாலும், சேக்கிழார் சமணர்கள் கூறியதாகக் கூறும் வரலாற்றாலும் வலியுறுத்தப் பெறுகின்றது.

அப்பரடிகள் அக்கினித்தம்பம் என்ற கலையால் நீற்றறையினின்றும் உய்ந்துள்ளார். காருடம் என்ற கலையான் நஞ்சமுது அருந்தியதனின்றும் உய்ந்துள்ளார். முட்டி நிலையால் யானையினின்றும் தப்பியுள்ளார். சலத்தம்பம் என்ற கலையால் நீரினின்றும் உய்ந்துள்ளார். இவை அனைத்தும் உயிர்க்கு ஏதம் விளைக்கும் செயல்கள் எனினும் இங்கெல்லாம் அப்பரடிகள் எமனுக்கு அஞ்சியதாகக் காணோம். காரணம் தாம் கற்ற கலை வல்லவத்தால் உய்தல் கூடும் என்ற துணிவே. ஆனால் சாற்று நாள் அற்றபோது உயிர் கொள்ள வரும் கூற்றுவனை அகல்விப்பதற்கு இக்கலைகள் துணை புரியா. கூற்றை வெல்லும் கலை வேறு. சித்திகள் விளைக்கும் கலை வேறு. அதனால்தான் திருவிளையாடற் புராணத்தில் இறைவன் அட்டமா சித்திகள் உபதேசித்த படலத்தில் அவற்றின் பெருமைகளை,

> ''ஈசன் என முத்தொழிலும்
> தன்னிச்சைவழி செய்து எழுபுரவித்
> தேசன் முதல் கோள் பணி
> கேட்பத் திகழ்வது ஈசத்துவம் ஆகும்
> பூசல் அவுணர் புள்விலங்கு
> பூதம் மனிதர் முதல் உலகம்
> வாசவாதி எண்மரும் தன் வசமாக்
> கொள்கை வசித்துவம் ஆம்''

என்று மிகைப்படுத்திக் கூறி இதை இறைப் பேற்றிற்குத் துணை புரியாமையை,

> ''எம்மை உணர்ந்த யோகியர்கள் இவற்றை
> விரும்பார் எனினும் அவர்
> கொம்மை முலையார் அறுவருக்கும் கொளுத்தினான்
> எண் குணச் செல்வன்''

என்று கூறக் காணலாம்.

இப்பாடல்கள் கொண்டு யோகியர்கள் கலைத் திறத்தையும், அட்டமாசித்திகளையும் பிள்ளை விளையாட்டாகக் கருதுவார்களேயன்றி அதனைப் பெரிய ஆற்றலாகக் கருதமாட்டார்கள் என்பதறியலாம். ஞானியர்கள் விரும்புவதெல்லாம் 'சாகாக்கலை' என்ற ஒரு கலையையே ஆகும். இதனை அப்பரடிகள்,

"கற்றிலேன் கலைகள் ஞானங்கற்றவர் தங்களோடும்
உற்றிலேன் ஆதலாலே உணர்வுக்கும் சேயனானேன்"

என்று கூறுவார்.

மனுநீதிச் சோழன் மகன் வீதிவிடங்கன் கற்ற கலைகள் குறிப்பிடும் போது சேக்கிழார் உலகியற் கலையும், சாகாக் கலையும் வேறுபட்டன என்பதை,

"தவம் முயன்று அரிதிற் பெற்ற தனியிளங்குமரன் நாளும்
பவம் முயன்றதுவும் பேறே எனவரும் பண்பின் மிக்கான்"

என்று பிரித்துத் தெளிவுபடுத்துகின்றார்.

கண்ணப்பர் போன்றவர்கள் வில்வித்தை போன்ற உலகியற் கலை கற்றாலும், அவர் ஆறு நாளில் கற்ற கலை தெய்வக் கலை என்பதால் தான் திருத்தொண்டர் தொகையில் கலைகள் பலவற்றால் துறைபோய சுந்தரமூர்த்தியடிகள் "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கு அடியேன் என்று கூறுகின்றார்.

இந்தக் கலை ஞானம் கைவரப் பெற்றவர்க்குத் தெரிவது. தெரிந்த பின்னர் அப்பரடிகள் அது எது என்பதையும், அது சாகாது நிலை பெறுத்தும் என்பதையும் அறிந்து,

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சேநீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்கு
அலைபுனல்சேர் செஞ்சடையேம் ஆதியென்னும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"

இவ்வாறு சரியை, கிரியை, நிலைகள் புரிந்து யோக நிலையாக,

"உயிராவணமிருந்து உற்று நோக்கி உள்ளக் கிழியின் உருவெய்தி
உயிராவண்ணம் செய்திட்டு உன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டிவாழ்தி"

என்ற யோக நிலை நின்றால் ஞானம் பிறக்கும். அந்த ஞானத்தால் உயிருக்கு வரும் ஊனம் என்னும் இறப்பு ஒழியும் என்பதை,

"ஞானத்தை விளக்கை ஏற்றி நாடியுள் விரவவல்லார்
ஊனத்தை ஒழிப்பர் போலும் ஒற்றியூர் உடைய கோவே"

என்பதால் அறியலாம்.

இந்த 'ஞானம்' பெற்று 'வீடு' பெற்ற அப்பர் அடிகள் கூறிய கூற்றே ''நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்'' என்றதும், ''எற்றுக்கோ நமனால் முனி உண்பதும்'' என்றதும்

''தன்னைச் சரண்என்று தாளடைந்தேன் தன்அடியடைய
என்னைக் கிடக்க வொட்டான் சிவலோகத் திருத்திடுமோ''

என்றதும் ஆகும்.

இதுகாறும் கூறியவற்றால் தேவாரத்தினைக் கொண்டு அப்பரடிகள் வரலாற்றினை முறையாக மனித அப்பர் தொடங்கி, கற்றரப்பராக்கி, கலையுணர்ந்த சித்தப்பராக்கிப் பின் யோக ஞானம் அறிந்த முடிநிலை ஞான சித்தரப்பராக்கி இறையடி கூடப்பெற்ற அப்பராகக் கூறவேண்டும். இதனால், மேல்நிலை அனுபவங்களும் கூற முடியும், சைவ உலகன்றிப் பிற உலகும் அப்பரடிகளின் தத்துவப் படிகளை உணர்ந்து இவர வேண்டின் தேவாரத்தைத் தத்துவப் படிமுறையில் தொகுத்தாயவும் வேண்டும்.

# 55. நாவுக்கரசரின் ஐயாற்றுப் பதிகம்

வெ.அ. நாகரத்தினம், காங்கேயம்.

திருத்தலங்களுக்குச் சென்று பதிகம் பாடி, சைவ சமயத்தைப் பரப்பியதில் வெற்றி கண்டவர்களுள் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் குறிப்பிடத்தக்கவர்கள். அதில் திருநாவுக்கரசரின் பதிகங்களில் திருவையாற்றுப் பதிகம் சிறந்து விளங்குகிறது. அதனைப் பற்றி எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

திருநாவுக்கரசர் பாடிய திருமுறைகள் 4, 5, 6 ஆகியவை. அவற்றில் 4-ஆம் திருமுறையில் 8 பதிகங்களையும் (3, 13, 38, 39, 40, 91, 92, 98) 5-ஆம் திருமுறையில் 2 பதிகங்களும் (27, 28), 6-ஆம் திருமுறையில் 2 பதிகங்களையும் (37, 38) பாடியுள்ளார். இவ்வாறு மொத்தமாக அவர் பாடிய பாடல்கள் 72. ஒவ்வொரு பதிகங்களும் அவரால் திட்டமிட்டுப் பாடப்பட்ட ஒழுங்கு முறையைக் கொண்டு விளங்குகின்றன. 4-ஆம் திருமுறையில் 3, 13 ஆகிய 2 பதிகங்கள் காந்தாரம், பழந்தக்கராகம் ஆகிய பண்களாலும், 38, 39, 40 ஆகிய பதிகங்கள் திருநேரிசையாலும், 91, 92, 98 ஆகிய பதிகங்கள் திருவிருத்தத்தாலும் அமைந்துள்ளன. 5-ஆம் திருமுறை திருக்குறுந்தொகையிலும் 6-ஆம் திருமுறை திருத்தாண்டகத்திலும் அமைந்துள்ளது. இவ்வாறு ஒவ்வொரு திருமுறையிலும் பதிகங்களில் புதிய பாவகைகளைப் புகுத்தி, பக்தி உலகில் சாதனை படைத்தவர் திருநாவுக்கரசர்.

சூலை நோய் கொடுத்து தம்மை ஆட்கொண்ட சிவனின் திருக்கருணையை நினைத்துப் பாடிய பாடல்களே திருநாவுக்கரசரின் தேவாரத் திருமுறைகள். திருத்தல யாத்திரை செய்து ஒவ்வொரு தலங் களிலும் சிவனின் பெருமையையும் தலத்தின் சிறப்பினையும் பாடித் திருத்தொண்டு செய்து வந்த அவருக்கு சிவஞானம் கிடைத்த திருத்தலம் திருவையாறு. அதனைத் தென்கயிலாயம் என்றும் அழைப்பர். அது காவிரியாற்றின் வடகரையில் உள்ளது. ஐந்து ஆறுகள் பாயும் தலமாதலால் அதற்கு திருவையாறு என்னும் பெயர் வழங்கப் பட்டிருப்பதை அறியலாம். அங்கு எழுந்தருளிய இறைவன் ஐயாறனார் இறைவி அறம் வளர்த்த நாயகி. இவ்வாறு வளமையும் செழுமையும் கொண்ட இடமாக விளங்குவது திருவையாறு. அவ்விடம் திருநாவுக்கரசரால் பெருமையுற

வேண்டும் என்று கருதி இறைவன் அவருக்கு அங்கு திருக்கயிலாயக் காட்சியைத் தந்திருக்க வேண்டும் என்பதை அறியலாம்.

திருக்கயிலாயக் காட்சியைக் கண்டளவில் இன்ப அதிர்ச்சியால் உணர்ச்சிப் பெருக்கெடுத்துப் பாடுகிறார் திருநாவுக்கரசர். அப்பொழுது அவரின் திருவாயிலிருந்து உதிர்ந்த சொற்கள் தித்திக்கும் தேனாய் தெள்ளமுதின் சுவையாய் விளங்குகின்றன. அவை நாவுக்கரசர், சொல்வேந்தர், தமிழ்வேந்தர் போன்ற பெயர்கள் வந்ததன் காரணத்தை உணர்த்துகின்றன.

திருக்காளத்தி மலையிலிருந்து, கயிலை சென்றபோது சிவனின் திருவருளால் அங்குள்ள குளத்தில் மூழ்கினார். மூழ்கி எழும்போது திருக்கயிலாயக் காட்சியைக் காண்கிறார். ஆனால் தாம் இருப்பது திருவையாறு என்பதை உணர்கிறார். இதனை 'யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது என்னும் அடிகளில் நயம்படக் கூறுகிறார். திருவையாற்றிலிருந்து கொண்டு திருக்கயிலாயக் காட்சி கண்ட பெருமையே திருவையாற்றின் பெருமையாக உள்ளதை உணர்கிறோம். எனவே பாடல்கள் முழுக்க இறைவனைப் போற்றுகின்றனவாக அமைந் துள்ளன. இறைவனைப் போற்றுவதில், இரண்டு நிலைகளைக் கையாள்கிறார் திருநாவுக்கரசர்.

1. இறைவனின் வடிவத்தைப் பற்றிப் பாடுவது.
2. இறைவனின் செயல்களைப் போற்றிப் பாடுவது, அவ்வாறு பாடும் போது புராணக் கருத்துக்களுடன் இணைத்துக் கூறுவது.

இறைவனின் வடிவத்தைக் கூறும்போது குணத்தையும் சேர்த்துக் கூறுகிறார். திருக்கயிலாயக் காட்சியில் சிவன் இருக்கும் வடிவம், சிவசக்தி வடிவம் என்பது பெறப்படுகிறது.

''மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடி'' என்று முதன்முதலில் அவர் கண்ட காட்சி, அம்மை அப்பனாக இருந்த காட்சி. அக்காட்சியே அவர் மனதில் நிலைத்து விடுகிறது. அத்தகைய வடிவுடைய இறைவன் சிவந்த நிறத்தை உடையவன். உடல் முழுவதும் வெண்ணீறு பூசியும், கங்கையையும், பிறையையும் தலையிலும், பாம்பினை தன் மார்பிலும் அணிகலன்களாக அணிந்தவன். தீச்சுடராக, சோதியாக இருப்பவன். உருவமும் உருவமில்லாதவனாகவும் இருப்பவன். கையில் மண்டை ஓட்டினை எடுத்துக் கொண்டு பலி உண்ணும் பழக்கத்தை உடையவன். சக்தியை இடப்பாகத்தில் வைத்திருப்பவன். உள்ளங்கையில் அனலினை ஏந்திக் கொண்டு இருப்பவன். கருத்த கண்டத்தினை உடையவன். இத்தகைய வடிவினன் பக்தர்களுக்கெல்லாம் எளியவனாக இருப்பவன். எத்திசையில் தொண்டர்கள் வணங்குகிறார்களோ அத்திசையில் அவர்களுக்கு காட்சி தரும் இயல்பினன். எல்லோருக்கும் அருள் கொடுப்பவன். ஆணவத்தை

அழிப்பவன். இத்தகைய குணத்தையும் வடிவத்தையும் கொண்டவன் சிவபெருமான் என்று கூறுகிறார். இத்தகைய கருத்துக்களையே திரும்பத் திரும்ப சொல்வதையே காணலாம்.

ஊழித்தீ யாய்நின்ற யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய் படர்சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே.

விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பின் இன்மொழிக் காரிகை வண்ணமும்
விரும்புவார் வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவரை யாறரே.

அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்
அரக்கின் சேவடி யாளஞ்ச அஞ்சலென்(று)
அரக்கன் ஈரைந்து வாயும் அலறவே
அரக்கி னானடி யானுமை யாறனே.

அஞ்சுண்ண வண்ணனே யென்றேன் நானே
அடியார்கட் காரமுதே யென்றேன் நானே
நஞ்சணி கண்டனே யென்றேன் நானே
நாவலர்கள் நான்மறையே என்றேன் நானே
அஞ்சாதே யாள்வானே ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே.

சிவபெருமானின் திருச்செயல்களைக் கூறும்போது புராணக் கருத்துக் களுடன் சேர்த்தே கூறுகிறார். அக்கருத்துக்களும் மீண்டும் மீண்டும் பாடல் களில் சொல்லப்படுகின்றவை.

முப்புரமெரித்தது,
யானை உரி போர்த்தியது,
மன்மதனை அழித்தது,
தக்கன் வேள்வியை அழித்தது,
காலனை உதைத்தது,
மாலும் நான்முகனும் காணமுடியாதபடி செய்தது,
வாலி வணங்கியது

இராவணனுக்குத் துன்பத்தைக் கொடுத்து, அருள் தந்தது, இராவணணைப் பற்றிய செய்திகள் பதிகங்களில் இறுதியில் வைத்திருப்பது ஒரு மரபாகவே காணப்படுகிறது. செய்திகளைத் திரும்பத்திரும்ப வேறு வேறு யாப்புக்களில் (இசையில்) சொல்லும் அவரது கவி நயம் பொருந்திய

சொல் திறமை, இலக்கிய இலக்கணப் புலமையை அவர் பெற்றிருந்தார் என்பதைக் காட்டுகின்றது.

## திருவையாற்றில் சிவஞானம்

'சிவஞானம்' என்பது காணும் காட்சிகள் யாவும் சிவமாகத் தெரிவது. அது பக்தி உலகின் முத்திநிலை, திருநாவுக்கரசர் இறைவனுக்கு அடிமையா யிருந்ததுடன், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு மார்க்கங்களிலும் இறைவனின் திருவருளைப் பெற்றவர்.

**தொண் டலாற் றுணையு மில்லை தோலா துடையுமில்லை**
**கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை**
**பண்டை நான்மறைகள் காணப் பரிசன னென்றென்றெண்ணி**
**அண்ட வானவர்க ளேத்து மையன் ஐயாறனார்க்கே.**

திருக்கயிலாயக் காட்சியைக் கண்டவுடன், திருவையாற்றில் இருப்பன யாவும் சிவசத்தியாகத் தெரிந்தன. குயில், மயில், மான், பன்றி, கோழி போன்றவைத் தம் துணையுடன் இருந்த காட்சியைக் கண்டபோதெல்லாம் அவை அவருக்கு சிவமாகத் தெரிந்தன.

**காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்**
**கண்டேனவர் திருப்பாதங் கண்டறி யாதன கண்டேன்.**

இவ்வாறு தாம் கண்ட காட்சியை விளக்குவதற்கும் விரித்துரைப்பதற்கும் அரிது என்பதை அழகாகச் சுட்டுகிறார்.

திருநாவுக்கரசர் மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கு நீண்ட காலத்தைச் செலவிட்டதன் நோக்கத்தை உணர்கிறார். தான் பிறவியிலேயே ஒரு சைவக் குடியில் பிறப்பினும் இடையில் சமணர்களோடு வாழ்ந்ததை எண்ணி எண்ணி வேதனைப் படுகிறார். 39-வது பதிகம் முழுவதும் சமணர்களைக் குறித்துப் பாடுவதைக் காணலாம்.

**பாசிப்பன் மாசுமெய்யர் பலமிலாச் சமணரோடு**
**நேசத்தா லிருந்த நெஞ்சை நீக்குமா றறியமாட்டேன்**
**தேசத்தார் பரவியேத்துந் திருவையா றமர்ந்தேனை**
**வாசத்தால் வணங்க வல்லார் வல்வினை மாயுமன்றே.**

சமணர்களுடன் வாழ்ந்த வாழ்வு சிவனின் திருவடியைப் பற்று வதற்குத் தடையாக இருந்தது. அதற்கு அடிப்படைக் காரணம் வினைப்பயன் தான் என்பதை உணர்கிறார். சமண தருக்க நெறிகளைக் கற்றறிந்தவர் திருநாவுக்கரசர். அதில் வினைக் கொள்கை பற்றிய ஆழமான கருத்து உண்டு. ஆனால் வினையை செய்விக்கின்றவனைப் பற்றி ஒன்றும் இல்லை. சைவ சமயத்தில், வினை, வினைப்பயன், செய்பவன், செய்விக்கின்றவன் என்ற நான்கும் உண்டு. எனவே வினைகளைச் செய்வதற்குக் காரணமாக

இருப்பதற்குக் காரணம் சிவன் என்பதை அறிகிறார். அவனால்தான் வினைகளையும் களைய முடியும் என்பதையும் உணர்கிறார். எனவே சிவனை அடைந்தாலொழிய பிறவி வினை நீங்காது என்பதைத் தம் அனுபவத்தினால் புரிந்து கொள்கிறார். சூலை நோய் கொடுத்து அதனை மிகுதிப்படுத்தி பின் குறைத்து அருள் தந்து தம்மை ஆட்கொண்ட சிவபெருமானை நினைத்து உருகுகிறார். திருவையாற்று 4-ஆம் திருமுறையில் 91, 92 பதிகங்கள் வாயிலாக வினைக் கொள்கை பற்றித் தெளிவாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

> குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக் குறுவித்தநோய்
> உறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்பானுகந்தருளி
> அறிவித்த வாறடி யேனனயை யாற னடிமைக்குளே
> செறிவித்த வாதொண்ட னேனைத் தன் பொன்னடிக் கீழெனையே.

> சித்தத்தை ஒன்ற வைத்தார் சிவமதே நினைய வைத்தார்
> முத்தியை முற்ற வைத்தார் முறைமுறை நெறிகள் வைத்தார்

திருவையாற்றுப் பதிகம் முழுவதும் இறைவன் திருவடியை அடைவதற்கான வழிமுறைகளாக விளங்குகின்றன. இறைவன் திருக்காட்சியைக் கண்ட வுடன் முதலில் உணர்ச்சிப் பெருக்கால் அவர் மனம் துடித்து மகிழ்ந்து துள்ளி விளையாடுவதையும் பின் மெல்ல மெல்ல துடிப்புகள் குறைந்து முத்தி அடைவதற்கான வழியை நாடுவதையும் காணலாம். 6-ம் திருமுறை பதிகம் முழுவதும் அவர் மெய்ஞ்ஞானம் பெற்றதை உணர்த்துகின்றன.

> ஓசை யொலியெலா மானாய் நீயே
> உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
> வாச மலரெலா மானாய் நீயே
> மலையான் மருகனாய் நின்றாய் நீயே
> பேசப் பெரிதும் இனியாய் நீயே
> பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே
> தேச விளக் கெலா மானாய் நீயே
> திருவையா றகலாத செம்பொற் சோதீ.

திருவையாற்றுப் பதிகம் முழுவதும், பக்தியின் மூலமாக இறைவனை அடைவது பற்றியதாகவே அமைந்துள்ளது. திருவையாற்றில், திருக்கயிலாயக் காட்சியைக் கண்டு சிவபெருமானை வியந்து வியந்து போற்றிய திருநாவுக்கரசர், திருக்கயிலாயத்தைப் பற்றித் தனியே பதிகமாக (ஆறாம் திருமுறையில் - 55, 56, 57) பாடியுள்ளார். திருத்தல யாத்திரையின் மூலமாக, பல்வேறு இடங்களுக்கெல்லாம் சென்ற அவர், திருக்கயிலாயத்திற்கும் செல்ல வேண்டும் என்று ஆவல் கொண்டார். ஆனால் அவருடைய துன்பத்தைப் பொறுக்காமல் சிவனே அவருக்குத் திருக்கயிலாயக் காட்சியைக் காட்டினார். ஆயினும் திருக்கயிலையை மலைக்குச் செல்லவில்லையே

என்ற ஆதங்கம் இருந்திருக்க வேண்டும் என்பதை மேற்சொன்ன கயிலாயமலைப் பதிகம் நமக்குச் சொல்வதைப் போல் உள்ளது.

மேற்கண்டபடி திருவையாற்றுப் பதிகம் வாயிலாக நாம் தெரிந்து கொள்வது பின்வருமாறு.

1. திருத்தொண்டு செய்து அதன் மூலம் இறைவன் திருவடியினைப் பற்றமுடியும் என்பது.
2. பக்தியின் மூலம் இறையருளைப் பெற முடியும். பற்றற்ற அன்பினால் முத்தியை அடையலாம்.
3. ஐந்தெழுத்து மந்திரத்தால் பிறவிப் பிணியை நீக்கமுடியும்.
4. சிவஞானம் என்பது சிவத்தில் கரைந்து தோய்த்திருப்பது.
5. முத்தி தரும் தலமாக இருப்பது திருவையாறு.

# 56. நாவுக்கரசரும் வினைக் கொள்கைகளும்

ச. நீலாயதாட்சி, தஞ்சை.

உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதற்கும் உலகின் நடைமுறைக்கும் இன்றியமையாத காரணப் பொருளாய் இருப்பது கன்மம் என்னும் வினைக்கொள்கையே ஆகும். ஆற்றப்படும் வினைகளும் அதன் பயன்களுமே கன்மங்கள் எனப்படுகின்றன. ஏதாவது ஒரு நோக்கத்தையும் பலனையும் கொண்டதாகவே ஒவ்வொரு செயலும் அமைகின்றது. வரும் பயனை அனுபவித்தலும் செயலாகிறது.

உலகில் பிறந்துவிட்ட உயிர்கள் செயலாற்றாமல் இருத்தல் இயலாது. அச்செயல்கள் நல்லனதாகவோ தீயனதாகவோ ஆற்றப்படுகின்றன. நல்லவை புண்ணியம் என்றும் தீயவை பாவங்கள் எனவும் பெயர் பெற்று அதன் பயன்களே கன்மம் என்றோ விதி என்றோ அல்லது 'ஊழ்' என்றோ அழைக்கப்படுகின்றது. இவ்வாறு ஆற்றப்படும் வினையின் பயன்களுக்கு ஏற்பவே பிறப்பும் வாழ்க்கை நிலையும் அதன் முடிவும் இருக்கின்றன என்பதே அனைத்துச் சமயங்களின் முடிவாக இருக்கிறது.

இக்கருத்தினை ஆறறிவு படைத்த மனிதன் மட்டுமே சிந்திக்கக் கூடியவனாக இருக்கிறான். அன்றாடம் தன் வாழ்நாளில் காணப்பெறும் உயிர்களின் வேறுபாடும் இன்ப துன்பம் எனும் நுகர்ச்சி வேறுபாடும் வினைப் பயனின் உண்மையினை அவனுக்கு உணர்த்துகின்றன. இன்பத்தை அனுபவிக்க ஆசை கொண்ட மனிதன் துன்பத்தை ஏற்க மறுக்கிறான். அதன் இடர்ப்பாட்டில் இருந்து மீளும் வகையினைத் தேடுகின்றான்.

அப்பொழுதுதான் அவனுக்கு, இதற்கெல்லாம் மூலகாரணமான ஒரு சக்தி இருக்க வேண்டும் என்று அறிகிறான். அந்தச் சக்தியே இறை என்றும் அதன் உதவி பெற்றே வினைத் துன்பத்திலிருந்து மீளலாம் என்றும் கருதுகிறான். அப்போதுதான் மனிதனின் இயல்பு விதியாகிய 'பக்தி' அவனுள் முகிழ்க்கிறது. அந்தக்கரண பொருளிடத்தில் செலுத்தும் அன்பிற்குத்தான் பக்தி என்று பெயர். நம்முடைய மற்ற அன்புகளுக்கும் காரணம் அதுதான். ஒவ்வொரு ஆன்மாக்குள்ளும் உறையும் இறையின் சக்தி காந்தம் போன்று இழுக்கின்றது. இறைவன் மனிதனைப் போன்றே உடலும் உயிருமாக உருவகப்படுத்தப்பட்டுப் பக்தனுடன் நேரடித் தொடர்பு கொள்ளும் நிலையினைத் தருவது பக்தியே ஆகும்.

இவ்வாறு பக்தி நிலையில் ஆட்பட்டு இறையின் அருளைப் பெற்று வினைத் துன்பத்தை விலக்கி வைத்த அடியார்களைப் பற்றிச் சமயங்கள் பறை சாற்றுகின்றன. அவர்களுள் சைவக் குரவர்கள் என்று கூறப்படும் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர் சிறப்புடையவராவர். அவருள்ளும் அப்பர் என்று அழைக்கப்படும் திருநாவுக்கரசர் என்பவரைப் பற்றி இக்கட்டுரை ஆய்வு செய்கிறது. திருநாவுக்கரசர் என்பவர் யார்? அவரது பக்தி எத்தகையது? சமயங்கள் கூறும் வினைக்கொள்கை யாது? இவரது பக்திமையில் வினைக் கொள்கையின் நிலைப்பாடு என்ன? பக்தி வினை இவற்றின் இணைப்பில் நிகழ்ந்த முடிவு நிலை எதுவாக இருந்தது என்று விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**திருநாவுக்கரசர் என்பவர் யார்**

அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வரையும் உலகறியும். அவர்களில் அப்பரைத் தவிர ஏனையோர் மறுபிறப்பு நம்பிக்கையின் அடிப்படையில் முந்திய பிறவியிலேயே இறையை முற்றிலும் உணர்ந்திருந்த பக்குவ நிலை எய்தப்பெற்று முக்திப்பேறு பெற்றிருக்க வேண்டும். சான்றாகத் திருஞான சம்பந்தரே தம் முற்பிறவி நிலையினை அவர்தம் திருத்துருத்திப் பதிகத்தின் ஐந்தாம் பாடலால் விளக்குகிறார்.

"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்கு மாறிலாத என்னை மையல் செய்திட மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்கின்றது என்னையே."

(தேவா. 2. 98.5)

நின்னடி மறவாது நினைத்தலே மக்கட் பிறப்பின் வாழ்வியல் பயன் அதனை நான் முற்பிறப்பிலேயே பெற்று விட்டேன் என்பதிலிருந்து சம்பந்தர் ஓர் உயர்நிலையைப் பெற்றவர் எனும் உண்மையினைப் புலப்படுத்துகின்றது.

சுந்தரர் பிறவி எடுத்ததன் காரணம் அவரது வரலாற்றில் காணக்கிடக் கின்றது. கைலையில் இறைவனுடன் ஆலாலசுந்தரர் என்ற பெயரில் இருக்க, அங்குப் பார்வதியின் பணிப்பெண்களான அநிந்திதை, கமலினி எனும் இரு பெண்களைக் கண்டு இச்சைக் கொண்டதால் பூலோகத்திற்கே பொருந்து கின்ற இச்செயலைச் செய்ததன் பொருட்டுச் சிவபெருமானால் சபிக்கப்பட்டு பூலோகத்தில் பிறப்பெடுத்தார் என்பது அறியக் கிடக்கின்றது.

மாணிக்கவாசகரைப் பொறுத்தவரை சம்பந்தர், சுந்தரரை விட அவரது ஆன்மா பல பிறவிகளில் செய்த தவப்பயனின் காரணமாக முக்தியின் இறுதி நிலையாகிய சாயுச்சிய பதவியினை எய்தும் பக்குவ நிலையை அடையப் பெற்றிருந்ததன் பொருட்டே இறைவன் உள்நின்று உணர்த்தியதோடு

ஆசாரிய கோலத்தில் வந்து தன்னை காட்டியருளிய நிலை படித்து உணர்ந்த ஒன்று.

ஆனால் திருநாவுக்கரசர் அம்மூவரிலும் மாறுபட்டவர். எடுத்திருக்கும் பிறவியிலேயே ஆன்ம வழி நின்று இறையடி பெறுதல் எனும் சீவன்முக்த நிலையை எய்த முடியும் என்று எடுத்துக்காட்டியவர் திருநாவுக்கரசர். சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறுதல் வேண்டும் என்று அவரது தமக்கையார் திலகவதியார் சிவபெருமானை நெஞ்சுருக வேண்டி நின்ற போது "இவன் முன்னமே முனியாகி என்னை முயன்றான்" எனத் திலகவதி யாரிடம் கூறுவதாக பெரியபுராணம் காட்டுகிறது. இறைவனை அடைய முயலும் முமுசுவாகத் திருநாவுக்கரசர் இருந்திருக்கிறார் என்பது மட்டும் புலனாகிறது.

முக்திப்பேறு வாய்க்கப்பெற்று இறைவனை அடைந்த நிலையில் இருந்த சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற மூவருக்கு இணையாக தமது பக்திமையால் இறையருளை பெற்றுச் சீவன்முக்த நிலை இன்னது என்று எடுத்துக்காட்டியவர் திருநாவுக்கரசர். ஏனைய மூவரும் அவதார புருஷர்கள் என்றால் திருநாவுக்கரசர் சீவன்முக்தர் என்பது இங்கு கூறப்பெறும் கருத்து. அதனால்தான் வினைப்பயனை முடித்துவிட்டு ஏதோ ஒரு காரணத்திற்காக மண்ணில் வந்து பிறந்துவிட்ட சம்பந்தர். சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற மூன்று அவதார புருஷர்களுக்கும் தானே வந்து தன்னை உணர்த்தி வழிநடத்திய இறைவன், திருநாவுக்கரசரை அவரது வினைப்பயன் தீர்க்கப்படாத நிலையில் இருப்பதால் அதன் போக்கில் போகவிட்டு அவரது சிறந்த பக்திமைக்காக இறுதியில் தன்னைக் காட்டி அருள்கிறான் என்று கொள்ளலாம்.

**திருநாவுக்கரசர் பக்தி**

திருநாவுக்கரசர் இறைவனை ஆள்பவனாகவும் தம்மை அவரது அடிமை யாகவும் கருதும் தாச மார்க்கத்தில் நின்று இறைவனை வாழ்த்துகின்றார்.

"தாசமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்தன் கோயில்
தலம் அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளுங் கொய்துழந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு வேடங்கண் டாலவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியை செய்வோர் ஈசன் உலகிருப்பார்".

(சி.சி. 8,2,9)

என்று தாசமார்க்கம் பற்றிச் சிவஞான சித்தியார் எடுத்து இயம்புகிறது. நான்குவித முக்தியில் முதலாவதான இறைவுலகை அடையும் சாலோகம் எனும் முக்தி நிலைக்கு முயல்வதிலிருந்து நாவுக்கரசர் எடுத்திருக்கும் பிறவியில் இறைக்காக முயல்பவர் என்பது புலனாகிறது.

தாசமார்க்கத்தில் இறுதிவரை நின்று இறைபக்தியில் மெய்மறந்து,

"உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகளியாக
மடம்படும் உண்நெய் அட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைத் தாதை கழலடி காண லாமே".

(தேவா. 4, 75, 4)

என அகத்தியானத்தில் இறையருள்பெற்றுப் பல்லவ மன்னனால் துன்பம் நேர்ந்தபோது,

"அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை
நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சாம்
நரகத்தில் இடர்ப்படோம்". (தேவா - 8, 98, 1)

என்று உறுதிபட நின்று,

"மாதர்ப்பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடுநீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
....................................................................
காதன் மடப்படி யோடும் களிறுவருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதங் கண்டறியாதன கண்டேன்".

(தேவா. 4, 3, 1)

என இறைவியோடு இறைவனையும் நேரில் கண்டு இன்புற்றுச் சீவன்முக்த நிலையினை அடையப் பெற்றமையாகக் கூறப்படுகின்றது.

**வினைக் கொள்கைகள்**

உலகத்தில் உள்ள சமயங்கள் அனைத்தும் பதியாகிய இறைவன் பசுவாகிய உயிர் பாசம் எனப்படும் கட்டு நிலை என்ற மூன்றையும் ஒப்புக் கொள்கின்றன. இவை மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இவற்றில் பாசம் என்ற பொருளில் ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்று பொருள்கள் அடங்கி உள்ளன. அவற்றில் கன்மம் என்று கூறப்படும் வினைகளும் அதன் பயன்களும் உலகத்தின் தோற்ற மறைவிற்குரிய இரகசியக் காரணம் ஆகும். இக்கன்மம் காரணம் காரியம் என இரு நிலை உடைத்து ஒரு செயல் நிகழாதபோதும் அது நிகழும் தன்மை பொருளிடத்து இருப்பது காரண நிலை எனப்படும். அது வெளிப்பட்டு நிகழும் நிலையே காரிய நிலை எனப்படும். இதுவே கன்மம் ஆகும்.

**கன்மத்தின் வகைகள்**

பொதுவாக கன்மம் மூன்று வகைப்படும்.

1. சஞ்சிதம்
2. பிராத்தம்
3. ஆகாமியம் என்பன.

பல பிறவிகளில் செய்த வினைகளின் தொகுதி சஞ்சிதம் என்றும் எடுத்திருக்கும் பிறவிகளில் நுகர்விற்கு வரவிருக்கும் வினைப்பயன் பிரரத்தம் என்றும் புதிதாக ஆற்றப்படும் வினை ஆகாமியம் எனவும் பெயர் பெறுகிறது.

வினைப் பயன்களுக்கும் இறைவனுக்கும் தொடர்பு உண்டு. ஒருவன் செய்த வினையின் பயன் அவனைச் சென்று சேர்வதற்கு இறைவனே கர்த்தாவாக இருக்கிறான் என்று சமயங்கள் கூறுகின்றன. சடமாகிய வினைப்பயன் செய்தவனைத் தானே சென்று சேராது ஆகையின் அதை சேர்த்துவிக்க ஒரு சக்தி வேண்டும் என்றும் அதுவே இறை என்றும் நம்பப்படுகிறது.

அவரவர் செய்த வினையின் பயனை அவரவரே நுகரும்படி நியமம் செய்ய இறைவன் நியதித் தத்துவத்தின் வழி ஒழுங்குபடுத்துகிறான். அதனைத்தான் நல்வழி எனும் நூல் ''தாம் தாம் முன் செய்த வினை தாமே அனுபவிப்பர்'' (நீதி வெண்பா - 47) என்று கூறுகின்றது.

வினைக் கொள்கையின் முடிவு எவ்வாறு இருக்கிறது எனில் வினைப்பயனைக் கூட்டிவிக்கும் இறையின் கருணை பெற்று ஓரளவிற்கு அதன் உக்கிரத்தைக் குறைத்துக் கொள்ள முடியும் என்ற நிலையிலும், பக்தியின் அடர்வு அதிகமாக அனுபவித்தே தீரவேண்டிய பிராத்த கருமத்தைக் கூட சற்றே மாற்றியமைத்துக் கொள்ள முடியும் என்றோ அல்லது முழுவதுமாக விலக்கிக் கொள்ளப் பூரண அருள் நிலை பெற்றவர் களால் முடியும் என்றோ உணரக் கூடியதாக இருக்கிறது.

**அப்பரின் பக்தியும் வினை நிலையும்**

சைவக்குரவர் நால்வரில் அப்பரின் வினை நிலை ஏனைய மூவரின் வினை நிலையிலிருந்து மாறுபடுகிறது. அவர்கள் இறைவனின் அருளை எவ்வித தங்குதடையுமின்றிப் பெறும் பிராத்த வினையைப் பெற்றிருந்தனர். அப்பரோ தனது ஆகாமிய கர்மத்தின் முயற்சியால் மட்டுமே இறைவனின் அருளைப் பெற்றவர் என்பது அவரது வாழ்க்கையில் நடந்த நிகழ்வுகள் கூறுகின்றன.

சமணத்திலிருந்து சைவத்ததிற்கு மாறுவதற்குச் சூலைநோய் எனும் துன்பத்தினைப் பெற்றிருக்கும் விதிநிலை மகேந்திரவர்ம பல்லவ மன்னனால் துன்பம் பெற வேண்டிய அவல நிலை போல்வன முறையே இறைவனால் வினைப்பயன் ஊட்டப்படும் விதமாகிய ஆதி தெய்வீகம், ஆதியான்மீகம் என்ற நிலையில் அடக்கலாம்.

மேலும் இறைவனது திருவடிகளைத் தலையில் சூட்டிக்கொள்ள ஆசைகொண்டபோது கேட்ட இடத்திலேயே கிடைக்கப்பெறாது திருநல்லூருக்கு

வரப் பெறுமாறு அலைக்கழிக்கப்பட்டமை, திருமறைக்காட்டுக் கோயில் கதவு திறக்க, சம்பந்தரைப் போன்று ஒரு பாடலிலேயே அருள்நிலை பெற முடியாது பல பாடல்களைப் பாடப் பெற்றமை, திருக்கயிலைக் காட்சிக் கிடைக்க தம் உடலும் உயிரும் தேய்ந்து போகும் வரை முயன்றும் இனி ஒரு வினையும் ஆற்ற முடியாத சக்தியற்ற நிலையிலும் இறைவன் நேரில் காட்சி தராது அந்தரையாக வந்து திருவையாற்றுக்கு வருமாறு கட்டளையிட்டமை, இத்தனைக்கும் மேலாகக் கைலாயக் காட்சி கிடைக்கப் பெற்ற பின்னரும் பொன், பெண் இவற்றில் நாவுக்கரசருக்கு விருப்பம் மேவுகின்றதா எனச் சோதிக்கப்பட்டமை போல்வன எல்லாம் வினைப்பயன். இப்பிறவியிலேயே தீரும் பொருட்டாய் அருள்நிலை எளிதாகக் கிடைக்கப் பெறாமல் தடுத்த நிகழ்வுகளே ஆகும்.

இயற்கையின் மாறுபட்ட காலச் சூட்டில் 'மண்' பொன்னாகவும் 'கரி' வைரமாகவும் மாற்றம் பெறுவது போலப் பக்தர்களின் பக்திச் சூட்டில் மூவித கர்மங்களும் மாற்றம் பெறுகின்றன என்றே கூறுதல் வேண்டும்.

பராபக்தி நிலையை எய்துவிட்ட பக்தர்கள் தமது பிரார்த்த கர்மத்தினைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை. அந்தக் கவலை இறைவனுக்கு என்று விட்டுவிடுவதால் அதன் முழு பொறுப்பு இறையைச் சார்வதாகிறது. பிறரின் பிரார்த்த கர்மத்தை அடியார்கள் இறையின் பெருமையை நிலைநாட்டும் பொருட்டு அவன் அருள் வேண்டி தீர்த்து வைக்கும் நிலைப்பாட்டினையும் பெற்றிருக்கிறார்கள்.

நாவுக்கரசர் தமக்கு வாய்த்த பிரார்த்த கர்மமான பல்லவ மன்னனால் எழுந்த துன்பங்களைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாது இறை சிந்தனை யிலேயே நின்றபோது இறைவன் தமது அருளால் துன்பத்தினை இன்பமாக மாற்றி அருளுகின்றார்.

அப்பூதி அடிகளின் பிள்ளை நாகம் தீண்டி இறந்துபட அதை அறிந்த நாவுக்கரசர் இறைவனிடம் மன்றாடி அப்பிள்ளையைப் பிழைத்து எழச் செய்கிறார். நாகம் தீண்டி இறத்தல் வேண்டும் என்பது அப்பிள்ளையின் பிராரத்த கர்மமாக இருக்க அதனை, தமது பக்தியின் மேம்பட்டால் இறை அருள் பெற்று மாற்றி அருள்கிறார். அவ்வாறெனில் தமக்கு வாய்த்த பிரார்த்த கர்மத்தையும் பிறரது பிராரத்த கர்மத்தினையும் ஒன்றை மற்றொன்றாகவோ அல்லது அல்லாமலேவோ செய்து கொள்ள முடியும் என்பது புலனாகிறது.

எனவே சமயங்கள் கூறும் முடிந்த முடிவாகிய இறையருள் பெற அவன் அருளால் அவன்தாள் வணங்கி நமது கர்ம பயனிலிருந்து மீள்வதற்கு அப்பரின் வழி அடிச்சுவட்டை பின்பற்றுவோமாக.

# 57. நாவுக்கரசர் தரும் சிவவடிவங்கள்

மா. பத்மபிரியா, மீனாட்சியாபுரம்.

பன்னிரு திருமுறைகளுள் தேவாரத் திருமுறைகளே முதன்மையானவை. அவற்றுள் சிறப்பு வாய்ந்தவை சைவ சமயத்தின் இரு கண்களில் ஒருவராகப் போற்றப்படும் திருநாவுக்கரசர் திருமுறைகள் ஆகும். இவை 'எல்லாம் சிவமயம்' என்னும் கருப்பொருளை உள்வாங்கி வெளியிடு கின்றது. நாவுக்கரசர் எப்பொருளைக் கண்டாலும் அதனூடு இறைவனைக் கண்டு காரண காரிய முறையில் வைத்து ஆராய்ந்து சித்தாந்த, சாத்திரங்களால் நிலைநாட்டி இறையருளை எளிதில் புலப்படுத்தும் விதமாகச் சிவ வடிவங்களைத் தருகின்றார்.

**இறைவன் வடிவம்**

இறைவன் ஒவ்வோர் காலத்தில் பல்வேறு விதமான மக்களுக்கு உதவும் பொருட்டுப் பல்வேறு வடிவங்களை எடுக்கின்றான். இங்ஙனம் உயிர்களுக்கு அவற்றின் பக்குவத்துக்கேற்ப உதவும் கருணையே பல்வேறு இறை வடிவங்களுக்குக் காரணமாகின்றது.

"ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்"

என்ற நாவுக்கரசரின் இறைப்புலப்பாடு இறைவன் வடிவமேற்கும் திறத்தை விளக்குகின்றது.

**சிவவடிவக் கோட்பாடு**

வடிவு என்னும் சொல் 'உடல்' என்னும் பொருளிலும், 'அழகு' என்னும் பொருளிலும், 'நன்னிறம்' என்னும் பொருளிலும் திருநாவுக்கரசரால் கையாளப்படுகின்றது. சிவ வழிபாட்டின் 'அருட்குறியீடுகளாக'ச் சிவ வடிவங்கள் காட்சியளிக்கின்றன. இறைஞானிகள் இறைவன் திருவுருவங்களை மூன்றாகப் பகுப்பர். "அருவம், அருவுருவம், உருவம்" என்பன. இறைவனின் அருவத் திருமேனி மனிதர்களால் கண்டும், எண்ணியும் வழிபட முடியாது. அதனால் அவனே அருவமும், உருவமும் ஆகிய இரண்டும் கலந்த அருவுருவத் திருமேனியாக இலிங்க வடிவிலே எழுந்தருளுகின்றான். பக்குவப்பட்ட ஆன்மாக்களே இலிங்கத் திருமேனியைப் பெற்று, உணர்ந்து வழிபட்டுப் பயன்பெறுகின்றனர்.

சிவபெருமான் அடியவர்களுக்காக உருவு கொண்டு தோன்றி யருளியதைப் புராணச் செய்திகளின் அடிப்படையில் 'சிவபராக்கிரமம்' அறுபத்துநான்கு சிவ வடிவங்களாகக் குறிப்பிடுகின்றது.

சிவபெருமான் மேற்கொள்கின்ற பற்பல உருவங்களும் ''படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்'' என்னும் ஐந்து தொழில்களுள் அடங்கிவிடுகின்றன. இறைவன் உயிர்களோடும், உலகத்தோடும், ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் உள்ளான் என்று உணர்த்தவும், தன்னைச் சார்ந்த அடியார்கள் பேரருள் பெற்று இனிது விளங்கவும், தமது அன்பினை வெளிப்படுத்தவும் அவ்வப்பொழுது மேற்கொள்ளும் அவதாரமே சிவ வடிவங்களுக்கு தோற்றுவாயாக அமைகின்றன என்பதே உண்மையாகும்.

**உமைபங்கன் வடிவம்**

ஆண், பெண் வேறுபாடின்றி இருபாலார்க்கும் ஒத்த உரிமையையும், மேன்மையையும் வழங்கும் வடிவமாகப் போற்றுவது 'உமைபங்கன்' வடிவம் ஆகும். 'அர்த்தநாரீஸ்வரர்' என்று வடமொழியில் அழைக்கப்படும் இச்சிவவடிவினைத் திருநாவுக்கரசர் மிகுதியும் பாடியுள்ளார்.

> ''மதுவிரி கொன்றைதுன்று சடைபாக மாதர்
> குழல்பாகமாக வருவர்
> இதுஇவர் வண்ணவண்ண இவள் வண்ணவண்ண
> மெழில் வண்ணவண்ண மியல்பே''

வலதுபுறம் ஆண் வடிவமும், இடதுபுறம் பெண் வடிவமும் அமையப் பெற்ற சிவபெருமான் அரவோடு, வெண்ணூல் புரளும் மார்பினனாகவும், புலித்தோலாடை அணிந்து மான் ஒருகரத்திலும், மழு ஒரு கரத்திலும் தாங்கியவனாக அமைகின்றது. சிவனின் நிறம் சிவப்பு, தேவியின் நிறம் பசுமை, கடல்வண்ணம், மரகதம் என்று நாவுக்கரசர் தம் பாடல்கள் பலவற்றில் குறிப்பிடுகின்றார்.

**வேட வடிவம்**

அருச்சுனன் 'பாசுபதாஸ்திரம்' பெறத் தவம் மேற்கொள்கையில் துரியோதனன் ஏவிய மூகன் என்ற பன்றியுரு கொண்ட அரக்கனைச் சிவபெருமான் வேடருக் கொண்டு எதிர்த்தார். அருச்சுனனுக்குத் தம் உண்மையுருவைக் காட்டிப் 'பாசுபதாஸ்திரம்' கொடுத்தார். இவ்வாறு இறைவன் வேட வடிவம் ஏற்று அருளிய திறத்தைத் திருநாவுக்கரசர் பல இடங்களில் குறிப்பிடுகின்றார்.

> ''வேடனாய் விசயன்தன் வியப்பைக் காண்பான்
> வில்பிடித்துக் கொம்புடைய ஏனத்தின்பின்
> கூடினார் உமையவளுங் கோலங் கொள்ள
> கொலைப் பகழி உடன் கோத்து''.

அருச்சுனனின் துன்பம் போக்கிய வேட வடிவத்தைப்

''பன்றிப் பின் வேடராகி''

''மறவனாய்ப் பன்றிப் பின்சென்ற மாயமே''

''வராகத்தின் பின்னே சென்ற கானவனை''

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

**தட்சிணாமூர்த்தி வடிவம்**

சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் முதலிய நான்கு முனிவர்களும் 'சிவாகமம்' உட்பொருளை உணர்த்துமாறு சிவபெருமானிடம் வேண்ட, இறைவனும் ''தட்சிணாமூர்த்தியாய்'' கல்லாலமர நிழலில் எழுந்தருளி ஆகமத்தின் பாதமாகிய சரியை, கிரியை, யோகங்களை உபதேசித்து நான்காவது பாதமாகிய ஞானத்தை 'ஞான முத்திரை அமைந்த திருக்கரத்தை' தம் மார்பில் வைத்து ஒரு கணப்பொழுது யோகம் செய்வார் போல் இருந்து உணர்த்தியருளினார். இச்சிவ வடிவத்தைத் திருநாவுக்கரசர்,

''ஆலின்கீழ் அறம் நால்வர்க்கு அன்றுரைத்தான்''

என்றும்,

''தக்காணா போற்றி தருமா போற்றி''

என்றும்,

''நால்வர்க்கு நல்லறம் உற்ற நன்மொழியால் அருள்செய்த
நற்கொற்றவன்''

என்றும் விதந்து பாடுகின்றார்.

**திரிபுரம் எரித்த வடிவம்**

மூன்று அசுரர்களின் கோட்டைகளை எரித்துத் தேவர்களுக்கு அருள் புரிந்தார். மேருவை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், தீயை அம்பாகவும் விடையில் உமையம்மையுடன் அமர்ந்து சிரித்தும், அனலெழ விழித்தும் முப்புரத்தை அழித்தார் என நாவுக்கரசர் தம் பாடலில் வெளிப்படுத்துகின்றார்.

''விடையேறிப் புரமெரித்த வித்தகனே''

''திரிபுரங்கள் எரிசெய்த தேவதேவே''

''அவுணர்தம் வல்லை வட்டம் மதில் மூன்றுடன் மாய்த்தவன்''

''சிலையால் முப்புரமெரித்த முன்னோ பின்னோ திருவாரூர்
கோயிலாக் கொண்ட நாளே''

என்பன சிவனின் திரிபுரத்தை எரி செய்த வடிவத்தைக் குறிக்கின்றன.

**இலிங்க வடிவம்**

சிவ வழிபாட்டின் சிறப்பான அருட் குறியீடு இலிங்க வடிவம் ஆகும். காலப் பழமைமிக்க இலிங்க வடிவம். சிந்துவெளி நாகரிகத்திலும் சிறப்புற்று விளங்கியதாகத் தொல்லியல் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். திருநாவுக்கரசர் தேவாரத்தில் குறிப்பிடும்.

''வயிரத் தூண்''

''தாணு''

''கற்றூண்''

''பவளத்தூண்''

என்ற சொற்களே சிவனின் இலிங்க வடிவத்தை குறிப்பன ஆகும்.

**காமனை எரித்த வடிவம்**

சிவபெருமானின் யோகத்தைக் கலைக்க மலர்க்கணை தொடுத்த காமனைத் தமது நெற்றிக் கண்ணிலிருந்து எழுந்த தீயினால் எரித்த வடிவம் திருநாவுக்கரசரால் புலப்படுத்தப்படுகின்றது.

''காமனை காய்ந்தவன்''

''கண்ணெரியில் ஐங்கணையோன் உடல் காய்ந்தவன்''

சிவனின் தனித்தன்மையை நிலைநாட்டவும், சிவன் ஏனைய கடவுளர்க்கும் மேம்பட்டவன் என்பதை வலியுறுத்தவும், உலகியல் வாழ்விற்குக் காமம் அடிப்படையானது என்பதை நிறுவிடவும் சிவனின் இவ்வடிவத்தை அறிந்தோர் அறியலாம்.

**காலனை உதைத்த வடிவம்**

காலனும் சிவனடியாரிடம் நெருங்கிட அஞ்சுவான் என்ற கருத்தை விளக்கிடும் வடிவமாக காலனைக் காய்ந்த வடிவம் அமைகின்றது.

''காலன் மார்புறக் காலாற் காய்ந்த கடவுள்''

''காலனை அஞ்ச வுதைத்தவன்''

''கூற்றை முடித்தவர்''

''கூற்றங் காய்ந்தவன்''

எனப் பல பாடல்களில் திருநாவுக்கரசர் மார்க்கண்டேயருக்கு அருளிய சிவவடிவத்தை வியந்து பாடுகின்றார்.

**பைரவர் வடிவம்**

நான்முகனின் அகந்தையை ஒழிக்கப் பைரவரை உண்டாக்கி, பிரமனின் உச்சித்தலையைக் கிள்ளிப் பாடம் புகட்டியது பைரவர்

வடிவம் ஆகும். பிரமன் சிரத்தைக் கிள்ளியதனால் 'பிரம சிரச்சேதனர்' எனவும் இவ்வடிவம் குறிக்கப் பெற்றுள்ளது.

''பிரமனார் சிரமறுத்த இறைவன்''

''பிரமன்தன் சிரமரிந்த பெரியோய்''

என்றும்,

''விரித்த பல்கதிர்கொள் சூலம் வெடிபடுதமரு கங்கை
தரித்ததோர் கோலகால வயிரவனாகி''

என்ற பாடலடிகள் பயிரவ வடிவினைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

**ஆடலரசின் ஆடல் வடிவங்கள்**

அண்டத்தை ஆட்டுவிக்கும் இறைவனின் அருட்கூத்தினை அடியவர்கள் போற்றிப் பரவுவர். திருநாவுக்கரசர் சிவனின் பல்வேறு ஆடல் வடிவங்களைக் காட்டுகின்றார்.

**அரவம் பூண்டு ஆடல்**

பாம்பினைச் சுற்றி ஆடும் இச்சிவவடிவம்,

''அரவாடச் சடைதாழ ஆடும்''

''பாம்பு சுற்றி ஆடும்''

எனவும் குறிப்பிடப்படுகின்றது.

**எரியேந்தியாடுதல்**

சிவபெருமான் கையில் அனல் ஏந்தி ஆடும் நடனமாகும்.

''அங்கையில் அனலேந்தி இரவாடும் பெருமானை''

''சுடுகாட்டெரி பற்றியாடுவர்''

''கொள்ளித் தீயெரி வீசி ஆடுவர்''

எனவும்,

''அனல் கைஏந்தி ஆடுகின்ற பெருமானை''

இவ்வாறு சிவன் ஆடும் அனல் ஏந்திய வடிவம் நாவுக்கரசரால் குறிப்பிடப்படுகின்றது.

**நீறுபூசி ஆடுதல்**

சுடுகாட்டுச் சாம்பலை உடல் முழுவதும் பூசி சிவன் ஆடும் நடனத்தை நாவுக்கரசர் பல இடங்களில் குறிப்பிடுகின்றார்.

''சுடலை வெண்ணீறாடினார் ஆடல் மேவி''

என்பதன் மூலம் அறியலாம். மேலும் சிவபெருமானின் பல்வேறு நடன வடிவங்களையும் குறிப்பிடுகின்றார்.

**பஞ்சாக்கர வடிவம்**

உமைகாண நடனமாடியது என்பர். ஆன்மாக்கள் அநாதியாகத் தொடர்ந்துள்ள பாசம் போக்கி முக்தியடைதற் பொருட்டு அருள் வடிவாகிய அம்மையார், அடியார்களுக்கு அருள்புரியப் பஞ்சாக்கர வடிவமாகிய ஆனந்த திருநடனத்தை இடப்பாகத்திலிருந்து தரிசிப்பார். இதனை நாவுக்கரசர்,

"இவர் ஆடுமாறும் இவள் காணுமாறும்
இது தானிவர்க்கொரியல்பே"

எனப் பாடுகின்றார். பெருமான் மூன்று திருக்கரங்களாலும், இரண்டு திருவடிகளாலும் பஞ்சகிருத்தியம் குறித்து நடனம் புரிகின்றார். உடுக்கை ஏந்திய திருக்கையால் தோற்றமும், அமைந்த திருக்கையால் நிறுத்தலும், தீயேந்திய திருக்கையால் அழித்தலும், முயலகன் முதுகிலூன்றிய திருவடியால் மறைத்தலும், தூக்கிய திருவடியால் அருளால் புரிகின்றார். இந்த பஞ்சகிருத்தியத் திருநடனத்தை எப்பொழுதும் இயற்றியருள்வார்.

**சிவனும், பஞ்சபூதமும்**

திருநாவுக்கரசர் இறைவனை நிலம், நீர், தீ, வான், வெளியாகக் காண்கின்றார். பஞ்சபூதமும் சிவவடிவமாகவே நாவுக்கரசருக்குப் புலப்படுகின்றது.

"நிலனும் நீரும் நெருப்பினொடு காற்றாகி நெடுவானாகி"

"ஐம்பூதம் தானேயாகி"

இறை உருவை இயற்கை வடிவாக காணும் நாவுக்கரசரின் பக்தியுணர்வு மகிழத்தக்கது.

**ஆண், பெண் - அலி**

அடியவர்களுக்கு அருளும் கருணைக் கடலாகிய சிவபெருமான் வடிவுகளில் ஆண், பெண் இணைந்த அலி வடிவினையும் திருநாவுக்கரசர் குறிப்பிடுகின்றார்.

"ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்"

"பேடலி ஆணர் போலும்"

"ஆணொடு பெண் அலியல்லரானார் போலும்"

இவ்வாறு வடிவு கொள்ளும் இறைவன் உயிர்கட்குத் தாயாய்த், தந்தையாய் வழிபடுவோரின் சிந்தையை ஒன்றிடச் செய்கின்றான்.

உலகப் பற்றுதலில் ஆழ்ந்து கிடக்கும் மனிதனைத் தன் கருணைக் கரங்களால் தழுவியெடுத்து, அவனுக்கு இயற்கையின் மாபேராற்றலை இயக்கும் இறைசக்தியின் பேராற்றலை அறிவுறுத்தி, மனித உணர்வுகளை இறைசிந்தனையோடு ஒன்ற வைக்கும் பணியினை திருநாவுக்கரசரின் பாடல்கள் செவ்வனே செய்கின்றன. சமய நெறியில் மலர்ந்த அருளாளர் நாவுக்கரசர், இவரின் பக்தியில் வெளிப்படும் சிவ வடிவங்கள் மனிதனை ஆன்மீகப் பாதையில் இட்டுச் செல்லும் பெருநெறியாகும்.

# 58. நாவுக்கரசரில் இறைக்கோட்பாடு

சி. பாலு, சீர்காழி.

அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனும் நால்வரும் சைவ சமயத்தைப் பரவச் செய்த அருளாளர்களில் மிகவும் குறிப்பிடத் தக்கவர்கள். இந்நால்வரில் இறைவனால் நாவுக்கரசர் என்ற நாமம் சூட்டப்பெற்றவர் அப்பர் பெருமான்.

''நாவுக்கர சென்றுல கேழினுநின் நன்னாமம்
நயப்புற மன்னுக என்று
யாவர்க்கும் வியப்புற மஞ்சுறை
வானிடையே ஒரு வாய்மை யெழுந்ததுவே''

இவரின் அவதார நோக்கத்தினை சேக்கிழார் சுவாமிகள் பெரியபுராணத்தில்,

''அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில் வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல்
மலருமரு ணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார்''

என்று சிறப்பித்துள்ளார். சம்பந்தர் அருளியவை 'திருக்கடைக்காப்பு' என்றும் சுந்தரர் அருளியவை 'திருப்பாட்டு' என்றும் அப்பர் அருளியவை மட்டும் 'தேவாரம்' என்றும் சிறப்பிக்கப்படுகின்றது. தேவாரம் தே+ஆரம் தெய்வத்தன்மை பொருந்திய இறைவனுக்குச் சூட்டும் மாலை தேவாரம் ஆகும். இவர் தம் தேவாரத்தில் 'இறைக்கோட்பாடு' எவ்வாறு அமைந் திருக்கின்றது என்று காண்பதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

## ஆதி அந்தம்

சிவபெருமான் உலகங்கள் எல்லாவற்றிற்கும் ஆதியாகவும் அந்தமாகவும் இருப்பவன் என்பது அப்பர் பெருமானின் திருவாக்கு. இதனைத் தமது தேவாரத்தின் வாயிலாகத் தெளிவுபடுத்துகின்றார்.

''அந்தமும் ஆதியும் ஆகிநின்றீர்''

''ஆதியும் அறிவும் ஆகி''

''அமரர் கோமான் ஆதிஎம் அண்ணல்''

''ஆதியாய் அந்தமானார் யாவரும் இறைஞ்சியேத்த''

''முதலும் இறுதியும் தாமே போலும்''

**தாயும் தந்தையும்**

ஞானியர் பலரும் இறைவன் தாயும், தந்தையுமாக இருப்பதை ஏற்றுக்கொள்ளும் கருத்துடையவர்கள். இதில் அப்பர் பெருமானும் ஒத்து நிற்கின்றார்.

''ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய் உடன் தோன்றினராய்''

''தந்தையாய்த் தாயும் ஆகித் தரணியாய்''

''தந்தையாய்த் தாயும் ஆகித் தானவன் ஞானமூர்த்தி''

''எந்தையும் எந்தை தந்தை தந்தையுமாய ஈசர்''

''அப்பன் நீ அம்மை நீ''

ஆகிய திருவாக்குகள் இறைவன் தாயும் தந்தையும் ஆகியிருக்கும் கருத்தினைச் சிறப்பித்துக் காட்டுகின்றன.

**சிந்தையே கோயில்**

உள்ளம் உருகி வழிபடும் அடியாரது சிந்தையே இறைவன் உறையும் திருக்கோயில் ஆகும் என்பது அப்பர் சுவாமிகளின் திருவாக்கு.

''சிந்தையுள் சிவமது ஆனார்''

''தொண்டர் அகமலாற் கோயில் இல்லை''

''சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுள் சிவமுமாகி''

''நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்''

''மனத்தகத்தான்''

''நெஞ்சம் ஆலயமாகக் கொண்டு நின்றதே''

''கைதொழுவார் மனம் ஆலயம்''

இவ்வாறு தேவாரப் பதிகத்தின் வாயிலாக அப்பர் பெருமான் சிந்தையே கோயிலாக உடையவன் இறைவன் என்று உணர்த்துகிறார்.

**கருணை வடிவினன்**

கடவுள் அழைத்தால் வந்து அருள் வழங்கும் கருணை வடிவினன் என்பது அப்பர் சுவாமிகளின் கருத்து. 'ஆத்மா' அல்லது 'உயிர்' தூய அன்போடு வழிபாடு செய்தால் பரம்பொருள் தன் கருணையைத் தந்து உதவும் பண்புடையது. கருணை வள்ளலாகிய பெருமானின் திருவுள்ளம் இரங்க வேண்டுமாயின் பல நாட்கள் அவனைக் கூவி அழைத்துக் கொண்டே இருத்தல் வேண்டும். இவ்வாறு பன்னாளும் அழைத்தால் இறைவன் நம்மை அழைத்தலைத் தவிர்க்கமாட்டான் என்று கருதி ஒருநாள் வந்து திருக்காட்சி வழங்கியே தீர்வான் என்று கூறுகின்றார்.

"பன்னாள் அழைத்தால், இவன் எனைப் பன்னாள்
அழைப்பு ஒழியான் என்று எதிர்ப்படுமே"

**கலைகள் வடிவினன்**

அப்பர் சுவாமிகள் எல்லாவற்றையும் கடவுளாகக் காணும் கருத்துடையவர். அறுபத்து நான்கு கலைகளையும்கூட இறைவனாகவே கருதுகின்றார்.

"எட்டெட்டி ருங்கலையும் ஆனான் கண்டாய்"

கலைத்துறைகள் அனைத்தையும் கடவுள் மணம் கமழக் காணும் அடிகளார் திருவுள்ளம் வேறுபல இடங்களிலும் இனிது விளங்கக் காணமுடிகிறது. கலைகள் காமத்தைத் தூண்டும். குறிப்பாக, இசைக்கலை இறை உணர்விற்கு எதிரி என்ற கோட்பாடு இவரால் மறுக்கப்படுகின்றது.

"பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை"

"பண்ணிற் பாடல்கள் பத்தி செய்வித்தற்கு
அண்ணித் தாகும் அமுதினை"

"பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி"

"பண்ணினார் பாடலாகிப் பழத்தினில் இரதம் ஆகி"

"பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை"

எனும் தேவாரத் தொடர்கள் இதனை இனிது தெளிவுப்படுத்துகின்றன.

"பெருங்கடல் மூடிப் பிரளயம் கொண்டு பிரமனும் போய்
இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின்று எம்இறை நல்வீணை வாசிக்குமே"

என்று இறைவன் ஒரு காலத்தில் வீணை ஏந்தி நல்லிசை பொழிவான் என்று உணர்த்துகின்றார்.

இசைக்கலையின் தெய்வீகத்தை, மாண்பினை உணர்த்தி, பின் இறைவனே ஆடற்கலையை மேற்கொண்டவன் என்றும் உணர்த்துகிறார்.

"குட முழவம் வீணை தாளம் சிறுபூதம்
முழக்கமாகக் கூத்தாடுமே"

"நடமாட வல்லானே ஞானக் கூத்தா"

"அரங்கிடை நூலறிவாளர் அறியப்படாததொர் கூத்து"

"நாடற்கரிய தொர் கூத்து"

"ஆடினார் காளிகாண ஆலங்காட்டடிகளாரே"

"அரிஅயன் தலைவெட்டி வட்டாடினார்"

**மொழி வடிவினன்**

இறைவன் மொழி வடிவினன், எல்லா மொழிகளும் இறைவனுக்கு உகந்தவையே என்று அப்பர் அடிகள் கருதுகின்றார். கி.பி. 7-ம் நூற்றாண்டில் வடமொழி ஒன்றே பெரிதும் தமிழோடு வந்து கலந்து தமிழகத்தே வழங்கிய மொழி ஆதலின் அதனைக் குறிப்பிட்டுள்ளார். எம்மொழியிற் கூறினாலும், இறைவன் திருஉள்ளத்திற்கு உவகையே என்று மொழி ஒருமைப்பாட்டை அழகுற மொழியும் திருவாக்கை நாம் இவர்தம் தேவாரத்தில் கண்டு இன்புற முடிகின்றது.

"ஆரியம் தமிழோடு இசை ஆனவன்"

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"

"முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்"

"செந்தமிழோ டாரியனைச் சீரியானை"

"வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்"

**நீதி வடிவினன்**

நீதியும் நியாயமும் உலக மக்கள் அறிந்து ஒழுகுதல் வேண்டும் என்னும் கருத்தில் அப்பர் இறைவன் நீதி வடிவானவன் அன்று அருளிச் செய்திருப்பது மக்கள் அறக்கோட்பாட்டினை உணர்ந்து வழிபடத் தக்கதாக உள்ளது.

"நீதியை நிறைவை மறைநான்குடன் ஓதியை"

"நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே"

"நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை"

"நீதியானை, நியமநெறிகளை ஓதியானை"

**அட்ட மூர்த்த வடிவினன்**

இறைவன் அட்ட மூர்த்த வடிவினன். அப்பர் சுவாமிகள் இறைவனை எட்டு நிலைகளில் கண்டு காட்டும் திருத்தாண்டகம் 'நின்றத் திருத்தாண்டகம்' எனப்படும். 'அட்ட மூர்த்தம்' என்பது நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்கிற எட்டு இடங்களில் இறைவன் சிறப்பாக விளங்குகின்றார் என்பது.

"இருநிலனாய்த் தீயாகி நீரும்ஆகி
இயமானனாய் எறியும் காற்றும்ஆகி
அருநிலைய திங்களாகி ஞாயிறாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி"

வேறு சில இடங்களிலும் இக்கோட்பாட்டை பின்வருமாறு அருளிச் செய்திருக்கிறார்.

"அட்டமா உருவினானே"

"அட்டமூர்த்தி அண்ணாமலை கைதொழ"

"எட்டு மூர்த்தியாய் நின்று இயலும் தொழில்"

"நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி"

"ஏறுடைக் கதிர்களாகி இமையவர் இறைஞ்ச நின்று"

இவ்வாறு இறைவன் அட்டமூர்த்தி வடிவினன் என்பதை அப்பர் சுவாமிகள் தமது பதிகத்தில் காட்டிக் சிறப்பிக்கின்றார்.

**இறைவனின் காட்டும் உதவி**

"இறைவன் உயிர்கட்கு உயிராக நின்று இயக்குவதால் அனைத்தும் இயங்குகின்றன. அவன் இயங்காவிட்டால் ஒன்றும் இயங்கமாட்டா, அவன் காட்டாவிட்டால் ஒன்றும் காணமாட்டா" என்ற கொள்கையில் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர் அப்பர் சுவாமிகள்.

"ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆர் ஒருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆர் ஒருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆர் ஒருவர் உருகாதாரே
பாட்டுவித்தால் ஆர் ஒருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆர் ஒருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

இறைவனின் காட்டும் உதவியை அப்பர் அடிகள் பலவிடங்களிற் பாடி இருப்பினும் பின்வரும் இடங்கள் குறிப்பிடத்தக்கன.

"ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்"

"தன்திறமும் அறிவித்து நெறியும் காட்டி"

"கல்லாதன வெல்லாம் கற்பித்தானைக்
காணதன வெல்லாம் காட்டினானை"

இவ்வாறு காட்டும் உதவியைப் புரிவதனால் இறைவனை அருந்துணை என்றும், வழித்துணை என்றும், தோன்றாத் துணை என்றும் அப்பர் அடிகள் குறிப்பிடுகின்றார். துணையாக வந்து அருளும்போது உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று நிலைகளையும் மேற்கொள்வான் இறைவன் என்பது குறிப்பிடத்தக்கது.

**சிவமும் சக்தியும்**

அன்பு வடிவாகிய சிவபிரான் அருள் உருவாகிய அம்மையோடு ஒன்றி இருப்பவன். இறைவனின் அருளையே 'சக்தி' என்றும் 'உமை' என்றும் சைவம் தெளிவுறுத்தும். அம்மையை ஒரு பங்கிற் கொண்டவனாக அப்பர் பெருமான் பல இடங்களில் சிறப்பிக்கின்றார்.

'ஒருடம்பு இருவராகி'

'உமையிலா துருவமில்லை'

'அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள் காரணத்தில் வருவார்'

'பாதித்தன் திருவுருவில் பெண் கொண்டானை'

இறைவன் இறைவியோடும் தோன்றியே உயிர்கட்குப் பேரருள் புரிகின்றான். இறைவனுடைய அருளை உயிர்கள் அம்மையின் வழியே பெற்று இன்புறுகின்றன.

## பல்வேறு நிலைகள்

இறைவனைச் 'சிவன்' என்ற சொல்லாற் கூறிச் சிறப்பிக்கின்றார். அப்பர் அடிகள்,

**"சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்"**

சிவபெருமானின் மகேசுவர மூர்த்தங்கள் 25-ல் பலவற்றை அருளிச் செய்திருக்கின்றார். இலிங்கோத்பவர், சந்திரசேகரர், நடராசர், உக்கிரர், அர்த்த நாரீசுவரர், இலகுளீசர், விஷபாஹரணர், சலந்தராரி, சக்கரதானர், அந்தகாரி, திரிபுராரி, கங்காதரர், வராகசங்காரர், நரசிங்கசங்காரர், கங்காளர், கால பைரவர், பிட்சாடனர் முதலிய பல்வேறு மூர்த்தங்களில் 15-க்கும் மேற்பட்ட மூர்த்தங்களை குறிப்பிடுகின்றார்.

## மந்திரம்

இறைவனுக்கு உரிய மந்திரம் திருவைந்தெழுத்தே. "நமசிவாய" என்றும், 'சிவாயநம' என்றும் இரண்டு நிலைகளில் இம்மந்திரத்தை வெளிப் படையாக அனைவர்க்கும் உபதேசம் செய்கின்றார் அப்பர் அடிகள்.

இம்மந்திரம் வாயாலும், நெஞ்சாலும் இயம்பியும் எண்ணியும், வருதல் சிவபிரான் நல்லருளைப் பெறுவிக்கும் என்றருளுகின்றார்.

1. ஞானத்தையும், கல்வியையும் திருவைந்தெழுத்தே ஆக்கும்.
2. அதுவே தமக்குமட்டுமன்றி வையத்தார்க்கெல்லாம் நல்லநெறி காட்டும்.
3. அரிய தவத்தைத் தரும்.
4. பொருந்து நோயும் பிணியும் நீங்கச் செய்யும்.
5. தீவினையை வெல்லவல்லது.
6. என் நாவில் எப்போதும் படைக்கலமாகக் கொண்டு ஓதி வருவது நின் திருமந்திரமே.
7. தாம் அறிந்த வித்தை 'திருவைந்தெழுத்தே' என்று திருவைந்தெழுத்தின் பெருமையைத் தமது தேவாரத்திலே எடுத்து இயம்பி அதற்காகத் தனியாக பதிகத்தினை அருளிச்செய்து உடலைவிட்டு உயிர் நீங்கும் இறப்புக்காலத்தே திருவைந்தெழுத்தை ஓதும் பேற்றினை அருள்வாயாக! என்றும் இறைவனிடத்தே வேண்டுகின்றார் அப்பர் சுவாமிகள்.

## அட்ட வீரட்டக் கொள்கை

இறைவன் மும்மலம் வேறுபட்டொழிய செய்யும் ஆற்றல் உடையவன் என்பது சிவபிரானின் அட்ட வீரட்டச் செயல்கள் உணர்த்துகின்றன. அப்பர் தேவாரத்தில் சிவபெருமானின் அட்டவீரட்ட செயல்கள் விரிவான இடம்

பெறுகின்றன. பிரமனைத் தலையறிந்த வீரச்செயல், அந்தகாசுரனை அழித்த வீரச்செயல், திரிபுர அசுரரை அழித்த வீரச்செயல், தக்கனை அழித்த வீரச்செயல், சலந்தரனையழித்த வீரச்செயல், யானையை உரித்துப் போர்த்த வீரச் செயல், மன்மதனையழித்த வீரச்செயல், காலனையழித்த வீரச்செயல் ஆகிய எட்டுமே 'அட்ட வீரட்டச்' செயல்களாகும். இவை நிகழ்ந்த திருத்தலங்களை அட்ட வீரட்ட தலங்கள் என்று கூறுவர். தம்முடைய 'அடைவுத் திருத்தாண்டகத்தில்' அடிகளார் இத்திருத்தலங்கள் அனைத்தையும் ஒரு திருப்பாட்டில் அடக்கி சிறப்பிக்கின்றார்.

> ''காவிரியின் கரைக் கண்டி வீரட்டானம்
> கடவூர் வீரட்டானம், காமருசீர் அதிகை
> மேவிய வீரட்டானம் வழுவை வீரட்டம்,
> வியன்பறியல் வீரட்டம், விடையூர்திக் கிடமாம்
> கோவல் நகர் வீரட்டம், குறுகை வீரட்டம்
> கோத்திட்டைக் குடி வீரட்டானம் இவைகூறி
> நாவில் நவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றால்
> நமன் தமரும் சிவன்தமர் என்று அகல்வர் நன்கே''

இன்றைய சமுதாய மக்கள் பெரும்பாலோர் தங்கள் குறை நீங்க வேண்டும் என்பதற்காகவே இறைவழிபாட்டைச் செய்கின்றனர். சிவகதி என்பதனைக் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. எனவே இறைவனை வழிபட்ட உயிர் எய்துவது அவன் திருவடிகளையே, இதனைச் 'சிவகதி' என்று அப்பர் அடிகள் பேசுகின்றார். இதுவே உயிரின் குறிக்கோள், இலட்சியம், இந்தக் குறிக்கோள் உயிர்க்கு உறுதியாக இருத்தல் வேண்டும். இல்லையேல் வருவது கேடே என்பதனைத் தம்மேலிட்டு அப்பர் அடிகள் உரைக்கின்றார்.

> ''பாலனாய்க் கழித்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
> மேலனாய்க் கழித்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
> கோலனாய்க் கழித்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்''

என்று பதிகத்திலே எடுத்துக் கூறி மனிதர்களின் குறிக்கோள் ''சிவகதி'' என்று வலியுறுத்துகிறார். சிவகதி ''திண்ணமாக வேண்டில் சிவபிரானைத் தெளிந்து தியானிக்க வேண்டும்''.

> ''திண்ணமாக வேண்டில் சிவபிரானைத் தெளிந்து தியானிக்க
> வேண்டும்''

> ''தேறிநீ நினைதியாயின் சிவகதி திண்ணமாகும்''

> ''தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே''

> ''செம்மையாய சிவகதி சேரலாம்''

என்று அருளிச் செய்து சிவபிரானை அடைவதே வாழ்வில் நாம் பெறும்பேறு ஆகும் என்பதனைத் தமது தேவாரத்தின் வாயிலாக அமைத்துக் காட்டு கின்றார் அப்பர் பெருமான்.

# 59. நாவுக்கரசரின் பக்தி நெறி

சு. பாலுசாமி, நாமக்கல்.

சைவசமயக் குரவர் நால்வருள் காலத்தால் முந்தியவர் நாவுக்கரசர். இளம் வயதில் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய நாவுக்கரசர், சமணர்கள் சூழ்ச்சியால் சமண சமயத்தைத் தழுவுகிறார். பின்னர், ஈசன் திருவருளால் சைவ சமயத்திற்குத் திரும்பி பல அரும்பெரும் செயல் களை ஆற்றுகின்றார். சைவ சமய அடியார்களுள் தனித்துவம் பெற்று விளங்கியவர் இவர். இவரது பக்திச் சிறப்பின் தனித்துவத்தைப் பற்றி இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றது.

## இறைவன் திருவடி

இறைவன் திருவடியை நினைத்திருந்தால் எந்தத் துன்பமும் ஏற்படாது என நாவுக்கரசர் வலியுறுத்துகிறார். சைவ சமயத்திற்கு இவர் திரும்பியது கண்டு சமணர்கள் மிகுந்த சினம் கொள்கின்றனர். இதனை மன்னனிடம் கூறி, நாவுக்கரசருக்குப் பல இன்னல்களைச் செய்கின்றனர். அப்பொழுது நாவுக்கரசரை சுண்ணாம்புக் காளவாயில் இட்டுக் கொல்வதற்கு ஏற்பாடு செய்கின்றனர். சுண்ணாம்புக் காளவாயில் இடப் பட்டபோது ஈசனை நினைத்து,

> "மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்று பாடுகின்றார் நாவுக்கரசர். இவ்வாறு சிவனின் திருவடியை நினைத் திருந்ததால் சுண்ணாம்புக் காளவாயும் தமக்குக் குளிர்ச்சியூட்டியதாகப் பாடித் திருவடிச் சிறப்பைப் போற்றுகின்றார்.

## ஐந்தெழுத்து மந்திரம்

சிவபெருமானின் ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதிக்கொண்டிருப்பவர்கள் தங்கள் வாழ்வில் எத்துன்பத்திலிருந்தும் மீண்டுவிடலாம் என்கிறார் நாவுக்கரசர். சமணர் கோபத்திற்கு ஆளாகிக் கற்களைக் கட்டிக் கடலில் தூக்கி வீசப்பட்டபொழுது,

> "சொற்றுணை வேதியன் சோதி வானவன்
> பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்

கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே''

என்று பாடுகின்றார். இப்பாடல் ஐந்தெழுத்து மந்திரத்தின் மகிமையை நம் உணர்வில் ஊட்டுவதாக அமைகின்றது.

**தொண்டுள்ளம்**

''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்று உலக உயிர்களுக்கும், சைவ சமய அடியார்களுக்கும் தொண்டு செய்வதே தம் வாழ்க்கையின் பெரும்பயன் என அப்பர் கருதினார். இதனாலேயே, பெரியபுராணம் பாடிய சேக்கிழார் அப்பரின் வரலாற்றைக் கூறும்பொழுது,

''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர்''

என்று தொடங்குகிறார். தொண்டர்க்குத் தொண்டராக வாழ்வதைத் தவிர வேறு எண்ணமில்லை என்பதை,

''அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டு வீற்றிருக் கும்கருத் தொன்றிலோம்''

என்று பாடுகின்றார். மேலும் அடியவர்களுக்குத் தொண்டு செய்வதே வாழ்க்கையின் புண்ணியம் என்பதை,

''பொய்யன் பிலாஅடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே''

என்று பாடுகின்றார். இங்கு அன்பர் பணி செய்தால் இறைவனை எளிதாக அடையலாம் என்பதை உணர்த்துகிறார்.

**பக்தியில் வீரம்**

சைவ அடியாராக விளங்கினாலும் வீரத்திலும் சிறந்து விளங்கினார் அப்பர். சமணத்திலிருந்து சைவரானது கேட்டு ஆத்திரமடைந்த பல்லவ மன்னன், அப்பரை அழைத்து வருமாறு அமைச்சரிடம் ஆணையிட்டான். அப்பொழுது,

''நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை''

என்று கூறி அமைச்சரோடு வர மறுத்துவிட்டார். பல துன்பங்களுக்கும் ஆளாகியும் இவரது மன உறுதியையும், சிவநெறியும் கண்டு பல்லவ மன்னனே மதம் மாறியுள்ளான். இவ்வாறு பக்தியில் வீரம் செறிந்த தன்மையைக் கொண்டுள்ளார் அப்பர்.

**அகத்துறைப் பக்தி**

அப்பர் பெருமான் இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியாகவும் கருதி அகப்பொருள் துறையில் பாடல்களைப் பாடி

பக்தியை வெளிப்படுத்தியுள்ளார். சங்ககால அகத்துறைகள் போலக் காதலுணர்வுடன் உள்ளத்தைத் தொடுவதாக அப்பாடல்கள் உள்ளன. அகப்பொருள் தழுவி அமைந்துள்ள திருவாரூர்ப் பதிகம் இவரது பாடல்களில் தலைமை சான்றதாய் மணிமுடியாய்த் திகழ்கின்றது.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்;
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்;
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்;
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்;
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை;
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

என்ற இப்பாடலில் நாவுக்கரசர் இறைவன்மேல் கொண்டுள்ள ஒப்பற்ற பக்தியைக் காணலாம்.

**மனிதப்பிறவி**

சைவ சமயத்தின் முக்கியக் கோட்பாடே இறைவனின் திருவடியில் கலந்து வீடுபேற்றைப் பெற்று, மறுபிறவி இல்லா நிலையை அடைய வேண்டும் என்பதாகும். பிறப்பறுக்க அடியார்கள் எல்லாம் ஈசனைப் பாடித் துதித்திருக்க, அப்பர் பெருமானோ மனிதப்பிறவி வேண்டும் என்கிறார். இறைவனின் திருநடனக் கோலத்தைக் காணும் பேறு கிடைக்குமாயின் மனிதப் பிறவியும் வேண்டும் என்பதை,

''குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்
வாயிற்குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
யிந்த மாநிலத்தே''

என்ற பாடலைப் பாடி மனிதப்பிறவிக்குப் புனிதத்தை ஏற்படுத்துகின்றார்.

உழவாரப் படை கொண்டு உலகமெல்லாம் சைவ நீதி ஓங்கப் பாடுபட்ட நாவுக்கரசர் இதற்காகத் தம் வாழ்வில் பல சோதனைகளுக்கு ஆளானார். இருந்தாலும் மனம் தளராமல் சிவபெருமானையே பற்றுக் கோடாகக் கொண்டு அவற்றிலிருந்து மீண்டு சைவத்தை நிலை நாட்டினார். மிக எளிமையானவராக இருந்து தொண்டருக்கும், தொண்டராக விளங்கி தம்முடைய தனித்துவமிக்க பக்தி நெறியினால் நம் மக்களின் மத்தியில் நீங்கா இடம் பிடித்துள்ள, நாவுக்கரசர் வழி நாமும் நடந்தால், நமச்சிவாயத்தின் உட்பொருளை உணரலாம். நாதன் தாளையும் அடையலாம்.

# 60. நாவுக்கரசர் தரும் இலக்கிய இன்பம்

அ. பிச்சை, காந்திகிராமம்.

உலக மொழிகளில் தமிழ் மொழியைப் பக்தி மொழி என்று பாராட்டுவர். காரணம், தமிழ் இலக்கியத்தின் பெரும் பகுதி, குறிப்பாக, இடைக்கால இலக்கியம் பக்தி மணம் கமழும் சமய இலக்கியமாகும். தமிழில் சமய இலக்கியத்தை இறை போற்றிப் பாடல்கள், இறைத் தொண்டர் வரலாறுகள், இறைத் தத்துவங்கள் என்ற மூன்று பிரிவில் அடக்கலாம். அப்பரின் நான்காம், ஐந்தாம், ஆறாம் திருமுறையில் அடங்கியுள்ள பாடல்கள் அனைத்தும் தன்னுணர்ச்சிப் பாங்குமிக்க - பண்ணில் பாடத்தக்க பாவினங்கள். இப்பாடல்களில் இறைவன் உருவத்தையும், அவனது அருளிச் செயல்களையும், இறைத்தத்துவத்தையும் கூறும் பொழுது பல வகையான உத்திகளையும், அணுகுமுறைகளையும் கையாண்டு நாவுக்கரசர் பாடல்களை இயற்றியுள்ளார்.

**வடிவம்**

திருநாவுக்கரசரின் நாலாம் திருமுறை திருநேரிசையாலும், திருவிருத்தத்தாலும் ஆகியவை, ஐந்தாம் திருமுறை திருக்குறுந்தொகை எனச் சுட்டப்படுகின்றது. ஆறாந்திருமுறை தாண்டகவடிவத்தில் புனையப் பட்டுள்ளது. இவற்றை யாப்பு வகைகளாகக் கருதுவதைக் காட்டிலும், இலக்கிய வகையாகக் கருதுவதே சிறந்ததாகும். திருக்குறுந்தொகை பெரும்பாலும் ஈரசைச் சீரினால் ஆன கலிவிருத்தம் என்ற பாவின வகையைச் சார்ந்தது. திருவிருத்தம் ஐந்து சீர்களாலாகிய கலித்துறையை யொத்தப் பாவின வடிவமாகும். திருவிருத்தத்திலும் பெரும்பாலும் ஈரசைச் சீர்களே பயில்கின்றன. ஏழு சீர்களாலும், எண்சீர்களாலும், குறுந்தாண்டகமும், நெடுந்தாண்டகமும் அமைகின்றன. மூவசைச் சீர்கள் விரவிவர இத்தாண்டகங்கள் இயற்றப்பட்டுள்ளன. எதுகையும், மோனையும் இயைபுத் தொடையும், சிறப்புற அமைந்து பாட்டின் இனிமையை மிகுவிக்கின்றன. சிலப்பதிகாரத்திலுள்ள குரவைப்பாடல்களும், வரிப்பாடல் களும் திருமூலரின் மந்திரப் பாட்டுக்களும் இவருக்கு முன் மாதிரியாக அமைந்திருக்கக் கூடும். பத்துப் பத்து பாடலில் அமைந்து வரும் பதிக முறையில் ஒரு குறிப்பிட்ட பண்ணில் அவை பாடப்பட்டுள்ளன. சில பதிகங்கள் மட்டும் பதினோரு பாடல்களைக் கொண்டதாக அமைகின்றன. பதினோறாம் பாடலில் சில சமயங்களில் இராவணனைப் பற்றிய குறிப்பு

இடம் பெறுகின்றது. பொதுவாக இவருடைய பாவடிவங்களில் எளிமையும், இனிமையும் சிறப்பிடம் பெறுகின்றன.

'விடந்தீர்த்த திருப்பதிகம்' ஒன்று முதல் பத்து எண்களில் இறைவனது இயல்புகளைத் திட்டமிட்டுக் கட்டமைத்துப் பாடப்பட்டுள்ளது.

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே.

..............................................................

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்தலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே.

திருவையாறு திருக்குறுந்தொகையில் 'வண்ணம்' என்ற சொல்லை ஒரே பாடலில் கையாண்டு மெல்லிசை வண்ணத்தை உருவாக்கியுள்ளார். அப்பாடல்கள் செவிநுகர் கனிகளாகச் சுவைக்கத் தக்கன. ஓசை விகற்பாகிய வண்ணத்தைச் சில இடங்களில் கையாண்டுள்ளார். கீழ்க்காணும் பாடல் மெல்லிசை வண்ணத்திற்குச் சான்றாக அமைகின்றது.

என்ன னென்மனை எந்தையெ னாருயிர்
தன்னன் தன்னடி யேன்தன மாகிய
பொன்னன் பூவனூர் மேவிய புண்ணியன்
இன்னன் என்றறி வொண்ணான் இயற்கையே.

**பொருள்**

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் அறம் மற்றும் வீடுபேறு பற்றியது பக்தி இலக்கியம். பெரும்பாலும் இறைவனைப் படர்க்கையிலும், முன்னிலையிலும் வைத்துப் பாடுகின்ற மரபு பெரும்பாலும் இவரால் பின்பற்றப்படுகின்றது. இருப்பினும் அகப்பொருள் முறையிலும், இறைப்பொருளைப் பாடுவது மரபாகவும் காணப்படுகிறது. இறைவன், அதாவது, பரமான்மா என்ற ஒருவன்தான் புருஷன். மற்ற ஜீவான்மாக்கள் அனைத்தும் பெண்பாலினர். இந்தக் கருத்திற்கு ஏற்றவாறு சில பாடல் களைத் திருநாவுக்கரசர் புனைந்துள்ளார். எடுத்துக்காட்டாக, திருப்பழனப் பதிகத்தில் குயில், கிளி, குருகு போன்றவற்றைத் தலைவி தூது விடுவதாகப் பாடல்கள் புனைந்துள்ளார்.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்

**முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்**
**பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ.**

கீழ்க்காணும் பாடல் திருவாரூர் தியாகராஜர் மீது தீராக்காதல் கொண்ட ஒரு பக்தையின் செயல்பாட்டை முழுமையாகச் சித்திரிக்கிறது. தன்னையே ஒரு பெண்ணாகப் பாவித்துக் கொண்டு இப்பாடலை இயற்றியுள்ளார்.

**முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்**
**மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்**
**பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்**
**பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்**
**அன்னையையு மத்தனையு மன்றெ நீத்தாள்**
**அகன்றா ளகலிடத்தா ராசா ரத்தைத்**
**தன்னை மறந்தாள் தன்நாமங் கெட்டாள்**
**தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே.**

நற்றாய் கூற்றிலும் சில பாடல்கள் புனைந்துள்ளார்! வன பவளவாய் திறந்து என்னும் பாடலில் தலைவனைக் கண்டவிடத்து அவனது புகழை வியந்து கூறும் தலைவியின் தன்மையை நற்றாய்க்கு உணர்த்துமாறு காணலாம். இன்னொரு பாட்டில் பேய்க்கணங்களோடு உறவு கொண்டு சுடுகாட்டினைத் தமது இருப்பிடமாக வைத்து, வெண்டலையில் பலியேற்று உண்பவராய், உடம்பிலே ஒரு பெண் கொடியையும் உடையவராய் இருக்கின்ற ஒரு தலைவனை எவ்வாறு தன் மகள் காதலித்தாள் என்று நற்றாய் இணங்குவதாகக் கூறப்பட்டுள்ளது. இது போல, தோழி போன்ற சிலரின் கூற்றிலும் பாடல் காணப்படுகின்றது.

**கற்பனை**

இலக்கியத்தை அறிவியலிலிருந்து வேறுபடுத்துவது கற்பனையாகும். அடிப்படையின் சிந்தனையிலிருந்து மேம்பட்டு முருகியல் உணர்வுடன் அமைவது கற்பனையாகும். படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை, வெறுங்கற்பனை ஆகியவற்றை ஆங்கிலத் திறனாய்வாளர்கள் வகைப்படுத்தி உரைப்பர். இவ்வகைகளுக்கு அப்பர், தேவாரத்தைக் கற்பவர்கள் சான்றுகளைக் காண முடியும்! 'அங்கண் கடுக்கைக்கு முல்லைப் புறவம்' என்ற பாடலில் ஆக்கக் கற்பனை இருப்பதாக சோ.நா. கந்தசாமி குறிப்பிடுவர். 'கால் கொடுத்து எலும்பு மூட்டி' என்ற பாடலில் கருத்து விளக்கக் கற்பனையைக் காணலாம். கீழ்க்காணும் பாடல் வெறுங்கற்பனைக்கு (Fancy) எடுத்துக்காட்டாகும்.

**நாகத்தை நங்கை அஞ்ச நங்கையை மஞ்ஞை என்று**
**வேகத்தைத் தவிர நாகம் வேழத்தின் உரிவை போர்த்துப்**
**பாதத்தில் நிமிர்தல் செய்யத் திங்களை மின்னென் றஞ்சி**
**ஆகத்தில் கடந்த நாகம் அடங்கும் ஆரூரனார்க்கே.**

இப்பாடலில் சிவபெருமானின் மேனியில் படமெடுத்தாடும் பாம்பினைக் கண்டு பார்வதி அஞ்சுகின்றாள். மயில் போன்றும் சாயலை உடையவள் இடப்பாகம் கொண்ட சிவசக்தி, சக்தியை மயில் என்று கருதிப் பாம்பு அஞ்சிப் படத்தைச் சுருக்கிக் கொண்டுள்ளது. பாம்பு தன்னை பிடித்து விடுமோ என்று அஞ்சிச் சிவபெருமான் முடி மேலுள்ள திங்கள் இறைவன் சூடியிருக்கும் யானைத் தோல் போர்வைக்குள் ஒளிந்து கொண்டு எட்டிப் பார்க்கவும், அத்திங்கள் கீற்றினை மின்னல் என்று நினைத்து மேலும் அச்சமுற்றுச் சிவபெருமானின் மார்பு அணியாகிய பாம்பு அடங்கிவிட்டது என்று நகைச்சுவை மிகுந்த ஒரு வெறுங்கற்பனையைப் புனைந்துள்ளார்.

அப்பர் இயற்கைக் காட்சிகளை வர்ணிப்பதில் கற்பனையை வெளிப்படுத்தியுள்ளார். ஈசன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தலங்களையும், பதிகளையும் எடுத்துரைக்கும்போது அவற்றோடு இணைந்த சோலை களையும் வர்ணித்துக் கூறியுள்ளார். கீழ்க்காணும் பாடல் வீரட்டானத்தைப் பற்றி முழுக்க முழுக்கச் சொல்லோவியமாக இயற்கையில் இறைவனின் தரிசனத்தைக் காணுமாறு செய்துள்ளார்.

**மாசில் ஒள் வால்போல் மறியும் மணிநீர்த் திரைத் தொகுதி**
**ஊசலை ஆடியங் கொண்சிறை அன்னம் உறங்கலுற்றால்**
**பாசறை நீலம் பருகிய வண்டு பண்பாடல் கண்டு**
**வீசும் கெடில வடகரைத்தே எந்தை வீரட்டமே.**

வீரர்கள் வாளைப் புரட்டுவது போல் அலைத்தொகுதி புரண்டு எழுந்து வருகின்றது. அதுவே ஊசலாகக் காட்சி தருவதால் அன்னம் அதன் மீது தவழ்வது ஆடுவது போல் உள்ளது. ஆடிக் களைத்த பின் ஆற்றின் அருகில் உள்ள சோலையில் உறங்கும். நீல மலர்களில் உள்ள தேனைப் பருகிய வண்டுகள் பண்ணிசைக்கின்றன. பாடல் பரிசாகத் தான் அடித்துக் கொண்டு வரும் மணிகளைக் கெடிலம் வீசுகிறது. இத்தகைய இயற்கைக் காட்சியைச் சித்திரிக்கின்றார் அப்பர். திருநல்லூர் பூஞ்சோலை (4-97-10), ஒற்றியூர் எழில் (4-86-2), தில்லைப் பொலிவு (4-80-1), திருவாரூர் செழுங்காட்சி (4-70-2) ஆகியவற்றை அப்பரின் இயற்கைக் காட்சி களாகக் கண்டு மகிழலாம். திருவையாற்றுப் பதிகத்தில் சக்தியும் சிவனும் சேர்ந்து இயங்கும் தெய்வீகக் காட்சியினை விவரிக்கின்றார். காதல் மடப்பிடியோடும் களிறு வருவதைக் கண்டேன் என்று தொடங்கி கோழி, குயில், மயில், அன்றில், அன்னம், மான், பன்றி, நாரை, கிளி, மாடு ஆகியவை ஆணும், பெண்ணுமாய் இணைந்து இயங்கும் காட்சியைத் தம் பாடலில் அனுபூதி அனுபவமாக அப்பர் பதிவு செய்துள்ளார்.

வண்ணக்குழம்பினால் தூரிகை கொண்டு ஓவியம் தீட்டுவதைப் போலக் கவிஞர்கள் சொற்களால் சொல்லோவியத்தைத் தீட்டுகிறார்கள். பாட்டினை 'பேசும் ஓவியம்' என்று குறிப்பிடுவர். கீழ்க்காணும் தேவாரப் பாடல் நடராசரின் திருவுருவத்தை நமது உள்ளத்தில் பதிவு செய்கிறது.

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிஞ்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

உடம்பை ஒரு முழு ஆழமும், ஒரு முழு நீளமும், அரைமுழ அகலமுள்ள ஒரு குட்டமாகவும், ஒன்பது துறைகளை உடையதாகவும், அதில் ஐந்து முதலைகள் வாழ்வதாகவும் வர்ணிக்கின்றார். ஐந்து முதலைகள் ஐம்பொறி களின் குறியீடாகும். எனவே, உடம்பை ஓட்டைவீடு, ஒன்பது வாசலாகக் கற்பனை செய்துள்ளார்.

திருமூலரைப் பின்பற்றி உடம்பைக் கோயிலாகவும், உள்ளத்தை இறைவனது இருக்கையாகவும் உருவகிக்கின்றார். இன்னொரு பாட்டில் உடம்பை வீடாகவும், உள்ளத்தை விளக்காகவும் கற்பனை செய்துள்ளார்.

உடம்பெனு மனைய கத்து வுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் பட்டு யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே.

**உணர்ச்சி**

உணர்ச்சி என்னும் மெய்ப்பாடு பாட்டின் உயிர். படிப்பவர் உள்ளத்தில் சுருதியேற்றும் மின்சாரம். பக்தியைச் சிலர் சாந்தம் என்ற ஒன்பதாவது சுவையாகக் கருதுவார்கள். பக்திச் சுவையோடு எண் சுவைகளில் சிலவும் விரவி வருவதைக் காணலாம். அப்பர் பாடல்களில் நகைச்சுவை, உவகைச் சுவை, பெருமிதச்சுவை ஆகியவற்றை உணரலாம். சிவபெருமானது அடியார்கள் அஞ்ச வேண்டியதில்லை; எந்நாளும் இன்பமே என்ற கருத்தைக் கீழ்க்காணும் பாடலில் பெருமிதத்துடன் வெளிப்படுத்தியுள்ளார்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

கோயில் பதிகத்தில் தில்லைச் சிற்றம்பலவனார்க்கு எல்லையில்லாதோர் அடிமை பூண்டவர்க்கு, அல்லல் என் செய்யும்? அருவினை என் செய்யும்? தொல்லை வல்வினை தொந்தந்தான் என் செய்யும்? என்று அஞ்சாநெஞ்சத்தோடு வினவுவதைக் காண்கிறோம்.

சிவபெருமான் கங்காதேவியைத் தமது சடையின் மீது சூடியுள்ளார். கங்கையாளது ஆரவாரத்தைக் கேட்டு உமையம்மை ஊடல் கொண்டதாகவும், அவ்வூடலைத் தீர்க்கவே பெருமான் சாம வேதம் பாடி அதற்கேற்பவே ஆடினார் என்றும், அப்பர் ஒரு நகைச்சுவைத் துணுக்கை வழங்குகின்றார். அகப்பொருட் கொண்ட பாடல்கள் அனைத்தும் உவகைச் சுவையைப் பக்தி உணர்வோடு வழங்குகின்றன.

நெஞ்சோடு கிளக்கும் பாடல்கள் விழுமிய உணர்ச்சியில் விம்மி வெளிப்படுகின்றன.

**நீதியால் நினைசெய் நெஞ்சே நிமலனை நித்தமாகப்**
**பாதியாம் உமைதன் னோடும் பாகமாய் நின்ற எந்தை**
**சாதியாய்ச் சுடர்வி ளக்காய்ச் சுண்ணவெண் ணீறதாடி**
**ஆதியும் ஈறு மானார் அதிகைவீ ரட்ட னாரே.**

நீதியால் வாழமாட்டேன், நித்தலும் தூயேன் அல்லன், ஓதியும் உணர மாட்டேன், உன்னையுள் வைக்கமாட்டேன், மெய்யனாய் வாழமாட்டேன், தெருளுமாதெருள மாட்டேன், காமவெந்நோய் கழித்திலேன், காதன்மை என்னும் பாசம் ஒழித்திலேன் என்று திருச்சிற்றம்பல இறைவனிடம் முறையிட்டுப் புலம்புவதை உணரலாம். இவருடைய பணிவும் தொண்டும் தேவாரப் பாடல்களில் மேலோங்கிக் காணப்படுகின்றன.

**மொழிநடை**

மற்ற நூல்களிலிருந்து இலக்கியத்தில் பயன்படுத்தப்படும் மொழி வேறுபட்டதாக இருக்கும். உவமை, உருவகங்கள், பழமொழிகள், பேச்சொலி நயங்கள் ஆகியவை அப்பர் தேவாரத்தில் இடம் பெறுகின்றன. சில பதிகங்களில் ஒரே சொல் மீண்டும் மீண்டும் வந்து சொல்லின்பத்தையோ, சொற்பொருள் இன்பத்தையோ வழங்குவதைக் காணலாம். நீயே, போலும், வைத்தாய், கண்டாய், காண் என போன்ற சொற்கள் பதிகம் முழுவதும் கையாளப்பட்டு சொல்லின்பம் தருவதைக் காணலாம்.

**நங்கையைப் பாகம் வைத்தார் ஞானத்தை நவில வைத்தார்**
**அங்கையில் அனலும் வைத்தார் ஆனையின் உரிவை வைத்தார்**
**தங்கையின் யாழும் வைத்தார் தாமரை மலரும் வைத்தார்**
**கங்கையைச் சடையுள் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே.**

சிவபெருமானிடமிருந்து பெற்ற இறையனுபவத்தை இயற்கைப் பொருளின் இன்பச் சுவையில் வைத்து பாடலைப் புனைந்துள்ளார். தேன், பால், கனி, கரும்பு, அமுதம் என்று இறை இன்பத்தை உருவகிக்கின்றார். திகழ்ஒளி, செழுஞ்சுடர், மாமணி, நற்குன்று, மரகதம், ஞானவிளக்கு, பவளக் கொழுந்து, முத்து, வைரம், வைரமாலை, பொன்னுரு என இறைவனைச் சுட்டுகின்றார். இவற்றோடு ஐ, ஆனாய், ஆகி, ஏ போன்ற

விகுதிகளைச் சேர்த்து இறைவனின் இயல்புகளை தன்மையினைப் போற்றுகின்றார்.

பக்தி இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாகும். மக்களைத் தன்வசம் இழுக்க வேண்டுமானால், மக்கள் மொழியிலுள்ள பாடல்வடிவங்களையும், பழமொழிகளையும் பயன்படுத்த வேண்டும். திருநாவுக்கரசர் தமது பாடல்களில் பழமொழிகளைப் பல இடங்களில் கையாண்டுள்ளார். எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல் வரிகளைக் குறிப்பிடலாம்.

1. ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய வாதரைப் போல்
   காற்றிற் கடுத்துல கெல்லாந்திரிதவர் காண்பதற்கே.
2. மோத்தையைக் கண்ட காக்கை போல் வினைகண் மொய்த்துன்
   வார்த்தையைப் பேச வொட்டாமயக்கான் நான்
   மயங்குகின்றேன்.
3. பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரி றைத்தேன்
   உற்றலாற் கயவர்தேறா ரென்னுங் கட்டுரையோ டொத்தேன்.

'திருவாரூர் பழமொழி' என்ற பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் பழமொழி இருத்தலைக் காணலாம். கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வன், முயல்விட்டு காக்கை பின் போனவன், விளக்கிருக்க மின்மினித் தீகாய்ந்தவன், கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவன் என்று பழமொழி களைப் பயன்படுத்தியுள்ளார். பழமொழி போல உலக வழக்கில் பயிலும் சில சொற்றொடர்களும் திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படுகின்றன. சான்றாக, நின்பணி பிழைக்கில் புளியம் வளாரால் மோதுவிப்பாய். உகப்பாய், முனிவாய் என்று கச்சி ஏகாம்பரனிடம் கூறுகின்றார்.

தமிழ்ப்பக்தி இலக்கியத்தில் குறைவான ஆராய்ச்சிகளே நிகழ்ந் துள்ளன. இப்படி நிலைமை இருக்கும்போது திருநாவுக்கரசரின் தேவாரம் பற்றிச் சில கட்டுரைகளும், ஒன்றிரண்டு முனைவர் பட்ட ஆய்வேடு களும் காணப்படுகின்றன. பன்னிரண்டு திருமுறைகளைக் கண்டு அச்சமுற்று அகன்று செல்லும் இளைய தலைமுறை பன்னிரு திருமுறைகளில் ஆழமான ஆராய்ச்சியைச் சமூக உளவியல் கோணங்களில் நிகழ்த்த வேண்டும். பக்திப் பாடல்களின் மூல வேர்களையும் அவை படைத்த புதுமைகளையும் அவை வழிவகுத்த மரபுகளையும் ஆராய வேண்டும். திருநாவுக்கரசா 49,000 தேவாரப் பாடல்கள் பாடியதாக அறிகின்றோம், ஆனால் அவற்றுள் நமக்குக் கிடைப்பவை 3,210 பாடல்கள். இப்பாடல்கள் திருமுறை அடிப்படை யிலும், தலமுறை அடிப்படையிலும் நூல்களாக வெளிவந்துள்ளன. இன்னொரு தேவாரத் திரட்டு மாணவர்கள் மற்றும் பொது மக்களுக்குப் பயன்படும் வகையில் மிகச் சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்து தொகுத்துப் பதிப்பிக்க வேண்டியது ஆராய்ச்சியாளரின் கடமையாகும்.

# 61. தாண்டகத்தில் 'பதி' இயல் சிந்தனை

பிரியாசங்கரன், சென்னை.

சைவ சித்தாந்தம் உலகத்துப் பொருள்களை மூன்று பிரிவுகளுக்குள் அடக்குகின்றது.

1. பதி - இறைவன்
2. பசு - பல்வேறுபட்ட உயிர்கள்
3. பாசம் - இவ்வுயிர்கள் வீடு அடைவதற்குத் தடையாக நிற்பவை

''பலகலை ஆகமம்வேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபாசம் தெரித்தல்.....'' (சிவப்பிரகாசம் - 13)

இதுவே சைவ சித்தாந்தத்தின் அடிப்படையாகும். திருநாவுக்கரசர் அருளித் தந்த திருத்தாண்டகத்தில் (6-ஆம் திருமுறை) 'பதி' பற்றிய அவரது சிந்தனைகளை நோக்குமுகமாக இக்கட்டுரை அமைகின்றது.

**பதி**

உமாபதி சிவம் சிவப்பிரகாசத்தில் பதிக்குரிய இலக்கணத்தை ஒரே பாடலில் தொகுத்துக் கூறுகின்றார்.

''பலகலை ஆகமம்வேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபாசம் தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும் அரு உருயின்றிக் குணம் குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி
அலகில் உயிர்க்கு உணர்வாகி அசலம் ஆகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவு அரிதாயச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவம்என்பர் தெளிந்து ளோரே''

(சிவப்பிரகாசம் - 13)

இப்பாடலின் அடிப்படையில், அப்பரது சிந்தனைகளை, இக்கட்டுரை ஆராய முற்படுகின்றது.

**1. பதி - பரம்**

பதி பரம் பொருள் ஆகும். அதற்கு இறைவன், கடவுள் என்று பலவேறு பெயர்கள் உண்டு.

"........பரஞ்சுடரைப் பரனை எண்ணில் பேரானை" (6.8)

"எண்ணாயிரங் கோடி பேரார் போலும்" (6.218)

"எண்ணரிய திருநாம முடையா யென்றும்" (6.313)

இவ்வாறு பலவாறு அழைக்கப் பெறினும் பதிப்பொருள் ஒன்றுதான். 'ஒன்று என்றது ஒன்றே காண், ஒன்றே பதி' என்று சிவஞான போதத்தின் எடுத்துக்காட்டு வெண்பா இதனை வலியுறுத்துகின்றது. (சிவப்பிரகாசம் - 19)

"உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே" (6. 380)

"பரத்தொன்றாய் நின்றான் தன்னை" (6. 115)

"ஒன்றா வுலகனைத்து மானார் தாமே" (6. 774)

"ஒப்பொருவ ரில்லாத ஒருவன் தன்னை" (6. 338)

"தானன்றி வேறொன் றில்லாத் தத்துவனை" (6. 505)

**2. பதி – அநாதி**

பதி தோற்றமும் அற்றது. ஈறும் அற்றது. ஆதி அந்தம் இல்லாதது. என்றென்றும் நிலைத்து நிற்பதாகும்; மூப்பு பிணி அதற்குக் கிடையாது.

"முதலும் இறுதியும் இல்லார் போலும்" (6. 287)

"பிறப்பிலார் இறப்பிலார் பிணியொன்றில்லார்" (6.104)

"பிறப்பிடும்பை சாக்காடொன் றில்லார் போலும்" (6.288)

"பாலானாய் வளர்ந்திலாப் பான்மை யானே" (6. 344)

"மூவா மேனியுடையானை" (6. 195)

தோற்றம், இருப்பு, ஒடுக்கம் என்று மூன்று நிலைகளும் பதிக்குக் கிடையாது. அது மாற்றமில்லாது நின்று இவ்வுலகத்தைத் தோற்றியும் காத்தும் ஒடுக்கியும் வருகின்றது.

"முந்தி யுலகம் படைத்தான் தன்னை
மூவா முதலாய மூர்த்தி தன்னை" (6. 24)

தோற்றமும் ஈறும் அற்றதாயினும் முதற்பொருளாகவும் யாவரும் அடைகின்ற இறுதிப் பொருளாகவும் இறைவன் விளங்குகின்றான்.

"மூதாயர் மூதாதை யில்லார் போலும்
முதலும் இறுதியுந் தாமே போலும்" (6.16)

இறைவன் உலகிற்கு ஆதி அந்தம் நடுவாக விளங்குகின்ற தன்மையன்.

"முதலாகி நடுவாகி முடிவானானே" (6.35)

"முடியாதே முதல் நடுவு முடிவானானை" (6.735)

"வித்தாம் முளையாகும் வேரே தானாம்" (6.149)

**3. பதி - உரு அரு அற்றது**

பதிப் பொருள் அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று தன்மையும் இல்லாதது. ஆயினும் உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு உருவாகி அருவாகி, அருஉருவாகி நிற்கின்றான் இறைவன்.

**''........வேண்டும் உருவமாம்''** (6.149)

**''ஒழியாமே எவ்வுருவு மானான் தன்னை''** (6.113)

**''......காணா தார்க்குக் கோலம் பலவுடையர்''** (6.171)

பதியானது உயிரிகளின் பொருட்டு அருவமாயும் உருவமாயும் அருவுருவ மாயும் தனது பேரருளாலே திருமேனி கொண்டு எழுந்தருளுகின்றது.

''அகளமாய் யாரும் அறிவு அரிது அப்பொருள்
சகளமாய் வந்தது என்ற உந்தீபற'' (திருவுந்தி. 1)

என்கிறார் உய்யவந்த தேவ நாயனார். அகள வடிவம் அருவத் தன்மை யாகும். இது பதிக்கு உரியது. சிவபெருமான் திருமேனி தாங்கி எழுந்தருளுவார் என்று சைவ சமயம் கூறுகின்றதே ஒழிய அவதாரம் என்ற ஒன்றை ஏற்றுக் கொள்வதில்லை. சிவபெருமான் பிறவா யாக்கைப் பெரியோனாகவே திகழ்கின்றார்.

**''இன்னவுரு வென்றறிவொண் ணாதான் காண்''** (6.496)

என்கிறார் அப்பர் பெருமான். பதி உருவம் அற்றது.

**''நோதங்க மில்லாதார்''** (6.97)

**''......யாக்கை துறந்தான் தன்னை''** (6.687)

உருவற்றவராயினும் அம்மையப்பராகவும், ஆடல் வல்லானாகவும், பொன்னார் மேனியனாகவும் எழுந்தருளிய தன்மையையும் அப்பர் நவில்கின்றார்.

**4. பதி எங்கும் நிறைந்தது**

உரு அருவாகவும் அன்றி, உருவாகவும் அருவாகவும் பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது பதி.

''ஏகனும் ஆகி அநேகனும் ஆனவன்'' (திருவுந்தி. 5)

ஒன்றாகிய பரம், உயிர்களுக்கு அருள்பாலிப்பதன் பொருட்டு பலவாகக் காட்சி தருகின்றது.

**''......எல்லா மாவார்''** (6.163)

**''எவ்விடத்தும் நீயில்லாதில்லை''** (6.623)

**4.1. அட்ட மூர்த்தியானவர்**

பஞ்ச பூதங்களாகவும் சந்திரன் சூரியனாகவும் இயமானனாகவும் விளங்கும் அட்ட மூர்த்தியானவர்.

"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி" (6.919)

**4.2. பார் முழுதும் ஆன பரமன்**

இப்பாரில் உள்ள எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்திருக்கின்றது பதி.

"...மறிகடலும் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருத்தொளிய தாரகையும் திசைக ளெட்டுஞ்
திரி சுடர்கள் ஓரிரண்டும் பிறவு மாய..." (6.4)

".....மதியமும் ஞாயிறுங் காற்றுந் தீயும்
அந்தரமு மலைகடலு மானான் தன்னை" (6.25)

"....நீர்நிலத்தீ வெளிகாற்றாகி
நிற்பனவும் நடப்பனவு மாயி னானை" (6.665)

"ஓசை ஒலி யெலா மானாய்" (6.380)

**4.3 ஏழுலகமாகவும் மூவுலகமாகவும் ஏழ் கடலாகவும் விளங்குபவன்**

"மூவுலகுந் தானாய முதல்வன் தன்னை" (6.69)

"..ஏழுலகுந் தானா கும்மே" (6.38)

"...கடலே ழானாய்" (6.121)

**4.4. வேதமாக விளங்குபவன்**

"அருமறையோ டாறங்க மாயினானை" (6.6)

"முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்" (6.240)

**4.5. திசைகளெட்டும் ஆனவன்**

"எண்டிசையுஞ் தானாய குணத்தினான் காண்" (6.82)

**4.6. முக்காலமும் பொழுது ஆனவன்**

"....காலங்கள் மூன்றானானே" (6.36)

"பின்றானும் முன்றானு மானான் தன்னை" (6.108)

"இரவும் பகலுமாய் நின்றார் தாமே" (6.362)

"அந்தியும் சந்தியும் மானார் தாமே" (6.778)

"......நாளாம் கொள்ளுங் கிழமையாம் கோளே தானாம்" (6.148)

### 4.7. உயிர்களானவன்

பதி உயிரிகளாகவும் விளங்குகின்றார். உயிர்களுக்குள் உறைந்திருப்பான். இறைவன், மனம், வாக்கு, காயமாக விளங்குகின்றான்.

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்" (6.80)

தேவராகவும் அரக்கராகவும் மனிதராகவும் விளங்குபவன்.

"ஆல நிழுலிருப்பர் ஆகா யத்தர்
அருவரையி னுச்சியர் ஆணர் பெண்ணர்" (6.171)

"மாதா பிதாவாகி மக்களாகி" (6.925)

மனிதருள் பெண்ணாகி ஆணாகி இயக்கத்தை நடத்துபவனும் இறைவனே.

"பெண்ணோடாணாயி னான்காண்" (6.247)

"பெண்ணானை ஆணானைப் பேடி யானை" (6.222)

"பெண்ணாகி பெண்ணுக்கோ ராணுமாகி" (6.920)

எல்லா சீவராசிகளும் இறைவனே.

"நிற்பனவும் நடப்பனவும் நீயே யாகி" (6.346)

"பல்லுயிர்களாகி" (6.641)

இறைவன் என்னுள்ளும் இருக்கின்றான் உன்னுள்ளும் இருக்கின்றான். உடலாகவும் உயிராகவும் விளங்குகின்றான்.

"ஊனவன்காண் உடல்தனக்கோர் உயிரானான்காண்" (6.480)

"நீயாகி நானாகி" (6.923)

அவன் தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும் ஆகின்ற தன்மையனாக விளங்குபவன். அவன் உயிர்களாக விளங்கினாலும் உயிர் எப்போதும் பதியாவதில்லை.

"அவன் இவன் ஆனது அவனருளால் அல்லது
இவன் அவன் ஆகான் என்று உந்தீபற
என்றும் இவனே என்று உந்தீபற". (திருவுந்தி. 40)

### 5. நின்மலன்

இறைவன் பற்றற்றவன். இயல்பாகவே பாசங்களை நீங்கி விளங்குகின்றவன். என்றும் குற்றமற்றவன்.

"பூரணன் காண் புண்ணியன் காண்...." (6.78)

"நின்மலன் காண்...." (6.246)

"மாசொன் றிலாதான் தன்னை" (6.30)

"எற்றாலுங் குறைவொன்று மில்லா தான்காண்" (6.25)

"வேண்டாமை வேண்டுவது மில்லான்" (6.466)

உய்ய வந்த தேவநாயனாரும்,

"விமலற்கு இடம் இது என்று உந்தீபற" (திருவுந்தி. 8)

"துய்ய் பொருள் ஈது என்று உந்தீபற" (திருவுந்தி. 10)

என நவில்கின்றார்.

**6. பதி ஒப்பற்றது**

தனக்கு ஒப்பும் உயர்வும் இல்லாத பரம்பொருளே பதியாகும்.

"மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை" (6.2)

"துலையாக வொருவரையு மில்லா தானை" (6.199)

"நிகரேது மில்லா தான் காண்" (6.246)

"மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி" (6.320)

**7. பதி - உட்பொருளானது**

வாழும் உயிர்களாக மட்டுமன்றி அவ்வுயிர்களின் உட்பொருளாகவும் விளங்குகின்றது பதி. எல்லாப் பொருள்களிலும் விளங்கும் நுண்மையான பொருளாகவும் பதி விளங்குகின்றது. உயிரின் உணர்வு பதி.

"....பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்" (6.146)

"கருவா யுலகுக்கு...." (6.148)

"உணர்வாகி யடியேனது உள்ளே நின்ற" (6.193)

"மனத்துள் நின்ற கருத்தானை..." (6.197)

"பிண்டத்திற் பிறந்ததொரு பொருளை" (6.267)

"வேதத் துண்டத்திற் றுணைப் பொருளை" (6.267)

"உற்றிருந்த உணர்வெலா மானாய் நீயே" (6.385)

"பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே" (6.387)

"சொல்லுவார் சொற்பொருளின் தோற்றமாகி" (6.460)

"உயிராகி யதனுள் நின்ற உணர்வாகி" (6.621)

"ஊன் கருவின் உள்நின்ற சோதி" (6.683)

இவ்வாறு அறிவரிய நுண்பொருள்களாகி விளங்குகின்றது பதி.

**8. பதி - அசலம்**

உயிர்களின் அசைவுக்கு காரணமாக விளங்கி தான் அசைவற்று நிற்கின்றது பதி.

''உள் நின்ற நாவிற் குரையாடியாம்'' (6.148)

பதியின் செயலால்தான் இவ்வுலகமானது இயங்குகின்ற தன்மை யுடையதாகின்றது.

''ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகு வித்தால் ஆரொருவர் உருகா தாரே'' (6.931)

காரணனாக விளங்கினாலும் தான் அசலமாக விளங்குபவன்.

''நோவாமே நோக்கருள வல்லாய் நீயே'' (6.381)

''நோக்காதே எவ்வளவும் நோக்கினானை
நுணுகாதே யாதொன்றும் நுணுகினானை'' (6.111)

**9. பதி - அகண்டிதம்**

எல்லைக்குட்படுவதும், பகுக்கப்படுவதும் கண்டிதம் என்று கூறப்படும். எங்கும் நிறைந்திருக்கும் பதியானது கால இடவரையறைக்கு உட்படாதது; பகுக்கப்படாதது ஆகும்.

''கூறேற்கக் கூறமர வல்லான் தன்னை'' (6.27)

''....இருநிலனும் விசும்பும் விண்ணும்
ஏழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற...'' (6.10)

''ஏழண்டத் தப்பாலான்'' (6.80)

''....ஆறங்க நால்வேதத் தப்பால் நின்ற பொருளானை....''
(6.554)

''அண்டன்காண் அண்டத்துக் கப்பாலான் காண்'' (6.243)

எல்லாமாகவும் நின்று எல்லாவற்றுக்கப்பாலும் நின்று விளங்குகின்றது பதி. உய்யவந்தாரும்,

''இங்கன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லு கேன்
அங்கன் இருந்தது என்று உந்தீபற
அறியும் அறிவு அது உந்தீபற'' (திருவுந்தி. 4)

பதி அறிவுக்கு அறிவாகவும் அப்பாலுக்கு அப்பாலாகவும் சொற்பதம் கடந்த நிலையில் உள்ளது; சொல்லற் கரிதானது.

**10. செல அரிதானது - செல்கதியானது**

பதி சத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் விளங்குகின்றது. "தற்பரமாய்ச் சதாசிவமாய்..." (6.967) விளங்குகின்ற பதியை ஆறாவது அறிவினால் மட்டும் உணரவியலும். அது அருமையானது. பதி அறிவாகவும் விளங்குகின்றது.

"கற்றறிருந்த கலைஞான மானாய் நீயே
கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்றாய் நீயே" (6.385)

"கற்றானைக் கற்பனைந் தானே யாய..." (6.797)

"யார்க்கும் தெரியாத தத்துவனை..." (6.1)

"அறிதற் கரியசீ ரம்மான் தன்னை..." (6.22)

"ஆறொருவ ரவர் தன்மை யறிவார்....." (6.114)

"மறையானை மறையாலும் அறிய வொண்ணாக் கலையானை...." (6.874)

"ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும்...." (6.282)

"....ஞானத் தொளியானான் காண்...." (6.84)

சென்றடைய அரிதாக விளங்கும் பதியே உயிர்களுக்கு உயர் கதியாகி உறுதி பயக்கின்றது.

"செல்கதிதான் கண்ட சிவனார் போலும்" (6.285)

**11. பதி - சிறிது பெரிது**

இறைவன் அணுவுக்கும் அணுவாயும் அப்பாலுக்கு அப்பாலாகவும் விளங்குபவன்.

"அற்பமொடு பெருமையுமாய் அருமையாகி" (6.967)

".....அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனை....பெரியானை" (6.1)

"விரிந்தானைக் குவிந்தானே....." (6.856)

**12. பதி உண்மையானது**

பதி பொய்யற்றது. எங்கும் நிறைந்திருக்கும் உண்மை வடிவானது.

"மெய்யானை...." (6.465)

".....பொய்யிலா மெய்யன் தன்னை" (6.504)

"மெய்யானை பொய்யாது மில்லான் தன்னை" (6.602)

## 13. நிற்குணன்

உயிர்கள் பொருட்டு உரு தரித்தாலும் குணக் குறிகள் அற்றது பதி.

"உள்ளவன்காண் இல்லவன் கான் ...." (6.480)

"நல்வினையுந் தீவினையு மானான் தன்னை ....." (6.108)

"மறுமையும் இம்மையும் ஆனான் தன்னை...." (6.108)

இன்ன குணம் உடையவன் இறைவன் என்று கூறுவது கடிது. ஆதலால் தான் பதியை 'நிற்குணன்' என்று கூறுகின்றோம். பரம்பொருளாகிய சிவம் யாவையுமாய் அல்லனுமாய் விளங்குபவன்.

1. பதி இறைவனைக் குறிக்கும்.
2. பதி 'ஒன்று' ஆக விளங்குகின்றது.
3. பதி அநாதியானது.
4. பதி உருவாகி அருவாகி அருஉருவாகி நிற்பது.
5. பதி எங்கும் நிறைந்து விளங்குவது.
6. பதி குற்றமற்றது, ஒப்புயர்வு அற்றது.
7. பதி பருப்பொருளாகவும் அப்பருப்பொருளின் நுண்பொருளாகவும் விளங்குகின்றது.
8. பதி அசலமாகவும் அகண்டிதமாகவும் விளங்குகின்றது.
9. பதி ஞானமயமானது.
10. பதி அருமையாகவும், சிறுமையாகவும், பெருமையாகவும், செல்கதிக்குகந்ததாகவும் விளங்குகின்றது.
11. பதி உண்மையானது.
12. பதி நிற்குணமானது.

# 62. இடைமருதூர் இனியன்

கு.ச. மகாலிங்கம், திருவிடைமருதூர்.

தேவாரம் பாடிய மூவருள் அகவையில் மூத்தவரும் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு ஆட்கொள்ளப்பட்டவருமான திருநாவுக்கரசு சுவாமிகள் திருவிடைமருதூர் எம்பெருமான் மீது பாடிய பாடல்கள் வினைதீர்க்கும் திறத்தைக் கூறுகின்றன.

## திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும்

சமண சமயக் கொள்கைகளால் ஈர்க்கப்பெற்று அச்சமயம் புகுந்த நாவுக்கரசர் சமணர்கள் சமயக்கொள்கைக்கு மாறாக அரசியல் செல்வாக்கையே பெரிதும் விரும்பியதால் அங்கே இறைவழிபாடு உண்மையற்றிருப்பதைக் கண்டு மனம் நொந்தார். தவவேடம் பூண்டு அவமே செய்யும் அக்கூட்டத்திலிருந்து வெளியேற விரும்பினார். தருமசேனர் (திருநாவுக்கரசர்) சமணத்திலிருந்து விலகினால் தம் சமயச் செல்வாக்கும் அரசியல் செல்வாக்கும் பறிபோகும் என அஞ்சிய சமணர்கள் அரசனின் துணையொடு பலவகையிலும் அவருக்குத் துன்பம் விளைவித்தனர். சிவபெருமான் அருளால் அனைத்தும் நீங்கப்பெற்று சிவனடியையே செம்மையுடன் சார்ந்து தொண்டு நெறியால் பக்தி நெறியை உலகு உணரச் செய்தவர். அவர் செய்த தொண்டு நெறியே பஞ்சம் தீர்க்க வாசியில்லாக் காசு ஈந்தது.

அன்னை உமாதேவியால் தோணிபுரத்தில் ஞானப்பால் ஊட்டப்பெற்று நாளும் இன்னிசையால் தமிழையும் சைவத்தையும் உலகம் தழைக்கச் செய்தவர் ஞானசம்பந்தப் பெருமான். ஐந்தெழுத்து மந்திரமே எத்துன்பமும் நீக்கும் என உரைத்தவர். மங்கையற்கரசியின் வேண்டுகோளை ஏற்று மதுரை சென்று அங்கு நிலவிய சமணர்களின் அரசியல் அதிகாரத்தை அழிக்க விரும்பினார். மதுரை புறப்பட அப்பர் சுவாமிகளிடம் விடை கேட்டார். அப்பர் சுவாமிகளுக்கு தம்மீது சமணர்கள் கொடுத்த துன்பங்கள் நினைவுக்கு வந்தன. சிவனின் அருட்திறம் பெற்றவர் ஞானசம்பந்தர் என்பதையும் மறந்தார். அப்பிள்ளையைக் காக்க வேண்டுமே என்ற தாய்ப் பாசம் மேலிட்டது. சம்பந்தப் பெருமானிடம் சமணர்கள் பொல்லாதவர்கள்; சூது, வாது வல்லவர்கள் தங்களுக்குத் துன்பம் தருவர் எனவே செல்ல வேண்டாம் எனத் தடுத்தார். ஆனால் ஞானசம்பந்தப் பெருந்தகையோ

"சூதும்,வாதும் நம்மைத்தொடா; நாம் அஞ்ச வேண்டா;
அஞ்செழுத்து மந்திரமே நமக்கு ஆயுட்காப்பு"

எனக் கூறிப் புறப்பட்டார்.

ஞானசம்பந்தப் பிள்ளை மீது பாசம் கொண்டவரல்லவா அப்பர் சுவாமிகள்; அவர் மனம் அஞ்சியது. மீண்டும் அவரைப் போகவொண்ணா திருக்க "நாளும் கோளும் சரியில்லை; எனவே பின்னர் செல்லலாமே" என இறைஞ்சினார். ஆனால் ஞானசம்பந்தப் பெருந்தகையோ "நம்பர்க்கு நாளும் கோளும் நன்மையே செய்யும்;" எனக் கூறி உலகோர் உய்ய "கோளறு திருப்பதிகம்" பாடியருளினார். இவ்வாறு அப்பர் சுவாமிகள் ஞானசம்பந்தப் பெருமான்மீது கொண்ட அளவற்ற அன்பினால் அப்பர் சுவாமிகள் உழவாரப்பணி செய்த இடங்களில் சம்பந்தப்பெருமான் கால் படவும் விரும்பினாரில்லை. அப்பர் சுவாமிகளைக் காணச் சென்ற ஞானசம்பந்தரின் பல்லக்கை அவரறியாமல் தான் சுமந்தார் அப்பர்; "அப்பர் எங்குற்றார்" என வினவ "அடியேன் இங்குற்றேன்" எனப் பல்லக்கின் கீழிருந்து குரல் வரவே குதித்து இறங்கித் தாமும் அடி வீழ்ந்தார். இருவரும் தழுவி மகிழ்ந்தனர்.

இங்ஙனம் எம்பெருமான் அடியவரான ஞானசம்பந்தப்பெருமான் மீது கொண்ட பேரன்பினால் மனிதர்கள் இழைக்கும் துன்பங்கள் குறித்தும், கோள்களால் ஏற்படும் தீமைகள் குறித்தும் கூறி தடுத்துரைத்தார். ஆனால் மனித வாழ்வில் ஏற்படும் எத்தகைய வினைகளையும் இடைமருது எம்பெருமானை வழிபடுவதன் மூலமே போக்கிவிடலாம் எனப் புகல்கிறார். அப்பாடல்களில் ஒருசில வருமாறு:

**கொன்றை மாலையும் கூவிள மத்தமும்**
**சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்**
**என்றும் எந்தை பிரான்இடை மருதினை**
**நன்று கைதொழ வார்வினை நாசமே.**

(திருக்குறுந்தொகை - 5. 3)

(எம்பெருமானாரது சடைமுடியினை கொன்றை மலர்களும், கூவிளம் போன்ற இளங்காலைப் போதில் மலர்கின்ற மலர்களைக் கொண்டு தொடுத்த மாலை இடம்பெற்று அழகு பெறுகின்றன. இடைமருதில் என்றும் வீற்றிருக்கும் மகாலிங்கப் பெருமானை வழிபடுவாரது வினைகள் அனைத்தும் நாசமாகும்.)

**இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்**
**அம்மை யேழ்பிற வித்துயர் நீத்திடும்**

எம்மை ஆளும் இடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. (5. 4)

(இப்பிறவிக்குரிய அருட்செல்வமும் பொருட்செல்வமும் அளிப்பதுடன் முந்தைய பிறவிகளினால் ஏற்பட்ட கடும் வினைகளைக் களைந்திடும். இடைமருதினில் உறைகின்ற இறைவனைத் தொழுவார்களது வினை பற்றற்றுப் போகும்.)

வண்ட ணைந்தன வன்னியும் கொன்றையும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்
எண்டி சைக்கும் இடைமரு தாவென
விண்டு போயறும் மேலை வினைகளே. (5.5)

(இளங்காலைப் பொழுதினில் மலர்கின்ற கொன்றை மலர்களில் வண்டுகள் சூழ்கின்றன. அக்கொன்றை மலர்களும் வன்னியும் கொண்டு புனைந்த மாலைகள் இடம்பெறும் எம்பெருமானது சடைமுடி எத்திசையும் அருள்விளங்கக் காத்திடும் இடைமருதனை உளமொன்றி வழிபட தாம் செய்த முன்வினைகள் சிதறுண்டு போய் தொடர்பற்றும் போய்விடும்.)

ஏற தேறும் இடைமரு தீசனார்
கூறு வார்வினை தீர்க்குங் குழகனார்
ஆறு செஞ்சடை வைத்த அழகனார்க்(கு)
ஊறி ஊறி உருகுமென் உள்ளமே. (5.6)

(இடபத்தின்மீது ஊர்பவனாகிய சிவபெருமான். துதித்து வழிபடுவோரது குறைகளைக் களைபவன். தம் செஞ்சடையின்மீது கங்கையைத் தாங்கியவன். அவனது அருட்பாதங்களைப் பற்றி நினைந்து நினைந்து வழிபட உளம் நிறைவுறுமே.)

விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்
மண்ணு ளாரும் மதிக்கப் படுபவர்
எண்ணி னார்பொழில் சூழிடை மருதனை
நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. (5.7)

(வானவர்களும், மண்ணில் வாழும் மனிதர்களும் தாம் விரும்பிய வண்ணம் பெருமைபெற அவர்களது வினைகள் அகலவேண்டுமல்லவா. அவ்வாறு அகல மருதவனமான பொழில் சூழ்ந்த இடைமருது இறைவனை எண்ணி வழிபட்டாலே, அவர்கள் செய்த வினைகளனைத்தும் அவர்களை அண்டாமலே நாசமடைந்து ஒழிந்து விடும்.)

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனார்
கந்த மாலைகள் சூடுங் கழுத்தனார்

எந்தை என்னிடை மருதினில் ஈசனைச்
சிந்தை யால்நினை வார்வினை தேயுமே. (5.8)

(முடிவற்ற இவ்வுலக வாழ்வினை உணர்த்தும் வண்ணம் சுடுசாம்பற் பூசிய மேனியனார்; தமது திருக்கழுத்தோ மணம் பொருந்திய மாலைகள் சூடப்பெற்று மாலைகளின் மணமும் வண்ணமும் பொலிகின்றன. உள்ளத்தினாலே இடைமருது இறைவனை உருகி வழிபட அவர் செய்த தீவினை அனைத்தும் தேய்ந்து மறைந்தே விடும்.)

வேதம் ஓதும் விரிசடை அண்ணலார்
பூதம் பாடநின் றாடும் புனிதனார்
ஏதம் தீர்க்கும் இடைமரு தாஎன்று
பாதம் ஏத்தப் பறையும்நம் பாவமே. (5.9)

(நான்மறை ஆறங்கம் ஆனவனான இடைமருது எம்பெருமான் வேதங்களால் போற்றப்படுபவன். தமது செஞ்சடைமுடி விரிந்தாட பூதங்கள் பாடுகின்றன; இறைவனோ நின்றாடும் புனிதனாகத் திகழ்கின்றான். எத்தகைய துன்பங்களையும் களையும் இடைமருது இறைவனது திருவடி களைத் தொழ நாம் செய்த பாவங்கள் அனைத்தும் தொலையும்.)

முற்றி லாமதி சூடும் முதல்வனார்
ஒற்றி னார்மலை யாலரக் கன்முடி
எற்றி னார்கொடி யாரிடை மருதினைப்
பற்றி னாரைப்பற் றாவினைப் பாவமே. (5. 11)

(இளம்பிறையினைச் செஞ்சடையிற் சூடியவன்; தம் செருக்கினால் கயிலையைப் பெயர்த்த இராவணனை மலையினை அழுத்தி அரற்றச் செய்தவன். இத்தகைய அருட்திறம் கொண்ட இடைமருது இறைவனாரது திருவடிகளைப் பற்றினாரை எவ்வினையும், எப்பாவமும் பற்றாது.)

அவ்வாறே ஆறாந்திருமுறை திருத்தாண்டகத்திலும்
வேலைக் கடல்நஞ்ச முண்டார் போலும்
மேல்வினைகள் தீர்க்கும் விகிர்தனார் போலும் (6.1)
செய்வினைகள் நல்வினைகள் ஆனார்போலும்
திசையனைத்து மாய்நிறைந்த செல்வர்போலும் (6.6)
எந்தம் இடர்தீர்க்க வல்லார் போலும்
இடைமருது மேவிய ஈசனாரே. (6.9)

திருப்பாற்கடலிலிருந்து தோன்றிய ஆலகாலம் என்ற நஞ்சினை உலகோர் உய்ய தாமே உண்டவன்; தம்மை வழிபடுவோரது முன்வினை களைத் தீர்ப்பவன் என்றும்;

விரும்பி வழிபடும் அடியார்கள் அறியாது அவமே செய்துவிட்ட போதிலும் அவர்களை ஆற்றுப்படுத்த அவற்றையும் நல்வினையாக்கி அருள்வார் என்றும்;

இடைமருது உறையும் ஈசன் எத்தகைய இடர்களையும் தீர்த்து அருள்வார் என்றும் உறுதிபட உரைக்கின்றார்.

இவ்வாறு முற்பிறவிகளிலும், இப்பிறவியிலும் தொடரும் வினைகள் மட்டுமன்றி பிறந்தபின்னரும் செய்யும் தீவினைகளையும் உணர்ந்து, திருந்தி இடைமருது இறைவனை வழிபட நலம் பெறலாம் என்றுரைத்தார் நாவுக்கரசர். நம் துன்பங்களையும் பாவங்களையும் களைபவன் நமக்கு இனியன் தானே!.

கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற்பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. (5.10)

# 63. ஈசன் எந்தை இணையடி நிழல்

சி. மங்கையர்க்கரசி, சென்னை.

திருநாவுக்கரசர் தேவாரப்பதிகங்கள் உயிர்க்குறுதிபயக்கும் உண்மை களை அறுதியிட்டு உரைப்பன. சிவானுபவப் பயன் நிறைந்தன. கற்பாரது உள்ளத்தை உருக்கி உள்ளொளிப் பெருக்கும் தன்மையதாய் ஒப்பற்றவை யாகத் திகழ்வன. காதலாகிக் கசிந்து, கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பன. அதனால்தான் நாவுக்கரசரின் பழுத்த நிலைகண்டு சைவ உலகத்திற்கு எல்லாம் எக்காலத்தும், 'ஞானத்தந்தை' என்ற பொருளையும் உள்ளடக்கி முதன் முதலில் திருநாவுக்கரசரைக் கண்டு களித்தபோது ஞானச்சம்பந்தர் அவரை 'அப்பர்' என்று பரிந்துரைத்தார். 'என்னப்பன் என்னைப் பாடினான்' என்று இறைவனே பாராட்டினார் என்ற வரலாறும் உண்டு. 'பாவுற்ற செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால் நாவுக்கரசென்று உலகேழிலும் 'அவன் நாமம் நயப்புற அழைக்கப் பெறலாயிற்று', 'மருள் நீக்கியார்' மன இருள் நீக்கிய நாவுக்கரசர் ஆனார்.

இறைவன், உலகில் கண்டுணரும் பொருட்டுத் திருமேனி கொண்டு திருக்கோயில்களில் காட்சியளிக்கிறான். அருவ நிலையில் அங்கிங்கெணாதபடி எள்ளுக்குள் எண்ணெயாய் விளங்கும் இறைவன், மண்திணிந்த நிலனும், நிலேனந்திய விசும்பும், விசும்புதைவருவளியும் வளிதலை இய தீயும் தீ முரணிய நீருமாக ஐம்பெரும் பூதங்களிலும், காய்கதிரிலும், தண்ணிலவிலும், ஓதிய உடல்களில் எல்லாம் உயிராய், எட்டு மூர்த்தியாய் தங்கி இருக்கிறான். அடியவர்க்கு ஆங்காங்கே உருவத் திருமேனியாய் நின்று அருள்கின்றான். உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றுமாகி நின்று திருவிளையாடல் புரிகின்றான். இதனை,

'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
  இயமானனன் எறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
  ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் சுற்றமும் பெண்ணும் ஆணும்
  பிறவுருவும் தம்முருவும் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
  நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே!'

என்று நின்ற திருத்தாண்டகத்தில் போற்றுகிறார். நாவுக்கரசர் இறைவனின் 'இனித்தமுடைய பொற்பாதங்களைச் சரணடைந்து அவனருள் துய்த்த பான்மை வியந்தோதத் தக்கது.'

திருக்குறளில் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்தில் பத்துக் குறட்பாக்களில் ஏழு குறட்பாக்கள் இறைவனின் திருவடிப் பெருமையே பேசுகின்றன.

'வாலறிவன் நற்றாள், மலர்மிசை ஏகினான் மாணடி', 'வேண்டுதல் வேண்டாமை இலானடி', தனக்குவமை இல்லாதான்தாள்', 'அறவாழி அந்தணன தாள்' என்றெல்லாம் விதந்தோதி அத்திருவடியினை அடைதல் 'பிறவிப்பெருங்கடல்', நீந்துதல் பொருட்டு என்கிறார். பல நூல் கற்றதனால் பெற்ற அறிவும், ஐம்பொறிகளால் அறியும் உணர்வும் அறிவும் இறைவன் திருவடியைத் தொழுதற்கே உரியன என்கிறார். இத்தகைய திருவடிச் சிறப்பினை அப்பர் பெருமான் பாடிப் பரவசம் எய்தும் நிலை நிகரற்றது.

'அந்தாமரைப்போது அலர்ந்த அடி
அரக்கனையும் மாற்று அழித்த அடி
முந்தாகி முன்னே முளைத்த அடி
முழங்கு அழலாய் நீண்ட எம்மூர்த்தி அடி
பந்தாரும் மெல்லியலாள் பாகன் அடி
வெந்தார் சுடலை நீறாடும் அடி
வீரட்டங் காதல் விமலன் அடி'

என்று திருவீரட்டானத்து விகிர்தன் திருவடியை வியந்து போற்றுகின்றார். இப்பாடலில் அழகிய தாமரை மலர்மேல் மலர்ந்தும், அரக்கனை வலி தொலைத்தும், முழுமுதலாய், முன்னே முகிழ்த்தும் பற்றி எரியும் வெங்கனலாய் மூண்டதும் பார்வதியைப் பாகமாகக் கொண்டதும் பவளமலை போன்றதுமான அடிகள் அவன் அருள் திருவடிகள்; சுடலையில் எரியும் பிணங்களின் நீற்றைப் பூசி வீராட்டானத்தை விரும்பித் தங்கி இருக்கின்ற குற்றமற்றவன் திருவடிகள் என்று ஈசன் திருவடிப் பெருமையைப் பாடுகின்றார்.

இப்பாடலை ஆழ்ந்து படித்தால் சிவபெருமானின் சிறப்புகளை 'முரண்தொடை' என்னும் அலங்காரம் அமையுமாறு சொல்லுகின்ற கலைநயம் புலப்படும். வீரட்டானத்து வேந்தன் ஈசனின் திருவடி அருள் புரிவதில் மலர் போன்று மென்மையானது, தீமையை அழிப்பதில் வன்மை யானது; அகிலங்களின் தோற்றத்திற்கு ஆதியானது, ஊழிக்காலத்தில் உலகங்களை அழிக்கும் அந்தமானது. அன்பு, அருள், அழகு, மென்மை, தாய்மை ஆகியவற்றின் குறியீடாக மாது ஒருபாகத்தானாய் விளங்குவது. கொடுமைகளைக் களைவதில் கடுமையின் வடிவமாகிய அக்கினிச்சூலம் தாங்கிய ஆண்மையாகவும் காட்சியளிப்பது. சுடுகாட்டை இருப்பிடமாகக்

கொண்டமையால் அவன் பற்றற்ற நிலையின் குறிப்பாகத் திகழ்பவன் என்ற பொருளை உணரலாம். அவன் பெருமையெல்லாம் அவன் திருவடிப் பெருமையாகக் கண்டார். அவன் அருளால் அவன்தாள் வணங்கிய சிவானுபவத்தை,

'மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே'

என்பதாக உணர்கிறார். அந்தச் சிவானுபவத்தைத் தாம் துய்த்தது மட்டுமின்றி மற்றவரும் உணரும் பொருட்டு,

'விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல் நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே'

என்று வழிகாட்டுகிறார்.

திருவடியின் பெருமையைக் கூறித் தாம் துய்த்த சிவானுபவத் தன்மையை உணர்த்தி, அதனை அடையும் நெறியைக் காட்டியவர், அத்திருவடி அடியார்க்கு எத்தன்மையது என்பதையும்,

'அணியளவுஞ் சேயனவும் அல்லாவடி
அடியார்கட்கு ஆரமுதமாயவ்வடி
பணிபவர்க்கும் பாங்காக வல்லவ்வடி
பற்றற்றார் பற்றும் பவளவ்வடி
மணியடி பொன்னடி மாண்பாமடி
மருந்தாய்ப் பிணி தீர்க்க வல்லவடி'

என்றுணர்த்துகிறார். அவன், 'பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு அவர்தமை நாணி சிரித்து நிற்பவன், மாறாக நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுள்ளவன்'.

'ஊனாகி உயிராக அதனுள் நின்ற உணர்வாகிப்
பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே என்னுள் வந்து
நல்லனவும் தீயனவும் காட்ட நின்றாய்
தேனாறும் கொன்றயனே நின்றியூராய்
திருவானைக் காவில் உறை சிவனே ஞானம்
ஆனாய் உன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என் செய்கேனே'

என்றும் வினவுகிறார். 'அல்லல் என்செயும், அருவினை என்செயும், தொல்லை வல்வினை தொந்தந்தான் என்செயும் என்று வினையறுப்பாய் ஈசன் திருவடி அமையும்மாற்றைக் கூறுகிறார். இந்நிலை வாய்த்தால், 'நாமார்க்கும் அல்லோம், நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்படோம்' என்ற அச்சமின்மை தோன்றுதல் ஒருதலை, ஆதலின் ஏற்படுவது இன்பமேயன்றித் துன்பமில்லை என்ற பரவச நிலையாம்.

இதன் காரணமாக, 'பெயர்த்தும் ஈசனுக்கு பிச்சியாகி, தன்னை மறந்து, தன் நாமம் கெட்டு அத்தலைவன் திருத்தாளுக்கே தலைப்பட்ட, தளைப்பட்ட நிலை நாவுக்கரசருக்கு வந்து விடுகிறது.

'உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்வு நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே'

என்னும் நாவுக்கரசரின் வாக்கு உடல், உணர்வு, ஞானம் இவற்றின் வழியாக இறைவன் கழலடி உணருமாற்றை உருவக நிலையில் உணர்த்துகிறது.

நைந்துருகும் சிந்தையராகிய நாவுக்கரசர், புகலூர்ப் பெருமான் திருவடிகளை வணங்கி உழவாரத் தொண்டு செய்து மகிழ்ந்திருந்தார். அவரது உள்ளத்துறுதியை உலகத்தாருக்குப் புலப்படுத்த திருவுளங் கொண்ட சிவபெருமான், அடிகளார் உழவாரத் தொண்டு புரியும் இடமெல்லாம் தோண்டும்போது பொன்னும் நவமணியும் தோன்றச் செய்தார். ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும் தெளிந்த சிந்தையராகிய நாவுக்கரசர் அவற்றைப் பருக்கை கற்களோடு கற்களாக வாரித் தாமரைத் தடாகத்தில் வீசுகிறார். தேவலோகத்து ஆரம்பரையர் தம் ஆடலுக்கும் பாடலுக்கும் சிந்தை சிதையா மெய்யுணர்வுடைய தவச்செல்வராய் அமைகின்றார். இங்ஙனம் திருப்புகலூரில் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்து மகிழும் போதும் இறைவன் திருவடி நிழலில் தமக்கிடம் எப்போது அருளப்பெறுமோ? என்ற உணர்வினராய் இருக்கின்றார்.

இந்நிலையில் தம் அந்தக்கரணங்கள் புறத்தே செல்லாது உள்ளே ஒடுங்கப்பெற்று இறைவன் திருவடியைத் தலைப்படும் செவ்வியினை எய்தினார். 'புகலூர்ப் பெருமான் தன்னுடைய அடியவனாகிய எளியோனை இனி தன் திருவடியான்கண் இருத்தி அருள் புரிவன்' என்னும் முன்னுணர்ச்சி மூளப் பெற்றுப் பல திருவிருத்தங்களைப் பாடிப் போற்றினார்.

'தன்னைச் சரணென்று தாளடைந்தேன் தன் அடியடையப்
புன்னைப் பொழில் புகலூர் அண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பற்று என்வினைக் கட்டறுத்து ஏழ்நகரத்து
என்னைக் கிடக்கில் ஒட்டான் சிவலோகத்து இருத்திடுமே'

என வரும் பாடலால் இனிது புலனாகும்.

இங்ஙனம் முன்னுணர்ச்சி மூளப்பெற்று இறைவன் திருவடி நிழல் வாய்க்கப்பெறும் நிலையில் புகலூர்ப் பெருமானை நோக்கி, 'புண்ணியத்தின் உருவாக விளங்கும் எம் பெருமானே, உன்னுடைய திருவடிக்கே எளியேனும் வருகின்றேன்' என நெஞ்சம் கசிந்துருகி வேண்டும் நிலையில்,

**'எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ**
**எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்**
**கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்**
**கழலடியே கைதொழுது காணினல்லால்**
**ஒண்ணுள்ளே ஒன்பது வாசல் வைத்தாய்**
**ஒக்க அடைக்குபோது உணர மாட்டேன்**
**புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்**
**பூம்புகலூர் மேவிய புண்ணியனே'**

என வரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடிப் போற்றிச் சிவானந்த ஞானவடிவாகிச் சிவனருள் துய்த்து அவன் சேவடி நிழல் எய்தி உய்வுற்றார்.

சைவ வேளாளர் மரபில் மருள் நீக்கியாராய் பிறந்து, சமண சமயத்தில் தருமசேனராய் வாழ்ந்து, சூலைநோயால் மீண்டு, சைவ சமயத்திற்கு மீள வந்து, நாவுக்கரசராய், அப்பராய் தாண்டக வேந்தராய் தரணியில் சைவத் தமிழ்ப் பரப்பிய இப்பெருந்தகையின் பாடல்கள் வழி ஈசன் எந்தை இணையடி பெருமை உவட்டாமல் இனிப்பதுவே.

# 64. அப்பர் தேவாரத்தில் அணிகள்

இரா. மணிகண்டன், உட்கோட்டை.

ஆதியும் அந்தமும் அனைத்துமாய் விளங்கும் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டது சைவசமயம். இல்லறம் தழைத்து நல்லறம் சிறக்க உருவானது சைவ சமயமாகும். இன்பத்தில் மூழ்கித் திளைத்து இறைவனின் திருவடிப் பேற்றை அடைய வழிகாட்டுவது சைவ சமயமாகும். பௌத்தமும் சமணமும் மக்களைத் தனிமைப் படுத்திய பொழுது அனைவரும் விரும்பி ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருந்தது சைவசமயம். இச்சிறப்புடைய சமயம்பற்றி எழுந்த பாக்களை அணிகள் வந்து அழகு சேர்த்தமையைக் காண்போம்.

**நாவுக்கரசரும் சமயமும்**

சிவபெருமானைப் புகழ்ந்து பக்தியிற் திளைத்த அடியார்கள் நாயன்மார் எனப்பட்டனர். அவர்களில் தனியடியார்கள் அறுபத்து மூவர். அவர்கள் பாடிய பாக்கள் பலவற்றில் சிலவற்றைப் பன்னிரு திருமுறை களாகப் பகுத்தனர். அவற்றுள் முதல் ஏழு திருமுறைகள் தேவாரம் என்று அழைக்கப்படுகிறது. தேவாரம் பாடிய மூவருள் காலத்தால் முற்பட்டவர் நாவுக்கரசர். அவர் நான்கு, ஐந்து, ஆறு என்ற மூன்று திருமுறைகளை இயற்றி அருளியுள்ளார். அவர் தம் வாழ்நாளில் சைவ்த்திலிருந்து சமணத்திற்கும் பின் சிவனின் அருளால் சைவத்திற்கும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். தேவாரம் பாடிய மூவருள் திருமணம் புரியாமல் தொண்டு நெறியில் வாழ்ந்து முழுக்க முழுக்க சிவப்பணிகளை மேற்கொண்டவராவார். அவர் தம் வாழ்வில் எண்ணற்ற அற்புதங்கள் நிகழ்ந்தன. தம் இறுதிகாலத்தில் இறைவனின் திருவருளால் கயிலைக் காட்சியைக் கண்டுள்ளார். இவ்வாறு நிகழ்ந்த அற்புதங்களையெல்லாம் பதிகங்களாகச் செய்து அருளினார். அவரே முதன்முதலில் தாண்டக யாப்பை அறிமுகப்படுத்தியவர். அதனால் இவர் தாண்டக வேந்தர் என அழைக்கப்பட்டார். அவ்வாறு அவர் அருளிய பாக்களில் கற்பனையும், இயற்கைப் புனைவுகளும், இசையமைப்பும், உவமை, உருவகம் மற்றும் பிற அணிகளும் நிறைந்து வியக்கத்தக்க வகையில் சிறந்து விளங்குகின்றன. அவற்றுள் வாகீசர் தம் பாக்களால் அணிகள் எவ்வாறு இடம் பெற்றுள்ளது என்பது நோக்குதற்குரியதாகும்.

## அணிகளின் தோற்றமும் வளர்ச்சியும்

ஒவ்வொரு மொழியிலும் இலக்கியத்தை அழகுபடுத்துவது அணியே யாகும். செய்யுளில் உயிர் நாடியாக விளங்கும் கற்பனையை உருவாக்க அணிகளே மிகவும் இன்றியமையாதன. அணி என்னும் சொல் அழகு, வனப்பு, ஒப்பனை, ஆபரணம், இனிமை, பெருமை, வரிசை என பல பொருள்களை உடையது. கவிஞர்கள் தங்களுடைய கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் கூறுவதற்கு அணிகளே உறுதுணையாக உள்ளன. அத்தகைய அணி இலக்கணத்தின் ஒரு பகுதியாக விளங்குகிறது. காலப்போக்கில் நால்வகை இலக்கணங்களோடு அணி இலக்கணமும் சேர்ந்து ஐவகை இலக்கணங்களாக வழங்கப்படுகின்றன. வீரசோழியமே முதன்முதலில் ஐந்திலக்கணத்தைக் கூறியதாகும். மேலும் அணியை மட்டும் தனித்துக் கூறும் நூல் தண்டியலங்காரமும், மாறனலங்காரமுமாகும்.

## அப்பர் தேவாரத்தில் அணிகள்

சங்க காலம் முதல் இக்காலம் வரை இலக்கியங்களில் கவிஞர்கள் எண்ணற்ற அணிகளைக் கையாண்டுள்ளனர். பலவகை அணிகள் இயல் பாகவே நாவுக்கரசர் தேவாரத்தில் அமைந்துள்ளன. இக்கட்டுரைப் பகுதியில் உவமையணி, உருவக அணி, தற்குறிப்பேற்ற அணி, நிரல் நிறையணி, சொற்பொருள் பின்வருநிலையணி, மடக்கணி, இயல்பு நவிற்சி அணி ஆகியவற்றை அப்பர் தம் பாக்களில் எவ்வாறு கையாண்டுள்ளார் என்பதை இக்கட்டுரை வாயிலாக அறிவோம்.

## உவமையணி

கவிஞன் தான் இயற்றும் பாக்களில் உவமை, உவமேயம், உவம உருபு ஆகியவை வெளிப்படையாக அமையப் பாடப்பெறுவது உவமையணி யாகும். உவமையணியே அணிகள் பலவற்றுள் சிறப்புடைய ஒன்று பெரும்பான்மையான பிற அணிகள் இவ்வணியிலிருந்தே தோன்றிய தாகும். எனவே தொல்காப்பியர் இதற்கென்று தனியொரு இயலே வகுத்தார். இத்தகைய உவமை அணியே அணிகளுக்கெல்லாம் தாயாக விளங்குகிறது.

ஒரு பொருளுக்கு ஒரு பொருளை உவமையாகச் சொல்லும் பொழுது அவ்விரண்டு பொருள்களுக்கும் ஒரு பொதுக்கூறு இருத்தல் வேண்டும். அது வினை, பயன், மெய், உரு என்று நால்வகைப்படும்.

**"வினை பயன் மெய் உரு என்ற நான்கே**
**வகைபெற வந்த உவமத் தோற்றம்"**

என்பது தொல்காப்பிய நூற்பா. நாவுக்கரசர் தேவாரத்தில் இடம்பெறும் உவமைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. இறைவனைப் பற்றிய உவமைகள்
2. இறைவியைப் பற்றிய உவமைகள்
3. அப்பர் தம்மை பற்றிய உவமைகள்
4. திருவைந்தெழுத்து உவமைகள்
5. பழமொழி உவமைகள்
6. எடுத்துக்காட்டு உவமைகள்
7. பிற உவமைகள்

**1. இறைவனைப் பற்றிய உவமைகள்**

இறைவனது திருவடியினைத் தாமரை, மரகதம், மாணிக்கம் ஆகிய வற்றிற்கும், மேனியினை எரிகின்ற இளஞாயிறு, காலையில் தோன்று கதிர், நெருப்பு, பால், பொன் போன்றவற்றிற்கும் கண்டத்தினை அஞ்சனம், கங்குல், கருமணி, கார், மை ஆகியவற்றிற்கும், தோளினைப் பவள வரைக்கும் உவமையாகக் கூறியவர் இறைவனின் தோற்றத்தினை வெள்ளிக் குன்றுடன் ஒப்பிடுகிறார். மேலும் நெற்றியிலணியும் திருநீற்றினை இளம்பிறை, சங்கு, பால், வெள்ளியென்றும், நெற்றிக்கண்ணை முத்து என்றும் கூறுகிறார்.

இறைவன் பண்ணில் ஓசைபோன்றும் பழத்தில் சுவைபோன்றும், கண்ணில் மணிபோன்றும் இரண்டறக் கலந்துள்ளான். அவன் தன் அடியார் களுக்குச் செய்யும் அருளானது தேனாறு பாய்வது போல் பாய்கின்றது என்றும் உள்ளங்கை நெல்லிக்கனியென அருள் வழங்குபவன் என்றும் உவமைகள் இடம் பெற்றுள்ளன.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் னெந்தை யிணையடி நீழலே".

என்ற இப்பாடலில் இறைவனின் திருவடி நிழலானது அப்பருக்கு குற்றமற்ற வீணை இசைபோன்றும் வீசும் தென்றலின் இனிமை போன்றும் மாலையில் தோன்றும் மதியின் நிலவு போன்றும், இளவேனிலின் மாண்பு போன்றும் வண்டு ஒலிக்கும் தாமரைப் பொய்கை போன்றும் இருப்பதாகக் கூறுகிறார்.

**2. இறைவியைப் பற்றிய உவமைகள்**

நாவுக்கரசபெருமான் இறைவியைப் பற்றியும் உவமைகள் வாயிலாகப் போற்றியுள்ளார். பிறை போன்ற நெற்றியை உடையவள். முத்து போன்ற பற்களையுடையவள்; கொவ்வைக் கனி போன்ற வாய், வில் போன்ற புருவம், மூங்கில் போன்ற தோள், கெண்டை மீன் போன்ற கண்கள், கொடி போன்ற இடை, "மின்னலை ஒத்த கொடியிடை" என்று பல பாக்களில்

இடையினை மின்னலுக்கு உவமையாகக் கூறியுள்ளார். "பைந்தளிர் கொம்பர் அன்ன படர்கொடி" என்னும் இவ்வரியில் இறைவியின் உருவ உவமைகள் காணப்படுவதைக் காணலாம். மேலும்,

"காம்பாடு தோளுமையாள் காண நட்டங்
கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய"

என்னும் இப்பாடல் வரியில் தோளுக்கு உவமை கூறப்பட்டுள்ளது.

### 3. அப்பர் தம்மைப் பற்றிக் கூறும் உவமைகள்

தம்மைப் பற்றிய உவமைகளை தாண்டகவேந்தர் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார். தனக்கு ஏற்பட்ட சூலைநோயை கூற்றுக்கும் நஞ்சுக்கும் உவமைப்படுத்திக் கூறுகிறார். ஐம்புலன்களின் கொடுமைக்கு ஆளானதை பல பாக்களில் உவமைகள் வாயிலாக எடுத்தியம்புகிறார். நீரிலே தோன்றி "நீரிலே மறையும் குமிழிபோல வாழ்க்கைச் சிக்கலில் அழுந்தி சைவத்திறம் புரிந்திலேன்" என்றும் 'பன்றிபோல சேற்றில் பட்டுத்திளைக்கின்றேன்' என்றும், 'பாம்பின் வாய்த் தேரைப்போல' பலப்பல நினைக்கின்றேன் என்றும், 'மன்றத்தில் இருக்கும் புன்னைபோல' பல துயரங்களை அடைகின்றேன் என்றும் கூறுகிறார். மேலும் "கரையேறாமலும் கடலிலேயே ஆடாமலும் இருக்கும் தோணிபோல" ஐம்புலன்களின் தாக்கத்தால் உடல் இனிது இல்லாமலும் இறைவனின் திருவருளில் முழுகாமலும் உள்ளேன். ஒரு பாடலில் கயிற்றில் கட்டப்பட்ட ஊசலை தம் நிலைக்கு உவமையாக்கிக் கூறுகின்றார். இப்பாடல் வருமாறு.

'உறுகயி றூசல்போல ஒன்றுவிட் டொன்றுபற்றி
மறுகயிறு றூசல்போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல்போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்து
அறுகயி றூசலானேன் அதிகைவீ ரட்டனீரே."

என்ற இப்பாடல் வழி அறிய முடிகிறது.

### 4. திருவைந்தெழுத்து உவமைகள்

ஐந்தெழுத்தின் பெருமைகளையும் உவமைகள் வாயிலாக வாகீசர் எடுத்தியம்பியுள்ளார். விண்ணளவும் அடுக்கி வைக்கப்பட்ட விறகு குவியலிடையே அழல் உண்ணப் புகுந்தால் ஒன்றும் எஞ்சாது அதுபோல் இவ்வுலகில் பண்ணிய பாவத்தில் குவியலை திருவைந்தெழுத்து "நண்ணி நின்று அறுக்கும்" என்று கூறுகிறார்.

### 5. பழமொழி உவமைகள்

பழமொழிகளை உவமையாக மருள்நீக்கியார் பல இடங்களில் கையாண்டுள்ளார். கனியிருப்ப காய்கவர்தல், முயல்விட்டு காக்கைப் பின் செல்லல், அறம் இருப்ப மறம் விலைக்குக் கொள்ளல், பனிநீரால்

பாவை செய்ய முனைதல், பாழ் ஊரில் பிச்சையெடுக்கச் செல்லல் போன்ற பழமொழிகள் உவமைகளாக்கப்பட்டுள்ளன. அவற்றுள் முயல், விளக்கு, தவம், கரும்பு ஆகிய ஆறும் சைவத்தை விளக்கும் உவமைகளாக உள்ளன. இதனை விளக்கும் பொருட்டு பின்வரும் பாடல் அமைகிறது.

"என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட்டு
என்னை ஒருருவ மாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்டு
என் உள்ளங் கோயிலாக்கி
அன்பிருத்தி அடியேனைக் கூழாட்கொண்டு
அருள்செய்த ஆரூ ர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டு
காக்கைப்பின் போனவாறே".

### 6. எடுத்துக்காட்டு உவமையணி

கவிஞன் தான் இயற்றும் பாடலில் உவமை, உவமேயம் வெளிப்படையாக வந்து உவம உருபு மறைந்து வருவது எடுத்துக்காட்டு உவமையணியாகும். அதாவது 'போல' என்ற உவம உருபு மறைந்து வருவது எடுத்துக்காட்டு உவமையணி ஆகும். இதனை உணர்த்துகின்ற வகையில் இவ்வரிகள் அமைகின்றன.

"விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை ஒன்று மில்லையாம்
பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சிவாயவே"

நெருப்பானது தான் புகுந்த போரினை எரித்து ஒழித்து தானும் மாய்ந்து ஒழியும். அதுபோல திருவைந்தெழுத்தானது பல பிறவிகளிலும் ஈட்டிய பாவங்களையெல்லாம் மொத்தமாக அழித்து தான் கெடாது நிற்கும் என்பது இதன் பொருள். இதில் அதுபோல என்ற உவம உருபு இல்லாததால் இஃது எடுத்துக்காட்டு உவமையணியாகும்.

### 7. பிற உவமைகள்

பிற உவமைகளானது சில பாக்களில் மட்டுமே அமைந்துள்ளன. இராவணன் தோளினை மலைக்கும், பிரமனின் நிறத்தை பொன்னுக்கும், வினைகளை படைகளுக்கும் உவமைகளாகக் கூறியுள்ளார். மேலும், உலாவிய, கொப்பளித்த, தழுவிய போன்ற சில அரிய உவம உருபுகளும் ஆளப்பட்டுள்ளன. மொத்தம் 43 உவம உருபுகள் இவரது பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

## உருவக அணி

உவமைக்கும் உவமேயத்திற்கும் வேறுபாடின்றி உவமையே பொருளாகக் கூறுவது உருவக அணி எனப்படும்.

> "உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
> ஒன்றென மாட்டின் அஃது உருவகமாகும்"

என்பது தண்டிகூறும் இலக்கணமாகும். இருபொருள்களை வேறுவேறு காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் காண்பது உருவக அணியாகும். கருத்துக்கு நயமும், செவிக்கு இனிமையும் தந்து சொல்லாலும் பொருளாலும் அழகுபடுத்துவது உருவகம். இத்தகைய உருவக அணியில் உருவகச் சொற்களும் அப்பர் பாக்களில் பல இடங்களில் இடம் பெற்றுள்ளது.

> "மனமெனுந் தோணி பற்றி மதியெனும் கோலை யூன்றிச்
> சினமெனுந் சரக்கை ஏற்றிச் செறிகட லோடும்போது
> மதனெனும் பாறை தாக்கி மறையும்போ தறியவொண்ணா
> துனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே".

இப்பாடலில் மனமாகிய தோணியைப் பற்றி மதியாகிய கோலை ஊன்றி, சினமாகிய சரக்கை ஏற்றிக் கூல்பரப்பில் ஓடும் வேளையில், காமப்பாறை தாக்கி கீழ்மேலாகும்போது ஒற்றியூரில் உறையும் பெருமானே, உன்னை அறியவொண்ணாது வருந்துவேன். அப்பொழுது என்னை மறந்து உன்னை எண்ணும் உணர்வை நல்குவாய் என உருவகப்படுத்தி இறைவனை வேண்டுகிறார். மேலும் இறைவனை வழிபடுவதனால் ஏற்படும் பலனை உழவின் மூலம் உருவகப்படுத்திக் காட்டுகின்றார். நான்காம் திருமுறையில் 15-வது பதிகமாக பாவநாசப்பதிகம் முழுவதுமே உருவகமாக அமைத்து விளக்குகிறார் நாவுக்கரசர். உருவக அணி பெரும்பாலும் நான்காம் திருமுறையிலேயே அமைந்துள்ளதை காணமுடிகிறது.

## தற்குறிப்பேற்ற அணி

கவிஞர் தம்முடைய குறிப்பினையும் கருத்தையும் ஒருபொருளின் மீது ஏற்றிக் கூறுவதே தற்குறிப்பேற்ற அணியாகும். இதனை தண்டி ஆசிரியர்,

> "பெயர்பொருள் அல்பொருள் எனவிரு பொருளினும்
> இயல்பின் விளைதிற னன்றி அயலொன்று,
> தான்குறித்து ஏற்றுதல் தற்குறிப்பேற்றம்."

என்றும் இது உவம உருபுகளோடு இயைந்து வரும் என்றும் கூறுகிறார். சிவபெருமானின் தோற்றத்தைக் கண்ட மருள்நீக்கியார் இறைவனின் தோற்றத்தில் காணப்படும் இயல்பான காட்சியில் தன்னுடைய குறிப்புப் பொருளை ஏற்றிக் கூறுகிறார். அதாவது பாம்பைக் கண்டு அஞ்சுகிறாள் உமையம்மை அவளை நீலமயிலோ என்று பாம்பு ஐயுற்று அஞ்சுகின்றது. தலையில் இருக்கும் பிறையோ உமையவளின் நுதலைக் கண்டு இவ்வழகு

தனக்கு இல்லையே என எண்ணி ஏங்குகிறது. கையில் பிடித்த கபாலமோ இதனைக் கண்டு நடுங்குகின்றது.

"கிடந்தபாம் பருகன் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவள்ளியோர் மயிலென் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையும் ஏங்கவே
கிடந்துதாள் நகுதலைக் கெடில வாணரே"

என்னும் இவ்வரியில் தற்குறிப்பேற்ற அணி இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

## நிரல் நிறை அணி

நிரல் நிறையாவது வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குத் தொடர்பானவற்றைத் தொடர்ந்து அம்முறையிலேயே அழகுபடக் கூறுவதாகும். முன்னதை நேர் நிரல் நிறை அணி என்றும் பின்னதை எதிர் நிரல் நிறை அணி என்றும் கூறுவர். தொல்காப்பியர் இதை "நிரல் நிறுத்தமைத்தல் நிரனிறை" என்று உவமையியலில் கூறுகிறார். அப்பருடைய பாக்களில் சொல்லையும் பொருளையும் நிரலே நிறுத்தி பொருள் கொள்வது, சொல்லினை மாற்றி பொருள் கொள்வது ஆகிய இருமுறைகளையும் காணமுடிகிறது. பக்தி நெறி ஒழுகும் இவரது பாக்களில் பெரும்பான்மை உவமை அணியே இடம்பெற்றுள்ளது. மேலும் பிற அணிகளான உருவகம், எடுத்துக்காட்டு உவமை, தற்குறிப்பேற்றம், நிரல்நிறை, சொற்பொருள் பின்வரு நிலைஅணி, மடக்கணி, இயல்பு நவிற்சி அணி ஆகியவை மேலும் எவ்வாறு மெருகூட்டின் என்பதை இக்கட்டுரை நமக்கு உணர்த்துகிறது.

"அடியார்க்கும் அண்டத்தார்க்கும்
அணியவன்காண் சேயவன்காண்"

இவ்வரிகளில் இறைவன் தன்னை அடையும் அடியார்க்கு அருகில் இருப்பான் தம்மை அண்டாதவர்க்கு வெகுதொலைவிலிருப்பான் என்று கூறியுள்ளார். அடியார்களுக்கு அணியவன் என்றும் அண்டாதவர்க்கு சேயவன் என்றும் நேர்பட பொருள் கொண்டதால் இது நேர் நிரல் நிறையணி ஆயிற்று. மேலும்,

"பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையும் கண்ணியுமாவன"

இப்பாடல் வரிகளில் இறைவனுக்கு பாலைச் சிரிக்கும் வெண்பிறை கண்ணியாகும், பைங்கொன்றை மாலையாகும், முதலில் பிறையையும் மாலையையும் நேர் எதிராகக் கூறியுள்ளார். எனவே இது எதிர் நிரல் நிறையணி ஆயிற்று. இதனை மயக்க நிரல் நிறை என்றும் கூறுவர்.

## சொற்பொருள் பின்வரு நிலையணி

ஒரு சொல் ஒரேப் பொருளில் பலமுறை பாடலில் அமையப் பாடுவது சொற்பொருள் பின்வரு நிலையணி ஆகும்.

"ஆயிரந் தாமரை போலும் ஆயிரஞ் சேவடியானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரந் தோளுடையானும்
ஆயிரம் ஞாயிறு போலும் ஆயிரநீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானும் ஆரூ ரமர்ந்தம் மானே"

இப்பாடலில் ஆயிரம் என்னும் சொல் பலப்பல ஒரே பொருளில் திரும்பத் திரும்ப வந்துள்ளமையால் இதனை சொற்பொருள் பின்வரு நிலையணி எனலாம். மேலும் மற்றொரு பாடலில் அஞ்சு எனும் சொல் ஒரே பொருளில் திரும்பத் திரும்ப வந்துள்ளமை காணமுடிகிறது.

## மடக்கணி

ஒரு சொல்லோ அல்லது ஒரு தொடரோ வந்து வேறுவேறு பொருள் களைத் தருவது 'மடக்கணி' ஆகும்.

"எழுத்தின் கூட்டம் இடைபிறி தின்றியும்
பெயர்த்தும் வேறு பொருள்தரின் மடக்கெனும் பெயர்த்தே"

என்பது தண்டியலங்காரம். மேலும் எழுத்தோ சொல்லோ இடையில் இல்லாமலும், இடையில் வந்தும், பெயர்த்தும் வேறுபொருளைத் தருவது மடக்கணி ஆகும்.

"அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்
அரக்கின் சேவடி யாளஞ்ச அஞ்சலென்(று)
அரக்கன் ஈரைந்து வாயும் அலறவே
அரக்கி னானடி யாலும்ஐ யாறனே"

இப்பாடலில் 'அரக்கின் மேனியன்' செம்மேனியன் என்று அரக்கின் சேவடி என்பது செந்தாமரை மலர் போன்ற மென்மையான திருவடியாள் என்றும் அரக்கன் என்பது இராவணன் என்றும் அரக்கினான் என்பது தேய்த்தான் என வந்த ஒரே சொல் வேறுவேறு பொருள்களைத் தந்துள்ளமையால் நாவுக்கரசர் மடக்கணியையும் அமைத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.

## இயல்பு நவிற்சி அணி

உள்ளதை உள்ளவாரே இயற்கைத் தன்மை மாறாது அழகுற கவின்பாடுவது இயல்பு நவிற்சியணியாகும். இதனை தன்மை நவிற்சி அணியென்றும் சான்றோர் கூறுவர். இவ்வணியையும் நாவுக்கரசர் தனது நான்காம் திருமுறையில் கூறி அழகு சேர்த்துள்ளார்.

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து

கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோளி லாதுகெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே".

இவ்வரிகளில் தனது இளமை முதல் முதுமை வரை கழித்த இயல்பினை மாறாது உள்ளதை உள்ளவாறு கூறியிருப்பதால் இதனை இயல்பு நவிற்சி அணி எனலாம்.

தாண்டக வேந்தராகிய நாவுக்கரசு பெருமான் எழில் பொலிவுடன் அமைத்த பக்திமைப் பாக்களில் அழகுக்கு அழகு சேர்க்க அணிகளைப் பயன்படுத்தியதை அறிய முடிகிறது.

**துணைநின்ற நூல்**

திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், ம.சா. அறிவுடைநம்பி.

# 65. திருநீற்றுச் சிறப்பும் நாவுக்கரசரும்

இல. மணிமேகலை, சோமனூர்.

தமக்கையான திலகவதியாரால் வளர்க்கப் பெற்ற மருள்நீக்கியார் பருவத்திற்கேற்ப அறிவு வளர்ச்சி பெருகி, உலகியல் அறிவும் வளர் கின்றது. உலக வாடிக்கை நிலையாமை உடையது என்பதை உணர்ந்து அறங்களைச் செய்கின்றார்.

''காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்''.

(நாவுக்கரசு நாயனார் புராணம் - பாடல் எண் - 1301)

பூஞ்சோலைகளை வளர்த்தும் குளங்களைத் தோண்டியும், அறச்சாலை களையும், தண்ணீர்ப் பந்தல்களையும், விருந்தினரைப் பேணியும், வேண்டுபவர்க்கு வேண்டுவன கொடுத்தும், பாகுபாடின்றி ஈகை செய்து கொடுத்துதவினார்.

சிவபெருமான் அருள் செய்யாததால் கொல்லாமையை மேற்கொள்ளும் சமண சமயத்தைத் தழுவுகின்றார். மருள்நீக்கியார் அச்சமயத்தின் அறநூல் களைக் கற்று அறிவிற் சிறந்தவராக விளங்கியதைக் கண்ட சமணர்கள் மருள்நீக்கியாரைத் ''தருமசேனர்'' என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிப் போற்றுகின்றனர்.

### சூலை நோயால் அவதியுறுதல்

மருள்நீக்கியார் சமண சமய நெறியில் மேன்மையடைபவராகவும், பழமையான சுற்றத்தின் தொடர்பும் நீங்க, திலகவதியம்மையார், சிவ நன்னெறியை அடைவதற்கு, சிவபெருமானின் திருவடிகளை வணங்கு பவராகின்றார்.

திலகவதியார் இறைவனின் திருவடிகளை வணங்கத் திருவதிகை வீரட்டானத்தை அடைந்து, இறைவனின் சிவசின்னங்களை அணிந்து அக்கோயிலில் கோலமிடுதல், மெழுகுதல், மாலைகள் தொடுத்தல் போன்ற திருப்பணிகளைச் செய்கின்றார்.

மருள்நீக்கியார் சமண சமயத்தைச் சார்ந்ததைக் கேள்வியுற்று வீரட்டானத்து இறைவனை வணங்கி,

"ஆண்டருளும் நீராகில் அடியேன் பின் வந்தவனை
ஈண்டு வினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள" (1311)

என்னைத் தாங்கள் ஆண்டருள் வீராகில் எனக்குப் பின் தோன்றியவனைச் சேர்கின்ற தீ வினையுடைய பரசமயமான படுகுழியினின்று எடுத்தருள வேண்டும் என்று வேண்டுகிறார்.

திலகவதியாரின் கனவில் தோன்றிய சிவபெருமான் உன் மனக் கவலையைத் தவிர்த்திடு. நின் தம்பி முன்னமே முனியாகி எம்மை யடையத் தவம் மேற்கொண்டான். அதனில் சிறிது பிழை நேர்ந்து அதனால் இப்பிறவியில் அப்பிழையை அனுபவிக்கும் பொருட்டுத் தீயைப் போல் சுடுகின்ற சூலை நோயைக் கொடுத்து அவனை ஆட்கொள்வோம் என்று கூறுகின்றார்.

"வடஅனலும் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாம்
கொடிய எலாம் ஒன்றாகும் எனக்குடரின் அகங்குடையப்"
(1313)

சூலை நோயானது வடவைப் பெருந்தீயும், ஆலகால விஷமும், வச்சிரப் படையும் கொடுமை விளைவிப்பன பிறவும் ஒன்றாகத் திரண்டு வருத்துவது போலக் குடலைக் குடைந்து வருத்தியது.

சமணர்கள் பலரும் தாம் கற்ற மந்திரங்களைக் கையாண்டும் சூலைநோய் தணியாமல் மிகையாகின்றது. இவர் நோயினால் வருந்துவதைக் கண்டு பலரும் கூடி நோயினைத் தணிக்கமுடியாமல் கவலையுறுகின்றனர்.

மற்றும்,

"குண்டிகைநீர் மந்திரத்துக் குடிப்பித்தும் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு கால் அளவுந் தடவிடவும்". (1318)

குண்டிகையில் இருந்த நீரை மந்திரித்துக் குடிக்கச் செய்தும் நோய் தணியாததைக் கண்டு மயில் பீலி கொண்டு உடல் முழுவதும் தடவிவிட முன்னைவிட நோய் அதிகமாகிக் கண்டு நம்மாற் போக்குதற்கரிய நோயாகும் என்று கைவிட்டனர்.

**திருநீற்றின் சிறப்புகள்**

சைவ சமயத்தில் திருநீற்றுக்கெனத் தனிச்சிறப்பு உள்ளது. சிவச்சின்னங் களில் திருநீறு முதன்மையானதாக விளங்குகின்றது. இது சிவசக்தியின் வடிவமாகவும், வழிப்பாட்டிற்குரியதாகவும், மாட்சிமையுடையதாகவும், ஞானத்தைத் தருவதாகவும், வேதத்திலுள்ளதாகவும், பாவத்தைப் போக்க

வல்லதாகவும், ஆணவத்தினை வேரோடு அழிக்கவல்லதாகவும் உள்ளது. இத்திருநீற்றின் மேன்மைகளை உணர்ந்த ஞானசம்பந்தர்,

> "அன்னவன் அலப்பால் வெப்பை யாலவாய் அண்ணல் நீறே
> மன்னுமந் திரமுமாகி மருந்துமாய்த் தீர்ப்ப" (ஞானசம். 2662)

பலராலும் தொழப்படும் பாண்டிய அரசனுடைய வலப்பக்கத்து வெப்பினைப் போக்குவதற்காக இறைவனின் திருநீறே நிலைபெற்ற மந்திரமும், மருந்துமாகித் தீர்க்கின்ற, திருநீற்றின் சிறப்பினைத் "திருநீற்றுப்பதிகம்" என்னும் பதிகம் பாடித் தமது கைகளால் அரசனது உடலில் தடவிட பாண்டியனின் வெப்பு நோய் நீங்கியது. அருமருந்தாய் பயன்பட்ட திருநீற்றினை அப்பதிகத்தில்,

> "முக்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
> சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
> பக்தி தருவது நீறு பரவ வினியது நீறு
> சித்தி தருவது நீறுதிரு வாலவா யான்றிரு நீறே"

முக்தியைத் தருவதும், முனிவர்கள் அணிவதும், சத்திய வடிவாய் விளங்குவதும், தகுந்த சான்றோர்களால் புகழப்படுவதும், பக்தியைத் தருவதும், வணங்குவதற்கு இனியதும், எண்வகையான சித்திகளைத் தருவதும், திரு ஆலவாயில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனுடைய திருநீறு ஆகும். இப்பதிகத்தில் திருநீற்றின் உயர்வுகளைக் காணுகையில் உள்ளங்கள் உவகை அடைகின்றது.

**சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

திருமழபாடியில் இறைவனை வணங்கிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய இனிமையான திருமழபாடிப் பதிகத்தில்,

> "கீளார் கோவணமும் திருநீறுமெய் பூசிஉன்தன்
> தாளே வந்தடைந்தேன் தலைவா எனை ஏன்றுகொள்
> வாளார் கண்ணிபங்கா மழபாடியுள் மாணிக்கமே
> ஆளாய் நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே"

திருக்கோவணத்தை அணிந்து, திருநீற்றினை உடம்பு முழுவதும் பூசிக் கொண்டு உன்னுடைய பாதங்களையே வந்து அமைந்து இருக்கின்றேன். தலைவனே நீ என்னை ஏற்றுக் கொள்வாயாக ஒளிபொருந்திய கண்களை யுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் கொண்டவனே மழபாடியில் எழுந்தருளியிருக்கும் மாணிக்கம் போன்றனை அடிமையாக உனக்கு ஆட்பட்ட பின்பு உன்னையல்லால் வேறு யாரை நினைப்பேன் என்று திருநீற்றின் உன்னதத்தினை கூறியிருக்கின்றான்.

**மாணிக்கவாசகர்**

பக்தர்கள் வழிபட்டுத் துதிப்பதற்குரிய திருநீறினை மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில்,

"சுண்ண வெண்ணீறு அணிவித்துத்
தூய் நெறியே சேரும் வண்ணம்"

சிவபெருமானின் சிவச்சின்னமான தூய்மையான வெண்ணிறமுடைய நீறினை அணிந்த பிறகு தூய்மையான சிவநெறியில் சேரவேண்டும் என்கின்றனர்.

**திருமூலர்**

காண்பதற்கு இனியதும், அழகினைத் தருவதாகவும் உள்ள திருநீற்றினைத் திருமூலர் அருளிய திருமந்திரத்தில்,

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே" (1638)

எலும்பு ஜோதியை வெளிக் கொணரும் தன்மையை உடையது. அயன் அரி என்னும் இருவருடைய முழுமையான எலும்புக் கூட்டினைச் சுமக்கும் கங்காளனான சிவபெருமான் ஆருயிர்கள் உய்வதற்குக் காவலாவுள்ளது. திருவெண்ணீறு என்றுணர்த்தக் கவசமாக அத்திருவெண்ணீற்றை அணிந்து கொள்கின்றான். அத்திருநீற்றை எப்பொழுதும் மங்காமல் பூசி மகிழ்வாரிடம் எத்தகைய வினைத்துன்பங்களும் தங்கிடாது. மற்றும் இம்மைக்கும் மறுமைக்கும் உடைய வீடு பேறானது சித்தியாகி நிலைத்திருக்கும் சிவபெருமானின் திருப்பாதங்களை அடைந்து இன்பமுறலாம் என்று திருநீற்றின் மகத்துவம் உரைக்கப்படுகின்றது.

சிவபெருமானின் திருப்பாதங்களைப் பேணி இத்திருநீற்றினை அணிபவர்க்கெல்லாம் பெருமையைக் கொடுப்பதாகவும் பெருந்தவம் செய்து முக்தியை விரும்பும் தவசிகளுக்கெல்லாம் பற்றுதலுக்குரிய ஆசையைக் கெடுக்கவல்லதாகவும் உடைய இத்திருநீறு எவ்வாறு செய்யப்படுகின்றதெனக் கீழ்வரும் பாடலில் திருமூலர் கூறியுள்ளார்.

"அரசுடனத்தி யாரும் அக் காரம்
விரவு கனவில் வியனுரு மாற்றி
நிரவயன் நின்மவன் தாள்பெற்று நீதர்
உருவம் பிரமன் உயர்குலமாமே" (1639)

அரசமரம், ஆலமரம், அத்திமரம் ஆகிய மூன்றின் சுள்ளிகளும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் எட்டுத் திருவுருவங்களின் ஒன்றாகிய

சிவ வேள்வித் தீயின் கண் ஒளிவிட்டெரிந்து உருமாறிக் காரியமாகக் காணப்படுவது உருவம், அருவம், உருஅருவம் என்னும் மூன்று நிலையையும் கடந்த சிவபெருமான் திருவடியினைத் தலைக் கொண்ட மெய்யடியார் திருவுருவம் திருநீற்றுத் திருவுருவமாகும். அவர்களே திருவடி உணர்ந்த செல்வத்தராகவும், மெய்ப்பொருளையடையும் உயர் குலத்தினராகுவதற்கு உரியவர் என்று கூறியுள்ளார்.

## சேரமான் பெருமான் நாயனார்

திருநீற்றின் சிறப்பினைப் போற்றுகின்ற அடியாரான சேரமான் பெருமான் நாயனார் வெண்ணிறமுடைய மேனியனாக வந்து கொண்டிருந்த வண்ணானைக் கண்டதும் திருநீறு பூசிய அடிகளார் என்று கருதி அவன் கால்களில் வீழ்ந்து வணங்கினான்.

## திருநீற்றினால் ஆட்கொண்ட சைவம்

சிவபெருமான் திருவருள் கூடியதால் இம்மைக்கும் மறுமைக்கும் ஒவ்வாத சமண சமயத்தைத் துறந்து தம் தமக்கையரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றார்.

> "நந்தமது குலம்செய்த நற்றவத்தின் பயன் அணையீர்,
> இந்தவுடற் கொடுஞ்சூலைக் கிடைந்தடைந்தேன் இனிமயங்காது"
> (1328)

இவ்வுடம்பினைப் பற்றிய சூலைநோயின் துன்பம் தாளாமல் உம்மை வந்து சேர்ந்தேன். என்னுடைய துன்பக் கடலிருந்து கரையேறுதற்குரிய நன்னெறியினைத் தமக்குரைக்குமாறு கூறுகின்றார்.

> "தம் அடிகளில் விழுந்து வருந்தும் தம்பியரைப் பார்த்து,
> கோளில்பர சமயநெறிக் குழியில் விழுந் தறியாது
> மூளும் அருந்துயர் உழந்தீர் எழுந்தீர் என மொழிந்தார்". (1329)

நல்ல குறிக்கோள் இல்லாத பிற சமயக் குழியில் விழுந்து மூளும் கொடிய துன்பத்தில் வருந்தினீர் எனக் கூறினார். பின்னர்,

> பற்றறுப்போர் தமைப்பணிந்து பணி செய்வீர் எனப் பணிந்தார்

கற்றை சடைமுடியை உடைய சிவபெருமானின் திருவடிச் சார்பினை அடைந்தவரின் பற்றுக்களை அறுப்பவரான சிவபெருமானைப் பணிந்து பணிசெய்ய வேண்டும் என்று திலகவதியார் மருள்நீக்கியாரிடம் கூறினார்.

திலகவதியார் இட்ட பணியினை ஏற்றுக்கொண்டு திருவீரட்டம் செல்வதற்குத் தகுதியுடையவராக ஆக்குவதற்காகத் திலகவதியார் இறைவனின் ஐந்தெழுத்தை ஓதித் திருநீற்றைக் கொடுத்தார்.

"திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார அணிந்து தமக்குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்" (1332)

சிவபெருமானின் திருநீற்றினைத் திலகவதியார் அளித்ததும் "எனக்கும் பெருவாழ்வு வந்தது" என எண்ணி பெருந்தகையரான மருள்நீக்கியார் பணிந்து ஏற்றுக்கொண்டார். அதனைத் தம் திருமேனி முழுவதும் பூசிக்கொண்டார்.

அங்ஙனம் சிவபெருமானின் திருநீற்றினை மருள்நீக்கியார் அணிந்த வுடன் அவரது உள்ளத்தில் உள்ள அறியாமை இருள்வெளியே சென்றது. அதே போல விடியற்காலையில் உலகை கவித்துக் கொண்டிருக்கும் புற இருளும் நீங்குகின்றது. இருவரும் வீரட்டானத் தலத்திற்குச் சென்று இறைவனை வணங்கிக் "கூற்றாயினவாறு விலக்ககலீர்" எனத் தொடங்கும் பாடலைப் பாடுகின்றார்.

இப்பதிகத்தினை இறைவனை நோக்கிப் பாடுகையில் கடுமையான சூலை நோயால் அவதியுற்றதைக் காண்கின்றோம்.

"பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்
படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர்
துணிந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்"

உன்னை அடைக்கலமாக அடைபவரின் பாவத்தைப் போக்குகின்றவன். சிவபெருமான் உனக்கு அடிமையாகி தொண்டு செய்து வாழத் தொடங்கினேன். என்னுடைய சூலை நோய் என்னை வாட்டுகிறது. அந்நோயைப் போக்கியருளுங்கள்.

நாவுக்கரசரின் உரோமங்கள் சிலிர்த்துக் கண்களில் கண்ணீர் வழியவும், தரைமீது விழுந்து புரண்டு ஆனந்தப் பரவசப்பட்டார். இவ்வாறாக இறைவனின் திருவடிகளை அடையும்வண்ணம் இத்தகைய நல்வாழ்வைத் தந்த சூலை நோய்க்கும் யான் என்ன கைம்மாறு செய்வேன் என்று தொழுகின்றார்.

செந்தமிழுடைய இனிய சொல்வளம் கொண்ட இத்திருப்பதிக மாலையைப் பாடியதால் "திருநாவுக்கரசு" என்று பெயர் சூட்டுகின்றார் இறைவன்.

மேலும் இவருடைய தேவாரத்தில்,

"திருவாய்ப் பொலிய சிவாய நமவென்று நீறணிந்தேன்
திருவாய் சிவகதி"

என்று பாடுவதால் சிவாய நம என்று வாயால் உச்சரித்துக் கொண்டு பூச வேண்டும் என்று தெரிகின்றது.

"தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்"

தூய்மையான வெண்ணீறினை தமது உடல் முழுவதும் பூசிக் கொண்டு உருத்திராக்க மாலையும் அணிந்து, சிந்தையில் சிவபெருமானை கொண்டு உள்ளம் உருகியவராய்த் திருநாவுக்கரசர் காணப்படுகின்றார்.

துன்பம் எனும் கடலிலிருந்து கரையேறுவதற்கும், தனது அறியாமை இருளைப் போக்குவதற்கும், திருப்பணிகளை இறைவனுக்குச் செய்வதற்கும், உரிய சைவத்தில் தன்னை ஆட்படுத்திக் கொள்வதற்கும், பற்றுகளை அறவே ஒழிப்பதற்கும், இறைவனின் திருவடிப் பேற்றினை அடைவதற்கும், புண்ணியமானதும் சிவ சின்னமான திருநீற்றினை அணிந்து கொண்டால் இறைவனின் திருவருள் கிடைக்கப்பெற்றுவிடும். இத்தகைய சிறப்புகள் அனைத்தும் நாவுக்கரசரின் வாயிலாகத் திருநீற்றுச் சிறப்பினைக் காண முடிகின்றது.

# 66. நாவுக்கரசரின் திருத்தல யாத்திரை

ஆ. மணிவண்ணன், மதுரை.

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரையன்றனடியார்க்கு மடியேன்"
- திருத்தொண்டத்தொகை

நாவுக்கரசர் பாடிய பதிகங்களுள் 312 பதிகங்களே நமக்குக் கிடைத்துள்ளன. மேலும் நாவுக்கரசுப் பெருந்தகை சமணம் விட்டுச் சைவம் சார்ந்த போது அவருக்கு அறுபது வயதுக்கு (கி.பி. 635) மேற்பட்டிருக்கலாம் என்று வித்துவான் க. வெள்ளைவாரணர் தம்முடைய "பன்னிரு திருமுறை வரலாறு" நூலில் குறிப்பிடுகின்றார். மேலும் கி.பி. 656 வரை வாழ்ந்திருக்கலாம் என்றும் அறியப்படுகிறது. அப்படியானால் சைவ சமயத்தைத் தழுவியிருந்த காலம் 21 ஆண்டுகள் மட்டுமே ஆகும். வாழ்க்கையின் இறுதிக்காலத்தில் இன்றுபோல் அறிவியல் வளராத காலத்தில் இறைவன் எங்கெல்லாம் குடிகொண்டுள்ளானோ அங்கெல்லாம் நடந்து சென்றும், தங்கிய இடமெல்லாம் உழவாரப் பணி செய்தும் தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டாற்றிய திருமகனார் திருநாவுக்கரசரின் வரலாற்றில் திருத்தல யாத்திரை அவரது சைவ வாழ்க்கையின் பெரும்பகுதியை ஆக்கிரமித்தும் அவரது சைவ வாழ்க்கையின் சிறப்புமாக அமைகின்றது.

சமணர் பொய்யுரை கேட்டுத் திருநாவுக்கரசருக்கு இன்னல் விளைவித்து விட்டோமே என்று மனம் வருந்திய பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் திருநாவுக்கரசரது திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சிச் சிவநெறியை மேற்கொண்டு சிவபெருமானுக்குத் திருவதிகையில் குணதர ஈச்சரம் என்னும் திருக்கோயிலைக் கட்டினான். திருவதிகையில் தொண்டு புரிந்து வந்த திருநாவுக்கரசுப் பெருந்தகை சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலங்களை வழிபட விரும்பித் திருவதிகையிலிருந்து புறப்பட்டுத் திருவெண்ணெய்நல்லூர் முதலிய தலங்களை வழிபட்டுத் திருப்பெண்ணாடகத்தை அடைந்து தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள செஞ்சடைக் கடவுளை வணங்கி "இறைவனே புன்னெறியாம் சமண சமயத் தொடக்குண்ட இந்த உடம்புடன் இனி உயிர்வாழ மாட்டேன். உயிர்வாழ உமது இலச்சினையான சூலத்தையும் இடபத்தையும் பொறித்து அருள்புரிவீர்" என விண்ணப்பித்துப் "பொன்னார் திருவடிக்கு" எனத் தொடங்கும் செந்தமிழ்ப் பதிகம் பாடியருளினார்.

சிவபெருமான் திருவருளால் ஒரு சிவபூதம் அருகில் உள்ளோர் யாரும் அறியாதவாறு அங்குத் தோன்றி ஆளுடைய அரசரின் திருத்தோள் களில் சூலமுத்திரையும், இடபமுத்திரையும் இட்டு அகன்றது. அதனை உணர்ந்த பெருந்தகை அகமகிழ்ந்து சிவபெருமான் திருவருளை நினைத்துக் கண்ணீர் சொரிய நிலமிசை வீழ்ந்து எழுந்து ஆர்வம் பெருக "உய்ந்தேன்" என்று மகிழ்ந்தார். தூங்கானை மாடக்கோயிலிருந்து புறப்பட்டுத் திருநெல்வாயில் அரத்துறை திருமுதுகுன்றம் முதலிய தலங்களை வழிபட்டுத் திருத்தில்லை மருங்கணைந்தார். தில்லைப்பதியின் மேலைவாயில் வழியாக உட்புகுந்து திருவீதியை வலம் வந்து பொன்னம்பலத்தின் முன்சென்று எல்லையில்லாத அன்புடன் தொழக் கூத்தப்பெருமான் திருநாவுக்கரசரை நோக்கி "என்று வந்தாய்" என்று வினவும் அருள் நோக்குடன் காட்சி கொடுத்தருள மனம் உருகிக் "கருநட்டகண்டனை" என்னும் பதிகம் பாடிப் போற்றினார். திருக்கோயிலின் திருமுன்றிலும் திருவீதிகளிலும் திருப்பணிகள் செய்து கும்பிடும் தொழிலரானார் திருநாவுக்கரசர். அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம் என்ற பதிகம் பாடினார். அதன்பின் திருவேட்களம் (தற்சமயம் சிதம்பரம் அண்ணாமலை நகர் என்று வழங்கப்படும் இடம்) சென்று அங்குக் குடிகொண்டுள்ள அருள்மிகு பாசுபதேசுவரரை வணங்கி "நன்று நாடொறும்" என்னும் பதிகம் பாடினார்.

பின்னர்த் திருக்கழிப்பாலையில் (சிதம்பரத்திலிருந்து தெ.கி. 5 கி.மீ. சிவபுரிக்கு அருகில் சிறிது தூரம்) குடிகொண்டுள்ள அருள்மிகு பால்வண்ணநாதர் மீது 5 பதிகங்கள் பாடினார். பின் மீண்டும் திருத்தில்லை அடைந்து "அரியானை அந்தணர்தம் சிந்தனையானை" என்னும் திருத்தாண்டகம் பாடிப் பரவினார். திருநாவுக்கரசர் திருத்தில்லையில் இருந்து மகிழும் நாளில் சீர்காழிப் பதியில் சிவபெருமான் திருவருளால் உமாதேவியார் திருஞானசம்பந்தருக்குச் சிவஞானம் குழைத்துத் திருமுலைப்பால் ஊட்டியதும் அதனை உண்ட திருஞானசம்பந்தர் "தோடுடைய செவியன்" என்று பாமாலை பாடியதும் கேள்வியுற்று ஆளுடைய பிள்ளையைக் காணும் பெருவிருப்புக் கொண்டு சீர்காழி சென்று சேர்ந்தார். பெருந்தகை வருகின்ற செய்தியைக் கேள்வியுற்ற திருஞானசம்பந்தப் பெருமான் அடியார்களுடன் சென்று எதிர்கொண்டு வரவேற்று உபசரித்தனர். ஞானசம்பந்தர் தம் திருக்கரங்களால் நாவுக்கரசரின் திருக்கரங்களைப் பற்றிப் பணிந்து "என் தந்தையாரே" என்று பொருள் படும்படி "அப்பரே" என்று அழைக்கத் திருநாவுக்கரசர் "அடியேன்" என்றார்.

திருஞானச் செல்வர்கள் இருவரும் திருக்கோபுரத்தைத் தொழுது உள்ளே சென்று விமானத்தை வலம் வந்த பொழுது ஞானசம்பந்தர் அப்பரை நோக்கி உங்கள் தம்பிரானைச் செந்தமிழால் பாடுவீராக என்று வேண்ட "பார்கொண்டு மூடி" என்னும் பதிகம் பாடியருளினார். பலநாள்

சீர்காழிப் பதியில் தங்கி மகிழ்ந்திருந்த அப்பரடிகள் சோழ நாட்டில் உள்ள சிவத்தலங்களை வழிபட விரும்பி ஆளுடைய பிள்ளையார்க்குத் தெரிவிக்க நாமும் உங்களோடு உடன் வருவோம் என்று கூறி இரு பெருமக்களும் திருக்கோலக்கா (சீர்காழியிலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது) சென்று வணங்கிய பின் ஞானசம்பந்தரிடம் விடை பெற்றுக் கொண்ட அப்பரடிகள் திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி, திருசெம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருஎதிர்கொள்பாடி, திருகோடிக்கா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேசுவரம், பழையாறை முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருச்சத்திமுற்றம் வந்தார்.

உமாதேவியார் பூசித்த புனிதத் தலமாகிய திருச்சத்திமுற்றத்திலுள்ள (கும்பகோணத்திலிருந்து தென்மேற்கில் 6 கி.மீ. திருச்சத்திமுற்றத்தின் தெற்கு வீதி, திருப்பட்டீச்சரத்தின், வடக்கு வீதியாக அமைந்த தலம்) அருள்மிகு சிவக்கொழுந்தீசரை இறைஞ்சி "இவ்வுயிரை கூற்றுவன் இவ்வுடம்பினின்று பிரித்து வருத்துவதற்கு முன்னே நின்னுடைய திருவடி களை என் தலைமேல் சூட்டியருள்வாயாக" என வேண்டிக் கொள்ளும் முறையில் "கோவாய் முடுகி" என்னும் திருப்பதிகத்தை வேண்டுகோளாய்ப் பாட அதனைச் செவிமடுத்த சிவபெருமான் அப்பரை நோக்கி "நல்லூருக்கு வருக" எனப் பணித்தருள உடனடியாகப் புறப்பட்டுத் திருநல்லூர் (தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசத்திலிருந்து 5 கி.மீ.) சென்றடைந்தார். அங்குக் குடிகொண்டுள்ள கல்யாண சுந்தரேசுவரரை வணங்கியதும் இறைவன் உம்முடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்று அவர்தம் சென்னிமிசைப் பாதமலர் சூட்டியருள இறைவனின் பெருங்கருணைத் திறத்தை வியந்து "நினைந்து உருகும் அடியாரை நைய வைத்தார்" என்னும் திருத்தாண்டகம் பாடிப் போற்றினார்.

திருநல்லூரிலிருந்து புறப்பட்டுத் திருக்கருகாவூர், திருஆவூர்ப் பசுபதீச்சரம், திருப்பாலைத்துறை, திருப்பழனம், (திருவையாற்றுக்கு கிழக்கே 4 கி.மீ.) சென்று அங்கு இறைவனை "வையம் வந்து வணங்கி" என்னும் பதிகம் பாடி மேலும் இறைவன் குடிகொண்டுள்ள ஒவ்வொரு தலமாகச் சென்றபோது திங்களூர் (திருவையாறுக்கு கிழக்கே 2 கி.மீ.) செல்கையில் அந்தணர் குலத்தைச் சேர்ந்த அப்பூதியடிகள் என்பவர் திருநாவுக்கரசரை நேரில் காணாத நிலையிலும் அவரது அருள் சிறப்பினைக் கேட்டறிந்து அவருக்கே அடிமையாகி அவர் பெயரிலேயே சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப் பந்தல் அமைந்திருப்பது கண்டு அவர் மனையை நண்ணினார். அப்பூதியடிகளின் வேண்டுதலின்படி அவருடைய இல்லத்தில் உணவருந்த அமர்ந்திருந்தபோது அப்பூதியடிகள் அரவம் தீண்டி இறந்த

தன் மகனைப் பற்றித் தெரிவிக்காது அமுது படைக்க முயன்றபோது தன் ஞானத்தால் சிறுவனைப் பார்க்க வேண்டும் என வினவ, அது சமயம்கூட அப்பூதியடிகள் மறைக்கவும் பின்னர், அப்பரடிகள் வற்புறுத்தலின் பேரில் தன் மகனுக்கு நடந்தவற்றைக் கூற, ஆளுடைய அரசர் நீர் செய்தது மிக நன்றாயிருக்கிறது. இவ்வாறு வேறு யார் செய்யவல்லார் என்று கூறி எழுந்து, உயிர்நீத்த மூத்த திருநாவுக்கரசின் உடம்பினைத் திருக்கோயிலின் முன் கொணரச் செய்து சிவபெருமான் அருள்புரியும்வண்ணம் "ஒன்றுகொலாம் அவர் சிந்தை" என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளி, அப்பூதியடிகளின் மகனை உயிர் பெற்று எழச் செய்தார்.

திருநாவுக்கரசர் பின்பு திருப்பழனப் பெருமானை வழிபாடு செய்து மனமொழி மெய்களால் திருத்தொண்டு செய்து திருநல்லூர் அடைந்து திருவலஞ்சுழி, திருகுடமூக்கு, திருநாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருவாஞ்சியம், திருக்கீழ்வேளூர், திருவிளமர் ஆகிய திருத்தலங்களைப் பணிந்து திருவாரூர் சென்றணைந்தார். பாடல்தோறும் "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என வரும் உணர்ச்சி மிக்கதோர் பதிகம் பாடித் திருக்கோயிலினை அடைந்து "காண்டலே கருத்தாய் நினைந் திருந்தேன்" என்னும் பதிகம் பாடியும் பின்பு தேவாசிரியன் மண்டபத்தை அடைந்து "மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்த மேனியன்" என்னும் திருப்பதிகத்தைப் பாடித் திருவாரூரில் சில நாள் தங்கித் திருத்தொண்டு புரிந்தும் வந்தார்.

பின்னர் ஆரூரிலிருந்து புறப்பட்டுத் திருப்புகலூர் சென்றபோது அங்கு முருகனார் திருமடத்தில் எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தர் அப்பரடிகளை அடியார்களுடன் எதிர்கொண்டழைத்தார். ஆரூரில் நிகழ்ந்த திருவாதிரைத் திருவிழாப் பெருமையினை விரித்து உரைக்குமாறு திருஞானசம்பந்தர் வேண்ட அப்பரடிகள் திருவாதிரை நாளின் பெருமையை "முத்து விதானம்" எனத் தொடங்கும் பதிகத்தில் மொழிந்தருளினார், இதுவே "திருவாதிரைத் திருப்பதிகம்" என வழங்கப் பெறுகிறது. பதிகத்தைக் கேட்டு மகிழ்ந்த திருஞானசம்பந்தப் பெருமான் திருவாரூர்ப் பெருமானை வழிபட்டு வருவதாகக் கூறித் திருவாரூர் சென்று திருப்புகலூர் வந்த பின்பு இருபெருமக்களும் திருக்கடவூர் சென்று (மயிலாடுதுறைக்குக் கிழக்கே 22 கி.மீ.) ஆங்கே கூற்றை உதைத்த குன்றவில்லியைத் தணியாத காதலுடன் வழிபட்டுத் திருப்பதிகம் பாடி வணங்கினர். பின்னர் அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலையில் (நன்னிலத்திலிருந்து மேற்கே 10 கி.மீ.) பல நாட்கள் தங்கியிருந்தபோது கொடும்பஞ்சம் உருவானதால் இருசான்றோர்களும் திருக்கோவிலுக்குச் சென்று வீழிநாதேசுவரரைப் பாடிப் பரவினர். கிழக்குப் பீடத்தில் திருஞானசம்பந்தருக்கும் மேற்குப் பீடத்தில் திருநாவுக்கரசருக்கும் இறைவன் படிக்காசு வைத்து அருளினார்.

அதனைப் பெற்ற இருபெருமக்களும் அக்காசுகளைக் கொண்டு நாள்தோறும் பறைசாற்றி அடியார்களை அமுது செய்வித்துப் பசித் துன்பத்தைப் போக்கியருளினார்கள்.

திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் திருவீழிமிழலை நீங்கிப் புறப்பட்டுத் திருவாஞ்சியம் சென்று அருள்மிகு வாஞ்சிநாதரை வணங்கித் திருமறைக்காடு என்னும் திருத்தலத்தை அடைந்தனர். முன்னே மணிகண்டரை மறைகள் பூசித்துத் திருக்காப்பிட்ட கதவம் திறக்கப்படாமலேயே அன்பர்கள் மற்றொரு வழியே சென்று இறைவனை வழிபட்டு வருவதைக் கண்ட திருஞானசம்பந்தர் அப்பரடிகளை நோக்கி அப்பரே வேதங்கள் பூசித்த விமலரை நாம் இந்த நேர்வாயில் வழிச் சென்று வணங்க வேண்டும். "திருக்கதவம் திறக்கும்படிப் பாடியருள்வீராக" என்று வேண்ட, நாவரசர் "பண்ணின் நேர்மொழியாள்" என்னும் திருப்பதிகத்தின் இறுதிப் பாட்டுத் தொடங்கும் வரை முன் பன்னெடுங்காலமாக அடைக்கப்பட்டிருந்த திருக்கதவு திறக்கவில்லை.

அப்பதிகத்தின் இறுதிப்பாட்டில் "இரக்கம் ஒன்றிலீர் எம்பெருமானீரே... சரக்க இக்கதவம் திறப்பிம்மினே என்றதும் நெடுங்கதவு திறந்து கொண்டது. தங்கள் எண்ணப்படி நேர்வாயில் வழியாக உள்ளே சென்று மறைக்காட்டீசரை நிலமிசை வீழ்ந்து வழிபாடு நிறைவித்துத் திரும்பும் போது அப்பரடிகள் ஞானசம்பந்தரை இத்திருக்கதவம் நாள்தோறும் திறந்து மூடும்படி அடைந்திடப் பாடியருளும் என வேண்ட ஞானசம்பந்தப் பெருமான் "சதுரம் மறை" என்ற திருப்பதிகம் பாடிய உடனேயே திருக்கதவம் அடைக்கப் பெற்றது. திருமடம் திரும்பிய பிறகு வாய்மை திறம்பாத வாகீசர் திருமடத்தில் ஒரு புறத்தில் படுத்தாலும் அவருக்கு உறக்கம் வரவில்லை. நாம் பாடியவுடன் திருக்கதவம் திறக்கவில்லை. அரிதின் முயன்று பாடிய பின்னரே திறந்தது. அருள் திருஞானசம்பந்தர் பாடியவுடனேயே அடைபட்டுவிட்டது.

இறைவன் திருவுளம் யாதோ என்று அச்சப்பட்டு நெடிது நினைத்துப் பின்னர் உறங்கினார். இறைவன் திருக்குறிப்பு உணராது திருக்கதவம் திறக்கப் பாடியதனால் காலம் தாழ்த்துத் திறந்ததுவோ என எண்ணிச் சோர்வுற்றுத் துயில் கொண்ட பொழுது அவரது கனவில் தோன்றிய சிவபெருமான் "அன்ப யாம் திருவாய்மூரில் இருப்போம் நீ நம்மைத் தொடர்ந்து வருவாயாக" என்று கூறி முன்னே செல்ல உடன்போவேன் எனக் கூறித் திருநாவுக்கரசர் "எங்கே என்னை இருந்த இடம்தேடிக் கொண்டு" என்னும் பதிகம் பாடிக்கொண்டே திருமறைக்காட்டினை விட்டு நீங்கி விரைந்து நடந்தருளினார். நெடும் பொழுது விரைந்து நடந்தும் அப்பரால் இறைவனைக் காண முடியாமல் போனபோது ஓரிடத்தில் காட்சி கொடுப்பவர்போல் பொன்மயமான திருக்கோயிலைக் காட்டி

அதனுள்ளே புகுந்து மறைந்தருளினான். நாவுக்கரசர் திருவாய்மூருக்குச் செல்கிறார் என்ற செய்தியினைக் கேட்ட ஞானசம்பந்தரும் பின் தொடரவே, அதனைக் கண்ட அப்பரடிகள் மகிழ்ந்து எளியேற்கே அல்லாது இப்பெருந்தகையார்க்கும் இறைவன் தன்னை மறைக்கும் வண்ணம் உடையனோ என வினவும் குறிப்புடன் 'திறக்கப் பாடிய என்னிலும்' என்னும் பாடலைப் பாட ஞானசம்பந்தர் காண இறைவன் தோன்றி அருள்புரிந்தான். அவ்வழகிய தெய்வக் காட்சியினைத் தம் கெழுதகை நண்பர் திருநாவுக்கரசருக்கும் ஞானசம்பந்தபெருமான் காட்டி மகிழ அப்பரடிகள் 'பாட அடியார் பரவக்கண்டேன்' என்னும் திருத்தாண்டகம் பாட இருபெரு மக்களும் வாய்மூர்நாதரை வணங்கி மறைக்காடு எழுந்தருளினார்கள்.

அப்போது மதுரைப் பாண்டிமாதேவியின் அழைப்பின் பேரில் பாண்டிநாடு செல்ல திருஞானசம்பந்தர் புறப்பட்ட பொழுது தம்முடன் வரமுற்பட்ட அப்பரடிகளைத் தடுத்துத் தாம் சென்று திரும்புவதாகக் கூறி ஞானசம்பந்தர் மதுரையம்பதி புறப்பட்டருளினார். நாவுக்கரசர் பின்னர் மறைக்காட்டிலிருந்து புறப்பட்டுத் திருவாவடுதுறை சென்று மாசிலாமணியீசர் திருவடிகளை வணங்கி ''மாயிரு ஞாலமெல்லாம்'' என்னும் பதிகம் பாடியருளினார்.

பின்பு பழையாறை என்னும் தலத்தை அடைந்தார், அங்குள்ள வடதளி என்னும் கோயிலின் விமானம் சமணர்களால் மறைத்துக் கட்டப் பட்டதாக அங்குள்ளோர் கூறக் கேட்டு விமானத்தின் அருகே அமர்ந்து சிவபெருமானது திருமேனி வண்ணத்தைக் கண்டு வணங்கியன்றிப் போகேன் எனக் கூறி அன்றைய தினமே உண்ணாநோன்பு என்னும் அறப்போரை முதன்முதலில் செய்து இறைவனை உள்ளமுருக வேண்ட இறைவன் பழையாற்று வேந்தன் கனவில் தோன்றி அப்பரின் குறைதீர்க்க ஆணையிட்டருளினான். மன்னன் படையுடன் வந்து சமணர்களை வென்று பொய் விமானத்தை நீக்கிச் சிவபெருமானுக்குப் புதியதொரு விமானம் அமைத்ததோடு அறப்போர் செய்த அப்பரடிகள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். தம் எண்ணம் இனிது நிறைவேறியது கண்டு மகிழ்ந்த நாவுக்கரசர் வடதளி இறைவனை வணங்கிப் பல தலங்களை வழிபடப்போந்தார். அதன்பின் திருஎறும்பியூர், திருவானைக்கா, திருப்பராய்த்துறை ஆகிய தலங்களுக்குச் சென்று திருப்பைஞ்ஞீலியை (திருச்சி மாவட்டம் வால்குடி வட்டம் மணச்சநல்லூருக்கு வடமேற்கே 8 கி.மீ) வழிபடச் செல்லுங்கால் வழியிலே பசியினாலும் தாகத்தினாலும் இளைப்புற்றும் சிறிதும் மனம் தளராது சென்றார். அதனை அறிந்து அவரது வருத்தத்தைத் தீர்க்கத் திருவுளம் கொண்ட சிவபெருமான் வழியிலேயே ஒரு சோலையையும் குளத்தையும் ஏற்படுத்தி வழிப்பயணம் செய்யும்

அந்தணராய்த் திருவுருத்தாங்கிக் கையில் பொதி சோறு கொண்டு அங்குத் தங்கியிருந்தார். ஆளுடைய அரசு அவரை அணுகியபோது அந்தணர் வேடத்திலிருந்த இறைவன் பொதிசோறும் நீரும் தந்து இளைப்பாறச் செய்து திருப்பைஞ்ஞீலி வரை திருநாவுக்கரசருடன் கூடிச் சென்று திருப்பைஞ்ஞீலியை அணுகியவுடன் மறைந்தருளினார். பெருமானின் திருவிளையாடலே அது என நினைத்து அருள்மிகு நீலகண்டேசுரரை வணங்கி ''மத்தமாமலர் சூடிய'' என்ற பாடல் பாடினார். பின்னர் அங்கி யிருந்து புறப்பட்டுப் பல திருத்தலங்களையும் பணிந்து திருவண்ணாமலை, திருவோத்தூர் (தற்சமயம் செய்யாறு என்று வழங்கப்படுகிறது) ஆகிய திருத்தலங்களைத் தரிசித்துப் பின் தொண்டை நன்னாட்டுப் பதிகளைத் தரிசிக்க விரும்பி வேதபுரீஸ்வரர் என்னும் ஓத்தூர் உடையநாயனாரை வணங்கியும், திருவேகம்பம் (காஞ்சி) சென்று தயாபரனைக் கண்டு வணங்கியும் தமிழ்ப் பதிகம் பாடியும் வழிபட்டார். திருக்கழுக்குன்றம் சென்று வேதகிரீச்சுரரைத் தரிசித்தார். கடற்கரைத் தலமான திருவான்மியூரை அடைந்து மருந்தீசரை வழிபட்டு அங்கிருந்து மருவார் மலர்ச்சோலை மயிலாப்பூரையடைந்து கபாலீசுவரரைத் தொழுதும் திருவொற்றியூர் சென்று பெருமானை ''மனமெனும் தோணி'' என்னும் பதிகம் பாடியும் வழிபட்டார்.

திருவொற்றியூரிலிருந்து திருமுல்லைவாயில் முதலிய தலங்களை வணங்கித் திருவாலங்காடு சென்று ஊர்த்துவ தாண்டவம் புரியும் அருட்கடலைத் தொழுது வடதிசை நோக்கிச் சென்று திருக்காளத்தி மலையை அடைந்து பொன்முகலி நதியில் மூழ்கி வேதநாயகரைக் கண்டு ''மனத்தகத்தான்'' எனத் துவங்கும் பதிகம் பாடிப் பரவசமடைந்தார்.

ஆளுடைய அரசு இறைவன் மீது ஏற்பட்ட மிகுந்த பக்தியால் திருக்கயிலாய மலையில் இறைவன் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தை காண்பதற்கே காதல் கொண்டார். மலைகளையும், காட்டாறுகளையும் கடந்து திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்) என்னும் திருத்தலத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள மல்லிகார்ச்சுனரைக் கண்குளிரக் கண்டு தமிழ்ப் பதிகம் பாடினார். பின் தெலுங்குநாடு மாளவதேயம் முதலியவற்றைக் கடந்து காசியை அடைந்தார். அங்குக் கங்கையில் மூழ்கித் தடங்கண்ணித் தாயாரையும் விசுவலிங்கத்தையும் வணங்கித் தம் உடன் வந்தோரை அங்கேயே தங்கச் சொல்லி மனிதர்கள் செல்ல முடியாத அடர்ந்து உயர்ந்த காட்டு வழியில் தனிப்பெருங் காதலுடன் தனியே நடந்து சென்றார். சைவரான அப்பரடிகள் அது வரை சாப்பிட்டு வந்த காய், கனி, கிழங்கு, இலை, சருகுகள் உண்பதையும் நிறுத்திவிட்டார். இறைவனது எண்ணமே உணவும் உயிருமானது. தொண்டு செய்து பழுத்த பழமான பெருமகனார் நாவுக்கரசைக் கண்டு கொடிய விலங்குகளும் விலகிச் சென்றன. கொடிய

நாகப்பாம்புகள் படமெடுத்துத் தங்கள் பணாமகுடத்துள்ள நாகமணிகளால் விளக்கு எடுத்தன. தேவர்களும் தனியே செல்ல அஞ்சும் அக்காட்டு வழியே அப்பரடிகள் சென்றார். இரவும் பகலும் எல்லையில்லாத ஆர்வத்துடன் வடதிசை நோக்கிச் சென்றவரின் பாதங்கள் பரடு வரை தேய்ந்தன. குருதி பெருகிற்று. காலில் காயம் ஏற்பட்டால் என்ன கைகள் இருக்கின்றனவேயென கரங்களை ஊன்றித் தாவித் தாவிச் செல்லக் கரங்களும் மணிக்கட்டு வரை தேய்ந்தன. ஆயினும் அவர் தளராமல் மார்பினால் தவழ்ந்து செல்ல மார்பு எலும்புகள் தேய்ந்து முரிந்தன. அந்நிலையிலும் உடம்பு முழுவதும் உள்ள தசைகள் கெடும்படிப் புரண்டுச் சென்றார். மன உறுதிக்கு முன் அழியும் யாக்கை முக்கியமல்ல எனக் கருதிய நாவுக்கரசரை மேலும் சோதிக்க இறைவன் விரும்பாமல் அவர் செல்லும் வழியில் பொய்கை அமைத்துத் தானும் முனிவர் வேடத்தில் அவரை எதிர்கொண்டு கேள்வியால் சோதிக்க நாவுக்கரசரோ தம் நாவன்மையால் ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் என்று மறுத்தார். அவரது நெஞ்சுறுதியைக் கண்ட சிவபெருமான் விண்ணில் மறைந்து நின்று ஓங்கு புகழ் நாவுக்கரசனே! எழுந்திரு! என்று கூறி அவர் தேகத்தில் அடைந்த காயங்களைக் குணப்படுத்திப் பழைய உருவுக்குக் கொண்டு வந்தார். அப்பொழுதும் ஐயனே! நீர் கயிலையில் இருக்கும் திருக்கோலத்தை அடியேன் கண்டு வணங்க அருள்வீர்! என்று பணிந்தார். அப்பொழுது இறைவன் இப்பொய்கையில் மூழ்கினால் திருவையாற்றில் எழுந்திருப்பாய் அங்கு நாம் கயிலையில் வீற்றிருக்கும் காட்சியைக் காண்பாய் என அசரீரியாகக் கூறியருளினார். அவ்வாறே செய்ய திருவையாற்றுத் திருக்குளத்தில் எழுந்து வேண்டக் கயிலாயத் திருக்கோலம் காணப்பெற்றுத் திருத்தாண்டகப் பதிகங்கள் பாடியருளினார். பின்னர் மீண்டும் கயிலைக் காட்சியகன்று திருவையாற்றின் திருக்கோலம் கண்டு வருந்திய நாவரசர் "எந்தை யருள் இதுவோ" என்று தெளிந்து பல பதிகங்கள் பாடியருளினார்.

தாம் கண்ட காட்சியை "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி உலகறியச் செய்தார். அதன் பின்னரும் தாம் கொண்ட அவாவின் பேரில் திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருநேரிசை முதலிய பதிகங்களைப் பாடியதோடு தள்ளாத வயதிலும் உழவாரத் தொண்டு செய்து கொண்டிருந்தார்.

பிறகு திருவையாற்றை விட்டுப் புறப்பட்டுத் திருநெய்த்தானம், திருமழபாடி வணங்கித் திருப்பூந்துருத்தி (தஞ்சை மாவட்டம் திருவையாறு வட்டம்) இறைவன் அருள்மிகு புஷ்பவனநாதரைக் "கொடிகொள் செல்வ" என்னும் திருப்பதிகம் மற்றும் பல பதிகங்களைப் பாடியருளினார்.

நாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் இருந்து உழவாரப் பணிகள் ஆற்றி வருவதைக் கேள்விப்பட்ட ஆளுடைய பிள்ளையாவர் அவரைக் காணும் பொருட்டுப் பொன்னி நாடு புகுந்தபோது ஞானசம்பந்தர் அறியாமலேயே அடியார் கூட்டத்துள் புகுந்து வணங்கி ஞானசம்பந்தப் பெருமான் வந்த முத்துச் சிவிகையைத் தாங்குபவர்களோடு தாமும் ஒருவராய்ச் சேர்ந்து தாங்கி வந்தார்.

திருப்பூந்துருத்தி வந்தவுடன் சிவிகையிலிருந்த திருஞானசம்பந்தர் அப்பர் எங்குற்றார்? என வினவ அப்பர் பெருமகனார் தங்கள் திருவடி களைத் தாங்கும் பேறு பெற்றேன் என்று கூறியருளினார். அதுகேட்ட ஆளுடைய பிள்ளையார் சிவிகையினின்று கீழே குதித்து அப்பரடிகளை வணங்க இருவரும் திருப்பூந்துருத்தி திருக்கோவிலை அடைந்து வழிபட்டுத் திருமடத்தில் அமர்ந்திருந்தனர்.

திருத்தொண்டின் நெறி வாழத் தோன்றிய திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் பெருமானிடம் பாண்டியநாட்டு மங்கையர்க்கரசியார், நின்றசீர் நெடுமாறர், குலச்சிறையார் ஆகியோர்களின் சிவபக்தி மாண்பினைப் பிள்ளையார் எடுத்துரைக்கக் கேட்டுச் செந்தமிழ்ப் பாண்டி நாட்டினைக் கண்டு வழிபட விரும்பினார். திருப்பூந்துருத்தியிலிருந்து புறப்பட்டுப் பாண்டிய நாடடைந்து திருப்புத்தூரை வணங்கி மதுரையை அடைந் தருளினார். அங்குத் தமிழ் சங்கத்தமர்ந்து மதுரை ஆலவாய் அண்ணலைத் தரிசித்துத் திருபூவணம், திருஇராமேச்சுவரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் (தற்சமயம் காளையார் கோவில்) முதலிய தலங்களையடைந்து வணங்கிப் பூம்புகலூர் சேர்ந்தார்.

திருப்புகலூர்ப் புனிதனின் திருவடிகளைப் பாடிப் பரவிப் பணி செய்து நாடோறும் திருக்கோவில் திருமுன்றிலிலே உழவாரப் பணி செய்து கொண்டு நின்ற தாண்டகம், க்ஷேத்திர கோவை, குறைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை, தசபுராணம், பாபநாசப் பதிகம் முதலிய பதிகங்களைப் பாடி அருளினார். இவ்வாறு ஆண்ட அரசு தொண்டாற்றி வருகையில் அவருடைய பற்றற்ற தூய துறவு நிலையை உலகுக்கு உணர்த்த விரும்பிய இறைவன் அவர் உழவாரப் பணி செய்யுமிடங்களிலெல்லாம் பரல் கற்களோடு சேர்ந்து பொன்னும் நவமணிகளும் சேர்ந்து கிடந்திடச் செய்தார். அவற்றையெல்லாம் ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் தாண்டக வேந்தர் நவமணிகளையும் இரத்தினங்களையும் பருக்கை கற்களுக்கு ஒப்பாகவே எண்ணி உழவாரப் படையால் அவற்றை அள்ளி எடுத்து அருகிலுள்ள குளத்தினுள் எறிந்தார்.

ஆண்ட அரசின் துறவு நிலையை மேலும் விளங்கச் செய்யும் பொருட்டுப் புகலூர் இறைவன் விண்ணுலக அரம்பையர்களை அனுப்பி

அவர்களைக் கொண்டு நாவுக்கரசரைச் சோதிக்க அப்போது இறைவனிடம் அகலாது அன்பு செலுத்தும் நாவரசர் தம் மன உறுதியினின்றும் சிறிதும் மாறுபடாமல் தாம் செய்யும் திருத்தொண்டிலேயே ஈடுபட்டிருந்தவராய் அரம்பையர்களை நோக்கி நான் "திருஆரூர் அம்மானுக்கே ஆளாயினேன் உம்மால் ஆகவேண்டியது யாதுமில்லை" என்று கூறிப் "பொய்மாயப் பெருங்கடலில்" என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடி அவர்களை அனுப்பி வைத்தார்.

இந்நிலைமையினை எல்லா உலகங்களும் அறிந்து போற்ற பக்தியே வடிவமான நாவுக்கரசர் சிவபெருமானின் திருவடியினை அடையும் காலம் அணித்ததாக அறிந்து "எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ" என்ற திருத்தாண்டகத்தையருளிச் சிவானந்த ஞானவடிவேயாகிச் சிவபிரானுடைய திருவடியின்கீழ் ஓர் சித்திரை மாதத்துச் சதயமாம் திருநாளில் (சுமார் கி.பி. 655-ல்) மீளாது அமர்ந்தருளினார்.

**"ஆழிமிசைக் கண்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி!"**

# 67. நாவுக்கரசர் காட்டும் பக்திநெறி

அரு. மருததுரை, திருச்சி.

உலகை இயக்கும் ஆற்றலுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள உறவு பக்தியாக விளங்குகின்றது. இப்பக்தி இறைவன்மீது அடியவர் கொள்ளும் ஆழமான அன்பினை அடித்தளமாகக் கொண்டிலங்குகின்றது. எனவே அதனைக் கட்டுப்பாட்டில் வைக்காவிட்டால் தடம்புரண்டு போய்விடும், என்பதனை நாயன்மாரும் ஆழ்வார்களும் நன்குணர்ந்தனர். திருக்கோயில் வழிபாட்டுடன் இணைத்தே ஆன்றோர் தமிழகத்தில் பக்திப் பயிர் வளர்ந்திட வகை செய்தனர். திருநாவுக்கரசர் தொண்டு நெறியினை முதன்மையாகக் கொண்டு மக்களைத் திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபடுத்தினார். இவரது பாடல்கள் புலப்படுத்தும் பக்தி நெறியினை இக்கட்டுரை சிந்திக்கின்றது.

### திருக்கோயில் வழிபாடு

தமிழகத்தில் புறச்சமய ஆதிக்கத்தினால் நாவுக்கரசர் காலத்தில் சைவத் திருக்கோயில்கள் வழிபாடின்றியும் வழிபடுவோரில்லாமலும் பொலிவிழந்து புதர்கள் மண்டிக்கிடந்தன. இச்சூழலில் மக்களிடையே திருக்கோயில் வழிபாட்டின் மேன்மையினை வலியுறுத்தி மக்களைத் திருக்கோயில் வழிபாட்டில் திருநாவுக்கரசர் ஈடுபடுத்தினார். திருக்கோயில் சிறப்பினையும் திருக்கோயில் வழிபாட்டின் பெருமையினையும் பலவாறாகப் பாடியுள்ளார்.

> திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
> திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
> பருக்கோடிப் பக்திமையாற் பாடா ஊரும்
> பாங்கினோடு பலதளிகள் இல்லா ஊரும்
> விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
> விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
> அருப்பொடு மலர்பறித்திட்டு ண்ணா ஊரும்
> அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே (6.95.5)

என்ற பாடல் இவண் காட்டாகின்றது. இப்பாடல் திருக்கோயில் வழிபாட்டுச் சிறப்பினைப் புலப்படுத்துகின்றது. திருக்கோயில் இல்லாத ஊரினைத் திரு இல்லாத அழகில்லாத, செல்வம் இல்லாத ஊராகக் குறிப்பிடுகின்றார்.

அந்த ஊரில் உள்ள மக்கள் திருநீறணிந்து கொள்ளவில்லை என்றாலும் அந்த ஊர் சிறப்பெய்யாது என்பது அவர்தம் கருத்து. பக்தி கொண்டு இறைவனை வழிபாடாற்ற மேலும் பாங்கான பல கோவில்கள் இல்லாமலும் விருப்பமுடன் வெண்சங்கினை முழக்கி இறைவனைத் துதிக்காமலும் இறைவனுக்கும் விதானமும் கொடியும் அமைக்காமலும் அரும்பு மலரெடுத்து இறைவனை வழிபாடு செய்ததற்குப் பின்னர் உண்ணாமலும் எண்ணாமலும் வாழ்கின்ற மக்கள் கூட்டம் உள்ள ஊர்கள் எல்லாம் ஊர் என்னும் தகுதியைப் பெறாது. இத்தகைய ஊர்கள் புதர்கள் மண்டிய அடவிகளாம். மிருகங்கள் வாழும் காடாகவும் கொள்ள வேண்டும் என்பது நாவுக்கரசரின் கருத்தாகும்.

திருக்கோயில் வழிபாடு மக்களிடையே கூட்டுறவினையும் ஒற்றுமையையும் வளர்க்கவல்லது. கூட்டுவழிபாடு மக்களை வழிபாட்டின் வாயிலாக ஒருங்கிணைக்கிறது. திருக்கோயில் வழிபாட்டினை ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் முன்னிருந்து நடத்தி மலரச் செய்தனர். குறிப்பாக நாவுக்கரசரின் உழவாரத் திருப்பணிகள் திருக்கோயில் வழிபாட்டினைச் சிறப்பித்ததோடு வழிபாட்டிடங்களை மக்களுக்கு மீட்டுத் தந்தன. அழிந்தும் சிதைந்தும் கிடந்த பல திருத்தலங்களை மக்களின் துணை கொண்டு பொலிவு பெறச் செய்தார். இது மட்டுமின்றி மக்களைப் பிற தலங்களுக்கும் சென்று வழிபடுமாறு தூண்டி, இறைவன் திருவருளைப் பெற ஆற்றுப்படுத்தினார்.

### திருத்தல வழிபாடு

மக்களைத் திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபடச் செய்து அதன் வாயிலாகத் திருத்தல வழிபாட்டிற்கு மக்களை நாவுக்கரசர் அழைத்துச் சென்றார். புண்ணியத் தலங்கள், புண்ணிய நீர்நிலைகள், தெய்வங்கள், தேவர்கள், ஆன்றோர் நிறுவிய அருட்குறிகளின் பெருமைகள் ஆகிய வற்றைத் தம் பதிகங்களில் நாவுக்கரசர் பதிவு செய்தார். இதனால் அவ்வத் தலங்களுக்குச் சென்று வழிபட வேண்டும் என்ற வேட்கையை மக்களிடையே திருநாவுக்கரசரின் பாடல்கள் ஏற்படுத்தின. தலந்தோறும் நிலவிய மரபுவழிக் கதைகள், புராணச் செய்திகள், மரபுச் செய்திகள் ஆகியவற்றையும் பாடல்களில் பதிவு செய்தார். இறைவன் தலங்கள் தோறும் சிறந்து விளங்குகின்றானெனினும் ஒவ்வொரு தலத்திலும் ஓரோர் அற்புதம் காட்டி அடியவரை ஆட்கொண்டருளினன் என்பது வரலாறு. இத்தகைய வரலாறுகளை நாவுக்கரசர் தக்காங்கு பாடல்களில் பதிவு செய்து மக்களைத் திருத்தல வழிபாட்டிற்கு ஆற்றுப்படுத்தினார்.

> ''திருவானைக் காவில் ஓர்சிலந்திக் கந்நாள் கோச்சோழர்
> குலத்தரசர் கொடுத்தார் போலும்'' (6.75.8)

"நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை அரசதாள அருளினாய்" (4.62.9)

எனவும்,

"புத்தியினாற் சிலந்தியுந் தன்வாயில் நூலால் பொதுப்பந்தர்"
(6.83.6)

என்றும் பாடியுள்ளமை காட்டுக்களாகின்றன. இச்செய்திகள் 'திருவானைக்கா' தலத்தில் தன்வாயின் நூலால் பந்தல் அமைத்து ஓர் சிலந்திக்கு அரசு பதவி கொடுத்த அருளினை விளக்குகின்றன. இது மட்டுமின்றி உறந்தையில் ஆட்சிபுரிந்த சோழனின் மணியாரத்தை இறைவன் ஏற்றுக்கொண்ட மரபுவழிச் செய்தியையும் நாவுக்கரசர் பாடியுள்ளார். உறையூர்ச் சோழன் காவிரியில் நீராடியபோது அவனது மணியாரம் காவிரியில் விழுந்துவிட்டது. உடனே மன்னன் சிவபெருமானே ஏற்றருள்க என்று வேண்டிட அந்த மணிமாலை ஆனைக்கா திருமஞ்சனக் குடத்தில் அகப்பட்டு இறைவனுக்கு அபிடேகம் செய்யும்போது ஆனைக்கா இறைவன் மீது மாலையாகித் தங்கியது. இச்செய்தியினைப் (6.63.4) பதிகத்தில் குறித்துள்ளார். இவ்வாறே தலந்தோறும் இறைவன் நிகழ்த்திய திருவருட் செய்திகளைப் பதிவு செய்துள்ளார்.

இராமேச்சுரத்தில் இராமபிரான் இலங்கைப் போர் முடித்து இலிங்க வழிபாடு பற்றிய செய்தியினை விரிவாகப் பாடியுள்ளமையும் (4.61.5) இவண் சுட்டுதற்குரியது. இவ்வாறே தேவர்களும் முனிகளும் இருடிகளும் அரசர்களும் வழிபாடியற்றி இறை அருள்பெற்ற தலங்களுக்குச் சென்று வணங்குதலால் பெறலாகும் பயன்களைச் சுட்டியுள்ளார். இதுவன்றியும் இறைவனது எண்பெரும் வீரச்செயல்கள் நிறைவேற்றப்பெற்ற வரலாற்றுத் தலப் பதிகங்களில் அச்செய்திகள் குறிக்கப்பெற்றன. அதனடியாக அனைத்து மக்களும் இன்றளவும் அத்தலங்களுக்குச் சென்று வழிபட்டால் உய்தி பெறலாம் என்று நம்பி வழிபட்டுப் பயன்பெறுகின்றனர். இவ்வாறு தலவழிபாட்டிற்குச் சிறப்பளித்து மக்களை நாவுக்கரசர் ஈடுபடுத்தியன் விளைவு தலப்பயணங்களை மேற்கொண்டால் அந்தந்தத் தலங்களில் இறைவன் அருளிச்செய்த பயன்கள் தங்களுக்கும் கிடைக்கும் என்ற நம்பிக்கை வலுப்பெற்று திருத்தல வழிபாட்டை ஊக்கியது. காட்டாக அட்ட வீரட்டானங்களில் ஒன்றான இறைவன் காலனைக் காலால் உதைத்து மார்க்கண்டனுக்கருளிய திருக்கடவூர்த் திருத்தலத்தில் ஆயுள் நலம் வேண்டி இன்றளவும் மக்கள் சென்று வழிபட்டு வருவது குறிக்கத்தக்கது.

### திருத்தல வழிபாட்டுப் பயன்

திருத்தல வழிபாட்டுப் பயன்களை நாவுக்கரசர் தலத்தைச் சிறப்பிக்கும் போழ்தே வலியுறுத்தியுள்ளார்.

நின்றியூர் பற்றினாரை பற்றா வினைப்பாவமே (5.23.3)

அஞ்சியாகினும் அன்புபட்டாகினும் நெஞ்சம் வாழிநினை
நின்றியூரை நீ (5.23.9)

என்ற அடிகளைக் காட்டாகக் கொள்ளலாம். மேலும்,

பொக்கம் பேசிப் பொழுதைக் கழியாதே
வக்கம் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ
தக்கன் வேள்வி தகர்த்த தழல் வண்ணன்
நக்கன் நல்லம் நண்ணுதல் நன்மையே (5.43.2)

என்று கூறி அறிவுறுத்துகின்றார். வஞ்சகமும் பொய்யும் பேசிப் பொழுதைக் கழிக்காமல் வாழ்வின் துன்பங்கள் தீர்ந்திடும் வகையினைச் சொல்லுவேன் கேளுங்கள் என்று திருநல்லம் சேர்ந்து வழிபட்டால் நன்மை என்று பாடுகின்றார்.

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே (5.31.6)

என்ற பாடலடிகள் உலகியல் வாழ்வினை மெய்யென்று கூறும் மக்களை நோக்கி அறிவுறுத்துகின்றது. மேலும் செல்வங்களைத் தேடி வாழ்ந்து வருவதோடு புறம் பேசி நாணமின்றித் திரிகின்ற மக்களே கூட்டை விட்டு உயிர்போகு முன்பு காட்டுப்பள்ளி கழல் சேர்ந்திடுவீர் என்று (5.84.2) பாடி நாவுக்கரசர் தல வழிபாட்டினைச் சிறப்பிக்கின்றார். மேற்கண்ட காட்டுக்கள் அனைத்து மத, இன மக்களுக்கும் பக்திநெறி வாயிலாக நாவுக்கரசர் விடுக்கும் அறிவுரைகளாகும்.

### இறைவனின் அருட்டன்மை

பக்தி நெறியின் வாயிலாக இறைவனின் திருவருளைப் பெற்றுய்யலாம் என்பது அருளாளர்களின் அறிவுரை, அடியார்க்கருளியான இறைவனின் அருட்டன்மையினை நாவுக்கரசர் விளக்கமாக விளம்பியுள்ளார்.

நெக்கு நெக்கு நினைவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன் (5.90.9)

என்ற பாடலடிகளில் நெக்குருகி நினைப்பவர் நெஞ்சினில் நிறைந்து நிற்பவர் சிவபெருமான் என்று பாடியுள்ளார். இறைவனின் அருட்டன்மையை விளக்குதலும் வலியுறுத்தலும் பதிகப்பொருளின் நோக்கமாகும். அதற்குக் காட்டாகத் திருமாற்பேறுத் திருத்தலப் பதிகம் இவண் விளக்கப்படுகின்றது.

சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர்

பாத்திரம் சிவம் என்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே (1.73.4)

எனும் இப்பாடலில், இறைவனின் அருட்டன்மையினை நினையாமல் சாத்திரங்களைப் பேசியும் கோத்திரங்கள் மற்றும் குலப்பெருமைகளைப் பேசி கூறியும் தருக்கித் திரிவதனாலே பயன் ஒன்றும் விளையப் போவதில்லை. உய்தியளிக்கும் இறைவன் சிவம் என்று பணிந்திடின் அவன் மாத்தினைப் போழ்தில் வந்து நின்று அருளுவான் எனக் கூறுகின்றார். இவ்வாறே இறைவனின் அருளை மட்டுமின்றி இத்தகைய பாடல்களில் மனித மாண்பினை வளப்படுத்தும் கருத்துக்களையும் உள்ளடக்கக் காணலாம். மனிதர்கள், சாத்திரங்கள், குலம், கோத்திரங்கள் இவற்றினால் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று மற்றவர்களை இழிவாகப் பேசும் மக்களைச் சழக்கர்கள் எனக் கூறித் தெளிவுறுத்துகின்றார்.

ஈட்டு மாநிதி சால இழக்கினும்
வீட்டுங் காலன் விரைய அழைக்கினும்
காட்டில் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லார் மாற்பேறரே (5.60.6)

என்ற இப்பாடல், நிதியினை இழந்திடினும், காலனின் அச்சம் சூழ்ந்திடினும் சிவபெருமானை எண்ணினால் அவன் அதனால் உண்டாய வாட்டத்தைப் போக்கி வாழ்விப்பான் என இறைவனின் அருள் தன்மை யினைப் பேசுகின்றது.

ஐயனே அரனேயென் றரற்றினால்
உய்யலாமுல கத்தவர் பேணுவர்
செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர் மாற்பேறரே (5.60.7)

என்ற இப்பாடல் சிவபெருமானின் திருநாமச் சிறப்பினைப் பேசுகின்றது. இறைவனின் திருநாமத்தை எண்ணி அவனது திருப்பாதத்தில் மனம் கொண்டால் வையத்தை ஆளும் பேற்றினையே வழங்குவர் என்பதனைக் குறிக்கின்றது.

**இறைவன் மருத்துவனாதல்**

இறைவன் மருத்துவனாகி நின்று மக்களின் உடற்பிணியையும் பிறவிப் பிணியையும் போக்குகின்றான் என்று அவனது அருளினைப் பலவாறாகப் பாடியுள்ளார். இறைவனின் அஞ்செழுத்தினை மனதில் ஓதினால் பொருந்துநோய் பிணி போக்கும் மருந்துமாகுவர் (5.63.4) என்று நாவுக்கரசர் பாடுகின்றார். அஞ்செழுத்து மருந்தாகின்றது. மயக்கம் தீர்க்கின்றது. வாழ்வளிக்கின்றது. அது எந்தையார் திருநாமம் என்று நாவுக்கரசர் குறிக்கின்றார். ஐந்தெழுத்தினைச் சிந்தைச் சுருதி (6.61.8)

என்று கூறி நினைவார்க்கு மருந்தாவான் என்று அஞ்செழுத்தின் வாயிலாக இறைவன் அருளும் சிறப்பினைப் பாடுகின்றார். பக்தி நெறியின் ஒரு கூறாக அஞ்செழுத்து ஓதிடும் எளிய வழியை வலியுறுத்துகின்றார்.

தன்னடைந்தார்க்கு இனியன் (5.14.10), ஊற்றுத் தண்டினை ஒப்பவராக விளங்குபவன் (5.24.3), காக்கும் நாயகன் நல்லன் என்றும் நல்லார்க்கு (5.75.8), பிழையும் தீர்ப்பார் (5.22.1), பிறவித் தீர்ப்பார் (5.38.4), பின்னை என்று கூறாதவர் (5.22.2) என்றவாறு சிவபெருமானின் அருட்டன்மையினை உளம் கொள்ளுமாறு பாடல்களின் நாவுக்கரசர் பரக்கக் கூறியுள்ளார்.

### இறைவன் சுற்றமாகுதல்

சிவபெருமான் அடியவர்க்கு அனைத்துமாகத் திகழ்பவன் என்று கூறுகின்றார். உலகச் சுற்றத்தில் உயிர்கள் மயங்கி உண்மைச் சுற்றத்தினை உணராமல் வாழ்கின்றனர் என்று பாடுகின்றார்.

தந்தையார் தாயா ருடன்பி றந்தார்
 தாரமார் புத்திரதார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
 மாயமா மிதற்கேதும் மகிழ வேண்டா
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
 திகழ்மதியும் வாளரவும் திளைக்குஞ்சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சி வாய
 என்றெழுவார் கிருவிசும்பி லிருக்க லாமே (6.93.10)

என்ற பாடல் உலகியல் வாழ்வினை விளக்கி அறிவூட்டுவதாக அமைகின்றது. உண்மையான சுற்றமாக விளங்குபவன் சிவபெருமான் என்பதனை,

அப்பன் நீ அம்மைநீ ஐயனும் நீ அன்புடைய
 மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ ஒரு குலமும்
 சுற்றமும் ஒருரு நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ துணையாய்
 யென்நெஞ்சம் துய்ப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ இம்முத்தும் நீ
 இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே (6.95.1)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இறைவனையே உண்மைச் சுற்றமாகக் கொண்டு ஒழுகும் பக்தி நெறியினை மக்கள் உளம் கொள்ளுமாறு நாவுக்கரசர் பாடுகின்றார். பக்தி நெறியினைப் பலவாறு கூறிய அப்பரடிகள் அந்நெறி நின்று ஒழுகுதலைப் பற்றிக் குறிக்கும்போழ்து,

திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பாராகில் தீவண்ணர்
திறமொருகால் பேசாராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழாராகில் உண்பதன்முன்
மலர்பறித் திட்டுண்ணாரா இல்
அருநோய்கள் கெடவெண்ணி றணியாராகில் அளியற்றார்
பிறந்த வொறேதோ வென்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாறே (5.95.6)

என்று வருந்துகின்றார். உலகத்துச் செல்வங்கள் அனைத்தையும் தந்தாலும் வானாளைக் கொடுத்தாலும் அத்தகைய செல்வங்களை யாம் மதிக்க மாட்டோம். எத்தொழில் புரிபவராக இருந்தாலும் கொடுமையான நோய் வாய்ப்பட்டவர்ாக அனைவராலும் வெறுக்கப்பட்டவரானாலும் இறையடியரராகி, இறைவனுக்கு அன்பராகவும், தொண்டராகித் தொண்டர் களாகவும் வாடுகின்றவர்கள் தான் நான் வணங்கும் கடவுளர் (6.95.10) என்ற நாவுக்கரசரின் கூற்று அடியவர் மாண்பினையும் பக்தியின் சிறப்பினையும் தெற்றென விளக்கிக் காட்டுகின்றது.

தொண்டு நெறியினை முதன்மையாகக் கொண்ட திருநாவுக்கரசர் அதன் வழியாகப் பக்தி நெறியினை வலியுறுத்துகின்றார். திருக்கோயில் வழிபாடு, திருத்தல வழிபாடு என்று மக்களை வழிபாட்டு நெறியில் இட்டுச் சென்ற நாவுக்கரசர் மனித மாண்பினை வளப்படுத்தும் கருத்துக் களைப் பலவாறாக பதிவு செய்துள்ளார். பொக்கம் பேசி பொழுதைக் கழிக்காமல் நடையை மெய்யென்று "நாத்தீகம் பேசாமல் செல்வத்தைத் தேடிப் புறம் பேசித் திரியாமல் இறைவனை நினைந்து இம்மை மறுமைப் பயன்களை எய்துவீர்" என்ற தொடர்கள் மனித மாண்பினை வளப்படுத்தும் கருத்துக்களுக்குச் சான்றாகக் கொள்ளக் கிடைக்கின்றன. இறைவன் அடியவர்களின் துயர்போக்கிட மாத்திரைப் போழ்தில் அருளுபவன் என்று நம்பிக்கையூட்டுகின்றார். எளியதும் நேரியதுமான வழிபாட்டு முறையாக அஞ்செழுத்தினை ஓதுதல், நினைதல் என்றும் அதனால் உண்டாகும் பயன்களையும் திருநாவுக்கரசர் வலியுறுத்துகின்றார். சாத்திரப் பெருமை, குலப்பெருமை உயர்வு பேசுதல், மற்றவர்களைக் குலத்தால் தாழ்த்தி பேசுதல் இவற்றைக் கண்டிக்கின்றார். அத்துடன் குலமும் சாத்திரமும் இறைவனைப் பற்றிட வழிவகுக்காது என்று வலியுறுத்துகின்றார். மேலும் மலை வந்து வீழினும் மனிதர்கள் கலங்காதீர். ஈசன் தன் அடியவரைக் காப்பான் என்ற நம்பிக்கையூட்டி அறிவுரை வழங்குதலும் பக்தி நெறியின் சிறப்பினையும் மனித மாண்பினையும் வளப்படுத்துவதோடு வையத்தில் வாழ்வாங்கு வாழ அருளிடும் என்பதில் ஐயமில்லை.

# 68. ஆளுடைய அரசும், ஆளுடைய பிள்ளையும்

த. மலைமதி, புதுவை.

மண் வளம் பெறுவது பயிர் வளர்ச்சிக்குக் காரணமாவது போல் மனவளம் ஆன்மீக வளர்ச்சிக்குக் காரணம் ஆகின்றது. தெய்வ பக்தி மனிதனை மனப்பக்குவம் உள்ளவனாக மாற்றுகின்றது. தெய்வ பக்தி இல்லாதவன் இரண்டு கால் மிருகத்திற்குச் சமம் என்பது பிரகலாதன் கூற்று. தமிழகம் இருபெரும் சமயத்தினால் தழைத்தோங்கியது. தமிழ்ச் சங்கம் வைத்து வளர்த்த தமிழ்ப் புலவர்கள் ஒருபுறம் இருக்க வாழ்க்கை நெறியை ஒழுக்க நெறியாக வகுத்துக்காட்டி தெய்வ உணர்ச்சியை ஊட்டிய சமயச் சான்றோர்கள் மறுபுறம். தமிழ்நாட்டில் பல சமயங்கள் தோன்றி வளர்ந்து மக்களால் போற்றப்பட்டு வருகின்றன. அவற்றுள் குறிப்பிடத்தக்க பெருமையும் தனிச்சிறப்பும் பெற்றது சைவம் ஆகும். சைவ சமயத்தைப் போற்றிய நாவுக்கரசரையும், ஞானசம்பந்தரையும் (ஆளுடையப் பிள்ளையும்) ஒன்றிணைத்து காணுவதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

**சைவ சமயக் குரவர்**

தமிழும் சைவமும் நெருங்கிய தொடர்புடையவை. சைவ சமயத்தைத் தமிழ்ப்பால் ஊற்றி வளர்த்த சான்றோர்கள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆவர். இந்நால்வரும் சைவ சமயக் குரவர்கள் என்று போற்றப்படுகின்றனர். இந்நால்வருள் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். தேவாரம் பாடிய மூவரில் இவர்களும் அடங்குவர். இவரின் காலம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டாகும்.

**ஆளுடைய அரசு**

மருள்நீக்கியார் என்ற இயற்பெயர் பெற்ற நாவுக்கரசர் திருமுனைப்பாடி நாட்டில் தெய்வநெறி தழைத்தோங்கும் திருவாமூரில் புகழனார், மாதினியாருக்கு மகவாய்த் தோன்றினார். இளம் வயதிலேயே பெற்றோரை இழந்து தமக்கையாரால் வளர்க்கப்பட்டார். இடைக்காலத்தில் சமண நெறியில் சிக்கித் தடுமாறி இறைவனால் சூலை நோய் தந்து தடுத்தாளப் பெற்று சைவ சமயப் பணிபுரிந்தார். இவர் 4, 5, 6-ஆம் திருமுறைகளாகத் தேவாரப் பாசுரங்களைப் பாடியுள்ளார். என் கடன் பணி செய்து கிடப்பதே என்பது இவரின் தாரகமந்திரமாக ஒலிக்கிறது.

## ஆளுடையப் பிள்ளை

திருஞான சம்பந்தர் சோழ வளநாட்டில் சீர்காழியில் சிவபாத இருதயருக்கு மகனாகத் தோன்றினார். மூன்று வயதிலேயே பார்வதியால் ஞானப்பால் ஊட்டப்பட்டு சிவஞானம் கைவரப் பெற்றவர். சைவத்தை வளர்த்தவர். சமணத்திற்கு எதிராக பல புரட்சிகளைச் செய்தவர். பாண்டிய நாட்டைச் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றியவர். இவரது தேவாரப் பாடல்கள் சைவத் திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப் பட்டுள்ளன. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் என்று நம்பியாருரார் இவரைப் போற்றுகின்றார். திராவிட சிசு என்று ஆதிசங்கரரால் போற்றப்பட்டவரும் இவரே.

> சான்றோர் சான்றார் பலராகுப
> பொன்னுந் துகிருந் முத்து மன்னிய
> மாமலை பயந்த காமரு மணியும்
> இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்து
> அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
> ஒருவழித் தோன்றியாங் சென்றுஞ் சான்றோர்
> சான்றோர் பலராகுப (புறம். 218)

என்னும் கண்ணகனார் பாடலில் சான்றோர் இணைவதால் ஏற்படும் நன்மைகள் குறித்து விளக்கப்பட்டுள்ளது.

முத்து ஆழக்கடலில் பிறக்கிறது. ஒளிவீசும் மணிகள் எங்கோ மலையில் பிறக்கின்றன. ஆயினும் கைவினை வல்ல பெற்கொல்லன் அணிகலன் செய்யுங் காலத்து அவை ஒன்று கூடிக் கண்ணுக்கு விருந்தளிப்பது போல சான்றோர்கள் எங்கே பிறந்தாலும் சான்றோர் களையே நாடிச் சென்றடைவர் என்பதை இப்பாடலின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இக்கருத்திற்கேற்ப நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் வேறுவேறு நாட்டில் வேறு குலத்தில் பிறந்தாலும் வயதில் வேறு பாட்டுடன் இருப்பினும் சைவம் என்ற சமயத்தின் மூலம் ஒன்றுபடு கிறார்கள். இவர்களின் நட்பிற்கு சைவ சமய உணர்ச்சியே காரணமாக அமைகின்றது.

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்."

என்ற குறளுக்கு உதாரணமாக அமைகின்றனர்.

## அரசு நிகழ்த்திய அற்புதங்கள்

இறைவன் அருளாலும் தமது அன்பின் முதிர்ச்சியினாலும் பல அற்புதங்களை ஆளுடைய அரசு நிகழ்த்தியுள்ளார்.

சமணர்களை எதிர்த்து சைவ சமயத்தைப் பரப்பியது. சமணனான பல்லவ மன்னனை மாற்றிச் சைவனாக்கியது.

நாட்டை ஆளும் அரசனையே துச்சமாக எண்ணி "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று அஞ்சாமல் எதிர் மொழிந்தது.

நீற்றறை குளிர்வித்தது.

இறைவனருளால் நஞ்சுண்டும் உயிர் பிழைத்தது.

கல்லையே தெப்பமாகக் கொண்டு கடலை நீந்திக் கரை சேர்ந்தது.

மூத்த திருநாவுக்கரசின் விடத்தை தீர்த்தது.

திருமறைக்காட்டில் கதவம் திறக்கப் பாடியது.

பழையாறையில் சமணர்களால் ஒளித்து வைக்கப்பட்ட சிவலிங்கத்தை வெளிக் கொணர்ந்தது.

திருக்கயிலாயத்திற்கு யாத்திரை நிகழ்த்தியது போன்றவையாகும்.

**ஆளுடையப் பிள்ளையின் அற்புதங்கள்**

இறைவனை மகன்மை மார்க்கத்தால் வழிபட்டுப் பேறு பெற்றவர் ஆளுடையப் பிள்ளை ஆவார். அதன் விளைவால் மற்ற அடியவர்க்கு இல்லாத சிறப்பினைப் பெற்றவர். இறைவனிடம் முத்துச்சிவிகை, பெற்றாளம், உலவாக்கிழி போன்ற பரிசுகளைப் பெற்றார். இவர் நிகழ்த்திய அற்புதங்கள் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நின்றன.

**உமையம்மையால் ஞானப்பால் உண்டது**

திருநீலகண்ட யாழ்ப்பாணர் தாழ்ந்த குலத்தில் பிறந்தவராக இருப்பினும், அவரைத் தம் துணைவராகக் கொண்டு சமுதாயச் சீர்திருத்தம் செய்தவர்.

கொல்லிமழவன் மகளைப் பற்றி வருத்திய முயலகன் நோயைத் தீர்த்தது.

திருமருகலில் வணிகனுக்கு விடம் தீர்த்தது.

திருமறைக்காட்டில் மறைக்கதவம் அடைத்தது.

மதுரையில் சமணர்களை வாதத்தில் வென்று சைவத்தை நிலை நாட்டியது.

திருவோத்தூரில் ஆண் பனைகளைப் பெண் பனைகளாக மாற்றியது.

மயிலாப்பூரில் பூம்பாவை எலும்பைப் பெண்ணாக்கியது என்பன குறிப்பிடத்தக்கவை.

**இருவரின் தொண்டுள்ளங்களில் - பொதுவானவை**

இருவருமே 'அன்பே சிவம்' என்ற எண்ணம் உடையவர்கள். உலகு எல்லாம் சிவமயம். அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது என்ற கருத்தினைக் கொண்டவர்கள்.

வயது வேறுபாடு இருந்தும் ஒருவரையொருவர் வேண்ட இறைவன் திருவுள்ளம் என்று தொண்டு செய்தார்கள். இறந்தோரை உயிர்ப்பிக்க வைத்தனர்.

ஆணவம், கன்மம், மாயை மூன்றையும் அகற்ற வேண்டும் என்றும் இளமை, உயிர் யாக்கை, செல்வம் இவை நிலையற்ற தன்மையுடையன. இவர்கள் இறைவனே நிலையானவன் என்ற கொள்கையுடையவர்கள்.

அன்பு, பணிவு, சகிப்புத்தன்மை, மனிதநேயம், பொறுமை, பெரியோரை மதித்தல் போன்றவை மனித பண்புகள். இவற்றுடன் முக்தி அடைய ஒரேவழி இறைவனே. அதற்கு வழி சைவ சமயமே என்று கூறியவர்கள்.

இறைவன் ஆணைப்படியே அனைத்தும் நிகழ்கின்றது என்று உலகிற்கு உணர்த்தியவர்கள்.

அரசும், ஆளுடையப் பிள்ளையும் சைவம் வளர்ச்சிபெற பாடுபட்டவர்கள் மனிதனுக்கு ஏற்படும் இன்பத் துன்பத்திலிருந்து காக்க சைவப் பெருமை யினையும், இறைவன் பெருமையையும் உணர செய்தவர்கள் சைவ சமயத்தின் மறுமலர்ச்சிக் காலமாக இவர்களின் காலம். மக்கள் அடையும் நற்பயன்களை இவர்கள் உருவாக்கி தந்தனர். சைவப் புண்ணியக் கண்கள் என்று சேக்கிழார் இருவரையும் போற்றுகின்றார்.

இரண்டு நாயன்மாரின் சந்திப்புக்களின் மூலம் நல்ல நட்பிற்கு இலக்கணமாக அமைகின்றனர். அந்நட்பால் விளைந்த நன்மைகள் என்னவென்பதும் இன்றைய மக்கள் புரிந்து கொள்ளல் தேவையான ஒன்றாகின்றது.

> ''நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலம்மிக்க
> நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்
> குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
> இணங்கி இருப்பதுவும் நன்று''

இப்பாடலின் மூலம் நட்பின் இலக்கணம் அறிய முடிகின்றது.

# 69. அப்பர் கண்ட பெரிய பெருமான் அடிகள்

வே. இரா. மாதவன், தஞ்சை.

சோழநாட்டுத் தென்கரைத்தலம் 'திருக்கடவூர் மயானம்' ஆகும். இது, மயிலாடுதுறை வட்டம் திருக்கடவூருக்கு 2 கி.மீ., தொலைவில் நேர் கிழக்கில் உள்ளது. இவ்வூர், 'திருமெய்ஞ்ஞானம்' என்றும், 'திருமயானம்' என்றும் அழைக்கப் பெறுகிறது. பிரமன் வழிபட்ட தலம்.

ஒரு கற்பத்தில், சிவபெருமான் பிரமனை நீறாக்கி, மீண்டும் உயிர்ப்பித்து, அவருக்குப் படைப்புத் தொழிலை அருளிய தலம் இது. இங்குள்ள கோயிலும் மூர்த்திகளும் மிகப் பழைமையானவை. இன்று இவை மிகவும் சிதிலமாயுள்ளன.

மார்க்கண்டேயருக்காக, பங்குனி மாதம், அசுவினி நாளில் கங்கை யானது இங்கு தீர்த்தமாக வந்ததால் இங்குள்ள தீர்த்தம் 'காசி தீர்த்தம்' எனப் போற்றப் பெறுகிறது.

இங்குள்ள இறைவன் திருநாமம் பிரமபுரீசுவரர் என்றும், இறைவியின் திருநாமம் மலர்க்குழல் மின்னம்மை என்றும் கூறுகின்றனர்.

தேவாரத்தில், இத்தல இறைவனை 'பெருமான் அடிகள்' என்று திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும்; 'பெரிய பெருமானடிகள்' என்று சுந்தரரும் பாடியுள்ளனர். இத்திருநாமம், வேறு எங்குமில்லாமல் இத்தலத்தில் மட்டுமே வழங்கப் பெறுகிறது.

இம்மூவருள், திருநாவுக்கரசர் மட்டுமே தாம் கண்ட இப்பெயர் பொருத்தத்தைத் தம் பதிக வாயிலாகத் தெரிவிக்கின்றார் என்பது இவண் உய்த்துணரத் தக்கதாகும்.

**அடிகள்**

'மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று பெரும்பற்றப் புலியூரானைப் பாடும்போது ஒப்பாரில்லாதானாகிய சிவபெருமானைப் போற்றுவர் திருநாவுக்கரசர். 'உள்ளம் உள்கி உகந்து சிவனென்று மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே' என்ற உறுதி கொண்டவர் இவர். இத்தகைய இறைவனை அண்ணல், ஈசன், எம்பிரான், ஐயன், கோ, சிவலோகன், செம்பொற்சோதி,

பழையன், பித்தன், புண்ணியன், பொய்யிலி எனப் பல்வேறு பெயரிட்டு அழைக்கும் தேவார ஆசிரியர், சிவபெருமானை 'அடிகள்' எனப் பலவிடங்களிலும் பாடுவர்.

'பைஞ்ஞீலியுள் என்றும் மேவியிருந்த அடிகளே'; 'பூந்துருத்திந்நகர் அடிகள் சேவடிக்கீழ்நா மிருப்பதே'; 'நற்றுணை யாவர் போலும் நனிபள்ளி அடிகளாரே'; 'ஆனகம் அஞ்சும் ஆடும் அடிகள் ஆரூரனாரே'; 'மருந்தாய்ப் பிணி தீர்க்கு மாறு கண்டேன் வாய்மூர் அடிகளை நான் கண்ட வாறே'; 'அந்தமில் அடிகள் போலும் ஆலங்காட் டடிகளாரே'; 'பரியர் நுண்ணியர் பாகூ ரடிகளே'; என இவ்வாறு 'அடிகள்' என்ற பெயர் கொண்டு சிவபெருமானை அழைக்கும் திருநாவுக்கரசர், திருக்கடவூர் மயானத்து ஈசனையும் 'அடிகள்' என்றே பாடல்தோறும் அழைக்கின்றார்.

'திளைக்குந்தே வன்குடித் திசைமுக னோடுமால் அளக்க வொண்ணாவண்ணத் தடிகள் வேடங்களே'; 'மன்னன் மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் மாயமே'; 'கருகாவூரெம் அடிகள் வண்ணம்மழலும்மழல் வண்ணமே' எனச் சிவபெருமானை 'அடிகள்' என்று பல பதிகங்களிலும் பாடும் திருஞானசம்பந்தரைப் பின்பற்றியே திருநாவுக்கரசரும் பாடியுள்ளார் என்பது தெளிவு.

தமிழில், 'அடி' என்னும் சொல், ஆதி (Beginning), மூலம் (Ancestry), பழைமை (Antiquity), அண்மை (Nearness) என்ற பொருளில் வழங்கப் பெறும். அடி என்னும் சொல்லை மூலமாகக் கொண்டது அடிகள் என்ற பெயர்.

முன்னைப் பழைமைக்கும் பழைமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் இறைவனை - ஆதியாய் விளங்கும் கடவுளை - அடிகள் என்று அழைப்பது முன்னைச் சான்றோர் வழக்கு. 'மலர்மகள் விரும்புநம் அரும்பெறல் அடிகள்' என நம்மாழ்வார் (திவ். திருவாய், 1, 3, 1) இறைவனை அழைப்பர்.

இதுவே பின்னாளில் குருவின் பெயருடனும் பெரியோர் பெயருடனும் வழங்கும் மொழியாயிற்று (இளங்கோவடிகள், கவுந்தியடிகள், காந்தியடிகள் என.)

திருவாய்மொழியினை அடுத்து, தேவார ஆசிரியர்களே இறைவனை அடிகள் என்ற பெயரில் மிகுதியாக அழைத்துள்ளனர். சமணாசாரியரை 'அடிகள்மார்' என அழைப்பது அக்கால வழக்கு என்பதைச் சேக்கிழார் (பெரியபு. திருஞான. 641) சுட்டுவர். இந்நிலையுணர்ந்த தேவார ஆசிரியர், 'அடிகள்' என்ற பெயர் இறைவனை மட்டுமே அழைத்தற்குரியது என்பதை வலியுறுத்தவே பல பதிகங்களிலும் சுட்டியுள்ளனரோ எனவும் எண்ண

வேண்டியுள்ளது. பின்னாளில், இறைவனைத் தவிர்த்து அடியார்களையும், துறவிகளையும், பெரியோர்களையும் இப்பெயரிட்டு அழைப்பது வழக்க மாயுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

### பெருமான்

பெருமையிற் சிறந்தோன் ஆகிய கடவுளைப் பெருமான் என அழைப்பது பண்டைய வழக்கு. சிவபெருமான் என்பதே இதற்குரிய எடுத்துக்காட்டாகும்.

### பெரிய

மிகவும் மூத்தது, முக்கியமானது, பெரியது என்பதைக் குறிக்கப் பயன்படுவது இச்சொல். பரப்பிரமம் - 'பெரிய பொருள்' என்றே அழைக்கப் பெறும். திருவரங்கத்தைப் 'பெரிய கோயில்' என்றும்; அத்தலத்துத் திருமாலைப் 'பெரிய பெருமாள்' என்றும்; இலக்குமியைப் 'பெரிய பிராட்டி' என்றும்; கருடாழ்வாரைப் 'பெரிய திருவடி' என்றும்; நாயன்மார்கள் வரலாற்றைப் பெரிய புராணம் என்றும் அழைக்கப் பெறுவது நினையத் தக்கது.

நமசிவாய என்ற பஞ்சாட்சர மந்திரத்திற் சிவபெருமானைக் குறிக்கும் 'சி' என்ற எழுத்து 'பெருவெழுத்து' என்றே அழைக்கப்பெறும்.

பிறவா யாக்கைப் பெரியோன் ஆகிய சிவபெருமான் எவ்வகையில் மிகவும் மூத்த, முக்கியமான, பெரிய நிலையினன் என்பதை நாவுக்கரசர் இத்தலப் பதிகத்தில் குறிப்பாகச் சுட்டுவது எண்ணத்தக்கது.

### பெரிய பெருமான் அடிகள்

திருக்கடவூர் மயானத் தல இறைவனின் திருவுருவச் சிறப்பையும் திருவருளையும் வியந்து போற்றுகின்றார் திருநாவுக்கரசர்.

> 'பழைய தம்மடி யார்செய்த பாவமும் பிழையும் தீர்ப்பர்' (1)
>
> 'தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம் பின்னை என்னார்' (2)
>
> 'அறவ னார்அடி யாரடி யார்தங்கள் பிறவி தீர்ப்பர்' (4)
>
> 'வணங்கு வாரிடர் தீர்ப்பர்' (7)
>
> 'பரவு வாரிடர் தீர்ப்பர்' (8)

என எல்லாத் தீர்வுகளுக்கும் அவரே ஆதியானவர் என்பதை இப்பதிகத்தில் சுட்டுகின்றவர், இம்முதன்மைத் தன்மைக்கான, காரணத்தையும் இத்தல இறைவன் பெயரினைக் கொண்டே விளக்க முற்பட்டிருப்பதையும் காண்கிறோம்.

'எரிகொள் மேனி இளம்பிறை வைத்தவர்
கரியர் தாங்கட வூரின் மயானத்தார்
அரியர் அண்டத்து ளோர் *அயன் மாலுக்கும்*
*பெரியர்* காணும் பெருமா னடிகளே'. (6)

என்னும் இந்த ஆறாவது பாடலில் இவ்விளக்கம் நமக்குக் கிடைக்கின்றது.

மேலும்,

'அரவு கையினர் *ஆதி புராணனார்*
மரவு சேர்கட வூரின் மயானத்தார்
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்
*பிரமன் மாற்கும் பெருமா னடிகளே'* (8-9-10)

என்னும் இந்தப் பாடலில், 'ஆதிபுராணனார் அடிகள்' என்ற பழம்பெரும் முதன்மைக்குக் காரணம் 'பிரமனும் மாலும் அறியவொண்ணா அச்சிறப்புத் தன்மையே' என்பதையும், 'படைக்கும் பிரமனுக்கும் காக்கும் திருமாலுக்கும் மற்றுமுள்ள அனைவருக்கும் பெரியவர் அவரே' என்பதையும் மிகவும் அழுத்தம் திருத்தமாகச் சுட்டுகின்றார் திருநாவுக்கரசர்.

இவர் பாடிய 312 திருப்பதிகங்களில் மொத்தம் 3066 பாடல்களே கிடைத்துள்ளன. மீதமுள்ள 54 பாடல்கள் கிடைக்கவில்லை. அவற்றுள், இத்திருக்கடவூர் மயானத்துப் பதிக்த்தின் இரண்டு பாடல்களும் அடக்கம். அப்பாடல்கள் கிடைப்பின், 'அப்பர் கண்ட பெரிய பெருமானடிகள்' பெயருக்குரிய விளக்கங்கள் மேலும் வலிமை பெறக்கூடும்.

இவ்வகையில், இத்தல இறைவனைத் திருஞானசம்பந்தர் குறிப்பிடுவதும் இவண் ஒப்பு நோக்கத்தக்கது.

திருக்கடவூர் மயானத்திலுள்ள சிவபெருமானைப் பாடும் பொழுது, இடப வாகனத்தில் அவர் எழுந்தருளியுள்ள சிறப்பையே திருஞானசம்பந்தர் பெரிதும் குறிக்கின்றார்.

'பெரிய விடைமேல் வருவாரவர் எம்பெருமான் அடிகளே' எனப் பதிகத்தின் முதற்பாடல் தொடங்கி, ஒவ்வொரு பாடலிலும் 'விடைமேல் வரும்' காட்சியைச் சிறப்பித்துப் பாடியுள்ளமையும் சிந்திக்கத்தக்கதாகும்.

'செங்கண் வெள்ளேறேறிச் செல்வஞ் செய்யா வருவார்' (2)

'ஈடல் இடபம் இசைய...அமர்ந்தார்' (3)

'வெள்ளை யெருத்தின் மிசையார்' (5)

'ஒன்றா வெள்ளே றுயர்த்த துடையா ரதுவே யூர்வார்' (6)

'அலங்கல் விடைமேல் வருவார்' (7)

'பெற்றொன் றேறி வருவார்' (8)

'வளர்புன் சடையார் விடையார்' (9)

'தூய விடைமேல் வருவார்' (10)

என இவர் ஒவ்வொரு பாசுரத்திலும் விடைமேல் வரும் சிவபெருமான் திருக்காட்சியையே பாடுகிறார்.

மேலும், இவருடைய முதற்பாடலில் காணும் 'பெரிய' என்ற அடைமொழி 'பெருமான் அடிகளுக்கே' யுரியது என்பதும் தெளிவாகின்றது. ஏனெனில், இவர்தம் ஒன்பதாம் பாடலில், 'திருமாலொடுநான் முகனுந் தேர்ந்துங்காண முன்னொண்ணாப் பெருமானெனவும் வருவார் அவர் எம்பெருமான் அடிகளே' எனப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

அடிமுடி காணவொண்ணாப் பெருமையின் காரணமாகவே இத்தல இறைவன் இங்குப் 'பெரிய பெருமான் அடிகள்' என அழைக்கப் பெறுகின்றார் என்பதைத் திருஞானசம்பந்தரும் மிக மிக நயமாக உரைப்பது எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

திருஞானசம்பந்தரின் தல யாத்திரையையும், வரலாற்று அடிப்படையோடு அவர் பதிகம் பாடும் மாண்பினையும் பெருவிருப்புடன் பின்பற்றி மகிழ்ந்த திருநாவுக்கரசர், இத்தகைய பொருள் பொதிந்த இறைவன் திருநாமங்களின் சிறப்பினை மக்கள் மேன்மேலும் உணர்ந்து போற்றும் வண்ணம் பாடியுள்ளார் என்பது நம் சிந்தனைக்குரியது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சமகாலத்தவர். இவ்விருவரை அடுத்து ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தல இறைவனைப் பாடும்பொழுது முன்னைய மரபு மாறாமல் நாவுக்கரசரைப் பின்பற்றி - 'பெரிய பெருமான் அடிகள்' என்னும் இறைவன் திருநாமத்தின் பொருள் விளங்கும்படியாகவே தம் பதிகத்தை அமைத்துள்ளார்.

**'மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல**
**வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்**
**திருமால் பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்**
**பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே'**

என்னும் முதற்பாடலிலேயே இப்பெயரின் பொருள் விளங்குமாறு சுந்தரர் பாடியிருக்கக் காணலாம். இம்மரபு பல நூற்றாண்டுகள் தொடர்ந்து வந்துள்ளது.

ஆயின், பின்னாளில் பல்வேறு சூழ்நிலை மாற்றங்களின் காரணமாகப் பல தலங்களில் தமிழ்ப் பெயர்கள் மறைந்து வடமொழிப் பெயர்கள்

வழங்கப்பட்டு வருவதைக் காண்கிறோம். இந்நிலை மாற நாம் தேவாரப் பதிகங்கள் வழியே பொருள் கண்டு உணர்ந்து போற்றல் வேண்டும். இதன்வழி, நல்ல தமிழ்ப் பெயர்கள் மக்களிடையே பரவி நிலை பெறக் கூடும்.

திருக்கடவூர் மயானத் தல இறைவனுக்குப் 'பெரிய பெருமான் அடிகள்' என்ற பெயர் மிகப் பழங்காலத்திலிருந்தே வழங்கி வந்திருக்கிறது எனத் தெரிகிறது. இதனால் இத்தலத்தின் பழைமையும் தெளிவாகின்றது. மக்களிடையே பெருவழக்காக இப்பெயர் விளங்கியிருந்ததன் காரணமாகவே திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சுந்தரரும் இதனை மறவாமல் பாடியுள்ளனர்.

இறைவனை 'அடிகள்' என் அழைக்கும் மரபு மிகப் பழமையானது என்பதும், அதனைத் தேவார மூவரும் போற்றியுள்ளனர் என்பதும், பிற்காலத்தில் இம்மரபு மறைந்தது என்பதும் சிந்திக்கத்தக்கன.

சிவபெருமானை 'அனாதி' என்றே பிங்கல நிகண்டு கூறும். 'பெரிய பெருமான் அடிகள்' என்று அழைப்பதிலும் அவருடைய அனாதிநிலை (தொடக்கம் தெரியாத நிலை) உணர்த்தப் பெறுகிறது.

தமிழால் இத்தகைய இறைவனை முழுவதுமாக உணர்வதற்காகவே அருளாளர்கள் தமிழ்த் திருநாமங்களைப் பதிகந்தோறும் பாடியருளி யுள்ளனர் என்பதே உண்மையாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தனிப்பெரும் புலவராகத் திகழ்ந்த வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் தஞ்சைப் பெரிய கோயில் இறைவன் பேரில் பதிகம் பாடியபொழுது 'தஞ்சை நகர்ப் பெரிய சிவனார்' என்று முன்னை மரபு நோக்கித் தமிழிலேயே பதிவு செய்துள்ளார் என்பதும் இங்கு நினையத்தகும்.

இத்தகைய தொல் மரபைப் போற்றி நாமும் நலம் பல பெறுவோமாக.

# 70. திருநாவுக்கரசர் தொண்டு நெறி

அ.மு. மாலதி, சென்னை.

தரணியில் தர்மம் தழைத்திட வேண்டும், நிலைத்திட வேண்டும் என்பதற்காகவே அவதார புருஷர்கள் அவதரிக்கின்றனர். அப்படி அவதரித்தவர்கள் தாம் நம் சைவ சமயக் குரவர் நால்வரும். தமிழகத்தில் வெவ்வேறு சமயங்கள் பரவி ஆட்சி செலுத்திய காலத்தில சிவநெறியை மீண்டும் நிலை நிறுத்துவதற்காக இந்தச் சமயாசாரியர்கள் தோன்றினார்கள். நால்வரும் நான்கு வகை ஆன்மீக நெறிகளைத் தம் வாழ்க்கையில் பின்பற்றினார்கள். அவற்றையே தம் பாடல்களில் எடுத்துரைத்தார்கள் என்று மரபு வழியாகக் கூறப்பட்டுள்ளது. சம்பந்தர் மகன்மை நெறியையும் (சத்புத்திர மார்க்கம்) அப்பர் தொண்டு நெறியையும் (தாச மார்க்கம்) சுந்தரர் தோழமை நெறியையும் (சகமார்க்கம்) மாணிக்கவாசகர் மெய்ந் நெறியையும் (சன்மார்க்கம்) பின்பற்றினார்கள்.

இந்த நால்வரையும் இறைவன் நான்கு விதமாக ஆட்கொள்கின்றார். ஒருவருக்குப் பாலைக் கொடுத்து ஆட்கொண்டார் (சம்பந்தர்), ஒருவருக்குச் சூலை கொடுத்து ஆட்கொண்டார் (அப்பர்), ஒருவருக்கு ஓலை கொடுத்து ஆட்கொண்டார் (சுந்தரர்), ஒருவருக்குக் காலைக் கொடுத்து ஆட்கொண்டார் (மாணிக்கவாசகர்). இவ்வாறு ஆட்கொண்டு நம்மைப்பிடித்து நல்வழிப் படுத்த நால்வர் பெருமக்களை அனுப்பினான், இறைவன். ''அனைவரும் பயன் கொள்ள வேண்டும் என்பதே இறைவனின் கருணை. அதன் காரணமாகவே வடிவம் தாங்கி உலகிடையே வருகின்றான். அந்த வடிவமும் பல வகைப்படும். அவ்வாறு அவன் வரவில்லை என்றால் எந்த உயிரும் உயராது; உய்யாது மயர்வற மாட்சியும் எய்தாது'' என்றும்,

> ''மானைக் காட்டி மானைப் பிடிப்பது தான் எளிது. அதுபோல மனிதனைக் காட்டி மனிதனைப் பிடிக்கின்றான். பயிற்சியால் பண்படுத்துகின்றான். பயன் கொள்ளவும் பயன்படவும் செய்கின்றான்''

என்று கூறிய தவத்திரு தேமொழியார் சுவாமிகள் கருத்தைக் காட்டாகக் கூறலாம்.

**நாநலத்தின் சிறப்பு**

மக்களுக்குள்ளே எவ்வளவோ கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் வாழ்க்கையில் உயர வேண்டும் என்பதில் யாருக்கும் கருத்து

வேற்றுமை இருக்க முடியாது. செல்வத்தினாலோ, கல்வியினாலோ, வாழ்க்கையில் உயர்ச்சி பெற்றுவிட முடியாது நாவின் நலத்தினால்தான் உயர்வு பெற முடியும். நாநலம் இருந்தால் எல்லா நலன்களும் வரும்.

மரங்கட்கு ஓர் அரசு உண்டு அது கற்பகம், விலங்குகட்கு அரசு சிங்கம், மலைகட்கு அரசு இமயம், பட்சிகளுக்கு அரசு கருடன், நாகங்களுக்கு அரசு ஆதிசேடன், தேவர்களுக்கு அரசு இந்திரன். அதுபோல நாவுகளுக்கெல்லாம் அரசு ஒருவர் இருக்கின்றார் அவர்தான் சிவபெருமானது திருவருளின் திருவுருவாக வந்த நாவுக்கரசர். அவரது பாடல்கள் உள்ளத்தை உருக்கும். நாவுக்கரசர் என்ற நாமத்தை இறைவரே அவருக்குச் சூட்டியருளினார்.

இறைவனால் திருநாமம் சூட்டப்பட்ட நாவுக்கரசர் எவ்வாறெல்லாம் திருத்தொண்டு புரிந்து வந்தார் என்பதை இக்கட்டுரையில் காண்போம்.

அப்பரடிகள் ஏழாம் நூற்றாண்டிலே திருவாமூரிலே திரு அவதாரம் செய்தார். நல்லாறு தெரிந்து உணர நம்பர் அருளாமையினால் சொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகிச் சூலை வலியினாலே தடுத்தாட் கொள்ளப் பெற்று சைவ சமயத்திலே வந்து அச்சமய நெறியில் நின்றார். யாத்திரைகள் செய்தார். அதியற்புதமான செந்தமிழ்ப் பாடல்களை எல்லாம் நமக்குப் பாடித் தந்தார் (4900 பதிகங்கள் இப்பொழுது 312 பதிகங்கள் தான் இருக்கின்றன) ஆகவே அந்தக் குருநாதர் நமக்காகப் பாடிக் கொடுத்தது தேவாரம். பொதுவாக திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் பாடியது தேவாரம் என்பர். ஆனால் ஞானசம்பந்தர் பாடியது திருக்கடைக்காப்பு; சுந்தரர் பாடலுக்குத் திருப்பாட்டு என்று பெயர்; அப்பர் பாடிய பாடல் தான் தேவாரம். தே - இறைவன். வாரம் - அன்பு. இறைவனிடத்தில் அன்பு விளைவிக்கின்ற பாடல் தேவாரம். அப்பர் பாடிய முதல் தேவாரப் பாடல்:

"கூற்றாயினவாறு விலக்ககலீர்..... வீரட்டானத்துறை அம்மானே"

என்பது அப்பொழுது "இனி நீ திருநாவுக்கரசு" என்ற வானிடை ஓர் அமிர்த ஒலி திருவருளால் எழுந்தது. திலகவதியாரின் செம்மையான தவமே மருள்நீக்கியாரைத் திருநாவுக்கரசராக மாற்றித் தமிழ் உலகை உய்வித்தது.

"சமண இருளில் மூழ்கிய சிறியேன் பெறும் திரு இதுவே" என்று திருநாவுக்கரசர் இறைவனைத் தொழுதார். அவரது சூலை நோய் நீங்கியது. திருநாவுக்கரசரைச் சிவபெருமான் திருவருளால் ஆட்கொண்ட செய்தியை அடியவர்கள் முரசு கொட்டி எங்கும் முழக்கினார்கள். அவரது நெஞ்சம் அஞ்செழுத்தை நினைந்தது. வாக்கு தமிழ்ப் பதிகம் பாடியது. காயம் உழவாரப் படைகொண்டு திருத்தொண்டு புரிந்தது. இவ்வாறாக மனம்,

வாக்கு, காயம் என்னும் முக்காரணங்களாலும் சைவத் தொண்டு புரிந்து வந்தார்.

சேக்கிழார் அவருடைய சிறப்பைக் கூறும் பொழுது,

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறி வாழ

......... ......... ......... .........

......... ......... ......... .........

ஒரு நாவுக்கு உரைசெய்ய ஒண்ணாமை உணராதேன்"

என்று ஒரு நாவினாலே அவருடைய அருட்பெரும் திறத்தை எடுத்துச் சொல்ல முடியாது என்று அவையடக்கத்தோடு பேசுகின்றனர். அத்தகைய பெரிய ஞானமூர்த்தி திருநாவுக்கரசு சுவாமிகள்.

தருமசேனர் சைவரானது கேட்டு வெகுண்ட சமணர்கள் மன்னன் மகேந்திர பல்லவனிடத்துச் சொல்லச் சீற்றம் கொண்ட மன்னன் அமைச்சரை அனுப்பி நாவுக்கரசரை அழைத்து வரச் சொன்னான். ஆனால் அப்பரோ,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை"

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தினைத் திருவாய் மலர்ந்தருளினார். இதனால் இத்திருப்பதிகம் மறு மாற்றத் திருத்தாண்டகம் என்னும் பெயர்த்தாயிற்று. இப்படி இவர் தாண்டகம் பாடுவதில் சிறந்து விளங்கிய காரணத்தினால் தாண்டக வேந்தர் என்று அழைக்கப்பட்டார். இதன் கண் திருநாவுக்கரசர், தாம் இவ்வுலக வாழ்க்கையில் எத்தகைய தொடர்பு மின்றித் தேவாதி தேவனாகிய சிவபெருமானையே சிந்தித்து அவனடியார் களுக்குத் தொண்டுபட்டு வாழும் உறுதிப் பாட்டினையும் எத்தகைய குற்றமில்லாத தாம் மண்ணாள் வேந்தராகிய எவர்க்கும் அஞ்ச வேண்டுவதில்லையென்பதனையும் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். எனவே இத்திருத்தாண்டகமாகிய இத்திருப்பதிகம், அரசனது ஏவலால் தம்மை அழைக்கப் படையுடன் வந்த மந்திரிகளை நோக்கித் திருநாவுக்கரசரால் பாடப்பெற்றதென்பது நன்கு தெளிவாகின்றது.

மற்றவர்கட்கு இடையூறு வரல் ஆகாது என்று சென்ற அப்பர், சுண்ணாம்புக் காளவாயிலிட்டும், கல்லில் கட்டிக் கடலில் விட்டும் பல துன்பங்களுக்கு உள்ளாக்கப்பட்டார். ஆனால் அனைத்துத் துன்பங்களையும் ஐந்தெழுத்து மந்திரத்தின் உதவியால் வென்று நின்றார். ஈசன் எந்தை இணையடி நிழலை நினைத்திருந்ததால் கொதிக்கும் சுண்ணாம்புக் காளவாயும் அவருக்குப் பொய்கையைப் போன்று ஆயிற்று.

கல்லில் கட்டிக் கடலில் விட்டப்பொழுது,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சி வாயவே"

என்று பரமனைப் பாடினார். திருவதிகையிலிருந்து திருநாவுக்கரசர் பதிகள் தோறும் சென்று பரமனைப் பாடுதல் வேண்டும் என்று விரும்பிப் புறப்பட்டார். தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள செஞ்சடைக் கடவுள் மீது

"பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும்
......... ......... ......... ..........-
......... ......... ......... .........
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க் கொழுந்தே"

என வரும் திருவிருத்தமாகிய திருப்பதிகம் பாடினார்.

பிறகு தில்லை கூத்தனை வணங்கி,

"பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
......... ......... ......... .........
......... ......... ......... .........
அத்தாவுன் ஆடல் காண்பான் அடியனேன் வந்தவாறே"

எனவரும் திருநேரிசையினைப் பாடித் துதித்தார்.

பிறகு பல தலங்களுக்குச் சென்று திங்களூர் வந்து அப்பூதியடிகளாரின் மகனின் விடம் நீங்கும்படி ஒன்று முதல் பத்தீறாக வைத்து எண்ணும் நிலையிற் பத்துப்பாடல்களால் அமைந்த திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

"ஒன்று கொலமவர் சிந்தை யுவர் வரை
ஒன்று கொலா முயரும் மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாமவர் ஊர்வது தானே"

என்றுத் தொடங்கிப் பத்துப் பாடல்கள் பாடியருளியவுடன் உயிர் நீத்த மூத்த திருநாவுக்கரசு, உறக்கம் நீங்கி எழுபவனைப் போன்று உயிர் பெற்றெழுந்து, திருநாவுக்கரசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

பின்னர் திருவாரூரிலே பூங்கோவில் மேவிய புற்றிடங் கொண்ட புண்ணிய மூர்த்தியைக் கண்டு மண்மிசை வீழ்ந்து தொழுதார். கண்கள் நீர் பொழிய உடல் புளகமுற, போற்றித் திருத்தாண்டகம் பாடினார்.

''பிரமன்தன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கரநான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி
......... ......... ......... .........
......... ......... ......... .........
திருமூலட்டானனே போற்றி போற்றி!''

என்று, ஆரூர் இறைவரை இறைஞ்சித் திருப்பதிகம் பல பாடித் திருப்பணிகள் புரிந்து வந்தார். இப்படி வாக்கினால் பல பாடல்களைப் பாடித் திருத்தொண்டு புரிந்த நாவுக்கரசர் திருப்புகலூரை அடைந்து சம்பந்தரைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். திருஞான சம்பந்தருடன் பல தலங்களுக்கு யாத்திரை மேற்கொண்டார்.

**காயத்தினால் செய்த தொண்டு**

திருநாவுக்கரசர் திருப்புகலூருள் புகுந்து அரவணிந்த அரனாரை அன்புடன் துதி செய்யார். தண்டமிழ் மொழிந்து போற்றினார். கோயிலைச் சூழ்ந்துள்ள களைகளைக் கொத்தி எடுத்து உழவாரப் பணி செய்தார்.

''நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி
......... ......... ......... .........
......... ......... ......... .........
தேவர்க்கும் தேவராவார் திருப்புகலூரனாரே''

அதன்பின் திருவீழிமிழலைக்கு நாவரசும், ஆளுடையப் பிள்ளையும் சேர்ந்து சென்ற அப்பொழுது மாரி குன்றியது காவிரியும் நீரின்றி வற்றியது. அதனால் விளைவின்றி எங்கும் வறுமை மிகுந்தது. பெரும் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் பட்டினியால் பெரிதும் வருந்தினார்கள். சிவபெருமான் இரு பெருந்தகையாளர்களது கனவிலும் எழுந்தருளி, ''நாட்டின் பஞ்சத்தால் நீங்கள் துன்புற மாட்டீர்கள் நாள்தோறும் படிக்காசு தருவோம்; அதனைக் கொண்டு அடியார் மிடியை அகற்றுவீர்கள்'' என்று அருளிச் செய்தார். பொழுது புலர்ந்தது. இரு சான்றோர்களும் திருக்கோவிலுக்குச் சென்று பரமனைப் பாடிப் பரவினர். கிழக்கு பீடத்தில் திருஞான சம்பந்தருக்கும் மேற்குப் பீடத்தில் நாவுக்கரசருக்கும் இறைவர் படிக்காசு வைத்து அருளினார். அதனைப் பெற்ற குருமூர்த்திகள் 'எல்லோரும் வந்து உண்க' என்று காலையிலும் மாலையிலும் பறைசாற்றச் செய்து அடியார்களுக்கு அன்னதானம் புரிந்தார்கள்.

இப்படி பல தலங்களைக் கண்டு அங்கு உழவாரத் தொண்டு செய்து மகிழ்ந்தார். அவரது உள்ள உறுதியை உலகத்தார்க்குத் தெளிவாகப் புலப்படுத்தத் திருவுளங் கொண்ட சிவபெருமான் அவ்வுழவாரம் நுழைந்த இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் விளங்கித்

தோன்றும்படி செய்தனன். ஓடும் செம்பொன்னும் மணிகளுமாகிய அவற்றைப் பருக்கைக் கற்களோடு ஒப்பக்கருதி உழவாரத்தில் ஏந்தி அருகிலுள்ள தாமரைத் தடாகத்தில் வீசியெறிந்தார். அழகிற் சிறந்த அரம்பையர்கள் அவரது திருமுன் நின்று இன்னிசை பாடியும், இன்பச் சுவையினைப் புலப்படுத்தும் ஆடல்களை இயற்றியும் அப்பரடிகளை மயக்குதற்குப் பெரிதும் முயன்றார்கள். எனினும் இறைவன் திருவடிகளை மறவாது போற்றும் மெய்யுணர்வுடைய தவச் செல்வராகிய திருநாவுக்கரசர் தம் ஒருமை நிலையிற் சிறிதுந் தவறாது தாம் செய்யும் திருப்பணியில் உறைப்புடையராய் விளங்கினார்.

அடிகளது உறுதிப் பாட்டினையுணர்ந்த அரம்பையர்கள் தங்களாற் செய்யத்தக்கது எதுவுமில்லை எனத் தெரிந்து நாவுக்கரசரை வணங்கிச் சென்றார்கள்.

சிவபெருமான் திருவடியை அணுகுங்காலம் அணித்ததாகச் சிலகாலம் திருப்புகலூரில் தங்கியிருந்தார்.

**'எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ'**

என்று தொடங்கும் திருத்தாண்டகத்தைப் பாடிச் சிவபெருமான் திருவடியைச் சிந்தித்துச் சேவடியின்கீழ் ஆண்ட அரசு மீளாது அமர்ந்தருளினார்.

சிவத்தலங்களில் உழவாரப் பணி செய்து சிவனை நினைந்து உருகி தேவாரப் பதிகங்கள் பாடி காயத்தாலும், வாக்கினாலும் சிவத்தொண்டு புரிந்து பெரும் பேறு பெற்றவர் அப்பர். கைலாசபதியின் கருணைக்குப் பாத்திரமானவர்களால் அற்புதங்கள் நிகழ்த்த முடியும் என்பதற்கு நாவுக்கரசரின் வாழ்க்கை ஒரு சான்றாகும்.

நாவுக்கரசரின் தேவாரத் திருப்பதிகங்களைப் படித்தால் நா இனிக்கும் கேட்டால் செவி இனிக்கும் கற்றால் சிந்தை களிக்கும் - இனிக்கும். அவலங்கள் நிறைந்த மனித வாழ்க்கையில் சகல சுகங்களையும் கொடுக்கக் கூடியது அப்பர் அடிகளின் தேவாரப் பாடல்கள். அதனைப் படித்து அனைவரும் பயன் பெறுவோம்.

# 71. நாவுக்கரசரின் திருத்தொண்டு நெறி

முத்துஇலக்குமி, மதுரை.

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'' என்று வாழ்வியல் 'இருத்தல்' (exist) நிலைப்பாட்டிற்கும், வாழ்வின் இறுதி (end) நிலைப் பாட்டிற்கும் அஞ்சாத திருத்தொண்டர் திருநாவுக்கரசர். இவர் தம் 'இறைத் தொண்டு நெறி' தனித்தன்மை மிக்கது ஆகும்.

**''திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட**
**திருநாவுக்கரசன் தன் அடியார்க்கு அடியேன்''** (பெ.4)

என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகிறார். மேலும் திருநாவுக்கரசரைச் ''சேக்கிழார் 'பெரியார்' பெரியவர் - பெ.4, பாடல் - 424) என்று அழைத்தார்'' என்ற குறிப்பினை ''வாழ்வியற் களஞ்சியம்' (தொகுதி ஒன்று, ப. 358) மூலம் அறிய முடிகிறது.

**திருநாவுக்கரசரின் பிள்ளைத் திருநாமம் 'மருள்நீக்கியார்'**

சமண் சமயம் புகுந்த பொழுது 'தருமசேனர்' ஆனார். 'மடுத்தாள்' கொள்ளப்பட்ட பொழுது 'திருநாவுக்கரசர்' என்ற வாழ்த்தினைப் பெற்றார். சிவம் பெருக்கும் ஞானசம்பந்தப் பெருமானால் 'அப்பர்' என்ற உயர்வினை அடைந்தார். தண்டமிழ்த் தமிழ்ப் புலமையால் - சொன் மாலையால், 'தாண்டக வேந்தர்' என்ற புரவலன் ஆனார். மேலும் 'வாகீசர்' 'ஆளுடைய அரசு' என்ற சிறப்புப் பெயர்களையும் பெற்றார். அறுபத்து மூன்று நாயன்மார்களில் இவ்வாறு 'ஒருவர்' பல 'திருப்பெயர்'களைப் பெற்ற பெருமைக்குரியவர் திருநாவுக்கரசர் ஒருவர் தாம் என்பது குறிக்கத்தக்கச் செய்தியாகும்.

'சிவன்' என்னும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானை அடியவர்கள் அனைவரும் ஒரு நாளும் தளர்வறியா உள்ளத்தோடு - உள்ளக் கோயிலில் இருத்தித் தங்களது தமிழ்ப்பாட்டால் பாடிப்பாடி வழிபாடு செய்தனர். இதில் வழிபாடு என்பது முதல்நிலை என்றால், 'மக்கள் தொண்டே, மகேசன் தொண்டு' எனக் கொண்டு மக்கட் தொண்டின் வழி இறை வழிபாட்டைக் காணல் என்பது இறை மூலம் மக்களைக் காணல் என்ற மறுபக்க நிலைக்கும் ஏற்புடையது ஆகும். சைவ நாயன்மார்கள் 'இறைவனுள்' மக்கள் நலத்தைக் கண்டார்கள். அம்மக்கட்குத் தொண்டு செய்ய முயன்றார்கள். கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டினராய் உதவி

செய்வதே 'தொண்டு' ஆகும். எனவே வழிபாட்டின் முதிர்நிலை 'தொண்டு' என்பதாகிறது. இதில் 'திருத்தொண்டு' என்பது குறிப்பிடத்தக்கது. இவண் திருநாவுக்கரசரின் 'திருத்தொண்டு', 'கைத்திருத்தொண்டு' என்றும் 'உழவாரத் திருத்தொண்டு' என்றும் சுட்டப்படுகின்றன.

நம்பியாண்டார் நம்பிகளால் தொகுக்கப்பெற்ற பன்னிரு திருமுறை களில் திருநாவுக்கரசர் அருளிச் செய்த திருமுறைகள் 'நான்கு, ஐந்து, ஆறு' என்பவைகளாகும். இவர் பாடியுள்ளத் திருப்பதிகங்கள் 49000 என்றாலும் நமக்குக் கிடைத்துள்ளவை 3064 பாடல்களேயாகும். நான்காம் திருமுறையில் அமைந்துள்ள 113 பதிகங்களின் திருப்பாடல்கள் அனைத்தும் தேவாரத் திருப்பாட்டுக்கள் ஆகும். ஐந்தாம் திருமுறையிலுள்ளத் திருப்பாடல்கள் "குறுந்தொகை" என்னும் யாப்பு முறையில் அமைந்தவை. இது 100 பதிகங்களில் பாடிய திருப்பாடல்களின் தொகுதியாகும். ஆறாம் திருமுறையில் 99 திருப்பதிகங்களில் 'தாண்டகம்' என்னும் யாப்பு முறையில் பாடப்பெற்ற 'திருத்தாண்டகப்' பாடல்களாகும்.

மருள்நீக்கியார் பெற்றோரைத் தம் இளமைக் காலத்தில் இழந்தார். தமக்கையார் திலகவதியாருக்கு மணம் பேசி முடித்த மணாளன் போர்க்களத்தே வீரசுவர்க்கம் புகுந்த காரணத்தால் 'உலக நிலையாமை'யை உணர்ந்தவர் ஆனார். எனவே பல அறங்களைச் செய்தார்.

சேக்கிழார்,

"திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி வாழ"

(பெ.பு.பாடல் - 1)

என்று தொடங்கி,

"காசினிமேற் புகழ் விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசிலறச் சாலைகளுந்த தண்ணீர்ப் பந்தலும் அமைப்பார்"

(மேலது, பா. 35)

"காவளர்த்துங் குளந்தொட்டுங் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன் மகிழ்ந்தளித்தும் விருந்தளித்து
நாவலர்க்கு வளம் பெருக நல்கியு நானிலத்துள்ளோர்
யாவர்க்குந் தவிராத ஈகை வினைத்துறை நின்றார்"

(மேலது, பா. 36)

என்று விளக்கிப் பாடுகின்றார். மேலும் 'நம்பர் அருளாமையால்' கொல்லாமை மறைந்து உறையும் சமண் சமயம் புகுந்தார் என்பதே சேக்கிழார் தரும் தகவலாகும்.

தமக்கையார் திலகவதியார் தம்பியர் உளராக வேண்டும் என்று வைத்தத் 'தயா' அன்பினால் புறச்சமயக் குழியினின்று திருவீரட்டானத்து

இறைவன் விடுவிக்க வேண்டும் என்று நாளும் வழிபாடு செய்து வந்தார். திருவலகிடுதல், பூக்களைத் தொடுத்து இறைவனுக்கு மாலை அணிவித்தல் என்று திருக்கோயிலில் தங்கி இறைத் தொண்டு செய்து வரலானார். தமக்கையருக்காக, இறைவன் தம்பிக்குச் சூலை நோயினை வழங்கி 'மடுத்தாளும்' வகையால் ஆட்கொள்கிறார். ''சிவனடியார்கள் இருவகையினர், சிவனே நேர்நின்று ஆட்கொள்ளப் பெற்றத் திருவினர் ஒருவகை. சிவனடியார்களாக நின்று சிலநலம் துய்த்த அருளாளர்களால் நேர் நின்று ஆட்கொள்ளப் பெற்றத் திருவினர் இன்னொரு வகை" (ப.85) என்று ''திருநாவுக்கரசர் ஓர் ஆய்வு'' என்ற நூல் குறிப்பிடுகிறது. இவண் நாவுக்கரசர் சிவநலம் பெற்றத் தமக்கையாரின் அருளால் - இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர்.

இறையருளும் இறைவனைக் காண வழிகாட்டிய தமக்கையின் பேரருளும் ஒரு சேரத் திருநாவுக்கரசருக்கு வந்து வாய்க்கப் பெற்றக் காரணத்தால் ''கூற்றாயினவாறு விலக்ககலீர்...'' என்ற திருப்பதிகத்தைப் பாடத் தொடங்கினார். மேலும் தொடர்ந்து இறைத் திருத்தலங்கள் தோறும் சென்று சென்று

**இறைவனது தோற்றப் பொலிவையும் -**
**இறைத் தலத்தையும் -**
**இறையனுபவத்தையும் -**
**இறைவனிடம் தனது வேண்டுகோளையும் -**
**வேண்டிப் பெற்றப் பயனையும் -**

எனப் பலவாறு பாடிப் பாடிப் பரவசமானார். இவ்வாறு இறைத் தத்துவார்ந்தக் கருத்துக்களை மக்கள் மனத்தில் எளிதில் சென்று சேருமாறு பண்ணோடு பாடியதோடு மட்டுமல்லாமல், இறைத் தலங்கள் தோறும் கோயிலில் தமது 'உழவாரப் படை' கொண்டு தூய்மைப் பணியைச் செய்பவரானார்.

தமது பாடல்கள் மூலம் மக்களின் மனத்தில் உள்ள அக அழுக்கு களை நீக்குவதற்கு முற்பட்டத் திருநாவுக்கரசர், தமது உழவாரத் தொண்டின் மூலம் புறத் தூய்மைக்கும் வித்திட்டார். இவ்வாறு புறச்சமயங்களின் பிடியில் சிக்குண்டு கிடந்த மக்களை, மன்னனை விடுவிப்பதற்கு முனைப்புடன் செயல்பட்டார். 81 வயது வரை வாழ்ந்த திருநாவுக்கரசர், தமது 45 வயது வரை புறச் சமயத்தில் சிலகாலம் வாழ்ந்தவர் என்றாலும் தாமே 'மதமாற்ற' நிகழ்வுகளை உய்த்து உணர்ந்தவற்றை அனுபூதி நிலையில் எடுத்துரைத்தார். மேலும் உழவாரப் பணியைத் தாமே மேற்கொண்டு செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

**''கையில் திகழும் உழவாரமுடன்**
**கைக்கொண்டு கலந்து கசிந்தனரே''** (பெ.பு.பா. 1347)

என்ற சேக்கிழார் வரியினால் அறியலாம். இவ்வாறு சமயப் புரட்சிக்கும் - சமுதாயப் புரட்சிக்கும் வித்திட்ட 'முன்மாதிரி'ப் (Role-Model) பக்தராகத் திருநாவுக்கரசர் விளங்கினார்.

சமூகம் என்பது "ஒரு நிலப் பகுதியில் நிலையாகக் கூடி வாழும் பெருந்திரளான மக்கள்" என்பதே சமூகவியல் அறிஞர்கள் தரும் செய்தியாகும். (வாழ்வியற் களஞ்சியம், தொகுதி எட்டு, ப. 588) மேலும் இம்மக்களிடையே ஆறு குழுக்கள் உள்ளன என்றும் இவ்வறிஞர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். அவை முறையே,

1. குடும்பக்குழு
2. கல்விக்குழு
3. பொருளாதாரக்குழு
4. அரசியல் குழு
5. சமயக்குழு
6. பொழுதுபோக்குக் குழு

என்பவைகளாகும்.

இவண், சமயக் குழுவைச் சார்ந்த திருநாவுக்கரசர் இதைச் சிந்தனை மிகு மக்களுக்குக் குறிப்பாகத் 'தமிழகம்' என்று இன்று வரன்முறைப் படுத்தப்பட்டுள்ள மக்கட் கூட்டத்தினருக்கு-

1. திருநின்ற செம்மை எம்மான் சிவனின் சிவநலச் சிந்தனைகளை வித்திட வேண்டும்.
2. இறைத் தலங்களைத் தூய்மையாகப் பேணிக் காக்க வேண்டும்.
3. இறையருள் பெற்ற அடியவர்கட்கு அல்லல் வந்திடின் 'இருள் முன் கதிர்போல' நீங்கிட வேண்டும்.
4. சைவநலம் பெற்றுச் சமயப் பற்று மிக்கோராய் நாளும் வளமுடன் வாழ்ந்திட வேண்டும்.
5. புறச்சமயத் தளையினின்று தான் விடுபட்டது போல இத்தளையில் இருப்போர் விடுவிக்கப்பட வேண்டும்.

என்பன போன்றவற்றை நிலைபெறச் செய்திடத் திருத்தொண்டு மூலம் செயலாக்கம் செய்திட்டார்.

> "நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
> தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
> தங்கடன் அடியேனையும் தாங்குதல்
> என் கடன் பணி செய்து கிடப்பதே"

என்ற திருக்கடம்பூர்ப் பதிகத்தால் அவர்தம் தொண்டுள்ளம் புலனாகும்.

நாவுக்கரசப் பெருமானின் உழவாரப் பணிக்கானக் காரணங்களைச் சிந்திக்கும் பொழுது சில கருத்தியல்கள் புலனாகின்றன. முதற்கண், திலகவதியார் திருவீரட்டானப் பதியில் 'திருவலகிடுதல்' என்று திருக்கோயிலின் தூய்மைக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பணியாற்றியுள்ளார். அவர் 'இறைத்தொண்டு' என்று பாடல்களை மட்டும் பாடவில்லை. தம் 'சரியை'யால் தொண்டாற்றினார். இந்நெறியே தம்பியர் வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்தியது என்று கூறலாம். இரண்டாவதாக, நாவுக்கரசப் பெருமான் 'சிலகாலம்' சமண சமயத்தில் ஈடுபாட்டுடன் அச்சமய அறங்களை முற்று உணர்ந்து வல்லவராக விளங்கினார். எனவே சமண சமயச் சான்றோர் அவருக்குத் 'தருமசேனர்' என்ற பெயரினைச் சூட்டினார். அச்சமண சமயத்தின் கண் மூன்று அறங்கள் வலியுறுத்தப்படுகின்றன.

1. நற்காட்சி, 2. நன்ஞானம், 3. நல் ஒழுக்கம்

என்பவைகளாகும். இவை 'மும்மணிகள்' (திரிரத்னம்) எனப்பெறும்.

இதில் 'நல் ஒழுக்கம்' என்பது பிற உயிர்கட்குத் தீங்கு செய்யாமை, உணவை உட்கொள்ளும் முறைமை, கால வழிபாடு போன்றவைகள் உள்ளன. எனவே நாவுக்கரசப் பெருமானுக்கு இந் 'நல் ஒழுக்கம்' எனப்படும் என்பதிலுள்ளப் பிற உயிர்கட்குக் தீங்காது செய்யாது இருக்கும் பொருட்டு மயிற்பீலி கொண்டு இடத்தைத் தூய்மை செய்தல் என்பது மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். எனவே தான் அதே போன்று கையில் ஒரு பொருளை வைத்துக் கொண்டு தூய்மைப் பணியை மேற்கொள்ள முனைந்தார் எனலாம். இதற்கு 'உழவாரப்படை' என்பது துணைக் கருவியாக நின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

இறைவனை ஐம்பெரும் பூதமாகக் கண்டு வழிபாடு செய்யும் நாவுக்கரசர் நீரின் தேவையினால் தண்ணீர்ப் பந்தல் வைத்து மக்கட்கு வழங்கினார். அவரது அடியாரும், அப்பூதி அடிகள் புராணத்தின் மூலம் அறிதற்கு இயலும். இவ்வாறு நாவுக்கரசர் இறைவனுக்குத் தொண்டாற்றுவதில் முழுவீச்சில் மக்கட் தொண்டாகவே மாற்றி ஏற்றுச் செயல்பட்டார்.

**இறைவன்**

நாவுக்கரசப் பெருமானின் உழவாரப் பணியைப் பாராட்டிப் பொன், மணி முதலியவற்றை வழங்கினார் என்பதனைத் திருப்புகலூர்ப் பதிகம் வாயிலாக உணரலாம் என்று 'அபிதான சிந்தாமணி' (ப. 842) என்ற நூல் கூறுகிறது.

"..................................................................
பொய்யாத சேவடிக்கே போது இன்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே". (6 - திருத்தாண்டகம் - 1095)

மேலும் நாவுக்கரசப் பெருமானும், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் தமிழ் ஞானசம்பந்தப் பெருமானும் சமயவுணர்வால் கலந்து உறவு கொண்டு 'அடியேன்' என்றும் 'அப்பரே' என்று அன்புடன் அழைத்தும் சமயத்தை சமய இயக்கமாக மாற்றினார்கள். "பக்தி தனிமனித ஆற்றலாக விளங்கும் நிலையில் இருந்து சமூக ஆற்றலாக இயங்கத் தொடங்கும் பொழுது இயக்கமாகத் தொழிற்படுகின்றது" (ப. 16) என்று 'பக்தி இயக்கங்கள் வழியே சமூகச் சீர்த்திருத்தம்' - 'ஓர் அறிமுகம்' என்ற நூல் குறிப்பிடுகின்றது. இவண் நாவுக்கரசப் பெருமான், ஞானசம்பந்தப் பெருமான் இருவரும் தங்களது பாட்டுத் திறத்தாலும், தொண்டு நெறியாலும் மக்கட் சமூகத்தைச் சமய இயக்கத்தில் இணையும்படிச் செய்தனர். மேலும் இவ்விரு சமயச் சான்றோர்கள் மன்னனையும், சைவ சமயம் தழுவும்படிச் செய்த பெருமைக்குரியவர்கள். 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்வே மன்னன் 'மத-மனமாற்றம்' மூலம் மக்களும் 'மத-மனமாற்றம்' அடையச் செய்தனர்.

இவ்வாறு அடியவர்கள் தம் ஆழங்காற்பட்ட சைவ நலமும் பேறும் படிக்குந்தோறும் பல்வேறு நற்சிந்தனைகளை வழங்கும் வள்ளண்மை மிக்கன. நாவுக்கரசப் பெருமானின் திருத்தொண்டு நெறி அன்றும் - இன்றும் - என்றும் கைக்கொண்டு நடைமுறையில் நிலைத்து நிற்க வேண்டிய பெரு நெறியாகும்.

இவ்வாறு நாவுக்கரசப் பெருமான்,

1. மாண்புமிகு 'மாணி' (பிரம்மச்சாரி) ஆவார்.
2. 'மக்கட் தொண்டே மகேசன் தொண்டு' என்பதோடு -
3. 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற இலக்கினை உடையவர்.
4. புறச் சமயத்திலிருந்து மக்களை மீட்கும் மீட்பர்
5. அடியவர்களின் அல்லல் நீக்கும் அன்பர் -
6. சைவ நெறியே தன் வாழ்வு நெறி எனக் கொண்டு உழவாரப் பணி செய்து வாழ்ந்த திருத்தொண்டு நெறியாளர் ஆவார்.

இத்தகு நாவுக்கரசரின் வாழ்வும் வாக்கும் படித்துப் பயன்பெற அவ்விறைவன் அருள வேண்டும். அவன் அருளால் தான் அவன் தாள் வணங்க முடியும் என்பது தானே அடியவர் தம் கூற்று!

# 72. நாவுக்கரசரின் பக்திச்சிறப்பு

ச. முத்துசாமி, புத்தூர்.

"சைவத்தின் மேற்சமயம் வேறிலை அதில்சார் சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் இல்எனும் நான்மறைச்
செம்பொருள்
வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத்தரச் செய்த நால்வர் பொற்றாள்எம் உயிர்த்துணையே"

சைவ சமயத்தின் ஞானக் கருவூலங்களாகத் திகழ்வன பன்னிரு திருமுறைகள் ஆகும். சிவபெருமான் அருளால் வெளிப்படுத்தப்பட்டவையே சைவத் திருமுறைகள். திருமுறைகளை உள்ளம் உருகக் காதலாகிக் கசிந்து ஓதுபவர்கள் வாழ்வில் எல்லா நலங்களையும் எளிதில் பெறுவர்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்பது தொல்காப்பியம். திருமுறை ஆசிரியர்கள் நிறைமொழி மாந்தர் என்றால் அவர்கள் கண்ட திருமுறைகள் மந்திரங்களே. அந்த வரிசையில் திருநாவுக்கரசு சுவாமிகளின் தேவாரம் 4, 5, 6 திருமுறைகளாக வைத்துப் போற்றப்படுகின்றன. அதில் நாவுக்கரசரின் பக்திச் சிறப்பினை விளக்குவதே இக்கட்டுரை.

**அவதாரம்**

"தெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாமூரில் அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்குகதிர் போற்பின் மலரு மருணீக்கியார் வந்து அவதாரஞ் செய்தார்" என்று சேக்கிழார் திருநாவுக்கரசரின் அவதாரச் சிறப்பை விளக்குகிறார். புறச்சமயம் சார்ந்திருந்த மருள்நீக்கியாரை, சூலைதந்து ஆட்கொண்டு, நாவரசர் எனப் பெயர் சூட்டினான் இறைவன். கூற்றாயினவாறு விலக்ககலீர் எனத் தொடங்கிப் பதிகம் பாடி தமது தொண்டினைத் தொடங்கினார் அவர்.

**தாசமார்க்கம்**

பக்தியை வளர்க்கும் சாதனங்களுள் எல்லாம் மிகச் சிறந்தது இறைவனது நாமத்தைச் சொல்லுதலும் திருமந்திரத்தை ஓதுதலும் ஆகும். பெறுவதற்கரிய பெரும்பேற்றைப் பக்தி நெறியால் அடையலாம். இறைவனுக்குத்

தொண்டு செய்வதை அன்போடும் மன உறுதியோடும் செய்வதே பக்திநெறி எனப்படும். பக்தி நெறியில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகள் முறையே தாசமார்க்கம், சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனப்படும்.

இறைவனை ஆண்டானாகவும் நம்மை அடிமையாகவும் கருதி வழிபடுவது தாசமார்க்கமாகும். இதை உலகிற்கு எடுத்துக் காட்டியவர் திருநாவுக்கரசர். சிவபெருமானது கோயிலை அலகிடல், திருமெழுக்கிடல், வழிபாட்டுக்காகப் பூக்கொய்தல், பூமாலை கட்டுதல், புகழ்ந்து பாடல், திருவிளக்கிடல், திருநந்தவனம் அமைத்தல் முதலிய தொண்டுகளை அன்போடு செய்தல் தாசமார்க்கத்தில் அடங்கும்.

வாழ்க்கையில் ஒவ்வொரு படியையும் கடந்த பின்னரே மேல் நிலைக்குச் செல்லமுடியும். அதுபோன்றே சமயத் துறையிலும் படிகள் உண்டு. ஊனில் அரும்பி உணர்வு நிலையில் சாய்ந்து உயிரில் கலந்து நிற்கும் சமயமானது படிப்படியாக அமைக்கப்பட்ட ஒன்று. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கும் சமயப்படிகளாகும் என்கிறார். சரியை முதலிய மூன்றும் ஞானத்தின் வளர்ச்சி நிலைகள் எனும் உண்மையைத் தாயுமானவர் ''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும் அரும்பு மலர், காய்கனி போல் அன்றோ பராபரமே'' என்று கூறுவதால் அறியலாம்.

திருநாவுக்கரசர் கைத்திருத்தொண்டு புரியும் உழவாரப் படையும் சிவபெருமானின் பெருங்கருணைத் திறத்தை விரித்துரைக்கும் நற்சொல்லும் கொண்டு மனம் மெய்மொழிகளால் சிவநெறித் தொண்டு புரியத் தொடங்கினார். அவரது தோற்றப் பொலிவை,

> ''இடையறாப் பேரன்பும் மழைவாரும்
> இணைவிழியும் உழவாரத்திண்
> படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
> திருவடிக்கே பதித்த நெஞ்சும்
> நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
> பெருந்தகைதன் ஞானப்பாடல்
> தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
> பொலிவழகும் துதித்து வாழ்வாம்''

என்று சிவஞான சுவாமிகள் பாடிப் பரவுகிறார்.



**அஞ்செழுத்தின் ஆற்றல்**

பல்லவ மன்னனால் துன்புறுத்தப்பட்டபோது திருவைந்தெழுத்தின் சிறப்பைக் கூறும் நமச்சிவாயப் பதிகம் பாடி அருளினார். கல்லிலே கட்டிக் கடலில் போட்டபோது,

''சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடிப் பொருந்தக் கைதொழ
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே.''

எனத் தொடங்கிப் பதிகம் பாடினார். கருங்கல் கடலில் மிதந்தது. கட்டப் பட்டிருந்த கயிறு அறுந்தது. கடலில் கல் தெப்பமாக அமைய அதன்மேல் நாவரசர் அமர்ந்து வெளியேறினார். "நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே", ''நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே'', ''நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே அதை ஏத்தவல்லார்க்கு இடுக்கண் இல்லையே'' என அஞ்செழுத்தின் பெருமையைப் பாடுகிறார்.

தமக்குப் பகைவர் அளித்த நஞ்சினையும் பாற்சோறாக மாற்றிய கருணையாளன் சிவபெருமான். அவனின் நாமமாகிய அஞ்செழுத்தை மறவாமல் நாள்தோறும் ஓதி உய்வு பெறுமாறு மக்களுக்கு உணர்த்தும் அவர் பாடல்,

''துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத்தோதி நாளும் அரனடிக்கு அன்பதாகும்
வஞ்சனைப் பாற்சோறாக்கி வழுக்கிலா அமணர் தந்த
நஞ்சமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே''

திருநீறு அணியும்போது இத்திருவைந்தெழுத்தை ஓதி அணிய வேண்டும். அதனால் வினை அகலும். பிறவி நோயும் நெருப்பில் இட்ட விறகுபோல் அழிந்துபோகும் என்பதை,

''மந்திர நமச்சிவாய ஆக நீறு அணியப்பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டுஅன்றே''

என்னும் அவரது வாக்கால் அறியலாம்.

மெய்யறிவு விளங்கப் பெறாமல் உலகப் பற்றில் மயங்குகின்ற மனமே, 'சிவபெருமான் நாம் உய்யும்பொருட்டு நிலையான சொத்து ஒன்றை நமக்கு வைத்திருக்கிறான். அதுவே திருவைந்தெழுத்து ஆகிய சிவாயநம என்பதாகும். அந்த அஞ்செழுத்தை நெஞ்சத்தழுத்தி அதன் சொற்பொருளை எண்ணியபடி இருக்க வேண்டும் என்பதை,

''வைத்த பொருள் நமக்கு ஆகும்என்று சொல்லி மனத்து அடைத்துச்
சித்தம் ஒடுக்கிச் சிவாயநம என்றுஇருக்கின் அல்லால்
மொய்த்த கதிர் மதிபோல் வார்அவர் பாதிரிப்புலியூர்
அத்தன் அருள் பெறலாமோ அறிவிலாப் பேதை நெஞ்சே''

(4-94-5)

என்கிறார்.

## திருக்கோயில் வழிபாடு

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம், ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பது முதுமொழி. இதையே "திருக்கோயில் இல்லாத திருவிலூரும், திருவெண்ணீறணியாத திருவிலூரும் பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும், பாங்கினோடு பல துளிகள் இல்லாவூரும், விருப்போடு வெண்சங்கம் ஊதாவூரும், விதானமும் வெண்கொடியும் இல்லாவூரும், அரும்போடு மலர் பறித்திட்டுண்ணாவூரும் ஊரல்ல அவையெல்லாம் அடவிகாடே" என்கிறார். கோயில் வழிபாட்டுத் தொண்டுகளாக நெஞ்சத்தை அழைத்துக் கூறும் அவருடைய இந்தப் பாடல் சரியை நெறியை விளக்குவதாக அமைந்துள்ளது.

"நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன் முன்அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துமாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிக்
சங்கராசய போற்றி போற்றியென்னும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதியென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"

## உண்மையான வழிபாடும் அகவழிபாடும்

நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகுவார் உள்ளத்தில் இறைவன் புகுந்து நிற்பான். ஆனால் உருகுபவர்போல் நடிப்பவர்கள் செய்யும் வழிபாட்டினைக் கண்டு அவன் கூச்சப்படுவதோடு ஏளனமாகப் புன்னகையும் செய்வான். எனவே உள்ளன்போடு உண்மையான வழிபாடு செய்யவேண்டும்.

வெற்றுச் சடங்குகளும் ஆடம்பரங்களும் தேவையில்லை. வாயினால் பாடி மனத்தினால் நினைத்துச் செய்யும் வழிபாடுதான் உண்மையான வழிபாடு என்பதை,

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்
பொக்கம் மிக்கவர்பூவும் நீரும் கண்டு
நக்குநிற்பன் அவர்தம்மை நாணியே" (5-90-9)

என்று பாடுகிறார். மேலும் இறைவனை வணங்குவதற்குரிய எளிய அக வழிபாட்டையும் அவர் கூறுகிறார்.

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறைய நீர்அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே"

என்று அகப்பூசனை வழிபாட்டினைப் பற்றி அவர் பாடிய பாடல் இது.

**சரியைத் தொண்டின் பயன் - வீடுபேறு**

திருக்கோயிலைத் திருவலகு கொண்டு சுத்தம் செய்தவர் பெற்ற இன்பத்தின் அளவில் பத்துமடங்கு மெழுகினவர்க்கு வாய்க்கும், மலர்கள் தொடுத்து மாலையாக்கி இறைவனுக்கு அணிவித்தால் சிவலோகம் செல்லலாம். கோயிலில் திருவிளக்கு இட்டவர் பெறும் பேறு சொல்லில் அடங்காத நிலையான தவம் ஆகும். இறைவனை சொன்மாலைகளால் அர்ச்சனை செய்வார்க்கு அளவிலாத அருளை அவன் வாரி வழங்குவான். இவ்வாறு திருக்கோயிலுக்கு அலகு இடுதல், மெழுகு இடுதல், மலர் தொடுத்தல், விளக்கிடுதல், திருமுறை பாடுதல் முதலிய சரியைத் தொண்டுகள் செய்பவர்கள் வீடுபேற்றினை அடைவார்கள். இதோ பாடல்.

> ''விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றி ஆகும்
> விளக்கின் நல்மலர் தொடுத்தால் தூயவிண் ஏறல்ஆகும்
> விளக்கு இட்டார்பேறு சொல்லின் மெய்ஞ்நெறி ஞானம்ஆகும்
> அளப்பு இலகீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே''
> (4-77-3)

**சிவகதி பெறல்**

உழவன் தன்னுடைய நிலத்தை உழுது பண்படுத்தி விதைத்து களை எடுத்து நீர்பாய்ச்சி எப்படிப் பயிரை வளர்ப்பானோ அதுபோல மனம், மொழி, மெய்களால் செயல்களைப் பயின்று உள்ளத்தைப் பண்படுத்த வேண்டும். அப்படிச் செய்தால் மலவாசனையை நீக்கிய ஆன்மா, உடலுக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துச் சிவமாம் தன்மையை வளர்த்துவரும் என்பதாக,

> ''மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பு எனும் வித்தை வித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறை எனும் நீர் பாய்ச்சித்
> தம்மையும் நோக்கிக் கண்டு தகவு எனும் வேலிஇட்டுச்
> செம்மையுள் நிற்பர் ஆகில் சிவகதி விளையும் அன்றே''

என்கிறார். தமக்குச் சிவகதி தரும்படி· ''தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே'' என்று வேண்டுகிறார்.

**பிறவாநெறியாகிய முத்திப்பேறு அடைதல்**

ஒரு நாளைக்கு ஒரு வேளையாவது சிவபெருமானின் திருவைந் தெழுத்தை ஓதுதல், அவனுடைய புகழைப் பேசுதல், சிவாலயத்தை வலம் வந்து வணங்குதல், காலையில் உண்பதற்குமுன் மலர்சாத்தி வழிபடல், நோய் நீக்கும் திருவெண்ணீற்றினை அணிதல் ஆகிய இந்த ஐந்து செயல்களையும் செய்யாதவர்கள் இறைவனது திருவருளை இழந்து நோய்களால் துன்பப்பட்டு பிறப்பதற்கே தொழிலாகி இறப்பார்கள்.

ஆகையால் முக்திப்பேற்றை அடைய சிவாயநம எனச் சிந்தித்து வழிபட வேண்டும் என்பதை உணர்த்தும் பாடல்

''திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்
தீவண்ணர் திறம் ஒருகால் பேசாராகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழாராகில்
உண்பதன் முன்மலர் பறித்திட்டுண்ணாராகில்
அருநோய்கள் கெட வெண்ணீறணியாராகில்
அளியற்றார் பிறந்தவாறேதோ வெண்ணில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே'' (6-95-6)

இறைவனுக்குத் தொண்டு செய்வதே தமது குறிக்கோள் என வாழ்ந்தவர் நாவரசர். கேடும் ஆக்கமும் கெட்ட திருவினராய் ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்கிய திருத்தொண்டர் அவர்.

''நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே''

என்ற அவரது வாக்கிற்கு இணங்க இறைவனுக்குத் தொண்டு செய்து வாழ்வோம்.

# 73. திருநாவுக்கரசரும் ரபீந்திரநாத் டாகூரும்

சி. முத்தையா, சாந்திநிகேதன்.

## அப்பரும் டாகுரும் - ஒரு பொதுப்பார்வை

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்திப் பாடல்களுக்குத் தனியானதோர் இடமுண்டு. இவற்றுள் திருநாவுக்கரசரின் பாடல்களுக்குச் சிறப்பானதோர் இடமுண்டு. இதேபோன்று வங்க இலக்கிய வரலாற்றில் பக்திப் பாடல் களுக்குத் தனியானதோர் இடமுண்டு. இவற்றுள் ரபீந்திரநாத் டாகுரின் பாடல்களுக்குச் சிறப்பானதோர் இடமுண்டு. அப்பர் தமிழைத் தாய்மொழி யாகக் கொண்டிருக்க, டாகுர் வங்க மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர். சோழவள நாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் இடைப்பட்ட நடுநாடு, திருமுனைப்பாடியாகும். அங்குள்ள திருவாமூர் என்னும் ஊரில் புகழனார் - மாதினியார் என்னும் தம்பதியர் இருவருக்கும் முதல் குழந்தையாகத் திலகவதியார் பிறந்தார். அவருக்கு அடுத்துத் தோன்றியவர் மருணீக்கியாராவார். மேற்கு வங்காளத்தில் கல்கத்தா மாநகரில் ஜோர சங்கோ என்னும் இடத்தில் மகரிஷி தேவேந்திரநாத் - சாரதாதேவி என்னும் தம்பதியர் இருவருக்கும் பதினைந்து குழந்தைகள் பிறந்தன. முதலில் பெண் ஒன்று பிறந்து இறந்தது. மொத்தம் ஏழு அண்ணன்களும், ஆறு தமக்கை களும், ஒரு இளவலும் டாகுரோடு கூடப்பிறந்தவர்கள். பிறந்த குழந்தை களில் பதினான்காம் குழந்தையாகவும் எட்டாம் மகனாகவும் டாகுர் பிறந்தார். அப்பர் வேளாளர் குலத்தில் தோன்றினார். டாகுர் அந்தணர் குலத்தில் பிறந்தார். அப்பர் தம் எண்பத்தொன்றாம் அகவையில் சித்திரை மாதம் சதயத் திருநாளில் திருப்புகலூரில் சிவபதம் பெற்றார். 07.05.1861-இல் டாகுர் பிறந்தார். 07.08.1941-இல் மறைந்தார். இருவரும் நிறைவாழ்வு வாழ்ந்தவர்கள்.

தமிழகத்தில் ஆட்சி செய்து கொண்டிருந்த முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் மற்றும் அவனது மகன் முதலாம் நரசிம்மவர்ம பல்லவன் காலத்தில் வாழ்ந்தவர் அப்பர் என்பர். இவரது காலத்தைத் தமிழறிஞர்கள் கி.பி. 570 முதல் கி.பி. 650 வரையிலாகக் கொள்வர். இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் வாழ்ந்தவர் டாகுர். அப்பரின் தேவாரத்தில் அவருடைய வாழ்க்கைக் குறிப்புக்கள் சில உள்ளன. நம்பியாண்டார் நம்பியின் நூற்களாகிய திருவந்தாதியும் திருவேகாதச மாலையும் அப்பரின் வாழ்வு பற்றிச் சில குறிப்புக்கள் தருகின்றன. ஆனால்

பெரியபுராணமே அப்பரின் வாழ்க்கையைப் பற்றி ஓரளவு விரிவாக அறிவதற்கு வாய்ப்பளிக்கிறது. விரிவான விளக்கமான அளவில் அப்பரின் வரலாறு அறியுமாறில்லை. டாகுர் 'செலேர் பேலா' என்ற தலைப்பில் (இளமைக் காலம்) நகைச்சுவையும் வேடிக்கையும் கலந்த ஒரு நூலே எழுதியுள்ளார். அவர்தம் படைப்புக்கள் பலவற்றிலும் வாழ்க்கை நிகழ்ச்சி களைக் குறிப்பிட்டிருக்கிறார். அதுமட்டுமல்ல அவர் வரலாற்றை விரிவாகவும் பலர் எழுதியுள்ளனர். அவர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நாள், திங்கள், ஆண்டு என்ற கணக்கில் ஒவ்வொன்றாகத் தொகுத்து எழுதிக் கொண்டும் வருகின்றனர். இந்த வகையில் டாகுரின் வாழ்க்கை வரலாறு மிகத் தெளிவாக அறியக்கூடிய வகையில் விரிவாகவும் விளக்கமாகவும் நூல்கள் அமைந்து காணப்படுகின்றன.

திருநாவுக்கரசரின் இயற்பெயர் மருள்நீக்கியார் என்பது. அவர் சமண சமயம் சார்ந்து கற்றுத்துறை போயதால் தருமசேனர் என அழைக்கப் பட்டார். பின் சூலை நோய் நீங்கப்பெற்று, பாடல் பாடியபோது இறைவனால் திருநாவுக்கரசர் என அழைக்கப்பெற்ற பெருமைக்குரியவர். திருஞான சம்பந்தரால் அப்பர் என்று அழைக்கப்பட்டார். தாண்டகம் என்னும் யாப்பினை மிகுதியும் பயன்படுத்திப் பாடல்கள் புனைந்ததால் தாண்டக வேந்தர், தாண்டகச் சதுரர் என்று கூறிச் சிறப்பிக்கப்பட்டார். ஆளுடைய அரசர், வாகீசர், சொற்குறுதிக்கு அப்பர்; உழவாரப் படையாளி என்றும் அழைக்கப்பட்டார். ரபீந்திரநாத் டாகுர் என்பது இயற்பெயராகும். ரபீ என்றும் அழைக்கப்பட்டவர். காந்தியடிகளால் குருதேவ் என்று அழைக்கப் பட்டவர். குருதேவர் என்ற பெயர்தான் இப்போது சாந்திநிகேதனில் பெரிதும் பிரபலமாக உள்ளது.

இருவரும் கருவிலே திருவுடையவர்களாக விளங்கினார்கள்.

இருவரும் கவிதைகள் இயற்றும் ஆற்றல் பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள்.

இருவரும் இனிய இலக்கியங்கள் படைத்தனர்.

இருவரும் இறைவனை ஏற்றிப் போற்றுவதில் ஓரணியில் நின்றவர்கள்.

இருவரும் அழகை ஆராதித்தவர்கள். அந்த அழகிலும் - இயற்கை அழகிலும் இறைவனைக் கண்டு ஏற்றிப் போற்றியவர்கள்.

இருவரும் நாயகன் நாயகி பாவத்தைத் தம் பாடல்களில் புனைந்தவர்கள்.

இருவர்தம் படைப்புக்களுக்கும் எழுதப்பெற்ற உரைகள் - விமர்சனங்கள் ஏராளம்.

இருவரும் சாதி வேறுபாடுகளைச் சாடியவர்கள்.

இருவரும் போலிச் சடங்குகளை அறவே வெறுத்தவர்கள்.

இருவரும் தாய்மொழிப் பற்றில் திளைத்தவர்கள். அதே வேளையில் இருவரும் தாய்மொழி வெறியர்களாக இருந்ததில்லை.

இருவரும் சமயப் பொதுமை கண்டவர்களாகவே காணப்படுகிறார்கள்.

இருவரும் தம் காலத்துச் சமுதாயத்தைத் தம் படைப்புக்களில் பிரதிபலித்துக் காட்டினர்.

இருவர் பாடல்களிலும் பக்தியின் உருக்கம் மிகுந்துள்ளது; பணிவும் குழைவுமே மிகுதி.

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்ற கருத்தில் இருவரும் ஒன்றுபட்டவர்கள்.

மனத்தில் தூய பக்தியின்றிப் புறத்தே நடிப்பதால் எவ்விதப் பயனும் இல்லை என்று இருவரும் ஒரே கருத்தில் கூறியவர்கள்.

உலக இன்பங்களை நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்தலாம் என்ற உண்மையை இருவர்தம் பாடல்களும் எடுத்துரைக்கின்றன.

அடியார்களிலேயே அதிக யாத்திரை மேற்கொண்டவர் என்னும் பெருமையும், தனிச்சிறப்பும் அப்பருக்கு உண்டு. போக்குவரத்து வசதியற்ற அக்காலத்திலேயே தமிழகத்துக்கு அப்பாலும் - குமரி முதல் இமயம் வரை தொடர் யாத்திரை மேற்கொண்டவர். இந்திய நாடு மட்டுமின்றி கிட்டத்தட்ட பதின்மூன்று முறைகள் வெளிநாடுகளுக்கும் சென்று வந்தவர் டாகுர்.

இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு அன்றே வித்திட்டவர் அப்பர். இந்திய நாடு மட்டுமின்றி உலகத்தின் ஒருமைப்பாட்டுக்கே வித்திட்டவர் டாகுர்.

திருமணமாகாதவர் அப்பர். முற்றும் துறந்த துறவியாக வாழ்ந்தவர் அப்பர். எனினும் இல்லறத்தை வெறுத்தவர் அல்லர். டாகுர் திருமணமானவர். தனது 22-வது வயதில் மிருணாளினி தேவியாரை (09.12.1883) மணந்துகொண்டவர். துறவி அல்லர். முதுமைக் காலத்தில் துறவிபோல உருவத்தில் காணப்பட்டவர்.

நாவுக்கரசர் பிறந்தது சைவக்குடி. அதை விட்டுவிட்டு சமணத்தில் சேர்ந்ததுவே அக்காலத்தில் முற்போக்குச் செயலாகும். இதே போன்று டாகுர் பிறந்தது அந்தணர் குலம். அதை (இந்து மதத்தை) விட்டுவிட்டு பிரம்மசமாஜத்தில் சேர்ந்ததுவே அக்காலத்தில் முற்போக்குச் செயலாகும்.

ஒவ்வொரு நாயன்மாரும் தமிழ்ச் சைவத்திற்குத் தங்களுடைய முக்கியமான பங்கை அளித்திருக்கிறார்கள். என்றாலும் நாவுக்கரசர் தமிழ்ச் சைவத்தை உருவாக்கவும், வளர்க்கவும், மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெறவும் செய்த பணிகள் எவ்வகையிலும் ஒப்புமை கூற முடியாத அளவுக்குச் சிறப்பானவை. இதே போன்று பிரம்மசமாஜ் சமயத்திற்கு டாகுரின் பாட்டனாரான துவாரகநாத் டாகுரும், தந்தையான மகரிஷி தேவேந்திரநாத் டாகுரும் முக்கிய பங்கை அளித்திருக்கிறார்கள். என்றாலும் டாகுர் பிரம்மசமாஜ் சமயத்தை மேலும் உருவாக்கவும், வளர்க்கவும், மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெறவும் செய்த பணிகள் எவ்வகையிலும் ஒப்புமை கூற முடியாத அளவுக்குச் சிறப்பானவை.

தமிழ் இலக்கிய உலகிலும், சைவ மறுமலர்ச்சி வரலாற்றிலும் மிகப் பெரிய திருப்பு முனையை உருவாக்கியவர் அப்பர். வங்க இலக்கிய உலகிலும், பிரம்மசமாஜ் மறுமலர்ச்சி வரலாற்றிலும் மிகப் பெரிய திருப்பு முனையை உருவாக்கியவர் டாகுர்.

சுந்தரர், நம்பியாண்டார் நம்பி, சிவப்பிரகாச சுவாமிகள், வள்ளலார், ராம. சொ. சொக்கலிங்கம் ஆகியோர் நாவுக்கரசரைப் போற்றிச் சிறப்பித் துள்ளனர். இதே போன்று உலகத்தின் மூலை முடுக்கெல்லாம் வாழ்ந்த - வாழ்கின்ற அறிஞர் பெருமக்கள் டாகுரைப் புகழ்ந்து உரைக்கின்றனர்.

வாக்கின் மன்னராம் அப்பர் பெருமான் தலங்கள் தோறும் யாத்திரையாக நடந்து சென்று பாடிய பதிகங்கள் 4900 என்பர். இன்று நமக்குக் கிடைப்பன 312 பதிகங்களேயாம். 4-ஆம் திருமுறையில் 113 பதிகங்களையுடைய திருநேரிசை, திருவிருத்தங்களால் ஆகிய 1070 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 5-ஆம் திருமுறையில் 100 பதிகங்களைக் கொண்ட 1015 குறுந்தொகைப் பாடல்கள் அடங்கியுள்ளன. 6-ஆம் திருமுறையில் 99 பதிகங்களில் 981 திருத்தாண்டகப் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. நாவுக்கரசர் கவிதைகளை மட்டும் படைத்தார். ஆயின் டாகுரோ கவிதைகள் மட்டு மின்றி சிறுகதைகள், புதினங்கள், நாடகங்கள், உரைநடைகள், தத்துவக் கட்டுரைகள், வரலாற்றுக் கட்டுரைகள், பயண இலக்கியங்கள், கடித இலக்கியங்கள், திறனாய்வுக் கட்டுரைகள், சமயக் கட்டுரைகள், நகைச்சுவைச் செய்திகள், சமுதாயச் சிந்தனை பற்றிய கட்டுரைகள் ஆகிய பல துறைகளிலும் தன் முத்திரையைப் பதித்தார். இது போதாதென்று தன் 70-வது வயதில் முழுக்கவனத்தையும் செலவிட்டு ஓவியரும் ஆனார். அதிலும் தனிப்பாணி ஏற்படுத்திக்கொண்டு புகழ் பெற்றார். சுமார் 3000 சித்திரங்களைத் தீட்டியிருக்கிறார். அவரது நீண்ட கால வாழ்வில் 70000 பக்கங்களுக்கு மேல் எழுதிக் குவித்திருக்கிறார். இனிய இசைப் பாடல்கள் 2500-க்கு மேல் இசைத்திருக்கிறார். பத்திரிகை ஆசிரியராகவும், நாடக ஆசிரியராகவும், நாடக நடிகராகவும் விளங்கியிருக்கிறார். பல துறைகளிலும்

வல்லவராக இருந்திருக்கிறார். இவ்விதம் பல்கலைச் செல்வராக விளங்கிய பிற கவிஞர்கள் உலகில் மிகச் சிலரே இருப்பர்.

வடமொழியும் அறிந்தவர் அப்பர். ஆயின் அவர் அம்மொழியைப் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. தமிழிலேயேதான் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார். டாகுரோ தாய்மொழி வங்க மொழி தவிர வடமொழி, ஆங்கில மொழிகளிலும் வல்லவராகத் திகழ்ந்தார். அதனால் அவரால் மொழியாக்கம் செய்ய முடிந்தது. உலகப் புகழ் பெற்ற நோபல் பரிசும் பெற முடிந்தது.

வாகீசர் தம் பாடல்களில் 17 வகையான பண்களை அமைத்துப் பாடியிருக்கிறார். 1. கொல்லி, 2. காந்தாரம், 3. பியந்தைக் காந்தாரம், 4. சாதாரி, 5. காந்தார பஞ்சமம், 6. பழம் பஞ்சுரம், 7. பழம் தக்கராகம், 8. இந்தளம், 9. சீகாமரம், 10. குறிஞ்சி, 11. திருநேரிசை, 12. கொப்புளித்த திருநேரிசை, 13. திருவிருத்தம், 14. திருக்குறுந்தொகை, 15. பெரிய திருத்தாண்டகம், 16. திருநெடுந்தாண்டகம், 17. திருக்குறுந்தொகை என்பன அப்பண்களாகும். இவ்வகையில் புதிய பண் அமைப்பில் பாடியிருக்கிறார். சிறப்பாகத் தாண்டக அமைப்பிலும் பாடியதால் தாண்டக வேந்தர் எனச் சிறப்பிக்கப்பட்டவர். இதே போன்று டாகுரால் இயற்றப்பட்ட பாடல்கள் அவராலேயே பண் அமைக்கப்பட்டு அப்பாடல்கள் எப்பொழுதும் அப்பண்களிலேயே பாடப்பட வேண்டும் என்ற நியதியோடு உருவாக்கப் பட்டுள்ளன. இதனை 'ரபீந்திர சங்கீத்' என்பர். டாகுரால் இயற்றப்பட்ட பாடல்களின் சொற்களையோ பண்களையோ மாற்றுவது கூடாது என்ற நிலையிலேயே இன்றும் பேணப்பட்டு வருகின்றன.

வாழ்க்கை முழுவதும் துன்பப்பட்டவர் அப்பர். டாகுர் செல்வச் செழிப்பில் வாழ்ந்தவர்.

நீற்றறையில் இருந்தமை, நஞ்சு உணவினை உண்டமை, கொல்யானை கொல்லாது சென்றமை, திருவடி சூட்டப்பெற்றமை, சூலக்குறி குறிக்கப் பெற்றமை, விடத்தினால் இறந்த அப்பூதி அடிகளின் மகனை உயிர்ப்பித்தமை, வாசி தீர காசு நல்கப் பெற்றமை, மறைக்காட்டில் கதவம் திறக்கப் பெற்றமை, பழையாறையில் இறைவன் காட்சி பெற்றமை, திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறு பெற்றமை, அந்தணனாக இறைவன் வந்தமை, திருவையாற்றில் கயிலைக் காட்சி காணப் பெற்றமை ஆகிய அற்புத நிகழ்ச்சிகள் அப்பர் வாழ்வில் நிகழ்ந்தன. டாகுரின் வாழ்வில் இவ்வித விநோத நிகழ்ச்சிகள் ஏதும் நிகழவே இல்லை.

சமண சமயத்தைச் சார்ந்து இருந்த பொழுது - சூலை நோய் ஏற்பட்டுத் தவித்துபோது அப்பரால் பாடப்பட்ட முதல் பதிகம் ''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' என்ற பதிகமாகும். ஓரளவு வயது வந்தவுடன் அப்பர்

இப்பாடலைப் பாடியிருக்கலாம். வயது என்னவாக இருக்கும் என்று கணித்துச் சொல்ல இயலாது. ஆயின் டாகுர் 12-ஆம் வயதிலேயே பாடல் பாடத் தொடங்கினார். 'அபிலாஷை' (விருப்பம்) என்பது இளமையில் அவர் பாடிய பாடல்களில் ஒன்று. அப்பாடலோ, பத்திரிகையில், 1874-இல் "12 ஆண்டே நிறைந்த பையன் பாடிய பாடல்" என்று வெளிவந்தது.

திருநாவுக்கரசர் தமது 81-வது வயதில் திருப்புகலூரில் இருந்த பொழுது "எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ" என்ற பாடலைப் பாடினார். வாழ்வின் இறுதியில் பாடிய பாடல் இது. இப்பாடல் பாடி அப்பர் முக்தி பெற்றார். டாகுர் தமது 80-வது வயதில் கல்கத்தாவில் இருந்தபொழுது "ஏ வஞ்சகக் கள்வர்" என்ற பாடலைப் பாடினார். வாழ்வின் இறுதியில் அவர் பாடிய பாடல் இது. இப்பாடல் பாடி பூதவுடல் நீக்கிப் புகழுடம்பு எய்தினார்.

அப்பரும் டாகுரும் காலத்தாலும், இடத்தாலும், மொழியாலும் வேறுபட்டுக் காணப்படினும், கூறுகின்ற கருத்தால் ஒன்றுபட்டுக் காணப் படுகின்றனர். நாவுக்கரசரின் கருத்து டாகுரின் கருத்தில் எதிரொலிக்கிறது. இரு வேறுபட்ட மொழிகளில் காணப்படும் கருத்து ஒற்றுமையைச் சுட்டிக் காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கம்.

**சமயப் பொதுமை காணல்**

இவ்வுலகில் பல்வேறு சமயங்கள் இருக்கின்றன. மக்கள் பல்வேறு வடிவங்களில் இறைவனை வழிபாடு செய்கின்றனர். சமயங்கள் பலவாக இருந்தாலும் அவற்றின் அடிப்படைப் பண்புகள் அனைத்தும் ஒரே தன்மை உடையனவாக விளங்குகின்றன. யார் எந்த முறையில் எப்படி வழிபட்டாலும் அந்த வழிபாடு ஒரு இறைவனையே போய்ச் சேரும் வழிதான் வேறுவேறு என்பதனை,

"ஒன்றது பேரூர் வழி யாறதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றது தீதிது வென்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை யொத்தார்களே"

என்றுரைப்பார் திருமூலர். எந்தச் சமயத்தின் வழியாகவும், சமய மார்க்கங்களின் மூலமாகவும் இறைவனை அடைய முடியும் என்பதை, "ஒரு குளத்துக்கு நான்கு படித்துறைகள் இருக்கின்றன. இந்துக்கள் ஒரு துறையில் இறங்கி நீரைப் பருகிவிட்டு அதைத் 'தண்ணீர்' என்கின்றனர். முஸ்லீம்கள் இன்னொரு படித்துறையில் இறங்கி நீரைப் பருகிவிட்டுப் 'பாநி' என்கின்றனர். கிறிஸ்துவர்கள் அடுத்த படித்துறையிலிருந்து 'வாட்டர்' என்கின்றனர். மற்றொரு படித்துறையில் இருப்பவன் 'ஆகுவா' என்கிறான்.

தண்ணீர் என்னவோ ஒன்றுதான். அதுபோல இறைவன் ஒருவனே! அவனுக்கு நாமங்கள்தான் பல" என்ற எடுத்துக்காட்டு மூலம் விளக்குகிறார் ராமகிருஷ்ண பரமஹம்சர். இதையே "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று திருமூலர் குறிப்பிடுகிறார். திருமூலர் வழிவந்த அப்பரும் அவர்தம் சிந்தனைகளைச் சிரமேற்கொண்டு முன்னோர் மொழிப் பொருளைப் பொன்னேபோல் போற்றிப் பாடியிருக்கிறார். மக்களிடையே சமயப் பொதுமையை நிலைநாட்ட முனைந்திருக்கிறார்.

கடவுள் ஒருவரேதான். பல கடவுள்கள் இல்லை. தன் வல்லமை யாலேயே உலகைப் படைத்திருக்கிறார். அந்த ஒரே கடவுள்தான் பல உருவில் காட்சி தருகிறார். பல செயல்களைச் செய்து வருகிறார். சிறப்பாகப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் ஆற்றி வருகிறார். இதுதான் கடவுள் தத்துவம் ஆகும். இந்த உண்மையை அறிந்திருப்பதோடு மட்டும் இல்லாமல் இதை நம்புகின்றவர்கள்தாம் உண்மையான கடவுள் அன்பர்கள். அவர்கள் மற்றவர்களை வெறுக்க மாட்டார்கள். கடவுளின் பெயர் வேற்றுமை காரணமாக யாருடனும் சண்டை பிடிக்க மாட்டார்கள். உண்மைப் பக்தர்கள் பிற சமயத்தினர்பால் - பிற மதத்தினர்பால் வெறுப்புக் கொள்ளமாட்டார்கள். இதை விளக்கும் முகத்தான் அப்பர் பல பாடல்களைப் பாடியிருக்கிறார்.

"நாதனாய் உலகம் எல்லாம் நம்பிரான் எனவும் நின்ற
பாதனாம் பரமயோகி பலப்பல திறத்தினாலும்
பேதனாய் தோன்றினானைப் பெருவேளூர் பேணினானை
ஓத நாவுடையன் ஆகி உரைக்குமாறு உரைக்கின்றேனே"

"தலைவனாக, உலகமெல்லாம் எங்கள் தலைவன் என்று சொல்லி வழங்கும் படி நின்ற பாதங்களையுடையவன்; உயர்ந்த யோகியாவான்; பலப் பல துறைகளிலும் நின்று பல்வேறு உருவிலே காணப்படுகின்றவன்; பெருவேளூரை விரும்பி அங்கே கோயில் கொண்டிருப்பவன்; அவனையே எப்பொழுதும் ஓதி வணங்கும் நாவை உடையேன்; அவன் பெருமையை எவ்வாறு சொல்லிப் போற்றவேண்டுமோ அவ்வாறு சொல்லிப் போற்றுகின்றேன்" இதுவே மேலே காட்டிய பாட்டின் பொருள். இதில் இறைவன் ஒருவனே; அவனே எல்லாவிடங்களிலும் இருக்கின்றான்; பல்வேறு உருவில் இருக்கின்றான் என்ற உண்மையைக் காணலாம்.

குறுகிய அறிவுள்ளவர்கள் ஒரு சமயத்திற்கு மாறாக மற்றொரு சமயத்தை உருவாக்கலாம். ஒரு சமயத்தின் மேல் சினம் கொண்டு, தாம் உருவாக்கிய சமயமே உயர்ந்தது என்று கூறலாம். அப்படிக் கூறினாலும் அது எமது தலைவனால் ஒப்புக் கொள்ளக் கூடியதேயாகும். அன்புடன் பெரியோர்களால் போற்றப்படுகின்ற பெருவேளூரை வாழ்விடமாகக் கொண்டவனை நான் அடைந்து அவனையே எப்பொழுதும் வாழ்த்தி ஈடேறும் வழியை எப்பொழுதும் எண்ணுகின்றேன் என்னும் பொருளில்,

"விரிவிலா அறிவினார்கள் வேறு ஒரு சமயம் செய்து
எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றது ஆகும்;
பரிவினால் பெரியோர் ஏத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின்றனே"

என்று அப்பர் பாடியிருக்கிறார். மேலே உள்ள பாடலில் கடவுள் ஒன்றே என்று பாட, இப்பாடலில் எல்லாச் சமயங்களும் ஒன்றே என்று பாடுவதைப் பார்க்கலாம். இந்த இரு பாடல்களையும் அறிந்தவர்கள் இவற்றின் பொருளை உணர்ந்தவர்கள் உம் தெய்வம் எம் தெய்வம் என்று கூறித் தெய்வச் சண்டையில் - சமயச் சண்டையில் ஈடுபட மாட்டார்கள். எல்லாத் தெய்வங்களும் ஒரு கடவுளின் பல்வேறு தோற்றங்களே என்று கருது வார்கள். எல்லாச் சமயங்களும் இறைவனுக்குச் சமமான - சம்மதமான சமயங்களே என்று உணர்வார்கள். இதுவே தமிழர் கண்ட உண்மை நெறியாகும். இந்தச் சமயப் பொதுமையையே அப்பரும் கண்டிருக்கிறார்.

சிவபெருமானை வழிபடு தெய்வமாகக் கொண்டவர் வாகீசர். அவர் சிவபெருமானைக் குறித்து எப்படி நினைக்கிறார் என்பதைப் பற்றி அவருடைய தேவாரப் பாடல்களில் தெளிவாகக் காணலாம். எமது நீலகண்டனாகிய சிவபெருமான் எங்கும் நிறைந்தவன். வானத்திலே இருக்கின்றான்; சிறந்த வேதத்திலே வீற்றிருக்கின்றவன். கடல் சூழ்ந்த இந்த மண்ணுலகிலே எங்கும் இருப்பவன். திருமால் என்று வேறு தெய்வம் போல் சொல்லப்படும் தெய்வத்தினிடமும் இருக்கின்றவனும் அவன்தான். கேட்பதற்கு இனிமையான இசையிலும் இருக்கின்றான். பக்தர்களின் உள்ளத்தை விட்டு விலகாமல் எப்பொழுதும் இருக்கின்றான். நாய்போன்ற அடியேனுடைய கண்களில் எப்பொழுதும் தோன்றிக் கொண்டிருப்பவன். என் உள்ளத்திலும் உறைபவன். என் தலையிலும் தங்கியிருப்பவன் என்னும் பொருளில்,

"விண்ணகத்தான்; மிக்க வேதத்துள்ளான்; விரிநீர் உடுத்த
மண்அகத்தான்; திருமால் அகத்தான்; மருவற்கு இனிய
பண்அகத்தான்; பத்தர் சித்தத்து உள்ளான்; பழநாய் அடியேன்
கண்அகத்தான்; மனத்தான் சென்னியான்; எம் கறைக் கண்டனே"

என்று பாடியிருக்கிறார். தாம் வணங்கும் தெய்வம் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந்திருக்கிறது. எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றது. எல்லாத் தெய்வங்களும் தாம் வணங்கும் தெய்வத்தின் வெவ்வேறு வடிவங்கள்தாம் என்று எண்ணிப் போற்றுவதைப் பார்க்கிறோம். இவரின் பக்தி விரிவானது. பரந்த மனத்தின் பண்பை அடிப்படையாகக் கொண்டதாகும்.

சமயாச்சாரியார்களின் பாடல்களிலே அப்பர் தேவாரத்தில் ஒழுக்க நெறியை மிகுதியாகக் காணலாம். அவர் சில ஆண்டுகள் சமண

மதத்திலே சிறந்ததொரு தலைவராய் இருந்தவர். ஒழுக்க நூல்களை யெல்லாம் நன்றாகக் கற்றவர். பக்தியுடன் நல்லொழுக்கமும் அமைந்திருக்க வேண்டும் என்ற கருத்துள்ளவர். அதனால்தான் அவர் சமண சமயத்தை விட்டு சைவ சமயம் தழுவிய பொழுதும் ஒழுக்கம் சிறந்தது என்ற சமண மதக் கொள்கையை மறவாமல் போற்றுகின்ற தன்மையை அப்பர்தம் பாடல்களில் காண்கின்றோம்.

பல்லவ வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்பட்ட 'சிவகாமியின் சபதத்தில்' வரலாற்று மாந்தரான மருள்நீக்கியார் (கல்கியால்) படைக்கப்பட்டுள்ளார். இவ்வரலாற்றுப் புதினத்தில் சமணரைப் பற்றி வெறுப்புடன் பேசிய குலச்சிறையாரிடத்து அப்பர் பேசும்போது, "சமண மதத்தின் மீது ஒரு காலத்தில் நானும் இப்படிக் கோபம் கொண்டிருந்தேன். ஆனால் இந்தக் காலத்திலே ஒரு சிலர் செய்யும் காரியங்களுக்காகச் சமண சமயத்தின்மேல் துவேஷம் கொள்ளுதல் நியாயமன்று. அன்பையும் ஜீவகாருண்யத்தையும் போதிப்பதற்கு ஏற்பட்ட சமயம் சமண சமயம். நமது செந்தமிழ் நாடு ஆதிகாலத்துச் சமண முனிவர்களால் எவ்வளவோ நன்மைகளை அடைந்திருக்கிறது. சமண முனிவர்கள் தமிழ் மொழியை வளர்த்தார்கள். அரிய காவியங்களைத் தமிழில் புனைந்தார்கள். ஓவியக் கலையை நாடெங்கும் பரப்பினார்கள்" என்று குறிப்பிட்டுச் சொல்கிறார். இவ்வாறு கூறச் செய்தவிடத்து சமண சமயத்தால் நம்நாடு அடைந்த நன்மைகள் என்னவென்று வெளிப்படுத்திக் காட்டப்படுவதோடு நாவுக்கரசின் பக்குவப்பட்ட மனநிலையும், 'மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும்' என்ற நிலையில் பிற சமயத்தையும், சமயத்தாரையும் மறவாது போற்றுகின்ற தன்மையையும் (கல்கியின் வரலாற்றுப் புதினத்தின் வழியும்) காணமுடிகிறது.

வைணவர்களையும், பாசுபதம், மாவிரதம், காபாலிகம் முதலான புறச் சமயத்தார்களையும் சைவ சமயத்தவர்களைப் போலவே கருதிப் போற்றியுள்ளார் அப்பர்.

இவை குறித்து நாவரசர் கூறும் பாடல்களாவன :

"காலதிர் கழல்க ளார்ப்பக் கனலெரி கையில்வீசி
ஞாலமுங் குழிய நின்று நட்டம தாடுகின்ற
மேலவர் முகடு தோய விரிசடை திசைகள் பாய
மாலொரு பாகமாக மகிழ்ந்தநெய்த் தான னாரே"

"வெவ்வேறாய் இருமூன்று சமயமாகிப் புக்கானை
எப்பொருட்கும் பொதுவா னானை"

"ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்'

"அறுவகை சமயம் வைத்தார்"

"சமய மவை ஆறினுக்கும் தலைவன் தான்காண்"

"சமயமே லாறுமாகித் தானொரு சுயம்புவாகி"

"பல்வேறு சமயங்கள் கருதி யானை"

"ஆறு சமயத்தவரை தேற்றுந் தகையன

........................

இன்னம்பரான் தன் இணையடியே"

மேற்காணும் பாடல்களில் இறைவன் அடியார்களின் தன்மை கருதி, பல சமயங்களையும் தோற்றுவித்துத் தானே தலைவன் ஆனான் என்று காட்டுவதைப் பார்க்கலாம். இக்கருத்துக்களின் வழி சர்வ சமய சமரசம் வேண்டும் என்னும் நெறி வெளிப்படுகிறது.

நாவுக்கரசர் சமயப் பொதுமையை நிலைநாட்ட முனைந்ததைப் போல் ரபீந்திரநாத் டாகுரும் சமயப் பொதுமையை நிலைநாட்ட முனைந்திருக்கிறார். டாகுர் கடவுள் ஏற்புக் கொள்கையர் ஆயினும் குறுகிய மனப்பான்மையுடன் கடவுளை வரையறை செய்யவில்லை. எல்லாச் சமயங்களிலும் காணப்படும் கடவுளர் பற்றிய உண்மைகளைத் தேர்ந்து தெளிந்து அனைவரும் ஒப்புக் கொள்ளும் வண்ணம் ஓர் ஒப்புயர்வான-பண்பு வடிவமான - பொதுவான இறைவனையே டாகுர் படைத்துக் காட்டுகிறார். "இறைவா", "பரம்பொருளே", "குருவே", "தெய்வமே", "பிரபுவே", "எம்பெருமானே", "தலைவா", "கடவுளே", "அரசே", "அரசர்க்கரசே", "அண்டங்கள் அனைத்திற்கும் அதிபதியே", "ஒளியே", "என் அன்பே", "கவியரசே", "என் உயிரின் உயிரே", "என் உயிர்க்கு இறைவனே", "மாசற்ற சோதியே" என்பன போன்ற பொதுவான சொற்களையே தம் கவிதையில் - கீதாஞ்சலியில் பயன்படுத்தியிருக்கிறார். எந்த ஒரு கடவுளையும் பெயர் சுட்டிப் பாடாதிருப்பது குறிப்பிடத்தக்கது. "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற சர்வ சமய சமரச நோக்கோடு நோக்கி யுள்ளார் என்பதை அவர்தம் கீதாஞ்சலி வழி அறிய முடிகிறது.

மனித குலத்தின் ஒருமைப்பாட்டைக் காணவேண்டுமானால் சமயத்திற்குள் ஒருமைப்பாட்டைக் காணவேண்டும் என்ற எண்ணம் இருவருக்கும் இருந்திருக்கிறது. அதனால்தான் இருவரும் சமயங்களிடையே ஒற்றுமை காண விரும்பினர் என்பதையும், பரம்பொருள் ஒன்றே என்ற சர்வ சமய சமரச நோக்கோடு நோக்கியுள்ளனர் என்பதையும் இருவர்தம் பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

ராமர் கோயில், பாபர் மசூதி கட்டுவதில் இன்றளவும சமரசம் காணமுடியாத நிலையில், நாட்டில் பதட்ட நிலை ஏற்பட்டுக் கொண்டி

ருக்கின்ற இத்தருணத்தில் இன்றைக்கு மிகவும் தேவையான மத நல்லிணக்கத்தை - மதச் சார்பின்மை என்னும் கோட்பாட்டை அன்றே தெளிவான தொலைநோக்குடன் அப்பரும் டாகுரும் முன் மொழிந் துள்ளனர். இவர்கள் இருவரும் கடைப்பிடித்த 'சமயப் பொதுமை' இந்தியப் பண்பாட்டு மரபுக்கு வழிகாட்டுவதாக அமைந்துள்ளது.

**சாதி வேறுபாடுகளைச் சாடல்**

பல்வேறு காரணங்களால் பிரிந்து பேதமுடன் விளங்கும் சமுதாயத்தை மேலும் பிளவுபடுத்துவது சாதி என்னும் மாயை. இதனால் நமக்கு விளைவது தீமையே. எள்ளளவும் நன்மையில்லை. இதை உணர்ந்த அப்பர் இன்றளவும் நம்மால் காணமுடியாத சாதிபேதமற்ற சமுதாயத்தை அன்றே காண விழைந்தார். செய்கின்ற தொழில்களினால் பாகுபாடு உண்டே தவிர, பிறப்பினால் வரும் உயர்வு தாழ்வு வேறுபாட்டை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்றும், சாதியின் பெயரால் மனிதர்களை இழிவுபடுத்தக் கூடாது என்றும் கூறிச் சாதிவேறுபாட்டைக் கடுமையாகச் சாடுகிறார் அப்பர். "சாத்திரங்கள் பலவற்றைப் படித்துவிட்டு அவற்றைப் பற்றி வாயால் மட்டும் பேசிக் கொண்டிருக்கும் சழக்கர்களே! அறிவற்றவர்களே! கீழ்த்தர மானவர்களே! நீங்கள் சிறந்த கோத்திரத்திலே வந்தவர்களாக இருக்கலாம்; உங்கள் குலம் உயர்ந்ததாக இருக்கலாம். இந்தக் கோத்திரப் பெருமையும் குல உயர்வும் உங்களுக்கு என்ன பயனைத் தரும்? ஒரு பயனையும் தரமாட்டா" என்னும் பொருளில்,

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்?"

என்று கேட்கிறார். கோத்திரம், குலம் என்பவை மனிதனை வேறுபடுத்து பவை, சாத்திரத்தின் துணையுடன் இவற்றைப் பொருளாக மதித்து மனிதனை இழிவுபடுத்துபவரைச் 'சழக்கர்' என்னும் சொல்லால் அப்பர் சாடுகிறார். மேலும் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர் எனவும் வினவுகின்றார். இன்றைய 20-ஆம் நூற்றாண்டில் பேசப்படும் இவ்வுயர் சிந்தனை 7-ஆம் நூற்றாண்டிலேயே அப்பரால் வலியுறுத்தப் பட்டிருக்கின்றது.

சாதி வேறுபாட்டை மறுக்கும் அப்பர் பெருமான் தம் தேவாரப் பனுவல் ஒன்றில்,

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியோடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்லராகில்
அங்கமெல்லாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்

கங்கை வார்ச்சடை கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே''

என்கிறார். சமுதாயத்தில் இறந்த விலங்குகளின் தோலை உரிக்கும் தொழில் செய்த பிரிவினர் புலையர் என்று குறிக்கப்பட்டு அவர்கள் தாழ்ந்த சாதி யினராகக் கருதப்பட்டனர். இந்நிலையைக் கண்ட அப்பர் இவ்வேறுபாட்டு எண்ணத்தை மக்கள் மனத்திலிருந்து அறவே நீக்க எண்ணினார். கங்கையைச் சடையில் தரித்த சிவபெருமானுக்கு உண்மை அன்பு உடையவராகத் திகழ்பவர், சமுதாயத்தில் புலையர் எனக் கருதப்பட்டு இகழப்பட்டாலும் இறை அடியார்க்கு அவர்கள் வணங்கும் கடவுளாவார் என்று குறிப்பிடு கின்றார். சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட நிலையிலுள்ள பிரிவினரை இறையன்பு என்ற நிலை மூலம் உயர்நிலைக்கு உயர்த்திக் காட்டியதுடன் கடவுள் நிலைக்கும் உயர்த்திக் காட்டியவர் அப்பர் பெருமான். இதனால் தீண்டாமைக் கொள்கைக்கு எதிர்ப்புத் தெரிவித்தவர் அப்பர் எனலாம். பிறப்பு வழி வேற்றுமை பாராட்டாமல் சமத்துவத்தை நிலைநிறுத்தும் மனித நேயச் சிந்தனை இப்பாடல்வழிப் புலப்படுகிறது. இதன்மூலம் வாகீசர் கூற விரும்புவது சாதிகளற்ற ஒரு சமுதாயம் மலரவேண்டும் என்பதுதான். இதனை அந்தணர் குலத்தைச் சேர்ந்த அப்பூதி அடிகளாரின் திருமனையில் வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்த நாவுக்கரசுப் பெருந்தகை சாதி வேற்றுமை கருதாது உடன் உண்ணச் சம்மதித்ததிலிருந்து அறிய முடிகிறது. நாவுக்கரசரால் போற்றப்பட்ட நமிநந்தியடிகள் வாழ்வின் மூலமும் சாதி வேறுபாடுகள் பார்ப்பது தவறு என்பதனையும் அறிய முடிகிறது.

உலக மக்களால் போற்றப்பட்டவர் அன்னை தெரசா அவர்கள். தொழு நோயாளிகளாக இருந்தால்கூட அவர்களை ஒதுக்கிவிடாமல் - புறக்கணித்து விடாமல் அன்புக் கரம் நீட்டி அவர்களையும் ஆதரித்தவர். உறுப்புக்கள் அழிந்த நிலையில் காணப்படும் தொழுநோயாளர்களாக இருந்தால் கூட முகம் சுழிக்காமல் அவர்களையும் மனிதர்களாக மதித்து அன்போடு போற்றுதல் வேண்டும் என்னும் வாழ்வியல் நெறியையும் 7-ஆம் நூற்றாண்டிலே எடுத்துரைத்தவர் அப்பர். இக்கருத்தமைந்ததாகவும் மேலைப் பாடல் காணப்படுகிறது. இவ்வாறு அப்பர் பெருமான் தம் பக்திப் பனுவல்களில் பல இடங்களில் சமுதாய முன்னேற்றத்திற்கும், சமுதாயச் சமத்துவத்திற்கும் வழிவகுக்கும் பல அரிய கருத்துக்களைத் தம் இறைச் சிந்தனைகளுடன் கலந்து வெளிப்படுத்தியிருக்கிறார் என்பதை அறிய முடிகிறது.

உலகில் சாதிகள் இரண்டுதான் உண்டு. ஒன்று கொடுப்போர் - உயர்ந்த சாதி; மற்றொன்று கொடாதவர் - இழிந்த சாதி. இதைத் தவிர சாதிகள் வேறு ஏதுமில்லை என்று பாடிப் போந்தார் ஔவையார். ஆனால் டாகுர் சாதியைப் பார்க்கும் பார்வையே வேறு.

''அடர்ந்த காட்டின் நடுவே
ஓடும் ஆற்றின் மேற்கே
சூரியன் மறைந்து கொண்டிருந்தான்.
துறவறச் சீடர்கள்; துறவி கௌத்தமர்.
அவர்தம் உரையை ஆர்வமுடன் கேட்க
நெருப்பைச் சுற்றி நெருங்கி இருந்தனர்.
கரத்தில் மலரும், கனிகளும் ஏந்தி
அறிமுகமில்லா அந்தச் சிறுவன்
கௌத்தமரை அணுகிக் காணிக்கை செலுத்தினான்.
குயிலினும் இனிய குரலில் மொழிந்தான்;''
''குருவே! தாங்கள் வழி நடத்திச் செல்லும்
சத்ய மார்க்கத்தில் அடியேனையும் ஏற்று
அருள் புரியுங்கள்''.
''எல்லா நன்மைகளும் உண்டாகட்டும்'' என்று
குருநாதர் வாழ்த்தினார். பின் குறுக்கிட்டுக் கேட்டார்:
''உண்மையே வெல்லும் என்னும்
உயர்வினை அறிந்து
சத்திய மார்க்கமே
ஜகத்தினில் உயர்ந்தது
என்று எண்ணியே என்னிடம் வந்தாய்.
அறவழிச் சென்று அறவொளி தேட
அந்தணர்க்கே தகுதி.
குழந்தாய் நீ என்ன சாதி?
நீ யார் என்பதை உரைப்பாயாக''
''குருவே! நானொரு சிறுவன்.
குலம் கோத்திரம் ஒன்றும் அறியேன்.
அன்னையிடம் கேட்டு அறிந்து வருகிறேன்''
என்று சொல்லி ஏகினான் பையன்.
ஆழமில்லா ஓடையில் இறங்கி அருகிருந்த
ஊரின் எல்லையில் ஒதுங்கிய இடத்தில்
இருந்தது குடிசை. குடிசை நோக்கி
தாழ்ந்த தலையுடன் தாயிடம் வந்தான்
வந்த குழந்தையை வாரி அணைத்து
உச்சியில் முகர்ந்து உள்ளம் மகிழ்ந்து
''பயண நோக்கம் பயனாக இருந்ததா?
குரு என்ன சொன்னார் குழந்தாய்?''
என்றே கேட்டாள் ஏக்கம் மீதுற.
''அன்புத் தாயே! அடியேன் ஒன்று

அறிய விரும்புகின்றேன்.
எந்தை பெயரென்ன? என் சாதி என்ன?
அறவழி சென்று அறவொளி தேட
அந்தணர்க்கே தகுதி
குழந்தாய் நீ என்ன சாதி?
என்றே கேட்டார் கௌத்தம் குருவே.''
இதைக் கேட்டதும்
தாயின் உள்ளம் தவிதவித்தது.
குரலும் தலையும் குறுகிப் போயின.
உண்மையைச் சொல்ல உள்ளம் துடித்தது.
''இளமைக் காலத்தில் நான் ஏழையிலும் ஏழை.
ஏழையாய் இருந்தும் பாழாய்ப் போன
வாலிப பருவத்தில் வந்தவர் பலபேர்.
தேக சுகத்தில் திகட்டிப் போயினர்.
என்மகன்தான் என்று ஏறுபோல் நின்று
முந்திச் சொல்ல யாரும் முன்வரவில்லை.
கணவன் இல்லாக் காரிகை நான்தான்.''
ஆசிரமத்து மரங்களின் உச்சியில்
உதயசூரியன் ஒளியேற்றிக் கொண்டிருந்தான்.
காலையில் நீராடிய ஈரம் காயாத் தலையுடன்
பழம்பெரும் ஆலமரத்தின் பாதத்தைச் சுற்றிக்
குருவின் உபதேசம் கேட்கக்
குழுமியிருந்தனர் குருகுலத்தினர்.
கனிவோடு அமர்ந்திருந்தார் கௌத்தமர்.
குலம் கேட்கச் சென்ற சிறுவன்
குனிந்த தலையுடன் வந்து
கௌத்தமரை வணங்கிவிட்டு மௌனமாக நின்றான்.
குருகேட்டார், ''குலம் தெரிந்ததா குழந்தாய்? சொல்''.
அன்னை சொன்னதை அப்படியே மாற்றாமல்
தயக்கமின்றிச் சொன்னான் சிறுவன்.
சுற்றிலுமிருந்த சீடர்கள் சுறுசுறுப்புற்று
கலைக்கப்பட்ட தேனிக்கள்போல
முன்னர் முணுமுணுத்தனர்; பின்னர் மூண்டது கோபம்.
வெட்கமில்லாமல் பேசும்
வேடிக்கைச் சிறுவனைப் பார்த்து
''குலமும் கோத்திரமும் அறியாதவனுக்குக்
குருகுல வாசமா?'' சீடர்கள் சீறி எழுந்தனர்.
இருக்கையிலிருந்து எழுந்தார் கௌத்தமர்.

இருகரம் நீட்டி அழைத்தார்; அணைத்தார் அன்புபொங்க.
சிறுவனைப் பார்த்து சிறுநகை புரிந்து
"அந்தணர்க்கெல்லாம் அந்தணன் நீயே!
அந்தணர் என்போர் அறவோர்.
அறமெனப்படுவது சத்தியம் ஆகும்.
சத்தியமே பேசும் நீ சாலச் சிறந்த சாதி.
தவ வழி செல்லும் தகுதி உனக்கும் உண்டு."
என்றே சொல்லி ஏற்றார் சீடனை."

டாகுரால் எழுதப்பெற்ற கனித்திரட்டு என்னும் தொகுதியில் காணப்படும் செய்தி இது.

சமுதாயத்தில் காணப்பட்ட ஏற்றத் தாழ்வுகளில் சாதி அமைப்பு கடுமையான தாக்கம் செலுத்தியது. சமுதாயத்தில் சாதியின் பெயரால் பல்வேறு அடுக்கு நிலைகள் காணப்பட்டன. உயர்நிலையில் உள்ள சாதியினர் சமுதாய, பொருளாதார, சமய ஆதிக்கம் மிக்கவர்களாய் விளங்கினர். தாழ்ந்த சாதியினர் எனக் கருதப்பட்டோர் சமுதாய, பொருளாதார, சமய நிலைகளில் இயலாமை உடையவர்களாய் விளங்கினர். மேல் சாதியினர் ஆதிக்க மேம்பாடு காரணமாகத் தாழ்ந்த சாதியினர் அடிமைகள்போல் வாழ்ந்தனர். இத்தகைய சமுதாயச் சூழ்நிலைகளை இலக்கிய அருளாளர்கள் கண்டனர். சமுதாய, பொருளாதார, அரசியல், சமய, பால் நிலைகளில் தாழ்நிலை உற்றோர்க்கும் நம்பிக்கை அளிக்கும் வகையில் தம் சிந்தனைகளை வெளிப்படுத்திக் காட்டினர். டாகுரும் தம் படைப்புக்களில் பல இடங்களில் சமுதாய முன்னேற்றத்திற்கும், சமுதாய சமத்துவத்திற்கும் வழி வகுக்கும் பல அரிய கருத்துக்களைத் தம் இறைச் சிந்தனைகளுடன் கலந்து வெளிப்படுத்திக் காட்டியிருக்கிறார். அவற்றுள் ஒன்றே மேலே எடுத்துக் காட்டப்பட்ட கனித்திரட்டு என்னும் தொகுதியிலுள்ள பகுதியாகும்.

"ஆவுரித்துத் தின் றுழலும் புலையரேனும்
கங்கை வார்சடை கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"

என்று அப்பர் கூறுவதைப் போல டாகுரும் சாதியால் கீழ்நிலையில் இருந்தாலும் கூட, போலியில்லாமல் உண்மைத் துறவியாக இருப்பின் அவரும் உயர்சாதி மக்களைப் போல உயர்வு அடையலாம் என்பதையும், சாதி அதற்கு ஒரு தடையாக இருக்க முடியாது என்பதையும், 'சத்தியமே ஜெயதே' என்பதையும் மேலே எடுத்துக் காட்டப்பட்ட கனித்திரட்டு வாயிலாக எடுத்துக் காட்டுகிறார்.

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்!
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்?"

என்று அப்பர் சாதியைச் சாடுவதைப் போல் டாகுர் சாதியைத் தீவிரமாக எதிர்க்கவில்லை. எனினும் இன்றைய நிலையில் சாதி தேவையில்லை என்பதே டாகுரின் கருத்தாகக் காணப்படுகிறது.

தற்காலச் சமுதாயத்திற்குத் தேவையான சீர்திருத்தங்களைப் பற்றி எண்ணவும், செயல்படவும் திருநாவுக்கரசரும், ரபீந்திரநாத் டாகுரும் வழிகாட்டிகளாய் நிற்கின்றனர். சமயம், சமுதாயம் இரண்டிலும் இருவரும் அவரவர் காலத்திற்கேற்ற கருத்துக்களை வெளியிட்டுப் புதுமை செய்தனர் என்பதற்கு அவர்தம் படைப்புக்கள் வழி இங்கு ஓரிரு எடுத்துக்காட்டுக்கள் எடுத்துக் காட்டப்பட்டன. விரிவாக ஆய்வு செய்வதற்கு இன்னும் இடமிருக்கிறது என்று சுட்டிக் காட்டியும், பக்க வரையறை கருதியும் இக்கட்டுரை இங்கு நிறைவு செய்யப்படுகிறது.

# 74. திருநாவுக்கரசரின் பங்களிப்பு

ந. முருகேசன், திருப்பனந்தாள்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தைப் பற்றிச் சிந்திப்பவர்கள்-எழுதுபவர்கள், திருநாவுக்கரசரை விட்டுவிட்டுச் சிந்திக்கவும் முடியாது; எழுதவும் இயலாது. ஏனெனில், கி.பி. ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத் திற்குத் திருநாவுக்கரசரின் பங்களிப்பு அதிகம். அப்பங்களிப்பின் அருமை பெருமைகளைப் புலப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பக்தி இயக்கப் பணி**

சமயகுரவர் நால்வரில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுப் பதிகம் பாடித் தொண்டாற்றத் தொடங்கிய முதல்வர் திருநாவுக்கரசர் ஆவார். "நாவரசர் சமணம் புகுந்ததும், மீண்டதும் அல்லற் பட்டதும், தேவாரம் பாடத் தொடங்கியதும் ஆகிய அனைத்து நிகழ்ச்சிகளும் பிள்ளையார் இவ்வுலகிடைத் தோன்று முன்னே நடைபெற்றிருக்க வேண்டும்" என்று பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் 'பெரியபுராணம்- ஓர் ஆய்வு' என்ற நூலில் எழுதுகிறார். "நாவரசரின் பக்தி இயக்கச் செயற்பாட்டின் தொடக்கத்துக்கு ஏறத்தாழ ஒரு தலைமுறை 25 அல்லது 30 ஆண்டுகள் பின்னரே சம்பந்தர் அவ்வியக்கத்தில் அடி பதிக்கிறார்.... இவ்விருவரில் மூத்தவர், காலத்தாலும் அனுபவத்தாலும் முற்பட்டவர், முதிர்ந்தவர் என்ற வகையில் முதன்மைக் கணிப்புக்கு உரியவர் நாவுக்கரசர்" என்று கலாநிதி நா. சுப்பிரமணியன் 'நால்வர் - வாழ்வும் வாக்கும்' என்ற நூலில் எழுது கிறார். இவ்வடிப்படையில் நோக்கினால், சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கத்தில் சிக்கித் தடுமாறிய தமிழகத்தை, மீட்டெடுத்து, இந்நாட்டின் தொன்மைச் சமயமாகிய சைவத்தில் நிலைநிறுத்தத் தோன்றிய பக்தி இயக்கத்தைத் தொடங்கி வைத்த பெருமையும் முக்கியத்துவமும் திருநாவுக்கரசருக்கு உரியனவாகும். இப்பெருமகனார் தொடங்கி வைத்த பக்தி இயக்கமே, தமிழக எல்லையையும் தாண்டி, வடபுலத்தையும், பின்னர் தொட்டது என்று நினைக்கின்றபோது, இவர்தம் பங்களிப்பு மிக மிக அருமையானதென்பதை உணரலாம்.

**தலயாத்திரையின் முன்னோடி**

பக்தி இயக்கத்தின் முக்கிய செயற்பாடுகளில் ஒன்று தலயாத்திரை யாகும். இறைவன் எழுந்தருளியுள்ள தலங்கள்தோறும் சென்று, அவ்வவ் தலங்களில் எழுந்தருளியுள்ள சிவபரம்பொருளைப் பாடிப் பரவி, வாழ்வு

குறித்த நம்பிக்கையையும், பக்தி உணர்வையும் வளர்ப்பது தல யாத்திரையின் நோக்கங்களில் ஒன்றாகும். இத்தலயாத்திரைப் பணியையும் சிறப்பாக அப்பர் பெருமானே தொடங்கி வைத்தார் என்பதும் உணரத் தக்கதாகிறது. சிவபிரானால் ஆட்கொள்ளப்பட்டு, பல்லவ மன்னனின் கொடுமைகளில் இருந்து மீண்டபின், தலயாத்திரையைத் தொடங்கி, தலங்கள்தோறும், இனிய செந்தமிழ்ப் பதிகங்களைப் பாடிச், சைவ மறுமலர்ச்சியை ஏற்படுத்தித், தொண்டாற்றிச் சம்பந்தர், சுந்தரர் முதலானோர்க்கு முன்னோடியாகத் திகழ்கின்றார் அப்பர். இவர் தொடங்கி வைத்த பணியையே சம்பந்தர், சுந்தரர் முதலானோர் தொடர்ந்து செம்மையாகச் செய்து, சைவ சமயத்தை வளர்த்தனர் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். அப்பர் பெருமானின் இப்பணியின் அருமையும் உச்சிமேல் வைத்துப் போற்றத் தக்கதாகும்.

### நம்பிக்கை தந்த சிறப்பு

கொல்லாமை, பொய்யாமை, பிறர்மனை நயவாமை முதலிய நல்லறங்களைப் போதித்து நன்னெறிப் படுத்திய சமணர்கள், வாழ்க்கையில் விரக்தியும், நம்பிகை வறட்சியும் ஏற்படும் வகையில் பேசினர். இப்போக்கை "இல்லறத்தை இழித்தும் பழித்தும் பேசியவர்கள் துறவறமே வீட்டின்பம் பயக்கும் என்றனர். பெண்களுக்கு வீடுபேறு இல்லை என்றும் ஆண்பிறவி எடுத்தே முத்திக்கு முயலவேண்டும் என்றும் மொழிந்தனர். வினைக் கொள்கைக்கு முதன்மை கொடுத்தனர். எனவே ஒருவரின் உயர்வு, தாழ்வு, நன்மை, தீமை என்பன முன்பே தீர்மானிக்கப் பட்டுவிட்டமையால் வினைப்பயனிலிருந்தும் மீட்சியில்லை என்றனர். இதனால் துன்புறும் மாந்தரின் துன்ப நீக்கத்திற்கு வழியின்றி வாழ்க்கையில் நம்பிக்கைத் தளர்ச்சி தோன்ற ஏதுவாயிற்று" என்று முனைவர் சோ.ந. கந்தசாமி தம் 'திருமுறை இலக்கியம்' என்ற நூலில் விளக்குவார். இச்சூழலில்,

> "அல்லல் என்செயும் அருவினை என்செயும்
> தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்"

> "நன்று நாள்தொறும் நம்வினை போயறும்
> என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
> சென்று நீர்திரு வேட்களத் துள்உறை
> துன்று பொற்சடை யானைத் தொழுமினே"

என்றெல்லாம் பாடி, சிவபரம்பொருளின் பேரருளால் கொடிய வல்வினையில் இருந்து விடுபட்டு, இனிது வாழலாம் என்று நம்பிக்கையூட்டி,

> "நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
> நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
> புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
> பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
> தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
> சங்கரா சயபோற்றி போற்றி என்றும்

அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ என்றும்
ஆரூரா என்னென்றே அலறா நில்லே''

என்று பாடி, நிம்மதியாகவும், - இறைத் தொண்டு என்ற பிடிப்புடனும் வாழ்வதற்கு வழிகாட்டி, தாமே உழவாரப்பணி செய்து காட்டி, சமணர்களால் ஏற்பட்ட நம்பிக்கை வறட்சியைப் போக்கினார் அப்பர். ஏழாம் நூற்றாண்டுத் தமிழக வரலாற்றை உற்று நோக்கினால், இப்பணியின் முக்கியத்துவம் அளவிடற்கரியது என்பதை உணரலாம்.

**அறப்போர்ப் பணி**

இருபதாம் நூற்றாண்டில் ஆங்கிலேயரை எதிர்த்துக் காந்தியடிகள் நடத்திய உண்ணாவிரத-அறப்போர் பற்றிப் புகழ்ந்து பேசுகிறோம். ஆனால் இவ்வித அறப்போரின் முன்னோடியாகத் திருநாவுக்கரசர் திகழ்கின்றார். பல்லவ மன்னனின் கொடுமைகளையெல்லாம் பொறுமையாகத் தாங்கிக் கொண்டு, அக்கொடுமைகளில் இருந்து மீண்டுவந்த அப்பர் பெருமான், பழையாறை வடதளியில் சமணர்களால் மறைக்கப் பட்டிருந்த சிவலிங்கத்தைக் காணாமல் செல்வதில்லை என்று முடிவெடுத்தார்; இறைவனிடம் வேண்டினார்; தம் குறிக்கோள் நிறைவேறும்வரை உண்ணாவிரதம் இருந்தார். இறையருளால் மன்னவன் வந்து அப்பர் பெருமானின் எண்ணத்தை நிறைவேற்றினான். குறிக்கோள் நிறைவேற, உண்ணாவிரதம் இருந்து அறப்போர் நடத்தும் முறையைச் சமுதாயத்திற்குக் கற்றுக் கொடுத்த முதல்வர் இவர் என்பது கவனத்திற்கொள்ள வேண்டிய ஒன்று.

**சமத்துவ நோக்கு**

தமிழ்ச் சமுதாயத்தில் வெங்கொடுமை நிகழ்த்திவரும் சாதியைக் கடிந்து பேசி, உயர்வு தாழ்வற்ற சமத்துவச் சமூகமாக-தமிழ்ச் சமூகத்தை மாற்றிட, மிகவும் கடுமையாகப் பாடி, விழிப்புணர்வை ஏற்படுத்தியதும் குறிப்பிடத் தக்கதாகும்.

''சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்தி ரமும்குலமும் கொண்டேன் செய்வீர்''

என்று பாடுவதில் அப்பர் பெருமானின் கோபக் குரலைக் கேட்கலாம். சாத்திரங்களைப் பக்கத் துணையாகக் கொண்டு, குலமென்றும் கோத்திரமென்றும் பேசி, ஏற்றத் தாழ்வுகளைக் கற்பித்து வாழ்வது தகாது என்றும், அப்படிப் பேசுபவர்கள் சழக்கர்கள் என்றும் வெளிப்படையாக - வன்மையாகக் கண்டித்துப் பேசுவது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது. தம் காலக் கொடுமைகளைப் பிரதிபலித்து, சீர்திருத்த முயல்கின்றார் அப்பர் பெருமான்.

''அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே''

என்று பாடிச் சிவபக்தி என்ற ஒன்றை வைத்தாவது, சமுதாயத்தைப் பேத மற்றதாக ஆக்கிவிடலாமா என்ற அவர்தம் மனத்தை, காலப் பின்னணியோடு கவனத்திற் கொள்ளும்போது, அம்மனம் முக்கியத்துவம் பெறுகிறது.

**சமகால அடியார்கள் - பதிவு**

சண்டேசுரர், கண்ணப்பர், கோச்செங்கட்சோழன் முதலிய முன்னோர் களை நினைந்து, புகழ்ந்து பாடி, சிவபக்தியில் சலனப்படாத ஊக்கத்தை வளர்த்துக் கொள்ளும் பாங்கினை மேற்கொண்ட நாவுக்கரசர், சமகாலச் சிவனருட் செல்வர்களைத் தம் தேவாரப் பதிகங்களில், அவர்கள் வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகளைச் சுட்டிப் பதிவு செய்து, பிற்காலத்தவர்களுக்குத் தருவது போற்றத் தக்கது.

"அஞ்சிப் போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி"

என்று அப்பூதியடிகளையும்,

"காயிரும் பொழில்கள் சூழ்ந்த
கழுமல ஊராக் கம்பொன்
ஆயிரம் கொடுப்பார் போலும்
ஆவடு துறைய னாரே"

என்று ஞானசம்பந்தரையும்,

"நாரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணாட றியுமன்றே"

என்று நமிநந்தியடிகளையும் பாடிப் பதிவு செய்துள்ளார். இப்பகுதி ஆய்வாளர்களுக்குப் பேருதவியாகும். 'நம்பிநந்தி' என்பதுதான் இயற்பெயர் என்றும், இதனை அப்பர் தேவாரத்தால்தான் அறிய முடிகிறது என்றும், நமிநந்தி என்பது திரிபுற்ற பெயர் என்றும் முனைவர் சோ.ந. கந்தசாமி எழுதுவதிலிருந்து, அடியார்கள் பற்றிய அப்பர் பெருமானின் பதிவுகள், ஆய்வாளர்களுக்கு உதவுவதை உணர்ந்து கொள்ளலாம்.

**இலக்கியப் பங்களிப்பு**

நாவுக்கரசர் மிகச் சிறந்த கல்வியாளர்; சிறுவயதிலேயே நிரம்பப் பயின்று, சமணத்தில் சேர்ந்து, சமயப் போர்களில் ஈடுபட்டு வெற்றிபல ஈட்டிய அவர் நிறைபுலமை மிக்கவர். மீளவும் சைவம் சார்ந்து, சிவபக்தியில் ஆழ்ந்து, கவிதை புனையத் தொடங்கிய பின், அவர் புலமை ஒளிவீசித் திகழ்ந்தது. சிவபரம்பொருளைப் புகழ்ந்து பாடிய அவர், தம் பாடல்களை வெறும் நாமாவளியாகப் படைக்காமல் மிகச் சிறந்த கவிதைகளாகப் படைத்தார். நினைந்து நினைந்து உருகி உருகிக் கவிதை புனைந்த அவர், தம் புலமைத் திறத்தால் இலக்கிய உலகிற்கு ஆற்றிய தொண்டும் அளப்பரியதாகும்.

கவிதைகளில் பல்வேறு வடிவ வகைகளை நீளநினைந்து செம்மை யாகப் படைத்துள்ளார். திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருவிருத்தம்,

தாண்டகம் என்ற தலைப்புகளை உடைய பாடல்கள், முறையே கலிவிருத்தம், அறுநீர்விருத்தம், கட்டளைக் கலித்துறை, எண்சீர்விருத்தம் என்பனவாக, யாப்பிலக்கண அடிப்படையில் நோக்கினால் புலப்படும். (திருமுறைப் பற்றார்வலர்கள் வேறுவகையாக விளக்குவர்) யாப்புலகிற்கு இப்பங்களிப்பு வளர்ச்சியைத் தந்தது.

கலிவிருத்தத்தில் பலவகைகள் காணப்படுகின்றன; அறுசீர் விருத்தத்தில் பல வகைகள் உள்ளன. விளம், மா, மா, விளம், மா, மா என்ற வாய்ப்பாட்டில் உள்ள விருத்தம் குறிப்பிடத்தக்கது. பாடுதற்கு இனிமை யாகாது. இவ்வகைக்கு எடுத்துக் காட்டாக,

> "பத்தனாய்ப் பாட மாட்டேன்
> பரம்னே பரம யோகீ
> எத்தினாற் பத்தி செய்கேன்
> என்னைநீ இகழ வேண்டா
> முத்தனே முதல்வா தில்லை
> அம்பலத் தாடு கின்ற
> அத்தாஉன் ஆடல் காண்பான்
> அடியனேன் வந்த வாறே"

என்ற பாடலைக் காட்டலாம். எண்சீர் விருத்தத்தில் காய், காய், மா, மா, காய், காய், மா, மா என்ற வாய்பாட்டில் வரும் பாவகை குறிப்பிடத் தக்கது. இவ்வகைக்கு எடுத்துக் காட்டாக,

> "அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
> அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
> தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
> திகழொளியைத் தேவர்கள்தம் கோனை மற்றைக்
> கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
> கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
> பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
> பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

என்ற கவிதையைக் காட்டலாம். இவற்றுடன் நாலடித் தரவுக் கொச்சகக் கலிப்பா என்ற வகையும் எண்ணத்தக்கது. இவ்வடிவ வகைகள் சிறப்பானவை. இவ்வடிவ வகைகளில் பல கவிஞர்களும் ஈடுபட்டு அதிகம் கையாண்டுள்ளதை நோக்குமிடத்து, இவர்தம் பங்களிப்பின் சிறப்பை உணரலாம். இருபதாம் நூற்றாண்டில் அதிகம் பயன்படுத்தப்பட்ட எண்சீர் விருத்தத்தை முதலில் உருவாக்கிச் செம்மையுடன் தந்தவர் அப்பர்தாம் என்பதை உணர்க.

**சில மரபுகள்**

இலக்கியப் பங்களிப்பு என்ற முறையில், இவர், இரண்டு புதிய மரபுகளைத் தொடங்கி வைத்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஒன்று நமச்சிவாயப் பதிக மரபு; மற்றொன்று அகத்திணை மரபு.

'நமசிவய' என்பது சிவபரம்பொருளுக்கு உரிய அய்ந்தெழுத்து மந்திரமாகும். இம்மந்திரம் சைவர்களுக்கு உயிர்போன்றது. இம்மந்திரப் பெருமையை நாயன்மார்கள் நால்வரும் பாடியுள்ளனர். தேவாரம் பாடிய மூவரும் நமசிவாயப் பதிகம் பாடி இருந்தாலும் முதலில் பாடியவர் நாவுக்கரசர் என்பதால் இம்மரபை உருவாக்கிய பெருமை நாவுக்கரசரையே சேரும்.

இறைவனை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் பாவனை செய்து, புலவனால் பாடப்படும் அகத்திணை மரபைப் பக்தி இலக்கிய உலகில் காண்கிறோம். நாவுக்கரசர், சம்பந்தர் ஆகிய இருவரும் இம்மரபை அருமையாகக் கையாண்டுள்ளனர். மூத்தவர் என்ற வகையிலும் முதலில் தேவாரம் பாடியவர் என்ற வகையிலும் நாவுக்கரசரே இம்மரபை முதலில் தொடங்கி வைத்தவர் என்பது உய்த்துணரத் தக்கதாகும். இம்மரபில் உள்ள

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்"

என்று தொடங்கும் அற்புதக் கவிதையை அறியாதார் இல்லை.

போற்றி! போற்றி! என்று சிவ சந்நிதியில் நின்று துதித்து வணங்குவதற் கேற்ற போற்றிப் பாடல்களைப் பாடிய புதிய மரபும் சிந்திக்கத்தக்கது. எண்சீர் விருத்த அமைப்பில் உள்ள 'போற்றித் திருத்தாண்டக'ப் பதிகங்கள் இனிமை யானவை; மனமுருகிப் பாடுதற்கேற்றவை; தமிழ் அர்ச்சனைக்குப் பயன்படத் தக்கவை. தமிழ் அர்ச்சனைச் சிந்தனை அப்பருக்கு இருந்திருக்குமோ?

**தயாமூலதன்மம்**

கருணையே வடிவமாகத் திகழ்ந்த அப்பர் பெருமான், நம்மனோர் உய்வதற்காகப் பாடியருளினார். அப்படிப் பாடியவர்,

"தயாமூல தன்மவழி எனக்கு நல்கி
மனந்திருத்தும் மழபாடி வயிரத் தூணே!"

"சலங்கெடுத்துத் தயாமூல தன்மம் என்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலம்கொடுக்கும் நம்பியை...."

என்று பாடுகிறார். தயை எனில் அருள்; மூலம் எனில் தோன்றும் இடம்; தன்மம் எனில் அறம்; வழி எனில் நெறி. பேதமின்றி அனைத்து உயிர் களிடத்தும் அருள்காட்டி ஒழுகுபவர்க்கு இறையருள் கிட்டும் என்பது

கருத்து. தயாமூலம் என்ற தொடரும் கருத்தும் அப்பர் பெருமான் கண்டவையாகும். "தயா மூலதன்மம் என்பது அப்பரடிகள் அறிமுகம் செய்துள்ள அருட்பெருங்கொள்கை" என்று முனைவர் சோ.ந. கந்தசாமி விதந்து கூறுவது இவண் நோக்கத்தக்கது. திருவருட்பிரகாச வள்ளலார் இத்தத்துவத்தையே உயிர் மூச்சாக குறிக்கோளாகக் கொண்டு ஒழுகி முத்தி பெற்றார் என்பது எண்ணத்தக்கது.

**முழக்க வாசகங்கள்**

இருபதாம் நூற்றாண்டில், அரசியல்வாதிகள், போராளிகள் மேடை தொறும் சில முழக்க வாசகங்களை முழங்கியதை அறிவோம். தம்மவரை ஊக்கப்படுத்தவும், கருத்துக்களை ஆழமாகப் பதிய வைக்கவும், இலக்கியத் தொடர்கள் சிலவற்றை - புதியதாக உருவாக்கிய தொடர்கள் சிலவற்றை மேடைகளில் உலவவிட்டனர். இம்மரபுக்கும் முன்னோடியாக நாவுக்கரசர் திகழ்கிறார் என்று கூறலாம்.

"அல்லல் என்செயும் அருவினை என்செயும்"

"புலியூ ரானைப்"

பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே"

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"

"அஞ்சுவது யாதொன்றும் இல்லை;
அஞ்ச வருவதும் இல்லை!"

"மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்"

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே"

"நாமார்க்கும் குடியல்லோம்"

முதலிய தொடர்கள் அப்பர் பெருமானின் தேவாரக் கவிதைகளில் முழக்கவாசகங்களாக மிளிர்கின்றன. இத்தொடர்களை எவர் மறக்க இயலும்! சைவ சமய மேடைகளில் மட்டுமல்லாமல், பிற மேடைகளிலும் இத்தொடர்களில் சிலவற்றை இன்றும் கேட்பதால் இவ்வாசகங்களின் செல்வாக்கை உணரலாம்.

இதுகாறும் கண்டவற்றால், கி.பி. ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத் திற்குத் திருநாவுக்கரசரின் பங்களிப்பு அதிகம் என்பதைப் புரிந்து கொள்ளலாம். சைவ சமயம் என்ற நிலையிலும், தமிழ் இலக்கியம் என்ற நிலையிலும் அவர்தம் பங்களிப்பு என்பது நீள நினைந்து போற்றற்குரிய தாகும். இவர், பங்களிப்பின் அருமையால், முதன்மைக் கணிப்புக்கு உரியவர் என்பதை மனதிற் கொள்ள வேண்டும்.

# 75. திருத்தலப் பதிகம் பாடும் உத்தி

தி. ரமா, காரைக்குடி.

சிவபெருமான் எழுந்தருளி அருளாட்சி புரியும் திருத்தலங்கள் தோறும் சென்று திருநாவுக்கரசர் முழுமுதற் கடவுளாய சிவபெருமானை ஒருமையுடனும் அன்புடனும் செந்தமிழ்ப் பாடல்களால் போற்றினார். அவர் சென்று வழிபட்ட தலங்களுக்கெல்லாம் பதிகம் பாடினார். திருநாவுக்கரசரை வாகீசர் என்றும் அப்பர் என்றும் போற்றுவது மரபு. இப்பெரியார் பாடிய பாடல்கள் அனைத்தும் நான்காம், ஐந்தாம், ஆறாம் திருமுறைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

திருநாவுக்கரசர் நூற்றிருபத்தாறு திருத்தலங்களைப் பாடியிருக்கிறார். இந்தப் பதிகங்களைப் பாடும் அப்பர் ஒவ்வொரு திருத்தலப் பதிகங் களையும் பாடுவதற்கு எவ்வகையான உத்திகளைப் பயன்படுத்துகிறார் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். ஒரு பதிகத்திலிருந்து இன்னொரு பதிகத்தை வேறுபடுத்தவும் ஒரு தலத்திற்குரிய பதிகத்திலிருந்து இன்னொரு தலப்பதிகத்தை வேறுபடுத்தவும் திருநாவுக்கரசர் சில அடிப்படைகளை உத்திகளைப் பயன்படுத்தியுள்ளார். இதனால் இந்தப் பதிகம் இந்தத் தலத்தில் இன்ன சூழ்நிலையில் பாடப்பட்டது என்று அறிய முடிகிறது.

**பெயர் சுட்டலும் சுட்டாமையும்**

திருத்தலத் திருப்பதிகம் ஓதும் திருநாவுக்கரசர், எந்தத் தலத்தைப் பாடுகின்றாரோ அந்தத் தலத்தையும் தலத்திலிருக்கும் கோயிலையும் பதிகத்தில் குறிக்கின்றார். 'அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே' (4:1) என்றும் 'கள்வனேன்றன் ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட்கொண்ட வாரூரரை' (4:5) என்றும் 'கரோத மல்குங்கழிப்பாலைச் சேர்வானை' (4:6) என்றும் வருவன திருவதிகை, திருவாரூர், திருக்கழிப்பாலை ஆகிய தலங்களைப் பாடுகின்றன. இது போலத் தலப் பெயர்களைச் சுட்டி வாகீசர் அந்தந்தத் தலங்களுக்குரிய பதிகங்களைப் பாடுகின்றார். இவ்வாறு பாடுவது எளிய அமைப்பு; தனித்தனியே தலங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பதிகம் பாடிய வாகீசர், பல திருத்தலங்களைத் தொகுத்தும் பதிகம் பாடினார். அவ்வாறு பாடப் பெற்றவை க்ஷேத்திரக்கோவை, (6:70) அடைவுத் திருத்தாண்டகம் (6:71)

என்பன. அடைவுத்திருத்தாண்டகத்தில், தலங்களைப் பெயரின்பின்னொட்டு ஒற்றுமையால் வகைப்படுத்திப் பாடுகிறார். ஒரு பதிகத்தில் தலங்களைத் தொகுத்துக் கூறியவர், இன்னொரு பதிகத்தில் வகைப்படுத்திப் பேசுகிறார். திருநாவுக்கரசர் திருத்தலங்களைப் பாடும் பதிகங்களில் வெவ்வேறு வகையான உத்திகளைப் பயன்படுத்துகிறார்.

### வாழும் இலக்கியக் கொள்கை

ஒரு படைப்பாளி அல்லது புலவன், தான் பாடுகின்ற எல்லாப் பாடல்களையும் ஒன்று போலப் பாடமாட்டான்; 'கருத்தாலும் யாப்பாலும் ஒன்று போலப் பாடல்களைப் பாடினால், அந்தப் பாடல்கள் கூறியது கூறலாய்ப் படிப்போர் உள்ளங்கவராது போய்விடும்; காலப்போக்கில் அந்த இலக்கியம் பயிற்சியின்றி வழக்கிழந்துவிடும். இஃது இலக்கியப் பரவல் கொள்கை. இக்கொள்கையை நுண்மாண் நுழைபுலம் மிக்க அருளாளர்கள் அறிந்து திருத்தலங்களை வெவ்வேறு வகையாகப் பாடினர்; அதனாலேயே அவை இன்றும் வாழுகின்றன.

திருநாவுக்கரர் பாடிய முதல் பதிகம், திருவதிகை வீரட்டானத்தைப் பற்றியது. இதுவே நான்காம் திருமுறையின் முதற்பதிகம். சூலை நோயால் துடி துடித்த நாவுக்கரசர் அந்நோய்த் துன்பத்துக்கு ஆற்றாது அதைப் போக்க வேண்டிப் பாடுகிறார். ஒரு நோக்கம் கருதிச் சிவபெருமானைச் சேர்ந்து வேண்டுகிறார் வாகீசர். வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு துன்பம் அவரைச் சமய மாற்றம் பெறவும் நோய்போக்கவும் பாட வைக்கின்றது. சமணரான நாவுக்கரசருக்குச் சூலை நோய் பற்றுகிறது; அதனைப் போக்கிடத் அவர் திருவதிகைச் சிவனைச் சரணடைந்து பாடுகிறார். பதிகத்தின் நோக்கமும் பாடுபொருளும் நோய்க் கொடுமையாகும். ஆதலால் பாடல்களில் 'நோய்படுத்தும் பாடே' புனையப்பட்டிருக்கிறது.

> "என் வயிற்றின் அகம்படியே குடரோடு
> துடக்கி முடக்கியிட"

என்றும் வயிற்றோடு 'துடக்கி முடக்கியிட நஞ்சாகி வந்து' என்றும் 'சுடுகின்றது சூலை' என்றும் 'வயிற்றின் அகம்படியே கலக்கி மலக்கிட்டுக் கவர்ந்து தின்ன அலுத்தேன்' என்றும் வருகின்றவை, திருநாவுக்கரசர் பட்டபாட்டைக் காட்டுவன. நோயாளி ஒருவன் மருத்துவனுக்கு முன்னே தன் நோயைச் சொல்லுவது போலத் திருநாவுக்கரசர் வீரட்டானத்தம்மானிடம் நோய்க் கொடுமையை நவிலுகிறார்.

### தலவரலாறும் தலப் பதிகமும்

நோய் பாடிய திருநாவுக்கரசர் நோயை நீக்கவும் பாடல்களில் வேண்டுகிறார். 'உறுசூலை தவிர்த்தருளாய்' என்றும் 'என் வேதனையான விலக்கியிடாய்' என்றும் பாடுவன பதிகம் பாடிய நோக்கத்தைக் காட்டு

கின்றன. தாம்படும் தொல்லையை நீக்கவில்லை என்றால் தம்மையொத்த அடியார்கள், சிவபெருமான்மீது நம்பிக்கை வைக்கமாட்டார்கள் என்றும் கூறுகிறார். 'என் போலிகள் உம்மை இனித் தெளியார்' என்பது அவர் வாக்கு, நம்பிக்கை மொழிகளே தெய்வத்தைப் போற்றச் செய்வன, சமயத்தை வளர்ப்பன. அப்பர் தம் நோய் போக்கிப் பிறரையும் சிவனடிபணிய வழிகாட்டக் கடவுளை வேண்டுகிறார். கொல்லிப் பண்ணில் அமைந்த இந்தப் பதிகம், படைப்பாளியின் வாழ்க்கைத் துன்பத்தைச் சொந்த அனுபவத்தை வெளிப்படுத்துவதாகத் திகழ்கிறது. இத்திருத்தலப் பதிகம் திருநாவுக்கரசரின் சொந்த வாழ்க்கையை முதன்மைப்படுத்திப் பாடப்பட்டிருக்கிறது. இதுவே பதிகம் பிறக்க அடிப்படை. இவ்வாறு அப்பர் திருத்தலங்களைச் சுட்டிப் பதிகத்தைப் பாடியிருக்கிறார். அவற்றில் சிலவற்றில் அவர் வாழ்க்கை நிகழ்ச்சிகள் குறிப்பாக இடம் பெற்றுள்ளன. இவற்றை உணர்ந்து சேக்கிழார், திருத்தொண்டர் புராணத்தில் திருநாவுக்கரசர் வரலாற்றைப் பாடியிருக்கிறார். படைப்பாளியின் தன்வரலாறு தலவரலாற்றுடன் சேர்ந்து பதிகமாக வெளிப்பட்டிருக்கிறது. இத்தகைய வரலாற்றை அமைத்துப் பாடிய பதிகங்கள் அனைத்தையும் ஒருவகையாகப் பிரிப்பது சிறப்பாகும். பாடியவன் தன் அனுபவத்தை ஓர் உத்தியாக்கித் தலங்களைப் பாடுவதனால் அந்தப் பதிகங்களும் சிறப்புப் பெறுகின்றன.

**வாழ்க்கை நிகழ்ச்சியைக் குறிப்பாக்கல்**

திருநாவுக்கரசர் தாம் பாடிய பதிகங்களின் இறுதிப் பாடலில், சிவபெருமான் இராவணனுக்கு அருள் செய்ததைக் குறிக்கிறார். திருநள்ளாற்றைப் பாடும் ஐந்தாம் திருமுறைப் பதிகத்தில் (5 : 68).

> "இலங்கை மன்னன் இருபது தோளிற
> மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்
> நலங்கொள் நீற்றர்நள் ளாறரை நாள்தொறும்
> வலங்கொள் வார்வினை யாயின மாயுமே" (5 : 89)

என்று இராவணன் வரலாற்றைத் திருநாவுக்கரசர் பாடுகிறார். இராவணன் சிவன் வீற்றிருந்த கயிலாய மலையை எடுக்கச் சிவபெருமான் தன் கால் விரலால் நெறித்தான், பின் அவன் தடுமாறிச் சாம வேதம் இசைத்தான், இசைக்கேட்டுச் சிவபெருமான் இராவணனுக்கு அருள் செய்தான். இன்னா செய்தாருக்கும் நன்மை செய்ததுபோலத் தமக்கும் சிவபெருமான் அருள் செய்ய வேண்டும் என்று திருநாவுக்கரசர் கருதுகிறார். இதனால் இந்த வரலாற்றை எந்தத் தலத்தைப் பாடினாலும் பதிகத்தின் இறுதியிலமைத்துப் பாடுகிறார் வாகீசர். இக்குறிப்புச் சில பதிகங்களிலில்லை (ஐந்தாம் திருமுறை-5, 6, 38, 54, 67, 86, என்ற ஆறு பதிகங்கள்). திருத்தலங் களைப் பாடுகின்ற அப்பர், தம் வாழ்க்கை நிகழ்ச்சி நினைவுடனேயே பதிகங்களைப் பாடுகின்றார். இதனால் திருத்தலப் பதிகங்களுக்குத் தனிச்சிறப்பமைகிறது.

## தலப்பெயரும் கோயிற் பெயரும்

நான்காம் திருமுறையில் திருநாகேச்சரத்தைப் (66) பாடும் அப்பர், ஈற்றடியில் 'நாகவீச்சரவனாரே' என்று பாடல் தோறும் பாடுகின்றார். திருத்தலங்களை அடையாளங் காட்டுதற்கும், ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்தற்கும் பாட்டினிறுதியில் கோயில் பெயரையும் இறைவன் பெயரையும் வாகீசர் சுட்டுகிறார். பாடல்களில் சிவபெருமான் இயல்பைப் 'போலும்' என்று சொல்லிப் புனைகின்றார். ஐந்தாம் திருமுறையில் இதே திருத்தலத்தைப் பாடும்போது (52) நான்காம் திருமுறையில் பாடியது போல 'திருநாகேச்சரவரே' என்று அப்பர் பாடுகின்றார். இங்குப் 'போலும்' என்ற சொல்லாட்சி இல்லை. சிவபெருமான் செயல்களைச் சொல்லி அவர் அருள் செய்பவர் என்று பாடுகின்றார். இதே திருத்தலத்திற்கு இன்னொரு பதிகம் ஆறாந் திருமுறையில் காணப்படுகின்றது. இப்பதிகத்தின் (66) திருநாகேச்சரம் என்ற பெயர் பாடல்களின் ஈற்றில் வரவில்லை. ஈற்றடியின் இரண்டாம் சீரில் 'தீயவனைத் திருநாகேச்சரத்துளானை' (660 : 4) என்று தலப்பெயர் அமைகின்றது. இப்பதிகம் தாண்டக யாப்பாகும். ஒரு தலத்துக்கு மூன்று பதிகங்கள் பாடிய திருநாவுக்கரசர் இறைவன் பெயரை வெவ்வேறு வகையாகவும் பாடற்பொருளை வெவ்வேறு வகையாகவும் பாடிப் பாட்டை நயப்படுத்தினார். இதில் யாப்பு வேறுபாடும் குறிப்பிடத்தக்கது.

## அருகமைந்த திருத்தலம்

திருநாவுக்கரசர் பிறந்த நடுநாட்டில் சிறந்த தலம் திருவதிகை, அவர் ஊருக்கு அருகில் அமைந்த தலம் திருவதிகை; இது கடற்கரையை ஒட்டிய தலம். இத்தலத்திற்கு இவர் பதினாறு பதிகங்கள் பாடியிருக்கிறார். இந்த எண்ணிக்கையை விடக் கூடுதலாகப் பதிகம் பாடிய தலம் திருவாரூர் (21). இது தொன்மையான சிவராசதானி என்பதால் அதிலீடுபட்டுத் திருநாவுக்கரசர் பாடினார். திருஞானசம்பந்தர் தாம் பிறந்தருளிய தலத்துக்கே மிகுதியான எண்ணிக்கையில் பாடல்கள் பாடினார். திருநாவுக்கரசர் தமக்கு உயிர் நல்கிய திருவதிகையை மிகுதியாகப் பாடியதில் வியப்பில்லை.

## பாடிய முறைமை

ஒரே படைப்பாளி, ஒன்றையே பாடும்போது வெவ்வேறு வகையாகப் பாட வேண்டியிருக்கிறது. அதனால் அவற்றிடையே ஒற்றுமையும் வேற்றுமையும் எழுகின்றன. ஐங்குறுநூற்றிலுள்ள ஒவ்வொரு பத்தையும் நோக்கினால், சில அடிகள் பத்துப் பாடல்களிலும் பயிலுகின்றன, சிறுதொடர் வேறு பட்டால் பாடலே வேறுபட்டு விடுகிறது. இறைவன் பெயர் (வீரட்டானத் துறையம்மான், வீரட்டானேசுவரர்) கோயிற் பெயர், திருத்தலப்பெயர், தலச்சுற்றுச் சூழல் என்பன வெளிப்படுமாறு புலவன் பாடுகின்றான். இவற்றைப் பாடலில் அமைத்துப் பாடினால்தான், அப்பதிகத்தில் எந்தத் தலம்

பாடப்பட்டது என்ற உண்மை தெரியவரும். இவையெல்லாம் இருந்தமையால் தான், திருநாவுக்கரசருக்குப்பின் வந்தோர் அவர் வாழ்க்கை வரலாற்றை அறியமுடிந்தது, திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய முடிந்தது; திருத்தலப் பெயரில்லாது பாடப்பட்ட பதிகங்கள் எந்தத் தலத்தில் பாடப்பட்டனவோ அந்தத் தலக்குறிப்புடன் வழங்கவில்லை. அதனால் அவற்றைப் 'பொது' என்று அறிஞர் கொண்டனர்.

**நாலடிமேல் ஓரடி வைப்பு**

திருவதிகைத் திருத்தலத்தைப் பாடுகின்ற வாகீசர், தமக்கும் தலத்துக்குமுள்ள தொடர்பைக் கொண்டே பாடுகிறார். எனவே இப்பதிகம் திருவதிகையைப் பாடினாலும் அவர் வாழ்க்கை நிகழ்ச்சியைப் பாடு வதாகிறது. முதற்பதிகம் போல இரண்டாம் பதிகமும் திருவதிகையைப் பாடுகிறது. முதற்பதிகத்தில் நோய்க் கொடுமையையும் நோய் நீக்கத்தையும் வேண்டிய வாகீசர், இங்குத் தம்முடைய அஞ்சாமையைப் பேசுகிறார். சுண்ண வெண்சந்தனச் சாந்து என்று தொடங்கும் பதிகம், ''கூற்றாயினவாறு'' என்ற பதிகத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது. முதற்பதிகத்தில் ''ஆர்த்தார் புனல்சூழ் அதிகைக் கெடில வீரட்டானத் துறை யம்மானே'' என்று பாடியவர், இரண்டாம் பதிகத்தில் ''திண்ணென் கெடிலப் புனலு முடையார்'' என்று பாடுகிறார். இரண்டிலும் ஒரே கருத்து வெவ்வேறு வகையாகக் கூறப் படுகிறது. முதற்பதிகத்தில் திருவதிகை. கெடில ஆறு, கோயிலாகிய வீரட்டானம் ஆகிய மூன்றையும் சுட்டிச் சிவன் வாழுமிடம் என்று வாகீசர் விளம்பினார். இரண்டாம் பதிகத்தில் அவருக்கு எவை எவை உடைமை என்று இயம்பினார்.

திருவதிகை வீரட்டான இறைவனைப் பாடுகின்ற அப்பர், 'ஒருவர் தமர் நாம்' என்று பாடுகின்றார். அவற்றில் ஒரு பாட்டு.

''பலபல காமத்த ராகிப்
பதைத்தெழு வார் மனத்துள்ளே
கலமலக் கிட்டுத் திரியும்
கணபதி என்னும் களிறும்
வலமேந்து இரண்டு சுடரும்
வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும்
உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை''

ஈற்றில் தனியே நிற்கும் ''அஞ்சுவது யாதொன்றும்'' என்று தொடங்கும் அடி பாடல்தோறும் நாலடிமேல் ஓரடி வைப்பாக அமைந்திருக்கிறது.

இந்த அமைப்பு இதனை திருவையாற்றுப் பதிகத்திலும் காணப்படுகிறது. அதிலும் பாட்டுக்குமேல்

**"கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறியாதன கண்டேன்"**

என்ற அடி, நாலடிமேல் ஓரடிவைப்பாக வருகிறது. இரண்டு பதிகங்களில் காணப்படும் இப்போக்கு பதிகத்திற்குத் தனித் தன்மையையும் பாடுதற்கு ஏற்ற தகுதியையும் ஏற்படுத்துகிறது.

## உணர்ச்சி புலப்பாடு

'அஞ்சாமை' என்று எதற்கும் அஞ்சாது இருக்கும் தறுகண் நீர்மையைக் காட்டும் குறிப்பை 'நாலடிமேல் ஓரடிவைப்பு' திறம்படப் புலப்படுத்துகிறது. அதுபோலத் திருவையாற்றில் கைலாயமலைக் காட்சியைக் கண்ட களிப்பைக் 'கண்டறியாதன கண்டேன்' என்று அப்பர் மகிழ்ந்து பாடுகிறார். ஒன்று அப்பரின் உறுதிப்பாட்டைக் காட்டுகிறது. மற்றொன்று அளவற்ற மகிழ்ச்சியைக் காட்டுகிறது. இந்த இரண்டு பதிகங்களும் திருநாவுக்கரசரின் புதிய உத்தியால் தனித்தன்மை பெறுகின்றன. நாலடி மேல் ஓரடி வைப்பு, திருவையாற்றுப் பதிகத்தில் அமைந்திருந்தாலும் அங்குத் தாம் கண்ட கடவுள் காட்சியையே திருநாவுக்கரசர் திருவையாற்றில் கண்டதாகப் பாடுகிறார். சிவபெருமான் திருக்கோயிலுக்குள் வீற்றிருப்பதாகவோ அவரைக் கண்ணாரக் கண்டதாகவோ பதிகம் பேசவில்லை. சிவனும் அம்மையும் இருப்பதாகவும் அவர்களை வழிபட அடியார்கள் வருவதாகவும் அவர்களுக்குப் பின்னே தான் வருவதாகவும் அவ்வாறு வரும்போது தெய்வ தரிசனம் பெற்றதாகவும் இவர் பாடுகின்றார். கிட்டற்கரிய பெரும் பேறு கைலாயக் காட்சியைக் காணும்போதுதான் மிகுந்த மகிழ்ச்சியுடன் வருவதை 'வட்டமிட்டு ஆடா வருவேன்' என்றும் 'முகலர்ந்து ஆடாவருவேன்' என்றும் அவர் கூறுகின்றார். இந்தப் போக்கால் தம் அனுபவத்தைத் திருநாவுக்கரசர் பிறரும் எய்துமாறு பதிகத்தைப் பாடுகின்றார்.

## தலமொன்று - பதிகம் பல

திருவையாறு பற்றிய இன்னொரு பதிகம் பழந்தக்கராகப் பண்ணில் அமைந்தது. இது நான்காம் திருமுறையின் பதின்மூன்றாம் பதிகம். இப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் ஈற்று மூன்று சீர்கள் 'ஐயாறர்க்கு ஆளாய் நான் உய்ந்தேனே' என்று முடிகின்றன. மூன்றாம் பதிகம் 'கண்டேன்' என்று முடிகிறது. ஒன்றைக் கண்ட பின்னர்தான் ஈடுபட்டுய்ய முடியும்; ஆகையால் 'கண்டேன்' என்று பாடியவர் அடுத்து 'உய்ந்தேன்' என்று பாடுகிறார். இவ்வாறு ஒரு தலத்துக்குப் பல பதிகங்களைப் பாடும் திருநாவுக்கரசர் ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்த வெவ்வேறு வகையாகக் கருத்தைப் புலப்படுத்தும் உத்தியைக் கையாளுகிறார்.

## உருவமில்லானுக்கு உருவப் புனைவு

நான்காம் திருமுறையில் முப்பத்தெட்டாவது, முப்பத்தொன்பதாவது பதிகங்கள் திருவையாறு பற்றியவை. முப்பத்தெட்டாவது பதிகம் ஐயாறனார் என்ன என்ன பொருள்களை வைத்தார் என்று கூறுகிறது. பாடலின் இறுதிச் சீர்கள் 'ஐயன் ஐயாறனாரே' என்று முடிகின்றன. 'வைத்தார்' என்று கூறுவனவெல்லாம் சிவபெருமான் உருவைப் புனைவன. இலிங்க வடிவாக எழுந்தருளியிருக்கும் சிவக்கொழுந்தைத் திருநாவுக்கரசர் உருவத் திருமேனியாகப் புனைகின்றார்.

"சங்கணி குழையும் வைத்தார்
சாம்பர்மெய் பூச வைத்தார்
வெங்கதிர் எரிய வைத்தார்
விரிபொழில் அனைத்தும் வைத்தார்
கங்குலும் பகலும் வைத்தார்
கடுவினை களைய வைத்தார்
அங்கமது ஓத வைத்தார்
ஐயன் ஐயாற னாரே"

சிவன்பால் சேர்ந்திருப்பனவற்றைத் தான் வைத்ததாகத் திருநாவுக்கரசர் பாடுகிறார். வைத்தார் என்ற சொல்லை வைத்துத் திருநாவுக்கரசர் சிவன் திருவுருவைப் புனைகின்றார்.

### பாடிய வகை புலனாகாமை

திருத்தலங்கள் தோறும் சென்று சிவபெருமானைக் கண்டு வணங்கிய சம்பந்தரும் நாவுக்கரசரும் திருத்தலப் பதிகங்களைப் பாடிய வகை தெரியவில்லை. திருத்தலங்களுக்கு வந்து சிவபெருமானைத் தரிசித்துப் பாடினாரா? அன்றித் திருக்கோயிலில் சிவபெருமான் திருமுன் ஆசுகவியாகப் பாடினரா? இக்காலத்தார் போல ஏடுகளில் எழுதி வைத்து இறைவன் திருமுன் பாடினரா? என்பது ஆராய்தற்குரியது. ஆனால் திருத்தலங்களுக்குச் சென்று தெய்வத் திருமுன் பாடினர் என்பதும் அருளாளர்களாகிய அவர்கள் ஆசுகவியாய்ப் பாடினர் என்பதும் உண்மையாகும். ஒரே தலத்தை ஒருமுறை வந்த போதோ அல்லது பலமுறை வந்த போதோ பாடிய பதிகங்களை வெவ்வேறு வகையாகப் பாடினர். அவ்வாறு பாடுதற்குச் சில உத்திகளைத் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடினர். ஆழ்வார்கள் தங்கள் பாசுரங்களைத் திவ்விய தேசம் (திருத்தலம்) தோறும் சென்று பாடவில்லை; அவர்கள் இருந்த இடங்களில் இருந்து கொண்டே திருமாலை அனுபவித்தனர், சில குறிப்பிட்ட திவ்விய தேசங் களுக்கு மட்டும் சென்று எம்பெருமானைச் சேவித்திருக்கலாம். அதனாலயே சைவத் திருப்பதிகள், திருஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசாலும் மிகுதியாகப் பாடப்பட்டிருக்கின்றன.

### திருவடிச் சிறப்பைப் பாடல்

இதனையடுத்து அமையும் பதிகமும் ஐயாற்றைப் (40) பாடுவதே. இதில் 'அலாது' என்ற சொல்லை வாகீசர் அமைத்துப் பாடுகிறார். இப்பதிகத்தில் இவர் சிவபெருமான் இயல்புகளைச் சொல்லிப் பாடுகிறார். இத்திருமுறையிலுள்ள இன்னொரு பதிகமும் (91) திருவையாற்றைப் பாடுகிறது. இதில் 'தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழ்' என்று ஈற்றடி அமைகின்றது. தாம் நோயால் துன்புற்றதையும் அதைச் சிவபெருமான் போக்கியதையும் 'நோய்வினை' என்ற தொடரால் வாகீசர் பாடுகிறார். இதனை யடுத்துவரும் பதிகம் (92) திருவையாறு பற்றியது. இதிலுள்ள ஒவ்வொரு பாட்டும் ஐயாறன் அடித்தலமே என்று முடிகின்றன. சிவனடியே சிந்திக்கும் ஞானம் பெற்றார்க்கு அவன் திருவடிகள் கிட்டுதற்கு அரியனவாம். சிவபெருமான் திருவடிச் சிறப்பைப் புலப்படுத்துமாறு இப்பதிகம் விளங்குகின்றது.

### அகப்பொருளால் வேறுபடுத்தல்

நான்காம் திருமுறையின் 98-ஆவது திருப்பதிகமாகத் திருவையாறு பற்றிய இரண்டு திருவிருத்தங்கள் இடம் பெற்றுள்ளன. "திருவையாற்றப்பனைப் புந்தியில் புகுந்தான்" என்றும் "கண்ணுள் நின்றான்" என்றும் பாடுகிறார் வாகீசர். இவ்வாறு திருவையாறு பற்றி எட்டுப் பதிகங்களை வாகீசர் பாடியிருக்கிறார். ஒரே தலத்தை ஒருவரே பாடியிருந்தும் ஒவ்வொரு பதிகமும் வேறுபட்டு நிற்பது நோக்கத்தக்கது. திருநாவுக்கரசர் போன்ற அருளாளர்கள் சிவனடியே சிந்திக்கும் செல்வம் பெற்றவர்களாதலின் அவர்கள் சிவபெருமானைக் கடல்மடை திறந்தாற்போலப் பாடுகின்ற வன்மை மிக்கவர்கள், அவர்களின் புலமை ஊற்றம் வெவ்வேறு வகையாகப் பதிகங்களைப் பாட வைத்தன. மரபு வழிவந்த அகப் பொருளைச் சிவனைப் பாடுதற்குரிய பொருளாகக் கொண்டமையும் பதிகத்தை வேறு வகையாகப் பாடுதற்குரிய உத்தியாகும்.

### புராண விளக்கம்

சில பதிகங்களில் பழமொழிகளையும் அறவுரைகளையும் அமைத்துப் பாடும் வாகீசர், புராணக் கதைகளை ஒரு பதிகம் முழுமையும் அமைத்துப் பாடுகிறார். நான்காம் திருமுறையின் (14) தசபுராணப் பதிகம், சிவனுடைய திருவிளையாடல்களை விளக்குகின்றன. இப்பதிகப் பாடல்கள் புராண வரலாற்றைக் கூறுவதுடன் சரணே என்றும் முடிகின்றன. இதனால், பிற பதிகங்களிலிருந்து இப்பதிகம் வேறுபடுத்தப் படுகின்றது.

### போற்றிப் பாடல்

மண்ணுலகத் திருத்தலங்களையெல்லாம் இயற்கை வளந்தோன்றப் பாடிய திருநாவுக்கரசர், கயிலையிலிருந்த பொய்கையில் மூழ்கி ஐயாற்றில், வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும் வள்ளலார்

கயிலையிலிருந்த கோலம் கண்டு தொழுது பாடியருளினார். பாடிய பதிகங்கள் மூன்றும் தொடர்ச்சியாக ஆறாந் திருமுறையில் தொகுக்கப் பட்டிருக்கின்றன. இவை போற்றித் திருத்தாண்டகம் எனப்படுகின்றன. ஒவ்வொரு தாண்டகத்தின் நான்காம், எட்டாம் சீர்களில் போற்றி என்ற சொல் வருகின்றது, இறுதியடியில் இரண்டு போற்றி வருகின்றன. முழுமுதற் கடவுளாய பெருமானைப் போற்றித் திருநாவுக்கரசர் பாடுவன (55, 56, 57) தனித் தன்மையுடையன. அருச்சனை செய்வதுபோல இவை அமைகின்றன.

**அகரவரிசையில் பாடல்**

திருத்தலங்களையும் பதிகங்களையும் பாடுகின்ற திருநாவுக்கரசர், சில புதிய உத்திகளையும் கையாளுகிறார். மொழிக்குரிய எழுத்துகளைப் பாடலின் முதற்சீரில் வைத்து எழுத்து வரிசைப்படி திருநாவுக்கரசர் பாடுகிறார். எழுத்துகளை வைத்துக் கொண்டு பாடல்களை வரிசையாகப் பாட முடியும். இவ்வாறு பாடிய பாடல்கள் ஐந்தாம் திருமுறையில் 'சித்த தொகை' என்று தொகுக்கப்பெற்றுள்ளன (பதிகஎண். 97). இப்பதிகத்தின் இரண்டாம் பாட்டு 'அண்டமார்' என்று தொடங்குகிறது. இதனைத் தொடர்ந்து உயிரெழுத்து களும் மெய்யெழுத்துகளும் வருகின்றன. மொழிமுதலாக வருவன மொழி முதலில் வருகின்றன. ஆய்த எழுத்தை 'அக்கா' என்று உரைப்பார்; அந்த வழக்குத் தழுவித் திருநாவுக்கரசர் 'அக்கும் ஆமையும் பூண்டு' (969) என்பர். எழுத்துவரிசையில் 'ஃ' என்றும், பொருள் கொள்ளும்போது 'எலும்பு' என்றும் கருத்தமையும். மொழிமுதல் வாராத எழுத்துகளை, இரண்டாவது எழுத்தாக (ட, ண, ர, ல, ழ, ள, ன) அமைத்து வாகீசர் பாடியிருக்கிறார். இந்த வரிசையில் வ, ற என்ற இரண்டெழுத்து களுக்குரிய பாடல் இருந்து காணாமல் போய் விட்டன போலும். இவ்வாறு எழுத்துகளை வரிசைப்படுத்தித் திருப்பதிகத்தைப் பாடிய திருநாவுக்கரசர் அகர முதலாகச் சொற்களைக் கொண்டு பாடுவதற்கு வழிகாட்டியாவார்.

**எண்வரிசைப் பதிகம்**

எழுத்து வரிசைப்படி பதிகம் பாடிய திருநாவுக்கரசர் எண்வரிசை அமையுமாறு ஒரு பதிகம் பாடிப் போந்தார். இஃது ஐந்தாந் திருமுறையில் 89-ஆவது பதிகம். இது பொதுப் பதிகம் ஒவ்வொரு பாட்டிலும் ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணின் பெயர்கள் முதற்சொல்லாகப் பாடலமைந்திருக்கிறது. பதிகத்தை வெவ்வேறு உத்திகளால் பாடுதற்கு இத்தகைய போக்குகளைப் படைப்பாளிகள் பின்பற்றுகின்றனர்.

ஒவ்வொரு பதிகத்திலும் ஒவ்வொரு வகையான உத்தியைத் திருநாவுக்கரசர் கையாண்டாலும், சில பதிகங்கள் ஒன்றிரண்டு ஒன்று போலவும் காணப்படுகின்றன. திருத்தொண்டர் புராண ஆசிரியர், பதிகங்கள் பாடப்பெற்ற சூழலை ஆராய்ந்து புராணத்தில் விளக்கியிருக்கிறார். அவரும் கூடச் சில பதிகங்களுக்குச் சூழலைச் சுட்டிச் சொல்ல முடியவில்லை. திருத்தலப் பதிகம் பாடுவதில் திருநாவுக்கரசர் கையாளும் உத்திகள் தனி ஆய்வுக்குரியன.

# 76. நாவுக்கரசரின் வாழ்வும் வாக்கும்

சு. ருக்மணி, தூத்துக்குடி.

மனித மனத்தைப் பண்படுத்துவது இலக்கியமாகும். மனித மனத்தைப் பக்குவப்படுத்தும் பக்தி இலக்கியங்கள் (Literature of Devotion) தமிழ் மொழியில் அமைந்திருப்பது தனிச் சிறப்பாகும். அடியவர்களின் அனுபவங்கள் மனித இனம் ஈடேற வழிவகை செய்கின்றன.. நாவுக்கரசரின் வாழ்வியல் அனுபவங்கள் மன இருளை நீக்கும் ஒளி விளக்கு எனலாம்.

நாவுக்கரசரின் பாடல்கள் பண் சுமந்த பாடல்கள்; அனுபவ முதிர்ச்சி மிக்க பாக்கள். அவரின் பாடல்கள் மனிதன் பிறவிப் பெருங்கடலைக் கடக்க வேண்டுமானால் இறைவனைத் தூமலர் தூவித் தொழுது என்றென்றும் வணங்க வேண்டும் என்பதனை, ''பேசா நாளெல்லாம் பிறவா நாளே'' என்ற அடி விளக்குகின்றது.

### வாழ்க்கையில் வெற்றி பெற

முன்னோர்களின் வரலாறுகள், அவர்களது வாக்குகள் மனச் செம்மை யினை உணர்த்துகின்றது. அடியவர்களின் வரலாறுகள் இளைய தலைமுறை யினருக்கு வெற்றிபெற ஒரு ஊடகமாகத் திகழ்கின்றது. திருநாவுக்கரசரின் வாழ்க்கை, அன்னாரின் கொள்கையின் ஆழத்தை உணர்த்துகின்றது. தன் சிகரம் எது என்பதை உணர்ந்த பான்மையினை விளக்குகிறது. தன் மனத்தைக் கையகப்படுத்தி, அன்னாரின் ஆளுமையினை வெளிப் படுத்துகிறது. இத்தகைய ஆளுமைத் தன்மையுடையவர்களே என்றென்றும் வாழ்க்கையில் வெற்றி பெறுவர்.

தருமசேனர் என்ற பட்டம் பெற்ற நாவுக்கரசர் சமணசமயத்திலிருந்து சைவ சமயத்தைச் சார்ந்தவர். மதம் மாறிய தன்மையினைக் கேள்விப் பட்ட மகேந்திர பல்லவன் நீற்றறையில் இட்டான்; யானை கொண்டு இடறச் செய்தான்; கற்றுணைப் பூட்டிக் கடலிடைப் பாய்ச்சினான். நாவுக்கரசர் கொண்ட கொள்கையில் குன்றா நிலையினால், இறையருளே தம்மைக் காத்து நிற்கும் என எண்ணினார். அருளது சக்தியாகும் என்ற ஆளுமைத் தன்மை யினைக் கொண்டவராதலால், அன்னாருக்கு நீற்றறை சோலையாயிற்று.

''மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்

மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே''

வாழ்வியல் வெற்றிக்கு என்றென்றும் உறுதுணையாய் இருப்பவர் இறைவன் என்ற வாக்கினை, நீற்றறை நிகழ்வு உணர்த்துகின்றது.

**ஈசன் தந்தது ஈசனால் தீரும்**

அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது. இறைவன் சித்தம் எதுவோ, அது எவ்விதத் தடங்கலும் இன்றி நடைபெறும். இதனை அறியாத மானுடர் துன்பக் கடலில் சிக்கித் தவிப்பர். இறையன்பு உணர்ந்தவர்கள் வாழ்வில் துன்பமும் இன்பமாகும். நாவுக்கரசருக்குத் துன்பம் ஏற்பட்டது. அவரைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலிடைச் செலுத்தினார்கள். கடலிடைப் பாய்ச்சிய போதும் இறைவனின் செயல் என்பதனை உணர்ந்ததால் தான், எல்லாவற்றிற்கும் 'நமசிவாய' என்ற மந்திரமே மூலாதாரமாகும் என்ற வாக்கினை உலகிற்கு அளித்தார்.

''வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் பரிசுஒன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே''

என்ற இறைவனின் விருப்பம்,

''கற்றுணைப் பூட்டிக் கடலிடைப் பாய்ச்சிலும்
நற்றுணை யாவது நமச்சிவாயமே''

என்ற வாக்காக விளங்கியது.

**இனியன் என்றென்றும் உடலுறைவான்**

உடலும் உள்ளமும் மகிழ்ச்சி கொள்ள இடையறாது சிவனை வணங்குங்கள். பொருட்களில் உயர்வுடையது பொன். பொன்னின் ஒளி உடலுக்குத் தனித்தன்மை தருவது போன்று உயிர்க்கு உறுதி அளிப்பவன் நற்கதி அருள்பவன், இறைவன் மட்டும்தான். இறைவனை வணங்கினால் தன்னினும் தனக்கு நன்மை செய்ய ஒருவர் இருக்கின்றார் என்ற உணர்வு மனிதர்க்கு ஏற்படும். பழையாறையில் வடதளியில் சிவாலயமானது சமணர்களால் மறைக்கப்பட்டிருந்தது. இதனை உணர்த்த நாவுக்கரசர் என்ன செய்வது என்று அறியாமல் திகைத்தார். திகைத்தவர் 'உண்ணா நோன்பினை' மேற்கொண்டார். அடியவர்களின் இன்னல்களை உணர்ந்த இறைவன் மன்னன் கனவில் தோன்றினார். மறைக்கப்பட்ட சிவாலயம் மக்களால் தொழத்தகும் நிலைக்கு உயர்வு பெற்றது. இந்நிகழ்வு இனியனான இறைவனருள் என்றென்றும் உடலுறையும்போது மனிதர்க்கு எத்துன்பமும் அண்டாது என்பதனை உணர்த்துகின்றது. இச்சக்திதான் 'யாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்' என்று மன்னனோடு பேச வைத்தது எனலாம்.

**ஊரும் உயிர்க்குத் துணையும்**

மனிதன் ஊரில் குடியிருக்க வேண்டும் என்பர் நாவுக்கரசர். ஊர் எனப்படுவது உயர்ந்தோர் வாழும் இடமாகும். இறைவன் தங்கியிருக்கும் கோவிலில் விழாக்கள் நடைபெறுதல் வேண்டும். வெண்சங்கு ஒலிக்க வேண்டும். ஆகம முறைப்படி வழிபாடுகள் நடக்க வேண்டும். அத்தகு ஊர் தான் ஊர். இல்லை எனில் அது 'காடு' என்பார். அத்தகைய ஊர்களில் அடியவர்களை வணங்கி வாழ்தல் என்பது நடைபெறும். ஏனெனில் இறைவன் அடியவர்களின் உள்ளத்துள் விளங்குபவன். ஊர் என்றாலே "நினைக்க முக்தி திருவண்ணாமலை; பிறக்க முக்தி திருவாரூர்; வசிக்க முக்தி காஞ்சிபுரம்; மரிக்க முக்தி காசி" என்ற நினைவினை ஏற்படுத்தும் செல்வம் என்பது சிந்தையின் நிறைவு என்பதனை ஊர் ஏற்படுத்த வேண்டும். அத்தகு ஊரில் ஞான நன்னெறி தழைத்தோங்கும்.

சைவம் தழைக்க மனையறத்தில் தவம் செய்த ஒப்பற்ற மாமணி திலகவதியார். தம்பியர் உளராக வாழ்ந்த காரணத்தினால், இயல்பாகவே உழவாரப் படையேந்தி தொண்டறம் செய்யத் தலைப்பட்டார் நாவுக்கரசர். ஞான நன்னெறியுடையவர்க்கு இயற்கையும் தலைவணங்கும். சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாள் நாயனாரும் திருவையாற்றிற்கு வருகின்றனர். காவிரி வெள்ளம் கரைபுரண்டோடியது. அடியவர்கள் இறைவனைக் கண்டு தரிசிக்காமல் போய்விடுவார்களோ என்று எண்ணும் போது, அவனது சக்தியால் காவிரி ஒதுங்கி நின்று வழிவிட்டது. அடியவர் களும் ஆண்டவனைக் கண்டு வணங்கினார்கள். இந்நிகழ்வு ஞான நன்னெறியுடையவர்கட்குத் துன்பம் ஒருபோதும் இல்லை என்பதனை உணர்த்துகின்றது.

**மனம் பூவாக மலர**

மனம் பூவாக மலர ஒளவியம் ஒழிப்போம். ஒளவியச் செயற்பாடு களே மனித இனத்தின் சரிவுகளுக்குக் காரணமாகின்றன. வளர்ச்சியினால் பொறாமை அதிகரிக்கும், ஆத்திரமும் கேடும் மிகுதியாகும். போருக்கும் அழிவிற்கும் துணைநிற்கும். மனிதனை உள்ளிருந்து உருக்குலைக்கும். மனத்துக்கண் ஏற்படும் பொறாமையினை அழிக்கும் சக்தி அரண் தனக்கு மட்டும் என்பதனை உணரவேண்டும். சைவம் தழைக்க வந்த நாவுக்கரசருக்குச் சமணர்கள் தந்த இன்னல்கள் புற்றீசல் போல மாய்ந்தன.

இறைவன் அத்துன்பத்தை நமக்கு ஏற்படுத்தியது நாம் உணர்ந்து திருத்துவதற்காக வந்த ஒரு வாகனம் என்பதை உணர வேண்டும். துன்பம் வந்தால் மீண்டும் அத்துன்பம் வராமல் காக்க வேண்டும். எல்லாம் இறைவன் செயலே என்ற நிலை இருக்க வேண்டும். இன்பமே அன்றித் துன்பமே இல்லை என்பதனை உலகிற்கு உணர்த்த வேண்டும்.

இவ்விரண்டு நோக்கங்களும் நாவுக்கரசரின் வாழ்க்கையில் காணப்படுவதால், அன்னாருடைய சைவ மனம், உலகிற்கே சைவம் பரப்பும் மனமாக மாறியது. 'நாவினுக்கு அருங்கலம் நமசிவாய' என்று நாள்தோறும் மனம் பூவாக மலர, நமசிவாய என்று சொல்வோமே' நாதன் தாள் பணிந்து நிற்போமே! என்று மாறியது.

சூலைகாட்டி ஆட்கொள்ளப்பட்ட நாவுக்கரசரின் உள்ள உறுதிப் பாட்டினையும்; இறையே உயிர்க்குத் துணை என்ற சிந்தனையையும்; தொண்டறமே ஞான நன்னெறிக்கு வித்து என்பதனையும் அன்னாருடைய பாடல்கள் உணர்த்துகின்றன. பக்தியால் பலகாலும் தொழுது வாழும் மக்களைப் பின்பற்றுபவர்கள் இவ்வுலகில் உண்டு. காணாமலே பக்தி கொண்டு உலகில் வாழும் அப்பூதியடிகளே நாவுக்கரசரின் வாழ்விற்கும் வாக்கிற்கும் உறைகல் எனலாம்.

''பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்''

என்ற வள்ளுவ வாய்மொழிக்கு நாவுக்கரசரின் வாழ்வும், நாவுக்கரசரின் வாழ்வியலுக்கு அப்பூதி அடிகளின் வாழ்வும் சான்றாகும்.

# 77. நாவுக்கரசர் சுட்டும் புராணச் செய்திகள்

சு. லலிதா, ஈரோடு.

**புராணங்கள் பற்றிய புலமை**

புராணக் கதைகள் ஒவ்வொன்றிலும் மானிட சமுதாயத்திற்குத் தேவையான உபதேசங்கள் இருக்கும். கதைகள் எப்படிப்பட்டதாக இருப்பினும் அவை உணர்த்தும் செய்திகளும் அக்கதைகளில் உள்ளுறையாக மறைந்துள்ள கருத்துக்களும் மானிட சமுதாயத்திற்குத் தேவையான வழிமுறைகளைக் கூறுவனவாக அமைந்துள்ளன. நுண்ணோக்கிகள் மிகச் சிறிய பொருள் களையும் பெரிதாகக் காட்டி அவைகளைப் பற்றிய பல விவரங்களைத் தருவதுபோல புராணங்களும் நுட்பமான செய்திகளை எளிய மக்களும் உணர்ந்து கொள்ளுமாறு கூறுகின்றன. திருநாவுக்கரசரும் தம்முடைய பதிகங்களில் பல இடங்களில் புராணச் செய்திகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். திருநாவுக்கரசர் சுட்டியுள்ள புராணச் செய்திகளைப் பற்றி இக்கட்டுரை ஆராய்கின்றது.

**அருச்சுனர்க்குப் பாசுபதம் தந்தது**

சிவபெருமான் அருச்சுனர்க்குப் பாசுபதம் தந்த செய்தியை நாவுக்கரசர் 4.71, 4.486, 4.826 ஆகிய பாடல்களில் கூறியுள்ளார். அருச்சுனனுக்கு அம்பும் வில்லும் மந்திரங்களும் கொடுத்தார் என்று 6.826 பாடல் தெரிவிக் கிறது. இப்பாடலுக்கு உரையில் 'பாசுபதம் என்ற அம்பைச் செலுத்தும் மந்திரங்களை உபதேசித்தார்' என்று உரை விளக்கம் செய்யப்பட்டுள்ளது. இவ்விடத்தில் மகாபாரதச் செய்தியை திருநாவுக்கரசர் எடுத்துக்காட்டியுள்ளார்.

**ஆலின் கீழ் அறமுரைத்தது**

சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் முதலிய நான்கு முனிவர் களும் சிவபெருமானிடம் சென்று சிவாகமத்து உட்பொருளை உணர்த்தியருள வேண்டினர். பெருமான் தென்முகக் கடவுளாய் கல்லாலமரத்து நிழலில் அமர்ந்து வாக்கினால் சொல்லாது ஞான முத்திரையாகிய கோலத்தால் சிவதர்மத்தை உபதேசித்தார். இந்த வரலாற்றை அப்பர் 4-61, 4-1021, 5-254, 5-593 ஆகிய பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

**உபமன்யுக்குப் பாற்கடல் ஈந்தது**

4-1021, 5-567 ஆகிய பாடல்களில் உபமன்யுக்கு இறைவன் பாற்கடல் ஈந்த செய்தி பேசப்படுகிறது.

உபமன்யு முனிவர் வியாக்கிரபாத முனிவருடைய திருமகனார் ஆவார். உபமன்யுவின் தாய்மாமன் வசிட்டர். இவரிடத்தில் வளர்ந்து

வந்தபோது காமதேனுவின் பாலை உண்டவர் உபமன்யு. அதனால் அளவற்ற அரிய தவத்தை உடைய குழந்தை எனப் புகழப் பெற்றார். அப்பாலகன் பாலுக்கு அழ, பாற்கடலை நோக்கி, ''நீ பாலகனிடம் செல்க'' என்று ஆணையிட்டார் சிவபெருமான். இவ்வாறு உபமன்யுக்கு பாற்கடல் ஈந்த வரலாற்றை நாவுக்கரசர் கூறியுள்ளார்.

**உமை தழுவக் குழைந்தது**

''உமையம்மையார் கச்சியில் கம்பையாற்றங்கரையில் இறைவனை இலிங்க வடிவில் வழிபட்டுக் கொண்டிருக்கும் பொழுது அவனது திருவிளையாடலால் அந்த ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து வர, அதனைக் கண்டு அம்மையார் செய்வதறியாது இறைவனைத் தழுவிக் கொள்ள, வெள்ளம் நெருங்கி வராது விலகிச்சென்றது. அம்மையார் தழுவிய கைகளை வாங்க அவரது தனத்தழும்பும், வளைத்தழும்பும் இறைவனது புராணத் திருமேனியில் நீங்காது நின்றன. இக்கருத்தை நாலாந் திருமுறையில்,

''நலமலி மங்கைநங்கை விளையாடியோடி
நயனத்தலங்கள் கரமா''

எனத் தொடங்கும் பாடலின் வாயிலாக அறியலாம். ஏகம்பனின் நயனத்தை அம்பிகையின் கரம் மூடியபொழுது நடந்த நிகழ்ச்சிகளை இப்பாடல் கூறுகிறது. இவ்வாறாக காமாட்சி அம்மன் ஏகம்பரநாதனை வழிபட்ட வரலாற்றை நாவுக்கரசர் மிக அழகாகச் சுட்டியுள்ளார்.

**சிவபெருமான் தருமிக்குப் பொற்கிழி அளித்தது**

''நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்''

என்பது அப்பர் வாக்கு. இறைவன் 'தருமி என்னும் அந்தணச் சிறுவனுக்கு கொங்குதேர் வாழ்க்கை' என்னும் அகப்பாட்டைப் பாடி ஈந்தார். அதனை அறியாது குற்றங் கூறிய நக்கீரர் முன் புலவனாகச் சங்கத்தில் சென்று வாதிட்டுப் பாட்டு குற்றமற்றது எனவும், அதனைக் குற்றம் கூறியதே குற்றம் எனவும் தெரிவித்து, பாண்டியன் வைத்திருந்த பொற்கிழியை அவ்வந்தணச் சிறுவன் பெறச் செய்து மறைந்தனர். இவ்வாறு சிவபெருமான் தருமிக்குப் பொற்கிழி பெற்றுத் தந்த வரலாற்றை வடிவமைத்துள்ளார்.

**கோச்செங்கட் சோழ நாயனார்**

உயிர் பிரியும்போது எந்த நினைவுடன் பிரிகிறதோ அந்த நினைவிற்கு ஏற்ப மறுபிறவி அமையும் என்பது சமயக் கொள்கையாகும். இதற்கு ஏற்றாற்போல் நாலாந் திருமுறை, நானூற்று எழுபத்தொன்பதாம் பாடலில்,

''சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர்செய்து
உலந்தவ ணிறந்தபோதே கோச்செங்க ணானுமாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்
குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே''

எனக் கோச்செங்கட் சோழரின் வரலாற்றை நாவுக்கரசர் குறிப்பிடுகிறார்.

## அட்டவீரச் செயல்கள்

ஆறாந் திருமுறை எழுநூற்றுப் பன்னிரண்டாம் பாடலில்,

''காவிரியின் கரைக்கண்டி வீரட் டானங்
கடவூர்வீ ரட்டானங் காமருகுசீ ரதிகை
மேவியவீ ரட்டானம் வழுவைவீ ரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்''

என்று தொடங்கி சிவபெருமான் புரிந்த எட்டு வீரச்செயல்களையும் நாவுக்கரசர் மொழிந்துள்ளார். இதில் 'பிரமன் சிரத்தை அரிந்தது காலனை உதைத்தது', திரிபுரத்தை எரித்தது, யானையை உரித்தது, தக்கன் வேள்வியைத் தகர்த்தது, அந்தகாசுரனை அழித்தது, காமனை எரித்தது, சலந்தராசுரனை அழித்தது ஆகிய வீரச்செயல்களை சிவபிரான் செய்தருளியதாக விளக்குகிறார்.

## சகரர்கள்

'சகரர்கள்' என்பவர்கள் அறுபதினாயிரவர். அவர்கள் கபில முனிவரது வெகுளித்தீயால் சாம்பலாகி நரகடைந்தனர். அவர்கள் வழியில் தோன்றிய பகீரதன் தவம் செய்து தேவகங்கையை மண்ணிற் கொணர்ந்து, அதனைச் சடையில் ஏற்றுப் பின்னர், தன் முன்னோர்கள் நல்லுலகடையுமாறு அவர் தம் சாம்பலிற் சென்று பாய விடுக்கும்படி சிவபிரானை வேண்டி அங்ஙனம் செய்யப் பெற்றான். இவ்வரலாற்றை ஆறாந் திருமுறை முன்னூற்று நாற்பத்தொன்பதாம் பாடலில் எடுத்துக்காட்டுகிறார் நாவுக்கரசர்.

கருத்தை மக்கள் மத்தியில் வெளிப்படுத்தக் கூடிய ஒரு எளிய சாதனமாக புராணங்கள் அமைந்துள்ளன. அதனை இக்கட்டுரை தெளிவு படுத்துகின்றது.

அப்பர் தேவாரம் சிவபெருமான் அருச்சுனர்க்குப் பாசுபதம் அளிக்கக் கதையைக் குறிப்பிடுகின்றது. மகாபாரதச் செய்தியும் இதில் இடம் பெறுகின்றன என்பதை இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

சிவபெருமான் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் சிவதர்மத்தை உபதேசித்தார். இச்செய்தி அப்பர் தேவாரத்தால் அறிய முடிகின்றது.

சிவ்பெருமான் உபமன்யுக்குப் பாற்கடலை ஈந்தார் என்ற செய்தியை இக்கட்டுரை ஆராய்ந்துள்ளது.

அப்பர் தேவாரம் சிவபெருமான் தருமிக்குப் பொற்கிழி அளித்த செய்தியை எடுத்துரைக்கின்றது.

திருமால் ஆயிரம் பூவால் வழிபாடு செய்து சிவனிடமிருந்து சக்கரம் பெற்றார் என்ற செய்தி அப்பர் தேவாரத்தினால் அறிய முடிகின்றது.

இவ்வாறான புராணச் செய்திகள் அப்பர் பாடல்களில் மலிந்து கிடப்பதனை இக்கட்டுரை எடுத்துரைக்கின்றது.

# 78. நாவுக்கரசரின் இசைத்தமிழ்

இரா. வசந்தமாலை, புதுவை.

"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்" என்று தமிழோடு இசையை இணைத்துக் கண்டவர் திருநாவுக்கரசர். இவர் திருஞான சம்பந்தருடன் இணைந்து இசைப் பணியாற்றியவர். திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் முதலான இசைவடிவங்களில் பாடல் களை இயற்றியவர். இயற்றமிழில் யாப்பிலக்கண விதியின்படி அறுசீர் விருத்தம், கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், எண்சீரான் வந்த கொச்சக வொருபோகு முதலானவற்றிற்கு இசைத்தமிழில் திருநாவுக்கரசரால் சூட்டப்பெற்ற புத்தம் புதிய பெயர்களே, 'திருநேரிசை', 'திருவிருத்தம்', 'திருக்குறுந்தொகை', 'திருத்தாண்டகம்' என்பனவாகும். பக்தி இலக்கியக் காலம் என்பது இசைத்தமிழுக்கு முதலிடம் அளிக்கப் பெற்ற காலம். நாவுக்கரசரின் இசைத்தமிழ் குறித்து எடுத்தியம்புவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். சேக்கிழார் பெருமானும்,

> "கண்டுதொழுது வணங்கிக் கண்ணுதலார் தமைப்போற்றிக்
> கொண்ட திருத்தாண்டகங்கள் குறுந்தொகை, நேரிசை, அன்பில்
> மண்டுவிருத்தங்கள் பாடிவணங்கித் திருத்தொண்டு செய்தே
> அண்டர்பிரான் திருஐயாறு அமர்ந்தனர், நாவுக்கரசர்"
>
> (பா. 1655)

என்று நாவுக்கரசரின் இசைப்பாடல்கள் குறித்து இயம்பியுள்ளார்.

**திருநேரிசை**

திருநாவுக்கரசரின் நான்காம் திருமுறையில் 22 முதல் 79 வரை யுள்ள பதிகங்கள் திருநேரிசைக்குரிய பதிகங்களாகும். 22, 23-ஆம் பதிகங்களுக்குரிய பண் 'கொல்லிப் பண்' ஆகும். ஏனைய 24 முதல் 79 வரையுள்ள பதிகங்கள் எவ்விதப் பண்ணின் பெயராலும் குறிக்கப்பட வில்லை. 'திருநேரிசை' என்ற குறிப்பு மட்டுமே தென்படுகின்ற இப்பதிகங் களை இசைவல்லுநர்கள் 'கொல்லி'ப் பண்ணிற்குரிய 'நவரோசு' இராகத்திலேயே பாடி வருகின்றனர்.

திருநேரிசையைப் பற்றி இருவேறு கருத்துகள் நிலவி வருகின்றன. இது பண் (அ) இசைப்பாட்டு வகைகளுள் ஒன்று என்று ஒருசாராரும், இது யாப்பு வகையுள் ஒன்றே தவிரப் பண் அல்ல என்று மறுசாராரும்

கருதி வருகின்றனர். நேரிசை என்பது பண் (அ) இசைப்பாட்டு வகையே என்பதற்குப் பின்வரும் சான்றுகள் கிடைக்கின்றன.

1. நேரிசை என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி 'இராக வகை' (ப.2360) என்றே பொருளுரைக்கின்றது. தமிழ் - தமிழ் அகரமுதலி 'பண்வகை' என்றே சுட்டுகிறது. (ப. 692)

2. 'நேரிசை அறுபதம் முரன்று' (1:75:3) என்பது திருஞானசம்பந்தரின் இசைப்பாட்டு வரிகளுள் ஒன்று. இதில் இடம்பெறும் 'நேரிசை' என்பதற்கு ச. தண்டபாணி தேசிகர் 'ஒருவகைப் பண்' என்றே குறிப்புரை தருகின்றார்.

3. 'நேரிசை என்பது ஒரு பண்தான், வெறும் இயற்பாட்டு அன்று. அது திருஞானசம்பந்தர் பதிகத்திலேயே பண்ணாகக் குறிக்கப்பட்டுள்ளது. அதே பெயர்தான் திருநாவுக்கரசர் பாடிய இந்தப் பதிகத்திற்கும் வந்திருக்கிறது' என்பர். (லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், (ப.ஆ), பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும், ப.213)

4. ''இன்றைக்கு ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப் பட்டதாகக் கருதப்படும் திருவாவடுதுறை ஆதீன ஏட்டுப் பிரதி யொன்றில் பகற்பண், இராப்பண், பொதுப்பண் எனப் பண்களை வகைப்படுத்திப் பண்களுக்குரிய இராகப் பெயர்கள் தரப்பட்டுள்ளன'' (ஞானாகுலேந்திரன், பழந்தமிழர் ஆடலில் இசை, ப.87) இத்தகைய பண்களும் இதற்குரிய இராகங்களும் கூறப்பட்டுள்ள பட்டியலில் இராப்பண்கள் வரிசையில் திருநேரிசையும் அடங்கியுள்ளது. இதற்குரிய பண் 'சிந்துகன்னடா' என்றும் வகுக்கப்பட்டுள்ளது. எனவே, இவ்வேட்டுப் பிரதி 'திருநேரிசை' என்பது 'பண்' என்றே உறுதி செய்கிறது.

5. ஓதுவார்கள் நேரிசைக்குச் சுரம் அமைத்துள்ள முறையும் நேரிசை இசைப்பாட்டுள் ஒன்று என்பதை உணர்த்தும்.

**திருவிருத்தம்**

திருநாவுக்கரசரின் நான்காம் திருமுறையில் 80 முதல் 113-ஆவது வரையிலான பதிகங்கள் 'திருவிருத்தம்' எனும் இசைப்பாடலுக்கு உரியன. இதில் 80,81 எனும் இரண்டு பதிகங்களும் கொல்லிப் பண்ணிலமையும். ஏனைய பதிகங்களில் பண்கள் வகுக்கப் பெறாமல் 'திருவிருத்தம்' என்ற குறிப்பு மட்டுமே தென்படுகின்றது. யாப்பருங்கலம் குறிப்பிடும் 'தாழிசை, துறை, விருத்தம்' (யா.க.56) எனும் மூவகைப் பாவினத்துள் ஒன்றாக விருத்தம் இடம் பெறினும், பக்தி இலக்கிய காலத்தில் 'இசைப்பாட்டிற்கு' இது ஒருவகைப் பெயராயிற்று. இன்றைய நிலையில் இசை வல்லுநர் களால் விருத்தமாகப் பாடும் மரபு என்ற ஒன்றுண்டு. அதாவது, தாளமின்றி,

சுத்தாங்கமாகப் பாடும் மரபினையே விருத்தமாகப் பாடுதல் என்பர். எனவே, விருத்தம் என்பது இசைபாடும் முறையுள் ஒன்று என்பதும், இசைப்பாட்டு வகையுள் ஒன்று என்பதும் தெளிவாகின்றது.

1955-56-ஆம் ஆண்டு நடந்த பண்ஆய்வுக் கூட்டத்தில் - "இது லயாங்கமாகப் (தாளத்துடன்) பாடுகிறபோது கொல்லிப் பண்ணில், பெரும்பாலும் சுத்தாங்கமாகவே பாடப்பட்டு வருகின்றது. சுத்தாங்கமாகப் (தாளமின்றி) பாடுங்காலத்தில் கௌசிகப் பண்ணிலும், பழம் பஞ்சுரப் பண்ணிலும்தான் பாடுகிறார்கள்" (பண் ஆராய்ச்சியும் அதன் முடிவு களின் தொகுப்பும், ப.330) என்பதிலிருந்து திருவிருத்தம், கொல்லி (நவரோசு), கௌசிகம் (பைரவி), பழம்பஞ்சுரம் (சங்கராபரணம்) போன்ற பண்களில் (இராகங்கள்) பாடுகின்ற மரபினைப் பெற்றிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

**திருக்குறுந்தொகை**

திருநாவுக்கரசரின் ஐந்தாம் திருமுறையில் உள்ள நூறு பதிகங்களும் 'திருக்குறுந்தொகை' அமைப்பைச் சார்ந்தனவாகும். இப்பாடல்களின் சிறப்புத் தன்மை இதன் சந்தக் கூறுகளே என்பதை வலியுறுத்துமுகமாக, "அடிகளார் ஒரு தலத்திலிருந்து மற்றொரு தலத்திற்குச் செல்லும் போதெல்லாம் பாடிய பாட்டுக்கள் குறுந்தொகை என்னும் புதிய வடிவம் பெற்றன. மிக எளிதான சந்த அமைப்புடன் கூடியனவாய், இறைவனை முன்னிலைப்படுத்தி வழிபடுவதற்கும், மக்களுக்கு அறிவுரை கூறுவதற்கும் ஏற்றனவாய் உள்ளன இப்பாக்கள்" (ஞானாகுலேந்திரன், தெய்வத்தமிழிசை, ப. 75) எனும் கூற்று அமைகிறது.

பண் ஆராய்ச்சியின் விளைவாக (1958-ஆம் ஆண்டு) குறுந்தொகை பற்றிய பல்வேறு கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. குறுந்தொகை என்பது பண்வகையா அல்லது செய்யுள் வகையா எனும் ஐயம் எழுப்பப் பெற்றது. இவ்வுரையில் துரையரங்கனார்,

"தொலைவிலே இருந்து ஒருவன் பாடுகின்றபொழுது அந்தப் பாட்டு இன்ன ஓசையுடையது, ஆகையினாலே அது இன்ன பாடலாகும் என்றுதான் கருதி வந்ததாகத் தெரிகிறது. வெண்பா என்று சொன்னால் வெண்பா ஓசையுடையது. அகவல் என்று சொன்னால் அகவல் ஓசை யுடையது, என்று இவ்வாறுதான் கருதி வந்தார்கள் என்று தெரிவதனாலே குறுந்தொகை பிற்காலத்திலே குறுகிய அடிகளை உடையது என்று இருந்தாலும் கூட, குறுந்தொகை இசை என்று ஏதோ ஒன்று இருந்திருக்க வேண்டுமென்று கருதுகிறேன்". (பண் ஆராய்ச்சியும் அதன் முடிவு களின் தொகுப்பும், ப. 144) என்று இசையுடன் திருக்குறுந்தொகையை இணைத்துக் காண்கின்றார்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள ஒலிநாடாவில் 'திருக்குறுந்தொகை' பாடல் ஒன்று சங்கராபரண இராகத்தில் சுத்தாங்க மாகப் (தாளமின்றி) பாடப்பட்டு இவ்வொலி நாடாவுடன் வெளியிட்டுள்ள 'பக்தித் தமிழ்' எனும் ஒலிநாடா விளக்கக் குறிப்பேடும் இக்குறுந்தொகை பற்றிய பண்குறிப்பினைத் தருகின்றது. அப்பாடல்,

''தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடிவந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப்போம் நமதுள்ள வினைகளே'' (5:43)

என்பதாகும். இக்குறுந்தொகைப் பாடல்கள் 'பெருமிதம்', 'மருட்கை' எனும் சுவைகளுக்குரியன என்றும் இசை வல்லுநர்கள் வகுத்துள்ளனர்.

**திருத்தாண்டகம்**

திருநாவுக்கரசரின் ஆறாம் திருமுறையில் 99 பதிகங்கள் காணப்படுகின்றன. இப்பதிகங்கள் அனைத்தும் 'தாண்டகம்' எனும் அமைப்பிற்குரியன. இப்பதிகங்கள் குறித்து,

''பல்வகைத் தாண்டகத் தோடும்
பரவும் தனித் தாண்டகமும்
அல்லல் அறுப்பவர் தானத்து
அடைவு திருத் தாண்டகமும்
செல்கதி காட்டிடப் போற்றும்
திருஅங்க மாலையும் உள்ளிட்டு
எல்லை இல்பன்மைத் தொகையும்
இயம்பினர்; ஏத்தி இருந்தார்'' (பெ.பு:1660)

என்பார் சேக்கிழார்.

நாவுக்கரசர் இயற்றிய ஆறாம் திருமுறை முழுவதும் நெடுந்தாண்டக அமைப்பால் ஆனது. இத்தாண்டக அமைப்பே திருமங்கையாழ்வாராலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவர் பாடிய இருபது பாடல்களைத் 'திருக்குறுந்தாண்டகம்' என்றும், முப்பது பாடல்களைத் 'திருநெடுந்தாண்டகம்' என்றும் வழங்குதல் காணலாம். யாப்பு நிலையில் இத்தாண்டகம் குறித்த ஆய்வுகள் மிகுதி என்றாலும் இசைநிலையில் நோக்கும்பொழுது தாண்டகம் குறித்த இசை ஆய்வுகள் மிகக் குறைவே. இத்தாண்டகம் குறித்து, ''தாண்டகத்தில் - வருணத்தின் தாளக் காலப் பின்னல்கள் உண்டு. இவரே வர்ணம் எனும் உருப்படிகட்கு வேரும் அடிமரமும் மூலமும் ஆவார். வருணத்தில் தாளக் கணக்கின் பின்னங்கள் பின்னிப் பிணைந்து அழகு ததும்ப நிற்கும். அந்தக் கணக்குப்படி எந்தப் பண்ணிலும் தாண்டகம் பல தாளத்திற்கு அமைத்துப் பாடலாம்'' (வீ.ப.கா. சுந்தரம், தமிழ் இசையியல்

வளர்ச்சி, செந்தமிழ்ச் செல்வி (சூலை:2001, ப.13) என்றும்; 'தக தகிட தக தகிட தகிட தகிட" என்பது தாண்டகத்தில் இடம்பெற்ற தாளக்கணக்கு என்றும் (தமிழ் இசையியல் வளர்ச்சி, ப.27) வீ.ப.கா. சுந்தரம் விளக்கியுள்ளார்.

திருநாவுக்கரசரின் தாண்டகப் பாடல்களைப் பண்ணாங்கமாகவும், சுத்தாங்கமாகவும் ஓதுவார்கள் பாடி வருகின்றனர். தேவாரப் பதிகங்கள் இதன் பண் குறித்துக் குறிப்பிடவில்லை. இருப்பினும், ''திருத்தாண்டகப் பாடல்களை அரிகாம்போதி இராகத்தில் பாடுவது மரபு. இது பழந்தமிழர் கண்ட 'பாலையாழ்' ஆகும்'' (ஞானகுலேந்திரன், தெய்வத் தமிழிசை, ப.13) என்பர். 1950, 1953-ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற பண் ஆராய்ச்சியின் விளைவாக,

(i) திருத்தாண்டகம் விருத்தப் பாடல்களைச் சேர்ந்தது; தாளமில்லை; எந்த இராகத்திலும் பாடலாம்.

(ii) பரம்பரையாகவே அரிகாம்போதி இராகத்தில் பாடப்பட்டு வருவது.

(iii) தென்னாட்டின் சிவாலயங்களிலும், மடங்களிலும் 'பியாகடை' இராகத்திலும், சண்முகப்பிரியா, தோடி, பைரவி முதலான இராகங் களிலும் பாடும் மரபு இருந்து வருகின்றது.

(iv) திருத்தாண்டகம் சுத்தாங்கமாகப் பாடும் இசைப்பாடல் எனினும், சிலசமயங்களில் பண்ணாங்கமாகவும் பாடப்படுவதுண்டு.

(v) 'தாண்டகம்' பண்ணைக் குறிப்பதா அல்லது செய்யுளைக் குறிப்பதா என நோக்கும்போது திருமுறைகண்ட புராணம் 'பண்' என்றே குறிப்பிடுகின்றது. இதற்கு மாறாகத் தாண்டகம் செய்யுள் வகையைச் சார்ந்தது. பாடுகிறவர்கள் பரம்பரையாகப் பழைய 'செம்பாலை' யிலேதான் அதாவது இக்கால அரிகாம்போதியிலேதான் பாடுகிறார்கள். செம்பாலைப் பெரும் பண்ணைக் காப்பாற்றி வரும் பெருமை திருத்தாண்டகத்திற்கே உரியது.

என்று பல்வேறு கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள தேவாரப் பண்கள் ஒலி நாடாவில், ''முற்றாத பால் மதியம்'' எனும் பாடல் அரிகாம்போதியில் சுத்தாங்கமாகப் பாடப்பட்டுள்ளது. இத்தகு திருத்தாண்டகப் பாடலுக்கு மூல இலக்கியமாக விளங்குவன திருநாவுக்கரசரின் திருத்தாண்டகப் பதிகங்களே. இத் திருத்தாண்டகப் பதிகப் பாடல்கள் பெருமிதம், மருட்கை, அவலம், இளிவரல் முதலான சுவைகளுக்குரியன எனவும் பல்வேறு இசையறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். எனவே, திருமுறைப் பாடல்கள் அனைத்தும் இசைத் தமிழுக்கு உரியன என்றாலும், யாப்பு நிலைகளைப் புதிய இசைவடிவங் களுடன் புதுப்பெயரிட்டு இசைப்பாடல்களைப் படைத்தவர் திருநாவுக்கரசர் என்பதில் ஐயமில்லை.

# 79. சமண் புகுதலில் சைவக் கண்ணோட்டம்

வி. வசுமதி, உடுமலை.

''தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்'' என்று தமிழுக்கு மட்டு மின்றிச் சைவத்திற்கும் தொண்டாற்றியவர் திருநாவுக்கரசர். இச்சைவ சமயத்திற்கு இவரின் பணிகள் இத்தகு சிறப்பாக அமைய கடந்த கால வாழ்க்கையில் சமண் சமயம் புகுந்தமை காரணமாக அமைந்தது என்றால் மிகையாகாது. இக்கருத்தினை ஆய்கின்றது இக்கட்டுரை.

**நோக்கம்**

மருணீக்கியார் என்றும், தருமசேனர் என்றும், போற்றப்பட்ட இவர் சைவத்திற்குள் நுழைய திருநாவுக்கரசராக மிளிர்கின்றார். திருஞான சம்பந்தரால் அப்பர் என்று அழைக்கப்பட்டு பாப்புனையும் ஆற்றலால் தாண்டக வேந்தராகவும் வலம் வருவதை உணரலாம்.

தருமசேனராகத் தம் திறமையை வெளிக்கொணர்ந்த திறம், இவர் திருநாவுக்கரசராக மாறியபோது, சமய நேசிப்பு காண்பதை அறியலாம்.

பொதுவாக முதலில் வெறுத்த ஒன்றை மீண்டும் விரும்பும்போது அதன் மீது விருப்பம் கூடுமே அன்றிக் குறையாது. அவ்வகையில் நாயனாரது வாழ்வில் அவர் சைவத்தைப் புறக்கணித்து சமணத்தில் சேர்ந்து மீண்டும் சைவரானார். சைவ ஈடுபாடு அதிகமான முறையில் அமைந்து இருந்ததால் மட்டுமே அவரால் சைவத்தில் நிலைகொள்ள முடிந்தது எனலாம். எனவே சைவத்தை வெளிக்கொணரச் சமணமறுப்பு ஒரு நிலைபெற்ற காரணம் என்ற கருத்தை நிறுவ அவர்தம் தொகுப்பில் இருந்து 'தனித்திருத் தாண்டகம்' - என்ற பகுதியின் வாயிலாக இக்கட்டுரை ஆய்கின்றது.

''திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர்
  தீய மணர் சிறைநீங்க வதிகை மேவும்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை
  கொடுக் கூற்றா யினவென்ன எடுத்துக் கோதில்
ஒருமானைத் தரிக்கும் ஒருவரையும் காறும்
  ஒரு நாற்பத் தொன்பதினாயிரம் தாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகம் கூறிப்
  பிஞ்ஞகனார் அடியிணைகள் பெற்றுளாரே''

என்பது திருமுறை கண்ட புராணத் திருவிருத்தப் பாடல். இத்தகு பெருமை பெற்ற இவரின் படைப்புக்களுள் சிறந்த படைப்பு தாண்டகம்

இயற்றுதல். இதனை இவரின் புனை பெயருள் ஒன்றான 'தாண்டக வேந்தர்' என்பதன் பால் உணரலாம்.

**வடிவங்களின் வாயிலாக**

திருநாவுக்கரசர் ஈசனை பலப்பல வடிவங்களில் விளிக்கிறார். அப்பனாக, அம்மையாக, மாமனாக, மாமியாக, சுற்றமாக, ஓர் உருவாக, துய்ப்பனவாக, உய்ப்பனவாக, ஞான மூர்த்தமாக, சொற்பதத்தார் சொற்பதம் கடந்து நின்றவராக, மனதிற்கண் விழுந்த வித்தாக, மறை நான்காக என்று பல்வேறு நிலையில் நின்று விளித்து இறைமையை வெளிக் கொணர்கின்றார்.

இவர்தம் தாண்டகப் பாடலான,

"அப்பனீ யம்மைநீ...."

"நற்பதத்தார் நற்பதமே...."

"நின்னாவார் பிறரன்றி..."

என்ற 3 பாடல்களில் வெளிப்படுவதன் மூலம் சமண் மறுப்பினைக் குறிப்பால் உணரலாம்.

**சரணாகதியின் மேன்மை**

இறைமைக் காதலில் சரணாகதியில் சரண்புகுதல் இயல்பாய் நடப்பதொன்று. அவ்வகையில்,

"எங்கெழி லென் ஞாயிறு தெளியோம் அல்லோம்"

என்புழி இவர் ஈசனின் உணர்வுடன் ஒன்றிய திறத்தையும் சமண் சமயத்தை விட்டதால் ஈசனின் அருள் வேண்டி விழையும் பண்பையும் உணரலாம். மேலும் இதே கருத்து, "திருநாமம்.... என்ற பாடலில்,

"பெருநோய்கண் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே".

எனும் வரியிலும்,

"குலம் பொல்லேன் குணம் பொல்லேன்....."

என்ற பாடலின் முழுமையிலும், மேலும்

"இவருக்குச் சங்கநிதி பதுமநிதி இரண்டும் தரினும் கங்கைவார் சடைக்கன்பராகி மட்டுமே இருப்பார்."

என்ற கூற்றிலும் வெளிப்படுவதைக் காணலாம்.

**சிவத்தலச் சிறப்புக் கூறுகள்**

தலங்களுக்குப் பயணம் மேற்கொண்டு சிவத்தலச் சிறப்பை வெளிப் படுத்தியுள்ளார். அம்முறையில் சிவத்தலச் சிறப்பை விளக்கும்போது,

"திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்பொடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண் கொடியும் இல்லா ஊரும்
அருப்பொடு மலர் பறித்திட்டு உண்ணா ஊரும்
அவையெல்லம் ஊரல்ல அடவி காடே" (5-ம் பாடல்)

என்று பாடுவதை அறியலாம்.

**அனுபவக் கூறு**

"மனித வாழ்வில் அனுபவம் ஒரு சிறந்த ஆசான் என்பது ஆன்றோர் வாக்கு. சமண் புகுதலில் ஏற்பட்ட நிராதரவான அனுபவத்தை ஒரு சைவக் கண்ணோட்டமாக,

"அத்தா உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருணோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியை நீ எளியை ஆனாய்
எனையாண்டு கொண்டிரங்கி ஏற்றுக் கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைகள் அத்தனையும் பொறுத்தாய் அன்றே
இத்தனையும் எம்பரமோ வைய வையோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே"
(8-ம் பாடல்)

என்ற பாடலில் ஈசனை வழிபட்டு அவரின் கருணைத் திறத்திற்காக ஏங்கிய நிலையையும் நன்முறையில் அறியலாம். திருநாவுக்கரசை ஆட்கொண்ட ஈசனின் முன் தம் தாழ்மை உணர்வையும் இதில் காண முடியும். மேலும்,

"நிற்பதொத்து நிலையிலா நெஞ்சம் தன்னுள்
நிலவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யான் உன்னை விடுவேன் அல்லன்" (4-ம் பாடல்)

எனும் வரிகளிலும் அப்பரின் தெய்வீக அனுபவம் வெளிப்பட்டு நிற்கின்றது.

'செம்பவள வண்ணரின் செம்மையைத் தம் பாடல்களின் மூலம் சிறப்புறச் செய்த திருநாவுக்கரசருக்கு அவர்தம் வாழ்வில் சமண் புகுதல் ஓர் அடிப்படைக் காரணமாக அமைந்திருந்தது' என்ற கருத்து தனித்திருத் தாண்டகப் பகுதியின் மூலம் நிரூபிக்கப்பட்டது. அப்பரின் ஒவ்வொரு பதிகத்திலும் இதுபோன்ற ஏக்கம் ததும்பும் பாடல்கள் காணப்படும். இத்தகு ஏக்கம் விளைய விளைய அவருக்குச் சைவ சமயத்தில் பற்று மிகுந்து, இன்று நமது கையில் நிலைத்திருக்கும் தேவாரம் என்ற மலர் மலர்ந்தது என்றால் மிகையாகாது.

# 80. நாவுக்கரசரின் பக்திநெறி

ச. வளர்மதி, கும்பகோணம்.

தமிழிலக்கிய வரலாற்றின் இருண்ட காலத்தின் முடிவில் சைவமும், வைணவமும் வளரத் தொடங்கின. தமிழிலக்கியம் பக்தித்துறையில் வளர்ந்து பெருகிற்று. பக்தியை மக்களிடம் ஏற்படுத்த நாயன்மாரும், ஆழ்வார்களும் முற்பட்டனர். இவர்கள் மக்களோடு புடைசூழ, தலங்கள் தோறும் சென்று ஆண்டவனைப் பாடிப் பரவி மக்களிடையே புதியதோர் வாழ்க்கை முறையினைத் தோற்றுவித்தனர். பெரியதோர் யுகப் புரட்சி போல தமிழகமெங்கும் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடியது.

**சைவ சமயம்**

சைவ சமயம் தமிழ்நாட்டின் பழமையான சமயங்களுள் ஒன்று. இதனால்தான் "சைவத்தின் மேற் சமயமில்லை" என்றன. இச்சீரிய சமயத்தை அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் உள்ளிட்ட அறுபத்து மூன்று நாயன்மாரும் சிறப்பாக வளர்த்தனர். நாயன்மார்களில் ஒருவரான நாவுக்கரசப் பெருமானின் பக்திச் சிறப்பை அவர் பாடல்வழி காண்போம்.

**நாவுக்கரசர் வரலாறு**

திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் புகழனாருக்கும், மாதினி யாருக்கும் மகனாகத் தோன்றியவர். தமக்கையாரின் அரவணைப்பில் வளர்ந்த இவர் சைவத்தின்பால் வெறுப்புக் கொண்டு சமண சமயத்தைச் சார்ந்தார். சிவபெருமான் சூலை கொடுத்து அப்பர் பெருமானை ஆட்கொண்டார். இவர் ஞானசம்பந்தர் காலத்தவர். சிவத்தலங்கள்தோறும் சென்று பணிபுரிந்து சிவனைப் பாடி வழிபட்டவர்.

**பக்தி – விளக்கம்**

பக்திநெறி என்பது அன்பு நெறி. பேரன்பின் முதிர்ச்சியே பக்தி என்று கூறலாம். பக்தியினை மேற்கொண்டோர் பக்தர் எனப்படுவர். உலகில் நோயால் பித்தும், மனத்தில் ஏற்படும் கலக்கத்தினால் சித்தமும் பிடிக்கும். ஆனால் ஆதியும், அந்தமும் இல்லா இறையிடத்துக் கொள்ளும் பித்து அளப்பரிய இன்பத்தை அள்ளித்தருவன. பக்தியானது, பல்வேறு நிலைகளில் காணப்படுகிறது.

1. அகிம்சை, சத்தியம், திருடாமை, காமத்தை அடக்குதல்.
2. தூய்மை, விரதம், தவம்.
3. புலன்களை உலக விஷயங்களிலிருந்து திருப்புதல்.
4. பகவானுடைய திருமேனியை மனத்திற் கொள்ளுதல்.
5. இடைவிடாது இறைவனை நினைத்தல்.
6. இறைவனை நேரில் கண்டாற் போன்ற நிலையினை அடைதல்

(வைணவச் செல்வம், ப. 130)

### நாவுக்கரசரின் நெறி

இறைவனை வழிபடும் நெறிகளில் சரியை, கிரியை, ஞானம், யோகம் என்ற நான்கில் நாவுக்கரசர் சரியை முறையைப் பின்பற்றியவர். நாவுக்கரசர் இறைவனிடத்தில் அடிமை உறவு கொண்டார்.

### மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடர்

பக்தர்கள் இறைவனிடத்தில் கொள்ளும் பக்தி பல வகைப்படும். மலர், நீர் முதலியவற்றால் இறைவனை வழிபடுவர்.

**''சலம் பூவொடு தூப மறந்தறியேன்**
**தமிழோ டிசைபாடல் மறந்தறியேன்**
**நலந்தீங்கிலு முன்னை மறந்தறியேன்**
**உன்நாம மென்நாவில் மறந்தறியேன்''**

(திருவதிகை வீரட்டானம், பாடல் - 6)

என்று அப்பர் பெருமான் தம் பதிகத்தில் குறிப்பிடுவார்.

### நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயம்

இறையன்பர்கள் இறைநாமத்தை உச்சரிப்பதில் அதிக விருப்பம் உடையவர்கள். ''நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தினை ஓத, அச்சம் தீரும், தவம் மல்கும்''. அதுவே கற்கத் தகுந்த கல்வியாகும். இத்திரு மந்திரத்தை நாவானது ஓத நன்னெறியைக் காட்டி உய்விக்கும். எனவே, இதனை மறவாது ஓத வேண்டும். அதுவே நாவினுக்கு அருங்கலம் என்று நாவினுக்கு அரசர் நவில்கிறார்.

**''கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது**
**நாவினுக் கருங்கலம் நமச்சிவாயமே''**

மனிதனுக்கு ஏற்படும் நடுக்கத்தைத் தவிர்த்து நல்லக விளக்காகப் பயன்படுவது நமச்சிவாய மந்திரம் ஆகும். இவ்வாறு இறைநாமத்தை உச்சரிப்பது மட்டுமல்ல தன் உள்ளக் கோயிலிலும் இறைவனை வணங்குவதும் பக்தியின் பாற்படும்.

**இறைவனை மனத்தில் நினைத்தல்**

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து இறையடியார்க்கு அருள்பாலிக்கும் சிவபெருமான் பக்தர்களைச் சோதிப்பதில் மிகுந்த ஆவல் கொண்டவன். அடியார்களின் பக்தி நலத்தினை உலகிற்கு அறிவிக்கும் பொருட்டு, அடியார்களைப் பலவிதமாகச் சோதித்து ஆட்கொள்வது சிவனின் வழக்கம். அவ்வாறே தம்மைச் சூலை கொடுத்து ஆட்கொண்ட விடைப்பாகனைத் தம் மனக்கோயிலில் வைத்துப் போற்றுகிறார் அப்பர் பெருமான்.

"நெஞ்சமு மக்கே யிடமாக வைத்ததேன்
நினையாதொரு போது மிருந்தறியேன்"

என்று இவ்வடிகளில் உணர்த்துகிறார். இங்கே இறைவனை நினைத்துக் கொண்டே இருக்கும் பக்திச் சிறப்பை காண முடிகிறது.

**ஆக்கையான் பயன்**

மண்ணுயிர்கள் இந்தக் கர்ம பூமியில் துன்பம் இல்லாது வாழ்வதற்கும், சிவனைச் சரணாகதி அடைவதுதான் முக்கிய நெறி என்கிறார் தாண்டக வேந்தர். பிறவாமையாகிய பெருஞ்செல்வத்தைப் பெற்று முத்தி நெறிக்குச் செல்ல வேண்டுமானால் இந்த யாக்கை முழுவதையும் இறைவனுக்கே அர்ப்பணிக்க வேண்டும் என்கிறார். தலை, கண், காது, மூக்கு என்ற இவையனைத்தும் இறைவனைத் தொழவேண்டும் என்று நான்காம் திருமுறை 28-ஆம் பதிகத்தில் குறிப்பிடுகிறார்.

"ஆக்கை யாற்பயனென் அரன்கோயில் வலம்வந்து
பூக்கை யால் அட்டிப் போற்றி என்னாதஇவ்
ஆக்கை யாற்பய னென்"

**என் கடன் பணி செய்து கிடப்பதே**

கையில் உழவாரப் படையுடன் தம்முடன் வரும் பக்தர் குழுவுடன் "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று கூறித் தமிழ்நாட்டுத் திருத்தலங்கள்தோறும் சென்று பிறைசூடிய பிஞ்ஞகனை வாயாரப் பாடி மனதார் வழிபட்டவர், சமயத் தொண்டுடன் சமுதாயத் தொண்டும் புரிந்து ஒரு புரட்சி செய்தவர் அப்பர் பெருமான்.

**எல்லாமாகி நிற்பவன்**

அப்பரடிகள் இறைவனைத் தவிர்த்து வேறு உடைமை தேவை யில்லை என்றும், அவனே அப்பனாகவும், அம்மையாகவும், எல்லாமாகி நிற்பவன் என்பதைப் பின்வரும் பாடல்வழி உணர்த்துகிறார்.

"அப்பன்நீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ

ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓர்ஊரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.''

இறைவன் எல்லாவற்றையும் வழங்கிப் பிறகு அவற்றைத் துறந்து நிற்குமாறு அவரைப் பக்குவப்படுத்தித் துணையாக இருப்பவன் என்கிறார்.

**அடியாரிடத்துப் பக்தி**

அந்தணர் குலத்தில் அவதரித்து ஞானப்பூங்கோதையின் மலர்க்கரங் களால் ஞானப்பால் அருந்திய ஞானசம்பந்தருடன் இணைந்து பல அற்புதங் களை நிகழ்த்தியவர் நாவுக்கரசர். ஞானசம்பந்தப் பெருமானைச் சுமந்து வரும் பல்லக்கினைத் தூக்கிவரும் பாக்கியம் பெற்றார். ஞானசம்பந்தர் தம்மைவிட வயதில் சிறியவராக இருப்பினும் அவரை மதிக்கும் பாங்கு நாவுக்கரசரிடம் இருப்பதைக் காண முடிகிறது. நாவுக்கரசர் சிவஅடியாரிடம் கொண்ட பக்திச் சிறப்பைக் காண முடிகிறது.

**உண்ணா நோன்பு**

பழையாறை வடதளியில் சிவாலயமானது சமணர்களால் மறைக்கப் பட்டிருந்ததை அறிந்த சுவாமிகள், உண்ணாநோன்பு இருந்து கனிச்சுவை யாகிய கடவுளைக் கருத்தில் இசைத்து ஏத்தினார். சிவன் அந்நாட்டு மன்னனின் கனவில் தோன்றிக் கோயிலின் தன்மையை உணர்த்த மன்னனும் உடன் சென்று கோயிலைச் சென்று செம்மைப்படுத்தினான். இறைபக்தியுடன் உண்ணா நோன்பு இருந்து மறைக்காட்டு மகேசனின் அருளைப் பெற்ற திறத்தினையும், அவனைக் கைதொழுது போற்ற வேண்டிய தன்மையையும் திருப்பழையாறை வடதளி என்னும் பதிகத்தில் கூறுகிறார்.

''குண்டரைக் குணமில் வரைக் கூறையில்
மிண்டரைத் துரந்த விமலன் றனை
அண்டரைப் பழை யாறை வடதளிக்
கண்டரைத் தொழுது உய்ந்தன கைகளே''

இறைவன் அருட்செயல்களும் திருக்கோலமும் அரசர் உள்ளத்தில் பக்தி உணர்வை மலரச் செய்தன. அதன் பயனாய்ச் சமயத் தொண்டுடன் சமுதாயத் தொண்டும் புரிந்தார். இறையின்பத்தை உணர மீண்டும் மனிதப் பிறவியும் வேண்டும் என்று வேண்டும் அரசரின் பக்தி உணர்வை அவர் பாடல்வழி உணரலாம்.

# 81. நாவுக்கரசர் காட்டும் ஒருமைப்பாடு

சு. வஜ்ரவேலு, சென்னை.

''திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்''

என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அவர் வாக்கின்படி திருநின்ற செம்மையே செம்மையாய் எண்ணி வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். அன்னாரின் இயற்பெயர் மருள்நீக்கியார்.

அப்பர், வாகீசர், தருமசேனர், தாண்டகவேந்தர் என்னும் பலபெயர்களில் அடியவர்களால் போற்றப்படும் திருநாவுக்கரசரின் காலம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. பன்னிரு திருமுறைகளில் 4, 5, 6 திருமுறைகள் இவர் பாடிய தேவாரப் பாடல்கள் ஆகும்.

மண், பொன், பெண் என்னும் மூவாசைகளையும் முற்றிலும் துறந்து முனிவராய்த் திகழ்ந்த நாவுக்கரசரின் ஒருமைப்பாட்டுணர்வைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்; நாம் உய்வு பெற அதுவே ஆக்கமும் ஆகும்.

**உய்வு பெற வழி**

''பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனோ''

''நீதியை நிறைவை மறை நான்குடன்
ஓதியை ஒருவர்க்கும் அறிவொணாச்
சோதியைச் சுடர்ச் செம்பொனின் அம்பலத்து
ஆதியை அடியேன் மறந்து உய்வனே''

என மனமுருகி நம் மனமுருகப் பாடும் நாவுக்கரசர், அம்பலக்கூத்தனை, அம்பலத்து ஆதியை மறந்தால் உய்வு பெற முடியாது எனத் தெளிவாக எடுத்து விளக்குகிறார். அதனால் தான்,

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரம்தர வேண்டும் வையகத்தே''

எனவும்,

"படைக்கலமாக உன்நாமத்து எழுத்து அஞ்சு (நமசிவாய பஞ்சாட்சரம்)
என் நாவில் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்கு
ஆட்செய்கின்றேன்"

எனச் சிற்றம்பலத்து அரனை வேண்டுகின்றார்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்".

என்னும் வள்ளுவரின் கருத்திற்கு வலிவும், பொலிவும் சேர்க்கும் வகையில்,

"நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணி தீர்க்கும்
அணியானே ஐயாறர்க்கு ஆளாய் நான் உய்ந்தேனே"

"உனக்கு நான் ஆளாகி உய்வு பெறுவேன்" என உய்வு பெற்ற வாகீசரின் வாக்கே நாமும் உய்வு பெற வழியாகும்.

**ஒருமைப்பாட்டிற்கு அரண்செய்யும் ஒருமை**

"ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்".

என்பது அருட்பிரகாசரின் அருள்வாக்கு.

ஒருமை எண்ணம் இல்லாதவர்க்குப் பக்தியும்,பக்தியில் நாட்டமும் இருப்பதில்லை. அத்தகையோர்க்கு இறையருள் எப்போதும் கிட்டாது.

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற உயர்ந்த எண்ணம் உடையவர்கள் நமது சைவ சமயக் குரவர்கள் "சினமெனும் சரக்கை ஏற்றி செறிகடல் ஓடும்போது மதனெனும் பாறைதாக்கி மறியும்போது அறியவொண்ணாது உனையெனும் உணர்வை நல்காய் ஒற்றியூருடைய கோவே" என அழியும் வேளையிலும் இறைவனை மறவாதிருக்க வேண்டும் என்பது அப்பர் பெருமானின் திருவாக்கு. சைவத்தின் மேல் சமயம் வேறில்லை அதில்சார் சிவமாம் தெய்வத்தின் மேல் தெய்வம் இல் எனும் சீர்பொருள் வாய்மை உணர்ந்த ஞானி நம் திருநாவுக்கரசர். அவர்,

"பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே"

என்பதைத் தாமும் உணர்ந்து நமக்கும் உணர்த்தியவர். ஆதலால்,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழ

கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே''

என ஒருமைப்பாட்டிற்கு அரண்செய்யும் ஒருமையுணர்வைத் தம்மன உறுதியை வெளிப்படுத்தியுள்ளார் தாண்டக வேந்தர்.

''சித்தத்தை ஒன்ற வைத்தார் சிவமதே நினையவைத்தார்''

என மனம் ஒன்றி ஒருமைநெறியில் இறையன்பில் மூழ்க வேண்டும் என்பதே அப்பர் பெருமான் மனித குலத்திற்குக் காட்டும் அருள்நெறி.

**ஒருமைப்பாட்டிற்கு உயர்ந்த வழிகள்**

''ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம்
இந்த நாட்டிலே''

எனப் பாடி ஆண்-பெண் ஒருமைப்பாட்டை இருபதாம் நூற்றாண்டில் உணர்த்தினார் மாக்கவி பாரதி. இக்கருத்தை அன்றே பக்தி நெறியில் ஆண்-பெண் ஒருமைப்பாட்டை வகுத்தவர் அப்பர் சுவாமிகள்.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தாள் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே''

என நாயகன் நாயகி உணர்வைக் கூறி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்களைப் பெற ஆண் - பெண் சமம் என்னும் ஒருமைப்பாட்டை உணர்த்துகின்றார் நாவுக்கரசர்.

''ஆண்டவன் படைப்பில் அனைவரும் சமம்''. சாதி பேதமற்ற உயர்ந்த சமுதாயப் பார்வை கொண்டவர் அப்பரடிகள். அவர்,

''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்''

எனச் சாதியைச் சாடுகிறார்.

''சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கே காந்தர் அல்லா ராகில்''

''அங்கமெல்லாம் குறைந்தழுகு தொழுநோய் யாராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே''

எனத் தொழுநோய் கண்ட புலையராக இருந்தாலும் ஆண்டவனுக்கு அடியவராக விளங்கினால் அவரே நான் வணங்கும் கடவுள் எனப் பேதமற்ற சமுதாயத்தை உருவாக்குகின்றார் நாவுக்கரசர்.

எண்பது வயதுடைய அப்பர் பிள்ளைப் பருவத்தில் இருக்கும் ஞானசம்பந்தரின் சிவிகையைச் சுமந்து ''அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு'' என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார்.

''நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம், நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை''

என இறைவன் அடியவர் யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை என ஒருமைப்பாட்டைப் பாதுகாக்கும் அஞ்சாநெறியை நமக்கு வகுத்துத் தருகின்றார் வாகீசர் பெருமான்.

''ஆளும் நாயகன் கயிலையில் இருக்கக் கண்டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்''

எனவும் உயர்ந்த குறிக்கோளையும்,

'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும்'

உயர்ந்த ஆன்மீக நோக்கத்தையும், சிறந்த ஒருமை உணர்வையும், ஆண் - பெண் - குலம் பேதமற்ற ஒருமைப்பாட்டுணர்வையும் தொண்டின் வழி இறைவனை அடையும் நெறியையும் மனித குலத்திற்கு வழங்கிய அப்பரடிகளின் வழியைத் துணையாகப் பற்றி நாம் உய்வு பெறுவோம்.

ஆழிமிசை கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி!

# 82. வாகீசர் காலத்தில் வடமொழிக்கலப்பு

வ. விசயரங்கன், புதுகும்மிடிப்பூண்டி.

''வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகம்''

என்பது தொல்காப்பியப் பாயிரம். திருநாவுக்கரசர் காலத்தில் தலப்பெயர் களும், தெய்வத் திருப்பெயர்களும் எம்மொழியில் விளங்கின என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். தொல்காப்பியர் தாம் இயற்றிய தொல்காப்பிய இலக்கண நூலில் வடமொழிச் சொற்கள் செந்தமிழ் மொழியில் எவ்வாறு அமைய வேண்டும் என்பதற்கு இலக்கணம் வகுத்திருப்பதால், வடமொழிக் கலப்பு அவர் காலத்திற்கு முன்னரே தமிழகத்தில் ஏற்பட்டுவிட்டது என்பதை ஓரளவுக்கு ஒப்புக்கொள்ளலாம்.

பதினெண் கீழ்க்கணக்கு, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை மற்றும் கடைச்சங்க காலத்தை ஒட்டி எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களை என் சிந்தனையில் கொணர்ந்தேன். சங்கத்தமிழ் தந்த சான்றோர் திருப்பெயர்களையும் சிந்தித்துப் பார்த்தேன். ஊரால், உறுப்பால், செய்தொழிலால், பிறந்த குடியால், தோற்றத்தால், நாட்டால், சொற் பெய்திறத்தால் அவர்கள் பெயர்கள் அமைந்திருப்பது 'வெள்ளிடை மலை' யென விளங்கத் தோன்றுகிறது.

மார்க்கண்டேயனார், வன்மீகனார், வான்மீகியார், தாமோதரனார், கவிசாகரப் பெருந்தேவனார் என விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிலேயே வடமொழிப்பெயர் தாங்கியுள்ளனர் சிலர். அருந்தமிழ் யாத்த அந்தணரே யாயினும் தமிழ் மரபிற்கேற்பத் தம் பெயர் தாங்கியுள்ளமை சிந்தனைக்கு வருகிறது. தலைச்சங்க, இடைச்சங்கப் புலவர்களினும் கடைச்சங்ககாலப் புலவர்களின் திருப்பெயர்கள் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன.

மூவடியால் மண் அளந்த வாமனனை நினைவூட்டுகிறது கௌணியன் விண்ணந்தாயன் என்ற திருப்பெயர். துவாரகையாண்டு பாரதப்போர் முடித்த கண்ணனை நினைவிற் கொணர்கிறார் துவரைக்கோமான்.

கண்ணன் என்ற பெயர் சூடிய புலவர்கள் பலர் இருப்பினும், அவர்கள் அனைவருமே கண்ணனை நெஞ்சில் நிறுத்தும் தன்மையர் அல்லர். இழிகண் பெருங்கண்ணனார், கூடலூர் பல்கண்ணன், கருவூர் செங்கண்ணனார்,

இளங்கண்ணன், நெடுங்கண்ணன் என்ற பெயர்கள் 'கண்' எனும் உறுப்புப் பற்றி எழுந்ததாகவே தோன்றுகின்றன. மாமூலனார் காஞ்சியிற் குடிகொண்ட ஏகாம்பர நாதனையும், காமக்கண்ணியார் காமாட்சி தேவியையும், கூத்தனார் நடராசப் பெருமானையும் நெஞ்சில் நிறுத்துகின்றனர். நக்கண்ணையார் 'சுலோசனா' என்ற வடமொழியின் தமிழாக்கம். சாத்தன், ஆதன், பூதன், கூத்தன், கொற்றன், கீரன், நாகன், கந்தன், சேந்தன் என்ற பெயர் பெற்ற புலவர்கள் பலப்பலர். சற்றேறக்குறைய அறுநூறு பெயர் களில் வடமொழிப்பெயர் பெற்றோர் ஒரு சிலரே. இதேபோல் சங்ககால ஊர்ப்பெயர்கள் யாவும் தமிழ் மொழியிலேயே அமைந்திருப்பதை நூற்றுக்கும் மேற்பட்ட பெயர்களால் உணரமுடிகிறது.

உமட்டூர், உறையூர், எருமையூர், ஐயூர், ஒக்கூர், மாங்குடி, களத்தூர், கரூர், கரும்பனூர், கச்சி, குடவாயில், ஆவூர், கோழி, நல்லூர், வேம்பற்றூர், ஆலங்குடி, கிள்ளி மங்கலம், கோடி மங்கலம் என்பன அவற்றுள் ஒரு சில. நூற்றுக்கு நூறு தமிழ்ப் பெயர்களாகவே காணக் கிடப்பது சிந்தனைக்கு விருந்து.

நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும் வாழ்ந்த ஏழாம் நூற்றாண்டில் தமிழ்மொழியின் நிலை என்ன? வேதநெறி, வேள்வி நெறி பல்கிப் பெருகிய அக்காலத்தும் தலப்பெயர்களும், தெய்வத் திருப்பெயர்களும் செந்தமிழ் மொழியிலேயே ஒளிர்ந்து வந்ததை அறிய முடிகிறது. வடமொழி முற்றும் கற்று, வடமொழியில் தல புராணங்கள் இயற்றி அலங்கரித்த காலம் ஒன்று இருந்தது. வடமொழித் தலபுராணங்களை அடியொற்றித் தென்னந் தமிழில் தலபுராணம் படைத்தளித்த பாவலர் பல்லோர். இன்றுள்ள நிலையில் மூவர் காலத்தில் வடமொழிச் சொற்கள் தலங்களையும், தெய்வத் திருப்பெயர்களையும் அலங்கரிக்கவில்லை என்றே தோன்றுகிறது.

நாரை வழிபட்ட தலம் நாரையூர்; எறும்பு வழிபட்ட தலம் எறும்பியூர். கழுகுகள் வழிபட்ட மலை திருக்கழுக்குன்றம் (கழுகுக்குன்றம்); திருமகள் பூசித்த தலம் திருநின்றியூர்.

> "செந்தண் மாமலர்த் திருமகள் மருவும்
> செல்வத் தென்திரு நின்றியூரானே"

என்பது ஆரூரர் அருள்வாக்கு. பிற தலங்களைச் சிறப்பிக்க வந்த 'திரு' போல் அன்று இது. 'வர்த்தி நிர்வாபணபுரம்' என்பது இத்தலத்தின் வடமொழிப்பெயர். 'திரி நின்ற ஊர்' எனப் பொருள் தரும் அச்சொல் அறியாமையால் பிறந்த வடமொழி ஆக்கம் என்பது சொல்லாமலே விளங்கும். இதேபோல் 'பழனம்' என்பது பயணம் என்று தவறாகக் கருதப்பட்டு, வடமொழியில் 'பிரயாணபுரி' என வழங்கப்படுகிறது.

திருநெய்த்தானம் என்னும் இன்றைய தில்லைத் தானத்தில் குடி கொண்ட இறைவன் நெய்யாடியப்பர். வடமொழியில் 'கிருதஸ்நானேசுவரர்' கோட்டூரில் குடிகொண்ட தேவி தேன்மொழிப்பாவை. வடமொழியில் 'மதுரவசனாம்பிகை' திருப்பயத்தங்குடி என்றும் திருப்பயற்றூர் 'முற்கபுரியாகி' இறைவன் முற்கபுரீசுவரனாய் பெயர் பெற்றுள்ளான். 'காவியங்கண்ணி' என்றும் அன்னையின் திருநாமம் அப்பதியில் 'நீலோத்பலாயதாக்ஷி'.

கொடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு) சிலம்பிலே நெடுவேள் குன்றம் என்று சிறப்பிக்கப்பட்ட புனித பூமி. மலை சிவந்த நிறமாதலின் செங்கோடு, (செங்குன்றம்) அம்பிகை அருந்தவம் புரிந்து இறைவன் திருமேனியில் பாதி இடம் பெற்ற பழம்பதி இது. 'பாகம் பரியாள் அம்மை'. இறைவன் 'அர்த்தநாரீஸ்வரன்'. ''கொடிமாடச் செங்குன்றூர் நின்ற அந்தணன் என்பார்'' சம்பந்தர். பிரான் மலையெனும் கொடுங்குன்றத்தில் கோயில்கொண்ட இறைவன் கொடுங்குன்றநாதர். அம்பிகை குயிலமிர்த நாயகி. 'தேனிற் பொலி மொழியாள்' என்பார் சம்பந்தர். தேனம்மா என்னும் அழகிய பெயர் சூடும் பெண்கள் இப்பகுதியில் மிகுதி.

முக்கோடி மாமுனிவர் பூசித்த திருத்தலம் திருக்கோடிக்கா. இறைவன் 'திரிகோடீசுவரர்' (முக்கோடீசுவரர்) 'கோடிக்கா உடைய தேவே' என நெஞ்சினிக்க, நாவினிக்க அழைக்கிறார் அப்பரடிகள். ஞானசம்பந்தருக்கு இறைவன் திருத்தாளம் வழங்கிய திருத்தலம் கோலக்கா. 'அழகிய சோலை' எனும் பெயர் பெற்ற திருத்தலம் 'சப்தபுரி'யாகி இறைவன் திருக்கோயில் திருத்தாளம் உடையார் கோயில் என வழங்கப்படுகிறது. இறைவன் : சப்தபுரீசுவரர்; அம்பிகை : ஓசை கொடுத்த நாயகி. நவக்கிரகக் குற்றம் பொறுத்து, அருள் சுரந்த இறைவன் குடிகொண்ட திருத்தலம் கோளிலி (திருக்குவளை).

திருமால் இறைவனைப் பூசித்துச் சக்கரம் பெற்ற திருத்தலம் சக்கரப்பள்ளி. 'சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்கரப் பள்ளி' என்பது அப்பர் அமுதமொழி. 'வண்சக்கரம் மால் உறப்பாலடி போற்றக் கொடுத்த பள்ளி' என்பது ஞானக்குழந்தையின் அமுதவாக்கு. குரங்கு, அணில், முட்டம் (காக்கை) பூஜித்த தலம் குரங்கணில்முட்டம். திருக்களாவூர் என்று அழைக்கப்பெறும் திருக்குருகாவூர் திருமால் வெள்விடையாய் இறைவனுக்கு ஆய தலம்.

'குருகாவூர் வெள்ளடை நீயன்றே' என்பது சுந்தரர் வாய்மொழி. வெள்விடை வெள்ளடையாயிற்று. கட்டமுது சுந்தரர்க்கு அளித்தமையால் 'தத்யோதனபுரம்' என்ற வடமொழிப் பெயரையும், திருமால் வெள்விடை யாய்த் தாங்கியமையின், 'ஸ்வேத விருஷபபுரம்' என்ற பெயரையும் இத்தலம் பெற்றுள்ளது. இறைவன் திருப்பெயர் 'ரக்தாங்குரேசுவரர்'

(மணிவயிரக்கொழுந்து) 'மாணிக்கம் முளைத்தெழுந்த வித்தகனே' எனப் பாடுவார் ஆரூரர். 'குருகாவூர் மணிவயிரக் கொழுந்தனார்' என்பார் சேக்கிழார் பெருமான்.

அம்பிகை மயிலுருக்கொண்டு பூசித்த மாயூரத்தின் அன்னையின் திருப்பெயர் அஞ்சொல் நாயகி. அது அஞ்சல் நாயகியாய் மருவி, வடமொழியில் அபயாம்பிகை என்று அழைக்கப்படும் நிலை உருவாயிற்று எனலாம்.

அத்தியாரண்மயம், கஜாரண்யம், மதகரிவனம் என்பன 'திருவானைக்கா' என்ற திருத்தலத்தின் வடமொழி மாற்றம். முழுவதும் வடமொழிச் சொற்களால் அமைவதும் உண்டு; தமிழும் வடமொழியும் கலந்து உருவாவதும் உண்டு. அக்கால அந்தணர் இருமொழியும் கற்று, ஆன்றவிந்தொழுகிய சான்றோர்களாய்த் திகழ்ந்தமையால் தமிழகத்தில் தலபுராணங்கள் வடமொழியில் பிறந்தன. அதன்வழி மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற தமிழறிஞர்கள் தமிழில் தலபுராணங்கள் பாடித் தமிழுக்கு அழகு செய்தனர்.

திருவானைக்காவில் திருக்கோயில் கொண்ட இறைவன் ஜம்புகேசுவரர். நாவல் மரம் ஸ்தல விருக்ஷமல்லவா? அன்னை அகிலாண்ட நாயகி. இறைவனை அழகு தமிழில் 'செழுநீர்த் திரள்' எனப் பாடுவார் அப்பரடிகள். பஞ்ச பூதத் தலங்களில் இத்தலம் நீர் என்பது நாமறிந்ததே. எருக்கத்தம் புலியூர் 'ச்வேதார்க்க வனம்' என்று வடமொழியில் அழைக்கப்படுகிறது. (ஸ்வேதம் - வெள்ளை, அர்க்கம் - எருக்கு) இத்தலவிருஷம் வெள்ளெருக்கு.

நவக்கிரகத் தலங்களில் இன்று நாடெங்கும் பிரசித்தி பெற்று ஒளிர்வது தக்ஷிணாமூர்த்தி குடி கொண்ட ஆலங்குடி - அதன் பழைய பெயர் இரும்பூளை. திருவாடானை என்பது அஜகஜேஸ்வரம். (அஜம் - ஆடு, கஜம் - யானை) ஆடும் யானையும் அர்ச்சித்த திருத்தலம் இது - இறைவன் அஜகஜேஸ்வரன் (ஆடானை நாதர்) அம்பிகை சிநேகவல்லி (அன்பாயி அம்மை) நந்தி வாயிலிருந்து புனித நீர் பெருகும் திருத்தலமாம் திருஊறலின் இன்றைய பெயர் தக்கோலம். ஊறல் அமர்ந்த பிரான், ஊறலாய் அருளாய் என்பது அடியவர் அருள் வாக்கு.

திருவையாற்றில் கோயில் கொண்ட இறைவன் பஞ்சநதீசுவரர் (ஐயாறுடைய அடிகள்) அம்பிகை தர்மஸம்வர்த்தனி (அறம் வளர்த்த நாயகி) இறைவன் ஓர் அந்தணச் சிறுவனின் அன்பிற்கிணங்கி சண்டீசப் பதம் தந்து ஆட்கொண்டருளிய திருவாப்பாடி இறைவன் பாலுகந்த நாதர். (ஸ்ரீரபுரீசுவரர்) அம்பிகை பெரிய நாயகி (பிரஹந் நாயகி)

**திருத்தல முடிவு**

| | | | |
|---|---|---|---|
| ஊர் | : | அழுந்தூர், ஆரூர், ஒற்றியூர், ஓத்தூர், தேவூர் ...... | (69) |
| ஈச்சுரம் | : | கணபதீச்சுரம், கோடீச்சுரம், பசுபதீச்சுரம் ...... | (39) |
| குடி | : | கற்குடி, சிறுகுடி, நீலக்குடி, மங்கலக்குடி, விற்குடி.... | (34) |
| காடு | : | ஆலங்காடு, சாய்க்காடு, மறைக்காடு, வேற்காடு ..... | (15) |
| கோயில் | : | ஆலக்கோயில், கண்ணார்கோயில், காளையார்கோயில்.... | (25) |
| மலை | : | அண்ணாமலை, ஈங்கோய்மலை, பிரான்மலை.... | (21) |
| பள்ளி | : | சிராப்பள்ளி, நணிபள்ளி, அகத்தியான்பள்ளி....... | (15) |
| வாயில் | : | குடவாயில், குணவாயில், நெய்தல்வாயில்.... | (15) |

இவ்வாறு மூவர் காலத்துப் பாடல் பெற்ற தலங்களும், வைப்புத் தலங்களும் ஈற்றுச்சொல் கொண்டு முடிவது கொண்டு ஊர்ப் பெயர்கள் யாவும் செந்தமிழ் மொழியிலேயே விளங்கி வந்ததை உணர முடிகிறது.

திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்த தெய்வத் திருப்பெயர்கள் சிலவற்றைக் காண்போம்.

வேடனார், சிவலோகன், வள்ளலார், மணவாளநம்பி, தான்தோன்றி ஈசனார், செம்பொற்சோதி, வயிரத்தூண், ஆனைக்கன்று, பொய்யிலி, சிவக்கொழுந்து, கூத்தனார், ஆழித்தேர் வித்தகர், சுடர்க்கொழுந்து, தோன்றாத் துணை ....இவை இறைவனுக்கு சொற்கோ சூட்டிய திருப்பெயர்களில் சில.

கற்பகம், வடிவுடைமங்கை, கொம்பனாள், மட்டுவார்குழலி, முற்றிலா முலையாள், மங்கையர்க்கரசி, அஞ்சலாள், மலைபெற்றமகள், வடித்தடங்கண்ணி, மின்னுமேகலையாள், கரும்பனையாள், கருந்தாழ்குழலி, காவியங்கண்ணள், கருந்தடங்கண்ணி, பூங்குழலாள், பாலின்மொழியாள், ஞானப்பூங்கோதை ..... இறைவிக்கு நாவரசர் அணிவித்த திருப்பெயர் களில் ஒரு சில.

நளன் பூசித்த திருத்தலம் திருநள்ளாறு. இறைவன் நளேசுவரர் அம்பிகையை 'போகமார்த்த பூண்முலையாள்' என விளிப்பார் ஞானசம்பந்தர், 'நள்ளாறா என நம்வினை நாசமே' என்பார் சொல்லின் வேந்தர்.

**தெய்வத் திருப்பெயர்கள்**

பிறைசூடி - சந்திரசேகரன், இளமதியன் - பாலசந்திரன், செஞ்சடை வேதியன் - அருணஜடேசன், ஐயாறப்பன் - பஞ்சநதீசன், சோற்றுத் துறையார் - ஓதவனேசர், நடுத்தறிநாதர் - வத்ஸநாதர், தீயாடியப்பர் - அக்னீச்சுரர், வெண்ணெய்ப் பெருமான் - நவநீதேசுவரர், தாயுமானவர் - மாத்ருபூதேசுவரர், சிறுகுடிச்செல்வர் - சூக்ஷ்மபுரீசுவரர், வெள்ளிமலை

நாதர் - ரஜத கீரீசர், பரிதியப்பர் - பாஸ்கரேசுவரர், நற்றுணையப்பர் - ஸகாயேசுவரர், மாணிக்க வண்ணர் - ரத்தினபுரீசர்.

அங்கயற்கண்ணி - மீனாட்சி, இருமலர்க்கண்ணி - உபய புஷ்ப விலோசனி, (இருமலர்க்கண்ணி தன்னோடு உடனாவது - சம்பந்தர்) திருநிலைநாயகி - ஸ்திர சுந்தரி, குன்றுமுலையம்மை - கிரிகுஜாம்பாள், காமக்கண்ணி - காமாட்சி.

**தலப்பெயர்கள்**

இடை மருதூர் - மத்யார்ஜ்ஜுனம், மறைக்காடு - வேதாரண்யம், முதுகுன்றம் - விருத்தாசலம், வன்னிபுரம் - அக்னிபுரம், திருவெண்காடு - சுவேதவனம், சேய்ந்நலூர் - குமாரபுரி, குறுக்கை - அரிதகிவனம், பனந்தாள் - தாலவனம், பந்தணைநல்லூர் - கந்துகபுரி, செம்பொனார் கோயில் (செம்பொன் பள்ளி) ஸ்வர்ணபுரி, கொட்டையூர் (ஹேரண்டபுரம்)

மூவர் காலத்து வழங்கிய தலப் பெயர்களும், தெய்வப் பெயர்களும் தமிழ்ச் சொற்களாலேயே வழங்கப்பட்டு வந்தது என்பதையும், பின்னர் வடமொழியில் தலபுராணங்கள் தோன்றிய காலத்து வடமொழியில், உருமாற்றம் செய்யப்பட்டு விளங்குகிறது என்பதையும் சிந்தித்து உணரலாம்.

'நல்லாடை' என்ற ஊரின் வடமொழிப்பெயர் 'நூதன வஸ்த்ரபுரி'; சிறுகுடி என்ற திருத்தலம் சூக்ஷ்மபுரி என்று மொழி பெயர்க்கப்பட்டு விளங்குகிறது. காலத்திற்கேற்ப வடமொழி மோகத்தாலும், புராண, இதிகாச, தெய்விக வரலாறுகளில் மக்கள் கொண்ட நாட்டத்தாலும், வடமொழியில் புனையப்பட்ட ஸ்தல புராணங்களிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட நிலைகளாலும் வடமொழியிலேயே முதற்கண் இருந்ததைப் போன்ற ஒரு மாயத் தோற்றம் காண்கிறது. என்றாலும் மூவர் முதலி களும், பன்னிரு ஆழ்வார்களும் பாடிப் பரவிய சைவ, வைணவ பக்தி இலக்கியங்களை முற்றும் ஆய்வு செய்யும்போது தமிழிலிருந்தே வடமொழிக்கு மாற்றம் பெற்று ஒளிர்வதை உறுதி செய்யலாம்.

சித்தர்கள் பூசித்த தலம் சித்தீச்சுரம். 'சித்தன் காண் சித்தீச்சரத்தான் காண்' எனப் பாடுவார் உழவாரப் படையாளி. அம்பிகை அழகாம்பிகை.

வடமொழியில் சௌந்தர்ய நாயகி. குயில் வடிவில் வித்யாதரர் பூசித்த திருத்தலம் கோழம்பம். இறைவன் கோகிலேசுவரர் (கோகிலம் - குயில்) 'கோழம்பத்துறை கூத்தன்' என்பார் நாவுக்கரசர். அக்னி அர்ச்சித்த திருத்தலம் கொள்ளிக்காடு. இறைவன் தீ வண்ண நாடர் (அக்னீச்சுரர்) கொள்ளிக் காடர் என்றழைப்பார் சம்பந்தர்.

கன்றுக் குட்டியைக் கட்டி வைக்கும் தறியிலிருந்து இறைவன் வழிபாடு ஏற்ற ஊர் கன்றாப்பூர். இறைவன் நடுதறிநாதர் (வத்ஸநாதர்)

'கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' என்பது அப்பர் பெருமான் திருவாக்கு. ஞானக் குழந்தையின் திரு அவதாரத் திருத்தலம் பன்னிரு நாமத் திருப்பதி. பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், சண்பைநகர், கொச்சைவயம், கழுமலம். செந்தமிழில் காரணப் பெயர்களாய் இவை திகழ்வதைச் சிந்தித்து உணரலாம். 'சோதி ஆர்தரு தோணிபுரவர்' என்றும், 'கழுமலத்தார்' என்றும், புகலிக்கோன் என்றும் நாவுக்கரசர் குறிப்பிடுகிறார்.

கானப்பேர் கோயில் கொண்ட இறைவனை 'கானப்பேர் உறை காளை' என்று சுந்தரரும், 'கானப்பேர் அண்ணல்' என்று சம்பந்தரும், 'கானப்பேரூர்க் கட்டி' என்று நாவுக்கரசரும் அழைப்பர். கானூர் என்னும் திருத்தலத்துக் கோயில் கொண்ட இறைவனை 'கானூர் முளைத்த கரும்பு' என்பார் அப்பரடிகள். மண்மூடி மறைந்திருந்த இத்தலம் சென்ற நூற்றாண்டில் அகழ்ந்தெடுக்கப் பெற்றது. இறைவன் கரும்பேசுவரர் - (செம்மேனியப்பர்). இவரைக் 'கானூர்க் கட்டியே' என்று சுந்தரரும், 'உலகத்தில் உயிர்க்கெலாம் கருவனாகி முளைத்தவன்' என்று சம்பந்தரும் போற்றுகின்றனர். குடத்திலிருந்து இறைவன் வெளிப்பட்டுத் திருணபிந்து முனிவரது குட்ட நோய் தீர்த்த திருத்தலம் குடவாயில்.

எம தருமன் பூசித்த திருத்தலம் தருமபுரம். திருமால் பாஞ்சசன்யம் என்ற சங்கினைப் பரமனிடமிருந்து பெற்ற திருத்தலம் திருத்தலைச் சங்காடு (சங்காரண்யம்). பெரியான் என்றும் பள்ளன் நிலத்தில் தினை விளைந்து பழுக்கும் அதிசயம் நிகழ்த்திய திருவூர் திருத்தினை நகர். 'திருத்தினை நகர் உறை சேந்தன் அப்பன்' என்றும், 'திருத்தினை நகர் சிவக்கொழுந்து' என்றும் அடியார்கள் பரவியுள்ளனர். வசிஷ்ட மாமுனி தாம் வழிபட்ட வெண்ணெய் லிங்கப் பெருமானை வேறிடத்து வைக்க முயலுகையில் சிக்கிக் கொண்ட திருத்தலம் சிக்கல். இறைவன் - வெண்ணெய்ப் பெருமான் (சம்பந்தர்) நவநீதேசுவரர். அம்பிகை வேல் நெடுங்கண்ணி (சக்தியாயுதாஷி) (சக்தி ஆயுதம் - முருகன் திருக்கைவேல்.)

தலவிருக்ஷங்களைக் கொண்டே பண்டைநாளில் திருத்தலங்கள் பெயர் பெற்றன. (எ.டு) ஆலங்காடு, பனந்தாள், இடைமருதூர், காஞ்சி, பாதிரிப்புலியூர், முல்லைவாயில், புன்கூர். அருந்தமிழை அலங்கரிக்கும் அற்புத வரலாறுகள் பலப்பல மூவர், பன்னிருவர் பதிகங்களில் இடம் பெற்றுள்ளன. அறிவுக்கண்ணால் ஆழ்ந்து நோக்கி, விருப்பு, வெறுப்பின்றி அத்தகு வரலாறுகளை உலகவர்முன் கொணருதல் வேண்டும். இதற்கு வடமொழித் தல புராணங்களும் உதவி செய்யும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. விருப்பு வெறுப்பகற்றிய அறிவுக்கண்ணுடையார் தமிழகத்தின் தலபுராணங்களை தெள்ளிதின் ஆய்ந்து வெளிப்படுத்தத் தலைப்பட்டால் அருந்தமிழும், சமய நெறியும், நல்லொழுக்கமும் நாடெங்கும் பல்கிப்

பெருகி உலகையே திருத்த உதவி செய்யும் என்னும் என் வேட்கையை உங்கள் முன் வெளிப்படுத்த விழைகிறேன்.

கஜமுகாசுரன் குருதி பெருகிச் செங்காடான திருத்தலம் திருச்செங்காட்டாங்குடி, பிள்ளைக்கறி சமைத்த சிறுத்தொண்டன் வாழ்ந்த திருத்தலம். இறைவன் கணபதீச்சுரர், 'செங்காட்டங்குடியார்' என்றும், 'கணபதி ஈச்சுரத்தார்' என்றும் அப்பர் பெருமான் போற்றித் துதிக்கிறார். பழுபேட்டரையர் பெயர் சாற்றும் திருத்தலம் பழுவூர்.

இறைவன் : ஆலந்துறை ஈசன். இறைவி : அருந்தவ நாயகி. வடமொழியில் வடமூலநாதர், அபூர்வ தபஸாம்பிகா (பழு-ஆல்) தமிழ் மொழியின் ஆற்றலை, அருமையை, பெருமையைப் பறைசாற்றும் பாங்குடையதாகக் கருதி வடமொழிச் சொற்களை ஆய்வு செய்யத் தலைப்பட்டால் திருத்தலச் சிறப்புக்கள் விளங்காமல் போகாது.

காஞ்சி மரத்தால் காஞ்சிமாநகரும், வன்னி மரத்தால் வன்னியூரும், குத்தால மரத்தால் குத்தாலமும் பெயர் பெற்றவை என்றாலும், அவற்றின் வடமொழிப் பெயர்கள் மொழிபெயர்க்கப்பட்ட முறை அறியாமையால் விளைந்தது என்று எண்ணத் தோன்றுகிறது. 'ஸ்ரீ வாஞ்சியம்' திருமகள் விரும்பும் திருத்தலம். 'பேணுவார்கள் பிரிவரிய திருவாஞ்சியத்தெம் செல்வன்' எனும் பதிகப் பகுதி நம் சிந்தனையைத் தூண்ட வல்லது.

'**கருந்தடங்கண்ணியும்** தானும் கடல் நாகைக் காரோணத்தான்' என்ற தொடரில் காணும் கருந்தடங்கண்ணி 'நீலாயதாட்சி' என வழங்கினாலும் முற்காலத்தில் (மூவர் வாழ்ந்த காலத்தில்) அழகிய தமிழ்ப் பெயர் பெற்றிருப்பது தெளிவாகவே தெரிகிறது. சில இடங்களில் தவறுதலாக மொழிபெயர்க்கப் பட்டிருப்பினும் பெரும்பாலும் உண்மை காண இருமொழித் தலபுராணங்களும், பக்தி இலக்கியங்களும் உற்றுழி உதவி செய்யும் என்பதிலோர் ஐயமில்லை.

# 83. நாவுக்கரசரில் அறிவியல் சிந்தனை

நா. விசுவநாதன், சென்னை.

''ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்''

எனத் தமிழ் மூதாட்டி ஔவையார் நல்வழியில் எழுதி வைத்துள்ள போதும், தமிழால் மரணத்தின் பிடியிலிருந்து மீண்டு வந்தவர்களும் உண்டு. இது இயற்கைக்கு மாறானதாக இல்லை என்ற அறிவியல் உண்மையினைச் சொல்லியே நாவுக்கரசு பெருந்தகையாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சந்திப்போம்.

**நீற்றறையில் நாவுக்கரசர்**

தம் தமக்கையார் சைவத்தில் நின்றமையினால், தருமசேனரும், பொய்யாக தமக்கு சூலை நோயை ஏற்படுத்திக் கொண்டு, சமண சமயத் திற்கு கேடு ஏற்படுத்தி விட்டதாக மன்னனிடம் கூறி சமணம் துறந்து சைவம் சார்ந்த தருமசேனரை எப்படியாவது ஒழித்திட வேண்டும் என மன்னனிடம் சமணர் வேண்டுகின்றார்.

அதன்படியே மன்னனின் ஏவலை ஏற்று மன்னனிடம் நாவுக்கரசு பெருந்தகையாரை அழைத்துச் செல்கின்றனர். சமணர்களின் புத்தி கேட்டு மதிகெட்ட மன்னனும் நாவுக்கரசு பெருந்தகையை நீற்றறையில் இடுமாறு பணிக்கின்றான். நீற்றறையில் ஏழு நாட்கள் இருந்தார் என்று

''ஓரேழு நாள் கழிந்த பின்'' (பெரியபுராணம் - 1365)

எனச் சேக்கிழார் பெருமான், குறிப்பிடுகின்றார். ''என்ன அதிசயம்?'' என்று சமணர்கள் வியந்து உரைக்கின்றனர் நம்மைப் போலவே. வெப்பம் நிறைந்த அந்நீற்றறையில் ஏழு நாட்கள் இருந்து உயிருடன் இருப்பது சாத்தியமா? என்ற ஐயப்பாட்டிற்கு அறிவியல் விளக்கம் சொல்கிறது பெரியபுராணம்.

நம் வாழ்வில் மிகப் பெரும் அளவு பயன்படும் ஆற்றல், வெப்ப ஆற்றலே. கெல்வின் என்பவரின் அறிவியல் கூற்று, **''சூடான பொருள் ஒன்றினை குளிர்ச்சியான திரவம் ஒன்றுடன் கலக்கும்போது, வெப்பமான பொருளால் இழந்த வெப்பம் குளிர்ச்சியான பொருள் ஏற்ற வெப்பத் திற்கு சமம்''** எனப் பகர்கிறது.

பொறாமை உணர்வு வெப்பமானது. அன்பும், கருணையும் குளிர்ச்சி யானது. நாவுக்கரசரின் உள்ளம் எப்போதுமே அன்பும் கருணையுமே

வழிந்தோடும் நல் உள்ளம். தமக்கு வந்த சூலை நோய்க்கு என்ன கைம்மாறு செய்வேன் என்று நாவுக்கரசர் கூறுவதாகச் சேக்கிழார்,

''.... சூலையினுக்கு
எதிர்செய்குறை என்கொல்'' (பெரியபுராணம் - 1338)

எனக் குறிப்பிடுவதிலிருந்து எத்தகைய கண்ணோட்டம் நிறைந்த பண்பாளர் இந்த ஆளுடையரசர் என்பதனை நம்மால் அறிய முடிகிறது. இந்தக் குளிர்ந்த உள்ளம் வெப்பம் நிறைந்த அந்நீற்றறையில் இருக்கிறது. நீற்றறையின் வெப்பத்தைவிட இவரது அன்பும் கருணையும் நிறைந்த உள்ளக் குளிர்ச்சியினால் வெப்பத்தை உடைய அந்த நீற்றறை மிக்க இளவேனிற் காலத்தில் வீசி வருகின்ற குளிர்ந்த தென்றலாக இருந்தது என்று சேக்கிழார்,

''வெய்ய நீற்றறையது தான் வீங்கிள வேனிற்பருவம்
தைவருதன் தென்றல் அணை தண் கழுநீர்த் தடம் போன்று
மெய்யொளி வெண்ணிலவலர்ந்து முரன்ற யாழ் ஒலியின தாய்
ஐயர் திரு வடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே''

(பெரியபுராணம் - 1363)

தம் பாடலில், அறிவியல் உண்மையினைத் தெளிவுபடுத்தி இருக்கின்றார். கலவை முறைப்படி வெந்நீரில் குளிர்ந்த நீரினை ஊற்றினால் வெந்நீரும் குளிர்ந்த நீராகிறது அல்லவா? இங்கு இராபர்ட் மேயர் என்ற அறிவியலார் கூறும் ''ஒரு வடிவத்தில் உள்ள ஆற்றல் அழிந்தால், அது எவ்வித ஆற்றல் இழப்பும் இன்றி வேறு வடிவில் தோன்றும்'' என்ற ஆற்றல் அழிவின்மை விதி நிரூபிக்கப்பட்டுள்ளது.

நாவுக்கரசு பெருந்தகையார் முதல்வனைத் தொழுது வணங்கி,

''மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே'' (5-90-884)

என்ற பதிகம் பாடி, தம் மெய்யுணர்வு மிகுந்து அமைதியாக வெளிவந்தார். இங்கே சமணத்தில் வளர்த்த உடலினை இறைவனார் சுட்டெரித்து சைவத் திருத்தொண்டராக்கினார்.

**நாவுக்கரசருக்கு நஞ்சு கொடுத்தல்**

சமண சமயப் பயிற்சியினால்தான் உயிர் பெற்று வந்ததாகவே சொல்லி அப்பெருமகனாருக்கு விடம் கொடுக்கச் சதி செய்தனர். கண்ணோட்டம் நிறைந்த அப்பர் பெருமானின், திருப்பொலிவுத் திறனை சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகையில்,

"நைந்து உருகிப் பாய்வது போல அன்பு நீர் பொலிகண்"
(பெரியபுராணம் - 1405)

என்றும்,

"வந்து இழி கண்ணீர் மழையும்" (பெரியபுராணம் - 2168)

என்றும் குறிப்பிட்டு உள்ளார். கண்ணோட்டம் மிகுந்து இருந்தமையால் சமணர்கள் கொடுத்த விடத்தை உண்டு அமைந்தார். இதனை வள்ளுவம்,

"பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்" (திருக்குறள் - 580)

என குறிப்பிடுகிறபடியால் சமணர் தந்த நஞ்சினை உண்டார். விடம் உண்டு உயிருடன் மீண்டும் வருவது முடியுமா?

அப்பெருமகனார், விடம் உண்டு உயிருடன் மீண்டு வருவது இயற்கைக்கு மாறான செயல் அல்ல. இது திருவருளின் திருக்கருணையே என்றாலும், "சமநிலை" (equilibrium) என்ற அறிவியல் உண்மையினால் எடுத்துச் சொல்லலாம்.

"உடலில் உள்ள மற்ற இயக்கங்கள் எவ்வித மாற்றத்தினையும் ஏற்படுத்தவில்லை என்றால் அது சமநிலை" என்று அறிவியலார் குறிப்பிடுவர். மலம் நீங்கி இருவினை ஒப்பு நிரம்பப் பெற்றவரான நாவுக்கரசர், இச்சமநிலையினை அடைந்தமையால், சமணர்கள் தந்த விடம் கலந்த பால் சோறு அவரை ஒன்றும் செய்யவில்லை.

"எந்த ஒரு வேதியல் மாற்றத்திற்கும் தன்னை மாறுபடுத்திக் கொள்ளாமல், தான் இருந்த நிலையில் இருந்து மாறாமல், இருப்பதுவே கிரியா ஊக்கி" என்ற அறிவியல் கூற்றுப்படி நாவுக்கரசு பெருமான் முன் இருந்தபடியே எவ்வித மாற்றமும் இல்லாது இருந்தார் என்று தெய்வச் சேக்கிழாரும்,

"அவ்விடத்தை ஆண்ட அரசு அமுது செய்து முன்னிருப்ப
எவ்விடமும் அமுதாயிற்றெண" (பெரியபுராணம் - 1415)

என குறிப்பிடுவதிலிருந்து இவ்வறிவியல் உண்மையினை எடுத்து இயம்புதலும் வேண்டுமோ?

**கல் மிதந்ததே!**

இதனைத் தொடர்ந்து நாவுக்கரசரை எப்படியாவது ஒழித்திட வேண்டும் என மன்னருக்குப் பொய் சொல்லி, தருமசேனரைக் கல்லில் கயிற்றால் கட்டி, ஒரு படகில் ஏற்றி நடுக்கடலில் இட்டனர் என்பதனை சேக்கிழார்,

"பாங்கொரு கல்லில் அணைத்துப் பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேலையில் ஏற்றி வீழ்த்துமின் என்று விடுத்தான்"
(பெரியபுராணம் - 1388)

எனக் கூறுவதனைப் படிக்கும் போதே நம் கண்மலர்கள் நீரில் மிதக்கின்றன. அரசாணையை ஏற்று அப்பர் பெருமானைக் கட்டிய கல்லுடன் ஆழ்கடலுள் வீழ்த்துகின்றனர்.

ஐந்தெழுத்து மந்திரத்தை நினைவில் நிறுத்தும், அந்த அருட் பெருந்தகையார்,

**''சொற்றுணை வேதியன் சோதி வானவன்**
**பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்**
**கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்**
**நற்றுணையாவது நமச்சிவாயவே''** (3-11-104)

என்ற திருப்பதிகம் பாடியே இருக்கையில் கடலுள் கல்லானது மிதக்கலாயிற்று.

**''பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்**
**அருமலரோன் முதல் அமரர் வாழ்த்துதற்கு**
**அரிய அஞ்செழுத்தையும் அரசு போற்றிடக்**
**கரு நெடுங்கடலினுள் கல்** ***மிதந்ததே''***

(பெரியபுராணம் - 1397)

எனச் சேக்கிழார் பாட்டினை அமைக்கின்றார். கடலின் ஆழத்தில் விழுந்த கல் மிதப்பது சாத்தியமா? அதைத் தெப்பமாகப் பற்றி வருவது கற்பனையா? பொய்யான ஒரு கருத்தை ஒரு புலவன் படைத்திடுவானா? என்ன விந்தை என தோன்றலாம்.

ஆனால் இங்குச் சொல்லப்படுவது ஆர்க்கிமிடிஸின் அறிவியல் கோட்பாடு. (displacement of water theory). இந்த மிதத்தல் விதிப்படி, **''ஒரு பொருள் நீரில் மிதக்க வேண்டுமானால், மிதக்கக் கூடிய பொருளின் அடர்த்தி நீரின் அடர்த்தியைவிடக் குறைவாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால், அப்பொருள் நீரில் மிதக்கும்''.**

அப்படியானால் நீரின் அடர்த்தியினைவிடக் கல்லின் அடர்த்தி குறைவோ என்றால்? இல்லை. பின் மிதப்பது எப்படி சாத்தியம் என்றால், கல்லில் கட்டி கட்டிலில் இடுகையில் ஐந்தெழுத்து மந்திரத்துடன் (''அன்போடு பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார்'' - பெரிய புராணம், 1391) திருப்பதிகத்தினைப் பாடத் தொடங்குகின்றார். அப்பர் தேவாரம் முழுதும் நெஞ்சை உருக்குவன என்பதனை அவரவர் அனுபவத்தில் உணரலாம். சேக்கிழார் பெருமானும்,

**''.........என்பு கரைய உள்ளுருகி**
**இறைஞ்சி அரிதிற் புறந்தணைந்தார்''** (பெரியபுராணம்-1535)

என்றும்,

**''அன்பினுக்கு அளவு காணார் ஆனந்த வெள்ளம் மூழ்கி**
**என்பு நெக்குருக நோக்கி இறைஞ்சி''** (பெரியபுராணம்-2483)

என்றும் பின்னர் நிகழும் திருமறைக்காட்டுச் செய்தியில் குறிப்பிடுவதி லிருந்து எலும்பும் கரையும் அளவிற்கு உருகுகின்றார் என அறிய முடிகிறது.

நெஞ்சுருகிப் பாடும் பதிகத்தினால் கட்டப்பட்ட அந்த (மல) கல்லும் உருகுகிறது. (கல் உருகாது, அதனால் கல்லின் அடர்த்தி குறைந்து விடுகிறது என்று பொருள் கொள்ள வேண்டும்). அறிவியல் உண்மைப்படியே இப்போது கல்லின் அடர்த்தி குறைந்து விடுகிறது. நீரின் அடர்த்தியினை விடக் கல்லின் அடர்த்தி குறைந்து இருப்பதால் இப்போது கடலில் கல் மிதக்கின்றது.

இதனையே சேக்கிழார் பெருமான் தம் பாட்டில் ''கல் மிதந்ததே'' எனக் குறிப்பிடுகின்றார். மிதக்கின்ற இக்கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறுகின்றார். இவ்வறிவியல் உண்மையினை ஏற்றுக் கொள்ளும்படி அமைத்ததே சேக்கிழார் பெருமான் சொல்லும் அறிவியல் சிந்தனை. இது எண்ணி வியக்கத்தக்கது.

**திருமறைக்காட்டில்...**

திருமறைக்காட்டில் திருக்கோயிலின் திருக்கதவம் வடமொழி வேதங்களினால் நீண்ட நெடுங்காலமாக திறக்கப்படாமலிருந்தது. எத்தனை ஆண்டுகளாக திறக்கப்படாமல் இருந்தன என்பதனை அறிய முடியவில்லை, இதனைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகையில்,

''....உரவக் கதவந் திருக்காப்புச்
செய்த *அந்நாள் முதல் இந்நாள் வரையும்*''

(பெரியபுராணம்-1530)

என்கின்றார். இதனைக் காணவொண்ணாத பெருந்தகை, அடியார்கள் நேர்வழியே சென்று இறைவனை வழிபட,

**''பண்ணின் நேர் மொழியாள் உமைபங்கரோ
மண்ணினார் வலம் செய்ம்மறைக்காடரோ
கண்ணினால் உமைக் கானக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மின்னே''** (5:10:93)

என்று திருப்பதிகத்தினை அருளித் திருக்கதவம், திறக்க வேண்டுகின்றார். பெருந்தகையாரின் பத்து பாடலுக்குப் பின்னர் தான், அடைக்கப்பட்ட திருக்கதவம் திறக்க திருவருள் புரிந்தது என்றால், எத்தனை ஆண்டுகளாக அது அடைக்கப்பட்டிருக்கும் என்பதனை நம்மால் ஓரளவிற்கு யூகிக்க முடிகின்றது.

பின்னர், சம்பந்தப் பெருமானைத் திருக்கதவம் தாழிடப் பாட வேண்டு கின்றார். சம்பந்தப் பெருமான் பதிகம் தொடங்கிய முதல் பாட்டிலேயே கதவம் திருக்காப்பிட்டது. இதனை சேக்கிழார் பெருமான்,

"...பொற் கதவந் திருக்காப்புச்
செய்தது எடுத்த திருப்பாட்டில்" (பெரியபுராணம் - 1537)

எனக் குறிப்பிடுகின்றார். தாம் அரிதில் பாட பிள்ளையார் எளிதில் பாட, என சற்று அயர்ந்தார் என குறிப்பிடுவது சரியல்ல. அடைத்து வைக்கப் பட்டதால், உள்ளிருக்கும் காற்று sustain ஆன படியினால்தான் அப்பர் பெருமான் அயர்வுற்று இருந்தாரே அன்றி "தன் முனைப்போடு பாடத் தொடங்கி விட்டோமோ" என்ற கருத்தில் அயர்வுற்று இருந்ததாக எண்ணுதல் முறையன்று.

"தேடித் தேடொணத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்" (4-9-93)

எனப் பாடும் அவர் உள்ளத்தில் இறைவன் இருக்கையில் தன் முனைப்பு வர சிறிதும் வாய்ப்பில்லை என்பதனை அறிந்து கொள்ளுதல் அவசியம். அப்படியானால், ஞானசம்பந்தப் பெருமானும் அப்பர் சுவாமிகளுடன் தானே இருந்தார் அவரும் தானே இந்தக் கருத்தின்படி அயர்வுற்று இருக்க வேண்டும்?

ஞானசம்பந்தப் பெருமானைவிட அப்பர் சுவாமிகள் உடல் வயதில் மூத்தவர். மூடியிருக்கும் திருக்கதவு திறக்கும்போது, அடைத்து வைத்த காற்று மூர்ச்சையடையச் செய்து அயர வைத்தது. சம்பந்தப் பெருமான் இளையவர் என்பதனால் தாங்கிக் கொள்ள இயன்றது என்றே கொள்ளத் தோன்றுகிறது.

தமக்கு அயர்ச்சியினை ஏற்படுத்தியது போல மற்ற அடியார்களுக்கும் ஏற்பட்டு விடக்கூடாது என்று எண்ணியேதான் பெருந்தகையார், ஞானசம்பந்தப் பெருமானைத் திருக்கதவம் தாழ் இடப் பாடும்படி வேண்டுகின்றார். (இந்தக் கருத்து உண்மையில்லை என்றால், தாழ் திறக்கப் பாடிய பெருந்தகையே தாழிடவும் பாடியிருக்கலாம்.)

ஒரு காப்பு பாடியவுடனே திருக்கதவம் தாழ் இடப்பட்டது. நாவுக்கரசு பெருந்தகையாரின் உள்ளக் கிடக்கையைத் தெரிந்து இறைவன் உடனே திருக்கதவம் தாழிட திருவுளம் கொண்டுள்ளார் என்பதும் நிகழ்ச்சிகளின் மூலம் தெளிவாக தெரிகிறது.

அப்படியானால் கடைசிப் பாடலில், "இரக்கம் ஒன்றிலீர்" என்று குறிக்க காரணம் என்ன?

பல அடியார்கள் கூடியிருக்கும், திருமறைக்காடு திருக்கோயிலில், நீண்ட நெடும் நாட்களாக தாழிடப்பட்டுள்ள திருக்கதவினை உடன் திறக்கவும் கூடாது. அப்படித் திறப்பதால் அடியார்கள் கூடியிருக்கும் திருக்கோயில் கட்டிடத்திற்கு எந்த ஆபத்தும் வந்துவிடக் கூடாது என்பதனால் தான் திருவருளின் திருக்கருணை மெதுவாக நாவுக்கரசு பெருந்தகையாரின் பத்துப் பாடலுக்குப் பின் திறக்கப்பெற்றது.

அந்நாள் முதல் இந்நாள் வரையில் அடைக்கப்பட்ட கதவம் என்று அறிய முடிகிறதே தவிர எத்தனை ஆண்டுகளாக அடைக்கப்பட்ட கதவம் என்பதனை அறிய முடியவில்லை. ஒரு வேளை இத்தனை காலம் இந்த திருக்கதவம் அடைக்கப்பட்டு இருந்தது என்பதனை சுவாமிகள் முன்னரே அறிந்திருப்பார்களேயானால் இப்படி அருளிச் செய்திருக்க மாட்டார்கள் என்று தான் எண்ணத் தோன்றுகின்றது.

இப்படிக் கதவைத் திறப்பதும், மூடுவதும் இறைவனின் திருவிளையாடல், இதனால் அடியார் பெருமை காட்டப்படுகின்றது என்றாலும் இந்த விளையாட்டில் சொல்லப்படுவதாக கருதுவது, வடமொழியால் அடைபட்ட கதவத்தை, தமிழால் திறக்கவும் முடியும். (சாவியில்லாமல் பூட்டும் பூட்டுக்கள் உண்டு. ஆனால் எந்தப் பூட்டு ஆனாலும், சாவியில்லாமல் திறக்கவே முடியாது. அதுபோல, திருவடிக்கு சாவி தமிழ்ப்பாட்டு தான் என்பதனை குறிப்பதாகவே கொள்கிறேன்). வடமொழி வேதங்களைவிட, தமிழ் சிறந்தது எனக் காட்டத்தான் என்று சிந்திக்கத் தோன்றுகின்றது.

அறிவியலின் அனைத்துப் பிரிவுகளும் ஆன்மீக செல்வர்களின் வரலாற்றில் உள்ளன என்பதனை உணர்ந்து ஆழ்ந்து படிக்க வேண்டும். ஆன்மீகத்தை ஏற்காத அறிவியல், கண் இல்லாதவன் கடைவீதியில் செல்வது போலவாகும். உண்மையைச் சொன்னால், உலகம் என்னும் பள்ளியில் நாம் எல்லோரும் மாணவர்கள். எந்த நாடும் நாங்கள் அறிவியல் முன்னேற்றம் அடைந்து விட்டோம். இனி அடைவதற்கு எதுவும் இல்லை என்று சொல்லிவிட முடியாது. இன்னமும் படிக்க வேண்டியது நிறைய இருக்கின்றது.

**நீற்றறையில் நாவுக்கரசர்**

"சூடான பொருள் ஒன்றினை குளிர்ச்சியான திரவம் ஒன்றுடன் கலக்கும்போது, வெப்பமான பொருளால் இழந்த வெப்பம் குளிர்ச்சியான பொருள் ஏற்ற வெப்பத்திற்கு சமம்" - கெல்வின்

"ஒரு வடிவத்தில் உள்ள ஆற்றல் அழிந்தால், அது எவ்வித ஆற்றல் இழப்பும் இன்றி வேறு வடிவில் தோன்றும்" - இராபர்ட்மேயர்

**நாவுக்கரசருக்கு நஞ்சு கொடுத்தல்**

"உடலில் உள்ள மற்ற இயக்கங்கள் எவ்வித மாற்றத்தினையும் ஏற்படுத்தவில்லை என்றால் அது சமநிலை"

**கல் மிதந்ததே!**

"ஒரு பொருள் நீரில் மிதக்க வேண்டுமானால், மிதக்கக் கூடிய பொருளின் அடர்த்தி நீரின் அடர்த்தியைவிடக் குறைவாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால், அப்பொருள் நீரில் மிதக்கும்".

- ஆர்க்கிமிடிஸ்

# 84. சிவப்பிரகாசர் நோக்கில் நாவுக்கரசர்

சு. விஜயகாந்தி, மயிலம்.

காலம் காலமாகத் தொடர்ந்து இறையருளாளர்கள் இறைபணியும் இன்றமிழ்ப் பணியும் ஆற்றியமை சமய வரலாறு பகரும். இச்சமய வரலாற்றில் இன்றியமையாத் தடம் பதித்தவர்கள் 17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த அருளாளர்கள்; குமரகுருபரர், சிவஞான முனிவர், துறைமங்கலம் சிவப்பிரகாசர் எனும் மூவர். இவர்களுள் சிவப்பிரகாசர் தம் புலமை காப்பியம், புராணம், சிற்றிலக்கியங்கள், அறவிலக்கியம் எனப் பல திறத்தில் மிளிர்கின்றன. தம்மையொத்த அடியார்கள் மீது ஆழ்ந்த பற்றுக் கொண்ட சிவப்பிரகாசர் தாமியற்றிய 34 இலக்கியங்களுள் ஆங்காங்கே அடியாரின் வரலாற்றுச் சுவட்டினைப் பதிப்பித்துப் புதுப்பித்துள்ளார். இவ்வகையில் நாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்வுகளுள்,

1. கல்லைத் தெப்பமாக்கிக் கரையேறியது.
2. சிவிகை சுமந்தது
3. நீற்றறை பொய்கையாக்கியது
4. திருக்கதவம் திறந்தது
5. சூலைநோய் தந்து ஆட்கொண்டது
6. அப்பூதியடிகள் அப்பரால் உய்வுற்றது.
7. சமணரை வென்றது
8. படிக்காசு பெற்றது

போன்றவை சிவப்பிரகாசரின் உள்ளத்தில் ஆழங்கால் ஊன்றின. இந்நிகழ்வு களைப் புலவர் மொத்தம் 17 இடங்களில் சுட்டி மகிழ்கிறார். இவற்றுள் நாவரையர் கல் மிதக்க கரையேறிய நிகழ்வினை மட்டும் புலவர் ஆறு இடங்களில் பன்முக நோக்கில் சுட்டியதன் திறனுரைப்பது இவ்வாய்வுரை.

நாவரையர் ஆற்றிய இவ்வரிய நிகழ்வு சமுதாயத்தில் ஒரு மாபெரும் புரட்சிக்கு வித்திட்டது, சைவம் தழைக்க வழிவிட்டது. பல்லவ மன்னனும் இந்நிகழ்வுக்குப் பிறகு மனம் மாறினான். மன்னன் வழி மக்களும் சென்றனர். சமய உலகில் சைவம் தழைத்தோங்கியது. நாவரையரின் தொண்டுநெறி சிறந்தது. சமய வரலாற்றில் மாபெரும் திருப்புமுனைக்குக் காரணமாக அமைந்தது இவ்வரிய நிகழ்வு. எனவே இந்நிகழ்வினை சிவப்பிரகாசர் போல் பலரும் போற்றி நெஞ்சம் நெகிழ்ந்துள்ளனர்.

## 1. எது அரிது?

நாவரையர் சமணரால் கல்லில் கட்டிக் கடலில் எறியப்பெற்ற போழ்து, ஒருபக்கம் உப்புக்கடலை நீந்தி தன்னைக் காக்க வேண்டிய சூழல். மறுபக்கம் தம்மை மிகுதியும் வருத்தும் அருகக்கடலைக் கடக்க வேண்டிய கட்டாயம். இவ்விரு சூழலையும் கடந்து வெற்றிகண்டார் நாவரையர். இதனை உற்றுநோக்கி உளம் தோய்ந்த சிவப்பிரகாசர் தாம் அருளிய நால்வர் நான்மணிமாலையில் சொல்வேந்தரை நோக்கி, அருகக் கடல் கடந்ததா? உப்புக்கடல் கடந்ததா? இவற்றுள் அரிது எது? இயம்புவாய், என வினவி நம் சிந்தைக்கு விருந்தாகிறார்.

''அருகக்கடல் கடந்தேறியதோ சிலையம்பி யெனப்
பெருகக்கடல் கடந்தேறியதோ சொல் பெருமிடறு
கருகக்கடல்விடம் உண்டோன் அடியிற் கசிந்து மனம்,
உருகக்கடல் அன்புபெற்ற சொல்வேந்தே உனக்கரிதே''

(நா. நா. மாலை; பா. 22)

ஈங்கு, சமணரைக் கடலுக்கு உருவகமாக்கி, அருகக்கடல், உப்புக்கடல் இரண்டையும் ஒப்பாய்ந்து நோக்கி, 'சிலையம்பி' எனும் தொடரை விடையாகத் தந்துள்ளார். இத்தொடர் நாவரையர் கடலைக் கடக்க கல் தோணியாகியதை உணர்த்தும். ஆனால் அருகக் கடலைக் கடக்க நாவரையர் அடுக்கடுக்காக பல்விதக் கொடுமைகளுக்குத் தள்ளப்பெற்றார். இறுதியில் 'நமச்சிவாய' மந்திரத்தின் ஆற்றலினால் உய்ந்தார். இவ்வுலகும் உய்ய வழி வகுத்தார். எனவே அருகக்கடல் கடந்தேறியதே அரிது எனும் உண்மை தெளிவாகப் புலப்படுகிறது. ''இவ்விருவகைக் கடல் கடந்த நிகழ்ச்சிகளில் உயர்வுடையது எது? வல்லவனுக்கு புல்லும் ஆயுதம் என்றாற்போல் சொல்வேந்தராகிய நாவுக்கரசருக்குத் தோணியாய் இருந்துதவியது கல். மேலும் தன்னைச் சார்ந்தோரை எல்லாம் அழிக்க வேண்டும் என்ற எண்ணம் கடலுக்கில்லை. ஆனால் வஞ்சகத் தன்மையையே அடிப்படையாகக் கொண்ட சமணக்கடலை எத்தகைய துணையும் இன்றிக் கடந்ததே சிறப்புடையது. என்று பாடி இந்நூலாசிரியரே சிலையம்பி எனும் தொடர் நயத்தால் எடுத்துக் காட்டுகிறார்'' எனும் உரையும் இக்கருத்திற்கு அரணாக அமைகிறது. 'சமணக்கடல் நீந்தி, சைவநெறி உலகம் மும்மையும் பரவச் செய்த சொல்லரசே' என வள்ளலாரும் இந்நிகழ்வினைப் போற்றுகிறார்.

## 2. கடலில் விழப் போதுவன் 'எனல்'

அடுத்து கடல் கடந்த நிகழ்வின் உறுதிப்பாட்டை மேலும் வலியுறுத்தும் வகையில் ஒரு பாடலை இயம்பியுள்ளார் புலவர். நாவரையர் கடல் கடந்தேறியது தம்பொருட்டு தம்மைக் காக்கும் முயற்சியாகவிருந்தாலும், அங்கு இறைவன் தோன்றாத்துணையாக அவரைப் பாட அருளியமையின்

அதன் பயன் பொது நலமே யாம். நாவரையர் தொண்டு நெறியால் இறைவனை மகிழச் செய்ததை உணர்ந்த ஒருவன், தாமும் அவரைப்போல் இறைவனை மகிழ்விக்க கடலில் விழப்போதுவேன் என்கிறார். எவ்விதம் அப்பூதியடிகள் நாவுக்கரசர் எனும் பெயரையே இறைநாமமாகக் கொண்டு தொண்டாற்றி உய்ந்தாரோ, அதுபோல் நாவரையரின் தொண்டின் பயன் கண்டு மகிழ்ந்த ஒருவன் தானும் அவரைப்போல் கடலில் வீழ்வேன் என்கிறார். இங்கு, பிறர் மகிழ கடலில் வீழ்பவனுக்கு இறையருள் தோன்றும் துணையாகி நம்பிக்கையும் ஊட்டியமை அறியவியலும். அந்நம்பிக்கையின் உறுதிப் பாட்டினால்,

> ''வேட்டான் மலிபெருங்கல் அவன்போல மிதப்பமினெனப்
> பூட்டா மறிதிரைவார் கடற்கேவிழப் போதுவனே'

என்று தம் வீரத்தைக் காட்டுகிறார் புலவர்.

**3. அவையடக்கம்**

பாப்புனையும் புலவர்கள் தாமியற்றிய பாக்களை அவையடக்க மாகக் குறைத்து மதிப்பிடுவது மரபு. அவ்வகையில் புலவரும் தாமியற்றிய பாக்களை மூவர் தமிழோடு ஒப்பிட்டு நோக்கி அவற்றைப் புகழ்ந்தும், தம் கவியை இகழ்ந்தும் உரைக்கிறார். தேவார மூவருள் நடுநாயகமாகத் திகழும் நாவரையரின் கடல் கடந்த நிகழ்வினை அவ்விடத்துச் சுட்டி, அவர்தம் பாவாற்றலை வியக்கிறார்.

> ''படத்தினிற் பொதிந்த குடத்து..............
> ..........................................................
> ..........................................................
> **பரவையிற் புணைபோல் மிதந்து வந்தணையப்**
> **பருங்கல்பண் ஆக்கவும் அறியா**
> ..........................................................
> **அமல என்கவிகள் அடியனேன் மனத்தை**
> **அறிந்த புண் ஆக்கவே அறியும்''** (தி.வெ. கலம்பகம் - 46)

ஈங்கு புலவர்தம் அவையடக்கத்தைப் புகலும்போது நாவரையர் தம் பாவாற்றலால் 'சொற்றுணை வேதியன்' எனும் பதிகம் பாடிக் கரை சேர்ந்தமையின் இந்நிகழ்வு சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டது. ஆனால் தம் பாக்கள் உள்ளத்தைப் புண்ணாகச் செய்யும் தன்மையன என்கிறார். இதற்குக் காரணம் மூவரின் தேவாரத் தமிழைப் போற்றும் நோக்கமேயாம். இதனையே, மற்றொருவிடத்து புலவர் 'மூவர் தமிழில் 'சிவ' நாமத்தைப் பதித்திருப்பது பொன்னிடைப் பதித்த இரத்தினம் போன்றது; ஆனால் தான் அப்பெயரைப் பதித்திருப்பது இரும்பில் பதித்த இரத்தினம் போன்றது' என அவையடக்கமாக மொழிந்துள்ளார். (தி.வெ. கலம்பகம் - 58)

''வேதவுணவு வெறுத்து புகழ் மூவர் ஓது தமிழ் ஊணுக்கு உழல் செவியான்'' என்பதும் இங்கு ஒப்பிடற்குரியது.

**4. அடைமொழி**

'அறிவறிந்த மக்கட்பேறு' எனும் தொடருக்குப் பொருளாகத் திகழும் நாவுக்கரசரையும் 'இவன் தந்தை என்னோற்றான் கொல்லெனும் சொல்' எனும் மறைக்குச் சான்றாக திகழும் அவர்தம் பெற்றோரையும் புகழுமிடத்து, புலவர் அடைமொழியாக இந்நிகழ்வினைக் காட்டுகிறார்.

''பெற்றால் ....................................................

....................................................................

செற்றார் புரம் எரிசெய்த வில்வீரன், திருப்பெயரை
பற்றாமறிவெண் திரைக்கடல் நீந்திய பாவலனே''

(நா.நா. மாலை - 30)

பெற்றோரும், புதல்வரும் புகழப் பெறுதற்குக் காரணம் உலகமெல்லாம் அறிந்த கடல் கடந்தேறிய நிகழ்வு. ஆதலின் அந்நிகழ்வினை இவ்விடத்து அடைமொழியாகக் குறித்தது மிகுதியும் பொருத்தமுடைத்து திரிபுரம் எரித்த வில்வீரனின் திருப்பெயரையே பற்றுக்கோடாகக் கொண்டு உய்ந்தார் என்பதும் இங்குத் தெளிவாகிறது. இவ்வைந்தெழுத்தின் மகிமையை,

''அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலா
மோனந் தாவா முக்தியும்''

எனும் பா போற்றும்.

**5. நம்பியாரூரரின் பாவாற்றல்**

நம்பியாரூரரின் பாவாற்றலை இயம்ப வந்த புலவர், மூவரின் செயல்களை ஒப்பிட்டு நோக்கி, தம் கருத்தை வினாவாக்கித் தருகிறார். அதுபோது இந்நிகழ்வினைக் குறிக்கிறார்.

''போதமுண்ட பிள்ளையென்பு பொருகண் மாதுசெய்ததோ
காதல்கொண்டு சொல்லின் மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ,
வாய்திறந்து முதலை கக்க மகனை நீ அழைத்ததோ
யாது நம்பியரிது நன்றெனக்கு இயம்ப வேண்டுமே''

(நா.நா. மாலை - 19)

இவ்விடத்துப் புலவர் ஒப்பாய்வாளராகத் திகழ்கிறார். சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கியது அரியதா; நாவரையர் கல்மிதப்பக் கரை கடந்தது அரியதா; சுந்தரர் முதலை வாயிலிருந்து பிள்ளையை மீட்டது அரியதா என வினவுகிறார். நாவுக்கரசருக்குக் கடலில் மிதக்கக் கல் தெப்பமாயிற்று,

சம்பந்தருக்கு எலும்பு அடிப்படை ஆதாரமாக அமைந்தது; ஆனால் ஆரூரருக்கு குளத்தில் நீரில்லை, பிற தாவரங்கள் முதலை போன்ற உயிரினங்கள் எதுவுமில்லை, அவிநாசியப்பன் அருளால் அவர் பாடிய பாவாற்றலால் குளத்தில் நீர் வந்தது; முதலை வந்தது; பிள்ளையையும் கரையில் கக்கியது. எனவே, எவ்வித ஆதாரமுமின்றி தற்போதுள்ள பருவ வயதோடு பிள்ளையை 'மீட்டதற்கு' அவர்தம் பாவாற்றலே காரணம். ஆதலின் நம்பியின் செயலே அற்புத ஆற்றல் வாய்ந்தது என்பது விடையாகக் கிடைக்கிறது. இவ்விடையை வலியுறுத்த, கடல் கடந்த நிகழ்வை வினாவாக்கிய புலவர்தம் ஆற்றல் பாராட்டுக்குரியது.

## 6. நெஞ்சத்தின் சிறப்பு

புலவர் தம் ஞானாசிரியன் மீது பாடியவற்றுள் ஒன்று சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடுதூது. இந்நூலுள் தூதனுப்பும் நெஞ்சத்தின் சிறப்புரைக்குமிடத்து, 22 அடியார்களின் செயற் கருஞ்செயல்கள் நினைவூட்டுகிறார். அவற்றுள் ஒன்று இந்நிகழ்வு.

> **................ எம்பெரிய**
> **நாவிற்கு அரசு நடுக்கடலுள் கல்பெருந்தூண்**
> **மேவிப் புணையா மிதத்ததூஉம்''** (சி.பா.நெ. தூது: 143,144)

இவ்வரிய நிகழ்வினை விளம்புதற்குக் காரணத்தைப் புலவர்,

**'நெஞ்சே! இவையனைத்தும் நின் இசைவால் நிகழ்ந்தன'**

என்கிறார். அனைவரும் செயலுறுவதற்கு அடிப்படை நெஞ்சமேயாதலின், அந்நெஞ்சகத்தின் ஆற்றலினால் விளைந்த அருஞ்செயல்களைக் குறிப்பிட்டு தூது பொருளின் சிறப்புரைக்கிறார் புலவர். 'நெஞ்சகமே கோயில்' 'உள்ளம் பெருங்கோயில்' எனும் தொடர்களும் நெஞ்சத்தின் பெருமை உரைப்பன 'நாவுக்கரசர் கடல் கடந்தேறுவதற்கும் அவர்தம் நெஞ்சம் அகலா ஐந்தெழுத்து மந்திரமே காரணம் என்பது துணிவு'.

மேற்கூறியவற்றால், நாவுக்கரசர் கடல் கடந்தேறிய ஒரு நிகழ்வினை,

1. சமணக் கடலை வெற்றிபெற
2. மனத்திட்பத்தையும் நம்பிக்கையும் பெற
3. அவையடக்கமாக மூவர்தமிழ் போற்ற
4. அடைமொழியாக்க
5. நம்பியாரூரரின் பாவாற்றல் போற்ற
6. தூது பொருளின் சிறப்புரைக்க என்று பன்முக நோக்கில் சுட்டிய புலவரின் திறம் பாராட்டுக்குரியது. இவற்றால் பெறப்படும் சில இலக்கிய உத்திகள்.

1. அடியார் வரலாற்றைச் சிற்றிலக்கியங்களில் சுட்டல்
2. ஒப்பாய்வு நோக்கில் திறனாய்ந்து புலப்படுத்தல்
3. அடியார் வரலாற்றைச் சமூகப் பயன் நோக்கி வலியுறுத்தல்
4. ஒரு அடியாரின் பாவாற்றலையுரைக்க மூவர் வரலாற்றோடு ஒப்பிடல்.
5. அடியார் வரலாற்றின்வழி, தூதுப் பொருளின் சிறப்புரைத்தல்
6. அடைமொழியில் அடியார் வரலாறு சுட்டல் .
7. தேவாரத் தமிழ் போற்ற அடியார் வரலாறு சுட்டல்.
8. பட்டிமன்றப் பாங்கில் வினாவினை மட்டும் வினவல்.
9. ஆண்டவனும் அடியவரும் சமம் எனல்.

# 85. அப்பர் வழிபாடும் தொண்டும்

எஸ். விஜயகுமார், தஞ்சை.

தமிழகத்தைப் பல வேற்றுமொழி மன்னர்கள் ஆண்டதால் இந்த நாட்டின் பண்பாடுகள் சிதறி உருக்குலைந்து போய்விட்டன. "கடவுள் என்னும் உலகக் கர்த்தா ஒருவன் இல்லவேயில்லை" என்ற ஒரு சமயமும் 'அவன் இருந்தாலென்ன இல்லாது போனால் நமக்கென்ன கவலை' - என்ற ஒரு கொள்கையும் பரவி மக்கள் மருகியிருந்த நேரம், தமிழகத்தை ஆண்ட பேரரசுகள், இந்த மதவாதிகளிடம் அதிகாரத்தை அடகு வைத்து விட்ட நேரம். பாலிமொழிக்கும் பிராகிருதத்திற்கும் முதலிடம் கொடுக்கப் பட்டதால், இந்த நாட்டு மொழி 'சவலக் குழந்தை'யாய் மாறிய நேரம். இந்த நேரத்தில் சமயக் குரவர்கள் தோன்றினார்கள். பக்தி மார்க்கமே தலை வணங்கிக் கிடந்த தமிழைத் தட்டி எழுப்பிவிட்டது.

மருள்நீக்கியார் எனும் மாமனிதர், ஞாலத்திருள் அகற்றிய நாவுக்கரசர், வாழும் வகைக்கு வழிகாட்டினார். தொண்டு செய்து பழுத்த பழமான நாவுக்கரசரின் மக்கள் தொண்டும் மகேசன் தொண்டும் தமிழுக்குத் தொண்டானது.

சூலை நோய் நீங்க வேண்டிப் பாடிய "கூற்றாயினவாறு" எனத் தொடங்கும் பாடலிலேயே,

"சலம் பூவோடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்"

என்று தம் சமயநெறிக்கும் தொண்டு நெறிக்கும் தமிழை ஆதரவாகக் கொண்டார் அந்தத் தொண்டர்.

### இறைவன் தன்மை கண்டவரும் காணாதவரும்

திருமூலர் திருமந்திரத்தில் அவையடக்கமாகக் கூறும்போது,

"யாரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறிவார் இந்த அகலமும் நிகலமும்
பேரறியாத பெருஞ் சுடர் ஒன்றதின்
வேரறியாமை விளம்பு கின்றேனே"

என்று இறைவனின் அளவிடற்கரிய தன்மைகளையும் ஆற்றலையும் அளவிட்டுக் கூற முடியாது என்று கூறுகிறார்.

சம்பந்தர் பெருமானும் தமது திருப்பாசுரத்தில் இறைவனைப் பற்றிக் கூறும்போது,

"யார் அறிவார் அவர் வெற்றியே"

என்றும்,

"ஆட்பாலவர்கருளும் ஆதிமாண்பும்
கேட்பான்புகில் அளவில்லை கிளைக்க வேண்டா"

என்றும்,

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி"

என்றும் இறைவனது ஆற்றலைப் பரவுகிறார்.

அதேபோல அப்பர் பெருமானும் இறையைப் பற்றிக் கூறும்போது,

"இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன்
என்றெழுதிக் காட்ட ஒண்ணாதவன்...."

என்று இறைவன் தன்மையைக் கூறினார். ஆனால் அதே நாவுக்கரசர் பெருமான் தனித்திருக் குறுந்தொகையில் இறைவன் நமக்கு தலையும், மனமும், வாயும் வழங்கியது அவனையே சிந்தித்துப் பேசி வணங்கவே யாகும் என்பதற்காக,

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்ந்த சென்னியும் தந்த தலைவனை..."

என்றும் அவனை எங்கே எவ்வாறெல்லாம் காணலாம் என்பதையும் கூறுகிறார்.

"விறகில் தீயினன் பாலின்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியன்
உறவுக் கோல்நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"

என்று இறைவனைக் காணும் நெறி முறைகளைக் கூறுகிறார். இறைவன் அன்புடையவர் நெஞ்சத்தையே இருப்பிடமாகக் கொண்டவன் என்பதைத்

"துறவி நெஞ்சினராகிய தொண்டர் காள்"

"காமியஞ் செய்து காலம் கழியாதே..."

"தொண்டராகித் தொழுது பணி மினோ"

என்று குடமூக்குப் பதிகத்தில் அடியவர்களுக்கு அடிகளார் அறிவுரை கூறுகின்றார்.

**வழிபாடும் வாழ்வும்**

சமணர்கள் - தம்மை நீற்றறையில் இட்ட போதும் யானைக் காலில் இடறிவிட்ட போதும், கல்லில் கட்டிக கடலில் இட்ட போதும் இறைவனின் திருநாமத்தைச் சொல்லியே தாம் பிழைத்ததாகக் கூறுகிறார்.

**''நீலக் குடியரன் நல்ல நாமம் நவிற்றிநான் உய்ந்தேன்''**

என்கிறார். பேசிப் பேசியே வாழ்நாளைக் கழிக்கக் கூடாது என்பதற்கு,

**''பொக்கம் பேசி பொழுது கழியாமலும்''**

**''ஓதியே கழிக்கின்றீர் உலகத்தீர்''**

என்று கூறிப் பேசிப் பேசியே நாளை வீணே கழிக்காதீர் என விளித்து,

**''காலை எழுந்து கடிமலர்தாம் கொணர்ந்து''**

என்றும்,

**''அட்டமாமலர்கள் கொண்டே ஆனஞ்சும் ஆட்ட ஆடிச்**
**சிட்டராய் அருள்கள் செய்வோர்''**

என்று திருச்சோற்றுத்துறை இறைவரை வணங்கும்போது, வணங்குவதில் நெறிமுறைகளாகக் கூறுகிறார்.

அரசன் அழைத்ததாக சமணர்கள் வந்து அழைத்தபோது

**''இரு நிலத்தில் எமக்கெதிரா ரெவருமில்லை''**

**''சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்''**

என்றும்,

**''பொன்னிதழ் நறுந்தாரான் சீரார் நமச்சிவாயம் சொல்ல வல்லோம்''**

என்று தமது இறுதி நிலையையும் உறுதி நிலையையும் தன்மைப் பன்மையில் எடுத்தோதுகிறார்.

**சிவநெறி அடைய வழி**

இலிங்க புராணக் குறுந்தொகையில் படைப்புத் தொழில் புரியும் பிரமனாலும், காப்புத் தொழில் புரியும் திருமாலாலும் சிவபெருமான் அடியையும் முடியையும் காண முடியாமைக்குக் காரணம் கூறும் அப்பர், அவ்விருவரும் நால்வகை வழிபாடுகளில் ஒன்றிலும் பங்கு பெற்றிலர் என்பர்.

**''அலரும் நீரும் கொண்டு ஆட்டித் தெளிந்திலர்**
**பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்**
**மரங்களேறி மலர் பறித் திட்டிலர்**
**வெந்த நீறு விளங்க அணிந்திலர்''**

நால்வகைத் தொண்டு நெறியில் நில்லாது
"தடுக்கினாற் சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற்றாரங் கிருவரே"

என்று பக்தி நெறிக்குக் காரணம் பகர்கின்றதைக் காணலாம். இறைநெறிக்கு, சிவநெறிக்குப் பக்தியே பாதையாகும் என்பதையும் அப்பர் பாடலி லிருந்து அறியலாம்.

**அடியார் பெருமை**

"மால் அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே"

என்று கூறுகிறது.

சைவத் திருமுறைகள் சிவனடியார்களின் பெருமைகளைப் பலப்படப் பேசுகின்றன. அடியவர்களின் நடுவில் இருப்பதையே இறைவன் விரும்புகின்றான். மாணிக்கவாசகரும் சிவபுராணத்தில்,

"என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்..."

என்று வேண்டுகிறார் அடியேன் உன் அடியார் நடுவில் இருத்தற்குரிய திருவருள் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றார்.

அடியவர்கள் ஈசன் தமர் என்பதும், கடவுளை அடைகின்ற வரை அவர் உறவினராக வைத்து ஆட்கொள்ளுகிறான் என்பதும் அப்பர் திருக்குறுந்தொகை திருவிசயமங்கைப் பதிகத்தில்,

"வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசயமங்கைப் பிரான்
சிந்தையில் நினைவார்களைச் சிக்கெனப்
பந்துவாக்கி உயக் கொளுங் காண் மினே"

என்று பாடுகின்றார்.

**பாவமும் புண்ணியமும்**

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர். அவரவர் வினைவழி அவரவர் அனுபவம். எனினும் மாந்தரினம் தம் வாழ்க்கையில் தாம் தான் அதிகம் துன்பம் அடைவதாகக் கருதுகின்றனர். இன்பம் தனித்து வருவதில்லை துன்பமும் தனித்துச் செல்வதில்லை. இந்த உடம்பிற்குப் பிணியும் பசியும் வறுமையும், துன்பம் தருவன உள்ளத்திற்கு அறியாமையும் கவலையும், தீக்குணங்களும் துன்பம் தருவன. உயிர்க்கு இறப்பும், பிறப்பும் துன்பம் தருவன. பிணியை மருத்துவர் நீக்குவர், பசியையும், வறுமையையும் உழைப்பு நீக்கும். அறியாமை, கவலை, தீக்குணங்களை மெய்யறி வாளர்கள் நீக்குவர். உயிரின் பிணியாகிய இறப்பையும் பிறப்பையும் இறைவனே நீக்குபவன்.

இறைவன் அருள் இருந்தால் துன்பம், பிணி, பசி, நோய், பிறவிப்பிணி யாவும் நீங்கும். அவனருளாலே அவன் தாளை வணங்கின் முடியாதென ஏதும் இல்லை. அதற்கு நம்பிக்கையும் முயற்சியுமே வேண்டும். அத்தகைய நிலைக்கு நம்மை ஆயத்தம் செய்து கொள்ள வேண்டி நெஞ்சுக்கு அறம் உரைக்கும் முகத்தான் பல அனுபவச் செய்திகளைச் சொல்லுகின்றார்.

> ''பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டின்
> பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
> சுற்றி நின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
> சொல்லுகேன் கேள் நெஞ்சே! துஞ்சாவண்ணம்
> உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
> உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்கேன்''

என்றும் வேண்டிக் கொள்கிறார்.

> ''ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை''

என்று உய்யவழி காட்டுகிறார் அந்த உயர்வாளர்.

**மனமும் ஈசனும்**

புல்லாய், பூண்டாய், பல பிறவிகளில் பிறந்து உழன்று அடைய வேண்டிய துன்பங்கள் அனைத்தையும், ஒரே பிறவியில் உய்யும் கதி பெறுவதற்குரிய நெறி முறைகளையும் நாவரசரின் பாக்கள் நமக்குக் கூறுகின்றன.

எந்த உயிரும் யாரிடம் மிக அதிக அன்பு செலுத்தும் என்று பார்த்தால், அது தன் மேலேயே கொள்ளும் அன்புதான் மிக அதிகமாகும். ஒவ்வொருவரும் அவரவர்க்கேற்ற ஒரு பொருளிடத்து உயிரிடத்து அன்பு செய்வர்.

''தந்தையார் தாயார் உடன்பிறந்தார், தாரமார், புத்திரரார், தாம் மாமாரே, வந்தவாரெங்கனே, போயினவாறேதோ, மாயமாம். இதற்கேதும் மகிழ வேண்டா'' என்று இருப்பர்.

தன்மேல் வைக்கும் அன்பை கொஞ்சம் மாற்றி ஒருத்தி மேல் வைத்தால் அது காதலாகும். சற்றே விரிந்து உலகத்து உயிர்கள் மாட்டு செலுத்தினால் அருளாகும். அதையே இறைவனிடத்து செலுத்தத் தொடங்கின் அது பக்தியாகும். தன்னலமற்ற அன்பின் முதிர்ச்சியே பக்தி எனப்படும். இதையே பாரதிதாசனும்,

> ''தன் பெண்டு, தன் பிள்ளை, சோறு, வீடு சம்பாத்யம் இவை யுண்டு, தானுண்டென்போன், சின்னதொரு கடுகு போல் உள்ளம் கொண்டோன்''

என்பார். எனவே, அன்பின் வளர்ச்சியே வேண்டத்தக்கது. இதையே அப்பர் பெருமான் இன்னம்பர் பதிகத்தில்,

"என்னில் யாரும் எனக்கு இனியாரிலை
என்னிலும் இனியான் ஒருவன் உளன்
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு
என்னுள்ளே நிற்கும் இன்னம்பர் ஈசனே"

என்கிறார்.

உலகப் பற்றைத் துறக்க கானகமும், கடுந்தவமும் தேவையில்லை. இவ்வுலகிலேயே நாம் தாமரையிலைத் தண்ணீர் போல ஒட்டியும் ஒட்டா மலும் வாழ்தல் போதும். நாம் என்பது இந்த உடலல்ல, மனமல்ல, அறிவுமல்ல இவற்றிற்கும் மேம்பட்ட ஆன்மா. நாம் துய்க்கும் இன்பமும் துன்பமும் ஐம்புலன்களுக்கு மட்டுமேயாகும். அது ஆன்மாவைத் தீண்டுவதில்லை. நாம் அறிவையும் உணர்வையும் அறிந்து கொள்ள கண்களையும், காதுகளையுமே அதிகமாய் பயன்படுத்துகின்றோம். தொல்காப்பியரும் "கண்ணினும் செவியினும் நுண்ணிதின் உணரும்

உணர்வுடை மாக்கள்" என்று மெய்ப்பாட்டியலில் கூறுகின்றார். இறைவன் படைத்த பரிணாம உயிர்களைத் தன் மனத்துள்ளேயே உணரவும், காணவும் வேண்டும். அந்த நிலையில் உயர்வோ, தாழ்வோ இல்லை. உயிர்கள் எல்லாம் ஒன்றே என்ற மனம் அமைந்துவிடும்" என்பதைச் சித்தாந்தக் குறுந்தொகையில், சிந்திப்பார் மனத்தனாகிய சிவன்,

"தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியில தலைப்படும்
தன்னில் தன்னை அறிவில னாயிடில்
தன்னில் தன்னையும் சார்தற் கரியனே"

என்றதையும் அறிக. அப்பரது வாக்கு அமுத வாக்கு. இறைவனே நாவுக்கரசு என்று அழைத்தார். வாக்குக்கு அரசு வாகீசர் ஆனார்.

### தொண்டு உள்ளம்

"தொண்ட ரென்றோர் வகுப்பில்லை தொழில் சோம்பலைப்
போல் இழிவில்லை"

என்றார் பாரதியார்.

நாம் தனக்காக வாழாமல் பிறர்க்காக வாழ வேண்டும். தொண்டுள்ளம் தான் உயர்ந்த உள்ளம். அது ஏணி போல எல்லோரையும் ஏற்றும், தான் ஏறாது. தோணிபோல அனைவரையும் கரைசேர்க்கும் தான் கரையேறாது. பிற உயிர்களைத் தாங்கிக் கொள்கின்றவர்களை இறைவன் தாங்கிக் கொள்கின்றான்.

சமூகத் தொண்டு என்பது மனித இனத்திற்கு மட்டுமே உரியது. தேவர்களுக்குச் சமுதாயத் தொண்டு இல்லை. தேவர்கள் மீண்டும்

மக்களாய் பிறந்து தான் தொண்டுகள் புரிந்து தான் இறைவனை அடைய முடியும். தேவர்களினும் அடியார்களே உயர்ந்தவர்களாவர். திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் இந்திரனே கடைசியில் நின்று அடியார்களின் அருளைப் பெறக் காத்திருந்ததை,

''பூவார் திசை முகன் இந்திரன் பூமிசை
மாவாழ் அகலத்து மானமுதல்வானவர்''

நீங்காது காத்திருந்தனர் என்பதை அறிகிறோம்.

சமூகத் தொண்டிற்காக உண்ணாநோன்பும், உடைக்குறைப்பும் செய்து அண்ணல் காந்தியடிகளுக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே வழிகாட்டியவர் நாவுக்கரசராவார். கையில் உழவாரப்படை கொண்டு பணி செய்வதையே பணியாய்க் கொண்டவர் என்பதை சேக்கிழார் பெருமான்,

''... சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும், தாமும் ஆகிப்
பார் வாழத் திருவீதிப் பணி செய்து
பணிந்தேத்திப் பரவிச் செல்வார்''

என்று கூறுகிறார்.

**பிறவிப் பயன்**

யாதொரு வினையும் பற்றாதவனுடைய பாதம் பற்றினால் நமது வினைகள் நம்மைப் பற்றாது என்பது அப்பரது அமுதவாக்காலும் செயற்பாட்டாலும் உணரலாம்.

''தொண்டராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினைப் பற்றினை வேண்டுவீர்''

என்பது அவர் அருளுரை. இதையே வள்ளுவர் பெருமகனாரும் - பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றினை பற்றுக பற்று விடற்கு - என்பார்.

பிறவியின் பயனே இறையடி சேர்வது பிறவாமை வேண்டுவது. இதையே நாவுக்கரசரும் வேண்டினார். ஆயின் மீண்டும் பிறந்தால் என்ற வினாக்குறி வரும்போது,

''குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்த பிறவியும் வேண்டுவதே இம்மா நிலத்தே''

என்று மீண்டும் பிறந்தாலும் இறைவனது திருவடிகளைக்கண்டு கொண்டே இருக்கும் பேறு வேண்டும் என்கிறார்.

உலகம் உய்ய உயிர்கள் உயர ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்றும், ''தன் கடன் அடியேனையும் தாங்குதல்'' என்ற வாக்கைப் போற்றி நாவுக்கரசர் வழி சென்று பணிவுடன் பணி செய்து உய்வோமாக!

# 86. நாவுக்கரசரின் சிவ வழிபாடு

பா. விஜயன், தஞ்சை.

**நாவுக்கரசரின் இளமைக்காலம்**

கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய மூத்தகுடி - தமிழ்க்குடி. இடையில் ஏற்பட்ட அந்நிய அரசுகளால் தமிழ்ப் பேரரசுகள் சிதைந்தன. வேற்றுமொழிகளின் வரவால் தமிழ் பின்னுக்குத் தள்ளப் பட்டது. வடமொழிக் கலப்பில் மன்னர்கள் தமிழை மறந்தனர். அந்த நேரத்தில் பிற சமயவாதிகளின் ஆதிக்கத்தையும் எதிர்த்துப் பக்தி நெறி பரவியது. நாயன்மாரும் ஆழ்வார்களும் தங்கள் பங்குக்குத் தங்கள் பக்தி நெறியை வளர்க்கத் தமிழைத் துணையாகக் கொண்டனர். இதில் நாவுக்கரசரின் பங்கின் அளவு பரந்தது.

திருநாவுக்கரசரின் இளமை வாழ்க்கை சோகமயமானது. பணக்காரக் குடும்பத்தில் பிறந்து கல்வியில் சிறந்து விளங்கிய அவர் பிள்ளைப் பருவத்தில் தந்தை புகழனாரும் தாய் மாதினியாரும் மறைந்தனர். ஒரே ஒரு சொந்தமாக இருந்த தமக்கையார் திலகவதியார் திருமணத்திற்கு முன்பே கைம்மை விரதம் கொள்ள, துயரம் அவரை நிம்மதியின்றி ஓடிப்போ எனத் துரத்தியது. ஆறுதல் கூற சுற்றத்தாரைக் காணோம் என்பது தான் அவர் வாழ்வில் சூழ்ந்த அவலம். இதனைச் செல்வாக்குடைய வேற்று மதத்தவர் பயன்படுத்திக் கொண்டு அவரை மதம் மாற்றினார்கள். இன்றும் அரவணைப்புக்கேங்கிக் கவனிப்பார் அற்று அனாதையாக விடப்படும் மக்கள் தான் வேறு சமயங்களைத் தழுவுகிறார்கள் என்பது உண்மை. நாவுக்கரசர் வரலாறு இதற்கு ஒரு தீர்வு தருவதை நம்மக்கள் யாரும் ஊன்றிக் கவனிப்பதில்லை.

**அப்பரின் சிறப்புகள்**

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்"

"ஏழு எழுநூறு இரும்பனுவல்
ஈன்றவன் திருநாவினுக்கரையன்"

என்றும் நம்பியாரூரராலும், "அரசு பதையாத சித்தமொடு சிவபூசை கற்று நெறியினன்" என நம்பியாண்டார் நம்பிகளாலும், "வருஞானத் தவமுனிவர்" எனச் சேக்கிழார் அடிகளாலும் பாராட்டப்பட்டவர்.

இவர் நாயன்மாரில் வரும் வேளாளர் குலத்துப் பதின்மூன்று அடியவர்களில் ஒருவராயும், சைவச் சமயாச்சாரியர் நால்வருள் ஒருவராயும், தேவார மூவரில் ஒருவராயும் அமைந்த அருந்தொண்டர்.

இளமை வயதில் முக்தி பெற்ற நாயன்மார் சண்டேசுரர், கண்ணப்பர், ஞானசம்பந்தர் முதலியோர் ஆவர். நெடுங்காலம் வாழ்ந்து வயதில் மூப்படைந்து முத்தி பெற்றவர்கள். திருமூலர், திருநீலகண்டர், மற்றும் 81 வயது வரை வாழ்ந்து ஆயிரம் பிறை கண்ட நாவரசர் பிரானும் ஆவர்.

நாவரசர் தமிழ் வட எல்லையைக் கடந்து தெலுங்கு, கன்னடம், மாளவம், மத்தியப்பிரதேசம், இமாச்சலப்பிரதேசம் வரை பாதயாத்திரை சென்று பன்மொழி பயிலும் நாடுகளுக்குச் சென்று வந்தவர். நாவரசின் பெருமையினை அப்பூதி அடிகள் வாயிலாகப் "பெருங்கடல் கல்மிதப்பில் போந்தேறும் அவர் பெருமை அங்கனர்தம் புவனத்தில் அறியாதார் யாருளரோ?" என்று சேக்கிழார் பெருமான் வினவுகிறார்.

**நாவுக்கரசரின் வடிவம்**

இளமைப் பருவம் சமண சமயத்தில் கழிந்த பின்னர், சூலை நோயால், சிவபெருமான் இவரை ஆட்கொண்டார். சூலை நோய் நீங்கித் திருவதிகை வீரட்டானத்தில் உள்ள சிவனை ஏத்தி வழிபட்டு வந்த காலத்தில் இவரது அருட்கோலத்தை,

**மையற்றுளை ஏறிமகிழ்ந்தவர்சீர் வாகீசர்**
**மனதோடு வாய்மையுடன்**
**மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவும்**
**சிவசின்னம் விளங்கிடவே**
**எய்துற்ற தியானம் அறா வுணர்வும் ஈறின்றி**
**எழந்திரு வாசகமும்**
**கையில் திகழும் உழவாரமுடன் கைக்கொண்டு**
**கலந்து கசிந்தனரே!**

என்று பாடுவர்.

அதாவது மயக்கம் தரும் புறச்சமயமாகிய சமண சமயத்தினின்று சுமையேறி மகிழ்ச்சி பெறும் சிறப்புடைய திருநாவுக்கரசர் மனம், வாக்கு, காயம் மூன்றாலும் பொருந்திய சிவப்பணிகளைச் செய்பவரானார். இது சேக்கிழார் கூற்று.

அடுத்து இவர் சமணர்கள் செய்த கொடுமைகளின்றும் தப்பி, கல் மிதப்பில் இருந்து திருப்பாதிரிப் புலியூரில் கரையேறி மீண்டும் திருவதிகை வீரட்டானம் வந்து உட்புகுந்தபோது இவரது அருட்கோலம்,

**"தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்"**
**நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் நைந்துருகிப்**

பாய்வது போல் அன்பு நீர் பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் உள்ளே''

அதாவது தன்னை அணிந்தாரது உடலைத் தூய்மை செய்யும் திருநீறு அணியப் பெற்ற பொன்னார்ந்த மேனியையும், சிவபெருமான் திருவடித் தியானத்தைக் கொண்ட நெஞ்சினையும், உள்ளம் பக்தியால் சிவத்தால் நீர் பொழிகின்ற கண்ணையும், திருப்பதிகப் பாடும் செம்மையான வாயினையும் உடைய அடிகள் திருவீதியுள் புகுந்தார் என்பதாம். இவ்வாறு ஒவ்வொரு நிலையிலும் அவரது உருவம் எடுத்துக் காட்டப்படுகிறது.

**நாவுக்கரசரின் சிவபூசை**

சிவார்ச்சனையாகிய சிவபூசையைக் காட்டிலும் ஆன்மாக்களுக்குப் பேரின்பமளிக்கும் சாதனம் எதுவும் இல்லை. அனைத்துத் தீர்த்தங்களில் நீராடும் பலன்களிலும், எல்லா யாகப்பலன்களிலும், எல்லா தான தருமப் பலன்களிலும், எத்துணைத் தவத்தினால் வரும் பலன்களிலும், சிவ பூசை யினால் வரும் பயன் கோடி பங்கு உயர்ந்தது என்று சிவாகமங்கள் கூறும்.

சிறப்புடைய இச்சிவபூசையினைச் செய்வோர்; சிவபிரான் ஒருவனே பரமபதி என்று உணர்ந்து பூசை செய்தல் வேண்டும் இல்லையேல் இதற்குரிய பயன் கிடைக்காதெனச் சிவாகமங்கள் கூறும். இவ்வாறு மேற்கொண்டு செய்யப்பெறும் சிவபூசைப் பேறு முன்செய் தவமுடையார்க்கன்றிப் பிறர்க்கு எய்துவது அரிது.

இதுபோல நாவுக்கரசரும் சிவபூசையில் மிகவும் திளைத்தவர் என்பதைக் கீழ்க்காணும் சான்றுகளால் அறியலாம். சோணாட்டில் நாவரசர் பிரானே கட்டிய ''திங்களும் ஞாயிறும் தோயும்'' திருமடம் ஒன்று இன்றும் இருக்கிறது. இதன் உட்பகுதியின் வடபுறத்தில் கீழ்மேலாக நீண்ட சிவபூசனை மேடை ஒன்றுள்ளது. இதனைப் பார்க்கும்போது அரசு இதன் முன் இருந்து தம் ஆன்மார்ந்த சிவபூசையினைச் செய்து வந்துள்ளார் என்பது தெரியும்.

இவர் பாடிய முதல் திருப்பதிகத்திலேயே,

''சலம் பூவோடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்''

என்பது சிவபூசையின் முதற் பகுதியாகிய அகப் பூசையையும் குறிக்கின்றது.

**சிவபூசைச் செயல்களைக் காட்டும் இவரது பாடல் பகுதிகள்**

''தொண்டனேன் பட்டதென்னே தூய காவிரியின் தண்ணீர்
கொண்டிருக் கோதி கட்டி குங்குமக் குழம்பு சாத்தி
இண்டை கொண்டேற நோக்கி ஈசனை எம்பிரானை
கண்டனைக் கண்டிராதே காலத்தை கழித்தவாறே''

என்பது அபிசேகக் குறிப்புகளாகும்.

**என் போலிகள் பறித்திட்ட இலையும் முகையுமெல்லாம்**
**அப்போதெனக் கொள்ளும் ஐயாறன்**

எனும் பகுதி சிவபூசனைப் பத்திர புட்பங்களைக் குறிப்பனவாகும்.

சிவபூசையின் முக்கிய அங்கமான அட்டபுட்பங்களான தாமரை, புன்னை, நீலோத்பலம், நந்தியாவர்த்தம், அலரி, பாதிரி, வெள்ளெருக்கு, செண்பகம் போன்றவற்றை அணிவித்தல். இதைச் சுட்டும்,

**''எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி''**

எனும் வரிகளாகும். மற்றும் விரும்பி அபிடேகப் பொருளாகக் கொள்ளும் பஞ்சகவ்யம் பசும்பால், தயிர், நெய், கோமயம், கோசலம் ஆகிய ஐந்தின் கலப்பாகும். மற்றும் நறுமணச் சந்தனம், திருச்சாந்து இவற்றை ஒரே பாடலில் கீழ்வேளூர்த் திருத்தாண்டகப் பகுதி முதல் பாடலில்,

**''ஆளான அடியவர்க்கு அன்பன் தன்னை**
**ஆன் ஐந்தும் ஆடியை நான் அமயம் புக்கத்**
**தாளானை தன் ஒப்பார் இல்லாதானை சந்தனமும்**
**குங்குமமும் சாந்தும் தோய்ந்த தோளானை''**

என்று சிவபூசைக்குத் தொடர்புடைய அனைத்தையும் கூறியுள்ளார்.

**அகப்பூசை**

உமையொரு பாகனாகிய சிவபெருமானுக்குச் செய்யும் பூசையின் அகப்பூசை பற்றி அடிகளாரின் கூற்று.

**காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக**
**நேயமே நெய்யும் பாலாநிறைய நீர் அமைய ஆட்டிப்**
**பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.**

மனதைக் கோயிலாக்கி அகத்திலே உள்ள இலிங்கத்திற்குப் பூசை செய்தமையைக் கூறுகிறார்.

மேலும்,

**சிந்தை வெள்ளப் புனலாட்டிச்**
**செஞ்சொன் மாலை அடிசேர்த்தி**
**எந்தை பொம்மான் என்னம்மான்**
**என்பார் பாவம் நாசமே.**

என்றெல்லாம் இப்பெருந்தகை பாடியுள்ள பதிகங்களில் பல கிடத்தும் சிவபூசையின் முறையினையும் சிறப்பையும் அவசியத்தையும், பயனையும் கூறுவதிலிருந்து இவர் சிவபூசை நியமம் உடையவர் என்பது புலனாகின்றது.

**நாவரசரின் குண நலன்கள்**

**அஞ்சாமை**

**அஞ்சாமை யல்லால் துணைவேண்டா எஞ்சாமை**
**எண்ணி இடத்தாற் செயின்.**

என்னும் குறளுக்கு ஏற்பச் சமணர்கள் இவருக்குத் துன்பம் செய்தபோது

**''நாமார்க்கும் குடியல்லோம்''**

என்னும் திருத்தாண்டகத்தைப் பாடி மறுத்தார்.

யானையை விட்டு இவரை மிதிக்கச் செய்தபோது,

**அஞ்சுவது யாதொன்றுமில்லை**

என்று பாடி அச்சமின்றி இருந்து தப்பினார்.

**ஊக்கம்**

கயிலைப் பெருமானைத் தரிக்க மனம் தளராது உடல் சோர்ந்த நிலையிலும் மனிதர் நடமாட அஞ்சும் இமயமலைப் பாதையில் சென்று இறையருள் பெற்று நலமானார்.

பழையாறை வடதளியில் சமணர்கள் அத்தல மூர்த்தியான சிவலிங்கத்தை மறைத்து வைத்தனர். அப்போது,

**''வண்ணங்கண்டு நான் உம்மை வணங்கி அன்றிப் போகேன்''**

எனக்கூறி உண்ணாவிரதம் இருந்தார். பின் சோழ மன்னன் சிவபிரான் அருளால் கனவில் அறிந்து நாவரசின் கருத்தை நடப்பித்தான். அன்றே அகிம்சை போராட்டத்திற்கு அடிகோலியவர் அடிகளார் ஆவார்.

**பணிவுடைமை**

**பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்கு**
**அணியல்ல மற்ற யவை.**

எனும் பொய்யாமொழிப் புலவரின் வாய்ச் சொல்லுக்கு எடுத்துக்காட்டு திருநாவுக்கரசரே எனலாம். முதுமை கண்ட அப்பர் சீகாழியில் முதன் முதலாக ஞானசம்பந்தரை சந்திக்கிறார். அப்போது ஐந்து வயது சம்பந்தர், ''அப்பரே''! என விளிக்க நாவுக்கரசர் 'அடியேன்' எனக்கூறி அவர் அடிபணிந்தார்.

அப்பர் தங்கியிருந்த திருப்பூந்துருத்திக்கு வந்த ஞானசம்பந்தரின் சிவிகையைச் சுமந்து,

**'உம்மடிகள் தாங்கி வரப் பெற்றுய்ந்தேன் யான்'**

என்று கூறி தம் பணிவைக் காட்டினார்.

தம்மைத் தெய்வமாக வழிபடும் அப்பூதியடிகளாரையும் வணங்கி பணிவுடைமையின் இலக்கணமாகத் திகழ்ந்தார்.

இத்தகைய இனிய பண்பாளரின் அடித்தொழுது அவர் வழி நடந்து உய்வோமாக.

# 87. நாவுக்கரசரின் சமூகத் தொண்டு

பா. வேலம்மாள், மேலகரம்.

உலகளாவிய மனிதப் பண்பை அடிப்படையாகக் கொண்டு விளங்கும் சமயங்களுள் ஒன்று சைவ சமயமாகும். இந்தியச் சமயங்கள் ஒவ்வொன்றும் மனித வாழ்க்கையை மேம்படுத்தலையே நோக்காக, அடிப்படையாகக் கொண்டுள்ளன. இவ்வகையில் சைவ சமயமும் 'வாழ்வாங்குவாழ' வழிகாட்டும் வாழ்க்கை நெறியாக அமைந்துள்ளது. 'மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்' எனக் குறிப்பிடும் வகையில் சைவ சமயம் அமைந்துள்ளது.

சைவ சித்தாந்தம் அறவாழ்வினை ஆன்மீக வாழ்வாக மலர வழி காட்டுகின்றது. வாழ்வில் அறம், அன்பு, ஞானம் ஆகியவற்றின் வளர்ச்சி ஆன்மீக வாழ்வின் முதிர்ச்சிக்கு உதவுகின்றது. சிவன் எனும் உயர்ந்த நிலையை நாடும் முயற்சியில் ஆன்மீக வாழ்வானது மனித வாழ்வைப் பலவகை களில் செம்மைப்படுத்துகின்றது.

வாழ்வில் இன்பமே உயிர்களின் நாட்டமாக உள்ளது. இதுவே சமுதாய நோக்காகவும் விளங்குகின்றது. இன்பத்தை அடையும் ஆர்வத்தில் மனிதன் சிலவேளைகளில் தீமைகளைச் செய்து தீங்கான வழிகளைத் தேடுகின்றான். சைவம் இன்பத்தை அடையும் நெறியாக அறத்தையும் அன்பையும் இணைத்து உரைக்கின்றது. இத்தகைய சைவ சமயத்தை நிலை நிறுத்திய பெரியோர்கள் பலர் உள்ளனர். சைவ நெறியிலும், அடிமைத் திறத்திலும் நின்று இறைவனை வழிபட்டு வீடுபேறு பெற்று உயர்ந்தவர் திருநாவுக்கரசர். நாவுக்கரசர் என்ற பெயரையே சிவபெருமானால் அளிக்கப்பெற்றுப் பெருமையுற்றவர். திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாறு சமூகத்திற்குப் பல செய்திகளை உணர்த்தி நிற்கிறது. நெஞ்சுறுதி, அவாஅறுத்தல் எளிமை, ஊன்றிய இறையன்பு, தொண்டின் பெருமை முதலியன வாகீசர் வகுத்துக் காட்டும் வாழ்க்கை நெறிகளாகும்.

சைவ நெறி தழைக்க வந்தவர் அப்பரடிகள். 'சைவக் குடும்பத்தில் பிறந்து சமணராய் மாறித் துறையிலாக் கல்வி கற்றவர்; இவர் தமக்கையார் திலகவதியார் கருணையால் சைவசமயம் புகுந்து ஊர் ஊராகச் சென்று திருத்தலங்கள் அமைத்துத் திருத்தொண்டு செய்து வாழ்வின் செம்மையைக் கண்டவர். ஒரு ஆன்மீகவாதியாக இருந்து சமூகத் தொண்டுகள் பல செய்தவர்.

திருநாவுக்கரசர் வாழ்ந்த காலத்தில் சமண பௌத்த நாகரீகம் தமிழ் நாட்டில் பரவியிருந்தது. நாவுக்கரசர் அந்த நாகரிகத்தை எதிர்த்துப் போராடினார். ஏதோ சைவ சமயத்தின் மேலிருந்த அளவில்லாத வெறியினால் சமண பௌத்த சமயத்தை எதிர்த்தார் என்று கூறிவிட முடியாது.

சைவ சமயத்தில் பிறந்த மருள்நீக்கியார் சமணத்தில் சேர்ந்து தருமசேனராக மாறி சமண சமயத்திலுள்ள குறைகளைத் தெரிந்து, இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு மீண்டும் திருநாவுக்கரசராக மாறினார்.

'நாடுகளின் நல்வாழ்விற்குச் செல்வமோ, படைகளோ காரணமாகாது. அறவியல் உணர்வே நலச் செழிப்புக்குக் காரணமாகும். இதை மனதிற் கொண்டு ஒவ்வொரு மனிதனும் உயர்ந்த ஒழுக்கத்துடன் பிறர்க்கென வாழ்தல் கடன்' என்பர் அவ்வழியில் அப்பர் சுவாமிகள், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று சமூகத்திற்காகப் பல தொண்டுகளைச் செய்தார்.

திருநாவுக்கரசர் பெரிய புரட்சிக்காரராக இருந்தார். ''அப்பரடிகள் முழங்கால் வரை வேட்டி கட்டினார்; நிறைய நீறு பூசினார்; பெரும் உருத்திராக்க மாலைகள் போட்டுக் கொண்டிருந்தார். அந்தக் கோலத்தைப் பார்த்தால் மிகப் பழைய நூற்றாண்டின் பழமை தெரிகிறது. அவர் உள்ளத்தை, அவர் சிந்தனையைப் பார்த்தால் புத்தம் புதிய புதுமையையும் - அவர் ஏற்று கொண்டிருக்கிறார். அவர் பழமைக்கும் புதுமைக்கும் இணைப்பூட்டி இந்தச் சமுதாயம் அழிந்து படாமல் காப்பாற்றப் பெறவேண்டும் என்ற கருத்தில் ஒரு மாபெரும் இயக்கத்தையே நடத்தினார்'' என்ற குன்றக்குடி அடிகளாரின் கருத்துப்படி ஒரு புதிய தமிழகம் உருவாக திருநாவுக்கரசர் முனைந்திருக்கிறார் என்பது தெளிவாகின்றது.

**தமிழ் இசை வளர்ச்சி**

சமயங்களுக்குள்ளே ஓர் ஒருமைப்பாடு வேண்டும் என்று விரும்பியவர் வாகீசர். ஆனால் பிற சமயங்கள் தம் சமயத்தை விழுங்குவதையும் அவர் விரும்பவில்லை. பிற நாகரீகங்கள் தமிழ் நாகரீகத்தை அழைப்பதையும் அவர் விரும்பவில்லை. பௌத்த மதமும் சமண மதமும் தமிழகத்தில் வேரூன்றியபோது, தமிழர்களின் சில அடிப்படை விருப்பங்களைத் தகர்த்தழிக்கும் நிலை ஏற்பட்டது. சமணசமயம் நல்ல பண்ணும் இசையும் கேட்டால் மனம் கெட்டு விடும், எனவே நல்ல பண்ணும் இசையும் கேட்க கூடாது என்றது. தமிழனால் இசை இல்லாமல் இருக்க முடியுமா; எனவே நாவுக்கரசர் பண்ணோடு கூடிய இசைப் பாடல்களைப் பாடினார்.

''பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி''

என்று பாடி பண்ணோடு இசைப்பரப்பி, தமிழகத்தின் இசைத் தமிழ் வரலாற்றில் மறுமலர்ச்சியை உண்டாக்கினார்; பண்ணோடு கலந்த பாடலுக்கு உயிர் கொடுத்து, சமண, பௌத்த சமயங்களால் தமிழிசை அழிந்து போகாமல் காப்பாற்றினார்.

**இயற்கை வாழ்வு**

உலக நாகரீகங்களில் எங்கும் காணப்படாத அளவிற்கு இயற்கையின் வழி நின்று தான் வாழும் பூமியைப் பிரித்து இயற்கையை வழிபட்டவன் தமிழன். இவ்வாறு வாழ்ந்த தமிழனைப் பார்த்து நீ பூவைப் பார்க்காதே, அதை நுகர்ந்து பார்க்காதே அது பாவம் என்று சமண சமயத்தவர் கூறினார்கள். இத்தகைய மனநிலையைப் போக்கி இயற்கையோடு இணைந்த வாழ்வுதான் தமிழன் வாழ்வு என்று அவரை மீட்டுருவாக்கம் செய்தவர் நாவுக்கரசர். திருநாவுக்கரசரை நீற்றறையில் இட்டபோது பாடிய,

> மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே.

பதிகத்தில் இயற்கையை அவர் நேசித்த விதம் நமக்குப் புலனாகின்றது. இப்படி இயற்கையோடியைந்த வாழ்க்கையை மனிதன் வாழவேண்டும் என்று விரும்பினார்.

**மக்களாட்சி**

மக்களாட்சியின் இலக்கணமே மக்களுக்காக, மக்களே, மக்களால் செய்யப்படும் ஆட்சியாகும். இந்த ஆட்சியில் ஆண்டானும் இல்லை. அடிமையும் இல்லை. குறிப்பிட்ட மன்னன் கீழ் மக்கள் அடிமைப்பட்டு, கட்டுப்பட்டுக் கிடக்காமல், சுதந்திரமாக இருக்க வேண்டும் மக்கள் என்பதே நாவுக்கரசரின் ஆசை அவருடைய இந்த ஆசை.

> நாமார்க்குங் குடிஅல்லோம் நமனை அஞ்சோம்
> நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
> ஏமாப்போம் பிணிஅறியோம் பணிவோம் அல்லோம்
> இன்பமே எந்நாளும் துன்பமில்லை

அப்பர் வாழ்ந்த ஏழாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வேரூன்றி காணப்பட்ட சமண சமயம் பெண்மையை இழிவுப்படுத்தியது, பெண்ணிற்கு எந்தவித முக்கியத்துவமும் தரவில்லை. பெண்மைக்கு இழிவு தரும் அநாகரிகத்தைத் தடுத்துக் காக்க முயன்ற அப்பரடிகள்,

> ''பெண்ணாகிப் பெண்ணுக்கோர் ஆணுமாகிப்''

> ''அப்பன் நீ அம்மை நீ ஐயனும்நீ
> அன்புடைய மாமனும் மாமியும் நீ
> ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ''

என்று இறைவனை ஆணாகவும் பெண்ணாகவும் பார்த்து பெண்மைக்கு பெருமையளித்தார்.

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்**

சமுதாயம் என்பது மக்கள் இணைந்து ஒற்றுமையுடன் வாழும் அமைப்பாகும். மனித ஒருமைப்பாடு பொருளாதார மேம்பாட்டுக்கு மட்டுமன்றி, மனிதனின் அரசியல், கலாச்சார வாழ்வுக்கும் தேவையாகும். இன்றைய சமுதாயத்தை பிரித்துப் பாழ்படுத்தும் காரணிகளுள் விதிமுறை முக்கியமான ஒன்று. தமிழகத்தைப் பொறுத்தமட்டில் சங்க காலத்தி லிருந்தே சாதிக்கு எதிரான குரல் ஒலித்து வருகிறது.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்'

என்பது திருக்குறள் உயிர்கள் பிறப்பினால் வேறுபடுவன அல்ல, பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பித்து மனிதனை இழிவுபடுத்துவது நல்லதல்ல இக்கருத்தைத் திருநாவுக்கரசர்,

''சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்?
பாத்திரம் சிவம் என்று பணி தீரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே''

என்கிறார். கோத்திரம், குலம் என்பவை மனிதனை வேறுபடுத்துபவை சாத்திரத்தின் துணையுடன் இவற்றை ஒரு பொருட்டாக மதித்து மனிதனை இழிவுபடுத்துபவரை 'சழக்கர்' என்னும் சொல்லால் நாவுக்கரசர் விடுகின்றார். மேலும் கோத்திரமும், குலமும் கொண்டு என் செய்வீர் எனவும் வினவு கின்றார். இன்றைய இருபதாம் நூற்றாண்டில் பேசப்படும் இச்சிந்தனை ஏழாம் நூற்றாண்டிலேயே திருநாவுக்கரசரால் வலியுறுத்தப் பட்டிருக்கின்றது.

'சங்கநிதி பதுமநிதி' எனத் தொடங்கும் திருத்தாண்டகப் பாடலில் ''அங்கமெலாம் குறைந்து அழகு தொழுநோயராய், ஆவுரித்து தின்றுழலும் புலையரேனும் கங்கைவார்ச் சடையானை வணங்குவாராகில், அவரைத் தான் வணங்கும் கடவுளாக உயர்த்துகின்றார் திருநாவுக்கரசர்'' இறைவன் முன்னால் சாதிமத பேதம் கிடையாது என்பதையே திருநாவுக்கரசர் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

**என் கடன் பணிசெய்து கிடப்பதே**

'நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே'

என்ற எண்ணத்தோடு வாழ்ந்தவர் நாவுக்கரசர். நீண்ட நாள் வாழ்ந்து, பல துன்பங்களை எதிர்கொண்டு இறைவனடி சேர்ந்தவர். தொண்டின் நெறி நின்று தொண்டின் சிறப்பை உலகிற்கு உணர்த்தினார் வாகீசர். தொண்டு செய்வதே மனிதனுக்கு உயர்வுதரும். தொண்டு செய்வதாலே மனிதன் உயர்கின்றான் ''தொண்டுசெய்! தொண்டோடு பக்திசெய்!'' என்றார்.

திருநாவுக்கரசர் பிறருக்குத் தொண்டு செய்வதே வாழ்க்கையில் நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தார். தமக்கு என தனி வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவில்லை. வீதிகளையும், கோயில்களையும் தம் உழவாரப் படையால் தூய்மை செய்தார். இறைவன் குடிகொண்டிருக்கும் தலங்கள் தூய்மையுடன் இருக்க வேண்டும் என எண்ணினார். இறைவனைத் தேடி வரும் பக்தர்கள் கூடும் திருக்கோவில் தூய்மையுடன் இருந்தால்தான் பக்தர்களுக்கு எந்தவித பாதிப்பும் ஏற்படாது என்று கருதினார். அக்காலத்தில் தொண்டர்கள் கோவில்களில் தங்குவது வழக்கம். எனவே அவர்கள் தொல்லைகள் இன்றி இருக்க நாவுக்கரசரின் உழவாரப் பணி உதவியது.

> மார்புஆரப் பொழிகண்ணீர், மழைவாரும் திருவடியும் மதுரவாக்கில்
> சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும், செம்பொன்தானே
> சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும்ஆகிப்
> பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.
>
> (தி. தொ. புராணம் - 1490)

என்ற சேக்கிழார் பாடல் நாவுக்கரசரின் தொண்டினைப் புலப்படுத்தும்.

**வறுமை தீர்த்தல்**

சமுதாயத்தில் மனிதன் மனிதனாக வாழவேண்டுமெனில், பசிக் கொடுமை இல்லாமல் அவன் பொருளாதாரத் தேவைகள் நிறைவு செய்யப்பட வேணடும். ஆனால் சமுதாயத்தில் எந்தக் காலத்திலும் வறுமை, பசிப்பிணி இருந்திருக்கிறது.

திருநாவுக்கரசர் வாழ்ந்த காலத்திலும் இந்த வறுமை நிலையினால் பஞ்சம் திருவீழிமிழலையில் அப்பரடிகள் இறைவனிடம் பாடி படிக்காசு பெற்று பஞ்சத்தில் அடிப்பட்ட மக்களுக்கு சோறு போட்டார்.

''திரு நின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்'' என சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிட்டபடி வாழ்ந்தருளியவர் அப்பரடிகள்.

> இரப்பவர்க்கு ஈயவைத்தார் ஈபவருக்கு அருளும் வைத்தார்
> கரப்பவர் தங்கட் செல்லாம் கடு நரகங்கள் வைத்தார்

என்று மக்களுக்கு அன்பு செய்து, சமூகத் தொண்டிற்கு, இலக்கணமாகத் திகழ்ந்தவர் நம்முடைய திருநாவுக்கரசர். நமக்குக் கிடைத்த திருநாவுக்கரசரின் வடிவங்கள் உழவாரப் படையுடனேயே காட்சி தருகின்றன.

> ''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ
> வருஞானத் தவ முனிவர் வாகீசர்''

என்று பலவாறு சேக்கிழார் பாடுவது அவர்தம் திருத்தொண்டை விளக்குவதாம்.

# 88. ஐம்பூதங்கள் - ஒரு பார்வை

நா. ஜானகிராமன், திருச்சி.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் எண்ணற்ற அறிவியல் சிந்தனைகள் வெளிப்படுகின்றன. இவ்வுலகத்தில் நம்பிக்கை அடிப்படையில் நடக்கின்ற, நடத்துகின்ற செயல் யாவுமே, அறிவியலின் பின்புலத்தைப் பற்றியது என்றால் வியப்பாக இருக்கும். நாவுக்கரசர் இப்பூவுலகில் வாழ்ந்தார், இப்பூமி புண்ணியம் அடைந்தது. இந்த உலகம் பற்றி அவருக்கு அக்கறை உண்டு. அதனாலேயே ஒழுக்க நெறி வகுத்துத் தந்தார். தொண்டுள்ளம் கொண்டு தோணி புரத்தீசனைப் பின் தொடர்ந்தார். அவருள் எண்ணற்ற புரட்சிக்கருத்துக்கள்; சொற்கள், சொற்றொடர்கள் விளைந்தன; உளவியல் (Psychology) மனவியல் ஆழ்நோக்கம் கொண்டு பிரபஞ்சத்தை உற்று நோக்குகிறார். இப்பிரபஞ்சத்தின் (Cosmology) தோற்றம் பற்றியும், அவை வாழ்வியலோடும், வாழ்வறிவியலோடும் (Life-Science) கொண்ட தொடர்பு பற்றியும் இக்கட்டுரையில் காணலாம்.

**ஐம்பூதங்கள்**

இதனை, வடசொல் கலந்து 'பஞ்சபூதம்' என்றழைப்பர். மனிதர்கள் உயிர் வாழவும், சிறப்புடன் தேவையைப் பூர்த்தி செய்து சுகமுடன் இருக்கவும் இயற்கைதான் காரணம் எனலாம்.

**தொல்காப்பியர்**

'நிலம், தீ, நீர், வளி, விசும்பொடு கலந்த உலகம் ஆதலின்' என்று விளக்குகின்றார். இந்திய துணைக்கண்டம் தொடக்கத்தில் 'லெமூரியா' என இருந்தது என வரலாறு தெரிவிக்கின்றது. சூரியக்குடும்பத்தில் இருந்து தெறித்து விழுந்த ஒரு பகுதி எரிமலையாகி, குளிர்ந்து, பின் மணல், கல் என்று தோற்றம் கொண்டது என்று புவியியல் ஆய்வு (Geographical Research) தெரிவிக்கின்றது. இவ்வாறெல்லாம் உருவான இந்த 'பிரபஞ்சம்' அதிலுள்ள ஐந்து கூறுகள் மிகையான ஆற்றல் கொண்டன. இயற்கையின் ஆற்றலுக்கு எவையும் நிகராகா. (The Nature is un boundary Effect and Largest Power)

**நிலம் (அ) மண் (Land or Soil)**

இவ்வுலகம் அனைத்தும் பூமி என்னும் மண்ணுருண்டையினால் இழுத்துப் பின்னப்பட்டுள்ளது. நம் பாரத மண்ணைப் பல்வேறு பெண்

தெய்வங்களாகவும் வழிபட்டு வருகின்றனர். திருவள்ளுவர், பெண்ணை நிலத்திற்கு இணையாக ஒப்பிடுவார். ஏனெனில், பெண்ணென்பவள் 'பொறுமை' காத்திருக்க வேண்டும் என்பதனாலும் அமைதி காத்து வாழவேண்டும் என்பதனாலுமே ஆகும்.

திருநாவுக்கரசர் தம் பாடலில்,

**பொறையுடைய பூமி** (269 - 1)

என்கின்றார்.

'பொறுத்தார் பூமி ஆள்வார்' என்பது பழமொழி. திருநாவுக்கரசரும், பூமியை பக்தியால் ஆண்டவர். மருள்நீக்கியாராக, தருமசேனராக, திருநாவுக்கரசராக சமணம், பௌத்தம் என்னும் இரு சமயங்களிலும் தம் வலிமையான எண்ணங்களை ஊன்றியவர்.

**மண்** (265-1)

**நிலன்** (239-6)

என்னும் சொல் இவரால் ஆளப்பட்டுள்ளது. மேலும் தரணிதலும் - 267-5 என்னும் சொல்லாட்சி, உலகம் பொதுமையைக் குறிப்பிடும் (Universal) பூதவியல் சொல்லாகும். 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து பஞ்சபூதங் களையே குறிக்கின்றது. இறைவன் யாதுமானவன். எங்கேயும் இருப்பவன். உலகத்து உயிராய்; உணர்வாய்; உண்மையாய் விளங்கக் கூடியவன். நிலத்தினைப் போன்று என்றும் அழியாமல் வாழ்பவன்.

## நீர் (Water Resources)

'நீரின்றி அமையாது உலகு' என்கிறது வள்ளுவம். அருவி, கடல், நீரோடை, குளம், குட்டை என்னும் பலவித நீர் நிலைகளையும் உலகத்து முதன்மையாகக் கொள்ளவேண்டும். மருதநிலப் பாடல்களில் இத்தகைய நீர்வளங்கள் பிரிவு பிரிவாக இயம்பப்படுகின்றன. திருநாவுக்கரசர், தாழ்புனல் - 267.5 என்று குறிப்பிடுகிறார். அதாவது, இது 'அருவியைக் குறிக்கின்றது' (Water falls) இதன் மூலம் நில அமைப்பான ஒரு பகுதியில் மலையிலிருந்து வீழும் அருவி சுட்டப்படுகின்றது.

**பாயிரும் புனல்** (71-9)

**வீங்கு தண்புனல்** (167-4)

சம நிலப்பரப்பில் பாயும் நீர், வெள்ளம், இவை பாயிரு, வீங்கு என்னும் சொல்லில் குறிப்பிடப்படுகின்றது.

## தீ, நெருப்பு, எரி (Fire)

உலகத்து அறியாமை அழிகின்றபொழுது அறிவு மேம்படுகிறது. அங்கே அறிவியல் உருவெடுக்கின்றது. கதிரவன் தன்மை சுடுதல், பின்னாளில்

உரசுதலால் மனிதன் நெருப்பை உருவாக்கினான். உலகம் முழுக்க தீயானது சக்தியாகப் பரவியுள்ளது. 'எரியூட்டல்' என்னும் சொல்லினை சங்க இலக்கியம் தெரிவிக்கின்றது.

ஆழித்தீ (13-4)

வண்ணக்கனல் (124-5)

இவ்வுலகம் யாவும் தீயாலானது என்பதை 'ஆழித்தீ' சுட்டுகிறது. எரியும் பொழுது, பிரியும் நிறப்பிரிகை நீலம், சிவப்பு, வண்ணம் எனப் பிரிகிறது இதுவே வண்ணக்கனல். மிக்க மஞ்சள் நிறமாக எரிவது 'வெந்தழல்' வெம்மையான தழல். இது மிகவும் வாட்டக் கூடியதாகும். நாவுக்கரசர், இவ்வாறின் ஐம்பூத சொல்லிலுள் ஒன்றான 'தீ' பற்றிய செய்தியைக் கொடுத்துள்ளார். மேலும் சுடுதீ, செந்தீ, செழுஞ்சுபர்த்தீ, பாழித்தீ போன்ற வற்றையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

**காற்று (Wind)**

காற்று நுண்மையானது. இதில் பலவகை உண்டு. இதனை வளிமண்டலம் (Atmosphere) என்றழைப்பர். நீர் உருவாக காற்று அவசிய மானது. இதனை அறிவியலார் $H_2O$ என்னும் குறியீட்டால் குறிப்பர்.

காற்று (170-6)

சுழல் கால் (239-6)

படர் காற்று (287-2)

மிக்குவீசும் கால் (267-5)

வந்தலைக்கும் மாருதம் (265-1)

இயல்புக்காற்று, சுழல் காற்று (cyclone), படர்காற்று, சூறாவளி (Hurricane), தென்றல் (Breeze) எனப் பலவகை உண்டு. நாவுக்கரசர், இவ்வாறான வகைப்பாட்டினை தம் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளது நோக்குதற்குரியதாகும்.

**வானம்**

'ஆகாயம்' வெறுமை, விண் எனப் பல சொற்களால் வழங்குகின்றனர். ஆகாயமானது (Sky) எல்லையில்லாதது. அளவு கடந்தது. நிலம் மூன்று பங்கு, நீர் ஒரு பங்கு எனக் கண்டங்களை வரையறை செய்யலாம். ஆனால் ஆகாயம் அப்படி அல்ல. சிவபெருமானும் அவ்வாறு வரையறுக்க முடியாத எல்லையற்றவன்.

பேராவாணிவிண் (273-6)

'அகண்டஆகாயம் கொண்டின்'

மஞ்சுண்டவான் (287-2)

கருத்த நிறமுடைய வானம் போன்றவன்
மழைமேகம் சேர்விண் (265-1)

நீர்மேகம் போன்ற தண்மை வாய்ந்தவன் என நாவுக்கரசர் கூறுகிறார். இறைவனின் தன்மை, வாழும் மனிதனின் தன்மை இவையாவும் இத்தகைய மூன்று இயல்புகளைக் கொண்டவை. மூன்று மலம், ஐந்து பூதம், ஐந்து பொறிகள் என எண்ணிக்கை வரையறையில், எண்ணிலா உலகியல் செய்தியை நாவுக்கரசர் தெரிவிக்கிறார்.

**ஐம்பூதங்களும் வாழ்வும்**

இயற்கையின் மாறுதலுக்கு மனிதன் உட்படுபவன் ஆகிறான். கோள்களும் (Planetry), கிரகங்களும் மாறும் பொழுது வாழ்க்கை மாறுதல் பெறுகிறது. ஐம்பூதங்கள் நிலைப்பாடு மனிதர்களின் வளத்தினை நலத்தினை நிர்ணயம் செய்கின்றன. வாழ்க்கை யாவும் போராட்ட அடிப்படையில் ஆனதே ஆகும். அங்கு ஒரு புரட்சி (Rebellion) வெடிக்கும். சிக்கலையும், துன்பங்களையும் தவிர்த்து எதிரேற நன்மை பிறக்கிறது.

**திருநாவுக்கரசர்**

'படைகள் போல் வரும் பஞ்சமா பூதங்கள்' (144-6)

துன்பங்கள் துரத்தும். ஆனால் துவளக்கூடாது என்னும் வாழ்வியல் செய்தி இதில் அடங்கியுள்ளது. ஐந்து பூதங்களும் படைகள் போன்று பின்தொடரினும் தோளயரக் கூடாது.

''அடுவன அஞ்சுபூதம் அவை தமக்காற்றலாகேன்'' (76-10)

இவ்வுலகம் யாவும் அஞ்சத்தக்க வகையில் உள்ள பூதங்களான இயற்கையைக் கண்டு யானொன்றும் அஞ்சப்போவதாக இல்லை என்னும் 'வலிமை'யை உணர்த்துகின்ற வரியாகும். எனவே, இயற்கையின் வலிமை (The Nature of Strength) இங்கு உணர்த்தப் பெறுகிறது.

'அல்லலாக ஐம்பூதங்கள் ஆட்டினும்' (156-6)

நான் அஞ்சப் போவதில்லை என்கிறார். நாவுக்கரசர் பக்திநெறியில் நின்று, இல்லற வாழ்வினருக்கும், துறவற நிலையினருக்கும் சக்தி அளிக்கும் செய்தியாக இவை உள்ளன.

**அனைத்தும் பூதங்கள்**

இறைவன் தூணிலும் இருப்பவன், துரும்பிலும் உறைபவன் எல்லா இடத்திலும் நிறைந்திருப்பவன் அவனன்றி ஓர் அணுவும் அசையாது. 'அணு' என்பது மிக்க நுல்லியமானது. கண்ணிற்குப் புலப்படாதது. இதனை Atom, cell என்று வழங்குவர். ஆனால் இவையாவும், இயற்கையை விஞ்சக் கூடியது அல்ல என்கிறார் நாவுக்கரசர் பெருமான்.

''ஐம்பெரும் பூதங்காள் ஒருவர் வேண்டிற் றொருவர் வேண்டீர்
ஈண்டிவ் வவனியெல்லாம் உம்பரமே உம்வசமே'' (240-2)

இந்த உலகம் யாவுமே பூதங்களால் ஆனவை; எல்லாம் அவனின் செகத்தில்தான் இந்த ஐம்பூதங்களும் நடக்கின்றன என்கிறார். அப்பர் பெருமான். ஐந்தெழுத்து மந்திரம், ஐம்பூதம் இவையாவும் சிவனுக் குரியன. தென்னாடுடைய சிவனுக்கும், எந்நாட்டார்க்குரிய இறைவனுக்கும் நாவுக்கரசரின் பாசுரப்பணி அரிய ஒன்றாகும்.

பொய், களவு, காமம், கோபம், கொலை என்பன போன்ற பஞ்ச மகாபாவங்கள், பாதகங்கள் இவற்றினுக்கு என்றென்றும் ஆட்படாத நிலை வேண்டும் என்று வேண்டி இறைத்தொண்டு புரிந்தவர் சிவபெருமான். இவரின் பாடல்கள் ஐம்பூதங்களோடு ஒப்பிடப்பெற்ற பிரபஞ்சங்களின் நிகழ்தகவு ஆகும். (Probability of Cosmology)

1. உலகிற்கு அடிப்படையான ஐந்து பொருள்கள் பற்றி அறிவியல் நோக்கில் விளக்கம் செய்தது.
2. மனிதர்களின் நடைமுறை வாழ்வினோடு ஐம்பூதங்களின் செயல்கள் ஒப்பிடப் பெற்றன.
3. நாவுக்கரசரின் பல தரப்பட்ட சொல்லாட்சிகள் சுட்டப்பெற்றன.
4. அண்டத் தோற்றத்திற்கான பின்புலங்களும், மனித வாழ்க்கையின் போராட்டங்களும் உளவியல் நோக்கில் ஆராயப்பட்டன.
5. பிரபஞ்சத்தின் கூறுகள் பாடல்களில் பின்னப்பட்ட முறைகள், அறிவியல் கருத்தோடு இணைத்து விளக்கப்பட்டன.

प्रकार के अंग भगवान शिव रखने के कारण बताते हैं। सिर की सहायता द्वारा शिवजी का नमन करना है। आँखों से ईश्वर को देखना है। कानों से शिव के नामों को सुनना चाहिए। मुख द्वारा भगवान शिव जी की प्रशंसा करना चाहिए। मन सदा शिवजी का ध्यान कर सकता है। नाक तो त्रिनेत्र की वासना के लिए है। हाथ से भगवान के प्रार्थना कर सकते हैं। शरीर से शिव मंदिर की प्रदक्षिणा करनी है। जब प्राण हमारे शरिर से उड जाते हैं तब कोई रिश्तेदार साथ नहीं रहेंगे। इसलिए अहंकार को छोडकर शिवजी का ध्यान करेंगे। तिरुनावुक्करसर ने कहा ब्रहमा एवं विष्णु ढूढकर असफलता प्राप्त कर चुके है। उस शिवजी को अपने मन में तिरुनावुक्करसर ने देखा। भगवान की ओर आगे बढना ही इस जन्म का फल है। तलैये नी वणड.गाय नामक भक्ति गीत मंदिर के प्रहार एवं मंदिर को प्रदक्षिणा करते वक्त मन में ध्यान लगाकर गाते समय अच्छे फल प्राप्त कर सकते हैं।

इस प्रकार तिरुनावुक्करसर ने मानव जन्म के फल को स्पष्ट किया है। आगे समाज सेवा करने में भी सफलता प्राप्त कर चुके हैं। लोगों के हित के बारे में स्पष्ट करते समय तिरुनावुक्करसर स्वास्थय में ध्यान दे चुके हैं। यदि शरिर ठीक हो जाय तो मन ठीक होगा। इस उच्च सिद्धांत को मन में रखते थे। मंदिरों को शुद्ध करने में अर्थात् उळवारप्पनि में मग्न हो गए। उन्होंने खाने की खोज के साथ भगवान की खोज को भी सिखाया है। शिव जी की सेवा से शिव भक्तों की सेवा को प्रधानता देते थे। इसे जाति धर्म भेद के बिना, सब तरह के लोगों की अच्छाई के लिए तिरुनावुक्करसर की समाज सेवा रही। वृक्ष फलों को स्वयं न खाकर दूसरों को देते है। नदी पानी को स्वयं न पीकर दूसरों को देती है। इसी प्रकार यह शरीर भी परोपकार के लिए ही है औरों की मदद करने के लिए ही है। इस प्रकार तिरुनावुक्करसर ने कहा है।

# 106. சமூகத் தொண்டில் நாவுக்கரசர்

பிரணதார்த்திஹரன், ஸ்ரீரங்கம்.

மக்கள் சேவை மகேசன் சேவை என்று ஆன்றோர் கூறுவர். திருநாவுக்கரசர் தம் வாழ்வில் என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற அரிய கருத்தினைக் கொண்டவர். மேலும் நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்ற பழமொழியினை நாம் நன்கு அறிவோம். திருச்சிராப் பள்ளியில் சிவபெருமான் தாயுமானவராகக் காட்சி அளிக்கிறான். பெண்கள் கருவுற்று பிள்ளை பெறுவதனை மறு ஜென்மம் என்று கருதுவர். சுகப்பிரசவம் பெற திருநாவுக்கரசரின் 'மட்டுவார் குழலொரு' என்ற பாடலைப் பாடினால் பலன் கிட்டும் எனும் நம்பிக்கை உள்ளது. நாவுக்கரசர் சமூகத்தின் மீது நல்ல அபிப்பிராயத்தினைக் கொண்டு உள்ளார். நல்ல தாய்மார்கள் நல்ல சமூகத்தினை உருவாக்குவார்கள். நல்ல சமூகத்தில் நல்ல அரசாங்கம் ஏற்படுகிறது. மேலும் கெட்ட நண்பன், கெட்ட சகோதரன் போன்றவர்கள் இச்சமூகத்தில் இருந்த போதிலும் கெட்ட தாயை நாம் எப்பொழுதும் பார்க்க இயலாது. திருச்சிராப்பள்ளியில் அருள்பாலிக்கும் மட்டுவார் குழலியோடு வாசம் புரியும் தாயுமானவரை வணங்கினால் இறைவன் அருளால் சுகப்பிரசவம் ஏற்படும். தாயும் சேயும் நலமாக வாழ்வர்.

திங்களூர் எனும் திருத்தலத்தில் அப்பூதி எனும் அந்தணர் வாழ்ந்து வந்தார். அவர் திருநாவுக்கரசரை மானசீக குருவாகக் கொண்டு இருந்தார். மக்களின் தாகத்தை நீக்க வேண்டி 'திருநாவுக்கரசர் தண்ணீர் பந்தல்' அமைத்து தானங்கள் செய்து வந்தார். இதனைக் கேள்விப்பட்ட திருநாவுக்கரசர் அப்பூதி அடிகளைக் காணச் சென்றார். இருவரும் சந்தித்துக் கொண்டனர். பின்னர் அப்பூதி அடிகள் திருநாவுக்கரசரை உணவு உண்ண அழைத்தார். தனது புதல்வனாம் மூத்த திருநாவுக்கரசை வாழை இலை கொண்டு வர தோட்டத்திற்கு அனுப்பினார். ஒரு பாம்பு தீண்டியதால் அவன் இறந்து விட்டான். அடியாருக்கு அமுது படைப்பதில் பங்கம் வராமல் இருக்க அச்சிறுவனை மறைத்து வைத்து உணவு உண்ண அழைக்கிறார்கள். நாவுக்கரசர் உட்கார்ந்தவுடன் மகனையும் அழைக்கிறார். அப்பூதி அடிகள் 'அவன் இங்கு உதவான்' என்றார். விவரம் உணர்ந்த திருநாவுக்கரசர் மகனிடம் சென்று, 'ஒன்று கொலாம்' என்ற பாடலைப் பாடியவுடன் சிறுவன் விஷம் நீங்கி எழுந்து விடுகிறான். இன்றும் இந்த

பதிகத்தின் துணை கொண்டு விஷ ஜந்துக்கள் கடித்தால் குணப் படுத்துகிறார்கள்.

தீராத வயிற்று வலி தீர 'கூற்றாயினவாறு' என்ற திருப்பதிகத்தினைப் பாடினால் பலன் தரும். திருநாவுக்கரசர் சமண மதத்தில் இருந்த நேரத்தில் அவரது தமக்கையான திலகவதியார் திருவதிகை வீரட்டத்துக் கோயிலில் உள்ள ஈசனை வேண்டினார். ஈசனும் திருநாவுக்கரசருக்குக் கடுமையான வயிற்று வலியினை ஏற்படுத்துகிறார். நோயின் கொடுமை தாங்க முடியாமல் தமக்கையிடம் வருகிறார். பின்னர் இருவரும் திருவதிகை வீரட்டானேஸ்வரர் கோயிலுக்குச் சென்று வழிபடுகின்றனர். நோய் குணமாகிறது. அச்சமயம் நாவுக்கரசர் 'கூற்றாயினவாறு' என்ற திருப்பதிகத்தினைப் பாடினார். இப்பதிகம் திருநாவுக்கரசர் பாடிய முதல் பாட்டு என்பது குறிப்பிடத் தக்கது.

'சொற்றுணை வேதியன்' எனும் பாடல் உயிர்க்கு உறுதியளிக்கும் பாடலாகும். இப்பாடலில் நாவுக்கரசர் சிவனின் மேன்மையினைச் செப்புகிறார். இல்லற விளக்கானது இருளை ஓட்டிவிடும். அதே சமயம் சொல்லக விளக்கில் சோதியுள்ளது. பல்லக விளக்கது யாவரும் காண்பது. இருப்பினும் நமச்சிவாயம் ஆனது நல்லக விளக்காகும். முதல்வன் முக்கண்ணன் பாதங்களைச் சரணடைந்தால் நன்னெறியாக நமச்சிவாயம் விளங்கும் என்று எடுத்துக் கூறுகிறார்.

நாம் உயிர்வாழ உணவு இன்றியமையாத ஒன்று. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்று கருதப்படுகிறார்கள். 'அன்னம்பாலிக்கும் தில்லை' என்ற பாடலை மனமுருகப் பாடினால் உணவிற்குப் பஞ்சம் இல்லாமல் வாழலாம். நாராயணன் நான்முகன் ஆகியோரை நாடிய பலரும் தில்லையம்பல நடராசனது பாதத்தினைப் பணிபவருக்கு உணவுத் தட்டுப்பாடு ஏற்படாது என்று திருநாவுக்கரசர் கூறுகிறார். மகேஸ்வர பூஜையின் போதும் இப்பாடலைப் பாடுவதால் நன்மைகளைப் பெறலாம். 'நாவினுக்கருங்கலம் நமச்சிவாயமே' ஆகும். நாவிற்கு அழகு தருவது நமச்சிவாய என்று கூறுவது ஆகும். 'திருஅங்கமாலை' எனும் திருப்பதிகத்தில் ஈசன் உடலில் பலவகையான அங்கங்கள் தந்ததன் காரணத்தினை விளக்குகிறார். தலையினைத் துணைக்கொண்டு சிவனை வணங்க வேண்டும். கண்கள் ஈசனைக் காணவேண்டும். செவிகள் இறைவன் நாமங்களைக் கேட்க வேண்டும். வாயினால் இறைவனை வாழ்த்த வேண்டும். நெஞ்சானது என்றும் ஈசனை நினைக்க வேண்டும். முக்கண்ணனை மூக்கானது முரல வேண்டும். கைகளில் இறைவனை வணங்க வேண்டும். இவ்வுடலானது எப்பொழுதும் அரன் கோயிலை வலம் வரவேண்டும். நமது உயிரானது இவ்வுடலை விட்டுப்பிரியும்

போது உற்றார் உறவினர் எவரும் வரமாட்டார்கள். எனவே ஆணவத்தினை மறந்து சிவனையே நினைத்திருக்க வேண்டும். திருநாவுக்கரசர் திருமாலோடு நான்முகனும் தேடித் தேட ஒணா தேவனை தன்னுள்ளே கண்டு கொண்டதாகக் கூறுகிறார். பிறவிப்பயனானது இறைவனை அடைய முயற்சிப்பதே ஆகும். திருக்கோயிலை வலம்வரும்போதும் இப்பாடலை தலையே நீ வணங்காய் பாடலைப் பாட நல்ல பலன் கிட்டும்.

இவ்வாறாக, நாவுக்கரசர் மனிதப்பிறவியின் பலனை கருத்து உரைக்கும் வேளையில் சமூகத் தொண்டில் பெரிதும் வெற்றி பெற்றுள்ளார். மக்களின் நலனில் பெரிதும் விருப்பம் தெரிவித்து உள்ள நாவுக்கரசர் உடல் நலத்தில் பெரிதும் அக்கறை காட்டியுள்ளார். உடல் வலிமை பெற்றால் மன வலிமை பெறும் என்ற உயர்ந்த எண்ணத்தினைக் கொண்டிருந்தார். உழவாரப் பணிகளில் ஈடுபட்டு கோயில்களைச் சுத்தம் செய்யும் பணிகளில் ஈடுபட்டார். இரை தேடுவதோடு இறைவனையும் தேடும் வழியினை நமக்கு அளித்துள்ளார். சிவனைக் காட்டிலும் சிவனடியார்க்குச் சேவையினையும், சாதி மதம் பேதம் பாராமல் அனைத்து தரப்பட்ட மக்களும் நன்மை பெறும் வண்ணம் திருநாவுக்கரசரின் சமூகத் தொண்டு அமைந்தது. மரமானது தான் உண்ணாமல் பழங்களை பிறருக்குக் கொடுக்கிறது. நதியானது தான் அருந்தாமல் பிறருக்கு நீர் அளிக்கிறது. அது போலவே பிறருக்கு உதவி செய்யவே இவ்வுடல் நமக்கு அளிக்கப்பட்டுள்ளது என்கிறார் திருநாவுக்கரசர்.

# 107. அப்பரும் வள்ளலாரும்

தவத்திரு ஊரன் அடிகளார், வடலூர்.

சைவ சமய குரவர் நால்வரும் நான்கு மார்க்கங்களை (நெறிகளை) விளக்க வந்தவர்கள். தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என மார்க்கங்கள் நான்கு.

| | | | | |
|---|---|---|---|---|
| தாசமார்க்கம் | - | தொண்டுநெறி | - | சரியை |
| சற்புத்திரமார்க்கம் | - | மகன்மைநெறி | - | கிரியை |
| சகமார்க்கம் | - | தோழமைநெறி | - | யோகம் |
| சன்மார்க்கம் | - | குருசீடநெறி, தலைவன் தலைவி நெறி | - | ஞானம். |

தாசமார்க்கமாகிய தொண்டு நெறியை விளக்க வந்தவர் அப்பர்.

சற்புத்திரமார்க்கமாகிய மகன்மை நெறியை விளக்க வந்தவர் சம்பந்தர்.

சகமார்க்கமாகிய தோழமை நெறியை விளக்க வந்தவர் சுந்தரர்.

சன்மார்க்கமாகிய ஞானநெறியை விளக்க வந்தவர் மாணிக்கவாசகர்.

நான்காவது மார்க்கமாகிய சன்மார்க்கத்தைச் சமரச சுத்த சன்மார்க்கமாக விளக்க வந்தவர் நால்வருக்குப்பின் ஐந்தாமவராக வந்த வள்ளலார்.

தொண்டுநெறியை விளக்க வந்த அப்பர் உழவாரப் பணியைத் தொண்டாகக் கொண்டார். அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடியது தேவாரம். மாணிக்கவாசகர் பாடியது திருவாசகம். அப்பர் கையில் உழவாரம். சம்பந்தர் கரங்களில் தாளம். சுந்தரர் கையில் செண்டு. மணிவாசகர் கையில் ஏடு. மூவர் தேவாரத்திற்கும் தனித்தனிச் சிறப்புப் பெயருண்டு. அப்பர் தேவாரம் தேவாரம் என்றே பெயர்பெறும். சம்பந்தர் தேவாரம் திருக்கடைக்காப்பு. சுந்தரர் தேவாரம் திருப்பாட்டு. அப்பர் இருபெரு வாரங்களை வழங்கினார். ஒன்று தேவாரம். மற்றொன்று உழவாரம். தேவாரம் நாவிற்கு அணிகலம். உழவாரம் கைக்கு அணிகலம். பக்திக்குத் தேவாரம். தொண்டுக்கு உழவாரம்.

வள்ளலார் சைவ சமய குரவர் நால்வரிடமும் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். தாம் அருளிய திருவருட்பாவில் நால்வரைப் பற்றியும்

நான்கு அருள்மாலைகள் அருளியுள்ளார். ஒவ்வொன்றும் ஒரு பதிகம், பத்துப் பத்துப் பாடல்கள். ஆளுடைய பிள்ளையார் அருள்மாலை, ஆளுடைய அரசுகள் அருள்மாலை, ஆளுடைய நம்பிகள் அருள்மாலை, ஆளுடைய அடிகள் அருள்மாலை என அவை வழங்கும்.

அப்பர் அவதரித்த திருவாமூரும் சுந்தரர் அவதரித்த திருநாவலூரும் அருகருகே உள்ளன. இவ்விரண்டும் திருவதிகைக்கு அருகே உள்ளன. திருவதிகை வடலூருக்கு அருகே உள்ளது, வெகு தொலைவில் இல்லை. இத்தலங்களையெல்லாம் வள்ளற்பெருமான் அறிவார். திருவதிகையை நன்கறிவார். திருவதிகையைப் பாடியும் இருக்கிறார்.

அப்பரின் இயற்பெயர் (பெற்றோர் இட்ட பெயர்) மருள்நீக்கியார். சமண சமயம் சார்ந்திருந்தபோது வழங்கிய பெயர் தருமசேனர். இப்போது இவ்விரு பெயர்களும் வழக்கிழந்துவிட்டன. சமணத்திலிருந்து சைவத்திற்கு மீண்டபின் சிவபெருமானே அருளிய பெயர் திருநாவுக்கரசர். சம்பந்தர் இட்டழைத்த பெயர் அப்பர். இவ்விரு பெரும் பெயர்களே இப்போது வழங்குகின்றன, நின்று நிலைத்து நீடு நிலவுகின்றன.

வள்ளலார் அப்பரை எண்ணுகிறார். அவரது அருள் வரலாற்றை எண்ணுகிறார். அவரது அருள்வாக்குகளை எண்ணுகிறார். அவரது அருள்வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்களை எண்ணுகிறார். எண்ணி எண்ணி உருகுகிறார். அவற்றையெல்லாம் பாடல்களில் வைத்துப் பாடிப் பரவசப் படுகிறார். ஆளுடைய அரசுகள் அருள்மாலையில் முதற்பாடலிலேயே திருவதிகைத்தலம், திருநாவுக்கரசு என்னும் திருப்பெயர், கைக்கொண்ட உழவாரப்படை ஆகிய மூன்றும் இடம்பெறுகின்றன.

**திருத்தகுசீர் *அதிகை*அருள் தலத்தின் ஓங்கும்**
**சிவக்கொழுந்தின் அருட்பெருமைத் திறத்தால் வாய்மை**
**உருத்தகுமெய் உணர்ச்சிவடி வாகிச் சைவ**
**ஒளிவிளங்க *நாவரசென் றொருபேர்* பெற்றுப்**
**பொருத்தமுற *உழவாரப் படைகைக்* கொண்ட**
**புண்ணியனே நண்ணியசீர்ப் புனித னேஎன்**
**கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞானக்**
**கடலேநின் கழல்கருதக் கருது வாயே.**

(திருஅருட்பா - 3237)

முதற்பாடலில் ''நாவரசு'' என்ற பெயர் இடம் பெறுகிறதென்றால் பத்தாம் பாடலாகிய ஈற்றுப்பாடலில் ''அப்பர்'' என்ற பெயர் இடம்பெறுகிறது. ''ஒப்பிலாத செல்வமே அப்பனெனத் திகழ்கின்றோனே'' என்று பதிகத்தை, அருள்மாலையை நிறைவு செய்கிறார் (திருஅருட்பா - 3246).

திருநாவுக்கரசரை நினைக்கும்போது திலகவதியாரை நினைக்காமல் இருக்க முடியாது. திலகவதியார் இல்லையேல் திருநாவுக்கரசர் இல்லை என்று சொல்லுமாம்படி இன்றியமையாததோர் இடத்தைப் பெற்றுள்ளார் திலகவதியார். திருநாவுக்கரசருக்குத் திலகவதியார் எப்படியோ அப்படி வள்ளலாருக்கு அவரது அண்ணியார் பார்வதி (பாப்பாத்தி) அம்மையார். திருநாவுக்கரசர் தமக்கையார் திலகவதியாரால் ஆளாக்கப் பெற்றார். வள்ளலார் அண்ணியார் பார்வதியம்மையாரால் வளர்க்கப் பெற்றார். ஒற்றியூர் இறைவி வடிவுடையம்மை வள்ளலாருக்கு அமுதளிக்க எழுந்தருளியபோதுகூட அண்ணியார் வடிவில்தான் வந்தார். வள்ளலாருக்கு அண்ணியார். அப்பருக்குத் தமக்கையார். இளமையில் அண்ணியாரால் ஆளான வள்ளலார் பின்னாளில் அப்பரைப் பாடும்போது திலகவதியாரையும் நினைக்கிறார். நினைந்து ''அருள் வழங்குந்திலகவதி அம்மையார் பின் அவதரித்த மணியே'' (திருஅருட்பா-3245) என்று பாடுகிறார். திலகவதியாரை அருள் வழங்கும் திலகவதி அம்மையார் எனப் பாடும் அருமைப்பாடு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது. ஆம். அப்பருக்குத் திலகவதியார் அருள் வழங்கினார்.

திருநாவுக்கரசரை நினைக்கும்போது உடன் நினைவுக்கு வரும் இன்னொரு அடியவர் அப்பூதி அடிகள். அப்பூதி அடிகளையும் வள்ளலார் நினைக்கிறார். நினைந்து ''அப்பூதி அடிகட்கின்பம் தந்த பெருந்தகையே எம் தந்தையே'' என்று பாடுகிறார் (திருஅருட்பா - 3246).

**இறைவன் தொண்டர்க்குத் தொண்டன்**

அடியார் பசிபொறுக்கப் பெறாதவன் ஆண்டவன். சம்பந்தருக்கு ஞானப்பால். அப்பருக்குக் கட்டுச்சோறு. சுந்தரருக்குப் பிச்சைச்சோறு. வள்ளலாருக்குச் சர்க்கரைப் பொங்கல். அப்பருக்குக் கட்டுச்சோறு வழங்கியதை வள்ளலார் எண்ணிப் பாடுகின்றார்.

> பூவுக் கரையரும்வான் புங்கவரும் போற்றுதிரு
> நாவுக் கரையரெனு நன்னாம - மேவுற்ற
> தொண்டர்க்கு நீகட்டுச் சோறெடுத்தாய் என்றறிந்தோ
> தொண்டர்க்குத் தொண்டனென்பார் சொல்.

(திருஅருட்பா - 2010)

திருநாவுக்கரசரே தொண்டர். அவருக்குக் கட்டுச்சோறு கொண்டுவந்து கொடுத்தவர் தொண்டருக்குத் தொண்டரல்லவா? இதனை இப்பாடலில் கூறி வியந்து போற்றுகிறார் வள்ளலார்.

**கதவு திறந்தது**

சம்பந்தரும் அப்பரும் திருமறைக்காட்டில் வேதங்கள் அடைத்த திருக்கதவம் திறக்கவும் மூடவும் பாடினார்கள். அப்பர் திறக்கப் பாடினார்.

சம்பந்தர் மூடப் பாடினார். அதுவரை மூடியே கிடந்த கதவு, இவ்விருவராலும் திறந்து மூடும் வழக்குக்கு வரலாயிற்று. திருநாவுக்கரசர் பத்துப்பாடல்கள் பாடியும் கதவு திறக்கவில்லை. பதினோராம் பாடலில் ''இரக்கம் ஒன்று இலீர் எம்பெருமானிரே'' என்று இறைவனின் இரக்கமின்மையைச் சுட்டிப் பாடினார். உடனே கதவு திறந்தது. ''இரக்கம் இலீர்'' என்ற அப்பர் பெருமானின் வாக்கு வள்ளற்பெருமானை மிகவும் கவர்ந்திருக்கிறது. திருமறைக்காட்டில் கதவு திறந்த காட்சியை வள்ளற்பெருமான் பாடிப் போற்றுகின்றார்.

**நாட்டில் புகழ்பெற்ற நாவுக் கரசர்முன் நாள்பதிகப்**
**பாட்டிற் *கிரக்கம்இல் லீர்*எம் பிரான்எனப் பாடஅன்றே**
**ஆட்டிற் கிசைந்த மலர்வாழ்த்தி வேதம் அமைத்தமறைக்**
**காட்டில் கதவம் திறந்தன ரால்எம் கடவுளரே.**

(திருஅருட்பா - 828)

**அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்**
***இரக்கம்* ஒன்று *இலீர்* எம்பெருமானிரே**
**சுரக்கும் புன்னைகள் சூழ் மறைக்காடரோ**
**சரக்க இக்கதவம் திறப்பிம் மினே!** (தேவாரம் - 5342 (5-10-11))

என்பது திருநாவுக்கரசர் பெருமான் பாடிய திருமறைக்காட்டுத் திருக்குறுந்தொகை. கதவு திறக்கப் பாடிய பதிகம் பதினோராம் பாடல். இப்பாடலில் **இரக்கம் இலீர்** என்று வருவதனை அப்படியே வள்ளற் பெருமான் எடுத்துவைத்துப் பாடியிருப்பது வள்ளற்பெருமானது பேரீடுபாட்டைக் காட்டும்.

வேதங்கள் கதவை மூடிவிட்டே போய்விட்டன. நெடுங்காலம் மூடிக்கிடந்த கதவை அப்பர் தேவாரமும் சம்பந்தர் தேவாரமும் திறக்கவும் மூடவும் செய்து புழக்கத்திற்குக் கொண்டு வந்தன. தேவாரம் முதலான திருமுறைகளைப் பயின்று அனுபவத்திற்குக் கொண்டு வருபவர்களுக்குச் சிவலோகக் கதவு திறக்கும்.

### திருவடி தீக்கை

நயனதீக்கை, வாசகதீக்கை, பரிசதீக்கை, அத்தமத்தக சையோகதீக்கை, திருவடிதீக்கை எனத் தீக்கைகள் பல. திருவடி தீக்கை எல்லாவற்றிலும் சிறப்புடையது. அப்பரும் சுந்தரரும் மாணிக்கவாசகரும் இறைவனால் திருவடி தீக்கை செய்யப்பெற்றனர். திருநல்லூர் என்ற தலத்தில் இறைவன் அப்பருக்குத் திருவடி தீக்கை செய்தருளினான். ''இனமலர்கள் போது அவிழ்ந்து மதுவாய்ப் பில்கி நனைந்தனைய திருவடிகள் என் தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே'' என்று அப்பர் சுவாமிகள் தாம் பெற்ற திருவடி தீக்கையைக் குறித்துப் பாடுகின்றார் (தேவாரம் - 6391).

நல்ல நறுமலர்கள் இதழ் விரிந்து தேன் சுரந்து நனைந்தது போன்ற திருவடிகளை என் தலைமேல் வைத்தார் என்கிறார் அப்பர். அன்றொருநாள் இனமலர்கள்போது அவிழ்ந்து மதுவாய்ப் பில்கி நனைந்தனைய திருவடிகளை அப்பரின் சென்னியில் வைத்தபோது அவர்தலை எப்படிக் குளிர்ந்து இன்பம் நல்கியிருக்கும், இன்று நான் அதை எண்ணுந்தோறும் என்தலை மட்டுமா, மனமும் குளிர்கின்றதே என்று வள்ளற்பெருமான் அனுபவித்துப் பாடுகின்றார்.

துடிவைத்த செங்கை அரசேநல்
　　லூரில்நின் தூமலர்ப்பொன்
அடிவைத்த போதெங்கள் அப்பர்தம்
　　சென்னி யதுகுளிர்ந்தெப்
படிவைத்த தோஇன்ப மியான்எணுந்
　　தோறும்இப் பாவிக்குமால்
குடிவைத்த புன்தலை ஒன்றோ
　　மனமும் குளிர்கின்றதே. (திருஅருட்பா - 2321)

பழைய அருள் நிகழ்வுகளையெல்லாம் நினைந்து நினைந்து அனுபவிக்க வேண்டுமானால் இப்படியன்றோ வள்ளற்பெருமான் போல் அனுபவிக்க வேண்டும்.

**சொற்றுணை வேதியன் என்னும் பதிகச் சுருதி**

சமணர்கள் திருநாவுக்கரசரைக் கல்லிற்கட்டிக் கடலிற் போட்டார்கள். திருநாவுக்கரசர் கல்லே தெப்பமாக மிதக்கக் கரை சேர்ந்தார். அப்போது அவர் பாடியருளியது சொற்றுணை வேதியன் என்று தொடங்கும் தேவாரம் நமச்சிவாயப் பதிகம்.

*சொற்றுணை வேதியன்* சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயமே. (தேவாரம் - 4273 - 4-11-1)

சொற்றுணை வேதியன் என்ற தேவாரப் பதிகமும், அப்பர் கல்லே தெப்பமாக மிதந்து கரையேறியதும் வள்ளலார் உள்ளத்தைக் கரைக்கின்றன.

சொற்றுணை வேதியன் என்னும் பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப் போதினையே
நற்றுணை யாக்கரை ஏறிய புண்ணிய நாவரசைக்
கற்றுணை யாதிந்தக் கற்றுணை யாமென் கடைநெஞ்சமே.
(திருஅருட்பா - 2302)

சொற்றுணை வேதியன் என்னும் பதிகத்தைச் சுருதி - வேதம் - என்கிறார் வள்ளலார். சொற்றுணை வேதியன் என்று தொடங்கும் தேவாரத்தையும் திருவருட்பாவையும் ஒத்துப் பாருங்கள். கருத்துகள் மட்டுமன்று,

''சொற்றுணை'', ''பொற்றுணை'', ''கற்றுணை'' என்று சீர்களும் எதுகை மோனைகளும்கூட ஒத்திருக்கக் காணலாம்.

நாவுக்கரசரைப் போலவே நானும் மாயையாகிய சமணர்களால் மனமாகிய கருங்கல்லிற் கட்டப்பட்டுக் பாவக்கடலில் வீழ்த்தப்பட்டு உழன்று ஐந்தெழுத்தை ஓதுகின்றேன் என்னையும் கரையேற்ற வேண்டும் என்று வள்ளலார் வேண்டுகின்றார்.

**சீர்தரு நாவுக் கரையரைப் போலிச் சிறியனும்ஓர்**
**கார்தரு மாயைச் சமணான் மனக்கருங் கல்லிற்கட்டிப்**
**பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே**
**ஏர்தரும் ஐந்தெழுத் தோதுகின் றேன்கரை ஏற்றரசே.**

(திருவருட்பா - 2305)

**ஒண்ணுளே ஒன்பது வாய்வைத்தாய்**

திருப்புகலூரில் திருநாவுக்கரசர் பெருமான், ''புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய உத்தமனே'' என்று பத்துப் பாடல்கள், திருப்புகலூர்த் திருத்தாண்டகம் பாடிச் சிவலிங்க ஐக்கியமாகி முத்தி பெற்றார்.

**எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ**
**எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்**
**கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்**
**கழலடியே கைதொழுது காணின் அல்லால்**
***ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்***
***ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்***
**புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்**
**பூம்புகலூர் மேவிய புண்ணியனே.**

(தேவாரம் - 7226 (6-99-1)

என்பது முதற்பாடல். இதனுள், ''ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்'' என்னும் தொடர் அறிஞர் பலரையும் கவர்ந்த தொடர். ஒண்ணுளே ஒன்பது வாசல் என்பதென்ன? மனித உடம்பு ஒரு வீடு. அதற்கு ஒன்பது வாசல்கள். கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்கில் நாசித்துளைகள் இரண்டு, வாய் ஒன்று, கீழே சலவாய் (சிறுநீர் வாயில்) ஒன்று, மலவாய் (ஆசனவாய்) ஒன்று ஆக ஒன்பது வாசல்கள். மேலே தலையில் ஏழு வாயில்கள், கீழை இடையில் இரண்டு வாயில்கள். இவ்வொன்பது வாயில்களும் உயிர் போகுங்காலத்தில் ஒக்க அடைக்கப்பட்டுவிடும். ''ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்'' என்னும் இப்பாட்டு வள்ளலார் உள்ளத்தையும் கட்டுகிறது. வள்ளலார் பாடுகின்றார்.

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தஅருட் பயனே உண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாதம்அன்றி
விண்ணுளே அடைகின்ற போகம் ஒன்றும்
விரும்பேன்என் றனையாள வேண்டுங் கண்டாய்
*ஒண்ணுளே ஒன்பதுவாய் வைத்தாய் என்ற*
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே.

(திருஅருட்பா - 3241)

வள்ளற்பெருமான் பாடியருளிய ஆளுடைய அரசுகள் அருள்மாலையில் ஐந்தாம் பாட்டு இது.

சமயக் குரவர் நால்வரில் அப்பர் ஒருவரே நிலவுலகில் நீண்டகாலம் எண்பத்தோரு ஆண்டுகள் நிலவினார்; கயிலைவரை யாத்திரை செய்தார். உடல் உழைப்பால் வழிபாடு செய்வதை விளக்கவந்த அவர் உழவாரப் பணியைக் கடைசிவரை கைவிடவில்லை. தில்லைச் சிதம்பரம் கோயில் வெளித்திருவீதியில் அங்கப்பிரதட்சிணம் செய்து வலம் வந்தவர் அப்பர் ஒருவரே. இவையெல்லாம் தொண்டின் உறைப்பைக் காட்டுவன. ''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ'' என்று திருநாவுக்கரசு நாயனார் புராணத்தைச் சேக்கிழார் தொடங்குகிறார். திருநாவுக்கரசர் வளர்த்த திருத்தொண்டின் நெறி இன்றும் வளர்கிறது, இன்றும் வாழ்கிறது. அந்த வழியில் வந்த வள்ளலார் திருநாவுக்கரசரை வழிபட்டுப் பாடுகிறார்.

திருநாவுக்கரசரை வழிபட்டால் நமக்கு வெப்புநோய் முதலிய தாக்குதலில்லை, நீற்றறை அவரைத் தாக்கவில்லையாதலின் விஷபயம் இல்லை, நஞ்சு அவரைக் கொல்லவில்லையாதலின் மிருகபயம் இல்லை, யானை அவரை இடர் செய்யாது அகன்றமையின் தண்ணீர்த் தத்து முதலியன உண்டாகா, அவர் கல்லே தெப்பமாக மிதந்தவராதலின் நீரால், நெருப்பால், நஞ்சால், மிருகங்களால், இடையூறின்றி வாழவேண்டின் முடிவில் வீடுபெற வேண்டின் திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி வாழ்வோமாக.

அப்பர் பிரான் அடிபோற்றி!

வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே!

# 108. திருநாவுக்கரசரின் ஒருமை

பெ. சுப்பிரமணியன், தஞ்சாவூர்.

உலகில் இருள் நீங்கவும் அலகில் கலைத்துறை தழைப்பவும் அருந்தவத்தோர் நெறிவாழவும் தமிழகம் செய்த தவப்பயனால் ஏழாம் நூற்றாண்டின் ஞானக் கதிரோனாகத் தோன்றியவர் திருநாவுக்கரசர். மாந்தர் தம் மருள்நீக்கி வந்த வாகீசர் தாசமார்க்கமாகிய தொண்டு நெறியைப் பற்றி வாழ்ந்தவர் என்பது சைவமரபு. சிவபரம் பொருளை ஆண்டானாகவும் தம்மை அடிமையாகவும் எண்ணி உறவுபூண்டு சொல்லாலும் செயலாலும் ஒத்து வாழ்ந்த திருநாவுக்கரசர் தம் வாழ்வில் ஒருமைநெறியைக் கைக் கொண்டவர். ஒருமையால் உயர்ந்து இறைவனோடு இரண்டறக் கலந்தவர். திருநாவுக்கரசரைத் தெய்வ நிலைக்கு உயர்த்திய ஒருமை நெறியினை அவரது தேவாரப் பதிகங்களின் வழி எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஒருமை - விளக்கம்**

மனிதப் பிறவியின் முடிந்த குறிக்கோள் இறைவன் திருவடியடைதல். மனித மனம் நினைக்கும் கருவி. அகக்கருவிகள் நான்கனுள் ஒன்றாகிய மனம் மனிதனை உயர்த்தவும் தாழ்த்தவும் செய்யும். அறிவின் துணையால் (அருளறிவு) மனத்தை அடக்கி ஒருமுகப்படுத்தித் தன்னை ஆள்பவர்கள் அருள்வழியில் நிற்பர். மனம்போன போக்கில் செல்பவர்கள் மனிதப் பிறவியின் குறிக்கோளை, இலட்சியத்தை அடைய மாட்டார்கள். ஐம்புல யானைகளை அறிவால் அடக்கி ஆள வேண்டும். அறிவிற்கு மனம் இணங்கி வரவில்லையானால் வாழ்வு பயனற்றுப் போகும்.

> **''சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ**
> **நன்றின்பால் உய்ப்ப தறிவு''** (குறள். 422)

> **''உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
> **வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து''** (குறள். 24)

ஆகிய குறட்பாக்கள் அறிவின் துணையால் மனத்தை அடக்கியாளுதலையும், மனக்கட்டுப்பாட்டினால் புலன்களை அடக்கும் வழியையும் காட்டுகின்றன. மனத்தை ஒருமைநெறியில் செலுத்தினால் - ஒருமுகப்படுத்தினால் இறை நெறியில் செல்லவும் ஆன்மிகச் சாதனை செய்யவும் எளிதாகும்.

ஒருமை என்பதற்கு ஒரு பிறப்பு, ஒற்றுமை, தனிமை, மெய்ம்மை ஆகிய பொருள்களை அகராதிகள் சுட்டுகின்றன. ஒன்றி, ஒன்று ஆகிய சொற்களும் தனிமை என்ற பொருளையே உணர்த்துகின்றன. ஒன்றுதல் என்ற சொல்லுக்குப் பொருந்துதல், கூடுதல், நிலைபெறுதல், இடை விடாதிருத்தல், கலத்தல் ஆகிய பொருள்கள் உள்ளன. யோகம் என்ற சொல் சேர்க்கை, அதிட்டம், நூல், நற்சுழி, தியானநிட்டை, உணர்ச்சி ஆகிய பொருள்களைக் கொண்டது. ஒருமை, ஒன்றாதல், யோகம் ஆகிய சொற்கள் ஒத்த பொருளுடையனவே. தனித்திருந்து மனத்தை ஒருமுகப் படுத்தும் அரிய கலையினைச் சொல்லும் சொற்களே.

வடமொழியில் யோகம் என்ற சொல் 'யுஜ்' என்ற அடிச்சொல்லி லிருந்து தோன்றியது என்றும் அது சேர்தல் என்ற பொருளில், இறைவனுடன் ஆன்மா இணைதலைக் குறிக்கும் என்றும் சித்தர்கள் பரிபாஷை அகராதியில் டாக்டர் இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகிறார். மேலும் கர்மயோகம், இராசயோகம், அடயோகம், அட்டாங்கயோகம் என்ற நான்கு வகை களையும் அவர் சுட்டுகிறார்.

யோகம் என்பதை ஊழ்கம் என்றும் கூறுவர். ஊழ்குதல் என்பதற்குத் தியானித்தல் என்று பொருள். தியானம் என்பதற்கு இடையறாச் சிந்தனை என்று பொருள். ஒருமை என்பது மன ஒருமையையே குறிக்கும். தனித்திருந்து மனத்தை ஒருமுகப்படுத்தி அருள்வழியில் செலுத்தி இறைவனுடன் கலத்தலுக்குரிய சாதனையையும் ஒருமை என்ற சொல் குறிக்கும். இறைவனுடன் கலத்தல் - ஒன்றாதல் யோகம் ஆகும்.

**மனமும் ஒருமையும்**

மனித மனம் அலைபாயும் இயல்புடையது. ஆடும் மனக்குரங்கு என்பர் அருளாளர். மனத்தை ஒருமைப்படுத்திச் செம்மைப்படுத்தும் செயலே யோகப்பயிற்சி. மனம் செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம் என்று சொல்லியது மனத்தின் இயல்பையும் செயலையும் கருதியே. மனம் பள்ளம் நோக்கி ஓடும் புனலைப் போல் ஓடும் இயல்புடையது. உலகியல் நாட்டத்தில் கவர்ச்சியை விரும்புவது. பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள ஆதலின் அருட்செல்வம் வேண்டும் மெய்யன்புடைய சான்றோர் மனத்தை ஒருமுகப்படுத்தும் கலையினை விரும்புவர். புலனடக்கம் தவம் செய்வார்க்கு இன்றியமையாதது. மன அடக்கம் எல்லாவற்றிற்கும் முதன்மையானது. அடக்கம் அமரருள் உய்க்கும். சித்திகள் பல பெற்றவர்க்கும் மனத்தை அடக்கும் வல்லமை இல்லையெனில் திருவருள் வாய்ப்பதில்லை என்பதைத் தாயுமானவடிகள்,

> **''சினமிறக்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும்**
> **மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே''.**

என்று பாடியுள்ளதால் அறியலாம். மனம் ஒருமைப்பட்டு நினைக்கும் நினைப்பு, எண்ணம் உறுதியாகவும் சாதனைக்குரியதாகவும் மாறும்.

''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்'' (குறள். 666)

என்பார் வள்ளுவர். திருவருட்பிரகாச வள்ளலார்,

''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்''
(திருவருட்பா - தெய். மணி. மா. 8)

என்கிறார். மன ஒருமையுடன் நினைப்பது, நீள நினைப்பது, ஆழ்ந்து அன்பு செலுத்துவது, இடையறாது சிந்திப்பது, பக்தி செலுத்துவது. இறைவன் திருவடியைப் பற்றிக் கொள்வது ஒருமை. அதுவே யோகம். இவ்வாறு ஒன்றி நினைப்பது மனத்தின் செயலாதலின் சான்றோர் மனத்தின் ஒருமையை வலியுறுத்தினர்.

**திருநாவுக்கரசர் வாழ்வில் ஒருமை**

திருநாவுக்கரசர் தூய, பழுத்த துறவி. உலகப் பற்றினை நீக்கிப் பற்றற்றானாகிய இறைவனையே பற்றியவர். அதனால் அவர் மன ஒருமை யுடன், செம்மையுடன் வாழ்ந்து வரலாற்று நாயகராக மாறியவர். ஆதலால்தான் சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

''திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்க ரையன்றன் அடியார்க்கும் அடியேன்''

என்று திருநாவுக்கரசரைப் போற்றினார்.

சேக்கிழார் பெருமான், திருநாவுக்கரசர் புராணத்துள் திருநாவுக்கரசரின் தோற்றப் பொலிவினைக் கூறுமிடத்தில் அவரது சிந்தையும் மொழியும் ஒன்றி நின்ற நிலையினைக் குறிப்பிடுகிறார்.

''தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல் அன்புநீர் பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே''.

''மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந்
திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளுஞ் செம்பொற்றாளே
சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும் தாமும்ஆகிப்

பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
பணிந்தேத்திப் பரவிச் செல்வார்''.

முதற்பாடலில் 'நாயகன் சேவடி தைவருஞ் சிந்தை' என்றார். தைவருதல் என்ற சொல் மெல்ல வருடுதல், தடவுதல் என்ற பொருளைத் தரும். சங்க நூல்களில் அகத்துறையில் பயன்படும் இச்சொல் இறைவன் திருவடியை நினையும் சிந்தையுடன் தொடர்பாக்கப்படுகிறது. 'சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழிவன' (ஐயாற்றுப் பதிகம்)வாகிய இறைவன் திருவடிகள் பேரின்பத்தை நல்குவனவாதலின், இன்பம் விழைவோர் இடையறாது நினையும் பான்மையை மேலடி உணர்த்தும். சார்ந்ததன் வண்ணமாக நிற்கும் ஆன்மா உலகையும் இறைவனையும் சார்ந்து இரண்டாட்டில் துன்புறும். ஆனால் திருநாவுக்கரசர் திருமணம் சிவபெருமான் திருவடிகளைச் சார்ந்து ஒன்றி நின்று, ஏகனாகி இறைபணியில் நின்ற தன்மையை இரண்டாம் பாடல் உணர்த்தும்.

''இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்திண்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்''.

என்னும் காஞ்சிப்புராணப் பாடலின் ஆசிரியர், உள்ளத்தில் பூண்ட இடையறாப் பேரன்பினால் நெக்கு நெக்கு நினைபவராகிக் காதலாகிக் கசிந்துருகி அழுத நிலையில் தொண்டின் அடையாளச் சின்னமாகிய உழவாரப் படையினைத் தாங்கிய கையுடன் தம் மனத்தைச் சிவபெருமான் திருவடிக்கே பதித்தவராகித் தம் வாழ்வையே வழிபாடாக்கிக் கொண்ட திருநாவுக்கரசர் நிலையினைச் சிறப்பித்துக் கூறுகிறார்.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் மனம் ஒன்றி ஒருமையுடன் நின்று வழிபடும் திறத்தினைக் கூறுகிறார்.

''ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை''
(4-ஆம் திருமுறை)

என்ற அடி மனம் ஒன்றி வழிபடும் முறையினை வலியுறுத்துகிறது.

**அப்பர் காட்டும் அகவழிபாட்டு ஆலயம்**

புறவழிபாட்டிற்குரிய திருக்கோயில்களை அப்பர் போற்றிப் பாடினார். 'திருக்கோயில் இல்லாத திருவில் ஊர் அடவி காடே' என்றார். எனினும் உருவ வழிபாட்டுச் சின்னங்களாகிய திருக்கோயில் வழிபாட்டின் எல்லையைத்

தாண்டி மேலே போய் ஞான வழிபாடாகிய அகவழிபாட்டிலும் திளைத்து நின்று அருளனுபவம் பெற்றவர் அப்பர். அவ்வருளனுபவ அகவழிபாட்டுப் பாடல்கள் அவர் வாக்கில் நிறைந்துள்ளன. இறைவன் நினைக்கும் தொண்டர் தம் உள்ளத்துள் உவந்து குடியிருப்பான் என்பதை 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்னும் திருமூலர் வாக்கிற்கேற்ப அப்பரடிகள் பல இடங்களில் வலியுறுத்துகிறார்.

''பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்'' (5)

''நாடி நாரணன் நான்முகன் என்றிவர்
தேடியுந் திரிந்தும் காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்து
ஆடி பாதம் என் நெஞ்சுள் இருக்கவே'' (5)

''முகமெலாம் கண்ணீர் மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர்
அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே'' (4)

''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே'' (4)

'சிந்திப்பார் மனத்தான் சிவன் செஞ்சுடர்', 'சிந்தையுள் சிவனாய் நின்ற உருவினைக் கண்டு கொண்டதென் உள்ளமே' ஆகிய திருக்குறுந்தொகை அடிகளிலும் மேலும் பல பாடல்களிலும் அகவழிபாட்டிற்குரிய ஆலயம் மனமே என்பதை அப்பர் வலியுறுத்துகின்றார்.

**அப்பர் வாழ்வில் அகவழிபாட்டு அனுபவம்**

அப்பர் ஞான வழிபாட்டில் திளைத்தவர் என்பதற்கு அவர்தம் பாடல்களே சான்றாகின்றன. நீற்றறையிலிருந்து மீண்டது, நஞ்சு கலந்த பாலமுதை உண்டு உயிர் பிழைத்தது, கொலைக்களிற்றை வென்றது, கல்லைத் தெப்பமாகக் கொண்டு கரையேறியது ஆகிய செயல்களெல்லாம் அப்பர் மனம் ஒன்றிச் செய்த யோக சாதனையால் நிகழ்த்தப்பட்டனவேயாம். யோகிகள் சித்தத்தைச் சிவன்பாலே வைத்துச் செய்யும் கருமங்கள் சிவகருமங்களாக மாறுகின்றன. சிவபெருமானைப் போலவே சிவஞானி களும் ஐந்தொழில் நிகழ்த்தும் வல்லமையைப் பெறுகின்றனர் என்பதைச் சாத்திரங்களாலும் தோத்திரங்களாலும் அறிய முடிகிறது.

'ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
.......................................................
ஞானத்தாய் உனை நானுந் தொழுவனே' (5)

அகவழிபாடு செய்யும் சிவஞானிகள் சிவத்தை ஞான வடிவில் கண்டு வழிபடுகின்றனர். ஞான விளக்கினை ஏற்றி உள்ளத்துள் ஒளிவடிவில் கண்டு வழிபடுகின்றனர்.

'உள்ளத்துள் ஒளியுமாகும்'

''ஞானத்தை விளக்கி ஏற்றி நாடியுள் விரவவல்லார்
ஊனத்தை ஒழிப்பர் போலும் ஒற்றியூருடைய கோவே'' (4)

''நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றானைக் கண்டு கொண்டதென் உள்ளமே'' (5)

என்னும் பாடல்கள் அப்பரின் அகவழிபாட்டு அனுபவ நிலையினை விளக்குவன.

**அப்பரும் சிவயோகமும்**

சித்தத்தைச் சிவன் திருவடியில் கூட்டி வைத்தல் சிவயோகம். இதனைச் சமாதிநிலை என்பர். ஞான நிட்டை கூடிய நிலையில் இருத்தல் சமாதி.

''உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே.'' (4)

''மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலிஇட்டுச்
செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையும் அன்றே'' (4)

இப்பாடல்களில் 'இருந்து நோக்கி', 'தம்மையும் நோக்கி' என்னும் சொற்கள் உள்முகமாகக் காணும் சிவயோக பாவனையைக் குறிப்பனவாம்.

''விறகில் தீயினன் பாலில் படுநெய் போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே.''

என்ற பாடலில் சோதிமயமான இறைவனைக் காண ஞான சாதனை செய்ய வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றார். உழுதல், கடைதல் போன்ற சொற்கள் பயிற்சியை, முயற்சியை, ஞான உழவினை (சாதனை) எடுத்துக்காட்டுவன.

''உயிராவணம் இருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி
..........................................................................
நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே'' (6)

என்னும் பாடலில் உயிர்ப்பை அடக்கி, மனத்தை இறைவனுடன் ஒன்றச் செய்து உள்ளமாகிய படத்தில் இறைவன் திருவுருவை எழுதிக் காண்பதாகிய சிவயோகச் செயல் கூறப்படுகிறது. ஊனக்கண்பாசம் உணராப்பதியை ஞானக்கண்ணினில் சிந்தைநாடி காண வேண்டுமென்பதை அருட்கண் கொண்டு காண அழைக்கிறார். திருப்பாதிரிப்புலியூர்ப் பதிகத்தில் 'சித்தம் ஒருக்கிச் சிவாயநம என்றிருத்தலாகிய' யோக சாதனை சொல்லப்படுகிறது. திருஆமாத்தூர்ப் பதிகத்தில் 'சந்தியானைச் சமாதிசெய்வார் புந்தியானை' என்ற பாடல் குறிப்பிடத்தக்கது. சிவபரம்பொருள், சமாதி நிலையாம் யோக நிட்டையில் கூடியிருப்பவர் - இறைவன் திருவடியில் மனம் ஒன்றியிருப்பவர் - ஒருமையிலிருப்பவர் அறிவில் ஞான வடிவில் விளங்குகிறது எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறான அனுபவத்தைச் சுட்டும் பாடல்கள் பல உள.

**ஒருமையில் காணும் ஒளிவடிவம்**

மனத்தை ஒருமைப்படுத்திக் கொண்டு இறைவனை யோக சாதனையால் வழிபடும் அன்பர் புருவமத்தியாகிய நடுநாடியில் மனத்தை நிறுத்துவர். மனம் ஒன்றும் இடம் புருவமத்தி. ஆன்மாவின் நிலையம் உடம்பில் ஓடும் நாடிகளுக்கெல்லாம் நடுநாடியாகவும், இடகலை, பிங்கலை நாடிகளுக்கு இடையில் நடுநின்ற நாடியாகிய சுழுமுனை நாடியாகவும் சொல்லப்படும் புருவமத்தி சிவயோகம், சிவத்தியானம் செய்பவர்க்கு உரிய இடம், உற்ற இடம். சிவத்தைச் சோதி வடிவில் காணும் இடம்.

''நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுஉற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமனிருந்திடஞ்
சிற்றம்பல மென்று சேர்ந்துகொண்டேனே'' (திருமந்திரம்)

இதனை அகவிழி, நெற்றிக்கண், சிற்றம்பலம், ஞானசபை என்றும் கூறுவர். 'கையறவிலாத நடுக்கண் புருவப் பூட்டு' என்கிறார் வள்ளலார். நெற்றிக்கண்ணைத்தக்க ஆசாரியன் சகாயத்தால் (குருவருளால்) திறப்பித்துக் கொண்டு அருட்சோதி மயமான இறைவனைக் காண வள்ளற்பெருமான் வழிகாட்டுகிறார்.

அப்பர் தேவாரத்தில் பல இடங்களில் இறைவனைச் சோதி மயமானவன் என்று குறிப்பிடுகிறார்.

''உத்தமர்க்கு ஞானச்சுடராய் நடுவே உதிப்பன''

'சோதியஞ் செஞ்சுடர்', 'சோதிவானவன்', 'சோதியுட் சோதியாய் நின்ற சோதியே', 'சோதியுட் சுடருமாகி' ஆகியவை சான்றாவன. ''காரொளிய... எனத் தொடங்கும் தாண்டகத்தில், சீரொளி, தழற்பிழம்பு, தொல்லைத் திகழொளி, மயக்கம் தீர்க்கும் ஏரொளி, பேரொளி ஆகிய சொற்களால்

அருட்சோதியாம் சிவம் அப்பரடிகளால் போற்றப்படுகிறது. இவை போன்ற பல சான்றுகள் அப்பர் வாக்கில் உள்ளன.

**அப்பர் சரியையில் மட்டும் நின்றவரா?**

சைவம் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளுள் அப்பர் சரியையில் நின்று வீடு பெற்றவர் என்னும் கருத்து சிந்தனைக்குரியது. சரியை நிலையில் நின்று உலக மக்களுக்குத் தொண்டு செய்தது, சிவஞானத்தால் உயர்ந்த சிவஞானியாயினும் தொண்டு செய்வதையே வாழ்க்கை முடிவாகக் கொள்ள வேண்டும் என்பதை உணர்த்தவேயாகும்.

**'என்கடன் பணிசெய்து கிடப்பதே'**

என்றும்,

**'தொண்டலால் துணையுமில்லை'**

என்றும் பாடிய திருநாவுக்கரசர் சரியையிலிருந்து உயர்ந்து ஞான வரம்பினை அடைந்தவர் என்பதை அவர்தம் பாடல்கள் காட்டுகின்றன.

**''எவரேனும் தாமாக ........... உவந்து நோக்கி**
**இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி**
**இரண்டாட்டது ஒழிந்து ஈசன் திறமே பேணிக்**
**கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே**
**கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே''**

**''கருத்தினால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே**
**சான்றாப்பூர் நடுதறியைக் காணலாமே''** (6)

இத்தாண்டகப் பாடல்களின் ஒவ்வொரு சொல்லும் பொருள் பொதிந்தவை.

தறி என்ற சொல் சிவன், நடுநாடி, யோகத்தம்பம், வீணாதண்டம், யோக தண்டம் ஆகிய பொருள்களைக் குறிப்பது. ஆதலின் அப்பர் ஒருமையில் (யோகத்தில்) நின்று சாதனையின் வல்லமையால் ஞான வீடுபேற்றினைப் பெற்றவர் என்பதற்கு அவர் அருளிய பாடல்களே சான்றாம்.

ஒருமையின் உலகெலாம் ஓங்கவும், ஒத்தாரும் தாழ்ந்தாரும் இன்றி ஒருமையுளராகி உலகியல் நடத்தவும் ஒருமை நெறியாம் யோகநெறி வழிகாட்டும். இந்நெறியில் நிற்கும் சான்றோர் நடுநின்று சிந்திப்பதால் உலகம் வாழ வாழ்வர். சமய, சாத்திர சழக்குகளுக்கு அப்பாற்பட்ட ஆன்ம நேயத்தைக் கண்டு காட்டுவர். இந்த நெறியினை, அருள் நெறியினைக் கண்டு, திருநெறிய தெய்வத் தமிழால் ஒருநெறிய மனம் வைத்து உயர்ந்தவர் அப்பர். திருநாவுக்கரசர் வழியில் அருளாளர் வழியில் புற, அகவழிபாடுகளில் ஒருமைநெறி நின்று சிவமே பொருளெனப் பற்றி நாமும் உயர்வோம்!

**திருநாவுக்கரசர் திருவடிகள் போற்றி! போற்றி!**

# 109. நாவுக்கரசரும் பாரதியும்

மு. அம்பிகாபதி, மதுரை.

''அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்கு
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே''

மண்ணில் தோன்றும் ஒவ்வொரு மனிதனும் மகிழ்வுடை வாழ்வே வாழ ஆசைப்படுகின்றான். ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்று அறியாத அவன் தன் வாழ்வின் இறுதி நாளிலேதான் எது இன்பம் எனக் கண்டறிகின்றான். ஆனால் ஞானிகள், நல்லோர்கள் தத்தம் வாழ்நாளின் ஆரம்ப நிலைகளிலே வழிகாணத் துடிக்கின்றனர்; வழிகண்டு முடிக்கின்றனர். தாம் மகிழ்ந்ததோடு இச்சமுதாயத்தில் தோன்றிய அனைத்துயிர்களும் மகிழ்வுடன் வாழ்வதற்கான வழிகளைக் காட்டுகின்றனர். அவ்வழிகளில் ஒன்று ஒழுக்கம்! ஒழுக்கமுடைய மனிதர் தம்மைக் கட்டுப்படுத்துவதோடு, சமுதாயமும் கட்டுப்பாட்டுக்குள் வளர, வாழ தம்மாலான பணிகளைச் செய்கின்றனர். அத்தகைய பணிகளில் மிகச் சிறந்த பணிகள் இரண்டு! அவற்றுள் ஒன்று தெய்வப் பணி; மற்றொன்று தேசப் பணி! இவ்விரண்டில் எது ஒன்றினைத் தேர்ந்து எடுத்தாலும் தேர்ந்து எடுத்த மனிதன் 'தெய்வ நிலை' பெறல் திண்ணமே!

**நாவுக்கரசர் நாடிய நன்னெறி**

''விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்று அறுப்பது நமசிவாயவே''

என்று பரமனின் திருப்பெயர் புகன்று வினைதீர்த்து வாழலாம் என்று 'தெய்வப்பணி' வழி நடந்து தீர்வு கண்டார் திருநாவுக்கரசர்.

**முண்டாசுக்காரர் கண்ட முக்திநெறி**

''வந்தே மாதரம் என்போம் - எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்''

என்று தான் பிறந்த பொன்னாட்டை வணங்கி 'தேசப்பக்தி' வழியே 'தெய்வபக்தி' கண்டார் பாரதி.

**எதுவழி**

வாழ்வில் வாழும் வழியினைத் தேர்ந்து எடுக்கும் பொழுது நல்ல மனிதர்கள் ஒவ்வொருவரும் தத்தமக்கு முன் வாழ்ந்த சான்றோர் வழி களையும் மொழிகளையும் பின்பற்றுவர். இதனாலே,

''முன்னோர் மொழிப் பொருளன்றி அவர்மொழியும்
பொன்னே போல் போற்றுவம்''

என இலக்கணம் படைத்தனர். ஈண்டு நீண்ட நாள் வாழ்ந்து வாழ்வின் நிலை பல கண்ட அப்பரின் அடிச்சுவட்டைப் பாரதி எங்ஙனம் பின்பற்றி இருக்கிறார்; அப்பரின் வாழ்வும் வாக்கும் பாரதியின் வாழ்வில் எங்ஙனம் இரண்டறக் கலந்திருக்கின்றன என்று காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

இருவருமே இன்னலுக்குள் மூழ்கி இதயத் தூய்மைமிகு எண்ணற்ற பாக்களைப் புனைந்தவர்கள். துன்பத்துள் சுழன்றாலும் தாங்கள் கொண்ட கொள்கையினின்று தடம் மாறாதவர்கள். சற்றே சிந்தித்தால் 'நாவுக்கரசரும் பாவுக்கரசரும்' ஒரே பிறவியோ என எண்ணத் தோன்றுகின்றது..! இறைவன் படைப்பில் எது நடக்காது? எதுவும் நடக்கும்!

**வாகீசரின் வாழ்வியல்**

தமக்கை திலகவதிக்கு மணம் பேசப்பட்டிருந்த கலிப்பகையார் போர்க்களத்தில் மாண்டதும், அவர் மாண்ட நிலை கேட்டு மனம் வருந்திய பெற்றோர் (புகழனார், மாதினியார்) அடுத்தடுத்து மறைந்ததும், உயிர் வாழ விரும்பாத தமக்கையார் உயிர் நீக்க முயன்றதும் நாவுக்கரசரின் இளவயதில் அடுத்தடுத்து விழுந்த தாங்கவொண்ணாப் பேரிடிகள். தமக்காக வாழ்ந்த தமக்கையின் (துறவு) துயர் கோலத்தைக் காணப் பொறாது பாடலிபுத்ரம் சென்றார். தம் இல்லாத்தாரைக் காக்கத் தவறினார் சிவனார் என்று கருதியோ என்னவோ சைவத்தை விட்டு சமண சமயம் சார்ந்தார். 'தருமசேனர்' எனப் பட்டமும் வென்றார். பின், தீரா சூலை நோயால் தமக்கையர்பால் வந்து சேர, அவர் காட்டிய நெறியில் சிவனை வணங்கி நின்றார். நோய் தீரப் பெற்று பின் மீண்டும் சைவத் திருநெறி கொண்டார். பகைநெஞ்சச் சமணர்களால் தூண்டப்பெற்ற பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரனின் சினத்திற்கு ஆளானார். நீற்றறையில் இடப்பட்டும் நஞ்சூட்டப் பெற்றும் யானையை விட்டுக் கொல்ல ஏவப்பட்டும் கல்லைக் கட்டி கடலில் போடப்பட்டும் தாங்கவொண்ணா துன்பத்திற்கு ஆளானார். ஆனால் ஈசன் திருநாமம் உரைத்து இன்னல்களைக் கடந்து ஏற்றம் பெற்றார். சமண மன்னனையும் சைவனாக்கினார். சிவத் தலங்கள்தோறும் சென்று அவனருள் பாடி, விளையும் நன்மைகளை எடுத்தோதினார்.

'என்கடன் பணிசெய்து கிடப்பதே'

எனப் பாடியதோடு அல்லாமல் உழவாரப் படைகொண்டு திருத்தலங்களையும் தூய்மைப்படுத்தினார். ஆடலரசன் வாழும் அகக்கோயிலன்றி மக்கள்

வந்து காணும் புறக்கோயிலும் தூய்மையுடன் விளங்குவது அவசியம் என உணர்த்தினார். இறை எண்ணத்தால் மனமும் உடல் உழைப்பால் மண்ணும் பண்பட வேண்டும் அதுவே மானிடப் பிறவியின் பயன் என வாழ்ந்து காட்டினார்.

**ஞானக் குயிலோன் கண்ட ஞால வாழ்வியல்**

சின்னச்சாமி பெற்றெடுத்த தகப்பன்சுவாமி தன் தாயை இழந்தது அகவை ஐந்தில். அடுத்த இரண்டாண்டில் மற்றொரு தாய் மனை வந்த புதுநிலை. இயற்கையையும் இசையையும் இறையாய்க் கண்ட கவிப் பிள்ளைக்கு பள்ளிக்கணக்கும் பகுத்தறிவுக்கொவ்வா பழஞ் (பூணூல்) சடங்கும் பூட்டென விழுந்த புதுமணவாழ்வும் மனதைப் புண்படுத்திய புன்மை நடப்புகள்! அரசவையிலே தன் கவிகேட்டு மனம்கன்றிய காந்திமதி நாதனைக் கண்டு கடையிதழில் எழுந்ததோ சிறு நகைப்பு; வருந்திய அவன் நிலைகண்டு கவிமாற்றி உரைத்தபோது அவையோர் கொண்டதோ ஆனந்தக்களிப்பு. அதனால் கிடைத்ததோ 'பாரதி' எனும் நாமச்சிறப்பு!

தந்தையை இழந்ததால் வாழ்வில் மீண்டும் வந்ததோ சலிப்பு; இதயத்திலோ பெருந்துயர் இருப்பு. காசி வந்துவிடு என்பதே அத்தையின் விருப்பு; அங்குக் கல்வி கற்றதால் சற்றே மன இளைப்பு. குலத்தார் கொண்ட சடங்குக் கொள்கைகளால் மனதில் எழுந்ததோ பெருந்துடிப்பு; உடன் வடிவில் முண்டாசுக் கவிஞனாய் புதுப்பிறப்பு! காசி விசுவநாதனை வணங்க வந்த எட்டையபுர மன்னர் அரசவைக் கவிஞராக வருக என விட்டார் ஓர் அழைப்பு; வந்த கவிக்கோ பணியில் மிகவே வெறுப்பு. பின் மதுரைப் பள்ளியில் தமிழாசிரியராய்ப் பொறுப்பு; அறியாமையில் இருப்பது மாணவச் செல்வங்கள் அல்ல மடிமை வாழ்வில் மண்டிக் கிடக்கும் மக்கள் கூட்டங்களே என்ற நினைப்பு. அதனால் சுதேசமித்திரனில் விழுந்தன சுதந்திர கருத்துக் குவிப்பு; பின் அரசியலில் ஆவேசக் குதிப்பு. அனலாய் எழுந்தன அடுக்கடுக்கான கவிதைப் படைப்பு. இதனால் ஆங்கிலேயர் கொண்டதோ பெருங்கொதிப்பு; அச்சமில்லா கவிஞரைப் பிடிக்கவோ ஆயிரம் சூழ்ச்சி வலைவிரிப்பு.

புதுவைக்குள் நண்பர்களால் நுழைப்பு; அங்கிருந்தபடியே நாளிதழ் களில் கருத்துப் பதிப்பு. பாண்டிச்சேரியில் பதுங்கி வாழ விரும்பாது கடலூரில் வைத்ததோ கால் மிதிப்பு; பிடித்த பிரிட்டிஷார் செய்ததோ சிறை நுழைப்பு; (சிறை) விடுதலைக்குப்பின் கிடைத்ததோ வாழ்வில் வறுமை அலைப்பு! திளைத்து வாழ்ந்திருந்த ம(ா)க்கள்(?) கவிமகனுக்கு திருக்கரம் நீட்டாதபோது திருவல்லிக்கேணிக் களிறு காட்டியதோ தன் திருவடி அணைப்பு; காலனையும் மதித்தழைத்த கவிமகன் வயிற்றில் எழுந்ததோ கடுந்தகிப்பு! அக்கினிக் குஞ்சாய் பிறந்த மகன் அடுத்துக்

கண்டதோ காற்றோடு கலப்பு. ஆம்...! ஈடில்லா கவிமகனுக்கு இறந்தபின் தான் கிட்டியது அழியாப்புகழ் நிலைப்பு. இதுவே ஞானக்குயிலோன் கண்ட வாழ்வியல் முடிப்பு (இத்தகையோரை எண்ணும்போதெல்லாம் ஏனோ எழுகின்றது மனஅரிப்பு; கண்விழிகளிலே வழிகிறது கரிப்புமிகு நீர் சுரப்பு! இறைவா...! இனியாவது நீங்குமா உடன் காக்க மறக்கும் உன் மறப்பு!)

**ஒருநிலைகண்ட திருநிலையோர்**

துன்பத்தையும், தூய வணக்கத்தையும் என்றும் தங்கள் நெஞ்சில் நீங்காது கடைப்பிடித்து வாழ்ந்த இச்சான்றோர்கள் இருவரும் எண்ணிய தெல்லாம் அனைத்துயிர்களின் அடிமையில்லா இன்ப வாழ்வைத்தான்! அப்பரோ தெய்வபக்தி வழி தேடினார். பாரதியோ தேசப்பற்றின் வழி நாடினார். இளவயதில் பெற்றோரை இழந்து, இருவருமே சென்று வாழ்ந்த மண்ணில் (பாடலிபுத்ரம், காசி) புலமைக்கு புத்துயிர் தேடிக் கொண்டனர். புறப்பாட்டுச் சென்ற இடமே திரும்பி வந்து புதுக்கொள்கைகள் விதைத்து புன்மைகள் அகல புதிய பாதை போட்டனர். மன்னர்கள் அழைத்து மதிப்புமிகு சீர்கள் செய்தபோதும் துச்சமென மதித்து தொண்டருக்குத் தொண்டராய் மாறினர்.

அப்பருக்கோ அடுத்த சமயங்கள் அணை போட்டன. அன்பன் பாரதிக்கோ குலச்சடங்கில் பிடிப்புக்கொண்ட கோணல் புத்திகாரர்களும், வாணிப கொள்ளையடிக்க வந்த கூட்டத்தாரும் குறுக்கே தடைபோட்டனர். எண்ணற்ற துன்பங்கள் கண்டபோதும் அச்சத்தைத் துறந்து இருவரும் சுயநலமில்லா பொதுநல நோக்கு சிந்தனைகளால் அவைகளைச் சிதறடித்தனர்.

**எல்லாமாய் வந்த இறை**

உறவுகளை இழந்து தவித்த மனதிற்கு, இறைவனே

''ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்
உடன் தோன்றினராய்''

என எல்லாமாய் வந்து உள்ளன்பு காட்டி உறவு சுகம் தந்தான் என்கிறார் அப்பர்.

பாரதியோ, கண்ணன் தனக்கு தந்தையாய், குழந்தையாய், காதலியாய், சீடனாய் வந்ததோடு,

''நண்பனாய் மந்திரியாய், நல்லாசிரியனுமாய்
பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனாய்''

வந்து உறவுகொண்டான்; உயிர்ப்பித்தான் என்கிறார்.

**பிரிவினை வேண்டாப் பேரருளாளர்கள்**

''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்''

என்று சாடி, ஒன்றாய் இருக்க முயல்வீர் என அப்பர் உரைக்க,

''சாதி இரண்டொழிய வேறில்லை யென்ற
தமிழ்மகள் சொல்லிய சொல் அமிழ்தமென்போம்
நீதி நெறியின்று பிறர்க்குதவும்
நேர்மையவர் மேலவர்; கீழவர் மற்றோர்''

என்பதோடு,

''எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர்''

எனப் பிரிவினை வாதத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கிறார் பாரதி!

''அங்கமெல்லாங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்து தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே''

புலையருக்கும் இறைநிலை கிட்டும் என நாவுக்கரசர் நவில, பாரதியோ

''பறையருக்கும் இங்குத் தீயர்
புலையருக்கும் விடுதலை''

எனச் சுதந்திர நிலை பிறப்பிக்கின்றார்.

**வேண்டாததும் வேண்டுவதும்**

''பொக்கம் பேசி பொழுது கழியாதே
......................................
நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே''

''நலந்தீங்கினும் உன்னை மறந்தறியேன்
உன்நாமம் எந்நாவில் மறந்தறியேன்''

எனப் பாடி, வீண்பேச்சு விடுத்து இறைநாமம் உரைத்தல் நலம் என்கிறார் அப்பர். பாரதியோ,

''தேடிச் சோறு நிதந்தின்று - பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி
வேடிகை மனிதரைப் போலே - நான்
வீழ்வேனென்று நினைத்தாயோ?''

என்று இறையிடம் கேட்பதோடு,

உய்யக் கொண்டு அருளவேண்டும் - அடி
உன்னைக் கோடிமுறை தொழுதேன்''

எனக் கூறி,

''சுதந்திரதேவி.... நின்னைத் தொழுதிடன் மறக்கிலேன்''

என்று பாடி, அருள்தரும் அன்னையை வணங்குகின்றார்.

**அஞ்சாமையால் விளைந்த அருட்பயன்**

மகேந்திர பல்லவன் ஏவலால் சமணர்கள் துன்புறுத்தியபோது நாவுக்கரசர் நெஞ்சம் நடுக்குறாது,

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்''

எனவும்,

''அஞ்சுவது யாது ஒன்றுமில்லை அஞ்சவருவது மில்லை''

என ஆளும் இறையாம் அரசனையும் பக்தி எனும் பேராண்மை கொண்டு எதிர்த்து நிற்கின்றார். பாரதியோ,

''பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம் பரி
பூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்''

என உரைப்பதோடு,

''அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லை
உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதினும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சம் என்பதில்லையே''

என்று அச்சத்தை வேரறுத்த ஆண்மை நாயகனாய் நிற்கின்றார்.

''தற்பரமாய் சதாசிவமாய்த் தானும் யானும்
ஆகின்ற தன்மையனை''

நள்ளாறா என நம்வினை நாசம் ஆகும் எனும் அப்பர், சிவனை நினைக்க

''எங்குமிலாதோர் இன்பம் வந்து எய்துமே''

என்று மனமகிழ்கின்றார்.

மகாகவியோ,

''யானே யாகி என்னலாற் பிறவாய்
யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்
யாதோ பொருளாம்'' ஆன இறைவா

''வேண்டா தனைத்தையும் நீக்கி
வேண்டிய தனைத்தும் அருள்வாய்'' என்பதோடு

''எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா! இறைவா!''

என இன்ப நிலை காணுகின்றார்.

**வாழ்வின் உச்சம்**

முன்னம் அறியாமையால் வாழ்வில் முரண்பட்டு இருந்தாலும் நல்லோர் நாளடைவில் தன்னிலை கண்டடைவர். அவ்வகையில் எப்போதும் நினையாதே இருட்டறையில் மலடு கறந்து வாழ்வில் இன்னல் கண்ட அப்பர், 'குறிக்கோள் இலாது' கெட்ட தனக்கு திருநல்லூர் சிவபெருமான் திருவடியைத் தலைமேல் வைத்து நல்லாறு காட்டி ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' வாழ்வின் உச்சநிலையாய் உணர வைத்தான் என ஓதுகின்றார்.

'ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள் உலகு இன்பக் கேணி' எனக் கண்டறிந்த பாரதியோ,

''நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்கு உழைத்தல்
ஊருக்கு உழைத்திடல் யோகம்''

என்று உரைத்ததோடு

''பயன் எண்ணாமல் உழைக்கச் சொன்னாள்
பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள்''

என்கிறார்.

ஆண்டுகள் பல கடந்து பிறந்தாலும் அப்பரின் புறவாழ்வையும் அகவாழ்வையும் அடியொற்றிப் பல நிலைகளில் பாரதி பீடு நடை போட்டிருக்கிறார் எனில் குற்றமாகுமா?

எத்துணை காலங்கள் ஆனாலும் சமயத்தாலும், சமுதாயத்தாலும் தனி ஒரு மனிதனுக்குத் தடைகள் எழுமேயானால் 'அப்பனாய்' வாழ்ந்து காட்டி மறைந்த அப்பரின் திருவடியே சரணாகும். அவர்தம் திருமொழிகளே துணையாகும்!

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்''

''என்பொனே யுன்னையல்லால் ஏதுநான் நினைவிலேனே''

நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!!

# 110. திருமந்திரத் தமிழும் தேவாரமும்

ப. அருள்நமச்சிவாயன், தஞ்சை.

ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழில் பாடிய அருளாளர்கள் திருமூலதேவர் அருளிய திருமந்திரத்திற்கும் அப்பரடிகள் அருளிய தேவாரத்திற்கும் உள்ள ஒப்புமையைக் கருதுவதே இக்கட்டுரையின் நோக்கம் ''நுண்மாண் நுழைபுலமிக்க கவிஞர்கள் செய்த இலக்கியங்களில் அக்கவிஞர்களுக்கு முன்னரும் சமகாலத்திலும் இருந்த சான்றோர்களின் சொல்லும் பொருளும் கலந்து வருதல் இயல்பே. இந்த நியாயப்படி அப்பரடிகளின் கருத்துக்கள் பல அவருக்கு முன்னிருந்தோர் பாடல் களிலும் காணப்படுகின்றன. (கு. நடேச கவுண்டர் ''அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்'', ப. 223) ''உயிரானது அரனருளில் சிவஞானத் தினாலே தன்னையும் உயிர்க்குயிராகிய இறைவனையும் காணுதல் வேண்டு மென்பதனை'' தன்னிற்றன்னை அறியும் தலைமகன், தன்னிற்றன்னை அறியத் தலைப்படும், தன்னிற்றன்னைச் சார்கிலனாகில் தன்னிற்றனையும் சார்தற்கரியவே. (திருமந்திரம்-2419) என்று திருமூலர் அருளிச் செய்துள்ளார். தன்னிற்றன்னையறியுந் தலைமகன். தன்னிற்றன்னை அறியிற்தலைப்படும். தன்னிற்றன்னையறிலிலனாயிடில், தன்னிற்றன்னையும் சார்தற்கரியனே'' எனவரும் திருக்குறுந்தொகையில் (5-97-29) அவ்வாறே எடுத்தாண்டுள்ளார். இங்ஙனம் அப்பரடிகள் திருமந்திரப் பொருளை எடுத்தாண்ட இடங்கள் இன்னும் பல உள்ளன. திருமந்திரத்திலும், திருநாவுக்கரசர் பதிகங்களிலும் அமைந்துள்ள ஒப்புமைப் பகுதிகளைத் தொகுத்து நோக்குதல் திருமுறைப் பனுவல்களின் பொருள் நலன்களை உள்ளவாறு அறிந்து கோடற்கு இன்றியமையாத தொன்றாகும்'' (க. வெள்ளைவாரணன் பன்னிரு திருமுறை வரலாறு, ப. 728-29) மேலும் சிலவற்றைக் காணலாம். ''தத்துவஞானம் தலைப்பட்டவர்க்கே, தத்துவஞானம் தலைப்படலாய் நிற்கும், தத்துவ ஞானத்துத் தானவனாகவே, தத்துவ ஞானானந்தான் தொடக்குமே'' (திருமந்திரம்-2380) ''தத்துவம் தலைகண்டறிவாரிலைத் தத்துவம் தலைகண்டவர் கண்டிலர், தத்துவம் தலை நின்றவர்க்கல்லது, தத்துவன் தண்புகலூரனே (5.46.7) ''புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு (திருமந்திரம்-1829)'' ''கற்றுக் கொள்வனவாயுள. நாவுள இட்டுக்கொள்வன பூவுள நீருள (5.91.6)''.

''காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும், பாலினுள் நெய்யும் பழத்தினுள் இரதமும், பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை, காவலன்

எங்கும் கலந்து நின்றானே'' (திருமந்திரம்-2639) ''பாலொருதேனும் பழத்தினுள் இரதமும்.....'' (திருமந்திரம்-2631) என்ற பாடலையும் வரியையும் உளங்கொண்ட அப்பரடிகள் ''கனியிலும் கட்டிபட்ட கரும்பினும்''.... என்று தொடங்கும் திருவிடைமருது குறுந்தொகையிலும் ''பாலில் நெய்யாம் பழத்தில் இரதமாம்.....'' என்ற திருமந்திரச் சொற்களையே திருக்கருகாவூர்த் திருத்தாண்டகம் முதல் பாசுரத்திலேயே எடுத்தாண்டிருப்பது எண்ணி மகிழத்தக்கது.

''ஊனத்திருள் நீக்கும் ஞானத்திரளாய் நின்ற பெருமான்'' "போரயிரமுடைப் பெருமான்" (திருமந்திரம் - 1815) என்றும் "பேராயிரமும் பிரான் திருநாமமும்'' (திருமந்திரம் - 1813) என்று போற்றும். அதனை அடியொற்றி அப்பரடிகள் "ஆயிரம்தாமரைபோலும்...... ஆயிரம் பேருகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே'' என்று 4-ஆம் திருமுறை காந்தார பண்ணிலமைந்த திருவாரூர்த் திருப்பதிகத்திலும் ''பேராயிரம் பரவிவானோரேத்தும் பெம்மானே....'' என்று திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருத்தாண்டகத்திலும் எடுத்தாண்டிருப்பது கருதத்தக்கது. மேற்குறித்த திருத்தாண்டகத்தில் ''மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி......'' என வரும் தொடர் "மந்திரமாவதும் மாமருந்தாவதும் தந்திரமாவதும் தானங்களாவதும்......" (திருமந்திரம் - 1604) என்ற திருமந்திரப் பாடலை நினைவூட்டுவன.

சிந்தையுட் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகிய இறைவனை அடிகள் ''என்னில் யாரும் எனக்கினியாரிலை என்னிலும் இனியான் ஒருவனுளன்" என்று திருஇன்னம்பர்த் திருக்குறுந்தொகையிலும் திருமறைக்காடு 6-ம் திருமுறையில் ''அம்மை பயக்கும்...... என நெஞ்சே உன்னில் இனியான் கண்டாய்......'' என்றருளியிருப்பன திருமந்திரம் ''என்னினும் என்னுயிராகிய இறைவனை.....'' (திருமந்திரம் - 2516) என்ற தொடர் நினைவூட்டும்.

''ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்று'' தன்னையாட் கொண்டதை அடிகள் ஆரூர்த் திருத்தாண்டகம் "ஏவணந்த சிலையால்..... ஆவணத்தால் என்றன்னை ஆட்கொண்டான்'' என்றும் ''ஆவணம் கொண்டெமை ஆள்வராயினும்.....'' என நமது ஆதிபரமாசாரியராகிய ஞானசம்பந்தப் பெருமான் அருளுவதை நோக்க நம்பியாரூரரை மட்டு மன்று மூவர் முதலிகளையும் இறைவன் ஆவணத்தால் ஆட்கொண்ட ருளியமை விளங்கும். திருமூல தேவநாயனாரும் இதற்கு விதிவிலக்கல்ல. (திருமந்திரம் - 1876) திருமூல தேவரின் முன்னோர்களையும் இறைவன் ஆட்கொண்டருளியதை ''என்தாயோடு என்னப்பன் ஏழேழ் பிறவியும் அன்றே சிவனுக்கெழுதிய ஆவணம் ஒன்றாயுலகம் படைத்தான் எழுதினான்...'' என்று உறுதி செய்கிறார்.

சிவனது நினைவின்றிச் சாத்திரமும், கோத்திரமும், குலமும் பயன்தரா என்பது திருமூல தேவரும், அடிகளும் கண்டருளிய உண்மை. இதனைத்

திருமந்திரம் - 1631-ஆம் பாசுரம் ''சாத்திரம் ஓதும் சதுர்களைவிட்டு நீர் மாத்திரைப்போது மறித்துளே நோக்குமின்....'' என்றருளியது. அடிகள் அதனை விளக்குமாற்றான் திருமாற்பேறு - திருக்குறுந்தொகையில் ''சாத்திரம் பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர் பாத்திரம் சிவமென்று பணிதிரேல். மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே'' என்று கூறியருளினர்.

''விறகில்தீயினன் பாலிற்படு நெய்போல்.....'' என்ற அப்பரடிகளின் தேவாரம் அனைவரும் அறிந்த ஒன்று. பொதுப்பதிக எண்கள் வரிசையில் தனிக்குறுந்தொகை என்ற தலைப்பில் வருவது. இதற்கு மூலமாய் அமைந்தது திருமூலரின்''... ''நெய்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்...'' என்பது திருமந்திரம் (2115) பாசுரமாகும்.

திருவாசகம் திருப்பொற்சுண்ணம் பாசுரம் - 12-ல் எங்கள் அப்பன், எம்பெருமான் இமவான் மகட்குத் தன்னுடைக்கேள்வன் மகன் தகப்பன், தமையன்... என்ற வரிகள் சித்தாந்தக் கருத்துடையன. இதனை சகலாகம பண்டிதர் அருணந்தி சிவாச்சாரியார் தம்முடைய சிவஞான சித்தியார் சுபக்கத்தில் ''சிவம் சக்திதனை ஈன்றும் சக்திதான் சிவத்தையீன்றும்....'' என்ற குறிப்பால் உணர்த்துவர். பொதுப்பதிக வரிசையில் தனிக்குறுந்தொகைத் திருப்பதிகம் முதல் பாசுரத்தில் அப்பரடிகள்...'' வாயிலானை மனோன்மணியைப் பெற்ற தாயினானைத் தழுவுமென் ஆவியே...'' என்றருளுவார். இதற்கெல்லாம் மூலமாயமைந்துள்ள திருமூலர் திருமந்திரம் (1178) ''வாயுமனமும் கடந்த மனோன்மணி, பேயுங்கணமும் பிறந்திட்ட பெண்பிள்ளை, ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத் தாயும், மகளும் நல்லதாரமுமாமே'' என்பதாகும்.

''என்னையறிந்திலேன் இத்தனை காலமும் என்னையறிந்தபின் ஏதும் அறிந்திலேன்'' (2366) என்ற திருமந்திரப் பாடலில் திளைத்த அப்பரடிகள் எண்ணத்தில் ''என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான் தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலேன் என்னைத் தன்னடியானென்றறிதலும், தன்னை நானும் பிராளென்றறிந்தேனே என்றருளினர். திருமுறைகளிலும், சாத்திரங்களிலும் வரும் தன் தான் என்பன இறைவனைக் குறிக்கும் சொற்கள். ''தானெனை முன்படைத்தான் என்பது நம்பியாரூரர் அருள்வாக்கு. அருட்கண்ணிலாதார்க்கரும் பொருள் தோன்றா, அருட்கண்ணுளோர்க்கெதிர்தோன்றும் அரனே'' என்பது திருமந்திரம் (பா. 1808) திருமுறை குறிப்பால் உணர்த்தியதை நம் போல்வாரும் உணரும் வண்ணம் அப்பர் சுவாமிகள் பொதுப் பதிகளங்களிலமைந்த வினாவிடைத் திருத்தாண்டகத்தில் மைப்படிந்த கண்ணாளும், தானும் கச்சி மயானந்தான் வார்சடையான் என்னினல்லான், ஒப்புடையனல்லன் ஓரூரனல்லன் ஓருவனில்லி, அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாக காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வணத்தான் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே என விளக்கினார். இத்தகைய கருத்துக்கள் விரிக்கிற் பெருகும்.

# 111. பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்

உ. அனுசுயா, சூரக்கோட்டை.

பாரத பூமி இயற்கை வளம் அதிகம் கொண்டது. அதனால்தான் நம் நாட்டில் பல்வேறு **இனம், சமயம், கலாச்சார** மக்கள் வாழ்கின்றார்கள். இந்த மக்களின் மனதில் பக்தி உணர்வை உண்டாக்கிய மூவர் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களுள் சிறப்பான இடத்தைப் பெறுவர் ''திருநாவுக்கரசர்'' என்றால் அது மிகையாகாது. அவர் அன்று பட்ட துயரங்களும் அவர் கைக்கொண்ட தொண்டு நெறியும்தான் இதற்குக் காரணம்.

இவர் இளமையில் சமணத்திலிருந்தாலும், பின்பு சைவத்திற்கு மாறினார். அன்று சமணர்கள் பலவகையான கொடுமைகளை மக்களுக்குப் புகட்டினார்கள். உதாரணமாக

'பெண்களுக்கு இப்பிறவியில் முக்தி என்பது கிடையாது, அவர்கள் முக்தி அடைய வேண்டும் என்றால் அவள் இப்பிறவியில் சமணத் துறவி களுக்குத் தொண்டுகள் பல செய்து அதன் விளைவாக அவள் அடுத்த பிறவியில் ஆணாகப் பிறந்து, பின்னர் முக்தி அடைவாள்' என்றனர்.

இதை எல்லாம் கேட்டு மக்கள் பெரும் துன்பம் அடைந்தார்கள். இந்தக் காலத்தில் தான் இதனை மாற்றும் எண்ணத்துடன் நாவுக்கரசர் தோன்றினார்.

இவ்வுலக வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கும் கொள்கைகளை வெறுத்தார். இறைவனுக்கு உருவம் உண்டு, இறைவன் முன் ஆணும், பெண்ணும் சமம், இறைவன்பால் பக்தி செலுத்துபவர் எவராயினும் எக்குலத்தவர், எவ்வினத்தவர் ஆயினும் முக்தி பெற முடியும். இறைவன் ஆணும், பெண்ணுமாகத்தான் இருக்கிறான் எனும் பக்தி இயக்கக் கொள்கை களில் தலைநின்று சைவத்தைப் போற்றி வளர்ப்பாரானார்.

## உருவ வழிபாடு

தமிழகத்தே தோன்றிய பக்தி இயக்கம் உருவ வழிபாட்டை வலியுறுத்தியது. உருவ வழிபாட்டிலும், தனிமனித வழிபாடு, கூட்டு வழிபாடு, திருக்கோயில் வழிபாடு, ஆன்மார்த்தம் பரார்த்தம் ஆகிய வற்றைச் சுட்டி வளர்த்தன.

அவ்வகையில் சிவபெருமானுக்கு உருவம் காணப்பட்டது. தியான சுலோகங்கள், சிற்ப சாத்திர நூல்கள், பிற தோத்திர நூல்களில் சிவ வடிவங்களைப் பற்றி பலவாறாகக் காணலாம்.

சிவன் நான்கு கரங்களுடன், சடாமுடி தரித்தவர், அவரது கையில் மழு, மான் காணப்படும். அவரது இடையில் புலித்தோல் உண்டு. அவரது சடையிலோ கொன்றை, ஊமத்தை மலர், நிலா, கங்கை, பாம்பு, கொக்கிறகு, கபாலம் போன்றன அணிசெய்யும், கழுத்தில் பாம்பு; கைகளில் சூலம்; உடுக்கை இருக்கும் குறிப்பாக, சடைமுடியும், அதில் அணியப்பெற்ற கங்கையும், நிலவும் அவரது அடிப்படை அடையாளங்கள் எனலாம். எனவே சிவனை நினைக்கும்போதெல்லாம் அவர் தலையில் உள்ள கங்கைதான் அனைவருக்கும் நினைவுக்கு வரும்.

**கங்கை என்பவள் யார்**

கங்கை என்பவள் புண்ணிய நதியாக உருவானவள், இவள் வெண்ணிறம் உடையவள், வலது கையில் கருநெய்தல், இடது கையில் பூர்ண கும்பமும், முதலை வாகனமுமாக வருபவள். இமய வேந்தனின் குமரியாக இவளைப் புராணங்கள் பேசுகின்றன.

அக்கினியால் வகிக்கப்பட்ட சிவ வீரியத்தைச் சரவணத்தில் வைத்தவள். நதிகளிலே வற்றாத ஜீவநதியாகவும், நதிகளின் இராணியாகவும் சிறப்புற்றுத் திகழ்பவள்.

சுவர்க்கத்தில் மந்தாகினியெனவும், பூமியில் கங்கை எனவும், பாதாளத்தில் போகவதியெனவும் பெயர் பெற்றவள். இவள் உலகத்திலுள்ள மூன்றரைக் கோடி தீர்த்தபலனும் தரவல்லவள். இது போன்று இன்னும் பல சிறப்புகளைக் கொண்டவள்.

சூரிய வம்சத்தில் பிறந்த **பகீரதச் சக்கரவர்த்தி** தன்பாட்டன் முதலியவரின் சரிதங்களைக் கேட்கையில் பிதுர்க்கள் அநேகர் கபிலர் கோபத்திற்பட்டுச் சாம்பலாய் இருந்து அவர்களின் ஆத்மா சாந்தி அடையாததால், அவர்கள் நரகவேதனைப்படுதல் அறிந்து அதைக் கரைக்கும் பொருட்டு அநேக ஆண்டுகள் **பிரமன், கங்கை, சிவமூர்த்தி** முதலியோரை எண்ணித் தவம் புரிந்து சிவமூர்த்தியால் கங்கையின் **'ஏழு துளிகளைப் பூமியில்'** வரப் பெற்றனன்.

அப்படிப்பட்ட அந்த கங்கை பல பிரிவுகளாகப் பிரிகின்றது. அவை **கலாந்தி, பவானி, நளினி** என மூன்று பிரிவுகளாகக் கிழக்கிலும்; **சுசக்ஷீ, சீதை, சிந்து** என்று மேற்கிலும்,

**''அலகநந்தை''** என பகீரதன் பின்னும் வந்தனள். இவள் பகீரதன் பின்வருமிடத்துச் சந்துமுனியின் ஆசிரமவழி வருதலை அறிந்த முனிவர்

கோபித்து அதனை ஆசமனஞ் செய்தார். அதனால் கங்கை மறைந்தது கண்டு பகீரதன் தன் குறைகூறக் கேட்டு அவர் காதின் வழி வெளிவிடச் 'சாநவி'யென்று பெயரடைந்த பின்னர் சகரர் எலும்பில் விழுந்து அவர்களுக்கு நற்கதி தந்தவள்.

பார்வதி தேவி விளையாட்டாக சிவமூர்த்தியின் கண்களை மூட அக்கரத்தின் வழிப் பெருகிய நீர் வெள்ளங்கொள்ள அதைச் சிவமூர்த்தி தரித்தனர் என்றும் கூறுவர்.

விஷ்ணு திரிவிக்கிரம அவதாரங்கொண்டு மூவுலகு அளந்தபோது திருவடி சுவர்க்கமடைய அண்ட முடைத்து ஆகாய கங்கை கால்வழி ஒழுகியதாலுண்டானது எனவும்; அத்திருவடி சத்திய உலகம் சென்றபோது பிரமன் தன் தந்தையின் திருவடியெனத் தம் கமண்டல நீரால் அபிஷேகிக்க அது நதியாயிற்றெனவுங் கூறுவர்.

இவ்வாறு கங்கையைப் பற்றிய புராண வரலாறுகள் பலவாகும், என்றாலும் பகீரதன் தவத்திற்கு இரங்கி வானிலிருந்து வழிந்த கங்கையின் வேகத்தைப் பூமிதாங்காது என்று தடுத்து தம் சடையில் தரித்தபின் மிதமாக விழுமாறு செய்தவர் சிவபெருமான் என்பதே திரண்ட வரலாறாகும்.

எனவே சிவபெருமான் தலையில் எப்போதும் கங்கை வழிந்து கொண்டே இருக்கிறது என்பது புராணங்களின் சாரமாகும்.

அத்திரி முனிவர் தவஞ்செய்கையில் தானும் கூடச் சிவபூசையி லிருந்து கணவற்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து வந்தாள். இவ்வாறு 54 வருடங்கள் முடியவும், மழையிலாது பிராணிகள் வருந்துகையில் முனிவர் மனைவியிடம் தண்ணீர் கொண்டுவா என்றார்; அதன் காரணமாக அனுசூயை வேண்டுகோளுக்கு இணங்க பூமிக்கு வந்தவள் என்றும் புராணங்கள் கூறுகின்றன.



இவ்வாறாக, வானில் இருந்து அதிவேகமாக பூமிக்கு வந்த கங்கையைத் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க சிவபெருமான் தன் சிவந்த சடைமுடியில் அணிந்து அதன் வேகத்தினைக் குறைக்கும் வண்ணம் தன் இரண்டு சடைக்கற்றை முடியினால் அதனைத் தாங்கினார். இவள் நதிகளுக்கெல்லாம் தலையாய **கங்கை** அல்லவா ஆதலின் சிவபெருமான் தலையில் சூடி மகிழ்கின்றார்.

இத்தகு சிறப்பு வாய்ந்த கங்கையை, திருநாவுக்கரசர் சிவவடிவத்தைச் சித்திரிக்கும் போதெல்லாம் சிறப்பித்துக் காட்டித் தம் தேவாரப் பாக்களைப் படைத்துள்ளார்.

இவ்வாறாக, சிவபெருமான் கங்கை நதியைச் சூடியதில் பெரிதும் மகிழ்ந்து திளைத்தவர் என்பதைத் திருநாவுக்கரசரின் சமகாலத்தில் தோன்றிய பல்லவ சிற்பத்தையும் ஆங்குள்ள கவிதைச் சிறப்பையும் திருச்சி மலைக்கோட்டையில் உள்ள சிற்பத்தின் மூலம் நாம் உணரலாம்.

**சிராப்பள்ளி சிற்பமும் சிறப்பும்**

> ''ஐயமில் அமரர் ஏத்த ஆயிரம் முகமதாகி
> வையக நெளியப் பாய்வான் வந்திழிகங்கை
> யென்னும் தையலைச் சடையில் ஏற்றார்''

இந்த குன்றில் உள்ள குடைவரைக் கோயில் **மகேந்திரவர்மன்** சைவ சமயத்தின் மீது கொண்ட பற்றினைக் காட்டுவதாக அமைகின்றது.

திருச்சிராப்பள்ளிக் குன்றின் நடுவில் குடைந்து அமைத்த சிவன் கோயில் சிறந்த வேலைப்பாடு கொண்டது. இதன் மேல்புறச் சுவரில் ஏழடிச் சதுரமுள்ள இடத்தில் கண்ணையும், கருத்தினையும் கவரும் வகையில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இந்தச் சிற்பம் சிவபெருமானை **'கங்காதரன்'** என்ற வேறு பெயரால் எடுத்துக் காட்டுகின்றது. அதன் முக ஒளியும் நிற்கும் நிலையும் காணத் தக்கவை. கங்கை அணிந்த சிவபெருமானே எதிரில் நிற்பது போன்ற காட்சியை அச்சிலை சிவபெருமானது சடையிலிருந்து விழும் கங்கையை தன் சடைமுடி இரண்டால் வலக்கையில் தாங்கியும், பூணூலாகப் போட்டுள்ள பாம்பின் தலையைப் பிறிதொரு வலக்கையால் பிடித்தும், மற்றோர் இடக்கையை இடுப்பில் வைத்தும் நிற்கின்ற காட்சி கண்டுகளிக்கத் தக்கதாகும்.

இச்சிலையின் வலக்காலின் கீழ் முயலகனைக் குறிக்கும் சிறிய கற்சிலை ஒன்று இருக்கிறது. சிவனைச் சுற்றிலும் அடியார் நால்வர் வணங்குதல் போலவும், மேலே யாழோர் இருவரும் சிறிய மனிதன் ஒருவனும் மிதத்தல் போலவும் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலை

**சத்யசந்தன், சத்குமல்லன், குணபரன்** என்ற பல விருதுப் பெயர்களைப் பூண்ட அரசன் அமைத்தான் என்றும் இக்கல்வெட்டு கூறுகின்றது.

**''பகீரதற்கா வானோர் வேண்டப்**
**பரந்திழியும் புனற்கங்கை பணிபோல்லாங்குச் செறித்தானைத்''**

இந்த கற்சிலை பகீரதனின் வேண்டுகோளுக்கிணங்க இறைவன் கங்கை மித வேகத்துடன் பூமியில் விட்டதையும்,

திருநாவுக்கரசரின் பக்தியினால் சைவனாக மாறிய மகேந்திரப் பல்லவன் அந்தச் சிலையை மிகவும் நேர்த்தியாகவும், இறைவனை நேரில் காட்சி அளிப்பது போன்றும் உருவ அமைப்பினையும் அழகாக சித்திரித்துள்ளான்.

இறைவன் ஏற்கெனவே **''நதிப்பிரியன்''**, இந்தப் பகுதியில் ஓடும் காவிரியானவள் தோட்டங்களையும், விரும்பத்தக்க குணங்களையும் உடையவள்; இவள் மீது சிவபெருமான் அன்பு கொண்டு இவளையும் தலையில் சூடி விடுவாரோ! என்ற ஐயத்துடன் அந்த மலைமகள் சிவபெருமானிடத்து இடைவிடாது **'அவள் பல்லவனது காதலி'** என்று தொடர்ந்து கூறிக்கொண்டே இருந்தாள்.

என்ற சுவைமிக்க செய்தியும் இக்குடைவரைக் கோயில் உள்ள கல்வெட்டில் காணப்படுகின்றது.

**திருநாவுக்கரசரின் கங்கை வருணனை**

**'சுழற்கங்கை சடையில் வைத்தவர்'**

**'சுழியுலாம் வருகங்கை'**

கங்கை நீரானது அது அடித்து வரும் வேகத்தினால் இடை இடையே பள்ளத்தில் பட்டு சுழியாகவும் வருகின்ற விதம் சிறந்ததாக கூறுகின்றார்.

**''நளிர் கங்கை தங்கு முடியர்''**

குளிர்ச்சி பொருந்திய கங்கையைத் தலையில் அணிந்ததால்தான் இவ்வுலகம் இன்றும் குளிர்ச்சியுடன் திகழ்கின்றது என்றார்.

**'ஒளிவளர் கங்கை தங்கும்'**

கங்கை நீரின் ஒளியினால் அவர் சடைமுடியானது பொன்நிறமுடையதாய் இறைவன் முடி ஒளிவீசுகின்றது.

**''மலை மட மங்கையோடும் வடகங்கை நங்கை''**

இறைவன் மலைமகளாகிய உமாதேவியை இடையில் வைத்துள்ளார். ஆனால் நதிமகளாகிய கங்கையைத் தலையில் தரித்துக் காட்சி தருகிறார்.

**''முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ளநீர்''**

இளமையான கதிர்களையுடைய இளம் சந்திரனையும் மூழ்கும் அளவிற்கு திகழ்கின்ற வெள்ளநீர் போலத் திகழ்கின்றது.

**'விரித்தார் சடைமேல் விரிபுனல் கங்கை'**

விரிந்து விழும் நீரினை ஒரே அளவாக பூமியில் விழ வைத்தவர்.

**'கரும்புகொப் பளித்த கங்கை'**

கரும்புச் சாற்றினைப் போன்று மிகவும் சுவையுடையதாகிய ஒரு தெய்வீக தீர்த்தம் என்றும்,

**''தீர்த்தமும் சடையில் வைத்தார்''**

என்றும் அதன் தீர்த்தச் சிறப்புடன் கூறுகிறார். பொதுவாக நீர்கள் என்றால் அதன் தன்மைகள் சிறிது நாளில் வீணாகிவிடும். ஆனால் இந்த தீர்த்த மானது பல வருடங்களும் பாங்குடன் தீர்த்தமாக திகழ்வது.

**''பெய்புனற் கங்கை தன்னை''**

**''அலைபுனல் கங்கை''**

இவை என்றும் வற்றாத ஜீவ நதியாகவும், அலைகளோடு என்றும் பெருகா வருகின்றவள் கங்கை என்றும் அதன் உயிர்த்துடிப்பைக் காட்டுகிறார்.

**''ஆறுடைச் சடையினானை''**

என்றும்,

**'வெள்ளநீர்ச் சடையர்'**

**'தெண்நீர்க் கங்கை'**

என்றும் பாடுவதிலிருந்து, கங்கை என்பவள் வெண்ணிறமுடையவள், என்பதைக் காட்டுகின்றது. இதில் எத்தனை மாசுகள் கலந்தாலும் அது தன்னுடைய வெண்மைத் தன்மையை என்றும் இழக்காது.

**'நீரார் கங்கை'**

தமிழ்நாட்டில் சிறப்பு வாய்ந்த காவிரியும் கூட வற்றிவிடும், ஆனால் இறைவனின் திருமுடியில் திகழும் கங்கை என்றும் வற்றாமல் நீரால் சூழப்பட்டு என்றும் உலகம் சுற்றுவாள் இந்த நங்கை.

**'நில்லாத நீர்சடை மேல் நிற்பித் தானை',**

'ஓரிடத்தில் நிற்காத பள்ளத்தை நோக்கிச் செல்லும் தன்மையுடைய கங்கையைச் சடைமுடிமேல் தரித்து நிறுத்தியவர் என்றும் அதன் ஓட்டத்தைக் காட்டுகிறார்.

**'சந்திரனை மாகங்கை திசையால் மோதச்'**

சந்திரனைப் பெருமையுடைய இக்கங்கை அலைகள் மோதுமாறு சடாமகுடத்தில் பொருத்திய இறைவன் என்றார். இவ்வாறாக, திருநாவுக்கரசர் இறைவனின் திருமுடியில் இருக்கும் கங்கையை வாழ்த்தியிருக்கின்றார் என்றால், அவர் கங்கைமாட்டுக் கொண்ட ஈடுபாடு தெள்ளிதின் விளங்கும்.

நாவுக்கரசர் கங்கையை, சுழியுலாம் வருகங்கை, நளிர்கங்கை, ஒளிவளர் கங்கை, வெள்ளநீர் கங்கை, மதிகங்கை, விரிபுனல் கங்கை, பெய்புனற் கங்கை, அலைபுனல் கங்கை, தீர்த்தமாம் கங்கை, பூங்கங்கை, ஈண்டொளிசேர் கங்கை, ஒலிகங்கை, பெருக்காறு, வான்நீர்க் கங்கை, மணிக்கங்கை, நிறைகங்கை எனப் பலவாறு புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

இறைவன் என்றும் அன்பு உள்ளம் கொண்டவர். அவருடைய பாதத்தில் நீயே துணை என்று சரணடைந்தால் அவர் மனதார மக்களை ஏற்பவர். அதனால்தான் திருநாவுக்கரசருக்கு சூலையைத் தந்து ஆட்கொண்டு அவரை அடியவராக ஏற்றார்!

பின்னர் அனைத்து சிவனடியார்களும் இறைவனுக்கும், அடியார் களுக்கும் தொண்டு செய்து வாழ்வதையே நோக்கமாகக் கொண்டார். அதிலும் இவர் இறைவனின் கோயில்களையும் **உழவாரம்** கொண்டு தூய்மை செய்தார்.

தொண்டு நெறிக்காகவே பிறந்து, வாழ்ந்து, மறைந்தவர் திருநாவுக்கரசர். இவர் வழியில் நாமும் சென்று மனதார இறைவனையும், அடியவர் களையும், பெரியவர்களையும் மதித்து அன்புடனும், பண்புடனும் நடப்பதை இவர் மூலம் நாம் உணரலாம்.

இறைவனிடம் மனதாரச் சரணடைபவர்களை இறைவன் என்றும் கைவிட மாட்டான். அவரிடம் சென்றது எதுவும் வளரும், மகிழ்ச்சி தரும், துன்பம் துடைக்கும் என்பதும் எதுவும் தேயாது என்பதும் இதன் மூலம் நாம் உணரும் தத்துவமாகும். அவரிடம் சென்ற பாவங்கள் மட்டுமே கரையும், தேயும். இதுதான் நம் கங்கைக்காட்சி உணர்த்தும் நம்பிக்கை என்றால் அது மிகையாகாது.

வாழ்க கங்கை, வளர்க திருநாவுக்கரசரின் பக்திச் சிறப்பு.

# 112. வளர்மதி வைத்த வார்சடையன்

இரா. வளர்மதி, திருப்பத்தூர்.

பக்தி இலக்கியம் 7,8,9-ம் நூற்றாண்டுகளில் செழிப்பாக வளர்ந்தது. அதற்கு முன்பு இருந்த சமண, பௌத்த சமயங்கள் துறவற நிலையை வலியுறுத்தியதால் அவற்றை மக்கள் வெறுத்து, சைவ, வைணவ சமயங்களை நாடி வந்தனர். அச்சமயத்தில் உருவ வழிபாடு சிறப்பு நிலையைப் பெற்றது. இறைவனுக்குத் தொண்டு செய்வதை அடியவர்களின் தொண்டாகவும் எண்ணினர்.

இவ்வாறாக இறைவனுக்கும், மனித சமுதாயத்துக்குமாகத் தொண்டு செய்து வாழ்ந்தவர்களில் ஒருவர் திருநாவுக்கரசர். இவர் சிவபெருமானின் தலையில் இருக்கும் நிலவை எவ்வாறெல்லாம் வர்ணித்துள்ளார் என்பதை விளக்க இக்கட்டுரை முனைகிறது.

**சிவனார் சடை**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் அனைவருமே சிவபெருமான் தலையில் அணிந்துள்ள பாம்பு, கொன்றை மலர், ஊமத்தம்பூ, கங்கை, நிலா, கொக்கிறகு, கபாலம் போன்றவற்றை வர்ணனை செய்துள்ளார்கள். திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் நிலவை மிகவும் சிறப்பாக வர்ணித்துள்ளார். அதற்குக் காரணம் நிலவு குளர்ச்சி பொருந்திய தாகவும், ஒளிமிக்கதாகவும், பார்ப்பவர் மனதைக் கவரக் கூடியதாகவும் இருப்பதால் பலவாறு வர்ணித்துள்ளார்.

உருவ வழிபாடு தோன்றிய பின்னர்தான் பக்தி இயக்கம் நல்ல வளர்ச்சி நிலையை அடைந்தது. சிவபெருமான் ஒவ்வொரு உறுப்பிலும் ஒவ்வொரு அணிகலனை அணிந்துள்ளார். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறப்புத் தன்மை பெற்றதாகும். ஒவ்வொரு புராண கதையை வலியுறுத்துவன. அதை திருநாவுக்கரசர் மிகச் சிறப்பாக எடுத்துரைக்கிறார்.

இலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் நிலவு பற்றிய செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. குறிப்பாக் சிவபெருமானின் தலையில் இருக்கும் நிலவு பற்றியே அதிக செய்திகள் காணப்படுகின்றன. சிவபெருமான் வடிவங்களைக் கூறும் சிற்பசாத்திரம், தியான சுலோகங்கள், ஸ்ரீதத்வநிதி ஆகமங்கள் போன்றன சிவ வடிவம் பற்றியும் குறிப்பாக அவர்தம் சடையில் உள்ள நிலவு பற்றியும் கூறுகின்றன.

**சந்திரன் வரலாறு**

சந்திரன் விஷ்ணுமூர்த்தியின் திருமார்பில் பிறந்தவன் என்றும், திருப்பாற்கடல் கடைகையில் பிறந்தவன் என்றும் கூறுவர்.

அத்திரிக்கும் அநுசூயைக்கும் பிறந்தவன் என்றும் கூறுவர். அத்திரி தவம்புரிய அவன் வீரியம் மேலெழுந்து கண்வழி ஒழுகிற்று. அதை பிரமன் திரட்டி விமானத்திலிட அது உயிர் பெற்றது. அதனைச் சோமன் (சந்திரன்) என்றனர். இதில் சிந்திய துளிகள் பயிர்களாயின. இச்சோமன் சிவமூர்த்தியை எண்ணித் தவம் புரிந்து கிரகபதமும் அந்தணர், பயிர் முதலியவைகளுக்குத் தலைமையும் சிவமூர்த்திக்குக் கண்ணான அணியாகவும் வரம் பெற்றனன் எனக் காசிகாண்டம் கூறுகிறது.

தக்ஷன் பெண்கள் இருபத்தெழுவரை மணந்தான் சந்திரன். அவர் களிடத்து ஒருமித்து ஆசை வைக்காது உரோகிணிடம் மாத்திரம் அதிகம் காதல் கொண்டான். இதையறிந்த மற்றைய பெண்கள் தந்தையிடம் குறைகூறத் தக்ஷன் சந்திரனிடம் முறையாகக் கூறினார். அதை அவர் கேட்காததால் ‘உன்னுடைய அழகால் தானே ஆணவம் கொள்கிறாய். அதனால் உன்னுடைய அழகு குறையட்டும் என்று, தக்ஷன் க்ஷயரோகம் என்ற நோயைக் கொடுத்துச் சாபம் அளிக்கிறார்.

பின்னர் சந்திரன் தன்நோய் தீரும் வகையறியாது தவித்துத் துன்புற்றான். அவன் கலைகள் தேய்ந்து ஒளி குன்றின. இறுதியில் சிவபெருமானைச் சரணடைகிறான் சந்திரன். தக்ஷன் தந்த சாபம் என்னவென்றால், ‘‘சந்திரன் தேய்ந்து போய் அழிய வேண்டும்’’ என்பதாகும்.

சந்திரன் முழுவதும் தேய்வதற்கு முன்பு இறைவன், அவனுடைய வேண்டுகோளின்படி தேயும் பிறையைத் தலையில் எடுத்துச் சூடிக் கொள்கிறார். அதனால் அச்சந்திரனின் நோய் தடுக்கப்பெற்றது.

சிவசன்னிதானத்து நாரதர் கொணர்ந்து கொடுத்த கனியைப் பிரமன் கந்தமூர்த்திக்குக் கொடுக்க வேண்டுமெனக் கணபதி அவரைக் கோபிக்கையில் சந்திரன் விநாயகரைக் கண்டு நகைத்ததால் விநாயகரால் ஒளியிழக்கவும், சண்டாள தவமும் பெற்று மீண்டும் அவரால் அச்சாபம் வருஷத்து ஒரு நாளில் அடைய வரம் பெற்றான் சந்திரன். அது ஆவணி மாதம் பூர்வபக்ஷ சதுர்த்தியாம். இக்காலத்தில் சந்திரனைக் கண்டோர் சண்டாள தவமடையவர். ஆகையால் அது நீங்கக் கணபதியைப் பூசிப்போர் இஷ்டசித்திப் பெறுவர்.

சந்திரன் திருப்பாற்கடல் கடைகையில் தோன்றியவன் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

இராகு கேதுக்களின் வஞ்ச உருவத்தை மோஹினி உருக்கொண்ட திருமாலுக்குக் காட்டினமையால் அவரால் பகைமை பெற்று விழுங்கப் பெற்றவன் சந்திரன் என்றும் கூறுவர்.

சந்திரன் அத்திரியிடம் பிறந்தபோது இவனுடன் பிறந்தார் தத்தாத்திரேயன், துருவாசன் என்பவர்கள் ஆவர்.

சந்திரனைச் சிவமூர்த்தியின் அஷ்டமூர்த்தங்களில் ஒன்றாகக் கூறுவர். இவனுக்குக் கலைஞான பாதன் என்ற ஒரு குமரன் உண்டு. அவன் நற்குணமும், வெண்ணிறமும் தென்கிழக்கும் இடமாக உடையவன்.

இவ்வாறு சந்திரனின் வரலாறு பலவாறாகக் கூறப்படுகிறது.

**இறைவன் சூடியிருக்கும் பிறையின் சிறப்பு**

இறைவன் தேய்ந்த மதியை எடுத்துத்தான் தலையில் சூடிக் கொள்கிறார். பின்பு அது வளரத் தொடங்குகிறது.

சிவபெருமான் பிறையை எடுத்து சூடியதற்கு காரணம் என்ன வென்றால் உலக உயிர்கள் வாழ வேண்டுமென்றும், பயிர்கள் செழித்து வளர வேண்டும் என்பதற்காகவும் தன்னைச் சரணடைந்தவர்கள் துன்பப்படாமல் வாழ வேண்டும் என்பதற்காகவும் அருள்நோக்குடன் பிறையைச் சூடினார்.

அவர் தலையில் சூடியவுடன் வளர ஆரம்பிக்கின்றது. நாவுக்கரசரும் தம்முடைய பதிகத்தில் சந்திரன் வளரும் நிலையைத்தான் சுட்டுகிறார். திருவையாறு பதிகம் முழுவதும் வளர்கின்ற பிறையைப் பற்றித்தான் பாடியிருக்கிறார். இவருடைய் பிறை பற்றியச் சிந்தனை மிகவும் உயர்வுடையதாகும், சிறப்பு வாய்ந்ததும் ஆகும்.

**கவிஞர்களும் சந்திரனும்**

நிலவு பற்றி அனைத்துக் கவிஞர்களுமே மிக அழகாகப் பாடியுள்ளார்கள். நிலவைப் பிற பொருளுடனும் ஒப்பிட்டும் கூறியுள்ளார்கள். சங்ககாலம் முதலாகப் பாரதியார், பாரதிதாசன் போன்ற இக்காலக் கவிஞர்கள் வரை நிலவை வர்ணனை செய்து பலவாறாகச் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

அனைவருமே நிலவைப் பற்றி உயர்வாகக் கூறியிருக்கிறார்கள் என்றால் இந்த நிலவு எவ்வளவு மதிப்பு வாய்ந்தது என்பதை நம்மால் அறிந்துக்கொள்ள முடிகிறது. இவ்வுலகத்தில் உள்ளவர்களில் நிலவை விரும்பாதவர்கள் என்று யாரும் இருக்க முடியாது.

நிலவுக்கு நிலா, சந்திரன், பிறை, மதி, சோமன், அமிர்தகிரன், சசாங்கன் போன்ற பலபெயர்கள் உண்டு.

**நாவுக்கரசர்**

நாவுக்கரசர் ஒரே பொருளில் பல சொற்களைக் கொண்டு நிலவை வர்ணனை செய்கிறார். அவர் வர்ணனை பின்வருமாறு ஒளி திகழும் சந்திரன்,

**''சுண்ணவெண் சந்தனச் சாந்தும்**
**சுடர்த்திங்கட் சூளாமணியும்''**

இங்கே ஒளிதரும் சந்திரன் என்று அவர் கூறுகிறார்.

**''சுடர்த்திங்கட் கண்ணி யுடையார் போலும்''**

**''போழிளங் கண்ணியி னானைப்''**

ஒளி திகழும் பிறைச்சந்திரன் என்றும்,

**''கடிமதிக் கண்ணியி னானைக்''**

நல்லொளியுடன் விளங்கும் பிறைச்சந்திரன் என்றும் வர்ணனை செய்கிறார்.

**''கதிர்முகம் சடையில் வைத்தார்**
**கழிப்பாலைச் சேர்ப்ப னாரே''**

ஒளியைத் தனது தண்மையான கதிர்களால் வழங்கும் பிறைச்சந்திரன்.

**''படர்சடை மேல் ஒளிதிகழ்ப் பனிவெண்டிங்கள்''**

ஒளிவிளங்கும் குளிர்ச்சி பொருந்திய வெண்திங்கள்

**''சோதிமதி கலை தொலையத் தக்கன் எச்சன்''**

**''சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றனன்''**

சுடர்விட்டு ஒளிரும் திங்கள்.

**''கதிர்மதி சேர் சென்னியனே கால் காலா''**

**''வெள்ளி மிளிர் பிறைமுடிமேற் சூடிகண்டாய்''**

**அழகிய சந்திரன்**

சந்திரன் அழகுடையவன் என்பதனை,

**''மாதர்ப் பிறைக் கண்ணி யானை''**

அழகிய பிறைச்சந்திரனைத் தனது சடையில் இறைவன் வார்கோலத்தில் இருந்த செந்நிறமுடைய அவருடைய சடையின் முன்னால் சூட்டி அழகாக நிலவைப் பொதிந்துள்ளார்.

தக்கனால் தேய்ந்து அழியுமாறு சாபம் பெற்ற சந்திரன் ஈசனைச் சரணடைந்து அழகு பெற்ற சிறப்பானது ''மாதர்ப்பிறை'' எனப் போற்றப் பட்டது.

**வெண்மையான நிலவு**

நிலவு வெண்மை நிறங்கொண்டு ஒளி வீசுவது. ஆதலின்,

''சந்தவெண் திங்க ளணிந்தான் தன்னைத்''

என்றும்,

''செஞ்சடை மேல் வெண்மதியச் சேர்த்தினானைக்''

என்றும்,

''சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி''

சென்னியின் மீது வெண்மையான பிறைச் சந்திரனை இறைவன் சூடியுள்ளார்.

''மருப்பனைய வெண்மதியக் கண்ணி யாரும்''

யானையின் தந்தம் போன்று வளைந்து மேவும் வெண்மையான சந்திரன்.

''விண்ணிலங்கு வெண்மதியக் கண்ணியாரும்''

''முகிவெண் திங்கள்''

''யொற்றை வெண்பிறை காண்''

எனப் பலவாறு சித்திரித்துள்ளார்.

**குளிர்ச்சி பொருந்திய சந்திரன்**

சூரியன் வெம்மையானவன். அவனுக்கு மாறுபட்டு நிற்கும் சந்திரனோ குளிர்ந்தவன், குளிர்ச்சியைச் செய்பவன். இதனைப் பல பாடல்களில் திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

''தண்மதிக் கண்ணியி னானைத்''

''திங்கள்மதி கண்ணி யானைத்''

''பனிமதியஞ் சடையானைப் புனிதன் தன்னை''

**இளமையுடைய சந்திரன்**

''முற்பிறைக் கண்ணி யினானை''

''முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ளநீர்''

''முளைத்த வெண்பிறை பொய்சடையுடை''

''பைதற் பிறையோடு பாம்புடன்''

''முற்றாத பால்மதியஞ் சூடி னானை''

''முற்றா மதிச்சடையார் மூவரானார்''

''முளைத் திங்கள் சூடிமுந் நூலும் பூண்டு''

''பிள்ளையிற் பட்டபிறை முடியீர் மறையாத வல்லீர்''

''வானத் திளந்திங்கட் கண்ணி தன்மை''

''மூவா மதிசூடி யென்றேன் நானே''

''முடிகொண்டார் முளையிள வெண் டிங்களோடு
மூசுமிள நாகமுட னாகக் கொண்டார்''

போன்ற வரிகளில் இளமையான சந்திரன் என்று நாவுக்கரசர் கூறுகிறார்.

**வளர்கின்ற சந்திரன்**

''வளர்மதிக் கண்ணியி னானை''

''வளர்மதியஞ் சடைக்கணிந்து மானோர் நோக்கு''

வளரும் சந்திரனைச் சடையில் அணிந்து கங்கையானவள் உடன் அமர்ந்து விளங்க அமரர்கள் வணங்கி ஏத்துமாறு நடனம் புரிபவர்.

''வளர் சடைமேல் மதியானை மழையா யெங்கும்''

வளர்கின்ற சந்திரனை இவ்வாறாக வர்ணித்துள்ளார்.

''விரும்பு மதிக்கண்ணி னானை''

யாவரும் விரும்பி ஏத்தும் பிறைச்சந்திரன் என்றும்,

''கொம்புகொப் பளித்ததிங்கள்''
கோணல் வெண் பிறையும் சூடி''

வளைந்த கொம்பு போன்ற கோணுதலையுடைய பிறைச்சந்திரன்.

''மேகங் கொப்பளித்த திங்கள்
விரிசடை மேலும் வைத்துப்''

மேகம் கொப்பளிக்கின்ற (மழைநீர்) போன்ற திங்கள் என்றும்,

''குழகனைக் குழவித் திங்கள்
குளிர்சடை மருவ வைத்த''

''தூமதியும் பாம்பு முடையார் போலும்''

என்றும்,

''எழுந்ததிரை நதித்திவலை நனைந்த திங்கள்
இளநிலாத் திகழ்கின்ற வளர்சடையனே''

கங்கையின் நீரலையில் நனையும் சந்திரன்.

''நெடுமதியங் கண்ணி யணிந்தானடி''

''மறுமதியை மாசு கழுவும்படி''

குற்றமற்ற சந்திரன் என்றும்,

''அந்தி வட்டத் திங்கட் கண்ணியன்
ஐயாறு அமர்ந்து வந்தென்''

''வாண்மதியாய் நாண்மீது மாயி னான்காண்''

''கூனல் இளம்பிறை தடவு கொடிகொள் மாடக்''

''மாலை பிறை சென்னி வைத்தார் தாமே''

''ஏராரும் மதிபொதியுஞ் சடையி னானை''

''பால்மதியோ டாதியாய்ப் பான்மை யாகிக்''

''குறை மதியம் வளவ வைத்தர்''

''வட்டமதி பாகன் சூடினான்''

இவ்வாறு பலவாறு சந்திரனை நாவுக்கரசர் வர்ணனை செய்கிறார்.

சுடர்த்திங்கள், மாதர்பிறை, எரிப்பிறை, தண்மதி, வட்டமதி, மூவாமதி, குறைமதி, வளர்மதி, இளம்பிறை, குழவித்திங்கள், நெடுமதி, மறுமதி, அந்தி வட்டத்திங்கள், வான்மதி, பனிமதி, பால்மதி, கூனல் இளம்பிறை, மாலைப்பிறை, ஏராரும் மதி, சோதிமதி என்று நாவுக்கரசர் மிக அழகான சொற்களைக் கொண்டு படிப்பவர் நெஞ்சில் பதிய வைக்கும் அளவு வர்ணனை செய்துள்ளார்.

நாவுக்கரசர் மிகவும் அழகாக நிலவைப் பற்றிக் கூறினாலும் அவ்வளவு சிறப்புற்று விளங்குவதற்கு காரணம் சிவபெருமான் தன் தலையில் ஏற்றி வைத்துக் கொண்டவுடன் அது வளர ஆரம்பித்தது. சிவபெருமானின் அக்கருணையை வியப்பதால் தான் நாவுக்கரசரால் அது சிறப்பிக்க முடிந்தது.

சந்திரன் மூலம் நாம் அறிந்துக் கொள்வது என்னவென்றால் இறைவனைச் சரணடைந்தால் கைவிடமாட்டார் எப்பொழுதும் காப்பாற்றுவார் முப்போதும் புனிதப்படுத்தி வளர்ப்பார் என்பதேயாம். இறைவன் இத்தண்ணளியைப் பறைசாற்றும் முகத்தான் நாவுக்கரசர் அவர்தம் சடையில் உள்ள நிலவைப் பலவாறாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் என்றால் அது மிகையாகாது. பக்தி இயக்கத்தின் உருவ வழிபாடு அதன்பயன் இரண்டையும் ஒருசேர விளக்கும் வர்ணனைகளுள் இந்நிலவும் ஒன்றாகக் காட்சி தருதல் அறிந்து இன்புறலாம்.

# 113. நாவுக்கரசரின் தேவாரம்

யு. ஜெயபாரதி, அண்ணாமலை நகர்.

சிவபரம்பொருள் முழுமுதற் கடவுளாகக் கொண்டிலங்கும் சைவ சமயம், தொன்மைச் சிறப்புமிக்க சமயம். மக்களை நல்வழிகாட்டி அவர் களை உய்விக்கும் ஆற்றல் பெற்ற இச்சைவ சமயத்தின் பெருமையை விளக்கும் முறையில்,

> ''சைவத்தின் மேல்சமயம் வேறில்லை அதில் சார் சிவமாம்
> தெய்வத்தின் மேல் தெய்வம் இல்...''

என திருவருணைக் கலம்பகம் குறிப்பிடுகிறது.

நாவுக்கரசர் சிவனையே செம்பொருளாகக் கொண்டொழுகியவர் என்பதை,

> ''சிவனெனும் ஓசையல்ல தறையோ வுலகில்
> திருநின்ற செம்மையுளதே''

எனவரும் அவரது திருவாக்கால் அறிகின்றோம்.

**பெயர்கள்**

'மருணீக்கியார்' என்ற பிள்ளைப் பெயரும் 'தருமசேனர்' என்ற சமண சமயப் பெயரும், 'திருநாவுக்கரசர்' என்ற இறைவன் அருளிய பெயரும் மட்டுமின்றி அப்பர், 'வாகீசர்', 'சொற்கோ', 'தாண்டக வேந்தர்', 'மொழிக்கொற்றவர்' முதலிய திருப்பெயர்களாலும் குறிக்கப்படுகின்றார்.

**தொண்டு நெறிச் சூத்திரம்**

இவரால் பாடப்பட்டவை நான்கு, ஐந்து, ஆறு என்னும் மூன்று திருமுறைகள். அப்பரை நினையும் போதெல்லாம் நம் நெஞ்சில் முதற்கண் தோன்றுவது ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்னும் தொடராகும்.

பணிசெய்து வாழ்தலையே தம் கடனாகக் கொண்டிருந்தார். மேலும் பயன் கருதாது செய்யும் கரும யோகவியல்பு இவ்விடத்து நுட்பமாகக் காணக் கூடிய சிறப்புடையதாம்.

அப்பர் கொண்ட நெறி ''தாசமார்க்கம்'' (தொண்டன் நெறி) என்று கூறப்படுவது மரபு. தொண்டு நெறியே உலகிற்கு வழங்கிய தனிப்

பெருங்கோட்பாடு என்பதனை அவர் ஏந்திய உழவாரப் படையே இனிது விளக்குவதாக உள்ளது.

''நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையாது ஒருபோதும் இருந்தறியேன்''

என்பதில் அப்பரின் பக்திப் பெருக்கைக் காணமுடிகிறது. அவனன்றி (சிவன்) அணுவும் அசையாது என்ற உண்மையை,

''ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே''

என்ற பாடலில் கூறுகின்றார்.

**சமணத் தாக்கம்**

சமண சமயக் கொள்கைகளைப் பின்பற்றியும், அச்சமய நூல்கள் பலவற்றைக் கற்றுத் தேர்ந்தும் விளங்கியமையால் 'தருமசேனர்' எனப் புகழப்பட்டார். முழுமுதற் கடவுளாம் சிவபெருமான் என்னும் மாறாக் கொள்கையை மாண்புடன் கடைப்பிடிக்கும் சைவக்குலத்தில் தோன்றிய அப்பர் சமணக் கோட்பாட்டால் கடவுள் பற்றிய சிந்தனை இல்லாமல் கடுமையான கட்டுப்பாடுகளை வாழ்க்கை நெறியாகக் கொண்டு சிலகாலம் வாழ்ந்ததற்கு அவர் குடும்பத்தில் நிகழ்ந்த தொடர்ச்சியான அவலங்களே அடிப்படைக் காரணம் ஆகும். தம்பியாரை புறச்சமயக் குழியினின்றும் எடுத்தருள வேண்டும் என்ற திலகவதியாரின் இடையறா வேண்டுதலுக்கு அருள்புரியத் திருவுளம் கொண்ட இறைவன் தருமசேனராகிய மருணீக்கியாருக்குச் சூலைநோயைத் தந்தருளினார். சமணர்களின் மந்திரங்களாலும், மருந்துகளாலும் தீராத அச்சூலைநோயுடன் அப்பர், தமக்கையார் திலகவதியாரிடம் வந்தடைந்து உய்வித்தருளுமாறு வேண்ட அவரும் திருவதிகைத் திருவாளன் அடிகளைப் பணிந்து திருநீறு அணிவித்தார்.

''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' என்னும் பதிகத்தைப் பாடி முடித்ததும் நோயும் தீர்ந்தது. அன்புடைய வாழ்க்கையே பொருள் பொதிந்த வாழ்க்கை என்பதை அப்பர் இறைவனை இணைத்துக் காட்டியுள்ளார்.

சிவபரம் பொருளின் முழுமுதற் தன்மையை உணர்ந்த நாவுக்கரசர் அதுமுதல் அவனருளால் அவன்றாள் வணங்குவதையே தமக்குரிய தொழிலாகக் கொண்டொழுகினார்.

**சமணரின் கொடுமைகளை வென்றவர்**

சமண சமயத்திலிருந்து சைவத்திற்கு மாறியதை அறிந்து அமண் குண்டர்கள், சமணச் சார்புடைய அந்நாட்டு மன்னவன் மகேந்திரன் துணையோடு அப்பருக்குப் பல தீவினைகள் இழைத்தனர்.

நீற்றறையில் இட்டபோது **'மாசில் வீணையும்'** என்ற திருப்பதிகத்தையும் நஞ்சூட்டிய நிலையில் **'நாதனடியார்க்கு நஞ்சும் அமுதாம்'** என்றும், கொடுங்களிற்றை மேலேவிய போது **'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்'** என்னும் திருப்பதிகத்தையும் பாடி இறைவனருளால் எவ்விதத் தீங்குமின்றி இருந்தார் அப்பர். இறுதியில் கல்லுடன் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சினர். **'சொற்றுணை வேதியன்'** என்ற திருப்பதிகம் பாடி கல்லே புணையாகக் கொண்டு திருப்பாதிரிப்புலியூரில் கரை ஏறி உய்ந்தார் நாவுக்கரசர். இறுதியில் நாவுக்கரசரின் பெருமையையும் சைவத்தின் சிறப்பையும் அறிந்த மகேந்திரன் சைவ மதத்திற்கு மாறினான் என்பர்.

**தலயாத்திரை**

திருநாவுக்கரசர், இறைவன் எழுந்தருளியுள்ள இடங்களுக்கெல்லாம் சென்று வணங்கினார். திருப்பெண்ணாகடத்தில் இறைவனை வேண்டி, 'பொன்னார் திருவடிக் கொன்றுண்டு' என்ற பதிகம் பாடி சூலக்குறியும் இடபக் குறியும் தம்மேனியில் பொறிக்கப் பெற்றார்.

சீர்காழியில் திருஞான சம்பந்தரைக் கண்டு அளவளாவிய பின் திருநல்லூரில் தம் சென்னிமிசை இறைவனுடைய பாதமலர் சூட்டப் பெற்று 'நினைந்துருகும்' என்னும் திருத்தாண்டகம் பாடினார்.

திங்களூரில் தன் அடியவரான அப்பூதி அடிகளின் மகன் விடந் தீண்டி உயிர் துறந்ததை அறிந்து, 'ஒன்றுகொலாம்' என்று பாடி இறந்தவனை எழுப்பியருளினார். திருஞான சம்பந்தருடன் இணைந்து தலயாத்திரை செய்தபோது திருவீழிமிழலையில் இறையருளால் படிக்காசு பெற்றார். திருமறைக்காட்டில், ஆளுடை பிள்ளையார் வேண்டியவாறு 'பண்ணினேர் மொழியாள்' என்ற திருப்பதிகம் பாடி மறைக்கதவு திறக்கச் செய்தார்.

பழையாறை வடதளியில் உண்ணா நோன்பிருந்து சமணர் சூழ்ச்சியால் மறைக்கப்பட்டிருந்த சிவலிங்கத்தை வெளிக்கொணர்ந்து அனைவரும் வழிபடச் செய்தார். திருப்பைஞ்ஞீலி செல்லும் வழியில் வேதியர் வேடத்தில் வந்த இறைவனால் பொதிசோறு பெற்றுப் பசி நீங்கப் பெற்றார்.

திருக்காளத்தியை வணங்கிய பின், திருக்கயிலையையும் காண வேண்டும் என்ற விருப்போடு மேலும் சென்றார். வழியினிடையே முனிவர் வடிவத்துடன் இறைவன் தோன்றி அங்குக் காணப்பெற்ற பொய்கையில் மூழ்கி, திருவையாற்றில் எழுந்து கயிலைக் காட்சியைக் காண்க எனப் பணிக்க, அவ்வண்ணமே நாவுக்கரசரும் திருவையாற்றில் உமையம்மையுடன் வீற்றிருக்கும் இறைவனின் திருக்கோலம் கண்டு மகிழ்ந்தார்.

பின்னர் திருப்பூந்துருத்தியில் மடமொன்றை அமைத்து அங்குத் தங்கியிருந்தார் அப்பரடிகள். பின்னர் திருப்புகலூரில் இறைவன் திருவடியில் கலந்தார்.

**தொண்டு நிலைகள்**

விளக்கு இடுதல், திருமெழுக்கிடுதல், பூமாலை தொடுத்தல், கீதங்கள் பாடுதல் முதலாகத் திருத்தொண்டுகள் பலதிறப்படும். இவற்றுள் எத்தொண்டா யினும் ஈசனுக்கு உகந்ததே, ஒவ்வொரு தொண்டு நிலைக்கும் தனித்தனிப் பயன்கள் உண்டு என்பது

'விளக்கினார் பெற்ற இன்பம்
மெழுக்கினாற் பதிற்றியாகும்'

போன்ற திருப்பாடல் தெளிவாகின்றது.

**இறைநிலை வடிவங்கள்**

எல்லாம் வல்ல இறைவனைச் 'சிவன்' என்ற சொல்லாற் சுட்டி மகிழ்வர் அடிகளார். ''சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி அம்மான்'' என்று போற்றிப் புகழ்வர். சிவபெருமானது மகேசுவர மூர்த்தங் களாக அடிகளார் குறிப்பன,

இலிங்கோற்பவர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், இடபாரூடர், சந்திரசேகரர், நடராசர், உக்கிரர், அர்த்தநாரீசுவரர், இலகுளீசர், விஷாபஹரணர், சலந்தராரி, சக்கரதானர், அந்தகாரி, திரிபுராரி, கங்காதரர், ஆபற்சகாயர், சோதிலிங்கேசுவரர், மச்சங்காரர், கூர்ம சங்காரர், வராக சங்காரர், நரசிங்க சங்காரர், கங்காளர், காலபைரவர்.

இறைவன் புதுமைக்குப் புதுமையாகவும், பழமைக்குப் பழமை யாகவும் விளங்கும் இயல்பினன் என்பதனை

''புதியனவுமாய் மிகவும் பழையான்''

''பாலர் சாலப் பழையர்''

என்ற வரிகளில் அப்பர் குறிப்பிடுகின்றார்.

**பூசை நிலைகள்**

அகப்பூசை, புறப்பூசை என்ற பிரிவில்,

புறப்பூசையில் பயன்படும் மலர்களாவன புன்னை, வெள் எருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நிலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகியவற்றைப் பற்றியும், அகப்பூசைக்குரியவை கொல்லாமை, அருள், ஐம்பொறி அடக்கம், பொறை, தவம், வாய்மை, அன்பு, அறிவு ஆகியவற்றை பற்றியும்,

''எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்டலர் இடுவார்வினை மாயுமே''

''மலரொ ரிருநான்கு கொண்டுள்குவார்
வல்வினை யோட்டுவார்''

எனும் பாடல்களில் குறிப்பிடுகிறார்.

அகவழிபாடு குறித்து அடிகளார் சிறப்பாகக் குறிக்கும் பகுதிகளில் உலகிற்கு வழங்கும் பிறிதொரு பேரருட் செய்தியாக மதிக்கத்தக்கன. நிலையாமை பற்றி - இந்த உடல் நீரிலே தோன்றுகின்ற குமிழி சிறிது நேரம் நின்று பின் அதிலேயே மறைந்து போவது போன்றது என்கிறார். மேலும் பிறவியை மதிக்கும் தன்மையையும், தத்துவம் பற்றியும், ஆரவாரச் செயல்களை, போலிச் சடங்குகளைக் கண்டித்தும் குறிப்பிடுகிறார்.

இன்பத்திலும் துன்பத்திலும் தூயவன் திருநாமம் மறந்தறியாத 'இறைவன் எங்கும் நீக்கமறக் கலந்தவன் அவனன்றி அணுவும் அசையாது' என்ற கருத்துடைய அப்பரின் தொண்டு நிலச் சூத்திரம், தொண்டு நிலை, பூசை நிலை, சமணத்தின் தாக்கம், தலயாத்திரை சென்று வழிபட்டமை, இறைவனின் வடிவங்கள் எனப் பல்வேறு பிரிவுகளில் தம்மைப் பதிவு செய்திருக்கிறார்.

'இறைவன் சேவடியைப் பற்றிக் கொளாதவர்
நற்றவம் பயனற்றது'

என்று கூறி தம் பதிகங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார்.

**வாழ்க! அப்பரது சமயத் தொண்டு!**

**வளர்க! அவரது புகழ்!!**

# 114. திருநாவுக்கரசர் வரலாறு

செ. ஹேமலதா, அண்ணாமலை நகர்.

தமிழ்நாட்டில் சைவ சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட சமய குரவர்கள் நால்வருள் நாவுக்கரசரும் ஒருவர். தொண்டு நெறியே இவரது தனிச் சிறப்பு எனலாம். தமிழகம் முழுவதும் பயணம் செய்து சைவ சமயத் திருப்பாடல்கள் பாடி சைவம் தழைக்கப் பாடுபட்டவர். சமயத் தொண்டினைச் சமுதாயத் தொண்டாக மாற்றிய மாட்சிமையாளர். துணிவு, கனிவு, தெளிவு ஆகிய முறையில் தம்முடைய வாழ்வை அமைத்துக் கொண்டு என் கடன் பணி செய்து கிடப்பதே என்று வாழ்ந்தவர். அவரது வாழ்வில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகள் பற்றியும் வாழ்க்கை வரலாறு பற்றியும் காணலாம்.

**பிறப்பும் இளமையும்**

தெய்வத் தமிழகத்தில் நாவுக்கரசர் நடுநாட்டின் திருமுனைப்பாடியில், வளநாட்டில் திருவாமூர் என்னும் சிற்றூரில் சைவ வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் புகழனார் மாதினியார் என்போருக்கு மகனாகத் தோன்றினார். இவரது இயற்பெயர் மருள்நீக்கியார். இவர் உரிய பருவத்தில் எல்லாக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். சில ஆண்டு களுக்குப் பின் இவரது தந்தை புகழனார் உடல்நலம் குன்றி உயிர் நீத்தார். மாதினியாரும் புகழனாரோடு தம்முயிர் விடுத்து விண்ணுலகடைந்தார். தந்தையையும் தாயையும் பிரிந்து மருள்நீக்கியார் தமது தமக்கை திலகவதியாருடன் பெரியோர்கள் தேற்ற மனந்தேறினார். இந்நிலையில் திலகவதியாருக்கு நிச்சயம் செய்து வைத்திருந்த கலிப்பகையாரும் வடநாட்டுப் போர்களத்தில் உயிர் கொடுத்து வீரமரணம் அடைந்தார். இத்துயரைத் தாங்காதவளாய்த் திலகவதியார்,

''எந்தையு யெம்மனையுமவர்க்கெனக் கொடுக்க விசைந்தார்கள்
அந்த முறை யவர்க்கே யுரியது நானாதலினால்
இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்பேன்''

என்று தம்முயிரை விடத்துணிந்தார்.

**தமக்கையின் தயவு**

சிறுவனாய் இருந்த மருள்நீக்கியார் தமக்கையார் காலில் வீழ்ந்து தாயும் தந்தையும் இறந்த பின்னர், எனக்குத் தாயும் தந்தையும் எல்லாமுமாய்த்

தாங்கள் இருந்தீர்கள் என்பதால் உயிர் வாழ்ந்தேன். தாங்கள் என்னை விடுத்து உயிர் நீப்பதாயின் தங்கட்கு முன்பாக யானும் உயிர் துறப்பேன் என்று மொழிந்தார். இதனைக் கேட்ட திலகவதியார் தம்பியை வாழ வைக்க வேண்டும் என்னும் எண்ணம் கொண்டு மணவாழ்வை மறந்து, அனைத்துயிர்க்கும் அருள்பேணும் மனைத் தவம் மேற்கொண்டார்.

**மருள்நீக்கியார் - தருமசேனராதல்**

தமிழ்நாடு முழுவதும் சமண சமயம் பரவி வந்த காலகட்டத்தில் அவருடைய மனதில் 'நிலையாமை உணர்வு' வேரூன்றியது. அக்கால கட்டத்தில் மருள்நீக்கியார் நிலையில்லாத இந்த உலக வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு நல்லறப் போர்வையில் சமணத்தில் சேரக் கருதினார். எனவே அவர் நிலையாமை நூல்கள் பல கற்றுப் பாடலிபுத்திரம் என்ற நகரையடைந்து சமண சமயம் சேர்ந்தார். அச்சமய அரிய நூல்கள் பல கற்றுத் தேர்ந்ததினால் சமணர்கள் அவரைத் தருமசேனர் என்ற சிறப்புப் பெயரால் அழைத்தனர்.

**தமக்கையின் வேண்டுகோள்**

திலகவதியார் தன் தம்பியின் நிலையைக் கேள்வியுற்று மிகவும் வருந்தினார். அவர் இறைவனிடம் இறைவா! என்னை நீர் ஆண்டருள்பவ ராயின் இக்கால சமணப் படுகுழியில் வீழ்ந்த என் தம்பியை விடுவித்தருள வேண்டும் என வேண்டினார். இதனை,

''தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவாழ்வான் வீழாமே யருள''

என்பார் சேக்கிழார்.

**சூலை மடுத்து ஆட்கொள்ளல்**

திலகவதியாரின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த சிவபெருமான் தருமசேனருக்குச் சூலை நோய் என்னும் கொடிய வயிற்றுவலியைக் கொடுத்தார். சமண மருத்துவர்களும் முனிவர்களும் எவ்வளவு முயன்றும் அவர் வலிமையைத் தீர்க்க முடியவில்லை. தம் தமக்கையாரின் நினைவு எழ, தம் நிலையைத் திலகவதியாருக்குச் சொல்லி அனுப்பினார்.

திலகவதியார் பெருமானின் அருள் நினைத்து கோளில் பரசமயக் குழியில் வீழ்ந்து, அறியாது துயருழந்த இளவலே எழுக என்று கூறி திருவைந்தெழுத்தை ஓதித் திருநீறு அளித்தார். ''உனக்குச் சூலை வந்ததும் இறைவன் திருவருளே இறைவன் திருவடிகளைப் பணிந்து பணி செய்யும்'' எனப் பணித்தார். அச்சமயமே சூலை நோய் குறைந்தது. பள்ளி எழுச்சிக் காலமாகிய விடியற்காலையில் தமக்கையாருடன் கோவிலுக்குச் சென்று திருவலகிட்டு வணங்கிய நிலையில் இறைவன் அருளால் அவருக்குத்

தமிழ் மாலைகள் பாடிப் போற்றும் உணர்வு உண்டாயிற்று, தம்முடைய சூலை நோயை நீக்கும் பொருட்டு,

> ''கூற்றா யினவாறு விலக்ககலீர்
> கொடுமை பலசெய்தன நானறியேன்''

என்ற திருப்பதிகம் பாடிப் போற்றினார். தம் வயிற்றில் வருத்திய சூலை நோய் நீங்கியது. அவ்வளவில் யாவரும் வியப்ப,

> ''பாவுற்றவர் செந்தமிழின் சொல் வளப்
> பதிகத்தொடை பாடிய பாவன்மையினால்
> நாவுக்கர சென்றுல கேழினுநின்
> னன்னாம நயப்புற மன்னுக''

என்ற வான்மொழி எழுந்தது. அன்று முதல் அவருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

**சமணரின் வஞ்சனைகளை வெல்லுதல்**

திருநாவுக்கரசர் மீண்டும் சைவரான செய்தியைக் கேட்ட சமணர்கள் நம் பெருஞ்சமயம் வீழ்ந்தது என்று மருண்டனர். தருமசேனர் சூலை நோய் எனப் பொய் கூறி மீண்டும் சைவம் சார்ந்தார் என அரசனிடம் முறையிட்டனர். அரசர் வெகுண்டெழுந்து நாவுக்கரசரை அழைத்துவர அமைச்சர்களுக்கு உத்தரவிட்டார். நாவுக்கரசர் தம்மை அழைக்க வந்த அமைச்சர்களிடம்,

> ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
> நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்''

எனத் தொடங்கும் தாண்டகப் பதிகம் பாடி அரசனைக் காண்பதற்கு வர மறுத்தார்.

அமைச்சர்கள் அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கி வந்தருள வேண்டும் என்று வேண்ட நாவுக்கரசர் ஈண்டு வரும் வினைக்கு எம்பிரான் உளன் என்னும் உறுதியோடு சென்றார். அரசன் சமணர்கள் கூறியபடி நாவுக்கரசரை நீற்றறையில் இட்டுத் தாளிட்டனர். நாவுக்கரசர், இறைவன் தாள் நிழலைத் தலைக் கொண்டு,

> ''மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கு இளவேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே''

எனத் தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகம் பாடி இனிதிருந்தார். ஏழுநாட்கள் சென்றபின் சமணர்கள் நீற்றறையைத் திறந்து பார்த்தனர். எவ்வித ஊனமுமின்றி நாவுக்கரசர் இருப்பதைக் கண்டு அதிசயித்தனர். மீண்டும் நாவுக்கரசருக்குச் சமணர்கள் நஞ்சு கலந்து பாற்சோற்றைக்

கொடுத்து அவரை உண்ணச் செய்தனர். அப்போது, நஞ்சும் அமுதாம் எங்களின் நாதன் அடியார்க்கு என்ற பதிகம்பாடி எவ்வித தீங்குமின்றி இனிதிருந்தார்.

பின் நாவுக்கரசரைக் கல்லுடன் சேர்த்துக் கட்டிக் கடலில் பாய்ச்சும்படி கூறவே அரசனும் அவ்வாறே செய்தான். நாவுக்கரசர் சொற்றுணை வேதியன் எனத் தொடங்கும் நமச்சிவாயம் பதிகம்பாடி கயிறு அறவும் கல்லை மிதவை யாகக் கொண்டு திருப்பாதிரிப்புலியூர் அருகே கரை சேர்ந்தார். இதனை,

**''வாய்மையிலாச் சமணாதர் பலகாற் செய்த**
**வஞ்சமெலாம் திருவருட்பேர் வலத்தால் நீந்தித்**
**தூய்மைபெறும் சிவநெறியே விளங்க ஓங்கும்**
**சோதிமணி விளக்கே என் துணையே''**

என வடலூர் வள்ளலார் குறிப்பிடுவதினால் அறியலாம். இந்த நிகழ்வுகளை நாவுக்கரசர் திருநீலக்குடிப் பதிகத்தில் கல்லி னோடெனைப் பூட்டியவர் என்று கூறுகின்றார்.

**குணபர ஈச்சுரம்**

திருப்பாதிரிப்புலியூரில் கரையேறிய நாவுக்கரசர் அவ்வூரில் வீற்றிருக்கும் சிவபெருமானை,

**''ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்**
**உடன் தோன்றினராய்''**

எனத் தொடங்கும் பதிகத்தால் போற்றி திருமாணிகுழி, திருத்தினை நகர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவதிகையை அடைந்தார். அங்கே சில நாட்கள் தங்கி உழவாரப் பணி செய்து வந்தார். பல்லவ மன்னன் நாவுக்கரசருக்குத் தான் செய்த கொடுமைகளையும் சமணர் செய்த சூழ்ச்சிகளையும் உணர்ந்து திருவதிகை அடைந்தான் நாவுக்கரசர் திருவடியில் வீழ்ந்து வணங்கித் திருநீறு அணிந்து சைவனானான். பின்னர் பாடலிபுத்திரத்தில் இருந்த பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துக் கொணர்ந்து திருவதிகையில் குணபர ஈச்சுரம் என்ற பெயரில் சிவனுக்குத் திருக்கோயில் எடுப்பித்தான்.

**இடபக்குறி, சூலக்குறி பொறிக்கப்பெற்றமை**

நாவுக்கரசர் பல திருத்தலங்களைப் பணிந்து பதிகம் பாடித் திருத்தொண்டு புரிந்து வந்தார். அவ்வேளையில் திருப்பெண்ணாகடம் அடைந்தார். அங்கு பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம் என்று வேண்டித் தம் உடலில் இடபக்குறியும், சூலக்குறியும் பொறித்துத் திருவடி நீற்றுப் பூச்சும் செய்தருள வேண்டினார். சிவபூதம் ஒன்று வந்து அவர் தோள்களில் இடபக்குறியும் சூலக்குறியும் பொறித்தது.

**தில்லைக் கூத்தனை வணங்குதல்**

பெண்ணாகடத்தில் இருந்து திருவரத்துறை, திருமுதுகுன்றம் முதலான தலங்களைத் தரிசித்துவிட்டு வெள்ளாற்றங்கரை வழியாகத் தில்லையை வந்தடைந்தார். தூய செம்பொன்னினால் எழுதி மேய்ந்த சிற்றம்பலக் கூத்தனை வணங்கியும் வாழ்த்தியும் திருக்குறுந்தொகைப் பதிகங்கள் பாடினார். திருவேட்களம் போன்ற தலங்களும் சென்று வழிபட்டார்.

**சம்பந்தர் சந்திப்பு**

நாவுக்கரசர் வரவை முன்பே அறிந்த சம்பந்தர் அடியார்கள் புடைசூழ எதிர்கொண்டு வரவேற்ற நாவுக்கரசர், சம்பந்தர் திருவடிகளைப் பணிந்தார். சம்பந்தர் அவர் கரங்களைப் பற்றித் தூக்கித் தாமும் வணங்கி 'அப்பரே' என்று மனங்கனிந்து மொழிந்தார். அன்று முதல் நாவுக்கரசர் 'அப்பர்' என்னும் பெயரால் வழங்கப்பெற்றார்.

ஞானசம்பந்தரின் திருமடத்தில் சில நாட்கள் தங்கி, சோழ நாட்டிலுள்ள சிவத்தலங்கள் எல்லாவற்றையும் வழிபட வேண்டுமென்னும் பெரு வேட்கையுடையராய்ச் சம்பந்தரிடம் தம் விருப்பத்தைத் தெரிவித்து விடைபெற்று நீடூர், பழையாறை முதலிய தலங்களை வணங்கித் திருச்சத்தி முற்றத்தைச் சென்றடைந்தார்.

சத்தி முற்றத்துச் சிவக்கொழுந்தீசரைப் பணிந்து ''கூற்றம் குமைப்பதன் முன் பூவாரடிச் சுவடு என் தலைமேல் பொறித்து வை'' என்று தனக்குத் திருவடி தீக்கை செய்தருளுமாறு வேண்டினார். சிவக்கொழுந்தீசர் நல்லூருக்கு வா என்று அருளிச் செய்தார். அவ்வாறே நல்லூரையடைந்து பெருமானை வணங்கிய அளவில் அப்பரின் திருமுடிமேல் பெருமானார் தம் திருவடியைச் சூட்டியருளினார். இதனை,

> ''நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
> நல்லூரெம் பெருமானார் நல்லவாறே''

என்று இறைவனின் கருணைத் திறத்தைப் போற்றிப் பாடினார்.

**விடந்தீர்த்தல்**

அப்பர் சென்றடைந்த திங்களூரில் அந்தணர் குலத்தில் சிறந்து விளங்கிய அப்பூதியடிகள் சாலை, குளம், கிணறு, தண்ணீர் முதலிய வற்றைத் திருநாவுக்கரசர் பெயரால் அமைத்தார். தம் மக்களுக்கு அவர் பெயரையே வைத்தும் பக்தி செலுத்தி வந்தார். இதனையறிந்த நாவுக்கரசர் அவர் இல்லம் சென்று நீர் செய்த அறப்பணிகளில் நும் பெயரை எழுதாது வேறொரு பெயரை எழுதக் காரணம் யாது? என்று வினவினார்.

அப்பூதியடிகள் திருநாவுக்கரசரின் பெயரை வேறொருவர் பெயர் என்று கூறிய நீர் யார்? என்று வெகுண்டு எழுந்தார். தாம் தான்

திருநாவுக்கரசர் என்று கூறியவுடன், எம் குல தெய்வமே என்று அனைவரும் வணங்கினர்.

நாவுக்கரசருக்கு விருந்து படைப்பதற்கு வாழைக் குருத்து அறுக்கச் சென்ற மூத்த திருநாவுக்கரசைத் தழல் நாகம் தீண்டிவிட்டது. நிகழ்ந்தவை யறிந்த நாவுக்கரசர் உடலைத் திருக்கோவிலுக்கு எடுத்துவரச் செய்து ஒன்றுகொலாம் என்னும் திருப்பதிகம் பாடியருளினார். விடம் நீங்கியது. உறங்கி எழுபவனைப் போல் பிள்ளை எழுந்து நாவுக்கரசரைப் பணிந்தான். இந்த நிகழ்வை நாவுக்கரசர் திருப்பழனம் சென்று பாடும் பதிகத்தால் தெளியலாம்.

**படிக்காசு பெற்றமை**

திருப்பழனம், திருநல்லூர், குடமூக்கு, திருப்புகலூர், திருவீழிமிழலை முதலிய இடங்களில் அப்பரும், சம்பந்தரும் தங்கினர். அப்போது அங்கே பெரும் பஞ்சமாக இருந்தது. மக்களின் பசி போக்க இறைவன் அருளால் இருவருக்கும் நாளும் ஒரு படிக்காசு கிடைத்தது. திருநாவுக்கரசரின் திருத்தொண்டின் பெருமையை உலகிற்குணர்த்த நினைத்த இறைவன் அப்பரடிகளுக்கு மட்டில் வட்டமின்றி உடனே செல்லத் தகுந்த காசினைத் தந்தருளினார். பல நாளும் தொண்டு செய்து பஞ்சம் தீர்ந்த பின்பு திருமறைக்காடு சென்றனர்.

**மறைக்கதவம் திறப்பித்தமை**

அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலை, திருவாஞ்சியம் முதலிய தலங்களைத் தரிசித்துத் திருமறைக்காட்டை அடைந்தனர். அங்கு வேதங்களால் இறைவனை வழிபட்டு அடைத்திருந்த திருக்கோயில் வாயிற் கதவுகள் அந்நாள் முதல் திறக்கப்படாமல் இருந்தன. நாவுக்கரசரும் பண்ணினேர் மொழியாள் என்ற திருப்பதிகம் பாடினார். இறைவன் கதவம் திறப்பிக்காமல் காலம் தாழ்த்தியமை கண்டு மனம் வருந்திய நாவுக்கரசர், இறுதியாக,

> ''அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்
> இரக்க மொன்றிலீர் எம்பெருமானீரே''

என்று பாட எப்பொழுதும் மூடப்பட்டிருந்த திருக்கோயில் கதவினை அப்பமூர்த்திகள் திறக்கவும் - பிள்ளையார் மூடவுமாகப் பாடியருள திருக்கதவம் திறந்து நேர்வழியாகச் சென்று இறைவனைத் தொழுது போற்றினர்.

**கயிலைப் பயணம்**

திருமறைக்காடு, திருப்பழையாறை, திருமேற்றளி, திருமாற்பேறு, காஞ்சிபுரம், திருவாலங்காடு முதலிய தலங்கட்குச் சென்று திருக்காளத்தியை அடைந்தார். நாவுக்கரசர் காளத்தியில் இருந்து புறப்பட்டுப் பெருமலை களையும் கான்யாறுகளையும், அவை தொடர்ந்த நாடுகளையும் கடந்து

சென்றார். மேலும் அவர் தெலுங்கு, கன்னடம், மாளவம், இலாடம் முதலிய நாடுகளையும் கடந்து காசியை அடைந்து இறைவனைப் போற்றிப் பாடினார்.

பின்னர் தம்முடன் வந்தவர்களை அங்கேயே விடுத்துத் தனியே காடு, மலை, மேடு, பாலைவனங்களின் வழியாக இரவு பகலாக நடக்கத் தொடங்கினார். கிழங்கு, இலை, கனி போன்றவற்றையும் உண்ணுதலை விடுத்துக் கைகளும் கால்களும் தேயும்படி நடந்து சென்றார். பிறகு மார்பினால் உந்திச் செல்ல மார்பும் தசைநைந்து எலும்புகள் தேய மேலும் செல்ல இயலாமல் ஓரிடத்தில் செயலற்றுத் தங்கினார்.

**திருவையாற்றில் கயிலைக்காட்சி**

இறைவன் ஆணையின்படி அரசர் அஞ்செழுத்தோதி இறைவன் சுட்டிய அக்குளத்தில் மூழக ஐயாறு தடாகத்தில் தோன்றிக் கரையேறினார். ஐயாற்றுக்கோயில் கயிலை மால் வரையாகக் காட்சியளித்தது. ஐயாறப்பரின் கருணையை நினைந்து நினைந்து அப்பரடிகள் அகம் குழைந்தார். திருத்தாண்டகம் பாடிப் போற்றிப் பரவினார்.

''மாதர்ப்ப பிறைக் கண்ணியானை
மலையான் மகளொடும் பாடிப்
..........................................
..........................................
கண்டறி யாதன கண்டேன்.''

எனப் பதிகம் பாடிப் பரவினார். அங்கிருந்து பல தலங்களை வணங்கி திருப்பூந்துருத்தியை அடைந்தார். அண்ணலை வணங்கி அருந்தமிழ் பாடினார். திருமடம் ஒன்றமைத்துத் தங்கி தொண்டு செய்திருந்தார்.

**இறைவனோடு கலத்தல்**

திருப்புகலூரில் உழவாரப் பணிகள் பல செய்து கொண்டே நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், மன்றுறைவார் வாழ்பதிகள், வழுத்து திருத்தாண்டகம், குறைந்த திருநேரிசை, தனித்திரு நேரிசை, இறைவனை நேர்பட நின்று அறைகூவும் சரக்கறைத் திருப்பதிகம் முதலான எண்ணிறந்த திருப்பதிகங்களைப் பாடியருளினார்.

இறைவன் நாவுக்கரசரின் பற்றற்ற நிலையை உலகிற்குக் காட்டத் திருவுளங்கொண்டார். அவருடைய உழவாரம் நுழைந்த இடமெல்லாம் பொன்னும் நவமணிகளும் மின்னச் செய்தான். ஆனால் நாவுக்கரசர் 'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும்' இயல்புடையவராய் குளத்தில் எறிந்தார். நாவுக்கரசரின் முன்பு தேவ அரம்பையர்கள் விண்ணிலிருந்து ஆடிப் பாடினார். 'பொய்மாயப் பெருங்கடலில்' என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடித் தம் உள்ளத் திண்மையைப் புலப்படுத்தினார்.

சிவபெருமானின் திருவருட்பெருக்கில் ஒடுங்கி, அவன் திருவடியை அடையும் காலம் அண்மையில் இருப்பதை உணர்ந்த நாவுக்கரசர் புகலூரில் சிலநாள் தங்கினார். புகலூர்ப் புனிதன் தன் சேவடிக்கீழ் எளியோனை அருள்புரிவன் என்னும் முன்னுணர்ச்சி மூளப் பெற்று பல திருவிருத்தங்கள் பாடிப் போற்றினார்.

புகலூர்ப் பெருமானை நோக்கி, 'எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ' என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடிப் போற்றினார். தம் எண்பத்தோராம் வயதில் சிவானந்த ஞான வடிவேயாகிச் சித்திரை மாதத்துச் சதயத் திருநாளில், எல்லா உலகங்களும், வாழ்த்தி வணங்க, அண்ணலார் சேவடிக்கீழ் நாவுக்கரசர் அமர்ந்து இன்புற்றார்.

**காலம்**

திருநாவுக்கரசர் இவ்வுலகில் வாழ்ந்த காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு. வாழ்ந்த ஆண்டுகள் 81. அவர் நமக்குக் காட்டியருளிய நெறி தொண்டு நெறி. வடமொழியில் 'தாச மார்க்கம்' என்பர். சரியை நெறிக்கு இவர் வாழ்வு எடுத்துக்காட்டு ஆகும். 'பணி செய்வீர்' என்ற தமக்கை மொழியே குரு மொழியாகக் கொண்டு ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என இவர் வாழ்ந்தார். மனம் மொழிகளேயன்றி மெய் கொண்டும் உழவாரத் தொண்டு புரிந்தார்.

தம்மைச் சூழ்ந்த அடியவர்களுக்கும், பிற்காலத் தலைமுறையினர்க்கும் ஓர் எடுத்துக்காட்டாய், பின்பற்றுதற்குரிய பெருந்தொண்டர் தலைவனாய் பார்வாழப் பணியாற்றி, தொண்டு செய்து பழுத்த பழமாக விளங்கியவர்.

திருநாவுக்கரசர் திருப்பாடல்கள் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் 4, 5, 6 திருமுறைகளாக அமைந்துள்ளன.

4 - ஆம் திருமுறை - திருநேரிசை

5 - ஆம் திருமுறை - திருக்குறுந்தொகை

6 - ஆம் திருமுறை - திருத்தாண்டகம்

எனச் சொல்லப்பெறும் இம்மூன்று திருமுறைகள் தேவாரம் எனச் சொல்லப் படுகிறது. திருநாவுக்கரசர் பாடியவையாக நமக்குக் கிடைத்திருப்பவை 312 பதிகங்களே. அவை மொத்தம் 3064 திருப்பாடல்கள் ஆகும்.

சங்க காலப் பாவினங்களிலிருந்து விலகிய புதிய பாவின வகைகளுக்கு அடிகோலியவர் திருநாவுக்கரசரே. பிற்கால விருத்தப்பாக்களுக்கு வழிகாட்டியவர் இப்பாவேந்தரே. இவர் 'தாண்டக வேந்தர்' எனப் போற்றப் பெறுவார். நால்வர் பெருமக்களிலும் நீண்ட நெடுங்காலம் இவ்வுலகில் வாழ்ந்து நிறைந்த அனுபவங்களை நமக்குத் தந்தவர் என்ற பெருமைக்குரியவர்.

# 115. நாவுக்கரசரின் திருத்தொண்டு நெறி

தா.க. அனுராதா, அண்ணாமலைநகர்.

சைவப் பெருநெறியில் சமயக் குரவர்கள் மனக்கனிவுடன் காட்டிய வழிகள் பல. அவற்றுள் தொண்டு நெறிக்கு விளக்கம் கண்டவர் திருநாவுக்கரசர்.

''தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே''

எனத் தொண்டின் உச்ச உயர் நெறியினைச் சொல்லி, சொன்ன வண்ணம் வாழ்ந்து காட்டியவர் திருநாவுக்கரசர். திருநாவுக்கரசரின் வரலாறே தொண்டின் வரலாறுதான். எனவேதான் இந்த வரலாற்றைக் கூறப்புகுந்த சேக்கிழார்,

''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி''

எனத் தம் பாடலைத் தொடங்கியுள்ளார். திருநாவுக்கரசர் ஆற்றிய அரும் பணி களை சமயத் தொண்டு, சமுதாயத் தொண்டு என இரு கூறுகளாக நோக்கலாம்.

**சமயத் தொண்டு**

உடலுக்கு நலம் தரும் முறையில் உணவைப் பக்குவப்படுத்துவது சமையல் ஆகும். அதுபோல உள்ளத்திற்கு நலம் தரும் முறையில் வாழ்க்கையைப் பக்குவப்படுத்துவது சமயம் ஆகும்.

அன்பே வடிவமாய்த் திகழ்ந்த நாவுக்கரசர் சமயவெறி கொண்டு தீங்கிழைத்த சமணர்களையும் அறநெறிகளால் சைவ சமயப் பண்புகளால் வென்று தமிழகத்தில் ஒரு பெரு மாற்றத்தை ஏற்படுத்தினார். இறைவனின் திருவருள் துணையால் எத்தகைய இடையூறுகளையும் வெல்ல முடியும் என்று தம் வாழ்வில் செய்து காட்டினார்.

**சமணத் தாக்கம்**

நாவுக்கரசர் சைவராகப் பிறந்தாலும் தொடக்கத்தில் அவரை ஆளுமை செய்தது சமண சமயமேமாகும். ஆதலால் இளமையில் எந்தக் குறிக்கோளும் இன்றி எல்லாம் பொய் என்னும் கோட்பாட்டின்படி அவர் வாழ்ந்தார். இதனைத் தம் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் எண்ணியபோது குறிக்கோளற்ற அந்த வாழ்க்கை தனக்குக் கேடு தந்ததென்று கூறியுள்ளார், இதனை,

''பாலனாய்க் கழிந்த நாளும்
பனிமலர்க் கோதை மார்தம்

மேலனாய்க் கழிந்த நாளும்
மெலிவோடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும்
குறிக்கோள் இலாது கெட்டேன்'' (4:67:9)

என்று குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

உலக மக்களை நோக்கி மக்களே நம் தலைமேல் மலையே வந்து வீழ்ந்தாலும் நீங்கள் நின்ற நிலையிலிருந்து சிறிதும் கலங்காதீர். ஏனெனில், எல்லா உலகத்திற்கும் தலைவனாகிய சிவபெருமானுடைய சுற்றத்தாராகிய அடியார்களைக் கொலை செய்தலையே தொழிலாகவுடைய மதயானையும் கொன்றிட வல்லதோ? எனத் தம் அனுபவ வாயிலாக உணர்ந்த உண்மையினை,

''மலையே வந்து வீழினும் மனிதர்காள்
நிலையினின்று கலங்கப் பெறுதி ரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலை செய் யானை தான் கொன்றிடுகிற்குமோ''
(5:205:5)

என வரும் திருப்பாடலில் அறிவுறுத்தியுள்ளார்.

**சைவம் போற்றல்**

சமயப்பணி ஆற்றுவோருக்குப் பணிவுடைமையும் அவாவின்மையும் இரு கண்களாக அமையவேண்டும் என்பர் ஆன்றோர். அவர் தம் பொன் மொழிக்கேற்ப திருநாவுக்கரசர் விளங்கினார். இக்கருத்தை விளக்கச் சைவ உலகில் வழங்கப்படும் வழக்கு ஒன்றைக் கூறலாம். இதனை,

''என்னப்பன் என்னைப் பாடினன்
சம்பந்தன் தன்னைப் பாடினான்
சுந்தரன் பொன்னைப் பாடினான்''

என்பதனால் அறியலாம்.

நாவுக்கரசரின் சைவத் தொண்டினை 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார் மிகப் போற்றிப் பாடியுள்ளார். இதனை,

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்த அருட்பயனே உண்மைப்
..........................................................
..........................................................
உத்தமனே சித்தமகிழ்ந் துதவுவோனே'' (திருஅருட்பா, 8:3241)

என்று போற்றிப் பாடுவதால் அறியலாம். சைவக் குடும்பத்தில் பிறந்தாலும் சமணம் சார்ந்து சைவத்தில் பக்குவம் பெற்ற அவரைச் சைவக் கனியே என்றும் செங்கரும்பே என்றும் போற்றுகின்றார்.

**விடந்தீர்த்தல்**

அப்பூதியடிகள் நாவுக்கரசரின் திருவடியே பெரும் செல்வம் எனக் கொண்டு அவருடைய பெயரால் தண்ணீர்ப் பந்தல் முதலான நல்லறங்களைச் செய்து வந்தார். இவர் இல்லத்துக்கு எழுந்தருளிய அப்பருக்கு உணவு படைக்க வாழை இலை அரிய அவரது மகனாகிய மூத்த திருநாவுக்கரசு சென்றான். அப்பொழுது அரவு தீண்டப்பெற்று உயிர் நீத்த வேளை யிலும் அதனை மறைத்து உரிய நேரத்தில் உணவு படைக்கவேண்டும் என்னும் விருப்போடு அதற்கான செயல்களில் அப்பூதியாரும் அவர்தம் மனைவியாரும் ஈடுபட்டனர்.

அப்போது திருநீறு பெற்றுக்கொள்ள மூத்த திருநாவுக்கரசு வராமையைக் கண்ட நாவுக்கரசர் அதுபற்றி வினவினார். உண்மையறிந்து சிவபெருமானின் பேரருளால் ஒன்றுகொலாம் என்னும் பதிகம் பாடி உயிர் பெற்று எழச் செய்தார். அப்பொழுது மகன் உயிர்த்தெழுந்த மாண்பு, தொண்டின் சிறப்பால் வந்த பயன் என்று அப்பூதியடிகள் உணர்ந்தார். இதனை நாவுக்கரசரின் வாழ்வியலோடு கூடிய சமயப் பணியால் வரும் சால்பிற்குக் கிடைத்த உயர்ந்த பரிசு என்று சமய உலகம் போற்றியது எனலாம்.

**மறைக்கதவம் திறத்தல்**

திருமறைக்காட்டில் அப்பர் திருக்கோயில் கதவு திறக்கச் செய்த சமயப்பணி பல்வேறு வகைகளின் பாங்கும் பயனும் உடையது. வேதங் களால் வழிபடப்பெற்று அடைக்கப்பட்ட திருக்கோயிற்கதவு, அவ்வேதங்களில் வல்ல அன்பர் எவரும் வராமையால் நெடுங்காலம் திறக்கப் பெறாதிருந்து பின்பு நாவுக்கரசர் பாடிய செந்தமிழ்ப் பதிகத்தால் திறக்கப்பெற்ற இவ்வற்புத நிகழ்ச்சியால் அவரின் சமயப் பணியை நம்பியாண்டார் நம்பி போற்றுகின்றார். இதனை,

''மணியினை மாமறைக்காட்டு மருந்தினை வன்மொழியான்
திணியன நீள்கதவந் திறப்பித்தன தென்கடலிற்
பிணியன கன்மிதப் பித்தனசைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக்கரையர் பிரான்றன் அருந்தமிழே''

என்ற பாடலின் வாயிலாக அறியலாம்.

**சமய வாழ்வில் பக்திச் செயல்கள்**

சமய வாழ்வில் பக்திச் செயல்களாகச் செய்யத் தக்கவை எவை என்பதைக் கூறும்போது வெற்று ஆரவாரமும் வெளிவேடங்களும், புனைவுகளும் எப்பயனையும் தாரா என்பார். சிவ பூசை அன்போடு

செய்யப்படும்போது, அது திருத்தொண்டாகி இறையருளைப் பெற்றுத் தருகிறது எனவும் அன்பில்லாது செய்யப்படும் பூசையால் எந்தப் பயனும் இல்லை என்று கூறுவார். இதனை,

> ''நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
> புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்
> பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
> நக்கு நிற்பவன் அவர்தமை நாணியே'' (5:204:10)

என்ற பாடலால் அறியலாம். இது சமயப் பணியாளர்களுக்கும் சமயப் பற்றுமிக்க அன்பர்களுக்கும் அவர் தந்த கட்டளைக் கல் போன்ற கவின்மிகு பாடல் எனலாம்.

அப்பர் தந்த அத்தனை தேவாரப் பதிகங்களும் இத்தரை வாழ் மக்களுக்கு இனிய வாழ்வு தரும், ஏற்றமுடையன. வாழ்க்கை வெறுக்கத் தக்கதன்று, விரும்பத்தக்கது. ஏனென்றால் எடுத்த மாந்தப் பிறவியால் தான் இறைவனை உணரவும் அறியவும் அவன் அருள்பெற்று நற்பேற்றை அடையவும் முடியும்.

> ''குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிழ் சிரிப்பும்
> பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்
> இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
> மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' (4:81:4)

எனக் கூறியுள்ளார்.

நாவுக்கரசரின் தேவாரப் பதிகங்கள் இவ்வுலக மக்களுக்கு ஏற்ற வாழ்வுதனைத் தரும் எனலாம். சைவராகப் பிறந்தவர் எவரும் பெரிதும் உவந்து, விரும்பி, நாள்தோறும் செம்மேனி எம்மானைப் போற்றி பாடும் பாடல்கள் பல. சமய வாழ்வு எப்படி அமைய வேண்டும் என்பதைச் சாற்றித் தொண்டு நெறியே தூயநெறி என்பதை வாழ்ந்து காட்டிச் சமயம் மக்களை இறையருளுக்கு உரியராகப் பக்குவப்படுத்தும் பாங்குடையது என்பதை உலகுக்குத் தமது சமயத் தொண்டு மூலம் நிலை நாட்டியவர் நாவுக்கரசர் என்பதை அறியலாம்.

**சமுதாயத் தொண்டு**

மக்கள் கூடி வாழும் அமைப்பு சமுதாயம் எனப்படும். சமுதாயமாக வாழும் மக்கள் பிறருக்கு எவ்வகையிலும் தீங்கு செய்யாமல் வாழ்வதே நல்ல வாழ்க்கை, அறவாழ்க்கை எனப் போற்றப்படும்.

இன்றைய சமுதாய மறுமலர்ச்சிக்கு அன்றே வித்திட்டவர் திருநாவுக்கரசர். இன்று சமுதாயத்தில் ஒற்றுமையை உருவாக்க ஊர் ஊராக நடந்து சென்று ஒருமித்து வாழுங்கள் என்கிறார்கள் சமுதாயச் சான்றோர்கள் பலர். இதனை ஏழாம் நூற்றாண்டிலேயே உருவாக்கியவர் நம் நாவுக்கரசர்.

**சமய வாழ்வில் சமுதாய உணர்வு**

சமய நிலையங்கள் மக்களுக்கு எவ்வகையிலும் பயன்படாமல் அரசிடமும் தனியாரின் தணிக்கையிலும் இருப்பதைக் கண்டு அன்றே நாவுக்கரசர் பல புரட்சியை ஏற்படுத்தினார். மக்கள் மன்றத்தில் தான் சமய நிலையங்கள் இருக்க வேண்டும். அவற்றின் தொடர்பில்தான் அவை இயங்க வேண்டும் என்றும் கருதினார். எனவே அவர் மாசில்லாத் துறவி யாகவும் காட்சியளித்தார். எனவே செம்பொன்னையும் ஓட்டையும் ஒரே மாதிரியாகப் பாவித்தார்.

அவரின் துறவு நிலை, 'கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வேறொன்றும் வேண்டாத வியத்தகு துறவு'. அவருக்கு நாட்டு மக்களின் நல்வாழ்விலே மிகச் சிறந்த ஈடுபாடு இருந்தது. அவற்றை நாம் வகுத்துக் காணும்போது அவரின் சமய வாழ்க்கையின் சமுதாய உணர்வினை உணர முடியும்.

**சாதி வேறுபாடு**

இன்றும் இம்மனிதச் சமுதாயத்தில் சாதிகளை ஒழித்திட வேண்டும் என்றும், குலச் சண்டைகளையும் கோத்திரச் சண்டைகளையும் களைய வேண்டும் என்றும் பேசி வருகிறார்கள். இதனை நாவுக்கரசர் அன்றே,

''சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரம் முங்குல முங்கொண்டென் செய்வீர்''

எனச் சாடிக் கூறினார். ஆனாலும் இன்னும் இந்த நாட்டைவிட்டு சாதி வேற்றுமையும், குல வேற்றுமையும், கோத்திர வேற்றுமையும் அப்படியே தான் உள்ளன. அன்றே அவற்றைக் களைய முயன்ற நாவுக்கரசரின் சமுதாயத் தொண்டினை நாம் அறியலாம்.

புலால் உண்டு வாழ்பவர்களைச் சமுதாயத்திலிருந்து ஒதுக்க வேண்டாம் என்று அவர்கள் வாழ்க்கையில் உள்ள தவறுகளை நீக்குவதற்கு அவர் களைச் சமுதாயத்தில் மனிதராக்க வேண்டும் என்கிறார். சமுதாயத்தை விட்டு அவனை ஒதுக்கிவிட்டால் தொடர்ந்து தவறுகளைச் செய்துகொண்டு தான் இருப்பான். ஆனால் சமுதாயத்தில் வாழ்கின்ற மற்றவர்களைப் பார்த்து அவர்களின் நல்ல வாழ்க்கை முறைகளைக் கவனத்தில் கொண்டு கொடிய புலால் உணவு பழக்கங்களை விட்டுவிடுவதற்கான வாய்ப்புகள் உண்டு. எனவே,

''அங்கமெல்லாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே''

என ஒரு ஒப்புயர்வற்ற சமுதாய ஒருமைப்பாட்டைச் சாதி குல கோத்திரங் களுக்கு அப்பாற்பட்ட சமுதாயத்தை உருவாக்க நினைத்தார்.

### படிக்காசு பெறுதல்

நாவுக்கரசர் சம்பந்தருடன் சேர்ந்து தலயாத்திரை சென்று கொண்டிருக்கும்போது பல பதிகளை வணங்கித் திருவீழிமிழலை என்ற பதியை அடைந்தனர். அந்நாளில் மழை இல்லாமல் பஞ்சம் உண்டாயிற்று. மக்கள் எல்லோரும் பசியால் வருந்தினர். அந்நிலையில் வீழிமிழலைப் பெருமான் இருவர் கனவிலும் தோன்றி தொண்டர்களுக்கு உணவளிக்கும் பொருட்டு படிக்காசு தருகிறோம் எனக் கூறக்கேட்டு மேற்குப் பீடத்தில் ஒருவரும் கிழக்கு பீடத்தில் ஒருவரும் முறையே படிக்காசு பெற்றனர். அப்படிக்காசு கொண்டு பண்டங்கள் வாங்கிச் சமைத்துச் சிவனடியார்களெல்லாம் எய்தியுண்க என இரண்டு பொழுதும் பறைசாற்றிப் பசித் துன்பத்தைப் போக்கினார்கள்.

ஆனால் திருநாவுக்கரசர் பெருமானுக்குக் கைத்தொண்டு புரியும் அடியாராதலால் அவர் பெறும் காசு வணிகர்களால் ஏற்றுக்கொள்ளப் பெற்றது. எனவே, சிவபெருமான் அவரின் தொண்டு நெறியைப் போற்றிப் பொருள் வழங்கி அவரின் சமுதாயத் தொண்டினைத் தழைக்கச் செய்த திறத்தை அறியலாம்.

### திருமடம் அமைத்தல்

திருநாவுக்கரசர் சம்பந்தப் பெருமான் போல் திருமடம் ஒன்றை நிறுவி அங்கே பல அடியார்களுடன் தங்கி உணவும், சமய போதனைகளையும் அளித்து மக்களை நெறிப்படுத்தினார். அவர் திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்து திங்களும் ஞாயிறும் தோயும்படி வானோங்கி நிற்கும் திருமடம் ஒன்றைக் கட்டி பலருக்கு உணவளித்தும், பலவகைத் தாண்டகம் பாடியும் சமுதாயத் தொண்டு புரிந்தார் எனப் பன்னிரு திருமுறை வரலாறு எழுதிய வெள்ளைவாரணர் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

நாவுக்கரசர் அன்றைய சமுதாயத்திற்கு ஆற்றிய பணிகள் மூலம் அவரின் சமுதாய நலத்தையும் வளத்தையும் பற்றிய எண்ணங்களை நாம் அறியலாம். சமய அடிப்படையில் சமுதாயப் பணியை மேற்கொண்ட சான்றோராக விளங்கியவர் நாவுக்கரசர்.

நாவுக்கரசர் தொண்டே வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டவர். தொண்டலால் துணையுமில்லை என்று உலகறியக் கூறியவர். திருக்கோயில் தொண்டு முதல், தெருவீதி பெருக்கும் தொண்டு வரையில் செய்தவர். அப்பரடிகளின் வாழ்க்கை அன்பில் பழுத்த தவ வாழ்க்கை. அப்பரடிகள் அருளிச் செய்த பாடல்கள் அருளமுதப் பாடல்கள். அவர் தொண்டு ஞாலமுய்ய, நாமுய்யப் பயன்பட்டது; இன்றும் பயன்பட வேண்டும். நாவுக்கரசருக்கு நாம் செய்யும் வழிபாடு அவர்தம் தொண்டு நெறி நிற்றலேயாகும்.

# 116. நாவுக்கரசர் தொண்டின் சிறப்பு

ப. பெருமாள், தஞ்சாவூர்.

இப்பூவுலகில் பிறந்த மக்கள் குறிக்கோளுடைய வாழ்க்கை வாழவும், அன்பு, தியாகத்துடன் கூடிய தொண்டு நெறியுடன் வாழ பல்வேறு இதிகாசங்கள், புராணங்கள், புராணத் தத்துவங்களை எளிதில் மக்கள் அறியும் வண்ணம் எடுத்துரைக்கும் உபபுராணங்கள், முறைப்படி வாழ்ந்த பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு போன்ற நூல்கள் உருவாயின. முறையான வாழ்க்கை வாழ்ந்த தொண்டு உள்ளம் கொண்ட பெரியோர் களின் வாழ்க்கையைக் கூறும் நூல்கள் அனைத்து சமயத்திலும் ஏற்பட்டன. அவ்வாறு சைவ சமயம் தழைத்தோங்கவும், இறை பக்தியுடன் குருபக்தியும், பெரியோர்களான அறுபத்து மூவரின் சரித்திரத்தைக் கொண்டு தொண்டு நெறியுடன் எடுத்துரைக்கும் நூல் பெரிய புராணமாகும். பெரிய புராணத்தில் முதியவராய் தன் நலம் கருதாது, தொண்டு புரிந்த சமயக் குரவர்கள் நால்வரில் ஒருவரான திருநாவுக்கரசரின் இறைபக்தி, தன்னலமற்ற தொண்டு போன்றவை அனைவராலும் பின்பற்ற வேண்டியவையாகும். அவருடைய பண் நிறைந்த தேவாரத்தின் இனிமையைக் கொண்டு வாகீசர் என்னும் முதிய தோற்றத்தில் இருந்த திருநாவுக்கரசரை சம்பந்தர் அவர்கள் பல்லக்கி லிருந்து அப்பர் எங்குற்றார் எனக் கேட்ட வார்த்தையை, தொடர்ந்து அனைவராலும் அப்பர் என்றும் அழைக்கப்பட்டார். திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாற்றின் மூலம், மக்கள் பின்பற்றக்கூடிய வாழ்க்கை நெறிகளான இறை வழிபாடு, பணிவு, தொண்டு என்ற மூன்றும் மற்ற நெறிகளைவிட மேலோங்கி உள்ளமை தெரிய வரும்.

### திருநாவுக்கரசர் வாழ்வு

சமணத்தில் இருந்த திருநாவுக்கரசரை இறைவன் சூலை நோய் கொடுத்து மீண்டும் சைவத்திற்கு கொணர்ந்த வரலாறு மூலமும் திருநாவுக்கரசருக்கு பல்லவ மன்னர் மூலம் சமணத் துறவி கொடுத்த சோதனைகள் மூலமும் திருநாவுக்கரசரின் பக்தியையும் இறைவனின் பெருமைகளையும் அனைவரும் அறியலாம்.

### இறைத்தொண்டு

தொண்டு என்பது ஒருவர் மற்றவருக்கு எந்தவித எதிர்பார்ப்பு மின்றி இயன்றவரை செய்யும் உதவி, சேவை எனக் கூறலாம். இதனை,

பொதுவாக மற்றவர்களின் வாழ்க்கைக்கு உதவும் வகையில் செய்யும் தொண்டு பொதுத்தொண்டு எனவும் இறைவனுக்கும், இறை அடியாருக்கும் செய்யப்படும் தொண்டினை இறைத்தொண்டு எனவும் குறிப்பிடலாம். இறைவனைப் பாடுவதும் இறைவன் புகழை மற்றவர்கள் அறியும் வண்ணம் கூறுதலும் இறைத்தொண்டு எனலாம்.

இறைவன் புகழைப் பாடுவது மட்டுமின்றி இறைவன் குடி கொண்டிருக்கும் தலங்களைத் தூய்மையுடன் இருக்கவேண்டும் என எண்ணினார். எனவே உழவாரப் படைகொண்டு திருக்கோயில்களைச் சீர் செய்தார். என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற எண்ணத்தோடு வாழ்ந்தவர் நாவுக்கரசர். தொண்டு செய்பவர்கள் தம் கருத்தை செய்யும் செயலின் மீது மட்டுமே வைத்தல் வேண்டும் என்பதை அவர் செயல்கள் மூலம் அறியலாம். அவர் உழவாரப் பணி செய்யும் பொழுது இறைவனது அருளால் இருந்த பொன்னையும், பொருளையும் கருத்தில் கொள்ளாது பணியில் மட்டுமே கருத்தில் கொண்டதனை தேவாரப் பாடல்கள் மூலம் அறியலாம். செல்லும் கோவிலில் உழவாரப்பணி செய்தல் மட்டுமின்றி திரு விளக்கிடுதல், திரு நந்தவனம் அமைத்தல், திருமாலை கட்டுதல் போன்ற செயல்களையும் செய்தார்.

அவர் இறைவனைக் காண வேண்டும் என்று தில்லை நகர வீதியில் விழுந்து புரண்டு வழிபட்டார் என்பதில் இருந்து அவரது இறை பக்தியை நாம் அறியலாம். எவ்வளவு துன்பம் வந்தாலும் அமைதியும், பொறுமையுமே வெற்றியைத் தரும். நன்மனம் படைத்தோர் துன்பம் வந்தால் அதுகண்டு வேறு வழிகளில் அதை எதிர்க்க வேண்டியதில்லை. எச்சமயமாயினும் அடாத நினைப்புடன் செயல்படுவோர் தோல்வியை அடைவர் என்பன போன்ற சிந்தனையை திருநாவுக்கரசரின் வாழ்வின் மூலம் அறியலாம்.

**சமுதாயத் தொண்டு**

திருநாவுக்கரசர் இறைத் தொண்டு மட்டுமின்றி பொது மக்களின் துன்பத்தினை போக்கவல்ல சமுதாயத் தொண்டினையும் செய்ததை அறிய முடிகிறது. அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலையில் சிவபெருமானிடம் பெற்ற படிக்காசுகளை வறுமையில் வாடிக்கொண்டிருந்த அவ்வூர் அடியார்களுக்குக் கொடுத்து அவர்களின் வறுமையைப் போக்கினர். நாவுக்கரசர் மக்களின் நலனுக்காக அறச்சாலையும், தண்ணீர்ப் பந்தலும் வைத்திருந்ததை ஆசில் அறச்சாலைகளும், தண்ணீர்ப் பந்தலும் அமைத்தார் என்ற பாடல் அடியினால் அறியலாம். நாவுக்கரசரின் வாழ்க்கை மூலம் இறைவன் திருவடிகளை உறுதியாக நினைத்தால் வரும் துன்பங்கள் இன்பமாக மாறும் என்பதையும் அறியலாம். அச்சம் என்பது மனித சமுதாயத்தில் யாருக்கும் தேவையில்லை என்ற உயரிய

கருத்தை அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை என்ற பாடல்களின் மூலம் அறியலாம்.

பொதுவாக ஒரு ஆணின் வளர்ச்சிக்குப் பின் ஒரு பெண் இருக்கிறாள் என்ற நடைமுறை வார்த்தையை உறுதி செய்யும் வண்ணம் திருநாவுக்கரசரை உலகம் உய்ய வைத்தது அவருடைய தமக்கையார் திலகவதியார் என்றால் மிகையாகாது. அவர் தம் சகோதரனுக்காக வாழ்ந்து இறைத் தொண்டும் சமுதாயத் தொண்டும் செய்தார். அதன் தொடர்ச்சியாகத் தான் நாவுக்கரசரின் வாழ்வு அமைந்தது. திருநாவுக்கரசர் சம்பந்தருடன் சேர்ந்து பூட்டியிருந்த கோவில்களைத் திறக்கச் செய்து சைவ சமயம் தழைக்கச் செய்தார். இவருடைய தொண்டினைக் கேள்விப் பட்டு குருவாக ஏற்றுக் கொண்ட திங்களூரில் வாழ்ந்த அப்பூதியடிகள் அவர் வழியிலே மக்கள் தொண்டே இறை தொண்டு என இறையடியார் களுக்கு அமுது படைத்தல் போன்ற தொண்டினைச் செய்ததை அறியலாம். தமது இல்லம், "ஆசில் அறச்சாலை, தண்ணீர்ப்பந்தல்" போன்றவற்றிற்கும் தம் மகனுக்கும் திருநாவுக்கரசு என்று பெயர் வைத்து எப்பொழுதும் அவர் திரு நாமத்தை கூறும் வண்ணமாக இருந்ததை அறிய முடிகிறது.

திருநாவுக்கரசரின் வாழ்க்கையானது மற்றவர்கள் எளிதில் கடை பிடிக்குமளவிற்கு உள்ள சமுதாய நெறிகள் மிகுந்திருந்ததால் மக்கள் மனதில் நீங்கா இடம் பெற்றிருப்பதை தமிழகத்தில் உள்ள பல்வேறு சைவ சமய அமைப்பு மற்றும் மன்றங்களுக்கு அப்பர் பெருமன்றம் என்று பெயர் சூட்டியிருப்பதில் இம்மன்றத்தினர் சைவம் தழைத்தோங்க இறைத்தொண்டு செய்வது மட்டுமின்றி முக்கிய விழாக்காலங்களில் அன்னதானம் மற்றும் தண்ணீர்ப் பந்தல்கள் வைத்துத் தொண்டு புரிகின்றனர்.

இவ்வளவு பெருமைபெற்ற, திருநாவுக்கரசரின் பெருமைகள் பற்றி எழுதப்பட்ட சில நூல்களின் பட்டியலைக் காண்போம்.

1. அப்பர் சுவாமிகள் புராணம் - உரை, சுப்பிரமணிய முதலியார் (சி.கே.), தருமபுர ஆதீனம், 1944, ப. 782.

2. அப்பர் தரும் அமுது, பழனியப்பன் (சாமி.), தமிழ்ப்பண்ணை, சென்னை, 1966, ப. 50.

3. அப்பர் தேவார ஆய்வு, பரிமணம் (அ.மா.), (மதுரைப் பல்கலைக்கழக பி.எச்.டி. பட்டத்திற்குரிய ஆய்வுரை), 1974.

4. அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும், கருணாநிதி (அ.) மற்றும் சிலர், பூம்புகார் பேரவைக் கல்லூரி வெளியீடு, மேலையூர், 1980, ப. 975.

5. அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், நடேச கவுண்டர் (கு.), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1912, ப. 366.

6. அப்பர் விருந்து, குன்றக்குடி அடிகளார், கலைவாணி புத்தகாலயம், சென்னை, 1990, ப. 159.

7. அப்பர் விருந்து, சுப்பிரமணிய பிள்ளை (ஜி.), தமிழ் நிலையம், புதுக்கோட்டை, 1960, ப. 396.

8. அப்பரடிகள், தமிழ்நாடு தெய்வீகப் பேரவை மாநாட்டு மலர், சென்னை, 1973, ப. 95.

9. அற்புதப் பாசுரங்கள், திருநாவுக்கரசு சுவாமிகள், காசி மடம், திருப்பனந்தாள், 1945, ப. 30.

10. சிவனருட் செல்வர், கிருபானந்தவாரி, திருப்புகழமிர்தம் காரியாலயம், சென்னை, 1970, ப. 188.

11. திருநாவுக்கரசர் : சொர்ணம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள், ஆறுமுக முதலியார் (சரவண.), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1970, ப. 188.

12. திருநாவுக்கரசர், தண்டபாணி செட்டியார் (எஸ்.), ஸி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை, 1925, ப. 18.

13. திருநாவுக்கரசர், தாமரைக்கண்ணன், அஸோஸியேசன் பப்ளிஷிங் கௌஸ், சென்னை, 1964, ப. 83.

14. திருநாவுக்கரசர் கதை, அண்ணாமலை (வே.) மற்றும் இராமநாதன், பதிப்பு, ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1988, ப. 32.

15. திருநாவுக்கரசர் திவ்ய சரித்திரம், நமச்சிவாய செட்டியார் (சை.ர.), மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, 1988, ப. 10.

16. திருநாவுக்கரசர் திரு ஏகாதச மாலை, திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி, சண்முக சுந்தரஞ் செட்டியார் (ரா.) உரை, திருப்புகலூர் ஸ்ரீ அக்னிஸ்வரர் தேவஸ்தான வெளியீடு, 1961, ப. 90.

17. திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், அறிவுடை நம்பி (ம.சா.), கருமணி பதிப்பகம், மதுரை, 1936, ப. 396.

18. திருநாவுக்கரசர் பதிற்றுப்பத்தந்தாதி, பாலசுப்ரமணியம் (கே.எம்.), திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி, 1952, ப. 17.

19. திருநாவுக்கரசு, ஆறுமுக முதலியார் (சரவண.), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1970, ப. 188.

20. திருநாவுக்கரசர் - ஓர் ஆய்வு 2 பகுதிகள், இரத்தின சபாபதி (வை.), டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக்கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1985, ப. 174, 256.

21. திருநாவுக்கரசு சரிதம் நாட்டிய இலக்கியம், நாகசாமி (இரா.), நாட்டியாஞ்சலி வெளியீடு, சென்னை, 1990, ப. 24.

22. திருநாவுக்கரசு சுவாமிகள் திவ்விய சரித்திரம் (ஆளுடைய அரசு அருள்மாலை), நமச்சிவாய செட்டியார் (சை.ர.), மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை, 1990, ப. 7.

23. திருநாவுக்கரச சுவாமிகள் புராண வசனம், சொக்கலிங்க பண்டாரம் (வே.), பிரம்மவித்தியா அச்சியந்திர சாலை, சிதம்பரம், 1987, ப. 26.

24. திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலை, ஆறுமுக நாவலர் (ப.சூ.), வர்த்தமான தரங்கிணி, சென்னை, 1863, ப. 11.

25. திருநாவுக்கரசு நாயனார் சரித்திரம், கனகசபாபதி முதலியார் (வீ.), வெ.நா. ஜீபிலி அச்சியந்திர சாலை, 1999, ப. 184.

26. திருநாவுக்கரசு நாயனார் வெண்பா மாலை, கந்தசாமி முதலியார், கலாநிதி அச்சுக்கூடம், 1882, ப. 32.

27. திருநாவுக்கரசு போற்றிய திருத்தாண்டகம், ஞானப்பிரகாசம் (வ.), அருள்வடிவேல் பதிப்பகம், கடலூர், 1986, ப. 113.

28. திருநாவுக்கரசர் வரலாற்று நாடகம், உத்திரவேல் (மு.) பண்ணுருட்டி, 1995, ப. 67.

29. திருவருட் செல்வர், திருமுருக கிருபானந்த வாரியார், வானதி பதிப்பகம், 1973, ப. 510.

30. திருவருட் செல்வரின் சரிதமும் கற்பனையும், சுப்பிரமணிய முதலியார், அன்பகம், அம்பாசமுத்திரம், 1987.

31. தேவர்ர ஒளி நெறிக் கட்டுரைகள் (அப்பர்), செங்கல்வராய முதலியார் (வ.அ.), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1969, ப. 522.

32. தேவாரத் திருப்பதிகங்கள், திருநாவுக்கரசு நாயனார், தருமையாதீனம், தருமபுரம், 1962, ப. 648.

33. தேவாரப்பதிகங்கள் (திருமுறைகள்), திருநாவுக்கரசு சுவாமிகள் (ப.), சதாசிவ செட்டியார் (உரை ஆ.), திருநெல்வேலி தென்னிந்திய சைவ நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 1974, ப. 272.

34. தேவாரப் பதிகங்கள், திருநாவுக்கரசு நாயனார், சதாசிவ செட்டியார் (உரை ஆ.), திருநெல்வேலி தென்னிந்திய சைவ நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 1928, ப. 717.

35. தேவாரப் பதிகங்கள், திருநாவுக்கரசு சுவாமிகள், சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை, 1930, ப. 542.

36. தேவாரத் திருப்பதிகங்கள் ஆறாந் திருமுறை, திருநாவுக்கரசு நாயனார், ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள், தருமையாதீன சமயப்பிரசார நிலையம், சென்னை, 1963.

37. நாடு உய்ய வந்த நாவுக்கரசர், பழனியப்பன் (சாமி.), வைரம் பதிப்பகம், சென்னை, 1975, ப. 830.

38. நாவுக்கரசர், சுப்பு ரெட்டியார் (ந.), ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1986, ப. 3204.

39. திருநாவுக்கரசர் சுவாமிகள் தேவாரம், -, காசி மடம், திருப்பனந்தாள், 1957, முதல் பல பதிப்புகள்.

# ११७. नावुक्करसरजी और श्रीमठ

ति. पुषकला, तंजै

भक्ति आंदोलन के विकास में श्रीमठ का योगदान श्रेष्ट है । इन्हीं मठों में ठहरकर नावुक्करसरजी, ज्ञानसंबंधरजी आदि नायनमार कइयों ने भक्ति नीति व सेवा नीति का विकास किया । लोगों में जागरण पैदा किया । दैवमंदिर आराधना की । शैव व तमिल के लिए समृद्धि बढाने वाले पद मालाओं की रचना करके अमिट कीर्ति पायी । संप्रदाय के महान मिलकर संप्रदाय के मतों का आदान-प्रदान करके खुश हुए । इस प्रकार भक्ति आंदोलन के मूल संस्था के रूप में मंदिर और मठ काम करते रहे । इतिहासकार इसे मानते हैं कि पल्लवों के काल में ही ऐसे शैव मठ उत्पन्न होकर विकसित हुए । फिर भी उनके पहले ही श्रीमठों के हुए इतिहास मिलते हैं । सेवा नीति में महत्ता रखकर जिये हमारे अप्परजी ने भी तिरुप्पुंदुरुत्ति में मठ स्थापित करके श्रीसेवा के लिए महत्व प्राप्त किये हैं । अप्पर जैसे कई नायन्मारों ने भी श्रीमठ स्थापित करके सेवा की इस बात को पेरियपुराणम बोध करेगा । यह लेख अप्परजी के काल के बाद भी उत्पन्न होकर विकसित श्रीमठ के बारे में होनेवाली बात को देखने के रूप में है ।

<u>अप्परजी के समय के श्रीमठ</u>

पेरियपुराणम बताता है कि 7 वीं शताब्दी में अप्परजी, संबंधरजी के काल में करीब 20 से ज्यादा मंदिर और मठ थे । अप्परजी के पहले ही कई नायन्मार मठ स्थापित करके शिक्षा दे रहे थे । संप्रदाय के सैनिकों को तैयार किया । शिष्यों को श्रीसेवा में लगाना, सेवार्थियों को भोजन कराना, सेवार्थी चाहे जब भी आवे उनका सत्कार करके, आवश्यक सेवा करना आदि कार्यों में लगकर संप्रदाय एवं समाज की सेवा करते थे । अप्पूदियडिगल, मुरुगनायनार, कुंगिलियक्कलयर, ज्ञानसंबंधर आदि भी मठ स्थापित करके श्रीसेवा कियों में शामिल हैं ।

पेरियपुराणम ऐसा कहता है कि भक्तिनीति के विकास के लिए अप्परजी स्थलयात्रा करके दैवमंदिर प्रार्थना एवं श्रीसेवा करते समय तीस से अधिक स्थानों में ठहरकर गये । तिरुवदिकै, पेण्णाकडम, कोयिल, तिरुक्कळिप्पालै, सीरकाळि, तिरुआवडुतुरै, तिरुविडैमरुदूर, तिरुच्चत्ति-मुट्रम, तिरुनल्लूर, तिंगलूर, तिरुप्पळनम, तिरुवारूर, तिरुप्पुगलूर, तिरुक्कडवूर, तिरुवीळिमिळलै, तिरुमरैक्काडु, तिरुवायमूर, तिरुप्पैञ्ञीळि, तिरुवण्णामलै, तिरुवोत्तूर, कांचि, तिरुवान्मियूर, तिरुवोट्रियूर, तिरुवालंकाडु, काशी, तिरुवैयारु, तिरुमळप्पाडि, तिरुप्पूंतुरुत्ति, तिरुआलवाय, रामेश्वरम आदि इनमें शामिल हैं ।

## तमिल का विकास करना

अप्परजी के श्रीमठ में ठहरे समय, फिर तिरूप्पंदु रुत्ति में मठ की स्थापना करके कर सेवा करते समय भी शैव और तमिल को विकसित करने के समान कई तांडकम के साथ, "तनित्तांडकम," अडैवुत्तांडकम", तिरूविंगिमाले इन सबके साथ कई प्रकार के तोंगेप्पदिकम की भी रचना की ।

इन सबपर बहुत ध्यान देकर देखेंगे तो यह बात स्पष्ट रूप से दिखायी देती है कि अप्परजी के समय के श्रीमठ भक्ति आंदोलन के एक अंग के रूप में ही उत्पन्न होकर चलते रहे । हम इसको भी जान सकते हैं कि सेवार्थियों का स्वागत-सम्मान करके भोजन कराना उनके सांप्रदायिक सेवा करने की व्यवस्था करना, करसेवा में सहायता देना ऐसे भक्ति मार्ग के शक्तिशाली साधन के रूप में ही वे थे ।

## अप्परजी के नाम पर श्रीमठ और मंदिर

हम एक पद से जान सकते हैं कि भगवद्कृपा से आश्रित भक्ति नीति और श्रीसेवा को ही अपने जीवन के कर्तव्य मानकर चले अप्परजी की विशेषता को संबंधर के साथ नायन्मार भी, सेवार्थी भी चकित होकर प्रशंसा करते समय अप्पूदिजी अप्परजी की श्रीचरणों में आश्रित होकर, उनकी श्रीचरणों का दर्शन न किये समय में भी, उनके श्रीनाम में ही श्रीमठ, जल मिलनेवाले धर्मशालाओं की स्थापना करके जीवित रहते थे ।

## बाद के समयवाले श्रीमठ

मध्यकाल में चोल के जमाने में शैव मठ सरकार एवं जनों की सहायता से बढते आये । हम शिलालेखों व ताम्रलेखों से जान सकते हैं कि यह विकास 10-13 वीं शताब्दियों में बहुत मुख्य रूप में थीं, मठ क्रम में रखे गये । 13 वीं शताब्दी में तंजै के भाग में तमिल शैव मठ बढकर विकसित रूप में थे । ये अधिकतर अप्पर और संबंधर के नाम से ही बने थे । ऐतिहासिक ग्रंथ बताते हैं कि पहले कुलोत्तुंगन के सेनापति कालिंगरायन ने अप्पर के लिए अलग मंदिर का निर्माण करके अप्पर मठों के लिए भूमि दी थी ।

## चेंगलपट्टु के ताड दस्तावेजों में अप्पर मठ

अंग्रेज़ों के पहले के तमिलनाडु की सामाजिक आर्थिक स्थिति को जानने सहायक करनेवाले 18 वीं शताब्दी के चेंगलपट्टु के दस्तावेजों में भी अप्पर मंदिर, अप्पर मठ और अप्पर उद्यान आदि के बारे में बातें स्थान पायी हैं । उस समय के महान सांस्कृतिक केंद्र रूप में होनेवाले मंदिर के पास कई मठों की बनी स्थिति को देख सकते हैं । कांचिपुरम, तिरूक्कलुक्कुन्रम, तिरूवान्मियूर, तिरूवोट्रियूर आदि स्थान इसमें

आम तौर पर उस जमाने में शैव संप्रदाय के गुरुवर सेवार्थियों के साथ श्रीमठ में ठहरकर ही संप्रदाय सेवा करते आ रहे ऐसे आधार पर देखें तो इनके ठहरे सभी स्थानों में मंदिर से संबंधित अथवा विशिष्ट व्यक्तियों द्वारा स्थापित किये मठ हुए होंगे ऐसी बात बिना कहे ही समझी जाएगी । शेक्किळारजी इसका बोध करते हैं कि विशेषकर तिरुवदिकै, सीरकालि, तिरुप्पुगळूर, तिरुक्कडवूर, तिरुवीळिमिळलै, तिरुमरैक्काडु, तिरुप्पूंदुरुत्ति आदि स्थानों में श्रीमठ थे । कुछ पदों की पंक्तियाँ इसको स्पष्ट करती हैं कि अप्पर, ज्ञानसंबंधर, मुरुगनाय-नार, कुंगुलियकलयनायनार आदि नायनमारों के श्रीमठ चल रहे थे । इन मठों में संप्रदाय के गुरुवरों के ठहरने की बात एवं उनको भोजन कराने के संबंध में भी बातें संकेत की जाती हैं । कुछ पदों की पंक्तियोंमें अप्पर, ज्ञानसंबंधर, मुरुगनायनार, सिरुत्तोंडर, तिरुनीलनक्कर आदि नायनमार लोग मुरुगनायनार के श्रीमठ में कृपा के साथ विराजते समय संप्रदाय, समाज, साहित्य की बातों का आदान-प्रदान करके, विश्लेषण करके सुनकर आनंदित होने की बातों को बताती हैं ।

कुछ पद मुरुगनायनार के श्रीमठ में अप्परजी, ज्ञानसंबंधर, सिरुत्तोंडर, तिरुनीलनक्कर आदियों के साथ तिरुप्पदिकम की मीठी तमिल की विशेषता की प्रशंसा करके भगवद्कृपा एवं सेवार्थियों की विशेषता का विश्लेषण करके, सुनकर, एक मत होकर शिवानंद की महान बाढ में तैरने को बतानेवाले हैं । कुछ पद तो अप्परजी के द्वारा स्थापित तिरुप्पूंदुरुत्ति के श्रीमठ में ज्ञानसंबंधर के ठहरकर बात करके आनंदित होने को, उस समय पांडि देश में समण को वाद में जीतने को, कूबट पांडियन के टेढेपन को सीधा करके, देश में भस्म की ज्योति को विकसित करने को सुनकर अप्परजी के मानसिक सुख पाने को बताते हैं ।

## निर्धनों की भूख मिटाना

कुछ पद, तिरुवीळिमिळलै में अप्परजी और ज्ञानसंबंधर के एक साथ विराजे समय देश में हुए अकाल को दूर करने भगवद्कृपा से सिक्का पाकर श्रीमठ में ठहरकर ढिंढोरा पीठकर बुलाकर भोजन कराने की विशेषता को कहते हैं ।

हम समझ सकते हैं कि सांप्रदायिक शिक्षा ही श्रीमठ के मूल कर्म होने पर भी भोजन कराने को ही श्रीमठ अपना पहला कर्म समझते थे । भूख दुख को दूर करना उसके द्वारा भाषा रूपी फसल बढाना उसके द्वारा सांप्रदायिक सेवा करना जैसे सबसे पहले निर्धनों की भूख को मिठाना ही अपना पहला धर्म मानकर ये श्रीमठ चलते थे । महाविद्वान और शेक्किळार अपनी पिल्लैत्तमिल में ऐसे स्पष्ट करते हैं कि श्रीमठ के प्रधान कर्म तो भोजन कराना ही है । इसे यहाँ याद रखना चाहिए । इससे स्पष्ट होता है कि यह तो संप्रदाय के नाम से श्रीमठ की सामाजिक सेवा के सिवा दूसरा कुछ नहीं है ।

आएँगे । इनमें से विशेषकर लगभग 70 मठ तिरुवोट्रियूर में बने थे । उनमें अप्परजी के मठ और उद्यान शामिल हैं । ऐसा संकेत किया जाता है कि कळियार मठ नामक दो मठ थे । यह तो ज्ञानसंबंधर के मठ भी हो सकता है । ये दस्तावेज यह भी बताते हैं कि अप्पर मठ के समान तिरुवोट्रियूर में अप्परजी का मंदिर भी था । इस प्रकार तिरुवोट्रियूर में अधिक मठों के होने की बात इस गाँव के संप्रदाय व संस्कृति की महत्ता को खूब प्रकट करने के रूप में हैं ।

पेरियपुराणम और देवारम के पद इसको स्पष्ट करेंगे कि देवार मुदलियों के समय में भी तिरुवोट्रियूर भक्ति मार्ग में श्रेष्ट था । अप्परजी स्वेच्छा से विराजे स्थानों में यह भी एक है । उस समय सब सेवार्थियों का दल उनका स्वागत-सत्कार करने की निपुणता को पद में देख सकते हैं। अप्परजी के प्रति तिरुवोट्रियूरवालों की प्रेम विशेषता को भी देख सकते हैं । इस प्रकार अप्पर कालवाला पल्लवों के काल से 18 वीं शताब्दी तक इस प्रदेश में अप्परजी की कीर्ति विकसित रही । इस बात को दस्तावेजों के द्वारा खूब जान सकते हैं । आज भी तिरुवोट्रियूर में अप्पर गली नामक एक गली होना उनकी कीर्ति की अक्षुण्णता को प्रकट करेगी । यहीं नहीं पूरे तमिलनाडु में अप्पर मठ और मंदिर दिखायी देते हैं । अप्परजी के अवतारवाले तिरुवामूर में अप्परजी का श्रीमंदिर बनाया गया है ।

अब तक बतायी बातों से, अप्परकाल के बाद हुए श्रीमठ, भक्ति आंदोलन के मूल संस्थाओं के रूप में लोगों की भूख मिटाकर, शैव एवं तमिल के विकास पाने संस्कृति, शिक्षा, सांस्कृतिक सेवा करके समाज की सेवा करते आने की बात मालूम होगी । नायन्मार लोगों की श्रीसेवा एवं श्रीमठों की श्रीसेवा अमर रहे ।

# 117. நாவுக்கரசரும் திருமடங்களும்

தி. புஷ்கலா, தஞ்சை.

பக்தி இயக்க வளர்ச்சியில் திருமடங்கள் ஆற்றிய பங்கு மிகப் பெரிதாகும். இம்மடங்களில் தங்கியே நாவுக்கரசர், ஞானசம்பந்தர் போன்ற நாயன்மார் பலரும் பக்தி நெறியையும் தொண்டு நெறியையும் வளர்த்தனர். மக்களிடையே விழிப்புணர்வு ஊட்டினர். திருக்கோயில் வழிபாடு நிகழ்த்தினர். சைவத்திற்கும் தமிழுக்கும் வளம்சேர்க்கக் கூடிய பாமாலைகளைப் புனைந்தேத்தி அழியாப்புகழ் அடைந்தனர். சமயச் சான்றோர் பலரும் கூடியிருந்து சமயக் கருத்துக்களைப் பரிமாறி இன்புற்றனர். இவ்வாறு பக்தி இயக்கத்தின் அடிப்படை நிறுவனங்களாகக் கோவில்களும் மடங்களும் செயல்பட்டன. பல்லவர் காலத்திலேயே இத்தகு சைவ மடங்கள் தோன்றி வளர்ந்ததாக வரலாற்றாசிரியர் கருதுவர். ஆயின் அவர்க்கு முன்பும் திருமடங்கள் இருந்த வரலாறுகள் காணப்படு கின்றன. தொண்டுநெறி சிறக்க வாழ்ந்த நமது அப்பர் பெருமானும் திருப்பூந்துருத்தியில் மடம் அமைத்து திருப்பணியாற்றிய பெருமைக் குரியவர் ஆவார். அப்பரைப் போன்றே நாயன்மார் பலரும் திருமடங்கள் அமைத்து தொண்டாற்றியதைப் பெரியபுராணம் உணர்த்தும். இக்கட்டுரை அப்பர் காலத்தும் பின்னரும் தோன்றி வளர்ந்த திருமடங்கள் பற்றிய செய்திகளைக் காண்பதாக அமையும்.

**அப்பர் காலத்து மடங்கள்**

கி.பி. 7-ம் நூற்றாண்டில் அப்பர், சம்பந்தர் காலத்தில் சுமார் 20-க்கும் மேற்பட்ட கோவில் மடங்கள் இருந்ததாக பெரியபுராணம் கூறுகிறது. அப்பருக்கு முன்னரே நாயன்மார் பலரும் மடங்கள் அமைத்து சமயக் கல்வியைப் புகட்டி வந்தனர். சமயப்போர் வீரரைத் தயார் செய்தனர். மாணவர்களைத் திருப்பணிகளில் ஈடுபடுத்துதல், அடியார்க்கு அன்னம் பாலித்தல், அடியார் எப்பொழுது வந்தாலும் உபசரித்து வேண்டுவன செய்தல் போன்ற பணிகளில் ஈடுபட்டு சமய, சமுதாய தொண்டாற்றி வந்தனர். அப்பூதியடிகள், முருகநாயனார், குங்கிலியக்கலயர், ஞானசம்பந்தர் போன்றோரும் மடம் நிறுவி திருப்பணியாற்றியோரில் அடங்குவர்.

பக்திநெறி தழைக்க அப்பர்பெருமான் தலப்பயணங்கள் மேற்கொண்டு திருக்கோயில் வழிபாடும் திருத்தொண்டும் ஆற்றியபோது 30-க்கும்

மேற்பட்ட இடங்களில் தங்கிச் சென்றமையைப் பெரியபுராணம் பேசுகிறது. திருவதிகை, பெண்ணாகடம், கோயில், திருக்கழிப்பாலை, சீர்காழி, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருச்சத்திமுற்றம், திருநல்லூர், திங்களூர், திருப்பழனம், திருவாரூர், திருப்புகலூர், திருக்கடவூர், திருவீழிமிழலை, திருமறைக்காடு, திருவாய்மூர், திருப்பைஞ்ஞீலி, திருவண்ணாமலை, திருவோத்தூர், காஞ்சி, திருவான்மியூர், திருவொற்றியூர், திருவாலங்காடு, காசி, திருவையாறு, திருமழபாடி, திருப்பூந்துருத்தி, திருஆலவாய், இராமேச்சுரம் ஆகியவை இவற்றுளடங்கும்.

பொதுவாக அக்காலத்தில் சைவ சமயக்குரவர் அடியார் திருக்கூட்டத்துடன் திருமடங்களில் தங்கியே சமயப் பணியாற்றியுள்ளனர் எனுமடிப்படையில் நோக்கின் இவர் தங்கிச் சென்ற அனைத்து இடங் களிலும் கோயிலைச் சார்ந்த அல்லது தனியார் ஏற்படுத்திய திருமடங்கள் இருந்திருத்தல் வேண்டும் என்பது கூறாமலே உணரப்படும். குறிப்பாக திருவதிகை, சீர்காழி, திருப்புகலூர், திருக்கடவூர், திருவீழிமிழலை, திருமறைக்காடு, திருப்பூந்துருத்தியில் திருமடங்கள் இருந்ததாகச் சேக்கிழார் பெருமான் சுட்டுகிறார்.

இலகுமணி மதிற்சோதி எதிர்கொள் திருவதிகையினில்
திலகவதி யார்இருந்த திருமடத்தைச் சென்றடைந்தார்
(திருநா. 1327)

.............................. பிள்ளையார் தம்
திருமடத்தில் எழுந்தருளி அமுது செய்து (திருநா. 1452)

புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொருவில் சீர்த்தி
மின்னாரும் புரிமுக்நூல் முருகனார் திருமடத்தில் மேவுங் காலை
(திருநா. 1496)

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூர் அணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடி தொழுதேத்த
குங்கிலியக் கலயனார் திருமடத்தில் குறைவறுப்ப
அங்கவர்பால் சிவனடியா ருடன்அமுது செய்தார்கள்
(திருநா. 1512)

ஆறு சடைமேல் அணிந்தருளும்
அண்ணல் வைத்த படிக்காசால்
ஈறி லாத பொருளுடைய
இருவ ருடைய திருமடங்கள்
சோறு நாளுந் தொண்டர் மகிழ்ந்
துண்ண உண்ணத் தொலையாதே (திருநா. 1526)

சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா
டெல்லை இல்லா சீர்த்தியனார்

.......................

நங்கள் புகலிப் பெருந்தகையும்
அரசும் மடத்தில் நண்ணியபின் (திருநா. 1539)

திருப்பூந் துருத்தி அமர்ந்த
செஞ்சடை யானைஆன் ஏற்றுப்
பொருப்பூர்ந் தருளும் பிரானைப்
பொய்யிலி யைக்கண்டேன் என்று

.......................

அங்குறை யுந்தன்மை வேண்டி

.........................

திங்களும் ஞாயிறும் தோயும்
திருமடம் ஆங்கொன்று செய்தார் (திருநா. 1654)

இப்பாடல் வரிகள் அப்பர், ஞானசம்பந்தர், முருகநாயனார், குங்கிலியக்கலய நாயனார் ஆகிய நாயன்மாருடைய திருமடங்கள் இயங்கி வந்ததைச் சுட்டுகின்றன. இத்திருமடங்களில் சமயக்குரவர் அடியார் திருக்கூட்டத்துடன் தங்கியிருந்ததையும் அவர்கட்கு அமுதிடப்பட்ட செய்தியும் சுட்டப்படுகிறது.

பின்வரும் பாடல்கள் அப்பர் பெருமான் ஞானசம்பந்தர், முருகநாயனார், சிறுத்தொண்டர், திருநீலநக்கர் போன்ற நாயன்மார் திருமடங்களில் எழுந்தருளியிருந்த காலை சமய, இலக்கியச் செய்தி களைப் பகிர்ந்தும் விரித்துரைத்தும் இன்புற்று திகழ்ந்திருந்ததை உரைப்பனவாம்.

பிள்ளையார் எழுந்தருளப் பெருவிருப்பாய் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடன் உறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பால் எழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமும்எழுந் தருளினார் (திருநா. 1507)

ஆங்கணையும் அவர்களுடன் அப்பதியில் அந்தணராம்
ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில் கேண்மை
நீங்கரிய திருத்தொண்டின் நிலையுணர்ந்து நிகழ்கின்றார்
(திருநா. 1508)

திருப்பதிக செழுந்தமிழின் திறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையின் மடப்பாவை இடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தார்
கொடுப்படுசிந் தையினார்கள் உடனுறைவர் பயன்பெற்றார்
(திருநா. 1512)

கழுமலக்கோன் திருநாவுக் கரசருடன் கலந்தருளிச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மான்ஏந்து திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி இன்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார்
(திருநா. 1563)

வல்அமணர் தமைவாதில் வென்றதுவும் வழுதிபால்
புல்லியகூன் நிமிர்த்ததுவும் தண்பொருந்தப் புனல்நாட்டில்
எல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவும் இருந்தவத்தோர்
சொல்ல அது கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர் (திருநா. 1664)

இவற்றுள் முதல் மூன்று பாடல்கள் முருகநாயனார் திருமடத்தில் அப்பர் பெருமான், ஞானசம்பந்தர், சிறுத்தொண்டர், திருநீலநக்கர் ஆகியோர் உடன் உறைய திருப்பதிக செழுந்தமிழின் திறத்தை வியந்து போற்றி, இறையருளையும், இறையடியாரின் பெருஞ்சிறப்பையும் விரித்துரைத்து கேட்டு மகிழ்ந்து சிவானந்த பெருவெள்ளத்தில் நீந்தி மகிழ்ந்ததைக் கூறுவன. பின்வரும் இருபாடல்களும் அப்பர்பெருமான் நிறுவிய திருப்பூந்துருத்தி திருமடத்தில் ஞானசம்பந்தர் தங்கி அளவளாவி மகிழ்ந்ததையும் அப்பொழுது சமணரை வாதில் வென்றதையும், கூன் பாண்டியனின் கூன் நிமிர்த்தி நாட்டில் திருநீற்றொளி பெருகச் செய்ததையும் கேட்டு அப்பர்பெருமான் அகமகிழ்ந்திருந்ததையும் கூறுவன.

### அற்றார் அழிபசி தீர்த்தல்

சமயக்கல்விப் பணிகளே திருமடங்களின் அடிப்படைப் பணிகளாக விருப்பினும் சோறிடுதலையே மடங்கள் முதற்கடமையாகக் கொண்டு ஒழுகின. பசிப்பிணி நீக்குதல் அதன்வழி மொழிப்பயிர் செழிக்கச் செய்தல் அதன் வழி சமயத் தொண்டாற்றுதல் என யாவற்றுக்கும் முதற்படியாக அற்றார் அழிபசி தீர்த்தலையே முதற்கடமையாகப் போற்றித் திருமடங்கள் விளங்கின. இதன் காரணமாகவே பிற்காலத்தில் மகாவித்வான் அவர்களும் சேக்கிழார் பிள்ளைத்தமிழில் 'சோறு மணக்கும் மடங்கள் எல்லாம்' என எடுத்த எடுப்பிலேயே மடங்களின் முதற்பணி, முக்கியபணி சோறிடுதலே என்பதை உணர்த்துமாறு பாடியுள்ளார்.

திருவீழிமிழலையில் அப்பர்பெருமானும் ஞானசம்பந்தரும் ஒருசேர எழுந்தருளியிருந்தபோது நாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தைப் போக்க இறையருளால் படிக்காசு பெற்று திருமடங்களில் தங்கி பறையறிவித்து அழைத்து அமுதிட்டச் சிறப்பைப் பின்வரும் பாடல் உரைத்தல் காண்போமாக.

அல்லார் கண்டத் தண்டர் பிரான்
அருளால் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப்
பரமன் அடி யாரானவர்கள்

எல்லாம் எய்தி உண்க வென
இரண்டு பொழுதும் பறைநிகழ்த்தி
சொல்லால் சாற்றிச் சோறிட்டார்
துயர்கூர் வறுமை தொலைத்திட்டார் (திருநா. 1524)

இது சமயத்தின் பெயரால் திருமடங்கள் ஆற்றிய சமுதாயப் பணியேயன்றி வேறில்லை என்பது தெளிவு.

**தமிழ் வளர்த்தல்**

அப்பர்பெருமான் திருமடங்களில் தங்கியிருந்த போதும் பின்பு திருப்பூந்துருத்தியில் மடம் நிறுவி கைத்தொண்டாற்றிய போதும் சைவத்திற்கும் தமிழுக்கும் வளம்சேர்க்கும் பல்வகைத் தாண்டகங்களுடன் தனித்தாண்டகமும், அடைவுத் திருத்தாண்டகமும், திருவங்கமாலையும் இவை உள்ளிட்ட பல்வகைத் தொகைப் பதிகங்களையும் அருளிச்செய்தார். இதனைப் பின்வரும் பாடல்கள் வாயிலாக அறியலாம்.

அங்குறை யுந்தன்மை வேண்டி ''நாமடி போற்றுவ'' தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னார்அருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஆங்கொன்று செய்தார்
(திருநா. 1654)

பல்வகைத் தாண்டகத் தோடும் பரவுந் தனித்தாண் டகமும்
அல்லல் அறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருஅங்க மாலையும் உள்ளிட்(டு)
எல்லையில் பன்மைத் தொகையும் இயம்பினர் ஏத்தி இருந்தார்.
(திருநா. 1655)

இப்பாடல்கள் வழி திருமடங்கள் மொழிப்பயிர் வளர்த்ததையும் அதன் மூலம் சைவம் தழைக்கச் செய்ததையும் நன்குணர முடிகிறது.

திருமடங்களில் திருமணம் செய்வோரும் தங்கினர் எனப் பெரிய புராணம் சுட்டுதல் காணலாம். நல்லூரில் திருஞானசம்பந்தர் திருமணம் நடந்தது. திருமணத்துக்கு முன்பு மாப்பிள்ளையாகிய ஞானசம்பந்தர் ஒரு மடத்தில் தங்கியிருந்தார் என்கிறார் அவர்.

'வேதியர் வதுவைக் கோலம் புனைந்திட வேண்டும் என்னப்
பூதநாயகர் தங்கோயில் புறத்தொரு மடத்திற் புக்கார்' (1208)

ஆக, மாப்பிள்ளை அழைப்பு கூட அங்கே நடந்தது எனத் தெரிகிறது. இன்றும் ஆச்சாள்புரத்து மடத்தில் அந்நிகழ்ச்சியின் விழா நடைபெறுகிறது.

இதுவரை கூறப்பட்ட அனைத்தையும் ஊன்றி நோக்குங்கால் அப்பர் காலத்துத் திருமடங்கள் பக்தி இயக்கத்தின் ஒரு அங்கமாகவே தோன்றிச் செயல்பட்டு வந்திருப்பதைத் தெள்ளத்தெளிவாக உணர

முடிகிறது. அடியார்களை எதிர்கொண்டழைத்தல், அமுதிடுதல், அவர்கள் சமயப்பணியைச் செம்மையாக ஆற்ற ஏற்பாடுகள் செய்தல், திருத்தொண்டில் உதவுதல் என பக்தி இயக்கத்தின் சக்திமிக்க சாதனமாகவே அவை திகழ்ந்ததை அறிய முடிகிறது.

## அப்பர் பெயரில் திருமடங்களும் கோவில்களும்

இறையருளால் ஆட்கொள்ளப்பட்டு பக்திநெறியும் திருத்தொண்டுமே வாழ்நாள் கடமையாகக் கொண்டு ஒழுகிய அப்பர் பெருமானின் சிறப்பினை சம்பந்தர் உள்ளிட்ட நாயன்மாரும், அடியார்களும் வியந்து போற்றி விளங்கிய காலை அப்பூதி அடிகள் அப்பர் பெருமானின் திருவடிகளையே சார்ந்து விளங்கி, அவரது திருவடிவைக் காணாத நிலையிலும் அவரது திருப்பெயரால் வழங்கும் திருமடங்களும் தண்ணீர்ப் பந்தல்கள் முதலாக உள்ள அறச்சாலைகளை ஏற்படுத்தி வாழ்ந்து வந்த செய்தியினை பின்வரும் பாடல் காட்டும்.

**வடிவுதாங் காணா ராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்**
**அடிமையுந் தம்பி ரானார் அருளுங் கேட்டவர் நாமத்தால்**
**படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தல்கள் முதலாயுள்ள**
**முடிவிலா அறங்கள் செய்து முறைமையில் வாழும் நாளில்**

(அப்பூதி. 1785)

## பிற்காலத் திருமடங்கள்

இடைக்காலத்தில் சோழராட்சியில் சைவமடங்கள் அரசு மற்றும் மக்கட்பேராதரவுடன் பெருகி வளர்ந்தன. இவ்வளர்ச்சி 10-13-ஆம் நூற்றாண்டுகளில் மிகவும் குறிப்பிடத்தக்கதாய் விளங்கியதும், மடங்கள் முறைப்படுத்தப்பட்டு விளங்கியதும் கல்வெட்டு செப்பேட்டு சாசனங்கள் வழி அறிய முடிகிறது. பதிமூன்றாம் நூற்றாண்டில் தஞ்சைப்பகுதியில் தமிழ்ச் சைவ மடங்கள் பெருகி மேன்மையுற்றுத் திகழ்ந்தன. இவை பெரும்பாலும் அப்பர், சம்பந்தர் பெயர்களாலேயே அமைந்திருந்தன. முதலாம் குலோத்துங்களின் படைத்தலைவனாக விளங்கிய காளிங்கராயன் என்பான் திருவதிகையில் அப்பருக்கு தனிக்கோயில் கட்டுவித்து அப்பர் மடத்திற்கு நிலங்கள் அளித்த செய்தியை வரலாற்று நூல்கள் சாற்றுகின்றன.

## செங்கற்பட்டு ஓலை ஆவணங்களில் அப்பர்மடம்

ஆங்கிலேயருக்கு முற்பட்ட தமிழக சமூகப் பொருளாதார நிலையை உணர துணைசெய்யும் 18-ஆம் நூற்றாண்டு செங்கற்பட்டு ஓலை ஆவணங்களிலும் அப்பர் கோயில், அப்பர் மடம் மற்றும் அப்பர் தோட்டம் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இவ்ஆவணங்களின் தரவுகள்படி அச்சமயம் மாபெரும் கலாச்சார நிறுவனங்களாய்த் திகழ்ந்த கோயில்களை யொட்டி எண்ணிலா மடங்கள் அமைந்திருந்த நிலையைக் காணமுடிகிறது. காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திருவொற்றியூர் போன்ற

ஊர்களும் இவற்றுளடங்கும். இவற்றுள்ளும் சிறப்பாக திருவொற்றியூரில் சுமார் 70 மடங்கள் அமைந்திருந்தன. அவற்றுள் அப்பர் சுவாமிகள் மடமும் தோட்டமும் அடங்குவதாகும். இத்துடன் கழியர் மடம் என்று இருமடங்கள் இருந்ததாகவும் சுட்டப்பெற்றுள்ளது. இது ஞானசம்பந்தர் மடமாக இருத்தல் கூடும். அப்பர் மடம் போலவே திருவொற்றியூரில் அப்பர் சுவாமிகள் கோவிலும் இருந்ததை இவ் ஆவணங்கள் தெரிவிக்கின்றன. இவ்வாறு திருவொற்றியூரில் மடங்கள் பெருக காணப்பட்டமை இவ்வூரின் சமயக் கலாச்சாரப் பெருமையினை உணர்த்துவதாகவே அமைகிறது.

தேவார முதலிகள் காலத்திலும் திருவொற்றியூர் பக்திநெறி ஓங்க விளங்கியதைப் பெரியபுராணமும் தேவாரப் பதிகங்களும் விளக்கும். அப்பர்பெருமான் விரும்பி உறைந்த திருத்தலங்களுள் இதுவும் ஒன்றாக விளங்கியது. அச்சமயம் தொண்டர் திருக்கூட்டம் அப்பர் சுவாமிகளை எதிர்கொண்டு வரவேற்ற திறத்தை பின்வரும் பாடல் உணர்த்தும்.

ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள் விளக்கி
நற்கொடிமா லைகள்பூகம் நறுங்கதலி நிரைநாட்டி
பொற்குடங்கள் தூபங்கள் தீபங்கள் பொலிவித்து
மற்றவரை எதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர்

இது பக்திநெறி ஓங்க விளங்கிய திருவொற்றியூர் மக்கள் அப்பர் சுவாமிகள்பால் கொண்ட அன்பின் திறத்தை வெளிப்படுத்துவதாம். இடைக்காலத்திலும் திருவொற்றியூர் மடங்கள் தமிழக சைவ மடாலயங் களின் வரலாற்றின் முக்கியமானதொரு இடத்தைப் பெற்றிருந்ததைக் கல்வெட்டுச் சான்றுகள் வழி அறிய முடிகிறது.

இவ்வாறாக இலக்கிய, ஆவணச் சான்றுகளின் வாயிலாக அப்பர் காலமாகிய பல்லவர் காலம் தொட்டு பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலும் இப்பகுதியில் அப்பர்பெருமானின் புகழ் நீடு நிலவியதையறிய முடிகிறது. இன்றும் அப்பர் சுவாமிகள் கோவில் தெரு என்று ஒரு தெரு திருவொற்றியூரில் விளங்குகிறது. இன்றும் அவர்புகழ் அங்கு மறையாதிருப்பதையே இது சுட்டும். திருவொற்றியூரில் மட்டுமின்றி தமிழகமெங்கும் பல்வேறிடத்தும் அப்பர் மடங்களும் கோயில்களும் காணப்படுகின்றன. அப்பரின் அவதாரத் தலமாகிய திருவாமூரில் அப்பர் திருக்கோயில் அமைக்கப்பட்டு 14.7.1963-ல் குடமுழுக்கு செய்யப்பெற்றது. அத்துடன் ஒரு தேவாரப் பாடசாலையும் தொடங்கப்பெற்றது. இவ்விரு முயற்சிகளும் தருமபுர ஆதீனத்தால் மேற்கொள்ளப்பட்டவையாகும்.

இதுவரை கூறபபட்ட செய்திகளால் அப்பர் காலத்தும், பின்னரும் விளங்கிய திருமடங்கள் பக்தி இயக்கத்தின் அடிப்படை நிறுவனங்களாய், மக்களின் பசிப்பிணியைப் போக்கி சைவமும், தமிழும் ஓங்க சமய, கல்வி, கலாச்சாரப் பணிகளாற்றி சமுதாயத் தொண்டு புரிந்து வந்தமை புலப்படும்.

வாழ்க நாயன்மாரின் திருத்தொண்டு
வளர்க திருமடங்களின் சமுதாயத்தொண்டு

# ११८. अन्य संप्रदाय व अप्पर की भक्ति
## (भक्ति पाप को दूर करेगी)

ति. पुष्पलता, तंजै

बाह्य संप्रदाय सब क्रिया सिद्धांत के बारे में बोलकर लोगों को डराकर, जीवन में एक लगाव को और विश्वास को शिथिल करने लगे। मगर भक्ति आँदोलन तो भक्ति को तो पाप मिटेंगे ऐसी बात पर जोर देकर जीवन में एक लगाव को, स्पष्टता को, विश्वास को बढ़ाकर मानव समाज को यथार्थ किया। उन्नत करके समृद्ध बनाया। इस आँ-दोलन के अगुए के रूप में हुए अप्परजी के देवारम में होनेवाले भक्ति आँदोलन के सिद्धांत को देखनेवाले के रूप में यह है।

दूसरे संप्रदाय

वैदिक के खिलाफ उत्पन्न बौद्ध, समण आदि दूसरे संप्रदाय इस जन्म के क्रिया के अधीन है। जीवन में होनेवाले दुःख और कष्टों को पूर्वजन्म में और इस जन्म में करनेवाले दुर्व्यवहार ही कारण हैं। यह क्रिया जन्म भर पीछा करनेवाली है। इससे छुटकारा पाने के लिए सन्यास ही एक मात्र रास्ता है। वह सन्यास भी पुरुषों के लिए ही होनेवाला है। स्त्रियाँ नहीं ले सकतीं। वे इस जन्म में करनेवाले सुधर्म द्वारा आनेवाले जन्मों में पुरुष जन्म लेकर सन्यास लेकर बाद ही मोक्ष पा सकती हैं। ऐसे वे सिखाते थे। इसको शिलप्पधिकारम, मणिमेखला, जीवक चिंतामणि आदि बौद्ध, समण काव्य संकेत करने को देख सकते हैं।

इस प्रकार बौद्ध व समण आदि संप्रदाय व्यवहार के लिए अयोग्य स्त्रियों को नीचा करके बतानेवाले सिद्धांत को रखनेवाले के रूप में देख सकते है। लेकिन भक्ति मार्ग में लगे रहे अप्परजी तो पाप को दूर करने इनके बिलकुल विपरीत बहुत सरल मार्ग को संकेत करने को देखेंगे।

अप्पर द्वारा बोध किया भक्ति मार्ग

भक्ति पाप को समूल नाश करेगा। भक्ति करें तो भगवान की कृपा आसानी से मिलेगी। जिन्होंने भगवान की कृपा पायी है वे कभी भी कष्ट नहीं भोगते। हमारे कर्म, पाप चाहे जिस प्रकार का भी हो, उनको दूर करनेवाले एक मात्र भगवान ही हैं। उसकी शरण में जाना ही पाप के दूर होने का मार्ग है। सेवार्थी चाहे जो भी हो तुरंत आकर कृपा करनेवाले दयानिधान हैं। इसलिए जन्म रूपी अपार सागर को पार करने उसपर झुकें। उसकी श्रीचरण लगातार ध्यान कर प्रार्थना करें। हर रोज़ उसके वास करनेवाले मंदिर पहुँचकर कर सेवा करके उसका गुण गान करें। स्तुति करें। उसका नाम जो नमः शिवाय मंत्र है उसे उर पर लेकर पुण्य स्नान करें। इनके सभी पदों में हम यह देख सकते हैं कि ऐसा करें तो भगवदकृपा पाकर इसी जन्म में ही मोक्ष पा सकते हैं ऐसे निश्चय

करके बताते हैं । यह दिखाया जाता है कि यह भगवान हैं जो अपनी शरण में आये सभी लोगों की बाधाओं को दूर करनेवाले और अपने आश्रित जो भी हों बिना किसी भेदभाव के कृपा करनेवाले हैं ।

इस प्रकार चाह अनचाह न होनेवाले के रूप में विराजमान भगवान की कृपा को किस प्रकार सरलता से पा सकते हैं इसे उनके पदों की पंक्तियों में देख सकते हैं ।

उनके और पदों में मन, भाषा, शरीरों से भगवान की आराधना करनेवाली शिवपूजा, देवमंदिर की आराधना करसेवा की महिमा, सरलता आदि को जोर देकर बताने को देख सकते हैं ।

भगवान के रहनेवाले देवमंदिर कइयों की विशेष महिमा को बताकर वहाँ जाकर भगवान की आराधना करने को भी, वैसे स्थलों को मन में ध्यान करने से भी भगवद्कृपा सुलभ मिलेगी ऐसे अप्परजी अपने पदों द्वारा स्पष्ट करते हैं ।

सबसे बढ़कर वह नाम जो नमःशिवाय है उसका मन में रटन से किसी भी प्रकार का पाप दूर होगा ।

हम अप्परजी के पदों में यह सप साफ देख सकते हैं कि ऐसे शिवजी के ध्यान से शारीरिक चेनता से शिवजी की पूजा, देवमंदिर की आराधना करने से भी, करसेवा करने से भी, स्थल यात्रा करने से भी बहुत सरलता से भगवद्कृपा को पाकर इसी जन्म में ही पाप के दूर होकर खुश हो सकते हैं । भक्ति सिद्धांत व सेवा सिद्धांत से मिले हुए यह आंदोलन संप्रदाय के विकास के लिए ही नहीं बल्कि समाज के विकास के लिए भी रास्ता बनानेवाला है । न केवल उन दिनों के वातावरण के लिए है मगर आजकल के यांत्रिक जीवन के वातावरण में भी लागू होनेवाले इस सिद्धांत की स्तुति करके अध्ययन करें ।

# 118. பிறசமயங்களும் அப்பர்தம் பக்தியும்

**(பக்தி பாவத்தைப் போக்கும்)**

**தி. புஷ்பலதா, தஞ்சை.**

புறச்சமயங்களனைத்தும் வினைக்கொள்கைகளைப் பேசி மக்களை மருளச்செய்து வாழ்க்கையில் பிடிப்பையும் நம்பிக்கையையும் தளரச் செய்தன. ஆனால் பக்தி இயக்கமோ பக்தி செய்தால் பாவம் அழியும் என்பதை வலியுறுத்தி வாழ்க்கையில் ஒரு பிடிப்பையும், தெளிவையும், நம்பிக்கையுமூட்டி மனித சமுதாயத்தை நெறிப்படுத்தியது. மேம்படுத்தி வளப்படுத்தியது. இவ் இயக்கத்தின் முன்னோடியாகத் திகழ்ந்த அப்பர் பெருமானின் தேவாரத்தில் காணப்படும் பக்தி இயக்கக் கோட்பாடு களை நோக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**பிறசமயங்கள்**

வைதிகத்தை எதிர்த்து தோன்றிய பௌத்தம், சமணம் போன்ற புறச்சமயங்கள் இப்பிறவி வினையின்பாற்பட்டது. வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்கட்கும் துயரங்கட்கும் முற்பிறவியிலும் இப்பிறவியிலும் செய்யும் தீவினைகளே காரணம். இவ்வினை பிறவிகள் தோறும் தொடரும் தன்மையது. இதனின்று விடுபட துறவு ஒன்றே வழி. அத்துறவும் ஆண்களுக்கே உரியது. பெண்கள் மேற்கொள்ள இயலாதது. அவர்கள் இப்பிறவியில் ஆற்றும் நல்லறங்கள் வாயிலாக வரும் பிறவிகளில் ஆணாகப் பிறந்து துறவு பூண்டு பிறகே வீடுபேறடைய முடியும் என்றெல்லாம் போதித்தன. இதனை சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்ற பௌத்த, சமண காவியங்கள் சுட்டுவதைக் காணலாம்.

> வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
> அவ்வினை நின்னையு மகலா தாங்குறும் (மணிமே.)
> ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் (சிலப்.)

இவ்வரிகள் வினை விடாது தொடர்ந்து வந்து வருத்தும் என்பதைக் கூறுவன.

> 'பாங்கிய னல்லறம் பலவுஞ் செய்தபின்
> கச்சி முற்றத்து நின்னுயிர் கடைகொள

உத்தர மகதத் துறுபிறப் பெல்லாம்
ஆண்பிறப் பாகி யருளுற மொழியாய்
மாண்பொடு தோன்றி மயக்கங் களைந்து
பிறர்க்கற மருளும் பெரியோன் றனக்குத்
தலைச்சா வகனாய்ச் சார்பறுத் துய்தி' (மணிமே.)

ஆரழன் முளரி யன்ன வருந்தவ மரிது தானம்
சீர்கெழு நிலத்து வித்திச் சீலநீர் கொடுப்பற் றீந்தேன்
பார்கெழு நிலத்து ணாறிப் பல்புக ழீன்று பின்னால்
தார்கெழு தேவ ரின்பந் தையலாய் விளைக்கு மென்றான்

(சீவக.)

செறியச் சொன்ன பொருடெளிந்தார் சேரார் விலங்கிற்
பெண்ணாகார்............................ (சீவக.)

இவ்வரிகள் ஆண், பெண் பிறவிகளை புறச்சமயங்கள் வேறுபடுத்தி ஏற்றத் தாழ்வுடன் நோக்கும் தன்மையினை தெளிவாக உணர்த்துவன.

'நீங்களும் பிறவிக் கடலிடை நீந்தி
பிறந்து மிறந்து முழல்வோம் பின்னர்
மறந்து மழைமறா மகதநன் னாட்டுக்
கொருபெருந் திலகமென் றுரவோ ருரைக்கும்
கரவரும் பெருமைக் கபிலையம் பதியின்
அளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத்
துலக்கமில் புத்த ஞாயிறு தோன்றிப்
போதி மூலம் பொருந்திவந் தருளித்
தீதறு நால்வகை வாய்மையுந் தெரிந்து
பன்னிரு சார்பின் பகுதித் தோற்றமும்
அந்நிலை யெல்லா மழிவுறு வகையும்
இற்றென வியம்பிக் குற்றவீ டெய்தி' (மணிமே.)

இப்பாடல் பிறந்துமிறந்தும் புண்ணியத்தின் இறுதியில் பாவப் பயனையும் பாவத்தினிறுதியில் புண்ணியப் பயனையும் நுகர்ந்து நுகர்ந்து உழலா நின்று இறுதியில் மகதநாட்டில் புத்த ஞாயிறு தோன்றி உபதேசம் செய்யும் காலை அது கேட்டு நிர்வாணமடைதலையும் கூறுகிறது. இது வினைகளை அனுபவித்து கழித்தே தீர்க்க வேண்டும் எனும் புறச் சமயங்களின் நம்பிக்கையை பிரதிபலிப்பதாகும்.

இவ்வாறு புறச்சமயங்களான பௌத்தமும் சமணமும் நடைமுறைக் கொவ்வாத, பெண்களைத் தாழ்த்தியும் கூறும் கோட்பாடுகளைக் கொண்டு விளங்குதல் காணலாம். ஆனால் பக்திநெறியில் ஊன்றிய அப்பர் பெருமானோ பாவநீக்கம் பெற இவற்றுக்கு முற்றிலும் மாறான மிக எளிய வழிகளை காட்டுதல் காண்போம்.

## அப்பர் ஊட்டிய பக்திநெறி

பக்தி பாவத்தை வேரறுக்கும். பக்தி செய்தால் இறையருள் எளிதில் கிட்டும். இறையருள் பெற்றோர் ஒருபோதும் துன்புறுவதில்லை. நாம் செய்த வினைகளும், பாவங்களும் எத்தகையதாயினும் அவற்றை நீக்க வல்லவன் இறைவன் ஒருவனே. அவனைச் சரணடைதலே பாவம் நீங்கப்பெறும் வழியாம். ஏத்துமடியார் யாராயினும் விரைந்து வந்து அருளும் அருளாளன். ஆகவே நீத்தற்கரிய பிறவிக் கடலைக் கடக்க அவனைப் பணிமின். அவன் திருவடிகளை இடைவிடாது சிந்தித்து ஏத்துமின். நாள்தோறும் அவன் உறையும் கோயிலடைந்து கைத்தொண்டு புரிந்து அவன் புகழைப் பாடி பரவுமின். அவன் நாமமாகிய நமச்சிவாய மந்திரத்தை நெஞ்சிலேற்றி புனிதநீராடுமின். இவ்வாறெல்லாம் செய்தால் இறையருளைப் பெற்று இப்பிறவியிலேயே வீடுபேறடையலாம் என அறுதியிட்டுக் கூறுவதை இவர்தம் பாடல்கள் தோறும் காண முடிகிறது. அவற்றுள் காட்டாக ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டு காணலாம்.

ஈண்டா இரும்பிறவித்துறவா ஆக்கையிது
நீங்கலாம் விதியுண்டென்று சொல்ல,
வேண்டாவே நெஞ்சமே விளம்பக்கேள் நீ
விண்ணவர்தம் பெருமானார் மண்ணிலென்னை,
ஆண்டானென் றருவரையாற் புரமூன்றெய்த
அம்மானை அரிஅயனுங்காணா வண்ணம்,
நீண்டானுறை துறைநெய்த் தானமென்று
நினையுமா நினைந்தக்காலுய்யலாமே (6:42:2)

தன்னடைந்தார் தம்வினைநோய் பாவமெலாம்
அரித்தானை ...................... (6:66:2)

பத்திசெய் பவர்கள் பாவம்
பறிப்பர் ...................... (6:64)

தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பார் தான் காண் (6:65:8)

நினைப்பார்தம் வினைப்பாரம் இழிப்பான் கண்டாய் (6:81:5)

பாதங்கள் பரவிநின்ற பத்தர்கள் தங்கள்மேலை
ஏதங்கள் தீரநின்றார் ................ (4:35:5)

பண்ணினார் பண்ணின் மிக்க பாடலார் பாவந் தீர்க்கும் (4:35:4)

ஏத்துவார் இடர்கள் தீர்ப்பார் (4:22:8)

அறுத்தானை அடியார்தம் அருநோய் பாவம் (6:54)

வீடுதனை மெய்யடியார்க் கருள்செய் வாரும் (6:59:6)

குலமில ராகிலும் குலத்திற்கு ஏற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே (4:11:6)

முந்திய வல்வினைகள் தீர்ப்பான் தன்னை (6:29:4)

பழகியவல் வினைகள் பாற்று வானை
பசுபதியைப் பாவகனைப் பாவந்தீர்க்கும்
குழகனை.................. (6:29:6)

இவண் பக்தி செய்தால் பாவம் அழியும் என்பதும், இறைவன் தம்மைச் சரணடைந்தோர் அனைவரின் இடர்கள் தீர்ப்பவர் என்பதும் தம்மைச் சார்வோர் எவராயினும் மாறுபாடின்றி அருளக்கூடியவர் என்பதும் எடுத்துக்காட்டப் பெறுகிறது.

இனி இவ்வாறு வேண்டுதல் வேண்டாமை இலானாக விளங்கும் இறைவனின் அருளை எவ்வாறெல்லாம் எளிதாய்ப் பெறலாம் என்பதைக் கூறும் பாடல் வரிகளைக் காண்போம்.

பாவமும் பழி பற்றுஅற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுஉகந்து ஆடும் அவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந்து உள்குமின் (5:99:1)

அட்டமா மலர்கள் கொண்டே
ஆனஞ்சும் ஆட்ட ஆடி
சிட்டாய் அருள்கள் செய்வர் (4:41:2)

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டு
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. (6:31:3)

இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே (6:71:3)

மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே
(4:77:4)

இப்பாடல்கள் மனம், மொழி, மெய்களால் இறைவனை வணங்கும் தன்மையாகிய சிவபூசை, திருக்கோயில் வழிபாடு கைத்தொண்டின் சிறப்பு எளிமை திருநீற்று மகிமை ஆகியவற்றை வலியுறுத்துதல் காணலாம்.

மேலும் இறைவன் உறையும் திருத்தலங்கள் பலவற்றின் தனிச் சிறப்புகளையும் எடுத்தோதி அங்கெலாம் சென்று இறைவனை வழி

படுதலையும், அத்தகு தலங்களை மனதால் சிந்திப்பதாலும் எளிதில் இறையருள் கிட்டும் என்பதை அப்பர் பெருமான் பின்வருமாறு உணர்த்துகிறார்.

பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை
உண்டு சொல்லுவன் கேண்மின் ஒளிகிளர்
விண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீரும் கவலையே (5:59:6)

ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே (5:5:4)

ஏகம்பம் மேவி னார்க்கு
வருந்திநின்று அடிமை செய்வார்
வல்வினை மாயு மாறே

இந்துசே கானுறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெடநின் றேத்துவோமே (6:71:9)

பழனம் பழனமே யென்பீ ராகில்
பயின்றெழுந்த பழவினைநோய் பாற்றலாமே (6:93:4)

வலஞ்சுழியே வலஞ்சுழியே என்பீராகில்
வல்வினைகள் தீர்ந்துவா னாள லாமே (6:93:6)

கண்டியூர் கண்டியூர் என்பீ ராகிற்
கடுக்கும் வல்வினையைக் கழற்ற லாமே (6:93:7)

குடமுக்கே குடமுக்கே யென்பீராகிற்
வீடாத வல்வினைநோய் வீட்ட லாமே (6:93:8)

யாவற்றுக்கும் மேலாக அரன்நாமமாகிய நமச்சிவாய மந்திரத்தை நெஞ்சில் உருவேற்ற எப்பேற்பட்ட பாவமும் தொலையும் என்பதை,

பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே (4:11:3)

என்று கூறுவதன் வாயிலாக உணரலாம்.

இவ்வாறாக சிவனைச் சிந்திப்பதாலும், மெய்யுணர்வுடன் தொழுவதாலும், திருநீறணிவதாலும் சிவபூசனை, திருக்கோயில் வழிபாடுகள் நிகழ்த்துவதாலும், கைத்தொண்டு புரிவதாலும் தலப்பயணங்கள் மேற்கொள்வதாலும் மிக எளிதாக இறையருள் பெற்று இப்பிறவியிலேயே பாவம் நீங்கப் பெற்று இன்புறலாம் என்பதை அப்பர் பெருமானார்தம் பாடல்கள் தெள்ளத் தெளிவாக ஆணித்தரமாக உணர்த்துவதைக் காண முடிகிறது. பக்தி நெறியும் தொண்டு நெறியும் இரண்டறக் கலந்த இவ் இயக்கம் சமய மறுமலர்ச்சிக்கு மட்டுமன்றி சமுதாய மறுமலர்ச்சிக்கும் வழிகோலும்தன்மையது. அன்றைய சூழலுக்கு மட்டுமன்றி இயந்திரகதியிலான இன்றைய வாழ்க்கை சூழலுக்கும் பொருந்துவதாகத் திகழும் இந்நெறியினைப் போற்றி பயில்வோமாக.

# ११९. दैव मंदिर आराधना

को.प. नल्लशिवम, तिरुप्पनंदाल.

मंदिर आराधना सबसे श्रेष्ट है: जहाँ मंदिर न हों वहाँ न वास करें आदि महानों का कथन है । ये महानों के कथन अप्परजी के देवारम की लगन से ही हुए हों ऐसे सोचने के लिए हमें प्रमाण मिलते हैं । वैसे अप्परजी देवमंदिर आराधना को चकित होकर बताते हैं । शैवगुरु चार लोग और दूसरे, स्थान-स्थान व मंदिर जाकर मंदिर प्रार्थना करके, स्तुति करके गाये पासुरम ही पन्निरु तिरुमुरैगल हैं । ऐसा कहें तो यह अत्युक्ति न होगी कि स्थल-स्थल यात्रा और दिव्य मंदिर आराधना धर्माचार्यों की दो आँखें हैं ।

भारत की सगुणोपासना के लिए ये देवमंदिर ही आधार बने । अरूप-अनाकारवाले लिंग के रूप और सगुणवाले महेश्वर रूप को देखकर हमारे तिरुमुरै के आचार्यों ने गाया । उसी प्रकार स्थलों को जाकर गाने के साथ चर्या सेवामार्ग में श्रेष्ट अप्पर स्वामीजी अपने देवारम में कई जगहों में देवमंदिर के प्रकार, देवमंदिर के न होनेवाले स्थानों की हानि आदि का संकेत करते हैं । उनपर ध्यान देना ही इस लेख का उद्देश्य है ।

<u>आराधना</u>

आराधना दो प्रकार की होती हैं । वैयक्तिक आराधना और समष्टि आराधना । इसको और आत्मार्थ और परार्थ आदि रूपों में भी बाँटेंगे । मंदिर जाकर आराधना करने में भी कई प्रकार होते हैं । समष्टि आराधना में, लोगों को एकत्र करके मानवता को एक साथ बढाने में हमारे पूर्वजों द्वारा निकाला अद्भुत मार्ग ही देवमंदिर आराधना है । यह देवमंदिर आराधना ही मानव मन को पक्व बनायेगा । आलय को भी "आ- आत्मा", लय-भगवान का चरण में लय होना {एकत्र होना} के अर्थ में बताएँगे । इसलिए आत्मा के शांति पानेवाले स्थान के रूप में इन मंदिरों की स्थापना करके मानवता व आत्मिक मार्ग में भगवद्भक्ति को बताया । हमारे तिरुमुरै के आचार्यों ने भगवान को पूर्ण रूप से अनुभव किये हैं: ज्ञानी हैं । अपने स्थान में से ही आराधना करनेवाले, क्यों । वे अपने मन में ही भगवान का दर्शन करके, परमानंद पानेवाली स्थिति में थे । ऐसा कहें तो यह तो अत्युक्ति नहीं होगी कि वैसा होने पर भी उनका . सभी स्थलों को जाकर भगवान की कीर्ति का गान करने का लक्ष्य, लोगों को एकत्र करके, ऐक्य करके, मानवता को अनुभव कराके जगत में स्थित रूप में रहने के लिए ही है । लोगों को :

जीवन में, अपने जन्म में एक लगाव को, विश्वास को पैदा करके जिलाने के लिए ही तमिलनाडु के भक्तिमार्ग उत्पन्न हुए । उस भक्ति मार्ग के आधार रूप में हैं हमारे अप्पर स्वामीजी ।

"चाहे पहाड ही आकर गिरे मानवो ।
स्थिति से न व्यथित होओ ।"

ऐसा उनका लोगों का कहना जीवन में गहरे लगाव को, विश्वास को जरूर पैदा करेगा । ऐसे विचारों को अपने स्थान में रहकर कहें तो लोगों को नहीं पहुँचेगा । इसी वास्ते स्थल-स्थल जाकर अप्परजी जोर देकर गाते हैं ।

देवमंदिर आराधना

दर्शन ग्रंथ बताते हैं कि मानव शरीर ही दिव्य मंदिर के रूप में बने हैं । आगम और शिल्प ग्रंथ बताते हैं कि देवमंदिर का पूरा रूप मानव शरीर के हरेक अंग के रूप में होते हैं । विशेषकर विमान के निचले भाग से लेकर कलश तक के भाग सब एक एक करे क्रमशः मानव के पैर से लेकर चोटी तक के भागों के रूप में नाम दिये हैं । हमारे पूर्वजों ने माना है कि मांस शरीर मंदिर जैसे, देवमंदिर आराधना भी इस शरीर के लिए आवश्यक है । अप्परजी भी इसको स्पष्ट करने के तौर पर अपने पासुरम में कई जगहों में अंकित करते हैं ।

देवमंदिर जाकर आराधना करने की आवश्यकता को बताते हैं । पदों में सगुणोपासना, स्थल यात्रा दोनों को मिलाकर मूल बताना द्रष्टव्य है ।

देवमंदिर आराधना में जल, पुष्प, अभिषेकसामग्री, तेल आदि ले जाना, मंदिर लीपना, साफ करना आदि भी स्थान पाएँगे । अप्परजी ऐसे बताते हैं कि भगवान की स्तुति करके गाकर जी भर ध्यान करके नाच-गाकर आराधना करना भी अनिवार्य है । प्रमाण के रूप में -

"नाच-गाकर अण्णामलै की आराधना से
हमारे पूर्व-जन्म पाप भाग जाएँगे ।"

5:45

ऐसे देवमंदिर आराधना करें तो मन शांत होगा, दुःख दूर होंगे इसे तिरुवारूर "निलै पेरुमारु एण्णुदियेल नेंजे नीवा" ऐसे शुरू होनेवाले तांडकम में भी अंकित करते हैं ।

## अप्परजी के आट्रूप्पडै

तमिल साहित्य में आट्रूप्पडै के लिए अलग स्थान है । आट्रूप्पडुत्तुदल- रास्ते लगाना के अर्थ में हुए हैं आट्रूप्पडै । ये दो रूपों में गाये जाएंगे । एक अर्थ के लिए रास्त लगाना, दूसरा कृपा के लिए रास्ते लगाना । संघ साहित्य में इन दोनों को पत्तुप्पाट्टु में देख सकते हैं । तिरुमुरुगाट्रूप्पडै को गाये नक्किरर जी मुरुगन की कृपा पाने के इच्छुकवाले को सुझाने के रूप में इस आट्रूप्पडै को बनाया है । हमारे अप्परजी भी अपने देवारम में इस आट्रूप्पडै की युक्ति को, देवमंदिर आराधना की आवश्यकता को बताकर लोगों में ऐक्य भक्ति भाव को पैदा करने उपयोग करते हैं ।

अपने पदों के द्वारा मानव समाज को स्वयं बुलाकर, देवमंदिर जाकर आराधना कीजिए, ऐसी आराधना करें तो इस प्रकार की चीज़ मिलेगी ऐसे सुझाते हैं । अपने जीवन काल में कई दिन आराधना करने से चूक गये ऐसी बात को अंकित करके, हमें अभी से देवमंदिर की आराधना में लगने की प्रेरणा देने वाले कई पद मिलते हैं ।

## देवमंदिर के प्रकार

अप्परजी पल्लव काल में रहते थे । उनके समय के शासक महेंद्रवर्म अपनी मंडकप्पट्टु की शिलालेख में यों अंकित करते हैं -
उसमें यों अंकित करते हैं कि, "ईंटों , काटों, चूनों व ताम्रों से मंदिर न तैयार करके पत्थरों से तैयार किया है । इससे पता चलता है कि पल्लवों के पहले उपर्युक्त चीज़ों से मंदिर बना है । पल्लवों के समय में ही कट्रलि व गुफ़ा मंदिर बने हैं और उस प्रकार अप्परजी भी कई स्थलों को जाकर आराधना की है । इसलिए कई मंदिरों को देखी महिमा उनको है । उसको अपने देवारम में भी अंकित किया है । उनके पद देवमंदिरों के प्रकारों को संकेत करते हैं । उनका क्रम यों हैं --

1. पेरुंकोयिल
2. करक्कोयिल
3. ज्ञाळ्ट्कोयिल
4. कोडुडि कोयिल
5. मणिक्कोयिल
6. इलंकोयिल
7. आलक्कोयिल ऐसे आएंगे ।

ऐसे प्रकारों का संकेत करनेवाले अप्परजी, चोल कोच्चेंगन द्वारा निर्मित सत्तर मंडप मंदिरों को अलग रूप में कई जगहों पर विशेष देकर बताते हैं। और अमुक-अमुक जगहों में देव, तिरुमाल, परमन, आदित्तन, अंगी, कोमन, दानव सप्तऋषि आदियों ने आराधना करके मुक्ति पायी है : अमुक-अमुक प्राणी आराधना करके मुक्ति पायी है: ऐसे अपने देवारम में श्लाघ्य करके गाकर हमें देवमंदिर की आराधना के लिए सुझाते हैं।

देवमंदिर के न होनेवाले गाँव

देवमंदिर आराधना, उसकी आवश्यकता पर जोर दिये अप्परजी ने वैसे देवमंदिर न होनेवाले गाँव की निंदा भी की है। उन सबको गाँव नहीं जंगल ऐसे झिडकियाँ देते हैं। उसी प्रकार -

1. देवमंदिर जाना
2. भस्म लगाना
3. भक्ति अतिरेक में गाना
4. देव मंदिर निर्माण करना
5. श्वेत ध्वज लगाना
6. कली और फूल तोडकर ले जाना

आदि कर्मों की सूची देकर, देवमंदिर आराधना में ये सब निहित हैं ऐसा बताकर इन सबको न करनेवाले गाँव सब जंगल ऐसा बताते हैं।

दूसरे पद में देवमंदिर आराधना न करनेवाले लोगों के प्रति अपनी वेदना प्रकट करते हैं। अप्परजी इन सबको "कोई भी मार्ग न जानेवाले मूर्ख" कहकर मजाक करते हैं।

हम ऐसा कह सकते हैं कि नावुक्करसर के इस प्रकार देवमंदिर आराधना पर जोर देकर कहने का कारण, देवमंदिर आराधना से मानवता विकसित होगी। कलाओं की श्रीवृद्धि होगी, मित्रता बढेगी, अंतर दूर होंगे, वातावरण की सफाई होगी। इसीलिए नावुक्करसरजी ने अपने जानेवाले स्थलों में उळवारम नामक उपकरण रखकर वातावरण की सफाई की। इसमें स्वास्थ्य भाव, मानवता भाव, सेवा भाव आदि को एक साथ देख सकते हैं। मेरा कर्तव्य तो सेवा करना ही है ऐसे गाये नावुक्करसरजी सांसारिक प्राणी विशेषकर मानव जन्म के मोक्ष पाने का एक ही मार्ग देवमंदिर आराधना ही है ऐसा कहें तो अत्युक्ति न होगी।

नावुक्करसरजी की कीर्ति अमर रहे
देव मंदिरों की श्रीवृद्धि हो।

# 119. திருக்கோயில் வழிபாடு

கோ.ப. நல்லசிவம், திருப்பனந்தாள்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று; கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பன முதுமொழிகள். இம்முதுமொழிகளே நம் அப்பர் பெருமானின் தேவாரத் தாக்கத்தாலேயே ஏற்பட்டனவோ என்னுமளவிற்கு நமக்குச் சான்றுகள் கிடைக்கின்றன. அந்தளவிற்கு அப்பர் பெருமான் திருக்கோயில் வழிபாட்டை விதந்து குறிப்பிடுகிறார். சமயக் குரவர் நால்வரும், ஏனையோரும் ஊர் ஊராகக் கோயில் கோயிலாகச் சென்று வழிபட்டு, பரவிப் பாடிய பாசுரங்களே பன்னிரு திருமுறைகள். தல யாத்திரையும், திருக்கோயில் வழிபாடும் சமயச் சான்றோர்களின் இரு கண்களாக அமைந்தன எனில் மிகையாகாது.

பாரதம் கண்ட உருவ வழிபாட்டிற்கு அடிப்படையாக அமைந்தவை திருக்கோயில்கள். அருவுருவத் திருமேனியாகிய இலிங்க உருவிலும், உருவ வடிவங்களாம் மகேச்சுர வடிவங்களைக் கண்டு பாடினர் நம் திருமுறையாசிரியர்கள். அவ்வகையில் தலங்கள் தோறும் சென்று பாடுதலோடு சரியையாம் தொண்டுநெறியிலும் தலைநின்ற அப்பர் சுவாமிகள் தம் தேவாரத்தில் பல்வேறு இடங்களில் திருக்கோயில் வழிபாட்டின் இன்றியமையாமையையும், திருக்கோயில் வகைகளையும், திருக்கோயில் இல்லாமல் உள்ள ஊர்களின் இழிவுகளையும் சுட்டிக் காட்டுகிறார். அவற்றைச் சிந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**வழிபாடு**

வழிபாடு இரண்டு வகைப்படும். தனிமனித வழிபாடு, கூட்டு வழிபாடு. மேலும் இதனை ஆன்மார்த்தம், பரார்த்தம் என்றும் பிரிப்பர். கோயிலுக்குச் சென்று வழிபடுவதிலும் பலவகையுண்டு. கூட்டு வழி பாட்டிற்கும், மக்களை ஒன்றுபடுத்தி மனிதநேயத்தையும் ஒருசேர வளர்ப்பதற்கு நம் முன்னோர்கள் கண்ட அற்புதமான வழியே திருக்கோயில் வழிபாடு. இத்திருக்கோயில் வழிபாடே மனித மனத்தைப் பக்குவப்படுத்தும். ஆலயம் என்பதைக் கூட, 'ஆ - ஆன்மா', 'லயம் - இறைவன் திருவடியில் லயிப்பது' (ஒன்றுபடுவது) என்னும் பொருளில் குறிப்பிடுவர். எனவே ஆன்மாக்கள் அமைதியுறும் இடமாக இவ்வாலயங்களை நம் முன்னோர்கள் நிறுவி மனிதநேய, ஆன்மநேயத்தின் வழி கடவுள் வழிபாட்டை

வலியுறுத்தினர். நம் திருமுறையாசிரியர்கள் இறைவனை முழுதும் உணர்ந்தவர்கள்; ஞானிகள் தாம் இருக்கும் இடத்திலிருந்தே வழிபடக் கூடிய, ஏன்! அவர்கள் தம் உள்ளத்திலேயே இறைவனைக் கண்டு ப்ரமானந்தம் அடையக் கூடிய நிலையிலிருந்தவர்கள். அப்படியிருந்தும் அவர்கள் தலங்கள் தோறும் சென்று இறைவன் புகழைப் பாடியதன் நோக்கம், மக்களை ஒன்று திரட்டி, ஒற்றுமைப்படுத்தி, மனிதநேய மாண்பை உணரச் செய்து வையத்துள் வாழ்வாங்கு வாழச் செய்வதற்காகவே எனில் அது மிகையாகாது.

மக்களுக்கு வாழ்க்கையின் மீதும், தம் பிறவியின் மீதும் ஒரு பிடிப்பை, ஒரு நம்பிக்கையை ஏற்படுத்தி வாழச் செய்யத் தோன்றியதே தமிழகத்துப் பக்தியியக்கம். அப்பக்தி இயக்கத்தின் ஆணி வேராகத் திகழ்பவர் நம் அப்பர் பெருமான்.

**''மலையே வந்து வீழினும் மனிதர்காள்!**
**நிலையின் நின்று கலங்கப் பெறுதிரேல்''**

என்று அவர் மக்கட்குச் சொல்வது வாழ்க்கையில் ஆழமான பிடிப்பை, நம்பிக்கையை ஏற்படுத்துவது நிச்சயம். இதுபோன்ற கருத்துக்களை யெல்லாம் இருந்த இடத்திலேயே கூறினால் எல்லாருக்கும் சென்றடையாது என்ற காரணத்தினாலேயே தலம் தலமாகச் சென்று அப்பர் பெருமான் வலியுறுத்திப் பாடுகின்றார்.

### திருக்கோயில் வழிபாடு

மனித உடம்பே திருக்கோயில் வடிவில் அமைந்துள்ளதாகத் தத்துவ நூல்கள் கூறுகின்றன. திருக்கோயிலின் மொத்த வடிவமும் மனித உடம்பின் ஒவ்வொரு உறுப்பாக, ஆகமங்களும், சிற்ப நூல்களும் கூறுகின்றன. சிறப்பாக விமானத்தின் அடிமுதல் கலசம் வரையுள்ள பகுதிகள் ஒவ்வொன்றும் முறையே மனித உருவின் கால் முதல் உச்சிக் குடுமி வரையுள்ள உறுப்பு களாகப் பெயரிட்டுள்ளனர். ஊன் உடம்பு ஆலயம் என்பது போல, ஆலய வழிபாடும் இவ்வுடம்பிற்கு இன்றியமையாததாகக் கருதினர் நம் முன்னோர். அப்பர் பெருமான் இதனை வலியுறுத்துதல் போல் தம் பாசுரங்களில் பல்வேறு இடங்களில் குறிப்பிடுகிறார்.

திருவங்கமாலையில்,

**''ஆக்கை யாற்பயனென் - அரன்**
**கோயில் வலம் வந்து**
**பூக்கையால் அட்டிப் போற்றி என்னாதஇவ்**
**ஆக்கையால் பயன் என்''**

**''கால்களாற் பயனென் - கறைக்**
**கண்டன் உறை கோயில்**

கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்
கால்களாற் பயன் என்''

என்றெல்லாம் திருக்கோயில் சென்று வழிபடுதலின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகிறார். இப்பாடலில் உருவ வழிபாடு, தலயாத்திரை இரண்டையும் இணைத்து அடிப்படையாக்கியிருப்பது காணத்தக்கது. மேலும்,

''போதொடு நீர்சுமந் தேத்தி
புகுவார் அவர்பின் புகுவேன்''

''வடிவொடு வண்ண மிரண்டும்
வாய் வேண்டுவ சொல்லி வாழ்வேன்''

என வருவனவும் மேற்சொன்ன கருத்தை வலியுறுத்தும்.

திருக்கோயில் வழிபாட்டில் நீர், மலர், அபிடேகப் பொருட்கள், எண்ணெய் போன்றவை எடுத்துச் செல்லலும், அலகிடல், மெழுகிடல் போன்றவையும் இடம்பெறும். இவை எல்லாவற்றுக்கும் மேலாக இறைவனைப் போற்றி வாயாரப்பாடி, மனதார நினைந்து ஆடிப் பாடி வழிபடுவதும் இன்றியமையாததாக அப்பர் பெருமான் குறிப்பிடுகிறார். சான்றாக,

''ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ
ஓடிப்போகும் நம் மேலை வினைகளே'' (5 : 45)

''விளக்கினார் பெற்ற இன்பம்
மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கில் நன் மலர் தொடுத்தால்
தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின்
மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதம் சொன்னார்க்(கு)
அடிகள்தாம் அருளு மாறே'' (4 : 748)

எனும் பாடல்களைக் காணலாம்.

இவ்வாறு திருக்கோயில் வழிபாடு இயற்றினால் மனம் அமைதி பெறும், துன்பம் அகலும் என்பதை திருவாரூர் ''நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா'' எனத் தொடங்கும் தாண்டகத்திலும் குறிப்பிடுகிறார்.

**அப்பரின் ஆற்றுப்படை**

தமிழிலக்கியத்தில் ஆற்றுப்படைக்கென்று தனிப்பட்டதொரு இடம் உண்டு. ஆற்றுப்படுத்துதல் - வழிப்படுத்துதல் என்னும் பொருளில் ஏற்பட்டதே ஆற்றுப்படை. இது இரண்டு நிலைகளில் பாடப்பெறும். ஒன்று பொருளுக்காக ஆற்றுப்படுத்துதல்; மற்றொன்று அருளுக்காக ஆற்றுப்

படுத்துதல். சங்க இலக்கியத்தில் இவ்விரண்டையும் பத்துப்பாட்டில் காணலாம். திருமுருகாற்றுப் படை பாடிய நக்கீரர் முருகன் அருள் பெற்ற ஒருவன் முருகன் அருளைப் பெற விரும்பும் ஒருவனை ஆற்றுப்படுத்தும் முறையில் இவ்வாற்றுப்படையை அமைத்துள்ளார். நம் அப்பர் பெருமானும் தம் தேவாரத்தில் இவ்ஆற்றுப்படை உத்தியை, திருக்கோயில் வழிபாட்டை வலியுறுத்திக் கூறி மக்களிடையே ஒருமித்த பக்தி உணர்வை ஏற்படுத்துதற்குக் கையாள்கிறார்.

''அரிச்சுற் றவினை யால்அடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே'' (5:1:3)

''கொல்லத் தான் நம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவதென் ஏழைகாள்
நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே'' (5:25:1)

''பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ'' (5:25:2)

''பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்
பணிகள் மேவிப் பயனில்லைப் பாவிகாள்'' (5:25:3)

''உமக்கு நல்லது நல்லம் அடைவதே'' (5:25:4)

''பரவு மின்பணி மின்பணி வாரொடே
வரவு மின்விர வாரை விடுமினே'' (5:25:5)

''கால மான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்'' (5:25:9)

''நல்ல நல்லம் எனும்பெயர் நாவினால்
சொல்ல வல்லவர் தூநெறி சேர்வரே'' (5:25:10)

என்றெல்லாம் மனித சமுதாயத்தை வலிய அழைத்து, திருக்கோயில் சென்று வழிபடுங்கள், வழிபட்டால் இன்னின்னவை கிடைக்கும் என்று ஆற்றுப்படுத்துகிறார். தம்முடைய வாழ்நாளில் பல நாட்கள் இவ்வாறு வழிபட முடியாமல் போய்விட்டன என்பதையும் பதிவு செய்து, நம்மை இப்போதே திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபடுங்கள் எனக் குறிப்பிடுவது போலவும் பல பதிகங்கள் உள்ளன. சான்றாக,

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே'' (தனிக்குறுந்தொகை-7)

"போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே"
(புள்ளிருக்குவேளூர் தாண்டகம்-8)

என வரும் பாடல்களைக் காணலாம்.

**திருக்கோயில் வகைகள்**

அப்பர் பெருமான் பல்லவர் காலத்தில் வாழ்ந்தவர். அவர் காலத்து அரசு புரிந்த மகேந்திரவர்மன் தன்னுடைய மண்டகப்பட்டுக் கல்வெட்டில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

அதில், தான் செங்கல்லாலும், மரத்தாலும், சுண்ணாம்பாலும், செம்பாலும் கோயில் சமைக்காது கற்களால் ஏற்படுத்தியுள்ளேன் என்று பதிவு செய்கிறான். இதிலிருந்து பல்லவர்கட்கு முன்பு மேற்கண்ட பொருட்களால் கோயில் அமைத்துள்ளனர் என்பது தெரிகிறது. பல்லவர் காலத்திலேயே கற்றளிகளும், குடவரைக் கோயில்களும் ஏற்பட்டன என்பதும் போதரும். அவ்வகையில் அப்பர் பெருமான் பல்வேறு தலங்களுக்குச் சென்று வழிபட்டவர். ஆதலால் பல்வேறு வகைப்பட்ட கோயில்களைக் கண்ட சிறப்பு அவருக்குண்டு. அவற்றைத் தம் தேவாரத்திலும் பதிவு செய்துள்ளார்.

"பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயி லெழுபதினோ டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில் சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே"
(அடைவுத் திருத்தாண்டகம் - 5)

என்ற தாண்டகம் நமக்குத் திருக்கோயில் வகைகளைச் சுட்டுகிறது. அவற்றை வரிசைப்படுத்தினால்,

1. பெருங்கோயில்
2. கரக்கோயில்
3. ஞாழற்கோயில்
4. கொகுடிக்கோயில்
5. மணிக்கோயில்
6. இளங்கோயில்
7. ஆலக்கோயில்

என வரும்.

இவ்வாறு வகைகளைச் சுட்டும் அப்பர் பெருமான், சோழன் கோச்செங்கணான் எடுப்பித்த எழுபது மாடக்கோயில்களையும் தனிப்பட பல்வேறு இடங்களில் சிறப்பித்துரைக்கிறார். மேலும் இன்னின்ன தலங்களில் தேவர்கள், திருமால், பிரமன், ஆதித்தன், அங்கி, சோமன், தானவர்கள், சப்த ரிஷிகள் போன்றோர் வழிபட்டுப் பேறுபெற்றனர்; இன்னின்ன உயிரினங்கள் வழிபட்டு முத்தி பெற்றன; என்றெல்லாம் தம் தேவாரத்தில் சிலாகித்துப் பாடி நம்மைத் திருக்கோயில் வழிபாட்டிற்கு ஆற்றுப்படுத்துகிறார்.

**திருக்கோயில் இல்லா ஊர்**

திருக்கோயில் வழிபாட்டை, அதன் இன்றியமையாத் தன்மையை வலியுறுத்திய அப்பர் பெருமான் அப்படிப்பட்ட கோயில்கள் இல்லாத ஊர்களை இகழவும் செய்கிறார். அவற்றையெல்லாம் ஊரல்ல அடவிகாடு என இடித்துரைக்கிறார்.

''திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்பொடு வெண்சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்பொடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே'' (6:933)

என்று சற்று சினந்தே கூறுகிறார். அவ்வகையில்,

1. திருக்கோயில் செல்லுதல்
2. திருவெண்ணீறு அணிதல்
3. பத்திமையாற் பாடுதல்
4. தளிகளமைத்தல்
5. வெண்சங்கம் ஊதுதல்
6. விதானம், வெண்கொடி அமைத்தல்
7. அரும்பு மலர்களைப் பறித்து எடுத்துச் செல்லல்

போன்ற பணிகளையும் பட்டியலிட்டு, திருக்கோயில் வழிபாட்டில் இவையெல்லாம் அடக்கம் எனவும் இவற்றைச் செய்யாத மனிதர்கள் உள்ள ஊர்களெல்லாம் காடுகள் என்றும் குறிப்பிடுகிறார்.

மற்றொரு தாண்டகத்தில் திருக்கோயில் வழிபாடு செய்யாதவர்கள் 'அருநோய்கள் மிக நலியப் பெயர்த்தும் செத்தும் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே'' என்று வேதனைப்படுகிறார். இவர்களையெல்லாம் 'மார்க்கம் ஒன்றறியார் மதியல்லிகள்' என்று அப்பர் பெருமான் எள்ளி நகையாடுகிறார்.

நாவுக்கரசர் இந்தளவிற்குத் திருக்கோயில் வழிபாட்டை வலியுறுத்துவதற்குக் காரணம் யாதெனின், திருக்கோயில் வழிபாட்டால் மனிதநேயம் வளரும், கலைகள் வளரும், தோழமையுணர்வு வளரும், வேற்றுமைகள் மறையும், சுற்றுப்புறச் சூழல் பாதுகாக்கப்படும் என்பதற்காகவே எனலாம். அதனாலேயே தான் நாவுக்கரசர் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் உழவாரமாம் கருவி கொண்டு சுற்றுப்புறச்சூழலைத் தூய்மைப்படுத்தினார். இதில் சுகாதார உணர்வும், மனித நேய உணர்வும், தொண்டுணர்வும் ஒருசேரக் காணலாம். என் கடன் பணி செய்து கிடப்பதே என்று பாடிப் பரவிய நாவுக்கரசர் உலக உயிர்கள் குறிப்பாக மனிதப்பிறவி உய்வதற்குரிய ஒரே மார்க்கம் என்று குறிப்பிடுவது திருக்கோயில் வழிபாடு ஒன்று தான் எனில் அது மிகையாகாது.

வாழ்க நாவுக்கரசரின் புகழ்

வளர்க திருக்கோயில்கள்

# १२०. मानव जन्म भी वाँछनीय है

प. नल्लनायकि, तिरुवेट्कलम.

जगत को समझकर सिखानेवाले को हर रोज़ स्तुति करके फैलनेवाले सेवार्थी लोग इस पुण्य भूमि में निकलते रहते हैं । भगवान के प्रति भक्ति करने को ही अपना ध्येय रखकर जिये लोग असंख्य हैं । भगवान की सेवा करनेवाले अडियार लोगों की सेवा करने को ही अपना ध्येय मानकर जिये नायन्मार भी कई हैं । अपने ध्येय में बाधा होने पर भी सगे-संबंधी, अपना प्राण जैसे किसीका भी त्याग करने से आगा पीछा नहीं करेंगे ।

नायन्मार लोगों की भगवद्भक्ति तो अलग जग है । एक ही सीधी रेखा में हुई भक्ति भी कह सकते हैं । ऐसे कह सकते हैं कि नावुक्करसरजी की भक्ति भी इसी रेखा में बनी है । सभी नायन्मार लोगों भगवान के प्रति भक्ति करके चिन्ह अंकित किया । नावुक्करसर तो भक्ति के साथ छंदमाला और कर सेवा रचकर चिन्ह अंकित किया । वे सब मानव कुल को मोक्ष पाने उपाय बताते हैं । प्रेम अधीन करेगा, स्वयं अधीन होगा । त्याग देगा, दूसरों के लिए उसकी आवश्यकता को समझकर अपने देवारम रूपी उद्यान में सार रूप में स्पष्ट किया है । मानव कुल बेरोकटोक के मंदिर-मंदिर जाकर आराधना करने के लिए उळवारम को लेकर मार्ग भर साफ़ किया है । उनके भक्ति प्रेम की वैयक्तिकता को उनके पदों द्वारा देखेंगे ।

<u>मानव जन्म भी वाँछनीय है</u>

अप्परजी बताते हैं कि आराधना करके प्राप्त करनेवाली महत्ता रखनेवाला जन्म मानव जन्म ही है । वे यह भी बताते हैं कि भगवान को आँख भर देखने, भगवत सेवा करने मानव जन्म ही उपयुक्त है ।

वे ऐसा गाते हैं कि प्राणी को सुख पहुँचानेवाले उठाये दिव्य चरण के साथ भगवान के श्रीतांडव करनेवाले अद्भुत दृश्य को आँख भर देखने मानव जन्म ही चाहिए । कारैक्काल अम्मैयार गाती हैं कि जन्म ही नहीं चाहिए । लेकिन अप्परजी तो ऐसे गाते हैं कि जन्म चाहिए और जन्म भर भगवद्भक्ति करके भक्ति करनी चाहिए । मानव जन्म को ही भार स्वरूप समझकर दुखी होनेवाले मनों को भी वे बदल देते हैं ।

<u>न उच्चरित सब दिन</u>

कीट-पतंग के रूप में भी जन्म लेने पर भी तेरी चरण को न भूल सकनेवाले वरदान प्रदान करो ऐसे कहे अप्परजी, दूसरी जगह में ऐसे समझाकर कहते हैं कि मानव के रूप में जीवित रहनेवाले दिन में ही उसका श्रीनाम न कहे दिन सब अजन्मे दिन होंगे । ऐसे कहते हैं कि जन्म लाभ पाना है तो पेरुम्पट्रप् पुलियूरान के बारे में हर दिन बोलना चाहिए ।

<u>शरीर से लाभ</u>

अपने शरीर को कष्ट देकर की जानेवाली भक्ति को, पूजा को अपने तिरुमुरै में कहीं भी संकेत नहीं करते । उनके द्वारा संकेत किये जानेवाले भक्ति मार्ग बहुत सुलभ है । बच्चों से लेकर बूढों तक सबसे पालन करने लायक हैं ।

सिर का मुंडन करके, आँख में, नाक में जीभ में रक्त के लबालब होने तक सलाक चुभाकर, खर्च करके यज्ञाग्नि को बढाकर, जंगल आदि में घूमकर तप करके भगवान के प्रति भक्ति करने को नावुक्करसरजी नहीं चाहते । भगवान तो प्रेमपूर्ण हैं । करुणासागर हैं । मानव के मोक्ष पाने गाँव के मंदिर सबमें वास करनेवाले हैं । जटाधारीवाले वे धूप पडे ओस जैसे पिघलनेवाले हैं । वैसे भगवान अंग के दुःख सहने को चाहेंगे क्या ? अप्परजी इसको स्पष्ट करते हैं कि मानव के अंग तो भगवान की आराधना के लिए ही है । दुःख पहुँचाकर रक्त बहाने के लिए नहीं है । इस शरीर के प्रधान अंग के रूप में होनेवाले सिर को झुकना चाहिए । तिरुक्कुरल भी इसपर जोर देकर कहता है । इसलिए सिर झुकाना तो भक्ति करनेवालों का प्रधान कर्म होना चाहिए । उसी प्रकार भगवान को देखकर सुख पाने के लिए ही आँखें बनी हैं । पलकों में सलाक लगाकर बंदी आँखों से कोई फायदा नहीं है । कानों का दिव्य लाभ तो भगवान के नाम को लगातार सुनने में है । नाक और जीभ तो भगवान के श्रीनाम उच्चारण के लिए हैं । इसको एक जगह गाकर मानवजीव के अति लाभ को स्पष्ट करते हैं । ऐसा भी कहते हैं कि हाथ जोडकर आराधना करने, महाफूल छिडकाकर आराधना करने, पैर श्रीमंदिर की प्रदक्षिणा के लिए बने हैं ।

वे यह भी स्पष्ट करते हैं कि इस प्रकार चोटी से लेकर पैर तक के होनेवाले हमारे अंग भगवान को कैसे सरल रूप में पूजा करके आराधना कर सकते हैं ।

भयभीत होनेवाला कुछ भी नहीं है

मानव जवानी में, साथ आनेवाले क्रियाफल को देखकर भयभीत होकर जीता है । प्रत्येक काल में एक-एक प्रकार का भय है । बुढापे में तो मृत्यु को देखकर डरता है । इस प्रकार डरते-डरते जीने को ही जीवन बताया है यह मानव । अप्परजी अपने तिरुमुरै द्वारा इसको दिखाते हैं कि इस भय को दूर करके, क्रियाफल को दूर करनेवाले, दुख को दूर करनेवाली दवा के रूप में भगवान होते हैं । केडिल नदी के किनारे विराजमान अद्भुत वीरट्टनाथजी के आत्मीय हैं हम । इसलिए किसी भी स्थिति में हमारे भयभीत होने तक जगत में कुछ भी नहीं है । हमें भय दिखाने के लिए भी आनेवाला कुछ नहीं है ।

वे ऐसा संकेत करते हैं कि नमःशिवाय मंत्र को हर दिन जप करने से सभी क्रियाफल दुःख भाग जाएँगे । आकाश की ऊँचाई तक लकडी को जमा करके रखने पर भी उसको जलाने के लिए उतनी हद तक अग्नि की जरूरत नहीं है । एक छोटे अंगारे से असीम उन लकडियों को जलाकर साफ़ कर सकते हैं । उसी प्रकार कई जन्मों में किये, क्रिया बोरे रूपी पाप हमारा पीछा करके इह पर दोनों लोकों में दुःख पहुँचानेवाली उस स्थिति में "नमःशिवाय" नामक पंचाक्षर रूपी अंगारा ही उन पापों को जलानेवाली क्षमता रखती है । ऐसा उनका विश्वास है ।

हर कहीं, हर किसी में भगवान

इस श्लोक में भगवान सर्वव्यापी हैं । उसको पहचानकर ही नावुक्करसरजी जीवन भर यात्रा करके गाँव भर निवास करनेवाले भगवान का दर्शन करके खुश होकर, प्रसन्न होकर गाते हैं । हमसे उनके समान गाँव भर जाकर भगवान का दर्शन नहीं किया जा सकता तो और कैसे आराधना करें ? इसका भी वे मार्ग दिखाते हैं । वे बताते हैं कि पवित्र भक्ति प्रेम हो तो अपने स्थान से ही भगवान का दर्शन करके खुश हो सकते हैं । वे यह भी स्पष्ट करते हैं कि बिना भक्ति के यात्रा करके, तीर्थाटन करके अविश्वास के साथ किये जानेवाले कर्म से कोई भी फायदा नहीं है । वे ऐसे कहते हैं कि हर कहीं भगवान हैं ऐसे न सोचनेवालों को भक्ति से क्या फायदा है ? जन्म लाभ भी नहीं है ।

उनका कहना है कि अन्ज्ञान, व्रत, उपवास करने से क्या फायदा हो सकता है ? अद्भुत तप करने से क्या फायदा है ? वेद मंत्र के जपने से क्या फायदा है ? कई दानों से क्या फायदा है ? पुण्य स्थलों को जाकर स्नानादि करकेभक्ति करने से क्या फायदा है ? वे कहते हैं कि ये सब शिव नाम को पूरे मन से भक्ति प्रेम से न सोचकर करने से बेकार है । वे यह भी स्पष्ट करते हैं कि कहीं भी जाने में जो असमर्थ हैं वे भी शरीर को मंदिर मानकर, अंदर की आत्मा को ही भगवान मानकर सच्चाई से आराधना करें तो मोक्ष पा सकते हैं ।

इस प्रकार अप्परजी मानव भक्ति करके मोक्षपाने के तरीकों को सरल एवं सरस रूप में बताते हैं । वे हमें ऐसे मार्ग दिखाते हैं कि आदि से अंत तक आनेवाले साथी भगवान ही हैं । उनपर आश्रित हों तो हमपर आश्रित पाप, दुःख सब कट जाएँगे । नावुक्करसरजी इसका पक्का दृढ करते हैं कि शिवजी के प्रति प्रेम रखनेवाले भक्त को उनके स्थान तक खोजते हुए आकर वे ही अपनाएँगे । इस लाभ के लिए तो यह मानव जन्म तो चाहिए न , इसलिए अपने शरीर की रक्षा करके प्रेम करेंगे, अपने प्राण से प्रेम करेंगे । तभी अपने शरीर में प्राण में मिली लालिमा से प्रेम कर सकते हैं । व्याकरणकर्ता ऐसे बताएँगे कि इस नश्वर शरीर को "मेय" (सच) नाम देना मंगलवाचन है । मगर वारियार स्वामीजी बताते हैं कि इस शरीर को "मेय" नाम देना उचित है । क्यों ? मालूम है ? इस मेय में ही (शरीर में) वास्तविक लालिमावाले भगवान ठहरते हैं । इसलिए वास्तविक चीज़ के ठहरने के कारण इसको मेय बताना उचित है । यह व्याकरणकर्ता द्वारा दिखानेवाला मंगलवाचन नहीं है । मेय को आगुपेयर कहते हैं । इसको नावुक्करसरजी ने देवारम के छूनेवाले सभी स्थानों में अंकित किया है । भगवान को अपने में ढूँढ लिया । शरीर ही मंदिर है । ऐसे कई स्थानों में स्पष्ट रूप से बताते हैं । इसलिए, भक्ति के गुण व लाभ एक साथ मिलना हो तो मानवता को पूजेंगे ।

# 120. மனிதப் பிறவியும் வேண்டுவதே

ப. நல்லநாயகி, திருவேட்களம்.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனை நாளும் போற்றிப் பரவும் அடியார்கள் இப்புண்ணிய பூமியில் உதித்த வண்ணம் உள்ளனர். இறைவனிடத்துப் பக்தி செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர் எண்ணிலர். இறைவனுக்குச் சேவை செய்யும் அடியார்களுக்குச் சேவை செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த நாயன்மாரும் பலராவர். தங்கள் குறிக்கோளில் தடை ஏற்படின் உற்றார், உறவினர், தன்னுயிர் என்று எதை வேண்டுமாயினும் துறக்கத் தயங்க மாட்டார்கள் அவர்கள்.

நாயன்மாரின் இறைபக்தி என்பது தனி உலகம். ஒரே நேர்க்கோட்டில் அமைந்த பக்தி என்றும் கூறலாம். நாவுக்கரசரின் பக்தியும் இக்கோட்டிலேயே அமைந்தது எனலாம். எல்லா நாயன்மாருமே இறைவன்பால் பக்தி செய்து முத்திரை பதித்தனர். நாவுக்கரசரோ பக்தியோடு பாமாலைகளும், கைத்திருத்தொண்டும் இயற்றி முத்திரை பதித்தார். அவை மனித குலம் உய்ய வகை செய்வன. அன்பு ஆட்படும், ஆட்கொள்ளும், விட்டுக் கொடுக்கும், பிறருக்காக வேண்டும் என்பதனை நன்கறிந்து தமது தேவாரப் பொழிலில் சாரமாகத் தெளிய வைத்துள்ளார். மனிதகுலம் தங்கு தடையின்றி கோயில் கோயிலாகச் சென்று வழிபட உழவாரம் கொண்டு வழியெல்லாம் தூய்மை செய்தவர். அவர்தம் பக்தியன்பின் தனித்துவத்தை அவர்தம் பாடல்கள் மூலம் காண்போம்.

**மனிதப் பிறவியும் வேண்டுவதே**

வேண்டிப் பெறுவதற்குரிய பெருமை உடைய பிறவி மனிதப் பிறவிதான் என்கிறார் அப்பர். இறைவனைக் கண்ணாறக் காணவும், இறைத்தொண்டு செய்யவும் மனிதப் பிறவியே உகந்தது என்கிறார்.

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியில் பால்வெண் ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற்
பாதமும் காணப் பெற்றால்

மனித்தப் பிறவியும் வேண்டுவ
தே இந்த மாநிலத்தே

உயிர்க்கு இனிமை சேர்க்கும் தூக்கிய திருவடியோடு ஈசனது திருநடனம் புரியும் அற்புதக் காட்சியைக் கண்ணாறக் காண்பதற்கே மனித்தப் பிறவி வேண்டும் என்று பாடுகிறார். பிறிதோரிடத்தும்,

வாய்த்தது நந்தமக்கு ஈதுஓர்
பிறவி மதித்திடுமின்
...................

என்று பாடுகிறார். பிறவாமை வேண்டும் என்று பாடுகின்றார் காரைக்கால் அம்மையார். ஆனால் அப்பரோ பிறவி வேண்டும், பிறவிதோறும் இறையன்பு பூண்டு பக்தி செய்ய வேண்டும் என்று வேண்டுகிறார்.

படைக்கலமாக உன் நாமத்து
எழுத்துஅஞ்சு என் நாவிற் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்
பும்உனக்கு ஆட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன்.............

இறப்பன் பிறப்பன் இறந்தால் இருவிசும்பு ஏறுவன், ஏறின் உன்னை மறப்பன் கொலொ என்று என் உள்ளங்கிடந்து மருகிடுதே என்று பாடி மனிதப் பிறப்பையே பாரமாக நினைத்து வருந்தும் மனங்களையே மாற்றியமைத்து விடுகிறார்.

**பேசாத நாளெல்லாம்**

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரம் தர வேணடும் என்ற அப்பர் பெருமான், மற்றோரிடத்து மனிதனாக வாழும் நாளிலேயே அவன் திருநாமம் சொல்லாத நாளெல்லாம் பிறவாத நாட்களாகும் என்று தெளிந்து கூறுகிறார்.

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

பிறவிப்பேறு பெற வேண்டுமாயின் பெரும்பற்றப் புலியூரானை நாளும் பேச வேண்டும் என்கிறார்.

**யாக்கையாற் பயன்**

தன்னை வருத்திச் செய்யும் பக்தியை, பூசனையைத் தமது திருமுறையில் எங்குமே அவர் சுட்டவில்லை. அவர் காட்டும் பக்தி வழிமுறைகள் மிகவும் எளிமையானவை. குழந்தை முதல் பெரியோர் வரை பின்பற்றக் கூடியன.

தலையை மழித்தோ, கண்ணிலும், மூக்கிலும், நாக்கிலும் இரத்தம் வழிய வழிய அலகு குத்தியோ, செலவு செய்து வேள்வித்தீ பெருக்கியோ, காடு மேடுகளில் அலைந்து தவமிருந்தோ இறைவன்பால் பக்தி செய்வதை நாவுக்கரசர் விரும்பவில்லை. இறைவன் அன்புமயமானவன். கருணைக் கடல். மனிதன் உய்யவே ஊர்தோறும் கோயிலில் உறைந்திருப்பவன். அப்பனிச் சடையான் வெய்யிற்பட்ட பனிபோல் உருகும் தன்மையன். அப்பேற்பட்ட இறைவன் அங்கம் வதைபடுவதை விரும்புவானா? மனித அங்கங்கள் இறைவனை வழிபடத்தானே அன்றி ஊறு விளைவித்து உதிரம் கொட்ட அல்லவே என்று தெளிவுபடுத்துகிறார் அப்பர் பெருமான்.

**தலையே நீ வணங்காய் - தலை**
**மாலை தலைக்கணிந்து**
**தலையா லேபலி தேரும் தலைவனைத்**
**தலையே நீ வணங்காய்**

இச்சரீரத்தின் முதன்மை அங்கமாகிய தலை வணங்குதல் வேண்டும் என்கிறார். இதையே குறளும் கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை என்கிறது. எனவே தலை வணங்குதல் என்பது பக்தி செய்வோர்க்குத் தலையாய பணியாகும். அதேபோல் ஈசனைக் கண்டு மகிழவே கண்கள் அமைந்துள்ளன. மாறாக இமைகளில் அலகிட்டு மூடிய கண்களால் யாதொரு பயனும் இல்லை. செவிகளின் பெரும் பேறு ஈசன் நாமம் இடைவிடாது கேட்பது தான். மூக்கும், நாக்கும் இறைவன் திருநாமம் உச்சரிக்கவே உள்ளன. இதையே பிறிதோரிடத்து "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச் சென்னியும்" என்று பாடி மனிதப் பிறவியின் பெரும் பேற்றைத் தெளிவு செய்கிறார். கைகள் கூப்பித் தொழவும், மாமலர்த் தூவித் துதிக்கவும், கால்கள் திருக்கோயில் களை வலம் வரவும் அமையப் பெற்றன என்பார்.

இவ்வாறு உச்சி முதல் பாதம் வரை உள்ள நமது அங்கங்கள் ஈசனை எவ்வாறு எளிய முறையில் பூசனை செய்து வழிபட முடியும் என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

**அஞ்சுவது யாதொன்றுமில்லை**

மனிதன் இளமையில் தொடரும் வினைப்பயனைக் கண்டு அஞ்சி வாழ்கிறான். ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு அச்சம். முதுமை யிலோ மரணம் கண்டு அஞ்சுகிறான். இப்படி அஞ்சி அஞ்சி வாழ்வதையே

வாழ்வாகக் கொண்டுள்ளான் மனிதன். அப்பர் பெருமான் தமது திருமுறை மூலம் அச்சத்தை நீக்கி வினைப்பயனைப் போக்கும், துயர் துடைக்கும் மருந்தாக இறைவன் எவ்வாறு விளங்குகிறார் என்று காட்டுகிறார்.

**சுண்ணவெண் சந்தனச் சாந்தும்**
**சுடர்திங்கட் சூளா மணியும்**
**வண்ண உரிவை யுடையும்**
**வளரும் பவள நிறமும்**
**அண்ணல் அரண்முரண் ஏறும்**
**அகலம் வளாய அரவும்**
**திண்ணென் கெடிலப் புனலும்**
**உடையார் ஒருவர் தமர்நாம்**
**அஞ்சுவது யாதொன்றும் இல்லை**
**அஞ்ச வருவதும் இல்லை.**

கெடில நதிக் கரையில் வீற்றிருக்கும் ஒப்பற்றவராகிய வீரட்ட நாதருடைய தமர் நாம். எனவே எத்தன்மையிலும் யாம் அஞ்சுமாறு உலகில் ஒரு பொருளும் இல்லை. நம்மை அஞ்சுமாறு செய்ய வருவதும் யாதும் இல்லை என்கிறார்.

நமச்சிவாய மந்திரத்தை நாளும் ஓதினால் எல்லா வினைப்பயனும், துன்பமும் துயரும் ஓடிவிடும் என்று சுட்டுகிறார்.

**விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்**
**உண்ணிய புகில்அவை ஒன்றும் இல்லையாம்**
**பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை**
**நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே**

விண்ணளவு உயரத்திற்கு விறகுக் கட்டைகளை அடுக்கி வைத்தாலும் அதனை எரிக்க அதன் அளவு நெருப்பு தேவையில்லை. சிறு நெருப்புப் பொறி கொண்டு அளவு கடந்த அவ்விறகுக் கட்டைகளை எரித்து ஒன்றுமில்லாமல் செய்துவிடலாம். அதே போல் பல பிறவிகளில் செய்து, வினை மூட்டைகளாகிய பாவங்கள் நம்மைத் தொடர்ந்து பற்றி இம்மை யிலும் மறுமையிலும் துன்பத்தை விளைவித்துக் கொண்டு இருக்கும் நிலையில் 'நமச்சிவாய' எனும் திருவைந்தெழுத்தாம் மந்திரப் பொறியே அப்பாவங்களைச் சுட்டெரிக்கும் வல்லமை பெற்றது என்பது அவர் தரும் நம்பிக்கையாம்.

**எங்கும், எதிலும் ஈசன்**

இப்பூவுலகில் இறைவன் நீக்கமற நிறைந்துள்ளான். அதை உணர்ந்தே தான் நாவுக்கரசரும் வாழ்நாள் தோறும் யாத்திரை செய்து ஊர்தோறும் உறைந்துள்ள இறைவனைக் கண்டு களித்து, நெகிழ்ந்து பாடிப் பரவுகிறார்.

நம்மால் அவர்போல் ஊர்தோறும் சென்று இறைவனை வழிபட முடியாது எனில் வேறு எவ்வாறு வழிபடுவது? என்பதற்கும் அவரே வழிகாட்டு கிறார். தூய்மையான பக்தியன்பு இருக்குமேயாயின் இருக்கும் இடத்திலேயே இறைவனைத் தரிசித்து மகிழலாம் என்கிறார். மேலும் பக்தியில்லாது யாத்திரை செய்து தீர்த்தமாடி நம்பிக்கையற்றுச் செய்யும் செயலால் யாதொன்றும் பயனில்லை என்பதையும் தெளிவுபடுத்துகிறார்.

**'கோடித் தீர்த்தம் கலந்து குளித்து அவை**
**ஆடினாலும் அரனுக்கு அன்பில்லையேல்'**

என்றும்,

**கங்கை ஆடில் என் காவிரி ஆடில் என்................**

என்றும் பாடி எங்கும் ஈசன் என்று எண்ணாதவர்க்குப் பக்தியால் என்ன பயன், பிறவிப்பேறும் இல்லை என்கிறார்.

நோன்பும், விரதமும் ஆற்றி உபவாசம் இருந்தால் வரும் பயன் என்ன? அரிய தவம் மேற்கொண்டால் பயன் என்ன? வேதம் ஓதினால் பயன் என்ன? அறம்பல ஆற்றின் பயன் என்ன? புனித தலங்கள் சென்று நீராடி வழிபட்டால் பயன் என்ன? இவையாவுமே சிவ நாமத்தை மனதார பக்தியன்புடன் நினையாமல் செய்வதால் வீணே என்கிறார். எங்குமே போக இயலாதவர்கள் கூட

**காயமே கோயிலாகக்**
**கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக**
**மனமணி இலிங்கமாக**
**நேயமே நெய்யும் பாலா**
**நிறைய நீர் அமைய ஆட்டிப்**
**பூசனை ஈசனார்க்குப்**
**போற்றவிக் காட்டி னோமே.**

உடலையே கோயிலாகக் கொண்டு, உள்ளுறைந்திருக்கும் ஆன்மாவை இறைவனாக எண்ணி 'பொய்யின்றி மெய்யோடு வழிபட்டால் உய்யலாம்' என்றும் தெளிவுபடுத்துகிறார்.

இவ்வாறு மனிதன் பக்தி செய்து உய்யும் வழிகளை எளிமை யாகவும் இனிமையாகவும் உணர்த்துகிறார் அப்பர் பெருமான். ஆதி முதல் அந்தம் வரை வரும் வழித்துணை இறைவனே என்றும் அவனைப் பற்றினால் நம்மைப் பற்றியிருக்கும் பாவங்களும், துயரங்களும் அறுந்து போகும் என்றும் நமக்கு வழிகாட்டுகிறார். அரன்பால் அன்பு கொண்ட அடியவரை இருக்கும் இடம் தேடி அவனே வந்து ஆட்கொள்வான்

என்று உறுதி செய்கிறார் நாவுக்கரசர். இப்பேற்றுக்கு இம்மனிதப் பிறவி வேண்டுந்தானே! ஆதலின் நம் உடலைப் பேணிக் காதலிப்போம், நம் உயிரைக் காதலிப்போம். அப்போது தான் நம் உடலில் உயிரில் கலந்துள்ள அச்செம்பொருளைக் காதலிக்க முடியும். காராட்டை வெள்ளாடு என்பது போல அழிந்து போகக்கூடிய இப்பொய்யான உடலுக்கு 'மெய்' என்று பெயர் வைத்திருப்பது மங்கல வழக்கு என்பர் இலக்கண நூலார். ஆனால், வாரியார் சுவாமிகள், இவ் உடலுக்கு மெய் என்று பெயர் வைத்திருப்பது மிகவும் பொருத்தமாகும் என்கிறார். ஏன் தெரியுமா? இந்த மெய்யில் (உடலில்) தான் மெய்யான செம்பொருளாம் இறைவன் தங்குகிறான். எனவே மெய்ப்பொருள் தங்குவதால் இதனை மெய் என்று சொல்வது பொருத்தம். இலக்கண நூலார் காட்டும் மங்கல வழக்கல்ல இது. மெய்யென்பது ஆகுபெயர் என்பார். இதனை நம் நாவுக்கரசர் தம் தேவாரத்தின் தொட்ட தொட்ட இடமெல்லாம் பதிவு செய்துள்ளார். தேடித் தேடொணா தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன் என்றும் தொண்டர் அகமலால் கோயிலில்லை ஐயன் ஐயாறனார்க்கே என்றும் காயமே கோயிலாக என்றும் பலவிடங்களிலும் தெளிவாகக் கூறுகின்றார். எனவே, பக்தியின் பண்பும் பயனும் ஒருசேரக் கிடைக்க வேண்டுமாயின் மானுடம் போற்றுவோமாக.

# 121. அப்பர் வாழ்வும் வாக்கும் யாத்திரையே

த.கோ. பரமசிவம், தஞ்சை.

'ஆடை இல்லா மனிதன் அரை மனிதன்' என்பது முதுமொழி. பாரதத்தின் பழைய நூல்கள் எல்லாம் யாத்திரை செய்யாதவனை அரை மனிதனாகச் சித்திரித்துள்ளன. யாத்திரை செய்யாதவனைப் பிணத்துக்குச் சமமாக ஒரு நூல் சாடுகின்றது. ஆடையின் இன்றியமையா நிலைக்குச் சமமாக யாத்திரையைக் கருதினர் நம் முன்னோர் என்பது இதனால் தெரியவரும். யாத்திரை தரும் பட்டறிவு மனித நேயத்தை வளர்க்கும். நம்மிடமுள்ள மிருகத் தன்மையை குறைத்துவிடும். அறியாமையை நீக்கி அறிவை வளர்த்துவிடும். குறுகிய மனப்பான்மையை உடைத்து விடும். அன்பை வளர்த்து அருள் நெறியில் நம்மைப் புகுத்திவிடும். அறிவு பெருகி அருள் நிறைந்தால் இறையை உணர்ந்துவிட முடியும். இறையை உணர்ந்தால் வீடுபேறு கிடைக்கும். இப்'படிநிலை' வளர்ச்சிக்கு யாத்திரை இன்றியமையாதது என்பதால்தான் நம் முன்னோர் இதனை வலியுறுத்தினர் போலும். இதனை வாழ்க்கையின் இன்றியமையாக் கடமைகளுள் ஒன்றாக்கிக் காட்டினர். இக்கட்டுரை அப்பர் பெருமான் மேற்கொண்ட வாழ்க்கை நெறி யாத்திரையாகவே அமைந்ததையும் அவர் பாடல்கள் யாத்திரையை வலியுறுத்துவதையும் நினைத்துப் பார்க்க முற்படுகிறது.

பாரதத்தின் தலைசிறந்த மனிதர்களும் அருளாளர்களும் யாத்திரை வழியாகத்தான் நமக்கு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளனர். லெமூரியாவில் தோன்றிய ஆதிமனிதன் முதலாக வேட்டையாடித் திரிந்த பழங்கற்கால மனிதர்களும் பிறரும் உலகம் முழுக்கப் பரவி வளர்ந்தது யாத்திரையின் அடிப்படையிலேயே அமைந்தது. இதனை மானிடவியலார் தெளிவாக உணர்த்துவர். வரலாற்றுக் காலத்திலோ யாத்திரை பற்றிய எண்ணற்ற சான்றுகள். இராமாயணம் காட்டும் இராமபிரான் 14 ஆண்டுகள் பாரதம் முழுக்கச் சுற்றித் திரிந்த மிகப்பெரிய யாத்திரையை மேற்கொண்டார். மகாபாரதத்தின் தலைவர்களாம் பாண்டவர்களும் அவ்வாறே பாரதம் முழுவதும் யாத்திரை செய்து 13 ஆண்டுகளைக் கழித்தனர். குறிப்பாக, அர்ச்சுனன் இமயம் நோக்கிச் சென்று தவம் புரிந்ததையும், தீர்த்த யாத்திரையாகத் தென்னாடு முழுவதும் பயணித்ததையும் பாரதம் விரிவாகக் கூறுகிறது. இறுதியில் முத்திப்பேறு வேண்டி பாண்டவர்கள் இமாலய

யாத்திரையை மேற்கொண்டதையும் காணலாம். ஆக, அரச குடும்பத்தினரே இவ்வளவு பெரிய யாத்திரைகளை மேற்கொண்டனர் எனில் அருளாளர் யாத்திரைகள் பற்றிச் சொல்லாமலே விளங்குமன்றோ? ஆதிசங்கரரின் பாரத யாத்திரைக்கு இணையாக அப்பரின் யாத்திரை அமைந்ததைப் பெரியபுராணத்துள் விரிவாகக் காணலாம்.

**திருத்தலப் பயணம்**

திருநாவுக்கரசர் மருள்நீக்கியாராகப் பிறந்தபோது சைவராகவும் இளவயதில் சமணராகித் தருமசேனராக உயர்ந்தும் பின்னர் தெளிந்து சைவராகவும் வாழ்ந்தவர். சைவராகத் தோன்றியபோது உள்ளூரில் அறச்செயல்கள் செய்தார். என்றாலும் யாத்திரை மேற்கொள்ளவில்லை. சமணராக வாழ்ந்தபோது பாடலிபுத்திரத்தில் - திருப்பாதிரிப்புலியூரிலேயே இருந்ததாக வரலாறு பேசுகிறது. ஆயின், அவர் மீண்டும் சைவரான பின்பு மேற்கொண்ட தலயாத்திரையைப் பெரியபுராணம் விரிவாகப் பேசுகிறது.

திருவதிகையில் திலகவதியார் தந்த திருநீற்றைப்பூசி, மீண்டும் சைவராகிய அவர் 'கூற்றாயினவாறு' என்னும் பதிகம் பாடித் தொழுதபின் சூலைநோய் நீங்கப் பெற்றதுடன், இறையருளால் 'திருநாவுக்கரசு' எனும் திருப்பெயரும் கொண்டு பெருமிதம் கொண்டார். அதுமுதல் அவர் திருக்கோயில் வழிபாட்டில் தலைநிற்பவரானார். திருநாவுக்கரசரின் மதமாற்றமும் மனமாற்றமும் பொறாத சமணர் பல்வகை இடர்களுக்கும் அவரை ஆளாக்கினர். ஆயின், அக்கொடுமைகளிலிருந்தெல்லாம் மீண்ட நாவுக்கரசர் இறைவன் திருவருளே தம்மைக் காத்தருளியது என வியந்து மேலும் பதிகங்கள் பாடி 'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம், சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம் - ஈசன் திருவடிக்கே ஆளாகிப் பணி செய்து உய்வோம்' எனச் சைவத்தில் உறுதியானார்.

திருவதிகையினின்று திருப்பாதிரிப்புலியூர் வந்த நாவுக்கரசர் இந்நிகழ்ச்சிகளுக்குப்பின் மீண்டும் திருவதிகை சென்றார். திருவதிகை செல்லும்போது திருமாணிகுழி, திருத்தினை நகர், கெடிலம் ஆகிய இடங்களில் உறையும் இறைவனைப் பாமாலைகளால் துதித்துப் போற்றி வழிபட்டார். இதுவே அவர்தம் முதல் யாத்திரையாகும். பின்னர் திருவதிகை வீரட்டேசுவரரைப் போற்றி மகிழ்ந்தார். அடுத்தடுத்துப் பல பதிகளையும் கண்டு வழிபடவேண்டும் என்ற பேராவலால் தம் யாத்திரையைத் தொடர்வார் ஆனார்.

**இந்நாளில் திருப்பணிகள் செய்கின்ற இன்றமிழ்க்கு**
**மன்னான வாகீசத் திருமுனியும் மதிச் சடைமேல்**

**பன்னாகம் அணிந்தவர்தம் பதிபலவும் சென்றிறைஞ்சிச்**
**சொன்னாமத் தமிழ்புனைந்து தொண்டு செய்வான் தொடர்ந்**
**தெழுந்தார்.**

எனச் சேக்கிழார் வரலாறு உரைப்பது போல பல பதிகளையும் சென்றடைந்து கைத்திருத்தொண்டு செய்ததுடன் சொற்றமிழ்ப் பாமாலைகள் புனைந்து பாடியும் தமிழகம் முழுதும் யாத்திரை செய்வாரானார். இதனை விரிக்கின் பெருகும். தமிழகம் போலவே பாரதத்தின் பிற தலங்களுக்கும் சென்று ஆங்காங்குள்ள இறைவனைப் பணிந்து போற்றிய அவர் கயிலைக் காட்சியையும் கண்டுவிட வேண்டும் எனும் விருப்பால் திருக்காளத்தி யினின்று கயிலை யாத்திரையை மேற்கொண்டார். இந்த யாத்திரைதான் கடுமையானது. நெடுந்தொலைவானது, இயலாதது என்றாலும் உறுதியாகத் தொடர்வாரானார். அவர்தம் யாத்திரையைச் சேக்கிழார் காட்டுமாறு காணலாம்.

உத்தரத்திசை, கானியாறு, மானவிஞ்சையர்கள், வானநாடர்கள், வாண் இயக்கர்கள், சித்தர்கள், கானகின்னரர், பன்னகாதிபர், காமசாரிகளே முதல் மோனிகள் எனப் பலரும் வந்திறைஞ்சும் பருப்பதம் பணிந்தபின், தெலுங்கு, கன்னடம் எய்தி, கருநடங்கழி, பின் கலந்த வனங்களும், திருநதித்துறைகளும் கடந்து மாளவம் அடைந்து அங்கிருந்து அருஞ்சுரங்கள் கடந்து அறங்கள் நீரும் இலாடபூமி, பங்கயத்துப் பழனத்து மத்திய பைதிரம், வாரணாசி கற்சுரங்களைக் கடந்து இமயத்து அடிவாரம் சென்றடைந்தார்.

**அன்ன நாடு கடந்து கங்கை அணைந்து சென்று வலங்கொளும்**
**மின்னு வேணியர் வாரணாசி விருப்பினோடு பணிந்துடன்**
**பின்ன டைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து கங்கை கடந்துபோய்**
**மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுரம் முந்தினார்**

என அவர்தம் வழித்தடத்தைக் குறிக்கின்றார் சேக்கிழார். ஆக, தம்முடன் வந்த அடியார்களை வாரணாசியிலேயே நிறுத்திவிட்டுத் தாம் மட்டுமே தனித்தும் துணிந்தும் கயிலை யாத்திரையை மேற்கொண்டதாகக் கொள்ளலாம்.

பசி, தள்ளாமைக் கொடுமைகளால் அலைப்புண்ட அவர் நடந்து நடந்து ஓய்ந்துவிட்ட போதும் தவழ்ந்தும் தடவியும் தாவியும் ஊர்ந்தும் அப்பனிமலையில் ஏறின செய்தி வியப்பாக இருப்பதுடன், உள்ளத் திலேயே இறைவன் காட்சியைக் கண்டவர் ஏன் இப்படி வருந்தி பயணம் செய்தார்? அப்படி என்ன வேண்டிக் கிடக்கிறது? வியப்பாகவும் புதிராகவும் இருக்கிறது. இதற்கெல்லாம் விடை காண்பது அரிது என்றாலும் திருத்தலப் பயணத்தின் இன்றியமையாமையே அவ்வாறு செய்வித்தது என ஒருவாறு முடிவு காணத்தகும். மனிதரால் போகலாகா நெறி

என்றபோதிலும் உள்ளத்து மிக்கிருந்த காதலால் தனித்துச் சென்றார். 'பங்கயம் புரை தாள் பரட்டளவும் பசைத்தசை தேயவும் தம் கரங்கள் இரண்டுமே கொடு தாவி ஏகினார்'. கைகளும் தேய்ந்தன. சிதைந்தன. வருந்தி உந்தினார் மார்பினால், மார்பும் தசை நைந்து சிந்தி எலும்பும் முரிந்தன, புரண்டு புரண்டு சென்றனர். தம்முன் தோன்றிய முனிவரிடம், 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால், மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்' என உறுதிபட மொழிந்தார் (ஆக, மாளும் இவ்வுடல் இருக்கும் வரை திருத்தலப் பயணங்கள் செய்ய வேண்டும் எனக் குறிப்பால் உணர்த்துகின்றார் போலும்) இவ்வளவு துன்புற்றும் திருவையாற்றில் கயிலைக் காட்சியைக் கண்ட பின்பும் தம் இறுதி நாள்களிலும் பூம்புகலூர் வரை பயணங்கள் மேற்கொண்டு தம் வாழ்நாள் முழுவதும் யாத்திரை யாகவே நிறைவு செய்தார். ஆக அவரது வாழ்க்கைப் பாடம் உணர்த்துவது யாத்திரை இன்றியமையாதது எனச் சுருக்கமாகக் கூறலாம்.

திருவதிகையில் தொடங்கிய அவர்தம் யாத்திரை கால்நடையாகவே இப்பாரத பூமி எங்கணும் நிகழ்ந்தது. அவர் சைவத்துக்கு மீண்டு வந்து வாழ்ந்த காலம் சுமார் 30 ஆண்டுகளே. இக்காலத்தில் அவர் பயணித்த தூரம் சுமார் 5000 மைல்களுக்கும் மேல் அன்றும் இன்றும் என்றும் இது ஒரு உலக சாதனையாகவே அமைதல் கூடும். அந்த அளவுக்கு அவரது யாத்திரை வாழ்க்கை அமைந்து சிறந்தது காணத் தகுவதாம்.

இனி அவர்தம் வாக்கின் திறம் யாத்திரையை வலியுறுத்துகிறதா எனக் காணலாம்.

### அகவழிபாடு

பக்தி இயக்கம் தனி வழிபாடு, கூட்டு வழிபாடு, கோயில் வழிபாடு, திருத்தல வழிபாடு எனப் பல வகைகளிலும் இறைவனின் அர்ச்சா வடிவத்தை வழிபடும் படிநிலைகளைக் காட்டியுள்ளது. இறைவனை மலர் கொண்டு அர்ச்சிப்பது, நீரும் பாலும் தயிரும் கொண்டு திருமுழுக்காட்டுவது, தூபதீபங்களைக் கொண்டு ஆராதிப்பது அவன் கோயில்களை வலம் வருவது. அவன் திருவிழாக்களைத் தரிசிப்பது எனப் பல நிலைகளைப் பரிந்துரைத்துள்ளது என்றாலும் இவை எல்லாவற்றையும் விட உள்ளத்தால் அவனை உருக்கமுடன் நினைந்து தொழுவதையே உயர்வாகக் காட்டி யுள்ளது. உள்ளத்தால் வழிபடாது புறவழிபாடுகளையே பெரிதுபண்ணும் சடங்குக்ளைப் பக்தி இலக்கியங்கள் வெறுத்துள்ளன.

நம் திருநாவுக்கரசரும் இறைவனைத் தம்முள்ளே தேடிக்கண்டு கொண்டதால் பெருமிதம் கொள்கிறார். இவ்வூனுடம்பில் இறைவன் தங்குகிறான் மனிதனின் உள்ளமே அவனது விருப்பமான திருக்கோயில் எனச் சொல்லி அகவழிபாட்டைப் பெரிதும் வரவேற்றுப் பதிவு செய்துள்ளார்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே (5:204:10)

நாமம்பரவி நமச்சிவாய வென்னும் அஞ்செழுத்தும்
சாமன்றுரைக்கத் தகுதிகண்டாய் எங்கள் சங்கரனே (4:103:3)

காலையும் மாலையும் தொழுவார் மனம்
ஆலயம் ஆரூர் அரநெறியார்க்கே (4:17:8)

ஊனையே கழிக்க வேண்டில்
உணர்மின் உள்ளத் துள்ளே (4:25:3)

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான்
பக்தியால் ஏத்தி நின்று பணிபவர் நெஞ்சத்துள்ளார் (4:25:5)

சிந்தையுள் சிவமதானார் திருச்செம்பொன் பள்ளியாரே...
நினைப்பவர்மனம் கோயிலாகக் கொண்டவர்
தொண்டர் அகமலாது கோயில்லை ஐயன் ஐயாறனார்க்கே
கருத்தினால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்
நடுதறியைக் காணலாமே.

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீர் அமையஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.

(பொது நேரிசை)

உள்ளம் உள்கி உவந்து சிவனென்று
மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே (5:79:9)

மலர்தூவி நினைந்தெழுவார் உள்ளம் நீங்காது இருந்தவன்காண்
மறவாதே தன்திறமே வாழ்த்தும் தொண்டர் மனத்தகத்தே
அனவரதம் மன்னிநின்ற திறவானை (6:68:8)

என வருகின்ற எண்ணற்ற இடங்களில் அகவழிபாட்டின் சிறப்பை அவ்வழிபாட்டின் பயனை - அதன் இன்றியமையா அடிப்படையை அவர் வலியுறுத்தி இருத்தலைக் காணலாம். இன்னும் ஒருபடி மேலே சென்று புறவழிபாடுகளால் பயன் இல்லை என்பதை ஆணித்தரமாகக் கூறுகிறார் அவர் புறவழிபாடு இல்லாவிட்டாலும் ஒன்றும் கெட்டுவிடாது. அவர் அகவழிபாடு கலக்கவில்லை எனில் அனைத்தும் வீணே என்கிறார்.

கங்கை ஆடிலென் காவிரி ஆடிலென்
கொங்கு தண்குமரித் துறை ஆடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்
எங்கும் ஈசன் எனாதவர்க்கு இல்லையே.

இவ்வாறே பாவநாசத் திருப்பதிகம் முழுதும் புறச்சடங்குகளால் மட்டும் பயன் வந்துவிடாது என்பதைத் தெளிவாக்குகின்றார். எனவே, பக்திக்கு அகவழிபாடே அடிப்படை அதுவே இன்றியமையாத பக்தி நெறி என்பதை அவர்தம் பாடல்களில் தொட்ட தொட்ட இடமெல்லாம் காணலாம்.

## தலயாத்திரை வேண்டும்

தம் தேவாரப் பாக்களின் மூலை முடுக்குகளில் எல்லாம் அகவழிபாட்டை வலியுறுத்திய திருநாவுக்கரசர் ஆங்காங்கு தலப்பயணங்கள் மேற்கொண்டு ஆங்காங்குள்ள இறைத் திருமேனிகளைக் கண்டு வழிபடுங்கள் எனவும் அறிவுறுத்தியுள்ளார். அவர்தம் வாழ்க்கையையே யாத்திரையாக்கி வாழ்ந்தவரன்றோ? ஆதலின் யாத்திரை செல்ல வேண்டும் எனத் தம் பாடல்களில் கூறுவாராயினர் போலும். சில தலங்களை யாத்திரை சென்று தொழ வேண்டும் என்கிறார். சிலவற்றை அடைந்து பயன்பெற வேண்டும் என்கிறார். சிலவற்றை நேரில் கண்டு தொழவேண்டும். சிலவற்றைத் தேடிச் செல்லவேண்டும், சிலவற்றைச் சேர்ந்து பயன்பெற வேண்டும், சில கோயில்களை வலம் வந்து பணிய வேண்டும். சிலவற்றைக் கூடித் தொழ வேண்டும். சிலவற்றை அணைந்து பெருமை பெற வேண்டும். சில கோயில்களின் திருமேனிகளில் மலர்தூவி வழிபட்டு வினை போக்க வேண்டும் எனப் பலவாறு அறிவுறுத்துகிறார்.

இவ்வுடம்பின் பயன் இறைவனைத் தொழுதலே. அதிலும் கால்களின் பயன் அவன் திருக்கோயில்களை வலம் வருதலே என்கிறார். ஓரிடத்து யாத்திரையை உளங்கொண்டு "கால்களால் பயனென் கறைக் கண்டன் உறைகோயில் கோலக் கோபுரக் கோகரணம் சூழாக் கால்களால் பயனென்?" எனப் பாடுகிறார். ஆம், வாழ்வில் ஒருமுறையாவது நீ கோகரணம் சென்று தொழுதுவா என ஆணையிடுவது போல இது காணப்படுகிறது. எனவே யாத்திரையை அவர் வலியுறுத்துகிறார் எனத் தெளியலாம்.

சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம்பலம் (4:81:2)

சென்றுநீ தொழுதுய் கண்டாய் திரு இராமேச்சுரமே (4:61:4)

சுருள்கொள் செஞ்சடையான் கச்சிஏகம்பம்
இருள்கெடச் சென்று கைதொழுது ஏத்துமே (5:47:6)

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
(அண்ணாமலை) (5:5:5)

சென்றுநீர் திருவேட்களத்து உள்ளுறை
துன்றுபொற் சடையானைத் தொழுமினே (5:42:1)

என வருகின்ற இடங்களிலெல்லாம் தில்லை, இராமேச்சுரம், அண்ணாமலை, திருவேட்களம், கச்சி ஏகம்பம் போன்ற ஊர்களுக்குத் தலப்பயணம் மேற்கொள்ள வேண்டும் என ஆணையிடுவது போலவே அறிவுறுத்துகின்றார்.

சில சிவத்தலங்களைச் சேர்ந்து வழிபட வேண்டும் என அன்பாகப் பாடுகின்றார்.

கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியுளான் கழல் சேர்மினே (5:84:2)

காலனார் வருவதன்முன் கருவிலிக்
கோலவார் பொழிற் கொட்டிட்டை சேர்மினே (5:69:2)

எனப் பாடுகின்றார். சில பாடல்களில் அவ்வத்தலங்களை அணைந்தும், அடைந்தும் வாழவேண்டும் என்கிறார்.

பைஞ்ஞீலியுள், சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லார்க் கில்லை அவலமே (5:41:1)

பெண் காட்டிப் பிறைச் சென்னி வைத்தான்திரு
வெண் காட்டை யடைந்துய்ம் மட்நெஞ்சமே (5:49:1)

அயலவர் சிரிச்சுற்றுப் பலபேசப்படா முன்னம் திருச்சிற்றம்
சென்றடைந் துய்ம்மினே (5:1:3)

குரக்குக் காஅடையக் கெடுங்குற்றமே (5:75:1)

சேடர்வாழ் சேறைச் செந்நெறி மேவிய
ஆடலான்றன் அடி அடைந்து உய்ம்மினே (5:77:4)

சில ஊர்களைச் சுற்றவேண்டும், திருக்கோயில்களை வலம் வரவேண்டும் எனத் தனிப்படக் கூறுகிறார். சில ஊர்களை எப்போதும் தொழ வேண்டும்.

ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி அருகணைந்த
சோலைத் திருவொற்றியூரை எப்போதும் தொழுமின்களே
(4:86:5)

பழுதொன் றின்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே (5:4:3)

இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே (6:71:3)

விண்டுசேர் பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீரும் கவலையே (5:59)

இந்து சேகரன் உறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெட நின்றேத்துவோமே (6:71)

பாடுமின் பரமன் பயிலும் இடம்
கூடுமின் குரங்காடு துறையே (5:63:8)

நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயல்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே (5:82:9)

சில ஊர்களைத் திசை நோக்கித் தொழுதாலும்போதும் என்கிறார்.

தில்லை வட்டம் திசை கைதொழுவார் வினை
ஒல்லை வட்டம் கடந்து ஓடுதல் உண்மையே.

**தொழாப்பழி**

இவ்வாறெல்லாம் தலப்பயணம் மேற்கொண்டு வினைபோக்கலாம், முத்தி பெறலாம், இன்பம் பெறலாம் என்ற நம் நாவுக்கரசர் இதுவரை இந்த ஊருக்குச் செல்லாமல் இருந்து விட்டேனே, இந்த ஊர் இறைவனை நினையாது ஒழிந்தேனே என்று வருந்தவும் செய்கிறார். தலையாலங் காட்டானைச் சாராதே சாலநாள் போக்கினேனே என்று வருத்தப்படுவது போலவே,

புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே
ஆற்ற நாள் போக்கினேனே
பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத
நாளெல்லாம் பிறவா நாளே

என்று வருந்துகிறார்.

சில ஊர்களை, தலங்களை, இறைவனைத் தொழாமையால் வரும் பிழைகளையும் அவர் முரணாகக் காட்டுகிறார்.

ஆனைக் காவில் எம்மானை அணைகிலார்
ஊனைக் காவியுழிதர்வர் ஊமரே (5:31:1)

என்றும்,

அந்தியானை ஆமாத்தூர் அழகனைச்
சிந்தியாதவர் தீவினை யாளரே (5:44:2)

என்றும்,

திருவீழி மிழலையானைச் சேராதார்
தீநெறிக்கே சேர்கின்றாரே
ஆரூரர்தம் அருகிருக்கும் விதியின்றி
அறம் இருக்கமறம் விலைக்குக் கொண்டவாறே (4:5:3)

என்றும் பலவாறு கடிந்து கொள்கிறார். எச்சரிக்கை விடுப்பதுபோலப் பேசுகிறார். சில இடங்களில் கண்ட காட்சிகளுக்குப் பெருமைப்படவும் இறுமாந்திருக்கவும் செய்கிறார்.

**தில்லைச் சிற்றம்பலவன் திருவடியைக் கண்ட**
**கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே!**
**சிரித்த முகம் கண்ட கண்கொண்டு**
**மற்றினிக் காண்பதென்னே**

எனவரும் இடங்களில் இதனைக் காணலாம். அவர்தம் அடைவுத் தாண்டகம் முழுதும் யாத்திரை செய்யத் தூண்டும் செய்திகளையே தாங்கியுள்ளன என்றால் அது மிகையாகாது.

இவ்வாறாக, நாவுக்கரசர் வாழ்வும் வாக்கும் யாத்திரையை வலியுறுத்துவதாகவே அமைந்திருத்தல் காணலாம். அகவழிபாடும் வேண்டும், திருக்கோயில் வழிபாடும் வேண்டும். திருத்தலப் பயணம் மேற்கொண்டு ஆங்காங்குள்ள இறைவனைத் தொழுது வரவும் வேண்டும். இவை பக்தியியக்கம் ஒன்றோடு ஒன்றைப் பின்னிக் காட்டும் பக்தி நெறியாம். ஒன்றுக்கு ஒன்று துணை செய்யும். ஒன்றை ஒன்று வளர்க்கும். என்றாலும் ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை என்பது போல உள்ளத்தால் தொழுது வழிபடுவதற்கு ஈடு இணை இல்லை எனலாம். உள்ளம் ஒன்றி மனம் உருகிச் செய்யும் யாத்திரையும் வழிபாடும் எல்லா வினையையும் போக்கும். எல்லா நலங்களையும் செய்யும் எனலாம். நாவுக்கரசரின் வாழ்வும் வாக்கும் இவ்அற்புதச் செய்தியையே பறைசாற்றல் காணலாம்.

**வாழ்க பக்தி நெறி, வளர்க யாத்திரை.**

## கட்டுரையாளர் முகவரி

1. **திருவளர்திரு கயிலைமாமுனிவர்** (1-1)
காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள், அதிபர், காசித் திருமடம், திருப்பனந்தாள்.

2. **திருமதி அண்டாயினெட் ரமோலா எலிசபெத்** (2-17)
181, டி.பி.எஸ். நகர், மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 007.

3. **புலவர் அரு. அப்பாசாமி** (2-1)
19, வேதபுரி நத்தம் தெரு, பாகூர் - 607 402, புதுவை.

4. **திருமதி சா. அபிராமி** (1-6)
144, 4வது குறுக்குத் தெரு, அஜீஸ் நகர், ரெட்டியார்பாளையம், புதுச்சேரி - 605 010.

5. **முனைவர் வ.ச. அபிராமவல்லி** (2-11)
L, 361, 14-வது குறுக்குத் தெரு, திருவள்ளுவர் நகர், திருவான்மியூர், சென்னை - 600 041.

6. **முனைவர் மு. அம்பிகாபதி** (1-660)
2/144, இன்பக்குடில் வடக்கு இரண்டாம் வீதி, பல்கலை நகர் மதுரை - 625 021.

7. **திரு அமுத. இளவழகன்** (2-146)
146, பெரியார் நகர், காஞ்சிபுரம் - 1.

8. **முனைவர் சி. அயோத்தி** (1-17)
3/82, என்.சி.ஆர் நகர், முதல் தெரு, அ. கலையமுத்தூர், பழனி - 624 615.

9. **முனைவர் கா. அரங்கசாமி** (2-27)
அறிவரசு பதிப்பகம், 15, தமிழ் நகர், கோபி - 638 452.

10. **திரு தொ.ஆ. அரங்கசாமி** (1-30)
39, சி. காமாட்சியம்மை கோயில் வீதி, தொண்டாமுத்தூர், கோவை - 641 109.

11. **திரு சு. அரவிந்த்** (2-33)
19, காளியம்மன் கோயில் வீதி, ருத்திராபாளையம் அஞ்சல், உடுமலைப்பேட்டை - 642 204.

12. **திரு வி. அருண்குமார்** (2-40)
S/o சி. விஸ்வநாதன், 38, D/4, இராமலிங்க நகர், தொழிற்பேட்டை அஞ்சல் கோவை - 641 021.

13. **திரு ப. அருள்நமச்சிவாயன்** (1-667)
நாணயக்கார செட்டித்தெரு, தஞ்சாவூர்.

14. **திருமதி மு. அவையாம்பாள்** (2-48)
15, சொர்ணாம்பிகா லே அவுட், இராம் நகர், கோவை - 641 009.

15. **முனைவர் K.P. அழகம்மை** (1-36)
B-71, அரவிந்த் இல்லம், TNHB களனி வாசல், காரைக்குடி, சிவகங்கை.

16. **முனைவர் ஆர்.கே. அழகேசன்** (2-55)
21, D/3, முதலியார் கிழக்குத் தெரு, தல்லாகுளம், மதுரை - 2

17. **திரு பு. அறிவுடைநம்பி** (1-41)
தலைமை ஆசிரியர் ஓய்வு, நயம்பாடி அஞ்சல், செஞ்சி வட்டம், விழுப்புரம் - 604 151.

18. **முனைவர் அன்னிதாமசு** (2-61)
பேராசிரியர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 600 113.

19. **செல்வி உ. அனுசுயா** (1-670)
ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

20. **செல்வி தா.க. அனுராதா** (1-697)
அறைஎண். 309, தாமரை இல்லம் அண்ணாமலை நகர் - 608 002.

21. **திருமதி அனுராதா சீனிவாசன்** (2-70)
35, காந்தி தெரு, போஸ்டல் ஆடிட் காலனி, சாலிகிராமம், சென்னை - 600 093.

22. **முனைவர் எஸ். ஆண்டாள்** (1-557)
99, பாலம் ஸ்டேசன் ரோடு, செல்லூர், மதுரை - 625 002.

23. **திருமலி சா. ஆதிரை** (2-78)
த/பெ ஜெ. சாந்தமூர்த்தி, புத்தூர், பெருந்துறை, இரயிலடி அஞ்சல் பெருந்துறை, ஈரோடு - 638 052.

24. **திரு த. ஆறுமுகம்** (2-83)
செயலர், தமிழ்ச் சைவப் பேரவை, 8/59, வேங்கட்ராமய்யா தெரு, சென்னை - 600 079.

25. **திருமலி பூ. இந்துமதி** (2-95)
5/144, செலக்கரிச்சல் அஞ்சல், கரடிவாவி (வழி), பல்லடம் - 641 658.

26. **முனைவர் இ.ரெ. இராசபாண்டியன்**
65, எஸ்.பி.ஐ. காலனி, (2-109)
மெயின், நங்கை நல்லூர், சென்னை - 114.

27. **திருமலி ம. இராதா** (1-62)
9, முதலியார் தெரு, ஜெயங்கொண்டம் - 621 802.

28. **செல்வி. கோ. இராதிகா** (2-635)
7/B 41, சஞ்சீவிராயர் கோயில் தெரு,
பரங்கிப்பேட்டை - 608 502,
சிதம்பரம் வட்டம்.

29. **திரு இ.மா. இராமச்சந்திரன்** (2-114)
92, செங்குந்தர் வடக்குத் தெரு,
அம்பாசமுத்திரம், திருநெல்வேலி - 627 401.

30. **முனைவர் அரங்க. இராமலிங்கம்** (1-25)
314, அவ்வை சண்முகம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

31. **முனைவர் இராம. சௌந்தரவல்லி** (2-397)
'ஸ்ரீசபரிராம்', 6-வது தெரு, NGD, காலனி
மேலகரம், தென்காசி - 627 818.

32. **திரு க. இராஜசேகரன்** (1-67)
5, பிளாக் 15, பின்னி குடியிருப்பு,
பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, பட்டாளம்,
சென்னை - 600 012.

33. **திரு ப. இராஜமாணிக்கம்** (1-57)
தமிழ் விரிவுரையாளர்,
த.உ.க. கலைக் கல்லூரி, தஞ்சாவூர் - 613 002.

34. **திருமலி ஆர். இராஜலட்சுமி** (1-602)
7, ஸ்டெல்லா மேரி நகர்,
Ist தெரு, தஞ்சாவூர் - 613 007.

35. **திரு வே. இராஜா** (2-119)
3, மாணவர் விடுதி, பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை - 641 046.

36. **திரு கே.ஏ. இராஜூ** (2-126)
50B/1, அப்பர்சாமி கோயில் தெரு,
திருவொற்றியூர், சென்னை - 600 019.

37. **முனைவர் க. இலக்குமிநாராயணி** (2-133)
4, சின்னதெரு, இராசாராம் குடியிருப்பு
ரங்கராசபுரம், கோடம்பாக்கம்
சென்னை - 600 024.

38. **திரு சீ. இலட்சுமணன்** (2-140)
நெ. 5-1-33, நியூகாலனி
சிங்கம்புணரி - 630 502

39. **முனைவர் உடுமலை இளங்கண்ணன்**
C-84, சிக்கந்தர் பாட்சா வீதி (1-74)
சாந்தி நகர், உடுமலைப்பேட்டை
கோவை - 642 154.

40. **திருமதி பி. உமா** (1-81)
4, கே.ஜி.எல். பிரபு நகர்,
பிளாட் எண். 30, ஔவையார் தெரு
மீஞ்சூர்.

41. **திருமதி உமா அறிவழகன்** (1-88)
12C/6, பசுமரத்தி தெரு,
முதல் சந்து, கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.

42. **முனைவர் நா. உஷாதேவி** (2-155)
தமிழ்த்துறைத் தலைவர்,
ம.தி.தா. இந்துக் கல்லூரி,
திருநெல்வேலி.

43. **தவத்திரு ஊரன் அடிகளார்** (1-645)
தபால் பெட்டி எண். 2,
வடலூர் - 607 303, கடலூர் மாவட்டம்.

44. **முனைவர் ச. எழிலரசி** (2-160)
நடேச நாராயண நிலையம்,
4, பேரா. சஞ்சீவி தெரு, மைலாப்பூர்,
சென்னை - 600 004.

45. **முனைவர் இரா. கண்ணன்** (2-169)
3/401, வள்ளலார் தெரு,
அண்ணாநகர், ஆவடி
சென்னை - 55.

46. **முனைவர் கு. கதிரேசன்** (1-95)
தமிழ்த்துறை, ஆதித்தனார் கல்லூரி,
திருச்செந்தூர் - 628 214.

47. **வித்வான் கதிரேசன்** (2-177)
குன்றக்குடி ஆதீனப் புலவர்,
பூவாளூர் - 621 712.

48. **முனைவர் கமலி கஜேந்திரன்** (1-568)
6, அண்ணாமலை நகர் விரிவாக்கம்,
திரு ரங்கநாதன் நகர்,
ஆவடி, சென்னை - 600 054.

49. **முனைவர் க. கலா சேதுபதி** (1-106)
77. மகாத்மாகாந்தி சாலை,
வையாபுரி நகர், கரூர் - 639 002.

50. **திருமதி கலையரசி நடராசன்** (1-111)
87, 9வது தெரு, காமராஜ் தெரு,
ஆவடி, சென்னை - 600 071.

51. **முனைவர் மு. கலைவேந்தன்** (1-117)
நிறுவனர் ஔவைக்கோட்டம்,
153, வடக்கு வீதி,
திருவையாறு - 613 204.

52. **முனைவர் மா. களஞ்சியம்மாள்** (1-124)
பராசக்தி கலைக் கல்லூரி, குற்றாலம்.

53. **முனைவர் ந. காந்திமதிலட்சுமி** (1-129)
சுந்தரகம், 43/A, மீனாட்சிபுரம்
தூத்துக்குடி - 628 002.

54. **செல்வி டி. கஸ்தூரிதிலகம்** (1-573)
அறைஎண். 306, சர்தார் படேல் பவன்,
புதுதில்லி - 110 001.

